அசீரணம், குன்மம், முறைசுரம், குளிர் காய்ச்சல், கர்ப்பிணி வாந்தி பலவீனம் முதலியவைகளுக்குக் கொடுக்கலாம், french chiretta — Andrographis paniculata. It decoction is useful for Intermittent fevers, Malaria, Indiestion etc.

**சீமை நிலாவிரை,** வெள்ளைப் பொன்னுவிரை Alexandrian senna — Cassia obovata.

**சீமை நீலி,** மேனுட்டு நீலிச்சாயப்பூடு, West Indian indigo or foreign indigo — Indigofera Anil.

NOTE:— It is a larger plant than the Indian indigo, It is obtained in Mexico and Brazil and it was from this plant that anidine was first obtained.

**சீமை நூக்கு,** மேனுட்டு நூக்கமரம், tree mahogani — Suristenia Mahogani.

**சீமை நெல்லி,** சீமைச் சம்பு, West Indian myrtle — Eugenia Imflora 2. ஓர் வகை நெல்லி, barbadocs cherry — Malphigia glabra.

**சீமைப் பச்சை மிளகாய்,** ஊசிமிளகாய் ஊறுகாய் போடவுதவும், needle chilly—Capsicum Minimum. It is chiefly used for making chilly vinigar.

**சீமைப் பருத்தி,** மேனுட்டுப் பருத்தி, West Indian cotton such as Barbadoes, Bourbon, Egyptian, Georgian, Mexican Neworleans Sea islands etc. Gossypium—Racemossum.

**சீமைப்பலா** ஈரப்பலா, bread fruit — Artocarpus incisa.

**சீமைப்பனை,** மோரீஸ் பனை, mauritus palm — Latania Commersonii.

**சீமைப்பிசின்,** அம்மோனியாரப் பிசின் — gum ammoniac. It is the product of Dorema Ammoniacum; 2. சகமுனியாப் பிசின். இது ஓர் வகைக் குக்குலு, இதை மாமூதா என்றும் சொல்வதுண்டு, gum Scammony — Convolvulus scammonia. The gum - resin குக்குலு—is obtained from the incision of the root. It possesses Cathartic and anthelmintic actions.

**சீமைப்பிச்சி,** சீன வெண்பிச்சி, Chinese jasmine. Trachelospermum — Jasminoides.

**சீமைப் பித்தளை,** ஜெர்மன் வெள்ளி, German silver.

**சீமைப் பிரப்பமரம்,** இலங்கை பிரம்பு, Ceylon oak Schleichera — Trijuga.

**சீமைப்புளி,** சிவப்புப்புளி, red tamarind—Adansonia ligitata; 2. கொறுக்காப்புளி. manilla tamarind Prospis duleis.

**சீமைப் புளிச்சை,** ஓர் வகை புளிச்சைக்கீரை, hemp leaved hibiscus — Hibiscus Sabdariffa.

**சீமைப்பூசினி,** வெள்ளைப் பூசனிக்காய், an egg shaped gourd known as vegetable marrow — Spanish gourd —Cucurbita Ovifera.

**சீமைப்பேயுள்ளி,** சீமை நரிவெங்காயம்; இது மத்தியத்தரைக்கடலின் தென்கரை மாகாணங்களில் விளையும். இதுகசக்கும். இதை துண்டுகளாக அறுத்துக் காயவைத்துப் பதப்படுத்துவார்கள். சிறியவளவில் சுறுசுறுப்பையும் கோழை நீக்குந்தன்மையும், நீர்ப்பிரிக்குங் குணமும் வாய்ந்தது. அதிகவளவில் வாந்தியும் பேதியுமுண்டாம், scilla or sqill — Scilla maritima. It is grown in the Southern Coasts, bordering the Mediterranean. The bulb is sliced and dried. The pulverised powder acts as a stimulent, expectorant and diuretic in small doses; in large doses produces vomiting and purging.

**சீமை மகிழம்,** ஓர்வகைப்பாலை, இதன் காய் ஊறுகாய்க்கும் கறிக்குமுதவும், foreign ilanjy. Sideroxylon. Tonentosum. The fruit is made into pickles and curry; 2. ஓர்வகை மகிழமரம், iron wood of the Cape Sideroxylon inerme; 3. chryosophyllum cainita.

**சீமைமணத்தக்காளி,** பெருந்தக்காளி; இதுவே எருமைத் தக்காளி, see சீமைத்தக்காளி, tomato buffalo winter cherry—Lycopersicum esculentum. alias Solanum lycopersicum.

**சீமை மரவள்ளிக்கிழங்கு,** மேனுட்டு மரவள்ளி, Mendoza arrow root — Canna Achirus, (typicus)

**சீமை மருது,** ஓர்வகை மருது. இதன் பூ வெள்ளை. இலை வாசனையாயிருக்கும். இது கபால நோய்களுக்கு உபயோகப்படும். காய்க்கு வாந்திக்கும் குணமுண்டு. இலையை தண்ணீரில் கொதிக்க வைத்து அத்தண்ணீரை வாய்வேக்காட்டிற்கு, கொப்பளிக்க வுதவும். இதன் விதையை அரைத்து, தேள் கடிக்குப் பூசலாம். விதையைப் பொடித்து அஞ்சனக் கல்லோடு சேர்த்து மைதீட்டலாம். Foreign mindie or Common myrtle — Myrtus Comminis — It is a shrub with white flowers; leaves have a pleasant odour and are useful in cerebral affections; fruit is emetic gorgling of the decoction of the leaves is useful in appthae; paste of the seeds is applied to scorpion sting; powdered seeds are mixed with antimony and used to colour eyelids.

**சீமைமருதோன்றி,** seeசீமையழவணம், இதன் விதை கடுகைப் போலிருக்கும். இதைக்கடுகெண்ணெயிலிட்டுக் காய்ச்சி நாபியில் தடவ, குன்மம் போம், foreign henna — Peganum harmala. The seed resembles that of mustard. The seeds are boiled in mustard oil, and the oil is applied on the naval to cure dyspeptic troubles. see சீமையழவணம்.

**சீமை மல்லிகை,** see சிமிக்கிப்பூ.

**சீமை மாசிப்பத்திரி,** மேனாட்டு மாசிப்பத்திரி; இது புதர்களிலும் மலை ராச்சியங்களிலும் விளையும். இதைக் காயவைத்து கட்டுகளாக விற்கப்படும், ஓர்வித துர்நாற்றமும் கொடிய கசப்புமுள்ளது. இது வயிற்றுக் கோளாறை போக்கும். உடம்புக்கு வலிவு. குன்மத்திற்கு ஏற்றது. புழுக்களைக் கொல்லும். இதை நாட்பட உபயோகிப்பதனுல் உடம்பின் நரம்பைத் தாக்கும். Foreign worm wood — Artemisia Absinthium It is a flowering herb found grown in thickets and mountainous places. Bundles of dried herbs are sold. It has a disagreeable odour and intensely bitter taste. It is stomachic and tonic as well; useful in atonic dyspepria; reputed to be anthelmentic. Continued long use of the drug has an injurious effect on the nervous system.

**சீமை மாதுளை,** இதுவே பேதனு; இவ்விடம் கடைகளில் கிடைப்பதரிது. இது பர்ஷியன் குடாக்கடலிலிருந்து இறக்குமதியாகும். இதன் விதை சப்பென்றிருக்கும். வாசனையிராது. சிவப்பு; இது மெல்லக் கசக்கும். இது அழற்சியைப் போக்கி உடம்பிற்கு வலுவைத்தரும். இதன் பழம் துவர்ப்பு. சர்க்கரையில் கலந்தாவது சர்ப்பத்தாகவாவது உட்கொள்ளலாம். இதனுல் அதிசாரக் கூட்டங்கள். சீதபேதி இவைகள் போம், foreign pomegranate — Cydonia Vulgaris — Little found in bazaars. It is imported from the seaports of Persian gulf. Seeds are inodorous and insipid, reddish brown in colour. When long chewed it is bitter. The seeds are demulcent, tonic and restorative; fruit is astringent; edible with sugar in jelly and syrup very useful in all varities of diarrhoea and dysentery.

**சீமை மிளகாய்,** நேபாளத்து மிளகாய்; காந்தாரி மிளகாய், இது பார்வைக்கு வித்தியாசமாயிருந்தாலும் குணத்தில் ஒத்திருக்கும். இது காய்ந்தது. வாசனையிராது. ஆனல் காரமும் விருவிருப்பு முள்ளது உடம்பிற்கு சுறுசுறுப்பை உண்டாக்கும். கறிமசாலைக்குதவும், இதுசிலசமயங்களில் அசீரணம், கழிச்சல் படுக்கையில் கிடத்தல் முதலியவைகளுக்கு உபயோகமாகும், உடம்பில் தேய்க்க சிவக்கும். கொப்பளிக்கு நீராக உபயோகிக்க, தொண்டைக் கம்மல் போம். இதன் களிம்பு கீல்வாயு, கைகால்வலி, இவைகளுக்குப் பூசலாம். Nepal chilly, Capsicum Nepalensis — foreign chilly — Capsicum Fastigiatum. Although it differs in appearance, it has the same properties as those of our chilly. It is intesnely hot in taste, used chiefly as a condiment. It is a stimulent. In atonic dyspepria, diarrhoea and extreme prostration, it sometimes proves as an in valuable remedy. Decoction of it when used as gorgle removes sore throat. an ointment made out of it is applied externally for Rheumatism and Artherities.

**சீமை முயல்,** மேனுட்டு முயல், Europe hare or rabbits. Lepus — Ruficandatus.

**சீமை முள்ளங்கி,** மேனாட்டுக்கறி, an European vegetable of the cabbage genus — Turnips. It is cultivated on account of its esculent root.

**சீமைமூசை,** See வச்சிரமூசை.

**சீமையகத்தி,** பேயகத்தி, இதற்கு வண்டு கொல்லி, மலைத்தகரை, வண்டுகடியிலை எனப்பல பெயருண்டு. இது சாதாரணமாய் தோட்டம், பங்களாக்களில் காணலாம். இச் செடி 8-12 அடி பூமஞ்சள் நிறம். இதன் இலை இரசத்தை எலுமிச்சம்பழம் சாற்றோடு கலந்து வண்டுகடி படர் தாமரை முதலிய படை ரோகங்களுக்குப் போடலாம் இலை. யை இடித்துப் படையின் பேரில் தேய்க்க குணமுண்டாகும் இவ்விலையைச் சுண்ணும்பு தண்ணீர்காடி தோல் மெழுகு தேங்கா யெண்ணெய் இவற்ருேடு சேர்த்துக் காய்ச்சியும், அல்லது பச்சையாக அரைத்தும் தேய்க்க எல்லாவித விஷகடிகளும் அரையாப்பு முதலிய மேகச் கட்டிகளும் குணமாகும். அன்றியும் இதனுல் இரசதாது, கிருமி. உஷ்ண சொறி. தினவு நீங்கும். Broad leaved Cassia or West Indian Sesbane-Cassia Alata. It is known by different names — ring worm shrub, mountain cassia winged senna etc. Shrub 8-12 ft. with yellow flowers. It is grown for its beautiful inflorescence in the gardens. Juice of the leaves mixed with lime juice or salt is applied on ring worm. Fresh leaves are bruised and rubbed over the surface. The leaves bruised into a paste and mixed with an equal weight of borax is applied over the surface of ring worm and other similar affections. Decoction of the leaves is used as a mouth wash in stomatitis. It is used for herpes and venereal affections. It is a tonic expectorant and astringent, The paste of the leaves is applied for poisonous bites, bubo and other venereal affections.

**சீமையதிமதுரம்,** அயல் நாட்டு அதிமதுரம், sweet root — Glycirrhize glabra.

**சீமையத்தி,** தேன்அத்தி, இது குளிர் தேசம், மலைச்சாரல்இவ்விடங்களில் பயிராகும்நாட்டு அத்தியை விடப் பெரிது, பழத்தின் உள்ளே சிறு விதைகளுண்டு, பிசுபிசுப்பாயும் தித்திப்பாயும் சதைப்பற்றுள்ளதாயு மிருக்கும். இதைச் சாப்பிட,தொண்டைவறட்சி போம். இதை காயவைத்து தேனில் ஊறப்போட்டு வெளியூருக்கு ஏற்றுமதியாகும். இது இரத்தத்தை விருத்தியாக்குவதுடன் மலத்தை இளக்கச் செய்யும். அன்றியும் இதனுல் தேக அழற்சி, சோகை, சீதபேதி முதலிய நோய்கள் நீங்கும், Foreign fig tree. Hebrew Teenah — Ficus carica. This variety is chiefly met with in cold countries and mountainous regions. It is abundan in Nilgris, Bangalore, Persia and Afghanistan. Its fruits are bigger than the country figs. They are more sweet and fleshy. The dried fruits preserved in honey are exported. It is a good laxative promotes blood

**சீமையருநெல்லி,** ஓர் வகை யருநெல்லிக் காய், Barbados cherry—Malpighia Purnicifolia,

**சீமையவரை,** மேனுட்டு அவரை. European bean Phaselous — Trilobus; 2, வயல் அவரை, field gram, Phaselous — Vulgaris.

**சீமையலரி,** மஞ்சள் அலரி, yellow oleander. Thevetia Nerifolia.

**சீமையவுத்தி,** See சீமையகத்தி.

**சீமையவுரி,** மேனுட்டு அவுரி, British Indigo. Isatistinctoria.

**சீமையழவணம்,** சீமைமருதோன்றி, வெள்ளைப்பூ. இதன் விதை கடுகளவு இருக்கும் கருப்பு நிறம், கனம், சிறு கசப்பு, இதற்கு வயிற்றுகிருமிகளை, அழிக்கவும், தூக்கத்தை மூட்டவும், உஷ்ணத்தைக் கொடுக்கவும், சக்தியுண்டு. குடலிலுள்ள வாயுவையும், குடற் கோளாறுகளையும் குணப்படுத்தும். தேக ஆரோக்கியத்தையும் கொடுக்கும். மார்பு நுரையீரல் கோழைகளை நீக்கும். அன்றியும் இதன் கஷாயம் மூர்ச்சை, பக்கவாதம், பைத்தியம், மூளைநோய், பாண்டு, காமாலை, வயிற்றுவலி, கால் நரம்புவலி முதலியவைகளை போக்கும். இதன் ஊறற் கஷாயம், இரத்த சுத்தி. மல இளக்கம். கருப்பம், தாது விருத்தி இவைகளை உண்டாக்கும். இக் கஷாயத்துடன், தேன், நல்லெண்ணெய் சேர்த்துச் சாப்பிட மார்பு கோழை, இருமல், இரைப்பு நீங்கும், Syrian Rue — foreign henna — Pegamum harmala' It is a herbaceous plant with white fragrant

flowers, seeds are like mustard in size, black, thick with bitter taste. They possess narcotic, antispasmotic, hypnotic, emetic, anthelmentic and emmenagogue action. They also remove flatulence and other intestinal disorders and restore healthy functions. Decoction of the seeds is given internally in cases of collection of phlegm and other chest affections, fatigue, paralysis, mental disorders, cerebral complaints dropsy, jaundice, colic sciatic affections etc. Cold infusion purifies blood, removes constipa tion, induces conception in woman and promotes secretion of semon. Decoction taken with honey and sessamum (gingely) oil removes chest affection caugh asthma powdered root mixed with mustard oil is applied to the hair to destroy vermin

NOTE :— The seeds are sold in bazaar. They are burnt or used as funnigation to drive eway evil spirits. During the forty days of puerperal period it is used with benzoin or mustard seeds for fumigation.

**சீமையாதளை**, சிகப்பு ஆதளை, foreign castor plant. Ricinus—Communis 2. பேதாளு. common quince. Cydonia—Vulgaris.

**சீமையாதனம்**, இபிகாக், Ipecacuauha — Cephalis, ipeacuanha.

**சீமையாதிதம்**, குவாசியா, quassia wood — Picraena excelsa.

**சீமையாமணக்கு**, சீனத்தாமணக்கு, இதன் விதைபேதியாகும் அதிகவளவில் விஷத்தன் மையுள்ளது. இதற்கு நேர்வாளத்தின் குண முண்டு. மேலுக்குத்தடவ சுருசுருப்பைத் தருவதுமின்றி தோல் சிவக்கும். இதன் எண்ணெய்க்கும் விரேசன குணமுண்டு. இது வாதபிடிப்புக்கு மேற்பூச்சு மருந்தாக உபயோகப்படும். வேர் பேதியாகும். இதைப் பொடித்து பாண்டு, காமாலை, முதலிய நோய்களுக்கும் கொடுக்கலாம், Foreign Castar — Baliospermum Montanum. The seeds are drastic puragative in ever does it is a acronarcotic poison. It is substitute for croton tigilium and is externally used as a stimulant and rubifacient. Oil from the seeds is a powerful hydrogogue cathartic and it is externally applied in rheumatism. The powdered root is also cathartic and is used in dropsy, jaundice etc, 2. ஓர் அயல் நாட்டாமணக்கு — bronze leaved physic nut — Jatropha Montana.

**சீமையாமியம்**, See கலம்பாவேர்.

**சீமையாலமரம்**, பாற்சோற்றிமரம், இது 30-40 அடி உயரம், மலையாளத்தில் மிகுதி இதுனி ன்று பால் எடுப்பதுண்டு. இப்பாலை வார்ப் பில் வார்த்து ஆறியபின் பலகைகளாக எடுக்கலாம். அன்றியும், ஒழுகாதபடி பாத் திரங்களுக்கு அல்லது கூடைகளுக்குட் புறம் பூசுவதுண்டு. மெழுகு வர்த்தியாக வும்சுளுந்துக்குச்சியாகவுமுபயோகிக்கலாம். Indian rubber tree or Indian caoutchouc, foreign banyan — Ficus elastica. Tree 30-40 feet high, yields large quantity of milk and when the juice exposed to air, it separates into an elastic substance and the juice is poured formed into pear shaped bottles. By being spread over moulds of clay, it is solide fied into sheets. Caoutchoua furinishes candles and flame-beam (torch) Inside of vessels and baskets are smeared with the milk to prevent leakage. The tree is introduced from Eastern Pennisula. It has a spreading habit and has aerial roots.

**சீமையால்**, see சீமையாலமரம்.

**சீமையாவிரை**, சியாம் தேசத்து ஆவிரை; அதாவது மஞ்சள் கொன்றை; Sumitra Senna—Cassia—Siamea; 2. see பிரம்புக் கொன்றை

**சீமையிந்துப்பு**, ஐரோப்பா அல்லது மேனாட்டு இந்துப்பு, Rock salt imported from Europe. 2. பேதியுப்பு, Epsom salt — Sulphate of Magnesia. It is opposed to நாட்டு இந்துப்பு — See இந்துப்பு.

**சீமையிலந்தை**, பெரு இலந்தைப்பழம், இது அமெரிக்காவிலும் மேற்கு ஐரோப்பாவிலும் விசேஷம். இக்கனியில் அனேகவித உப்புச் சத்துக்கள் ( உப்பமண்ணுப்பு, சுண்ணவுப்பு சாரவுப்பு, காந்தவுப்பு, அயமண்ணுப்பு, தீமுருகற்சத்து இவைகள் அடங்கியுள்ளன. மற்றப்பழங்களைவிட மேலானது. எளிதில் சீரணமாகக் கூடியது. தினப்படி சாப்பிட்ட வுடன் உபயோகிக்கலாம், ஐரோப்பாவில் ரொட்டி வெண்ணெயுடன் சாப்பிடுவதுண்டு. சமைத்தும் புசிப்பார்கள். அமெரிக்காவில் சிறந்தவுணவுப்பொருளாகக்கொள்வார்கள். மூளையை உபயோகித்துவேலை செய்வோரு க்கு இது ஓர் சிறந்த உணவு. அசீரணநோய் க்கு மெத்த உபயோகமானது. Fruit of foreign jujube — Zizyphus Mauritiana. It is abundent in America and South Europe. It is said to contain the principles of many

salts — Potassium, Sodium, Magnesium, iron, and Phoshorus salts, it excels other fruits as it is easily digertible and can be eaten daily after food. In Europe it is used with bread and butter and is also cooked and eaten. In America it is considered as important and superior dish. Even those who suffer from indigestion can use it. It is highly useful to those who do more brain work. 2.see ஆப்பிள்.

**சீமையிலுப்பை,** மேனாட்டிலுப்பை, foreign Mowah — American bully — Mimusops Manilkara.

**சீமையீச்சன்,** See சீமையீஞ்சு.

**சீமையீஞ்சு,** ஓர் வகை ஈச்சமரம். Common Indian fern palm. Cycas circinalis.

**சீமையூமத்தை,** ஐரோப்பா ஊமத்தை, Europe datura or apple of Peru — Datura, Stramonium. See வெள்ளூமத்தை.

**சீமையெண்ணெய்,** ஒலிவை யெண்ணெய், Olive oil. 2. மேனாட்டினின்றும் இறக்குமதியாகும் எண்ணெய், any oil exported from foreign country. 3. மண்ணெண்ணெய், kerosine; 4. மண்ணைதலம், crude oil.

**சீமையென்னிலை,** மேனாட்டு எள்ளின் இலை, sesame leaf or bennie leaf of Europe.

**சீமைரூமிமத்தகி,** பூனைக்கண் குங்கிலியம், எப்பொழுதும் பச்சென்றிருக்கும், செடி, காய்கள் மிகசசிறியவை, பட்டாணியைப் போலிருக்கும். பூக்கள் சிறிது. பச்சைநிறம்; இதன் அடிமரத்தை வெட்ட அதிலின்று குங்கிலிய வாசனையுள்ள பிசின் (மத்தகி) ஒழுகும். இப்பிசின் காய்ந்தவுடன் கண்ணாடியைப்போல் பளபளப்பாயும், ஒடியுந்தன்மையுள்ளதாயும் இருக்கும். இது பல விருத்தி மருந்தாகவும், துவர்ப்புள்ளதால் ஒழுக்கை நிறுத்தும் தன்மை வாய்ந்ததாகவும் கொள்ளலாம். பல்லீறுகளைப் பலப்படுத்தும். ஆகவே சொத்தைப்பற்களுக்கு இதை இடுவதுண்டு. வாசனைக்காகத் திராட்சை சாரயத்திற் கலப்பதுண்டு. Cat's eye resin Turkish olibanum — Pisticialentiscus. It is an evergreen shrub, fruits are very small about the size of the pea; flowers small, green, incision on its trunk yields an aromatic resin called mastiche with balsamic flavour. The resin when dried is brittle glossy and brilliant. It is slightly tonic, and astringent. It strengthens the gum and used for filling Carious teeth; cuployed also to flavour wines.

**சீமை வாகை,** தூங்குமூஞ்சி மரம், rain tree Enterolobium Samau.

**சீமை வாதுமை,** Java almond tree, East Indian Elemi, — Canarium commune,

**சீமை வாத்து,** ஐரோப்பிய வாத்து, நீர் வாத்தைப்போல் அழகாயிராது. European goose, domestick duck — Anas domestica. It will not be elegant as wild duck.

**சீமைவிதை,** சீமைச்சோம்பு அல்லது கேக்கு விதை, — carum carui.

**சீமை விளாம்பிசின்,** ஓர் மரப்பிசின், gum of foreign acacia—Feronia elephantum.

**சீமை வெங்காயம்,** See சீமைநரி வெங்காயம்; a species of white onion.

**சீமை வெண்டி,** கஸ்தூரி வெண்டிக்காய், mask bendy Hibiscus abelmoschus.

**சீமை வெள்ளரி,** கொடி வெள்ளரி, இதுவே மொலாம் பழம், melon creeper. Cummis melo.

**சீமை வெள்வேல்,** ஓர் வகை வெள்வேல்; இம்மரம் 20-25 அடி. கருவேலைப் போலவேயிருக்கும். இதன் பட்டையை வெல்லத் தண்ணீரிலிட்டு வாலையின் மூலியமாய் சாராயம் காய்ச்சுவார்கள். கஷாயமிட்டு வாய்கொப்பளிக்கவுதவும், foreign white acacia — anasandra — Acacia ferraginea. Tree 20-25 ft. high; much resembles Acacia sundra & Acacia catechu. Its bark steeped in jaggery solution aids the distillation of arrack. The docoction of the bark is used as gorgle for diseases of the gum. A decoction with ginger and other ingredients is used as wash for the diseases of the teeth.

**சீமை வேலமரம்,** பெரிய வேலமரம், black wattle — Acacia melonoxylon.

**சீமை வேலம்பட்டை,** நீலகிரி வேலம்பட்டை, Wattle bark of Australian acacia — Acacia melanoxylon. தோலை பதனம் செய்ய உதவும்.

**சீமைவேல்,** ஓர் வேலமரம். Jerusalen thorn tree — Parkinsomia aculeata.

**சீமை வேலஞ்செடி,** mimosa wattle—Acacia, dealbata.

**சீம்பால்**, ஈன்றணிமைப்பால் the first milk given by a cow after calving Beesting — see சீம்ப்பால்.

**சீயக்காய்**, சிகைக்காய்; எண்ணெய்க் கசிவை எடுக்குங்காய் இது 3–6 அங்குல நீளமாயும், சப்பையாயுமிருக்கும். பூவந்திக் கொட்டை யைப்போல ருசிக்கும். உள்ளுக்குக் கொள்ள குடலின் மாசுகளைப் போக்குவதுடன், கோழையையும் அறுக்கும். ஆகவே, இதன் விதையைக் கஷாயமிட்டு உபயோகித்தால் மஞ்சடகாமாலை முதலிய பித்துக் கோளாறு களை அகற்றும். இதன் சிறிய இலை புளிப்பா யிருக்கும். மிளகுஇரசத்தி லிட்டுஉட்கொள்ள பேதியாகி, பித்தத்தைக் கழற்றும். இதன் கொழுந்தை, சமையலில் புளிக்குப் பதிலாக உபயோகிப்பதுண்டு. காயை அரைத்து, தலைக்குத் தேய்க்க அழுக்கை அகற்றி மயிரை சுத்தப்படுத்தும். மூன்று வகைப் படும், அவை: 1. காட்டு சீயக்காய்; 2. மண் டற்சீயக்காய்; 3. நல்ல சீயக்காய்; Soap pod —Acacia Concinna. The pods are 3 to 6 inches long. They have taste like soap nut. They are used to remove the oily matter and dirt from the surface of the body. Medicinally they are deobstruent and expectorant. A decoction of the seeds is used in jaundice and other biliary derangements; small leaves have pleasant acidity and they are put into papper water to keep bowls open and to work off bile. Leaves are used in cookery as substitute for tamarind; powder or paste of pods are used for washing the hair and kill vermin. There are three varieties viz: 1. Mimosa rubicaulis; 2. Acacia intsia: 3. Acacia concinna.

**சீயக்காய்ப் பிரமேகம்**, இதில் மூத்திரம் சத்து டன் சருகாய் விழும். காய்ச்சினால் நார்போல் காணப்படும். சீயக்காய் வாசனை வீசும், This is an urinary disease where in urine smells like the soap pods.

**சீயக்கெம்பு**, சீயாம் தேசத்தில் எடுக்கப்படும் கெம்பு, Rubies found in Siam.

**சீயக்கொழுந்து**, சீயக்காய் கொழுந்து, tender leaves soap pod.

**சீயங்கல்**, மட்ட சீயக்கெம்பு, an inferior ruby.

**சீயங்காய்**, see சீயக்காய்.

**சீயஞ்சிவப்பு**, See சீயக்கெம்பு; சீயங்கல்.

**சீயப்பட்டுக்காய்**, பாவட்டங்காய், Indian pavatta—Pavetta Indica.

**சீயம்**, எருக்கம்பால், madar milk; 2. கூகை நீறு, arrow root.

**சீயம்பாக்கு**, இழிந்த பாக்கு, inferior boild. areca nut.

**சீயா**, ஓர் மரம்; சீயக்காய். a kind of Soap pod Wattle tree.

**சீயாக்காய்**, அரையாப்புக்காய்,See சீயக்காய்

**சீயான்**, ஓர்வகைப் பூரான், Centepede; 2. see செய்யான்,

**சீயில்லா**, சீழற்ற, matterless.

**சீயு**, பலாசு, Bengal Rino — Butea frontosa.

**சீய்**, சீழ், pus.

**சீரககச்சூரம்**, ஓர்வகை பேரீந்து. a kind of date tree.

**சீரகக்கடுக்காய்**, பூ பிஞ்சில் உதிர்ந்துபோன கடுக்காய், tender gall nut that has fallen from the tree — unriped gall nut.

**சீரகக்கோனி**, வசம்பு, sweet flag — Acorus Calamus.

**சீரகக் கோரை**, கன்னிக் கோரை, maiden sedge grass. Cyperus — Fastigiatus.

**சீரகக்கோழி**, நரை கொள்ளு, a species of horse gram. 2. See சீரகா கோளி.

**சீரகச்சக்களத்தி**, சீரகத்தைப் போல காணும் விதை. இது சீரகத்துடன் கலந்து விற்கப்படுகிறது, some variety of fruit that looks like cumin which is mixed with real cumin and sold in the bazaar.

**சீரகச்சம்பா**, ஓர் வாசனையுள்ள சன்னச்சம்பா இது சாப்பாட்டிற்கு மிகவும் சிறந்தது, a kind of paddy

**சீரகசுத்தி**, See சீரகம்.

***சீரகச்செடி***, வெண்சீரகச்செடி, white cumin plant. Cygusticum —Cyminum.

***சீரகத்துவையல்***, சீரகத்தையே பிரதான மாகக் கொண்டு தயாரித்த துவையல், chutney prepared with cumin seed as chief ingredient.

***சீரகத்தைலம்***, நல்லெண்ணெய் படி 1. சீரகத் தை ஒரு பலம் கொண்டு தயாரிக்கும் தைலம், பித்தமயக்கத்திற்காகத் தலையில் தேய்த்து முழுகவுதவும், இதனுல் கபாலச் சூடு உள்ளனல், மேக தழும்பு போம். Gingelly oil 40 pal — and cumin seeds I pal. The later is fried in the oil, filtered and preserved. It is used for oil bath to relieve giddiness, head ache and bilousness.

***சீரகநெய்***, சீரகத்தைக் கொண்டு தயாரித்த மருந்து நெய், medicated ghee prepared with cumin seeds as chief drug.

***சீரகபாடி***, See கோஷ்டம்,

***சீரகபாதிதம்***, கொடி சம்பங்கி, Creeper Champak — Pergularia Minor.

***சீரகமாத்திரை***, உஷ்ணக்காய்ச்சலுக்குக் கொடுக்கும் சீரகம் சேர்ந்த மாத்திரை — pills prepared with cumin as chief ingredient and given for certain fevers.

***சீரகம்***, இது, இந்தியாவில் அனேக இடங்களில் பயிராகும். இச்செடியின் பூக்கள் வெள்ளை. வேர் விருவிருப்புள்ளது. விதைகள் வாசனையாயும் கசப்பாயுமிருக்கும் இவ்விதை இங்கு பயிராயினும், மிகுதியாக நாம் உபயோகிப்பது சீனம் பர்ஷிய குடாக் கடலிலிருந்து தான் இறக்குமதியாகிறது. இதன் விதைக்கும் எண்ணெய்க்கும், கொத்தமல்லி விதையைப்போல் சீரணிக்கும் சக்தி வாய்ந்துளது. ஆகவே, கறிக்கு மசாலையி லுபயோகப்படும், 1 நற்சீரகம் see சீரகம் — அரோசகம், வயிற்றுவலி, பீலிகம், காசம் போம். 2. காட்டு சீரகம், சர்மநோய் போம் 3, பெருஞ்சீரகம், சோம்பு, பீனசம், பிலீகம், அசீரணம், வயிற்றுப்பிசம் போம். 4. கருஞ் சீரகம், மண்டைக்கரப்பான் சிராய்பீனசம் உட்சூடு, தலைநோய் போம்; 5. பிளப்பு சீரகம்; 6. நட்சத்திர சீரகம்; 7. செஞ்சீரகம். சீரகசுத்தி-சுண்ணும்பு நீரில் 7 சாமம் ஊற வைத்து பிறகு உலர்த்திப் புடைத்து எடுத்துக்கொள்வது. இப்படி செய்தசீரகம் மருந்துகள் செய்ய உபயோகப்படும். இதை மிளகுடன்சூரணித்து. அசீரணம் வயிற்றுவலி, பித்தமயக்கம், அரோசகம் இவைகளைப்போக்கும். இவற்றினின்றுஎண்ணெய் எடுக்கலாம். அரைத்துக் களியாகக்கிண்டி கட்டிகளுக்கு வைத்துக்கட்ட குளிர்ச்சியைத்தந்து அழற்சியைப் போக்கும். எலுமிச்சம் பழரசத்திலிட்டுக் கொடுக்க, கர்ப்பிணிகளின் வாந்தியை நிறுத்தும். Common cumin seed. Cuminum Cyminum It is cultivated in many places in India. Yet It is imported from persion gulf Flowers are white, seeds fragrant and slightly bitter. The seeds are carminative. It is used in curry power. Before it is used in medicine it is purified as follows. The seeds are soaked in clear solution of calcium hydroxide for a day, then dried and preserved. The seeds are powdered along with pepper and is used to cure diarrhoea and dyspepsia. Cumin seeds soacked in lime fruit juice for twelve hours, are well dried and powdered. Quarter tea spoon of the powder mixed with brown sugar when administered relieves vomitting and morning sickness. It is useful in for giddiness also.

There are several varieties :—

1. நற்சீரகம், — Common cumin, useful for indigestion & nausa.
2. காட்டு சீரகம், (vermonia Anthelmintica) useful in skin diseases.
3. பெருஞ்சீரகம், ( சோம்பு ) Ancise useful as aromatic.
4. கருஞ்சீரகம், Nigella a Sativa useful dismonorrhoea.
5. பிளப்பு சீரகம், carum Nigrum used as carminative.

***சீரகம்***, ஓர் நிறுத்தலளவு, a measure of weight: 2. பன்றி, pig; 3. ஓர் ஈந்து a kind of date tree.

***சீரகோணி***, வசம்பு, see சீரகக்கோணி — 2. வெள்ளைக் காக்கணம், white flowered mussell shell creeper — clitorea ternatea.

***சீரகா கோளிகம்***, ஓர் இமாலயப் பூண்டின் வேர், இதனின்று பால் வடியும், இது எண்வகை மூலிகைகளில் ஒன்று, a root from the Himalayas yielding a milky juice and used by the Hindus as one of the eight principal medicaments.

**சீரகிருதம்**, பால் சேர்ந்த நெய், purified butter mixed with milk.

**சீரக ரோகணி**, See கடுகுரோகணி.

**சீரகவள்ளி**, நாய்ச் சீரகவள்ளி; cumin yam — Dioscorea bulbifera; 2. காட்டுச் சீரகவள்ளி a species of wild Malacayam — Dioscorea globosa.

**சீரகாதி சூரணம்**, அசீரணம் அக்கினிமாந்தம் இவைகளுக்குக் கொடுக்கும் சீரக மிகுதியாகச்சேர்ந்த ஓர் சூரணம். Mixture of powders where in the cumin powder is the chief ingredient It is useful for indigestion loss of appetite and diarrhoea.

**சீரச்சடம்**, எருக்கு, madar plant.

**சீரசாலம்**, ஓர் மீன், a kind of fish.

**சீரசீடம்**, பால் புளிப்பதாலேற்பட்ட பூச்சி கிருமி, some bacteria generated by fermentation of milk.

**சீரசுச்சபலம்**, பாலே, Ape flower — Minusops Kanki.

**சீரகாகோளி**, பாற்காகோளி, See காகோளி. It is a bulb brought from Morung is Nepal.

**சீரங்கி**, See கற்கடக சிங்கி.

**சீரசந்தானிகம்**, தயிரோடு கலந்த பால், curd mixed with milk.

**சீரசம்**, உறைந்த பால், coagulated milk.

**சீரசம்பவம்**, புளித்த பால், fermented milk.

**சீரசர்ப்பி**, பாலைக் கடைந்தெடுத்த வெண்ணெய், clarified butter churned from milk.

**சீரசாரம்**, பாலாடை, skin of milk; 2. பாலேடு cream; 3. தயிர், curd; 4. வெண்ணெய், butter.

**சீரணசாலம்**, வயிற்றில் உள்ளே இருக்கும் சீரணநீர் பொசியுங் கோளங்களுக்குக் காரணமாகவுள்ள கண்ணறைகள். a variety of columnar cells forming the greater part of tubules of the gastric glands of the stomach — Adecomorphus cells or Principal cells.

**சீரணசுக்கிலம்**, இரைப்பையில் ஊறும் ஓர் வகைச் சத்து, a peculiar animal principle secreted by the stomach — Pepsin.

**சீரசீரிசம்**, சீமைத்தாழைப் பிசின், resin of pine of America — Pinus longifolia.

**சீரசிரிங்கி**, பால் நெரிஞ்சில், — Tragia in volucrata.

**சீரசீரம்**, See சீரகம்.

**சீரசுக்கிலம்**, பழமுண்ணிப்பாலை, unidentified.

**சீரணகாலவளவு**, See சீரணகாலம்

**சீரணக்கிரமம்**, See சீரண முறை.

**சீரணகாலம்**, உண்டவுணவு வகைகள் குடலிற் செரிக்கும் நேரத்தின் அளவு இரசதாதுவாகமாற எடுத்துக் கொள்ளும் கால அளவு இங்கிலீஷ் சுகாதார விளக்கப்படி அடியிற் கண்டவாறு குறிக்கப்பட்டிருக்கிறது. period of digestion ie., actual time taken for digestion for various dishes of food According to mordern Hygiene the following table shows the time taken for certain articles of food to get digested.

| | மணிநேரம், hours. |
|---|---|
| வேகவைத்த மாட்டுக்கறி, Beef boiled — | 3 |
| பொரித்த மாட்டுக்கறி, Beef fried— | 4 |
| வேகவைத்த மீன், Fish boiled— | 1¼ to 2½ |
| வேகவைத்த ஆட்டுக்கறி Mutton boiled — | 3 |
| பொறித்த ஆட்டுக்கறி, Mutton fried— | 3 to 3½ |
| பொறித்த கோழிக்கறி, fowl fried — | 2½ to 4 |
| பொறித்த பன்றி இறைச்சி, Pig fried— | 5 |
| பச்சை முட்டை, raw egg — | 1½ |
| பொறித்த முட்டை fried or cooked egg— | 3 to 3½ |
| உருளைக்கிழங்கு. potatoe — | 2½ to 3½ |
| காய்கறி vegatables — | 3 to 4 |
| அரிசி சாதம் cooked rice — | 1 to 2 |
| ஏடு தயிர் சாதம் curd rice — | 3 to 4 |
| கோதுமை சாதம், boiled wheat— | 3 to 4 |
| குழம்பு சாம்பார் சாதம், Sambar rice — | 3 to 4 |
| சவ்வரசிக்கஞ்சி வாற்கோதுமை டபாரா, sago conjee, wheet conjee — | 1 to 2 |
| இளநீர், சாரயம், காடி முதலியன Tender cocounut water, arrack vinegar— | 3 to 4 |
| பழவகைகள் fruits. — | 3 to 4 |
| சூரணம், லேகியம் கிருதம் முதலிய மருந்துகள் — | 3 |

சீரணகால அளவு கூறல், as told by Agastiar.

| பொருள்: | சீரண காலம் (hours) |
|---|---|
| பிழிந்த ரசம், Squeezed juices from leaves roots: stem etc. — | 2¾ மணி |
| அரைத்த மருந்துகள், grinded medicines — | 3 மணி |
| செயநீர்கள், — | 3 மணி |
| குளிர்ந்த நீர், Cold water. — | 3 மணி |
| வெந்நீர், Hot water. — | 6 மணி |
| காய்ந்தாறிய சலம், boiled & cooled water — | 1½ மணி |
| கஷாயம், Decoction — | 1¼ மணி |
| கனிரசங்கள், Fruit juices — | 2½ மணி |
| அன்னம், Cooked rice — | 6 மணி |
| பால், Milk. — | 8 மணி |
| தேன், Honey. — | 5 மணி |
| தயிர்ச்சோறு, Curd & rice (cooked) — | 4½ மணி |
| மோர்ச்சோறு, Butter milk and rice (cooked) — | 4¾ மணி |
| நீர் அன்னம், water and rice (cooked) — | 5 மணி |
| வெண்ணெய் அன்னம், Butter and rice (cooked) — | 6 மணி |
| சாராயம், Arrack. — | 3 or 2 ,, |
| சூரணம், Powder. — | 5 மணி |
| தைலம், Oil. — | 5 மணி |
| இலேகியம், Electuaries. — | 5 மணி |
| கிருதம், Medicinal ghee. — | 5 மணி |
| பஸ்பம், Baspam. — | 1½ மணி |
| நல்ல பதார்த்தங்கள், Curry. — | 2¾ மணி |
| உயர்ந்த பழ வர்க்கங்கள், High class fruits. — | 3 மணி |
| கருணைக் கிழங்கு, Ham. — | 3 மணி |
| வித்துக் (விதை) கள், Seeds. — | 3 மணி |
| அறுசுவை பதார்த்தங்களின் பச்சை, raw articles — | 2 மணி |
| மேற்படி வெந்தது, Cooked articles. — | 2 மணி |
| கழுநீர், rice washed water. — | 2 மணி |
| காடி, Vinegar. — | 2 மணி |
| மா, பொரியுண்டை, மிளகோதனம், பசுவின்பால் இவற்றை எல்லாம் ஒருவேளை உண்டால் — | 6 மணி |
| வடிகஞ்சி, decanted cooked rice liquid — | 3 மணி |
| வேறுவகை கஞ்சி, Conjee. — | 3 மணி |
| நல்ல வெல்லம், Jaggery — | 6 மணி |
| தேன், Honey. — | 6 மணி |
| பச்சரிசி, Raw rice. — | 6 மணி |
| கக்கரிக்காய், மற்றக்காய்கள், Cuclumber and vegetables. — | 3¼ மணி |
| இளநீர், Tender coconut. — | 3 மணி |
| சருக்கரை, Sugar. — | 3 மணி |
| பானக்கம், Sugar water. — | 3 மணி |
| தயிர்த் தெளிவு நீர். — | 3 மணி |
| மோர்த் தெளிவு நீர். — | 2 மணி |
| வறுத்த மாவை நீரில் கலக்கிக் குடித்தல் — | 3 மணி |
| காய்ந்த நீர், Hot water. — | 2½ மணி |
| முக்காற்கூறு சுண்டிய நீர், Water heated acid reduced to¼ - | 3 மணி |
| அருந்தும் பதமாயாற்றிய நீர், Mild hot water — | 2½ மணி |
| மரம், செடி, கொடி இவைகளின் பூக்கள், flowers. — | 3 மணி |
| தளிர்கள், tender leaves. — | 3 மணி |

இவ்வண்ணமாக எல்லா உணவு வகைகளின் சீரணகால அளவை அகத்திய முனிவர் கூறியவாறும்.

**சீரணகோளம்,** gastric glands.

**சீரணக் குறைவு, சீரணத் தளர்ச்சி,** impaired or feeble digestion — Caligopepsia.

**சீரண சக்தி,** செரிக்கும் வலிவு, digestive power of faculty.

**சீரணசுரம்,** அசீரணத்தா லேற்படும் சுரம், fever caused by indigestion.

**சீரணபத்திரம்,** வேப்பிலை, margosa leaf.

**சீரணபர்ணம்,** See சீரணபத்திரம்.

**சீரண பாதை,** வாயினின்று துவங்கி அபான வாயில் வரை பேசிச்சவ்விலூலாகிய குழல் alimentry canal lined with mucous membrane extending from the mouth to the anus, through which food passes.

**சீரணமது மேகம்,** ஏழுதாதுக்களும் குறைவு படுங்காலத்திலும், வாதாதி தோஷங்களினால் வாயுசஞ்சார மார்க்கம் அடைபடுங் காலத்திலும் பிறந்து, மதுமேகத்திற்குரிய குணங்களைக் காட்டு மோர் வகை மதுமேகம் — a temporary diabetes resulting from the increased formation of sugar due to the irritation of the pneumogastric nerves by which the glycogenic function of the liver is governed.

*சீரணமின்மை, அசீரணம்* absence or cessation of the digestive function.

*சீரணமுறை, சீரணக்கிரமம்;* அதாவது நாம் உட்கொள்ளும் எவ்வித பதார்த்தங்களும் முன்னர் இரைப்பையிற் சென்று அவ்விடம் பாகம் பண்ணப்பட்ட பின்பு, தம் சுய பேதத்தை யொழித்து,பாணீரூபத்தையடையும். இதிலுள்ள எஞ்சிய சக்கை பாகத்தை இரைப்பையானது மலமாகத் தள்ளும் மேற் கண்ட சக்கை நீங்கிட மிகுந்த பாகம் குடல் வழியாக நீர்த்துவமடைந்து சுத்த ரூபமாக மாறிய அன்னரசம் நிரை நீர்த்தாரையை அடைந்து பிறகு இரத்தமாக மாறும் 1. அப்பொழுது மேலே நுரைத்தெழுந்த கல் மிஷத்திற்கு பித்த மென்றும் 2. அடியிற் படிந்த வண்டலுக்கு வாத மென்றும் 3. மத்திய பாகமாய் நிற்பதற்கு கபம் அல்லது சிலேட்டுமமென்றும் பெயர் கொண்டு உடம்பிற் பரவும். The process of digestion. The food that we take passes into the stomach becomes reduced to the consistence of soup and is called chyme which enters the duodenum while the remains the food assume the character of the faeces. The chyme is then turned into chyle which enters the lymphatics and then goes to the heart and blood vessels.

*சீரண முறை, சீரணக்கிரமம்;* அந்த முறையை இங்கு விளக்கி கூறுவோம்; விளக்கம் by C. D. உட்கொள்ளும் அறுசுவை யுண்டி, வாயில் அரைபட்டு அங்குள்ள போதக கபத்துடன் கலந்து பிராண வாயுவால் உணவுக் குழாய் வழியாக இரைப்பைக்குள் செலுத்தப்படுகிறது. இரைப்பையிலுள்ள கிலேதக கபத்தின் செய்கையாலும் சமான வாயுவின் செய்கையாலும் உணவு ஆட்டுக்கல்லில் அரைபடுவது போல் நன்ருக அரைபட்டு,கூழாக்கப்படுகிறது; பிறகு வாயுவால் அது பக்குவாசயத்திற்குச் செலுத்தப்படுகிறது; அங்குள்ள பாசக பித்தம் சடராக்கினிகளால் சமைக்கப்பட்டு பக்குவமடைந்து அன்னரசமாகவும், திப்பியாகவும் மாறுகிறது. ஆறு சுவைகளும் இனிப்பு, கார்ப்பு, கைப்பாக விபாகமடைகின்றன; சமானன். வியானன் என்கிற வாயுக்களால் நீர் வடிவமாகவுள்ள அன்னரசமும், திப்பியும் சிறு குடலுக்குச் செலுத்தப்படுகின்றன. அன்னரசம் சிறுகுடலில் உறிஞ்சப்பட்டு இரச தாதுவைப் போஷிக்கச் செல்கிறது. முதல் நாள் இரசதாதுவில் தங்கி அங்குள்ள அக்கினி (இரசாக்கினி) யால் பக்குவமடைந்து அத்தாதுவைப் போஷிக்கிறது; இரண்டாம் நாள் இரத்த தாதுவிற்குச் சென்று தங்கி அங்குள்ள அக்கினியால் (இரத்தாக்கினி) பக்குவமடைந்து, அத்தாதுவைப் போஷிக்கிறது, அங்ஙனமே மூன்றும் நாள் நான்காம் நாள், ஐந்தாம் நாள், ஆறும்நாள், ஏழாம் நாள்களில் முறையே மாமிசம், கொழுப்பு, எலும்பு, மஜ்ஜை, சுக்கிலமாகிய ஒவ்வொரு தாதுவிலும் தங்கி அங்குள்ள அக்கினியால்சீரணிக்கப்பட்டு அந்தத் தாதுக்களைப் போஷிக்கிறது. பிறகு எட்டாம் நாள் தேகத்திற்கு குன்றுத வன்மையை யளிக்கும். குடலில் நீர் ரூபமாக திப்பி எஞ்சி நிற்கும். இது மேற்கூறிய வாயுக்களால் பெருங்குடலுக்குள் செலுத்தப்படும். அங்குள்ள அக்கினியால் நீர் உறிஞ்சப்பட்டு' கெட்டிப்பட்டு மலமாக மாறி அபான வாயுவால் வெளிப்படுகிறது, The Process of digestion. It is as follows. The food which generally consists of six tastes - Sweet sour, pungent, saltish, astringent and bitter —is eaten it is first grinded in the mouth and gets well mixed with Bodhaka kapam which exists at the throat and root of the tongue. Then the Prana Vayu sends it to the stomach through the gullet. Here it mixes with Kledaka Kapham. The Vayus Samanan and Vyanan aid the stomach to grind and partly digest the food into a soft pulp. The half digested pulp is then sent to the pithavayu (receptacle for bile) or otherwise called Pakuvasayam where Pasaka Pitham and Jataragni further digest it and turn it into liquid Annarasam and waste matter. Then they are passed into the small intestine. The annarasam is absorbed by the intestine and sent to Rasedhathu to feed it. So, during the first day Annarasam wets the dathu, and gets further digested by the Agni — Rasagni — which exists there. The Dhathu absorbs what is suitable and what it requires. On the second day the remaining Annarasam passes on to feed the

Rahktha Dhathu — Blood. Rakthagni— Agni of the Dhathu acts on the Annarasam, and the dhathu utilises what it requires. On the third day the remaining passes on to the mamisa Dhathu — flesh, which is feed in the similar manner. Thus on the fourth, fifth, sixth, and seventh days the Annarasam feeds Rosuppu (fat) Elumbu (bone) majjai (marrow) and sukila (Semon) Dhathus repectively in the same manner and on eighth day gives full vitality to the body. All movements in the small instestines are brought about by Vyanan and Samanam. The liquid waste matter, and undigested rather are all that remains now at the termines of the intestine. They are passes into the large intestine. The Agni that exsists there causes the water to be absorbed. They are dried become solid, and pass out as faeces. All movements in the large intestine are caused by Appana Vayu.

**சீரணமூட்டி,** சீரண சக்தி வளர்க்கும் மருந்து. medicine that promotes digestion.

**சீரணம்,** உண்டதைச் சமித்தல் அதாவது உணவாக உண்ட பண்டங்களைப் பக்குவப் படுத்தி இரசம் முதலிய ஏழுதாதுக்களுக்குப் பயன்படக் கூடிய அன்னரசமாகச் செய்யும் தொழில் — process or act of converting food into materials fit to be assimilated in the system — Digestion; 2. குறைவு, decrease 3. பதனழிவு, rottenness; 4. கிழங்கு bulbous root.

**சீரணம்.** உண்ட உணவானது பித்தம், பாசக நீர், குடல் நீர் கணைய நீர், வாய்நீர் முதலியவைகளின் உதவியினால் சீரணதிசையடையும், ஆதலால், பலவிதமாகக் கொள்ளப்படும். அவையாவன 1. பித்த நீரினாலுண்டான சீரணம், the digestive effect of the bile upon food — Biltary digestion.

2. வயிற்றில் பாசக நீரினாலேற்பட்ட சீரண சக்தி that which is carried on in the stomach by aid of the gastric juice — Gastric digestion.

3. குடலில் உண்டான சீரணம், digestion carried on in the intestines — Intestinal digestion.

4. கணைய நீரின் உதவியினாலுண்டான சீரணம், that which is performed by the pancreatic juice — Pancreatic digestion.

5. வாய் நீராலேற்பட்ட சீரணம். digestion effected with the aid of saliva — Salivery digestion.

6. ஏனைய வழியாலுண்டான சீரணம், digestion taking place some where in the body other than the alimentary canal such as in the blood or under the skin — Parenteral digestion.

7. உபசீரணம். அதாவது உண்டவுணவு கடைசியாக அடையும் சீரணம், final preparation of food for assimilation by aid of lymphatics etc, secondary digestion.

**சீரணரசம்,** வயிற்றிலிருக்கும் சீரண கோளங்களினின்று வெளிப்படும் ஓர் புளிப்பு நீர் இது உணவோடு கலந்து சீரணத்தை உண்டாக்கும், gastric juice which is a thin acid fluid thrown out from the gastric glands when food passes into the stomach.

NOTE:— Pure gastric juice appears to consist of little more than water containing a few saline matters in solution and its acidity is due the presence of free hydrochloric acid. It contains also pepsin. Thus when the food passes into the stomach the contractions of that organ roll it about and mix it thoroughly with the gastric juice to help digestion.

**சீரணரசவக்கினி,** சீரணத்திற்குக் காரணமாகவிருக்கும் சடராக்கினி, gastric fire.

**சீரணவிருத்தினி,** சீரணத்தை அதிகரிக்கும் பொருள்கள், stomachic.

**சீரணவுறுப்பு,** சீரணத்திற் குரிய உறுப்புகள், digestive organs.

**சீரணுக்கினி,** செரிமானத்தை யுண்டாக்கிப் பசியை யெழுப்பும் சூடு — சடராக்கினி.

**சீரணி,** ஓமச் செடி, Omum plant; 2. காடு forest; 3. சீரணித்தல் அதாவது சமித்தல், to digest.

**சீரணித்தல்,** See சீரணி, 2. பதனழிதல், to get rotten.

**சீரஸித்துப்போதல்,** உட்கொண்டு போதல், in chemistry becoming absorbed through chemical combination, being combined chemically; 2. சமித்துப் போதல், being digested completely.

**சீரணிப் பித்தல்,** சமிக்கச் செய்தல், causing or promoting digestion.

**சீரதம்.** பால் கொடுத்தல், the act of giving suck, the function of secreting milk — Lactation

**சீரதரு,** அத்திமரம், fig tree — Tithy melus antiquorum; 2. பால் வடியும் மரம், a tree with milky juice.

**சீரதி,** see ஓமம்.

**சீரதும்பி,** சுரை, bottle gourd.

**சீரதுருமம்,** holy fig tree.

**சீரத்துழாய்,** துளசி, holy basil — Grimum sanctum.

**சீரதைலம்,** எண்ணெய் பால் முதலியவை களைக் கொண்டு தயாரித்த தைலம் an ungent prepared with milk, oil etc

**சீரநாசினி,** பால்வற்றி lactifuge.

**சீரபடிகம்,** வெண்படிகம், a species of opal described as milky crystal.

**சீரபலம்,** களா; களாக்காய், Bengal currant — Carissa Carandas.

**சீரபாகம்,** கஷாயமிறக்நமுறை அதாவது 1 பாகம் மருந்து தண்ணீர் 32 பாகம் பால் 8 பாகம் தண்ணீர் சுண்டுமளவும் கொதிக்க வைத்து இறக்கவும். the proportionate method of preparing decoction with milk ie , one part of medicinal drugs. 8 parts of milk, and 32 parts of water. All are boiled together till all the water evaporates and milk alone remains. It is then strained & used. பாலிட்டுச் சமைத்தது, cooked with milk.

**சீரபுட்பி,** வெள்ளைப்பூ — Androprgon Ocicu-latus.

**சீரபுட்பிகம்,** வெள்ளைப்பூ பூக்கும் விஷ்ணு கரந்தை, a white variety of fever basil or Vishnu's plant.

**சீரபிரனேசி,** See எருக்கு.

**சீரமம்,** See விலாமிச்சை.

**சீரமி,** கௌளி பாத்திரத்தென்னை, a variety of cocoanut, the shell of which is used as a mendicants bowl.

**சீரமோசகம்,** ஓர் முருங்கை, a variety of moringa.

**சீரமோடகம்,** See சீரமோடன்.

**சீரமோடன்,** விழுதி, cleome plant; 2. See காட்டெருமைப்பால்; 3. வெள்ளைக்கல், white stone.

**சீரமோடா,** See சீரமோடன்.

**சீரமோனகம்,** கொம்புத்தேன். Honey collected from honey combs built on the branches of trees.

**சீரமோரடம்,** ஓர் கொடி, a creeping plant.

**சீரம்,** இலாமிச்சை, fragrant Andropogon grass — Andropogon Muricatus; 2. பால், milk; 3. சீரகம், cumin; 4. கூகை நீறு, the flour of malabar arrow root; 5. காட்டெருமைப்பால் milky juice of Euphorpia Antiquorum — Spurge; 6. மலைப்பாம்பு, python a large moutainous snake — non poisonous; 7. மரவுரி, bark of a tree used as cloth by mountainers, and even by Siddhars to protect themselves from cold; 8. செடியின் ரசம், sap of plant; 9. கோஷ்டம் Arabian costus — Costus Arabicus; 10. முலைப்பால், women's breast milk.

**சீரம்ரெண்டு,** See இரு சீரகம்.

**சீரயவம்,** இது ஒரு தாதுப்பொருள் — dolomite, a kind of rock containing double carbonate of lime and magnesia.

**சீரரோகம்,** பிரசவித்த பெண்களுக்கு பால் கட்டிக்கொள்ளல், disease due to accumilation of milk in the breast of delivered woman.

**சீரரோத்தமம்,** சீரற்றீஞ்சு, date tree or palm as opposed to பேரீஞ்சு, wild date palm.

**சீரல்.** நாகமணல், Zincore; 2. நாகபாஷாணம், a poisonous Compound of Zinc; 3. நாகம், Zinc; 4 சீருதல், excited condition.

**சீரவடம்**, ஈயம், lead; tin.

**சீரவட்டம்**, See சீரவடம்,

**சீரவட்டை**, ஈயத்தண்டு, See இண்டங்கொடி;

**சீரவர்த்தினி**, முலைப்பாலை விருத்தியாக்கும் மருந்து, Lactagogue.

**சீரவிரதம்**, பால்மாத்திரம் சாப்பிட்டு இருக்கும் விரதம், living on milk alone in consequence of a vow.

**சீரவிருட்சம்**, see சீரதரு, அத்திமரம், fig tree

**சீரன்னம்**, பாலும் சோறும் rice cooked with milk.

**சீரா**, பலாசு, palaus tree. Butea frondosa; 2. திஞ்சாறு, treacle; 3. சர்க்கரைப்பாகு, Syrup; 4 கவசம், outer covering; 5. நரம்பு, Nerve or vein; 6 அதிமதுரம், liquorice root. honey creeper; 7. பலா, Jack fruit tree.

**சீரா செங்கழு நீர்.** செங்கழுநீர், red Indian water lily. See சீதா செங்கழு நீர்.

**சீராடவல்லோன்**, எருமை முன்னை, broad leaved premna—Premna integrifolia.

**சீரால்**, சிராவம், discharge of any fluid. 2. பெரும்பாடு, abnormally profuse menustral; flow — menorrhagia.

**சீரால சகரோகம்**, தோஷப்பாலைக் குடிக்கும் சிசுக்களுக்குக் காணும் நோய்; இதனால் அசீரணப்பட்டுப் பேதியாகி சுரம் அரோசகம் வயிற்றிரைச்சல், ஏப்பம், கொட்டாவி முதலிய குணங்கள் ஏற்படும், a disease of children caused by taking vitiated breast milk. Symptoms are indigestion, diarrhoea, fever, anerexia, erectations, yawning and gas in the abdomen.

**சீராளன் கறி**, பச்சைப் பருப்பினால் செய்யப்படும் ஓர்விதக் கறி. சிறுத்தொண்டன் தன் பிள்ளையாகிய சீராளனை அறுத்துச் சமைத்த கறிபாகத்திற்கு ஒப்பனையாகக் கூறப்படும், a vegetable curry prepration of the Tamils. It is prepared mainly with green gram. It is named after Seeralan, son of Siruthondar.

NOTE: Siruthondar was a staunch devotee of God Siva. He used to feed the devotees of Siva who visit his house. Only after feeding a devotee, he would take his meals. One day a saintly devotee came to his house but refused to take meals without the curry prepared out of the flesh of his only son. He had to kill his son, and prepare the curry to feed the devotee The devotee was Siva himself. Being satisfied with his sincere devotion, he restored his son. The tasteful curry prepared out of green gram was named after his son.

**சீரானபிம்பி**, தித்திப்புக் கோவை, sweet Cephalandra indica.

**சீரானயிருசுவம்**, திருநாமப்பாலை, seven leaved hora tree—Alstonia scholaris.

**சீரி**, புளியமரம், tamarind tree — Tamarindus Indicus.

**சீரிகம்**, ஓர் பாம்பு, a kind of serpent.

**சீரிகை**, ஓர் சிள்வண்டு, a small poisonous beetle; 2. வண்டுகொல்லிப் பூடு, a plant known as worm killer. see ஆடுதின்னாப் பாளை; 3. சீமையகத்தி, ring worm shrub—Cassia alata.

**சீரிடம்**, தலை, head; 2 வாகை, sirissa tree — Albizza lebbek.

**சீரிடல்**, see சீரல்.

**சீரிணபத்திரம்**, வேம்பு, margosa tree—Azadirachta Indica.

**சீரிண பன்னம்**, } see சீரிண பத்திரம்.
**சீரிண பன்னி**, }

**சீரிணம்**, பொன்னாங்கன்னி, sessile plant—Illecebrum Sessile.

**சீரிதம்**, மரவுரி, see சீரம்.

**சீரிமா**, மாமரம். mango tree—Mangifera indica

**சீரியம்**, புளியமரம், tamarind tree.

**சீரியா**, மலைக்குறிஞ்சா, mountain downy tree. Indian ipecacuanha Tylophora asthmadica.

**சீரிவிருக்கம்**, புளியமரம், tamarind tree.

**சீரிவிருட்சம்**, see சீரிவிருக்கம்.

**சீரி வில்வம்**, ஆயிலியம், Common black plum of Jambolin tree — Eugenia Jambolana. see நாகமரம்.

**சீரினி**, செங்கழு நீர், red Indian waterlily— Nymphaea Odorata.

**சீருகம்**, தாமரை, lotus; செந்தாமரை, red lotus — Nelumbium Speciosum; 2. புளி, tamarind.

**சீருகின்ற வாசுகி**, நாகப்பாம்பு, Cobra.

**சீருகை**, வண்டு, beetle.

**சீருசங்கம்**, வளையலுப்பு, bangle salt. Fel vitri

**சீருடன் முத்தி**, சிற்றுமுட்டி, rose coloured sticky mallow. Pavonia Zeylancia.

**சீருணம்**, செம்பு, Copper.

**சீருணி**, } see சீருணம்.
**சீருணியம்**, }

**சீருமொடா**, செம்முழி. eyes reddended by anger 2. வெள்ளைக்கல், a white stone.

**சீருளியம்**, தாம்பிரம், copper.

**சீருள்**, ஈயம், lead; or tin 2 செம்பு; copper; 3. காரீயம், lead; 4. பஞ்சலோகம், an alloy of five metals.

**சீருற்றபாவை**, see மருள்.

**சீரேவாயா**, காட்டுசதகுப்பை, wild carrot — Peucedanum grande.

**சீரை**, மரத்தோல், inner bark of a tree; 2. மர வுரி, bark of a tree used as cloth.

**சீரோணிகம்**, காட்டாமணக்கு, adul oil plant — Jatropha ceylandulifera.

**சீர்**, பொன், gold 2. பத்தியவுணவு pres cribed diet to prevent or cure disease; 3. அளவு, measure; 4. புகனம், heaviness; 5. ஓசை, sound; 6. தளர்ச்சி, weak state

**சீர்கஸ்து**, மேனு என்னும் ஓர் வெள்ளை மரப் பால், a white gummy substance or resin taken from a tree Manna in sicily — it is a saccharine exudation with medicinal virtue.

**சீர்காகோழி**, சிறுதேட் கொடுக்கி, இது வட மொழியில் க்ஷீர காகோளி எனப்படும். a species of Indian heliotrope; 2. நரைக் கொள்ளு, a species of horse gram.

**சீர்காவிகா**, See இருள் செடி.

**சீர்க்காரமுண்டாக்கல்**, உற்சாகம் உண்டாக் குதல், — causing excitement,

**சீர்க்கிருமி**, எட்டி; கிருமியைப் போக்குதலா லிப்பெயர், Nuxvomica — Strychnos. Nux-vomica.

**சீர்க்கேடு**, ஒழுங்கு கெடுதல், — disorder.

**சீர்க்கோழி**, நரைக் கொள்ளு, a variety of horse gram.

**சீர்க்கோனகம்**, வெண் தேக்கு, white teak — Lagerstroemia Lanceolata.

**சீர்சனியம்**, கொக்கிப் பூச்சி, hook parasite.

**சீரணபத்திரம்**, வேம்பு, margosa see சீரிண பத்திரம்.

**சீர்ணபர்ணம்**, பேரீச்ச மரம், wild date tree 2. வேப்பமரம், margosa tree.

**சீர்ணம்**, சீரகம், cumin seeds; 2. பழுத்தது, that which has riped.

**சீர்த்தட்டு**, எலும்பின் வளைவு இது கிரக தோஷத்தினுல் ஏற்படுகிற தென்று கருதப் படும்—a condition in children in which the bones are rendered soft and flexible Rickets or Rgchitis.

**சீர்த்தாதிகம்**, தேவதாரி, deodar tree — Erythroxylon Monogynum.

**சீர்த்தாலன்**, நாகமணல், zinc ore.

**சீர்த்துழாய்**, ஓர் வகைத் துளசி, sacred Basil.

**சீர்படுத்தல்**, ஒழுங்கு செய்தல், to keep in order; 2. சுத்தி செய்தல், to purify or clean.

**சீர்பணம்**, See அமலை.

**சீர்பத்திரம்**, புண்ணியவரசு. peepul tree — Ficus Religiosa.

**சீர்பந்தபாஷாணம்**, கபர்ல பாஷாணம், a mineral poison one of the 32 kinds of arsenic.

**சீர்பந்தம்**, See சீர்பந்த பாஷாணம்.

**சீர்பாகி**, பனைமரம், palmyra tree — Borassus flabelliifer.

**சீர்மோடன்**, விழி, chilli fruited caper — Stroemeria Tetrandra alias cadaba indica.

**சீர்வளைக் கொட்டான்**, கரந்தைப்பூடு, sweet basil — Grimum Basilicum.

**சீலகாவுருவி**, வேம்பின் மேற் புல்லுருவி, a parasite on margosa tree — Coranthus.

**சீலகி**, சிந்தில், moon creeper — Menispermum Cordifolium.

**சீலநாதினி**, வெற்றிலை, betel leaf — Piper Betel

**சீலமைந்து**, பஞ்சமாபாதகம், five crimes, அவையாவன, they are 1, stealing 2. lieing 3. drinking; 4. disrespecting the teacner; 5. committing murder.

**சீலம்**, மனோசிலை, Red arsenic — Arsenicum Rubrum; 2. சிந்தில், moon creeper.

**சீலம்பாயறுகு**, ஓர் வகை யறுகம் புல், a variety of spreading Cynoden grass.

**சீலயம்**, சோனைப்புல், guinea grass — Panicum maximum.

**சீலா**, ஓர் மீன், a kind of fish; 2. ஓர் நீர்ப் பறவை, a water bird.

**சீலாந்தி**, பூவரசு, Portia tree (Heart wood) Thespesia Populnea.

**சீலிபம்**, வாகை, sirissa tree see சீரிடம்.

**சீலியுப்பு**, சிலி தேசத்து வெடியுப்பு, salt petre of Sicily.

**சீலை**, வெண்காரம், borax; 2. மனோசிலை, red arsenic; 3. தீட்டுச்சிலை, menstrual cloth 4. சீலைத்துண்டு, a piece of cloth.

**சீலைகட்டல்**, மருந்தடங்கிய பாண்டத்திற்கு சீலைமண் சுற்றல், covering the vessel containing medicinal drugs with a piece of cloth smeared with clay before exposing it to fire. See சீலைமண் செய்தல்: 2. காயம் கட்டி புண்களுக்கு மருந்து தடவிய சீலையை வைத்துக்கட்டுதல். இந்த சீலைகள் பலவிதம் To dress wounds abscess ulcer and sinus with medicinal gauze.

**சீலைகட்டி மறைத்தல்**, கண்புகைச்சல், dullness of vision as if obstructed by a screen.

**சீலைக்கால் தூய்மை**, சிலா மதுபாஷாணம். See சீலைக்கால் தூய்மை.

**சீலைச்சாம்பல்**, See சீலை சுட்ட சாம்பல்.

**சீலைசுட்டசாம்பல்**, கந்தையைக் கொளுத்திக் கிடைக்கும் சாம்பல் இதனால் எலும்புருக்கி குணமாகும். ashes derived by burning rags. It is used for tuberculosis of bones.

**சீலைசுற்றல்**, காயம் புண்புரைகளுக்கு துணியைச்சுற்றல், bandaging of wounds, ulcers sinuses etc after applying medicine.

**சீலைசெய்தல்**, சீலைமண் செய்தல், See சீலை மண்.

**சீலைப்பற்று**, சீலையிற் பூசிய மருந்து, a tenacious compound steeped on a piece of cloth and made to adhere to the surface of the body — Plaster — 2. ருதுச்சீலை, soiled menstrual cloth.

**சீலைப்பாம்பு**, ஓர் விஷமற்ற பாம்பு, a non poisionous snake of the species of Russell— carpet snake.

**சீலைப்புல்**, ஓர் வகைப்புல், a kind of grass — Panicum Violaceum.

**சீலைப்பேன்**, உடம்பில் தரிக்கும் அழுக்குத் துணிகளில் பிறக்கும் வெண்ணிறமான பேன் இதற்கு வடமொழியில் 'விட்சா' எனப்பெயர். இது கடிப்பதினால் உடம்பில் சிறுதடிப்பும் தினவும் ஏற்படும். இதனால் சன்னிபாத சுரமும் உண்டாகும், a degraded white parasitic insect found on the dirty clothes worn — Louse — Its bite causes raised patches attended with itching. The organisms of typhus fever are transmitted by the bite of louse, It is known as 'Veecha' in Sanskirt.

**சிலைப்பேன்கடி,** சிலைப்பேனால் ஏற்பட்டகடி, bite of Louse.

**சிலைமண்,** மருந்து அடங்கிய பாண்டத்தைப் புடத்திற்கு ஏற்றுமுன், காற்று புகாதபடி பொருத்து வாயில் சுற்றுவதற்காகச் சிலையிலூட்டும்களிமண், அல்லது செம்மண், clay or other tenacious substance like red ochre which is used to smear the strip of cloth which will bind the container of drugs & its lid — Lute.

**சிலைமண்சுற்றல்,** See சிலைமண் செய்தல்.

**சிலைமண் செய்தல்,** மருந்து பாண்டத்தின் வாயை சிலை மண் கொண்டு அடைத்தல், To bind the contain of medicine to be prepared and its lid together with strips of cloth smeared with clay or red ochre and allowed to dry before submitting to fire.

**சிலை மண்மூவிரண் டொன்றுமேவல்,** ஏழுதரம் சிலைமண் சுற்றுதல், To bind the container and the lid seven times with clay smeared strip of cloth.

**சிலை மருந்து,** 1. பிளாஸ்திரி — plaster; சிலையிலூட்டும் விரணமருந்து இது பல விதம் அவையாவன ointment, oil or dusting powder applied to the ulcers by dipping the gauze in the oil or by smearing or dusting gauze with the medicine துவர்ச்சிலை — அரையாப்புக்கட்டி ரணங்களுக்குப் போடும் சிலை மருந்து — Bubo ointment.

2. காரச்சிலை: — ஆன்மாமிச ரணங்களுக்கு சதையைக் கரைக்கப் போடும் சிலை மருந்து, Corossive ointment.

3. சிவப்புக்காரச்சிலை:—ரசம், லிங்கம், அரிதாரம், கௌரி, சிங்கி, காவிக்கல் இவைகளை சமஎடை கொண்டு பழச்சாற்றுலரைத்து ரணத்துக்குப் போடும்மருந்து. இதனுல் சண்டிப்புண் பிளவைப்பவுத்திரம் ஆனைக்கால் போம், red irritant ointment

4. வெள்ளைச்சிலை:—வெள்ளைத் துணி சுட்ட சாம்பல், சங்கு, ரசம், குங்கிலியம், சவுட்டுப்பு, கற்சுண்ணம்பு முலைப்பால் விட்டரைத்துப் போடும் சிலைமருந்து. இதனுல் சண்டிப்புண், பிளவை வாய்ப்புற்றுபோம், white ointment.

5. நீலச்சிலை:—தலையோடு, சங்கு, வீரம், வெள்ளை, அரிதாரம், நீலம், சவுட்டுப்பு முதலியவை சம எடை தாய்ப்பால்விட்டரைத்துப்போட திமிர்கரளைகட்டி முதலியன போம், Blue ointment.

6. பச்சைசேர்வை சிலை:—லிங்கம், மைல்துத்தம், சிங்கி, இரசம், குங்கிலியம் இவைகளைப் பொடித்து நல்லெண்ணெய் கூட்டி அரைத்து, பிறகு நீரால் கழுவி எடுத்த சிலை மருந்து. கிரந்தி, தடிப்பு. நீர் வடியும் ரணம் போம், Green oinment.

7. பச்சைக்காரச் சிலை, மஞ்சள், கௌரி அரிதாரம், வெள்ளை, சிங்கி, முதலியவைகளைகள் வார்த்து அரைத்து .சிலையிலூட்டிய மருந்து. படை, தொடை வாழை, திமிர் போம், green irritant oinment.

8. கருத்தகாரச் சிலை, மஞ்சள், வசம்பு, எருக்கிலை இவைகள் சுட்ட கரி; இத்துடன் கௌரி, வெள்ளைப் பாசாணங்கள், சங்கு சமஎடை கொண்டு கையாந்தகரைச் சாற்றிலரைத்து, சிலையிலூட்டிப்போட கடிவிஷ ரணம் ஆருப்புண் திமிர் தினவு போம், Black irritant oinment.

9. மஞ்சள்காரச்சிலை:— ரசம், கௌரி, வீரம், அரிதாரம், சிங்கி, கடுக்காய்த் தோல், கடுக்காய்ப் பூச்சூரணம் கொழிமுட்டைக் கருவால் அரைத்துப்போட முளை மார் பாணிபோம். yellow irritant ointment.

10. சிவப்புக்காரச்சிலை:—ரசம், லிங்கம், அரிதாரம், கௌரி, சிங்கி, காவிக்கல் இவைகளைப் பழச் சாற்றுலரைத்துப்போட ஆருவிரணம், பிளவை, விஷக்கிருமி, ஆனைக்கால் பவுத்திரம் போம், Red irritant ointment.

11. கறுப்புக்காரச்சிலை — கௌரி, அரிதாரம், கற்சுண்ணும்பு, பால்துத்தம், சிங்கி, வெ. குங்கிலியம், வெண்துணி சுட்ட சாம்பல் சமஎடை, கழஞ்சுகொண்டு பொடித்து ரணத்தின்மேல் தூவிட ர முளை விழுந்து ஆறும்—Black irritant ointment.

12 வெள்ளைக்காரச்சிலை — வெள்ளை, கௌரி, குங்கிலியம், சவுடு, வெண் குங்கிலியம், துணி சுட்டசாம்பல் பொடித்துத் தூவ ரணம் ஆறும். முளையும் கரையும் — white irritant powder.

**சிலை மூன்று செய்தல்,** மூன்று தடவை சிலை மண் சுற்றல், to bind the contain and lid three times with clay smeared strip of cloth.

NOTE :— For calcining medicine Tamil Medical Science prescribes different methods of luting the vessel according to the strength of medicine contained in it, and degree of heat required for calcination.

**சிலையிலூட்டல்,** மருந்தை சிலையில் தடவல், to smear medicine on the limt or Steep the gauze in medicine if it is liquid.

**சீலையுஞ்சை,** கருவாகை, fragrant sirissa.

**சீலை வடிகொள்ளல்,** மருந்தைப் பொடித்து துணியிலிட்டுச் சலித்து எடுத்தல், separating fine and course powder of a drug by using cloth as sieve.

**சீலை வடிதாக்கல்,** See சீலை வடிகொள்ளல்.

**சீலை வலுவாகச் செய்தல்,** காற்றுப் புகாத படி சீலை சுற்றல், அல்லது சீலை மண் செய்தல், luting the containers before submitting them to strong fire.

**சீலை வாகை,** பீலி வாகை, stipulated sirissa.

**சீலை வாய்செய்தல்,** மருந்து பாண்டத்தின் வாய்ப்பொருத்தத்தை துணியால் இறுகச் சுற்றல், luting the mouth of containers with lids.

**சீலைவாளை,** சொட்டை வாளை, butter fish 1½ feet long.

**சீல்,** பருந்து, Kite—Milvus Govinda.

**சீவகணங்கள்,** தாதுக்களின் உயிர்த்துணைக் கருவிகள், the vital or essential organs supporting the seven constituent parts (seven Dhathus) of the body.

**சீவகப்பாலை,** திருநாமப்பாலை, wild sarsaparilla —Smilax macrophylla.

**சீவ ஆத்துமம்,** பிராணுயம், finite spirit c. f. சீவாத்துமா.

**சீவகப்பால்,** எருக்கன்பால், madar milk.

**சீவகப்பேரிதம்,** புளித்த நீராகாரம், sour cold-rice water.

**சீவகமிருதி,** கொல்லன் கோவை, sky root Bryonia epigaea.

**சீவகமூலி, சீந்தில்.** moon creeper—menispermum cordifolium; 2. காட்டு நன்னாரி, wild sarasaparilla — Similax macrophylla; 3. அசோகி Indian Coccinea — Cephalandra indica.

**சீவகம்,** வேங்கை, Indian Rino. Petrocarpus bilobus; 2. ஏலம், Cardamuni; 3 திருநாமப் பாலை, see சீவகப்பாலை; 4. இலந்தைப்பிசின், Gum of Jujuba.

**சீவகர்ணுங்கி,** பொடுதலை, wild long pepper — Creeping vervain — Verbena nodiflora.

**சீவகளை,** உயிர்ப்பு, உயிரின் செழிப்பு vital power. illumined life.

**சீவகளையிருப்பு,** மூச்சுக்குப் பிரதான(மான) இடம், the seat of respiration; 2 உயிருக்கு முக்கியமானவிடம். the seat of vital energy vital part.

**சீவகன்,** நீண்ட ஆயுள் பெற்றவன், a man of long life; 2. சீவன்முத்தன், hermit with wisdom.

**சீவகாங்கை,** உயிருக்கு முக்கியமான அல்லது ஆதாரமாகிய சூடு, vital heat.

**சீவசாட்சிநாடி,** அங்குஷ்ட மூலத்தின் நாடி; இதன் சலன விசேஷத்தால் நோயாளியின் நிலைமையை எளிதில் அறியலாம் இந்நாடிக்கு சிருயுவசா, சிவசிரம், தமனி, தாமனி, தந்துகி சீவிதஞ்சம் என்று பல பெயர் களுண்டு, Radial arterypulse. By feeling it one can understand the true condition of the patient. It is known by several names.

**சீவகாதீதம்,** சந்தனக்கட்டை, sandal wood.

**சீவகாலம்,** வாழ்நாள். life time.

**சீவசக்தி,** பிராணசத்து, vitality - Vital power life essence; 2 பிராணனுக்கு உதவியான உடம்பை பலப்படுத்தும் பொருள், vitamins essential for life.

**சீவசஞ்சீவி,** சீந்தில், moon creeper. see சீவகமூலி.

**சீவசஞ்சீவிமாத்திரை,** சீந்திற்கிழங்கு, சித்திர மூலம் வேர்ப்பட்டை, சேரான் கொட்டை, வாய்விளங்கம், நாபி, வசம்பு, கடுக்காய், தான்றிக்காய், சுக்கு, திப்பிலி இவைகளை சமனெடை எடுத்துக் கல்வத்திலிட்டு பசு மூத்திரத்தால் அரைத்து குன்றியளவு திரட்டி நிழலுலர்த்தித் தயாரித்த மாத்திரை, இது 1. வாந்திபேதி, 2. பாம்பு விஷம், 3. சன்னிபாதம், இவைகளுக்கு இஞ்சிச் சாற்றில் கொடுக்கவும். A pill prepared with ten bazaar drugs found with Cow's urine and given for cholera snake poison and sannipatham. The drugs are moon creeper root, plumbago root bark marking nut, aconite sweet flag. gall nut, dry ginger, piper longus beleric myrobalans and berries of embelia ribes Jeevasanjeevi pill.

**சீவசத்து,** பிராணபலம், vital strength or power.

**சீவசத்துப்பொருள்,** vitamin.

**சீவசத்துவம்,** see சீவசத்து.

**சீவசாட்சி,** சர்வகாரியங்களுக்கும் சாட்சியாக விருக்கும் ஆன்மா, the intelligent soul or the universal intellect witnessing all things.

**சீவசாதனம்,** தானியம், paddy.

**சீவசுத்தி,** சீவதற்போத மடக்கி பிரமத்தைக் கண்டறிதல், a state or condition in which the individual soul loses the sense of self and realises the Brahman.

**சீவசுவாசம்,** பிராணவாயு, Oxygen; 2. மூச்சு, breath of life

**சீவசெந்து,** உயிர்ப்பிராணி, living creature.

**சீவசோணிதம்,** சுத்த ரத்தம், arterial blood; 2. கருவுண்டாக்கும் ருது, menstrual responsible for conception.

**சீவஞ்சீவகம்,** ஓர்வித நிலாமுகிப்புள், a variety of bartavelle — Pardix Genus.

**சீவடிதல்,** சீழ்வடிதல், oozing or discharge of pus.

**சீவட்டுக்காடை,** மெல்லியகாடை, a thin quail.

**சீவதத்துவம்,** சீவதாதுவைப் பற்றி நிற்கும் சுபாவத்தைக் கருதிய வுண்மை, the vital principle or that principle on which the life of an organism is thought to depend.

**சீவதம்,** ஆமை, tortoise; 2. மயிம், Peacock

**சீவதனம்,** சீவனுள்ள திரவியம், life giving drug

**சீவதன்,** நீண்ட ஆயுள் உடையவன், long living man; 2. வைத்தியன், physician.

**சீவதாது,** பிராணவாயு சஞ்சரிக்கும் நாடி, one of three pulses felt in the wrist indicating the vital principle life pulse.

**சீவதாரு,** தேவதாரு, deodar tree.

**சீவதி,** பாலை, iron wood tree — Mimusops Hexandrus.

**சீவதிசை,** உயிரோடிருக்குங்காலம், duration of life 2 ஆயுள்நாள், life time.

**சீவதேகம்,** ஆன்மாவோடு கூடிய வுடம்பு, body or receptacle of the soul in its different states existence: 2. சரீரத்திரியம், அதாவது முத்தேகம்; 1. தூலம்; 2. சூக்குமம்; 3. காரணம். (in Agama Philosphy) the three fold enumeration of bodies as physical the astral and the casual.

**சீவத்திரயம்,** சீவ ஆத்துமாவின் மூன்று வகைப் பேதங்கள், the three state of the soul or life.

**சீவத்தறுவாய்,** மரணவாயில், moment of death.

**சீவத்துவம்,** ஆன்ம சக்தி, the life energy 2. உடம்பை உயிர்ப்பிக்கும் தத்துவம். the vital force on which the life depends — vitality.

**சீவநதி,** எக்காலமும் நீர் ஓடிக்கொண்டிருக்கும் ஆறு — River where water flows all through the years ie during all seasons — example Ganges, Godaveri.

**சீவநாசினி,** வெற்றிலை, betel leaf.

**சீவநாசவிடம்,** உயிர் சேதத்தை விளைவிக்கும் நஞ்சு, deadly poison.

**சீவநாடி,** பிராணவாயு உலாவும் இரத்தக் குழல், the vital artery 2. வாதநாடி, one of the three pulses in the wrist indicating the life principle — pulse of wind humour.

**சீவநாந்தம்,** மரணம், death.

**சீவநாயகன்,** ஆத்துமா, the soul 2. சீவகரணி, a medicine or have rage which raises or revives the spirits — cordial.

**சீவநாள்,** ஆயுட்காலம், life time.

**சீவநூல்,** See உயிர் நூல், Biology.

**சீவந்தம்,** மருந்து, medicine 2. பிராணன் life.

**சீவந்தி,** சிந்திற்கொடி, moon creeper 2. பாலைமரம், iron wood tree 3. ஓர்வகை கடுக்காய், a variety of gallnut tree 4. புல்லூரி, parasite plant. 5. சீவனி which

see; 6. கொடிப்பாலை, green wax flower, 7. வெட்பாலை, tellichery bark — wrightia tinctoria: 8. மந்தாரச்சிலை, a kind of stone with medicinal virtue.

**சீவந்திகம்,** சீந்தில், — moon creeper — Tinosphere cordifolia.

**சீவந்திக்கடுக்காய்,** See செங்கடுக்காய்.

**சீவந்திக்கிரியம்,** பெண்பனை, female palmyra.

**சீவந்திரி,** See சீவந்தி.

**சீவந்திரேவதம்,** பூனைவணங்கி குப்பைமேனி Acalypha Indica.

**சீவந்திரோகி,** பாலை, see சீவந்தி.

**சீவந்தில்,** see சீந்தில்.

**சீவபரமாணு,** சீவஅணுவில் உருண்டையாய் நிற்கும் பாகம், a spheroid body with in a cell forming the essential and a vital part — Nucleus.

**சீவபிரேதம்,** உயிர்ப்பிணம், living corpse.

**சீவபேதம்,** உயிர்ப்பேதம், differents lives.

**சீவப்பிராணி,** உயிர்ப்பிராணி, living creature.

**சீவப்பிரியம்** / **சீவப்பிரியை** } கடுக்காய் மரம், Indian gall nut tree.

**சீவமங்கிலியம்,** ஓதளை, medicinal acacia — Acacia catechu.

**சீவமந்திரம்,** உடல், body.

**சீவம்,** சரகாண்டபாஷாணம், a kind of arsenic 2. see சீவன் 3. பரமாத்துமா, the universal soul.

**சீவரசம்,** இரத்தம் அளவுக்கு உடம்பில்அதிகரித்தாலும் குறைந்தாலும் நோய் அல்லது மரணம் சம்பவிக்கும் பிராண தாரத்திற்கு ஆதாரமான இரத்தம், blood which is essential for life. If it increases or decreases or causes disease.

**சீவரத்தம்,** பிராணதாரத்திற்கு ஆதாரமான இரத்தம், blood essential to keep body alive.

**சீவரத்தாசயம்,** இருதயம், heart propelling blood.

**சீவரத்தினபீடம்,** சுக்கிலம், semen which is seat of life.

**சீவரத்தினம்,** முத்து, pearl; 2. மாணிக்கம், a superior ruby; 3, தலைச்சன் பிள்ளை சிரசிலிருக்கும் கல், a stone found in the head of a first born child; 4. பத்மினி சாதிப் பெண், One of the four classes of women divided according to lust; 5. நாகரெத்தினம், a gem supposed to be on the head of a species of cobra.

**சீவரத்தினநாதம்,** துத்தநாகம், zinc.

**சீவராசி,** உயிர்ப்பிராணிகள், all that live.

**சீவரேகை,** உள்ளங் கையிலுள்ள ஆயுள் ரேகை, a line on the palm indicating the duration of one's life.

**சீவர்த்தினி,** பாலைமரம், iron wood tree — Mimusops hexandra.

**சீவலயம்,** சாவு. death.

**சீவலம்,** ஓர் நீர்ப்பூண்டு, an acquatic plant.

**சீவலாக்கல்,** மெல்லிய துண்டுகளாகச் சீவியெடுத்தல், to shave off in thin slices with a sharp instrument.

**சீவலோதனி,** கையான் தகரை, eclipse plant — Eclipta Prostata.

**சீவல்,** கத்தியால் களைதல், scraping 2. சீவுதல், paring off, 3, செதுக்குதல், dressing with a knife — whittling; 4. மெல்லியதாய் அரிதல், cutting into thin pieces; 5, தாம்பூலத்தில் தயாரிக்கப்பட்ட பாக்குச் சீவல், areca nut parings used along with betel leaf and chunnam; 6, செதுக்கப்பட்டது, shavings; 7 மெலிந்த உடம்பு, emaciated body.

**சீவ ஆத்துமம்,** பிராணயம், finite spiril C. f. சீவாத்துமா.

**சீவவர்க்கம்,** சீவசாதி, animal kingdom as opposed to தாவர வர்க்கம் vegetable kingdom; சீவசிருஷ்டி, creation of life.

**சீவவனல்,** உயிர்த்தீ, vital fire. 2. உடம்பின் சூடு, Animal heat. 3, சமிக்குந்தீ, gastric fire,

**சீவவாதக் கட்டளை,** உடம்பின் தத்துவங்களைக் குறிக்கும் ஓர் தமிழ் நூல், a Tamil treatise on philosophical conception of the human body.

**சீவவிஷியம்,** மரணம், death.

**சீவவீரியம்,** இரசம். mercury.

**சீவவெறி,** உயிர்ப்பிராணிகளின் நஞ்சு, poison of living creatures or animals.

**சீவவொடுக்கம்,** see ஆன்மா வொடுக்கம்; 2. சமாதி. பாம்புகடி முதலியவற்றில் உயிர் அடங்கி நிற்றல், a condition of temporary cessation of animation in snake bites & Samadhi (in yoga).

**சீவனகம்,** சோறு, Cooked rice.

**சீவனபுத்திரர்,** புத்திரஞ்சீவி, Putranjiva rox burghi.

**சீவனம்,** உயிர் வாழ்தல், living; 2. நீர், water; 3. மூளை, brain; 4. வெண்ணெய், butter; 5. சீவனோபாயம், means of lively hood; 6. கஞ்சி, boiled gruel.

**சீவனவுடதம்** இறுதிகாலத்தில் உயிரைச் சிறிதுவரை நிறுத்தும் கண்டாவிழ்தத்தைப் போன்ற மருந்து, a medicine which retains life for a few minutes by the renewal of vital activities — revivescence drug or medicine; 2. மூர்ச்சை தெளிந்துயிர்ப்பிக்கு மருந்து, a remedy that aids in restoring conciousness; 3. உடம்பிற்குச் சுகத்தையும் வலிமையையும் கொடுக்கும் மருந்து, a medicine that helps in restoring health and vigour — restorative.

**சீவனுகாதம்,** நஞ்சு, poison.

**சீவனுகினி,** வெற்றிலை, betel leaf; நீர், water.

**சீவனுக்கினி,** see சீவனுகினி.

**சீவனுடி,** see சீவநாடி.

**சீவனுதாரம்,** உடம்பு, body.

**சீவனுந்தம்,** உயிர் முடிவு; மரணம், end of life—death.

**சீவனுயுதம்,** see சீவனுவுபதம்.

**சீவனுர்த்தம்,** உயிர் வாழ்க்கைக்கு ஆதரவு, support of life as opposed to ஆத்துமார்த்தம் support for existence of soul.

**சீவனுவுபதம்,** பிணி தீர்த்து உயிர்தருமருந்து, restorative; 2. உயிர்தருமருந்து, a medicine sought for by the alchemists for prolonging life—Elixir. c. f சீவனுவுடதம்.

**சீவனுளி,** உயிருள்ள ஆண் அல்லது பெண், living being or person.

**சீவனி,** ஆடுதின்னாப்பாளை, worm killer—Aristolochia Bracteata. 2. மூர்ச்சை தீர்ந்துயிர்தரு மருந்து. a restorative; 3. சீவநாடி, the vital artery known as aorta which gives rise to all the arteries of the systemic circulation; 4 மூலாதாரத்திலுள்ள நாடி, artery in the sacral region between the anus and the pudenda; 5. வாதநாடி, one of the three pulses at the wrist indicating the vital function of the body; 6. பாலை மரம், iron wood tree — Minusops hexandra; 7. செவ்வள்ளிக்கிழங்கு, red coloured sweet Potato —Dioscorea Sativa; 8. மந்தாரச்சிலை, a species of black stone with medicinal properties வெட்பாலை, Wrightia tinctoria.

**சீவனிநங்கை,** தர்பூசனி, water melon.

**சீவனிநாடி,** see சீவநாடி.

**சீவனியகணம்,** மூலிகைகளை குறித்த ஓர் வைத்திய நூல், a treature about plauts promoting longevity.

**சீவனியம்,** தண்ணீர், water; 2 மழைச்சலம், rain water. 3. கருவைக்காப்பாற்றும் சரக்குகள், ஆயுளை வளர்க்கும் மருந்துகள், drugs that preserves and protects the conception; medicine that prolongs life.

**சீவனிய தைலம்,** கடைச் சரக்குகளுடன் உடும்பு, பருந்து கொழுப்புச் சேர்த்துக் காய்ச்சி, செவிடுக்குக் கொடுக்கும் ஓர் தைலம், Water lizard, fat of kite and bazaar drugs are boiled & given for deafness.

**சீவனீயம்,** மூத்திர தாரை வழியாக செலுத்தப்படும் ஒரு கிருதம், a preparation of ghee which is used to be injected through urethra. see சீவனியம்.

**சீவனீயவர்க்கம்**, சீவகம், ரிஷபகம், காகோளி, சிரகாகோளி, மேதை, மகாமேதை, விருத் திருத்தி, இவ்வெட்டும் அட்டவர்க்கம் எனப் படும். இவை கிடைக்காவிடில் சீவகம், ரிஷப கம் இதற்குப் பதிலாக நிலப்பூசனிக் கிழங் கையும், மேதை, மகாமேதைக்குப் பதிலாக தண்ணீர்விட்டான் கிழங்கையும், காகோளி, சிரகாகோளிக்குப் பதிலாக அமுக்கிராங் கிழங்கையும் விருத்திருத்திக்குப் பதிலாக— நிலப்பனங் கிழங்கையும் சேர்த்துக்கொள் ளல் வேண்டும், the group of drugs that prolong life. It is not possible to obtain them. instead the following are used. Ipomea digitata; 2. Asparagus, 3. Winter cherry (root) 4. Black musale.

**சீவனௌஷதம்**, இறுதி காலத்திலும் உயிரை நிறுத்து மருந்து, medicine tending to prevent life leaving the body.

**சீவன்**, உயிர், life; 2. உயிர்ச்சத்து, vitality; 3. சீவாத்துமா, perceptive soul as found in ones body i. e. individual soul as opposed to பரமாத்துமா, the infinite or abstract state of the soul realised only in extreme circumstances as Samadhi. i. e. universal soul; 5. சீந்தில், moon Creeper; 6. வைடூரி யம், Catseye; 7. பிராணி, living being; 8. உயிர்தருமருந்து, life giving medicine; 9. பிராணன், vitality.

**சீவன்கொடுத்தல்**, பிழைக்க வைத்தல், to restore life.

**சீவன் சீவம்**, ஓர் வகைக் காட்டுக்கோழி, a species of jungle fowl.

**சீவன் பிரிதல்**, உடம்பினின்று உயிர் பிரிதல், the separation of life from the body 2. இறத்தல், to die.

**சீவன் மயங்கல்**, ஓர் மரணக்குறி, a symptom before death.

**சீவன் முத்தன்**, துறந்த ஞானம் மடைந் தோன், one in whom the soul is freed from the illusive which ensnares it before his death — perfected soul; 2 இம்மையிலே முத்திக்குண்டான பக்குவத்தை அடைந்த வன் one whose soul remains only so long in the body as is necessary to work out the karma whose activity is already commenced See ஆரூடன்.

**சீவன் முத்தி**, ஞானமடைந்து பிறப்பறுத்து நிற்றல், the state of the soul which is liberated from the illusion it before ones death — final deliverance.

**சீவன் வாங்கல்**, கொல்லல், taking away life — killing.

**சீவா**, பாஜ், iron wood tree.

**சீவாகி**, செஞ் சந்தனக் கட்டை, red sandal wood.

**சீவாக்கினி**, உயிர் பிழைத்தற் கேதுவான சூடு, heat required for sustenance of life — animal heat, உயிர்த்தீ—மூன்று வகைகளி லொன்று.

**சீவாசயம்**, உயிர்நிலே, — seat of life vital part

**சீவாணு**, பரகு போன்ற சிற்றறைகளிலிருக் கும் வஸ்து, a viscid colloid holding fine granules in suspension. 2. பிராண இயக்க முள்ள அணுமாத்திர வஸ்து, the only known form of matter in which life is manifested — protoplasm; 3. உயிர் அணு- ce.l—ஓரேஒரு உயிர் அணுவைப் பெற்றுள்ள கிருமி, — one celled germ or unicellular organism — bacterium

NOTE :— It really means the germs supporting the life and let us see the role of germs in the causation of diseases. According to Siddhars the germs by themselves are powerless to cause diseases unless the constitution is undermined by unregulated sexual functions and other rules of health. It is only the neglect of such health — ensuring practices that make man an easy prey to germs which are powerless in cases of yogis and other able bodied men who keep their bodies pure and strong by the observance of self control and regular healthful habits. So in Siddhar's work germs do not occupy the all important role, that they do in the Western medicine of to day.

The ancients did recognise their existence and their potency for mischief as we gather from thier writings. Generally the germ caused diseases are leprosy, Crysipelas Carbuncle, certain skin diseases abscesses etc., and it is so mentioned in their works.

NOTE :— Infectitions diseases such as cholera dyphtheria, small-pox are all said to be

caused by germs. That is the theory of the west. It must be understood that if an English medicine prescribed in such cases fails to do any good where as the Indian Medicine works it out with complete success then the 'Siddhars' (Eastern) theory has to be considered more scientific than that of the west.

**சீவாதாரம்,** உடம்பு, body as a mainstay of life.

**சீவாது,** உயிர்ப்பிக்கு மருந்து, a medicine restoring consciousness.

**சீவாதாரி,** கோகா செடி, Cocaine plant Erythroxylon Coca.

**சீவாத்துமம்,** See *சீவாத்துமா.*

**சீவாத்துமா,** சாக்கிரம் அல்லது உயிர் வாழ்க்கைக்குப் பிரதானமான ஆத்துமா, the finite spirit, embodied spirit individual human spirit which is essential for existence as opposed to பரமாத்துமா — infinite spirit or universal soul. Various people have in antiquity assigned to various parts of the body the seat of the soul or life such as the blood, the heart, and the breath. Generally the brain was not so regarded. The Vaidik system posits the heart as the chief centre of Consciousness — a relic of which notion we also still preserve in such phrases as 'take it to heart' and 'learn by heart'.

According to tantras however the chief centres are to be found in the chakras of the cerebro spinal system and in the upper brain (சகஸ்ராரா) which they describe though the heart is also recognised as a seat of Jivatma or embodied spirit in its aspect as vital principle or Prana Biblical saying is 'the blood is life'.

According to same Indian views the brain is the centre of the mind and senses and the heart that of life Charaka says that the heart is the root from which springs all other parts of the body and is the centre of some of the functions or organs. According to Sushruta the heart is the seat of sensations.

**சீவாந்தம்,** சீவிய முடிவு, end of life.

**சீவாலி,** முதுகில் மூன்று புள்ளிகளையுடைய ஓர் வகைக் கடல் நண்டு, a sea crab having three dots on the shell on its back — Neptumes Sanquinolentus(in yoga philosphy)

**சீவாவத்தை,** ஆத்துமாமடங்குமவத்தை, அதாவது சாக்கிரம், சொற்பனம், சுழுத்தி முதலியன, five stages of consciousness of the soul when passing from the physical to intellectual state — wakefulness, dream trance etc. 2. (in pathalogy) — மரணவத்தை — death pangs.

**சீவான்மா,** See *சீவாத்துமா.*

**சீவி,** அழிஞ்சில், alangium 2. உயிர் வாழ்தல், to live 3. மலைகோங்கு, a species of silk cotton tree grown in mountains; 4, மதனப்பூடு, a flowering plant having the virtue of promoting vitality in the system — cycus circinalis; 5. உயிருடையோன், living man or woman.

**சீவிகா,** சாதிக்காய், nut meg.

**சீவிசுரம்,** ஆன்மா, soul.

**சீவிச்சுரம்,** ஆன்மா, the soul; 2. சீவாத்துமா the sentient soul as opposed to பரமாத்துமா, the abstract soul.

**சீவிதகாலம்,** சீவிக்குங்காலம், life time.

**சீவிதசமுசயம்,** மரண பயம் fear of death.

**சீவிதஞ்ஞை,** இரத்தாசயம், heart.

**சீவிதம்,** பிழைப்பு, existence; 2. விருத்தி, progress; 3 வாழ்நாள், life time.

**சீவிதமந்திரம்,** பஞ்சாட்சரம், the five sacred letters of Siva — ந, ம, சி, வ, ய.

**சீவிதேசன்,** See *சீவனுவுபதம்.*

**சீவித்தல்,** சீவியம் பண்ணுதல், to lively hood; 2. மரித்தல், dying; 3. சீவிப்பித்தல், to make one live. 4. உடலுடன் வாழ்தல், to live with the body.

**சீவித்துப்போதல்**, இறத்தல், to lose the seed of life — to die.

**சீவிப்பித்தல்**. சீவிக்கச் செய்தல், to make one live,

**சீவியகாலம்**, வாழ்நாள், life time.

**சீவியங்கம்**, கல்லுப்பு, rock salt but strictly the pebble like salt — அண்டகல் — found on the soil of fuller's earth.

**சீவியநாள்**, ஆயுள்நாள், life time.

**சீவியம்**, ஆயுள், life time; 2. உயிரோடிருக்கை, existence of life; 3. சீவனம், lively hood; 4. வாழ்நாள், living period.

**சீவியெடுத்தல்**, சதை வளர்ச்சியை கத்தியால் செதுக்கியெடுத்தல், removal of a part or growth by paring off.

**சீவினி**; சஞ்சீவி மருந்து, elixir; 2. சீவிக்கச் செய்யும் மருந்து. any medicine that promotes or restores life: 3. அழிஞ்சில், alangium.

**சீவு**, ஓர் புல், a kind of grass; 2. சீவுதல், to pare.

**சீவுதல்**, சுரண்டுதல், scraping; 2. பல்துலக்கல், cleaning the teeth.

**சீவொழுக்கு**, See சீழொழுக்கு.

**சீவோற்பத்தி**, கருத்தரித்தல், conception. 2. கருக்கொள்ளுங் காலம், period of conception.

**சீழுதிரக்கட்டு**, பிள்ளை பெற்றவர்களுக்குக் காணு மோர் நோய். இதற்கு மூங்கிலிலை கஷாயம் வைத்து 3 தினம் கொடுக்க அழுக்கு கீழ்நோக்கிக் குணப்படும். puperal infection no proper discharge after delivery Decoction of bamboo leaves gives relief.

**சீழொழுக்கு**, புண்ணினின்றுசீழ் வடிதல், discharge of pus or oozing of pus from an ulcer or wound.

**சீழ்**, சீ, pus.

**சீழ்கசிதல்**, சீழ் வடிதல், oozing pus.

**சீழ்கட்டுதல்**, சீழ்கொள்ளல், supuratign.

**சீழ்கொண்ட**, சீழ் அடங்கிய, consisting of pus.

**சீழ்கொள்ளல்**, சீழ்கோத்தல், to form pus suppurate.

**சீழ் கொள்ளுகை**, சீழ்பற்றுகை, setting in of pus in ulcer, or abscess — suppuration great stinging pain local heat burnig sensation and fever are the symptoms of suppuration.

**சீழ்கொள்வீக்கம்**, சீழ் பற்றுதலினுலுண்டாகும் வீக்கம், suppurating swelling.

**சீழ்கோத்தல்**, See சீழ்க்கட்டுதல்.

**சீழ்க்கட்டி**, சீழ் கொள்ளும் கட்டி, well ripened abscess.

**சீழ்க்கட்டு**, பிள்ளை பிறந்தவுடன் கருப்பையில், பெண்களுக்குண்டாகும் சீழ்த்திரட்சி, lochia.

**சீழ்க்காது**, சீழ் வடியும் காது, a purulent discharge from the ear otorrhea.

**சீழ்க்கிராணி**, உந்தியின் கீழ்வயிறுப்பி, உளைந்து நாவறண்டு, மலமும் சீழாய்க் கழிந்து முகம், கைகாலில் வெளுப்புக் காணும் ஓர் வகைக் கழிச்சல்; a form of chronic diarrhoea attended with swelling below the naval, pain, dryness of the tongue, purging mixed with pus. It is marked by anemic appearance in the face and limbs — diarrhoea chylosa.

**சீழ்க்கொப்புளம்**, சீழ் கொண்ட சிறு தோல் யெழுச்சி, a small elevation of the cuticle filled with pus — pustule.

**சீழ்கொள்ளா வீக்கம்**, சீழில்லாமலே ஏற்படும் வீக்கம், non suppurating swelling.

**சீழ்த்துவாரம்**, சீழ் வெளிப்பட வேண்டி உண்டாகும் துளை, an opening for the discharge of pus — Fontanel; 2. சீழ் வெளி வரும் துவாரம், an opening through which pus oozes or discharged — Vent.

**சீழ்ப்பல்**, சீழ்கொண்டபல், tooth with pus at its root pyorrhoea.

**சீழ்ப்பறவு**, ஓர் கடல் மீன், a sea fish.

**சீழ்பற்றிய**, சீழ் கொண்ட, affected with pus.

**சீழ்பற்றுதல்**, See சீழ் கொள்ளல்.

**சீழ்பாய்ச்சல்**, See சீழ்க் கொள்ளல், 2. சீழ் வடிதல், exudation of pus.

**சீழ்ப்பால்**, சீம்பால், இது உடம்பிற்கு பலம் மந்திக்கும்,நீர்த்தாரையில் கல் விளையும், the milk of cow during the first three days after calving — Biestings.

**சீழ்ப்பிடித்தல்**, See சீழ்க்கொள்ளல்.

**சீழ்ப்பிரமியம்**, நீர் கடுத்து எரிச்சலுண்டாகி, சீழ் வடிந்து உடல் மெலியும், see சீழ்ப்பிர மேகம், a kind of disease marked by the presence of pus in the urine and followed irritation, burning sensation, emaliation etc. Pyurea.

**சீழ்பிரமேகம்**, கோசத்தின் நாளத்தில் அல்லது அல்குலில் கடுப்புடன் சீழ்ப்போல் வெள்ளை கண்டு அரையாப்பு, சுரம், மயக்கம் முதலிய குணங்களைக் காட்டும் ஓர் நோய், பச்சை யிளநீர் சாப்பிடல் நன்று, an inflammatory ailment of the male urethra or the female vagina attended with secvetion inter — mingled with pus, bubo, fever, giddiness etc — Gonorrhoea Tender cocoanut gives relief.

**சீழ்ப்பீனிசம்**, வெட்டையும் பித்தமும் அதி கரித்து, கபால முதல் நாசி வரை புண்ணாகி சீழ்வடிந்து தலைவலி யுண்டாகும் ஓர் நாசி நோய், a disease of the nose where in there is discharge of pus from the nose.

**சீழ்ப்புண்**, சீழ் கொண்ட புண், suppurating sore — running sore.

**சீழ்ப்போன்ற**, சீழைப் போன்ற, resembling pus.

**சீழ்மரம்**, ஓர் மாமரம், a species of mango tree.

**சீழ்மலடு**, கருத்பையில் சீழ் கலந்து சிக்கிக் கொண்டு, துடையின் சந்தில் குத்தலுண்டாகி, வயிறு பெருத்து, பசியற்றிருக்கும் ஓர் வகை மலடு, a kind of sterility in women marked by ulceration of the uterus attended with pus, boring pain in the, groms, enlargement of abdomen and loss of appetite.

**சீழ்மூத்திரக்கட்டி**, ஆண்குறிக்குள் ஏற்படும் சீழ்க்கட்டி, இதனால் மூத்திரத்தில் சீழ் கலந்து வெளி வரும், abscess formed in the passage of urine — urinous abscess.

**சீழ்மூத்திரம்**, மூத்திரத்துடன் சீழ் கலந்து வருதல். pus in the urine — pyurea.

**சீழ்மூலம்**, ஆசனத்தில் மூலமுளை உற்பத்தியாகி, சதாசீழ் வடிந்து கொண்டேயிருக்கும் ஓர் வகை மூலநோய்; இது உடம்பில் சூடு அதிகரித்து மூலத்தில் நொந்து புண்ணாகி சீழ் மலத்துடன் வெளிப்படும், அதனால் வாயு அதிகரித்து அபானங் கடுத்து மயக்கங் காணும், an inflamed piles with pus discharge — ulcerated piles.

**சீழ்வடிதல்**, சீழ்ஒழுகுதல். discharge of pus.

**சீழ்வாந்தி**, சீழும்,கோழையுமாக வாந்தி செய்தல், a profuse and sudden expectoration of pus and putrescent matter — Vomica.

**சீழ்வாளை**, See சொட்டைவாளை.

**சீழ்விரணம்**, சீழ் வடியும் புண், suppurating ulcer.

**சீறமரம்**, சாதிமுத்து, superior pearl; 2. கெட்டிமுத்து, solid pearl.

**சீறல்**, பெருங்காயம், asafoetida; 2. பாம்பின் சத்தம்; hiss of serpent through anger. 3. கோபத்தோடு இறைதல், raging with anger.

**சீறல்போக்கல்**, மருந்தின் வேகம் போக்கல், to root out or eradicate the virulence of medicine.

**சீரு**, பலாசு, Bastard kinotree — Butea Frondosa.

**சீருடக்காரம்**, சூடன், camphor.

**சீறியகொடிச்சி**, நாகசிங்கி, which see.

**சீறியழுதல்**, அலறியழுதல், screaming.

**சீறுதல்**, See சீறல்.

சீறுள், ஈயம், lead or tin; 2. செம்பு, copper.

சீறெலி, சுண்டெலி, mouse.

சீறென்றழல், See சீறியழுதல்.

**சீற்காரம்**, புணர்ச்சிக் காலத்தில் மயில் முதலியவற்றின் ஓசையைப் போல் உண்டாகும் ஓர் வகைத் தொனி, a sound that is produced during coitus.

**சீற்றசத்தி**, சிவனின் 4 வகை சக்திகளில் ஒன்று காளி, — One of the four powers of —Siva.

**சீனஅவுரி**, சீன தேசத்து நீலிச்செடி, China indigo. Isatis Indigotica.

**சீனஇலந்தை**, Indian plum zizphous—Jujuba

**சீன எரிவண்டு**, சீனதேசத்திலுள்ள எரிச்சலையுண்டாக்கும் வண்டு. Chinese fly causing blister and burning sensations on the body like cantharides.

**சீனக்கட்டி**, இரும்புக்கிட்டம், scum of iron; 2. வார்ப்பு இரும்பு, cast iron.

**சீனக்கடுக்காய்**, சீன தேசத்திய மஞ்சட் சாயலான முதிர்ந்த கடுக்காய், gall nut yellow in colour and fully matured impoorted from China — China myrobalan. 2 சிவந்த சீனக் கடுக்காய், red China gall nut.

**சீனக்கண்டல்**, கரைக்கண்டல், China mangrove — Lumnitzera Racemosa.

**சீனக்கரும்பு**, இருங்கு சோளம், Sweet millet Sorghum saccharatum.

**சீனக்கருவாப்பட்டை**, சீனத்திலிருந்து இறக்குமதியாகும் கருவாப்பட்டை, Cinnamon bark imported from China.

**சீனக்களிமண்**, மருந்து பாத்திரங்கள் செய்யும் சீன தேசத்திய ஓர் வித களிமண், China clay from which medicine containers are manufactured.

**சீனக்களிம்பு**, சீனத்தில் தயாரிக்கும் களிம்பு, an ointment prepared by the Chinese.

**சீனக்கற்பூரம்**, சீன தேசத்திய கற்பூரம், Camphor imported from China. 2. கிண்ணி கற்பூரம், refined camphor cast in a mould of cup camphor.

**சீனக்காக்கை**, சீன தேசத்துக் காக்கை, China crow.

**சீனக்காந்தள்**, ஓர் வகைப் பூ, China mangrove Pyrranthus Albus.

**சீனக்காய்க்கொடி**, பறங்கிக் கொடி, great pumpkin creeper.

**சீனக்காரம்**, சீனதேசத்திய படிகாரம், இதனால் பல்லரணை இலிபதம் கண்ணோய், துன்மாங்கிஷம், வாதப்பிணி, உட்சூடு, குன்மம் போம். alum imorted from China as distinguished from indegenous one.

**சீனக்கிச்சிலி**, நாட்டுக் கிச்சிலி, China orange tree—Citrus aurantum.

**சீனக்கிழங்கு**, see இரேவில் சின்னிபேதிக் கிழங்கு; 2. பரங்கிப்பட்டை. இது ஓர் கடைச்சரக்கு, china root. Smilax China; 3. வள்ளிக்கிழங்கு. China yam.

**சீனக்கிளி**, பெரிய வெள்ளைக்கிளி, இதன் கொண்டை அசையும்—a white parrot of china having a movable crest — Cockatoo.

**சீனக்கொழுஞ்சி**, கஸ்தூரி எலுமிச்சை, musk lime. Triphasia Trifoliata.

**சீனக்கொழுப்பு**, நீர்த்திப்பிலி மரத்தினின்று வடிக்கும் தடித்த எண்ணெய், vegetable tallow prepared from the kernol of the fruit —China tallow.

**சீனசம்**, உருக்கு, steel.

**சீனசுத்தி**, அதாவது படிகார சுத்தி. பசும் பாலில் மூன்று சாமம் ஊறியபின் எடுத்துக் கொள்ள சுத்தியாம், Purification of Alum. The process is to boil it in cow's milk for a hours.

**சீனசப்பாத்துச்செடி**, செம்பரத்தை, China sho; flower plant Hibiscus Rosa—sineses

**சீனச்சரக்கு**, சீன தேசத்திலிருந்து இறக்குமதியாகும் மருந்துச் சரக்கு, drugs imported from China.

**சீனச்சாமந்தி**, see சீனப்பூ; 2. மாசிப்பத்திரி, Indian absinth—Artemesia indica.

**சீனச்சாரம்**, சீன தேசத்தில் தயாரிக்கும் சாரம், Salammoniac prepared by Chinese.

**சீனச்சுக்கான்**, சீன தேசத்திய சுக்கான் கல். lime stone of China porcelain. see சீனபதிச் சுக்கான்.

**சீனச்சுண்ணம்**, சீன தேசத்திய சுண்ணும்பு, இதனால் கபம் போம், China chalk. It removes phlegm from the system.

**சீனச்சூடன்,** சீனக் கற்பூரம், China camphor —cup camphor; 2. பூ நீறு, சூடன். வீரம். கம்பி முதலிய சரக்குகளைக்கொண்டு மச்சமுனி சொல்லியபடி செய்யும் சுண்ணமருந்து. இது கபத்தை அறுக்கும், a medicine prepared according to Machamuni with the following drugs, fuller's earth. camphor, salt peter, corosive sublimate. It removes phlegm.

**சீனச்சோம்பு,** அனுசிப்பூ, China anise—Illicum—Anisatum.

**சீனட்டங்குருவி,** ஆந்தையைப் போன்ற ஓர் பட்சி. fern owl—Caprimulgus Indicus. 2. காட்டு சீனட்டம், Jungle night. Jar goat sucker. Caprimulgus—Asiatita.

**சீனட்டம்,** see சீனட்டங்குருவி.

**சீனத்தா,** இதிரக்கிழங்கு, which see.

**சீனத்தாளி,** நொளைதாளி, China laurel Antidesma bunias.

**சீனத்தானியம்,** தினை, China corn.

**சீனத்துக்காய்,** see அம்பளங்காய்.

**சீனத் தேயிலே,** சீனத்தில் விளையும் தேயிலே. China tea.

**சீனநொதி,** சர்க்கரைப்புளிப்பு, sacchrine fermentation.

**சீனபதிக் கற்பூரம்,** see சீனக்கற்பூரம்.

**சீனபதிச் சுக்கான்,** பீங்கான். கண்ணாடி முதலிய சாமான்கள் செய்வதற்கு சீன தேசத்தில் உபயோகிக்கும் களிமண், China clay used for manufacturing pottery ware and other untensils glass etc. porcelain.

**சீனபதி ரேக்கு,** சீன தேசத்திய செம்புத்தகடு, thin copper foils or tinsels imported from China.

**சீனபிட்டம்,** செவ்வியம், China pepper root of piper Nigrum See சீனமிளகு.

**சீனப்படிகை,** see சீனக்காரம்.

**சீனப்பட்டை,** பரங்கிச் சக்கை, China root—Similax of China; 2. கொழும்பு வேர் Columbo root — Jatcorrhiza columba. c.f. சோப்சீனி.

**சீனப்பரம்,** பரங்கிக் கிழங்கு, large china root Smilax glabra.

**சீனப்பருத்தி,** see செம்பரத்தை, shoe flower plant.

**சீனப்பலா,** see சீனப்பட்டை.

**சீனப்பவளம்.** சிவப்பு பிச்சி, a variety of red tinged Jasmine.

**சீனப்பனிச்சை,** சீனதேசத்திய பேரீச்சமரம், Chinese date palm. Diospyros Kaki Fruit is about the size of an apple with twin almond like stones in the centre.

**சீனப்பா,** பறங்கிக் கிழங்கு, பறங்கிப்பட்டை, smilax China.

**சீனப்பாகு,** சீன தேசத்தில் தயாரிக்கும் ஓர் தித்திப்புப் பாகு, China syrup.

**சீனப்பாலி,** சகாமோனிதம், an unknown plant.

**சீனப்பாலே,** சீனச்சாராயம், arrack manufactured in China.

**சீனப்பிசின் மரம்,** சாம்பிராணி மரம், China olive — Canarium Commune.

**சீனப்புகை,** மேகப்புண்களுக்காக அகஸ்தியர் வைத்தியகாவியத்திற் சொல்லியுள்ள ஓர் வகைப்புகை, fumigation for venereal sores as in Agastiyar's Kavium.

**சீனப்புல்,** மலையாளத்தில் விளையும் ஓர் விஷப் புல், இதன் ஓரினம் உடம்பில்பட, சுரம் உண்டாகும். China grass — Urtica Nivea It is common in the west coast, Malabar. A species of this grass Urtica Crenulata — when touched brings on fever.

**சீனப்பூ,** ஓர் பூஞ்செடி. இதுவே பரங்கிப்பூ அல்லது சினச்சாமந்தி, a flowering plant known as China mindie or China privet-Lagerstroemia Indica. The flowers are useful in Medicine.

**சீனமல்லிகை,** ஓர் வகை சீனப்பூ, இதுவே சீமை வெண் பிச்சி, Shangai Jasmine — China Jasmine — Trachelos permum Jasmine oides.

**சீனமிளகு,** கப்பல்மிளகு, இதுவே கபாப்சீனி இது சீன தேசத்திய மரத்தின் வித்து, இச்செடியின் காய் இலவங்கம், இலவங்கப்பட்டை, சாதிக்காய் ஆக இம் மூன்று சரக்கு வாசனையுங் கலந்தது போன்ற வாசனையுள்ளது இக்காயையும் இலைகளையும்சமையலுக்குபயோகிப்பார்கள். China a pepper — Pinenta Acris — seed from the berry the tree are used Berries have an aromatic odour resembling a mixture of cinnamum, cloves, and nutmeg. Bark is astringent and aromatic. leaves and berries are used in cooking.

NOTE :— It is a kind of cubeb pepper introduced by the Chinese in commerce and trade with India in olden days. There is also a tree of the same genus in Tropical America known as ultspice ( Pimenta Officinalis. ) It is employed as an aromatic stimulant and carminative.

**சீனமுத்து**, சீனதேசத்திய செயற்கை முத்து an artifical pearl made in China.

**சீனமூங்கில்**, கட்டை மூங்கில், China dwarf bamboo — Bambusa Nana.

**சீனமௌலி**, வெண் சந்தனம், white sandal wood — Santanum Album.

**சீனம்**, மான், deer; 2. படிகாரம், alum; 3. மனோசிலை, red arsenic; 4. சீனதேசம், China; 5, கடுகு, mustard; 6. சிந்து லவணம், Sindh salt; 7. மலைப்பாம்பு, mountain snake.

**சீனயா**, பறங்கிக் கிழங்கு, see சீனப்பா.

**சீனயிரம்**, வால் மிளகு, tail pepper.

**சீனலவணர்**, பூநீர், கல்லுப்பு, நீருப்பு வெடியுப்பு, இவைகளைச் சம எடையாகக் கலந்து காடியில் எரித்திட்டு எடுத்த ஓர் வகை உப்பு, It is salt prepared in China. It is prepared as follows. Equal quantities of fullers earth, rock salt, common salt and mitre are dissolved in sufficient quantity of vinegar and heated till it becomes dry.

**சீனவங்கம்**, சீன ஈயம், China lead; 2. சீன தேசத்து வீரம்.

**சீனவள்ளிக் கிழங்கு**, China potato.

**சீனவன்னி**, See சீனெ.

**சீனவிச்சி**, சீனத்து இச்சிமரம், Chinese banyan — Ficus genus.

**சீனவீரம்**, வால்மிளகு, tail pepper; 2. சீன தேசத்து வீரம், corrosive sublimate prepared and imported from China.

**சீனவெரிவண்டு**, சீன தேசத்திய எரிவண்டு a blister fly of China.

**சீனவேர்**, பறங்கிச்சக்கை, common China root Smilax China; 2. சோப சீனி, Indian China root smilax Lanceaefolia.

**சீனன்**, மூர்க்கன், rude fellow: 2. மடையன் fool, 3. விருத்தன், old man.

**சீனுக்கற்கண்டு**, சுத்தி செய்த வெண்மையான கற்கண்டு, white sugar candy,

**சீனுக்கற்பூரம்**, See சீனக்கற்பூரம்.

**சீனுக்காரம்**, படிகாரம், alum.

**சீனுப்பிரேதம்**, மிகமெலிந்தவன், an emaciated person.

**சீனுப்பூரம்**, சீனத்துக்கற்பூரம், China camphor.

**சீனி**, வெள்ளைச் சர்க்கரை, white sugar 2. see சீனக்காரம்: 3. பித்தளைமணல், brassore; 4. ஓர் மரம் false hemp: 5. புத்தன்சீனி, Batavian orange citrus Auraticum.

**சீனிகம்**, சர்க்கரைப்பாகு, Syrup.

**சீனிக்கண்ணாடி**, தூரதிருஷ்டிக் கண்ணாடி, telescope.

**சீனிக்கற்கண்டு**, சீனக்கற்கண்டு, crystal sugar.

**சீனிக்காரம்**, படிகாரம், alum.

**சீனிக்கிழங்கு**, சர்க்கரை வள்ளிக் கிழங்கு, sweet potato இதுவே வத்தாளைக்கிழங்கு.

**சீனிக் கொத்தவரை**, சிறு கொத்தவரை, a small variety of cluster bean — China lablab.

**சீனிசக் காளான்**, பெருங் காளான், large variety of mushroom.

**சீனிச்சருக்கரை**, வெள்ளைச் சருக்கரை, இதனால் வாதசுரம், கிருமிரோகம் நீங்காதவிக்கல் இவைகள் போம். white sugar. It is useful in rheumatic fever, worm diseases and hic cough.

**சீனிச்சிறுமி**, பறங்கிப்பட்டை, see சீனப் பட்டை.

**சீனித்துளசி**. holy basil of China.

**சீனிப்படிகை**, See சீனப்படிகை.

**சீனிப்பண்டம்**, வெள்ளை சருக்கரையைக் கொண்டு தயாரித்த இனிப்புப் பண்டம், sweet meals prepared with white sugar— Confection.

**சீனிப்பலா**, ஓர் பலாமரம், bread fruit tree— Artocarpus Incisa.

**சீனிப்பாகு**, சர்க்கரைப்பாகு, molassus; 2. மருந்தைக் கூட்டித் தயாரிக்கும் தித்திப்புப் பாகு, China Syrup.

**சீனிமருந்து**, பறங்கிப்பட்டை, see சீனப் பட்டை.

**சீனிமிளகாய்**, கானல் மிளகாய், forest chilly; 2. தித்திப்புக் கலந்த மிளகாய், seasoned sweet Chilly.

**சீனிமிளகு**, see சீனமிளகு.

**சீனியவரை**, சீனதேசத்து அவரை, China lablab—cluster beans. Dolichos fabae formis; 2. கொத்தவரை, cluster bean Cyamopsis Psoralioitles.

**சீனெ**, வன்னிமரம், sumatree — Prosopis spicigera.

**சு,** நன்மை; சுகம் இவைகளைக் காட்டும் ஓர் உப சர்க்கம், a prefix devoting good or health.

**சுககீனம்,** சௌக்கிய வீனம், ill health.

**சுகக்கினி,** நாக்கு, tongue.

**சுகக்கேடு,** சௌக்கியக் குறைவு, ill health.

**சுகசதம்,** மஞ்சபத்திரி, an unknown drug capable of reducing gold into powder.

**சுகசத்தி,** விட்சேப சத்தி: சுருங்கி விரியக் கூடிய சக்தி, Power of contraction and expansion.

**சுககரம்,** சுகத்தைக் கொடுப்பது, that which is condusive to health.

**சுகங்காட்டல்,** சௌக்கிய குறியை உணர்த்துதல், symptonss showing recovers indication of convalescence.

**சுகசங்கடம்,** சுக்கில மூத்திரம், passing urine mixed with semen.

**சுகசந்தரிசனம்,** சுகானுசாரம், adoption of sanitary measures to promote or secure health.

**சுகசந்தரிசன நூல்,** சுகானுசார விதிகளைப் போதிக்கும் நூல். Sanitary science.

**சுகசபதம்,** இளம்பருவமுள்ள நோயற்றபெண். a healthy young girl.

**சுகசரீரம்,** நோயற்ற வுடம்பு. a healthy constitution in which the three humonrs are in equalibrium; 2. மிருதுவானவுடம்பு, a delicate constitution.

**சுகசரீரி,** சவுக்கிய நிலைமையோடு கூடிய உடம்பையுடையவன், a healthy person.

**சுகசன்னி,** பொருந்தாப் புணர்ச்சியாலுண்டாகும் பெண் தோஷம். அதாவது மாதவிடாய் காலத்தில் சம்போகம் செய்வதனுல் உண்டாகும் திரிதோடசுரம், a morbid delivious fever due to sexual intercourse during the first three days of menstrual period. 2. ஓர் சன்னி வலிப்பு, a fit of apoplexy from unseasouble intercourse.

**சுகசன்னிபாதம்,** தைலம் தேய்த்து மூழுகியும் தயிரன்னம் புசித்து வயிறு மந்தமாயிருக்கும் போதும் உடம்பு அலுத்திருக்கும்போதும் பெண்களை மாதவிடாய் காலத்தில் புணர்தலாலும் கடும் புணர்ச்சியினுலும், நரம்புக்கு அசதிகண்டு, உடம்பில் வலி, கண் சிவப்பு, வியர்வை நடுக்கம், பிரமை காணுதலுடன் உடம்பு குளிர்ந்து கண் சுழன்றும் இவை முதலிய குணங்களைக் காட்டுமோர் வகை சன்னிபாதம்.

இச்சன்னிக்குக் கட்டிய வெள்ளைப்பாஷாணத்தில் அரிசியடை தேனில் உரைத்துக் குழப்பிச் சாப்பிட தீரும், a kind of delirium marked by pain in the body, blood shot eyes. Perspiration, trembling, hallucination and other mental disturbances. It is due to indiscreet sexual intercourse after bodily exhaustion after taking oil bath, eating cold rice or curd rice especially with a woman who is in her periods.

**சுகசாத்தியம்,** எளிதில் தீரக்கூடியது, easily Curable.

**சுகசாரிதம்,** அகில், agil wood.

**சுகசிங்கினி,** see *சிங்கினி.*

**சுகசிதம்,** பூனைக்காலி, common cowitch plant Mucuan pruriens.

**சுகசிதா,** பெத்தணத்தி,

**சுகசிம்பர்,** See *சுகசிம்பி.*

**சுகசிம்பி,** பூனைக்காலி, see *சுகசிதம்.*

**சுகசீவாதி** ஈரற்கல், a red stone of liver colour Adamantine spar.

**சுகசீவாதிச் சுண்ணம்,** ஈரற் சுண்ணம், a calcined powder prepared out of corundum with a metalic banisy lime.

**சுகசீவி,** நோயணுகாமற்படி சீவித்திருப்போன் one living without ailment now it is applied *to one who lives happily without earning.*

**சுகட்டான்,** நாணற்புல், bubrush. reed; 2. முடக்கொற்றன், baloon vine smooth leaved heart pea — Cordiospermum Halicacabum.

**சுகட்டிகம்,** பெருங்குமிழ், cashmere tree — lymelina arborea.

**சுகட்டிகா,** நாணற்புல், buffulo reed — Saccharum Spontaneum.

**சுகட்டிரா,** பேய்ப்புல், a kind of poisonous grass full of little clots.

**சுகன்னடகெந்தி,** கோழித்தலைக் கெந்தகம், red sulphur of brick dust colour used formerly by Tamil Alchemists

**சுகண்டி,** ஓர் இரத்தினம், a gem.

**சுகதபேதம்,** முதல் சினைக்குள்ள மூவகைப் பேதங்களுள் ளொன்று, அஃது மரத்து இலை, காய், முதலிய வித்தியாசம், (in Botany) one of the three changes as between the original and its productions ie, the stock, its branched leaves fruits etc.

**சுகதாரு,** கடம்பு, cadamba tree — Eugenia Racemosa.

**சுகதிர்,** பொன்னாங்காணி, sessile plant — Illuecbrum sessile.

**சுகதிகா,** பேய் மருட்டி, devil frightner Anisomeles malabarica.

**சுகதுக்கம்,** குப்பைமேனி, acalypha indica. 2. வாழ்நாளிலேற்படும் இன்பமும் துன்பமும், sorrows and pleasures of life — up and drons in existence.

**சுகதுக்கி,** பிறப்பில் அழுந்திருக்கும் ஆன்மா, the soul subjected to births and deaths.

**சுகத்திரகம்,** வாகை மரம், common sirissa — Albizzia Labbak.

**சுகத்திரம்,** See சுகத்திரகம்,

**சுகத்திரா,** இந்துப்பு, rock salt.

**சுகத்துருமம்,** வாகை, see சுகத்திரகம்.

**சுகத்துவம்,** உடம்பிலுள்ள நோயைத் தன்னிலே நீங்கச் செய்யும் இயல்பு, nature cure affected throught health guarding force — viz Medicatrix Nature.

**சுகதுக்க மிரண்டறியுமிலை,** குப்பைமேனி, Indian acalypha.

**சுகநாசனி,** கிளிமூக்கு, an unknown plant 2. அகத்தி, which see.

**சுகநாசா,** கிளிமுருக்கு. இது இரசத்தைக் கட்டும், an unknown plant. It is said to consolidate mercury.

**சுகநாசா பாலா,** See சுகநாசா

**சுகநாதத்தைலம்,** அகத்திக் கீரைச்சாறும் நல்லெண்ணெயும் கலந்து காய்ச்சிய தைலம்; தேகச்சூடு, கொதிப்பு வெட்டைச் சூடு போம், an oil prepared with the juice of Agati grandiflora — It cools the system. It is a bathing oil.

**சுகநாதம்,** யோக திண்டு, a pillow used in yoga practice.

**சுகநீர்,** இந்திரியம், semen.

**சுகநீர் ஒழுக்கு,** See சுகநீர்ப்பெருக்கு, சையோகமில்லாமலே அதிகமாக சுக்கிலம் ஒழுகுதல், discharge of semen without copulation.

**சுகநீர்த்தம்பனம்,** இந்திரிய கலிதமாகாதபடி தம்பித்தல், suppression of the discharge of semen — spermatochesis.

**சுகநீர்ப்பெருக்கு,** இந்திரிய கலிதம் discharge of semen: 2. இந்திரிய வொழுக்கு, in voluntry discharge or nocturual emission of semen.

**சுகந்தகம்,** ஈரவெண்காயம். Onion: 2, கந்தகத்தாள்; 3. தேன்தோடம்பழம், a very sweet orange. an orange which tastes sweet like honey.

**சுகந்தக்கலவை,** பரிமளத்திரியம் குழம்பு, mixure of perfumes,

**சுகந்தசூட்சம்,** மருக்கொழுந்து— Aristalochia labiosa.

**சுகந்தஞ்சம்,** கழுதைமான்புள்ளி, an unknown drug said to possess the virtue of consolidating arsenic compounds.

**சுகந்தத்திரவியம்,** வாசனைப் பண்டங்கள், aromatic drugs.

**சுகந்தத்தூபம்,** நறும்புகை, fragrant smoke or incense,

**சுகந்த பற்பம்,** வாசனைத்தூள் அல்லது பொடி, aromatic Powder scented dust.

**சுகந்த பரிமளம்,** மிக்க வாசனை, too much fragrance sweet scent.

**சுகந்தப்பட்டை,** வாசனைப்பட்டை, aromatic or fragrant bark.

**சுகந்தபாலா,** see பாலா.

**சுகந்தப்பாலை,** நன்னாரி, Indian sarasaparilla.

**சுகந்த புட்பகம்**, சுரபுன்னை, Ochrocarpus longifolius.

**சுகந்தமரம்**, கற்பூர மரம், camphor tree.

**சுகந்தமா**, கஸ்தூரி மிருகம், musk deer; 2. கற்பூரம், camphor.

**சுகந்தமாட்சி**, கெந்த மாஞ்சில், (போகர் நிகண்டு) an unknown drug referred in Bogar's vocabulary. See note under சடா சுமிருதம்,

**சுகந்த மூலதிரசம்**, அரத்தை, galangal — Alpinia galanga.

**சுகந்தமூலி**, வெட்டிவேர், cucus root — Andropogon Aromaticus.

**சுகந்தம்**, அரத்தை, see சுகந்த மூலாதிரசம்; 2. ஈரவெங்காயம், onion; 3. கந்தகம், sulphur; 4. கிழங்கு, bulbous root; 5. பரிமளம் aroma: 6. சீரகம், cumin seed; 7. நீலோற்பலம், blue Indian water lily Nymphaca Stellata, 8. வாசனைப் பொருள் aromatics: 9. இனிய கந்தம், perfume; 10. சிவப்புவாசனைச் சம்பாநெல், red variety of fragrant paddy Muse sapientum (chamba) 11. வாழை, a species of fragrant plantain 12. நறுமணம், fragrance; 13. கொடிச்சம்பங்கி, primrose creeper — Pergularia odoratissima.

**சுகந்தரசம்**, அகஸ்தியர் வைத்திய காவியம், 1500ல் சொல்லியுள்ள ஓர் குளிகை, இது குன்மத்திற்காகதயாரிக்கப்பட்டது. a medicine mentioned in Agastian Kaviyam 1500. It is given for dyspepsa; 2. நறும்பிசின், a fragrant resin.

**சுகந்தசுரசரசம்**, கஞ்சாங் கோரை, Ocimum Album.

**சுகந்தரம்**, ஈரவெங்காயம், Onion.

**சுகந்த வர்க்கம்**, வாசனைத் திரவியங்கள், a group of aromatic drugs used in Medicine or other substances mixed in perfumes; 2. செவ்வந்திக்கல், a semi precious stone amethyst.

**சுகந்த வாழை**, பூவாழை, a variety of plantain.

**சுகந்தவில்லை**, பரிமளபில்லை, tablet prepared with sandal and other fragrant substances,

**சுகந்தன்**, கஸ்தூரி, musk.

**சுகந்தாதோ**, சற்பாட்சி, which see.

**சுகந்தாசம்**, See கறுப்புக்கடலை.

**சுகந்தாபலம்**, கோதுமை, wheat.

**சுகந்தி**, செவ்வந்திக்கல், see சுகந்த வர்க்கம்; 2. See இருவாட்சி.

**சுகந்திகம்**, வெண்டாமரை, white lotus; 2. கந்த தூபம், fragrant incense.

**சுகந்திக்கல்**, ஓர் இரத்தினக்கல், இதுவே செவ்வந்திக்கல், a semi precious stone Amethyst.

**சுகந்திதம்**, வாழை, plantain.

**சுகந்திதா**, பேய் மொச்சை, devil mochai— Dalichos genus.

**சுகந்தி பலயுதகம்**, குந்துருக்கம், white dammer — Vateria indica.

**சுகந்திப்பாலை**, நட்பாலை வேர், the root of fragrant paulay (milky plant) 2. நன்னாரி வேர், Indian sarasaparilla.

**சுகந்திரணி**, மல்லிகை, Jasmine.

**சுகந்திரம்**, பெருங்காய மரம், a tree yielding asafoetida — Ferula assafoetida.

**சுகந்திருநாகம்**, பாலை, milky paulay, Mimusops hexandra; 2. நன்னாரி, Indian sarsaparilla.

**சுகந்தினி**, சண்பகம், champak flower — Michelia champaca; 2. நாறு கரந்தை, a kind of basil with fetid smell — Spoermithius genus.

**சுகந்தீசபரணம்**, See ஏலா வாலுகம்,

**சுகந்தீதம்**, வெட்டிவேர், see சுகந்தமூலி.

**சுகந்தோத்தம்**, மகிழம்பூ, apa face flower — Mimusops elengi.

**சுகபலம்**, எருக்கஞ்செடி, madar plant — Calotropis gigantea.

**சுகபலா**, **சுகபலை** } See சுக பலம்.

**சுகபவேதிசம்**, பனிப்பபிறு, dew gram Phaselous Radiatus,

**சுகபிச்சகம்**, மாமரம், Mango tree.

**சுகபுச்சம்**, சுகந்தநீறு, an arcmatic powder; 2. வாசனையுள்ள விபூதி, fragrant holy ash; 3. கந்தகம், sulphur.

**சுகபுட்பம்**, வாகை, sirissa tree Mimosa Flexuosa; 2. மாஞ்சபத்திரி, — unidentified plant.

**சுகபேதி**, கஷ்டமில்லாமல் ஆகும் பேதி, gentle mild purgative. Aperient; 2. மலம் இளகி laxative; 3 சொற்பபேதி. simple purgative.

**சுகபேதிக் குளிகை**, சுத்தி செய்த வாளத்துடன் ரோஜாப்பூ, உலர்ந்த நெல்லிக்காய் சம எடை சேர்த்துப் பழச்சாறு விட்டு 3 நாள் அரைத்து கடலையளவில் செய்த மாத்திரை, இதை சீரககஷாயத்தில் கொள்ள வருத்தமின்றிப் பேதியாகும், a purgative pill containing purified croton seed petals and emblic myroblan when given with cumin decoction acts as a good purgative.

**சுகபேதி மாத்திரை**, கோதுமை ரவா 1¼ பலம் சுத்தி செய்த வாளம், பூரம், சுக்குத்தூள் வகைக்கு ½ பலம் இவைகளைப் பன்னீர் விட்டரைத்து பயிறு போல் மாத்திரை திரட்டவும், குழந்தைக்கு முலைப்பாலிலும் பெரியவர்களுக்கு சோம்பு, திராட்சை, சுக்கு கஷாயத்திலும் கொடுக்க, கஷ்டமில்லாமல் பேதியாகும். A purgative pill containing purified croton seeds Subchloride of mercury dry ginger, wheat rava and prepared as instructed. This can be given to children with breast milk to adults with the decoction dry grapes and dry ginger.

**சுகபேதி யெண்ணெய்**, 1. சிற்றாமணக்கெண்ணெய் படி ½ பசுவின்பால் படி 2 அதிமதுரம், கடுக்காய், இந்துப்பு, கடுகுரோகணி சுத்தி செய்த வாளம் வகைக்குப் பலம் ½ இவைகளை இடித்துக் கலக்கி, பிறகு காய்ச்சி வடித்துக் கொள்ளும் எண்ணெய், இதைப் பெரியவர்களுக்கு ½ பலம் கொடுத்து 1 நாழி சென்று வெந்நீர் கொடுக்கவும். மோர்க்கஞ்சி கொடுக்கப் பேதியை நிறுத்தும் மாலையில் சுக்கு கஷாயம் இராத்திரி ரசம் சாதம் பருப்புத் துவையல், An oil purgative prepared with castor oil (of small castor seeds) cow's milk some bazzar drugs and purified croton seeds as per rules of making oil. 2. முருங்கப்பட்டை மூக்கரைச் சாரணை வேர், ஈருள்ளி, இவைகளைச் சமமாய்க் கொண்டு தட்டிச் சாறு பிழிந்து, அதற்குச்சரியாக சிற்றாமணக்கெண்ணெய் விட்டு எரித்து மலபந்தம். கரப்பான், சிரங்கு இவைகளுக்குக் கொடுப்பது, a mild oil purgative prepared as told above, and used for skin diseases mainly.

**சுகபோகம்**, இன்ப நுகர்ச்சி, sexual enjoyment.

**சுகபோகி**, சிற்றின்பத்தை நாடப்பட்டவன், a man devoted to sexual enjoyment An epicure.

**சுகபோசனம்**, நல்ல சாப்பாடு, rich meals 2. ஆரோக்கியத்தை யுண்டாக்கும் உணவு whole some food — மாறுபாடில்லா உண்டி, not incomatable food.

**சுகபோசனி**, நல்ல உருசியுள்ள உணவை நாடுபவன், one who indulges in the luxuries of of the table; 2. ஆரோக்கியத்தை உண்டாக்கும் உணவைக் கொள்பவன், one who takes whole some balanced and incompatable food

**சுகப்படல்**, நோயினின்று நீங்கல், to be cured of the disease; 2. குணப்படல், to recover from disease; 3 போகம் அனுபவித்தல், to enjoy life; 4. சௌக்கியப்படல், to be restored to health.

**சுகப்படுதல்**, See சுகப்படல்.

**சுகப்பிரசவம்**, கஷ்டமில்லாமலே பிள்ளை பெறல், easy and safe delivery of child without any complications; 2, இயற்கைப் பிரசவம், natural delivery of child without any surgical aid.

**சுடுகாடு,** பிணஞ் சுடுகாடு, burning ghat place where the dead are burnt; 2. சவக் காடு அல்லது இடுகாடு, burial ground — place where the dead are burried.

**சுடுகாடுமீட்டான்,** முடக்கொத்தான், pulsy curer — Cardiospermum halicacabum; 2. பெருந்தேட் கொடுக்கி, a large variety of scorpion plant Heliotropium indicum 3. பாவட்டை, Indian pellet shrub. Pavella indica.

**சுடுகாடுமீட்டான்குழம்பு,** பாம்பு விஷந்தீண் டியவர்கட்கு பதினைந்து விதச்சரக்குகளைக் கொண்டு தயாரித்து, குன்றியளவு வெற் றிலையில் வைத்துக் கொடுக்குமோர் மருந் துக் குழம்பு அன்றியும் தவளையைப் பிளந்து கடிவாயில் வைத்துக் கட்டவும் வேண்டும், an antidote for snake bite prepared with the aid of 15 drugs mentioned below — and administered in betel leaf — A frog split into two must be placed on the bitten spot and bandaged. The fifteen drugs are இரசம், mercury, கந்தகம், sulphur, லிங்கம், cinnabar தாரம் rellow orpiment, மனோசிலை, red orpiment, துருசு, blue bitriol, காரம் borax, இந்துப்பு, rock salt, காயம் asafoetita, திரிகடுகு dry ginger, pepper & peper longus. மகிழம்விதை seeds of Minusops elengi, நாபி aconite, and பூவந்திப் பழச்சதை fleshy portion of the fruit of soap nut tree. மேற் சொன்னவைகளைச் சமன் கொண்டு பொடித்து, பூவந்திப்பழச் சதையுங்கூட்டி அரைத்து விஷந் தீண்டிய வர்களுக்குக் குன்றி எடையளவு, பச்சைப் பயிறு கஞ்சிகொடுக்கவும் .The fifteen drugs mentioned above are ground together and about two grains is given to the patient. He is kept on green gram porridge diet.

**சுடுகாடுறையன்,** முடக்கொத்தான், Palsy carer, cadiospermum halicacabum.

**சுடுகாட்டுச்சித்தர்,** சாலவித்தை காட்டல் குறி சொல்லல் முதலிய தொழிலுக்காக மனிதர் தலை மண்டையோடு நாய், பூனை, புலி முதலிய மிருகங்களின் எலும்புகள், மாந்திரீகமை முதலிவைகளைக் கொண்டு செல்லும் ஓர் வகைச்சாதியார், இவர்கள் அனேகமாகச் சுடுகாட்டிலேயே தத்தம் காரி யங்களை இயற்றிக் கொள்வதாலிவர்கட்கிப் பெயர் வந்தது போலும், a tribe of jugglers and fortune tellers who carry about human bones and those of beasts such as dog, cat, tiger fox etc to work charms, and incantations with. They are so called from practising their arts in the burial gronuds — grave yard.

**சுடுகாட்டுப்புகை,** பிணம் சுடும்புகை. smoke from the burning dead body. Inhaling of this smoke reduces the life time.

**சுடுகாட்டுப்பூ,** மயானத்தில் வளருஞ்செடி யின்பூ, flowers of the plants that grow in the burial ground — Periwinkle.

**சுடுகாட்டுப்பேய்,** சுடுகாட்டில் திரியும் பேய். spirits of dead persons hovering about the grave yard — Goblin.

**சுடுகாட்டுமணிபொறுக்கி,** கொண்டையுள்ள ஓர் வகைப் பறவை, a kind of crest bird known as Indian hoopoe — upupa nigri pennis. It is so called from picking up grains; 2. காட்டுப்புரு, wild dove.

**சுடுகூத்தன்,** கருப்பட்டி வாகை, see கப் பொட்டி.

**சுடுகை,** சூடுகாட்டல், process of heating — calcification.

**சுடுகைக்கஞ்சி,** hot gruel.

**சுடுகோல்,** சூட்டுக்கோல், a red hot iron for burning or scaring as of morbid flesh; any instrument or substance used for branding.

**சுடுக்குதல்,** நெட்டிவாங்குதல், Crakling the finger joints — decripitations.

**சுடுசாதம்,** சூடுள்ள சோறு. அப்போதுவடித்த சூடான அன்னம், hot cooked rice.

**சுடுசாப்பாடு,** சூடான வுணவு, food served while hot.

**சுடுசாம்பல்,** சூடான அடுப்புச் சாம்பல், இது ஒத்தடம் கொடுக்கவுதவும். hot ashes direct from oven used in fomantation.

**சுடுசுண்ணம்,** தாளித்த சுண்ணும்பு, slaked lime; 2. புடமிட்ட மருந்துச்சுண்ணம், a calcined calcium compound.

**சுடுசுளாத்தி**, see சுடுதுரத்தி.

**சுடுசெங்கற்குகை**, சுட்ட செங்கல்லை அரைத்துப்பண்ணிய குகை, crucible made of powdered burnt brick.

**சுடுசோறு**, அப்போது சமைத்த அன்னம், fresh hot cooked rice.

**சுடுதண்ணீர்**, வெந்நீர், Hot water.

**சுடுதண்ணீர்க் கொப்புளம்**, வெந்நீர்பட்ட கொப்புளம், Scald caused by boiling water.

**சுடுதல்**, புண்புரைகளை சூட்டுக்கோலால் தீய்த்தல், burning or scaring as of morbid flesh or growth in cases of ulcers or sores with a red hot iron or electric current — Cauterization; 2. மருந்தெரித்தல்; burning medicine; மருந்து நீற்றுதல், calcining medicine; 4. சூடுபோடுதல், branding.

**சுடுதழும்பு**, சுட்டவடு, scar formed by healing of wounds caused by burning or cauterization. crust or scab formed on wounds cused by burning or cauterization; 2. காரத்தினுல் சுட்ட தழும்பு. Scar caused by the application of caustics.

**சுடுதுரட்டி**,
**சுடுதுறட்டி**,
**சுடுதுரத்தம்**, } see சுடுதுரத்தி.

**சுடுதுரத்தி**, சித்திரப்பாலாடை, Euphorbia thymifolia or E. hypericifolia.

**சுடுதொரட்டி**, சூரைமுள்ளி, which see.

**சுடுநாற்றம்**, இறைச்சி, பிணம் முதலியவை சுடுவதால் ஏற்படும் நாற்றம், bad smell caused by roasting meat or burning corpse.

**சுடுநிலம்**, சுடுகாடு, cremation ground.

**சுடுநீர்**, வெந்நீர், Hot water.

**சுடுபுண்**, சுட்டபுண், burns caused by fire. 2. வெந்தபுண், injury caused by hot substances—Scalds.

**சுடுபொன்**, புடமிட்ட பொன், refined gold.

**சுடுமருந்து**, எரிமருந்து, (literally) medicine obtained by mere burning; 2. புடமருந்து, calcined medicine; 3. இரசாயன மருந்து, chemical preparation; 4. புண்ணைச்சுடு மருந்து, caustic.

**சுடுமூஞ்சித்தனம்**, முகத்தில் கோபக்குறியைக்காட்டுந் தன்மை, irritable temperament.

**சுடுரத்தம்**, see சித்திரப்பாலை.

**சுடுவல்**, இரத்தம், blood.

**சுடுவளர்த்தி**, see சூடுவளர்த்தி.

**சுடுவள்ளி**, see தலைச்சூடுவள்ளி.

**சுடுவனம்**, சுடுரத்தம், warm blood; 2. சுடு திரவம், hot fluid; 3. தீட்சண்யமான காடு, அதாவது அனல்வீசும் காடு, a forest throwing hot wind; 4. பாலைவனம், desert.

**சுடுவன்**, see சுடுவனம்.

**சுட்ககருப்பம்**, கர்ப்பம் சுழித்துக்கொண்டு வயிறு பூரிக்காமற் செய்வது, non-development of pregnancy.

**சுட்கசுரம்**, அதிக வெப்பத்தினுல் மேலெல்லாம் எரிச்சல் கண்டு, உடம்பை உலர்த்து மோர்வகைக் காய்ச்சல், மேலும், இதனுல் தலைவலி, கண்வலி, வியர்வைப் பிரலாபம், பல்வலி, சவம்போல் கிடத்தல், மயிர்ச் சிலிர்ப்பு, அதிநித்திரை ஆகிய இக்குணங்களைக் காட்டும், a form of fever causing burning sensation and emaciation of the body due to excessive heat; 2. see கணைக் காய்ச்சல்; 3. எலும்புருக்கிக் காய்ச்சல், இதனுல் உடம்பிளைக்கும், Ricketic fever causing emaciation and deformity. It is marked by progressive wasting or emaciation of the body and intermittant fever.

**சுட்கசிலேட்டுமம்**, சர்வாங்கச்சூம்பல், கபாதிக்கம், இருமல், மூச்சுக் கஷ்டம், வயிற்றுப் பிசம், மலபந்தம் ஆகிய விக்குணங்களோடு கூடிய ஓர் சிலேட்டும நோய், a disease caused by excessive phlegm humour.

**சுட்கநோய்**, உடம்பை உலர்த்தும் நோய், any wasting disease; 2. உடம்பை இளைக்கச் செய்யும் சய நோய், consumption tending to a gradual loss or diminution of bulk in the system.

**சுட்கமூலம்**, முளை சுருங்கிய ஓர் மூலநோய், a form of piles in which the small tumour of the veins out side the anus is found shrunken or decreased in size spontaneously; 2. வறட்சிமூலம், a kind of hemorrhoid due to the dry condition of the lower end of the rectum; 3. உலர்ந்து சுருங்கி இருப்பது, that which is dried and shrinked; 4. உலர்ந்த வேர், dried root; 5. உலர்ந்த கிழங்கு, dried bulb or rhyzome.

**சுட்கம்**, வறட்சி, dryness; 2. உலர்வு, emaciation; 3. ஓர் நோய். a disease.

**சுட்கயோனி**, மாதாந்த ருது காலத்தில புணர்ச்சியை விரும்பிப்போகும் பெண் களுக்கு இயல்பாக விழும் இரத்தம், இப் புணர்ச்சியினால் உள்ளுக்குள்ளே மறிக்கப் படுவதனால் மல மூத்திராதிச் சிக்கலை யுண் டாக்கி, யோனியில் வலியை யுண்டாக்கு மோர் நோய், a menstrual disorder in women marked by scanty flow of menstrual blood, constipation urinary complaint uterus pain etc. It is due to their uncommon desire for indulgence in sexual intercourse during the menstrual period.

**சுட்கரேவதி**, குழந்தைகளைத் தாக்கும் ஓர் வகைக் கிரகதோஷம் இது, குழைந்தை பிறந்து 7வது நாள், மாதம், வருஷத்தில் சிசுவை அல்லது தாயைக் கிரகம் பிடிக்கும் இதனால் அன்னத்துவேஷம், கொட்டாவி, உடம்புவலி, உண்டாகும், an evil influence of a planet affecting the health of the children at the 7th day or month or year. This affects either the mother or child. The symptoms are pain in the body, yawning and nausea.

**சுட்கரோகம்**, உடம்பை இளைக்கச் செய்யும் நோய், wasting disease any disease causing emaciation.

**சுட்கல்**, வறளல். to grow dry; 2. மெலிதல், to get reduced or emaciated.

**சுட்காட்சிபாகரோகம்**. ஓர்வகைக் கண்ணோய் இதில் கண்கள் சுருங்கி, இடுக்கம் பிடித்தல் போலிருக்கும், அதனால் கண்ணில்வலி, அதிர்ச்சி, எரிவு, ஒளிக்குறைவு, கண்சிவப்பு முதலிய குறிகளும் அத்துடன் கண்ணிர ப்பை மூடல், திறந்தலில் பிரயாசை, மேலும் இரப்பை வரட்சியாலெப் பொழுதும் மூடின படியேயிருக்கும் சீதளவஸ்துவில் இச்சை முதலிய குறிகளையும் காட்டும் இந்நோய் முதிர்ந்தால் கண்ணில் குத்தல் வலி அதிகரி க்கும், பார்வையைப் புகைச்சலாய்க் காட்டும், a disease of the eye due to sudden shrinkage or contraction of the eye as a whole. It is characterised by pain, shock burning sensation, dullness of vision, or hazy appearance, inflammation etc. and is also attended with difficulty in opening or closing of the eye lids and a craving for cool substances. In the advance stage there will be more acute pain and hezy vision. The lids become dry and hard and remain always closed. It may be a non-secreting type of conjunctivities.

**சுட்கவட்சிபாகம்** See சுட்காட்சிபாகம்.

**சுட்கவரிசம்**, இமையிற்காணும் சொரசொரப் புள்ள சிறுமுளைகள், rough papillae in the eye lid.

**சுட்கும்பி**, கழுதைமான் புள்ளி, இதன் சாற் றில் பாஷாணம் கட்டும் வேர்ச்சாற்றில் அரி தாரம் வெளுக்கும், a medicinal plant. The juice of the leaves is capable of consolidating arsenic compounds while that of the root turns the yellow colour of orpiment into white.

**சுட்சுள்**, See சுள்ளுசுள்ளெனல்.

**சுட்டகரி**, எரித்தகரி, burnt charcoal, carbon; 2. சுடுவதனாலுண்டாகும் கரி, charcoal derived by burning wood fuel; 3. காந்திய நிலக்கரி, the refuse of the burned coals a a hot coal that ceased to flame.

**சுய்க்கல்கூத்தன்**, பூநீறு, an effloresent salt found in the soil of fullers' earth.

**சுட்டசாம்பச்சி**, See எவட்சாரம்.

**சுட்டசாம்பல்**, எரித்துண்டான சாம்பல் — ashes obtained by burning.

**சுட்டசுண்ணும்பு**, சுட்ட சுண்ணும்புக்கல், Burnt lime stone — quick lime; 2. நீற்றிய சுண்ணும்பு slacked lime.

**சுட்டபுண்**, நெருப்பினால் சுடப்பட்டபுண், injury caused by fire — burns; 2. வெந்த புண், wound caused by hot substances — scalds.

**சுட்டபுண்ணுற்றி**, தீச்சுட்டபுண்களை யாற்று மருந்து, an agent that cures burns Antipyrotic.

**சுட்டபுளி**, நெருப்பிலிட்டெடுத்தபுளி, இது ஓர் பத்தியபாகம், burnt tamarind used in diet.

**சுட்டபூக்கல்**, See வழலை.

**சுட்டாமுட்டி**, See கட்டுவிரல்.

**சுட்டாவிரல்**, See சுட்டுவிரல்.

**சுட்டவெண்காரம்**, roasted borax — dehydrated Borax.

**சுட்டி**, நாக்கு, tongue.

**சுட்டிகை**, See சிட்டிகை.

**சுட்டிச்சுண்ணம்**, குளியல் வாசனைப்பொடி, bathing scented powder.

**சுட்டுக்குருவி**, See சிட்டுக்குருவி.

**சுட்டுப்பொருள்**, நினைத்தபடி கடவுள் குருவாக எழுந்தருளல், God appearing in the form of a guru in meditation according to the proficiency of the practising worshipper.

**சுட்டுவிரல்**, ஆள்காட்டிவிரல், index finger.

**சுணக்கம்**, சோர்வு, fatigue.

**சுணக்குதல்**, மெலியச் செய்தல், to cause emaciation; 2. களைக்கும்படி செய்தல், to cause fatigue.

**சுணங்கல்**, சோர்வுறல், to get tired. 2. மெலிதல், to grow slender.

**சுணங்கறை**, புணர்ச்சி, sexual union.

**சுணங்கன்**, நாய் dog; 2. See சுணங்கன் விருட்சம்.

**சுணங்கன் கபாலம்**, நாய் மண்டையோடு, skull of a dog

**சுணங்கன்புல்**, இது தர்ப்பைப் புல்லைப் போல செழித்து சாமையின் சாயலைப்போல ஊரிகளில் ஆரச்சுவர்களில் முளைக்கும். புழக்கடையிலும் காணலாம். இதற்கு மஞ்சள் நிறக்கிழங்குண்டு, a species of grass resembling deccan grass in appearance and sacrificial grass in its growth and fertility. It grows generally on the compound walls and in the back yard of houses in town and villages. Its bublous root isyellow colour.

**சுணங்கன்மூலி**, நாய்க்குட்டிசெடி, இது ஒரு கற்பமூலமகாமூலி 23 வகைகளில் ஒன்று

**சுணங்கன் விருட்சம்**, நாய்க்குட்டி மரம், இது வெகு அபூர்வம், பார்த்தவர்கள் கிடையாது, இம்மரத்தினடியிற் சென்றுல்நாயைப் போலிரையும், சீ என்று சொல்ல, சத்தமடங்கும். இது இந்திரமாயசால வித்தைக்குதவும், இதன் பட்டையைக் குழித்தைல மிறக்கி இரும்புக்குக் கொடுக்கத் தங்கமாகும். இதன் பூத்தூளும் வாதத்திற்குதவும், காயை மைகூட்டி ஊமையின் கையிலிட புதையல் காணும், வேரைப்பிடுங்கிக் குளிசமாட, கெவுனம் பாயும், கூடுவிட்டுப் பாயலாம், காயசித்திக்குதவும் இதன் இலை நீளமாகவும், தடிப்பாகவும், சுணையாகவும், சுற்றிலும், கருக்காகவும் இருக்கும் இதன் கனி நாய்க்குட்டியைப் போலிருக்கும், இக்கனி பழுத்துக் கீழே விழும்போது குரைத்து விழும். அப்படி விழுந்து நெடுநேரம் கிடந்து பின்பு விருட்சத்தில் போய்ச் சேர்ந்து கொள்ளும், அக்கனி விழும்போது சாக்கிரதையாக எடுத்து அறுத்துப் பார்த்தால் வெண்ணெய் போல் மெதுவாய் இருக்கும், It is called dog tree No body has seen this plant. It is said that if any body approches it, makes barking sound, the sound stops, if the person says 'சீ' This plant is useful to magicians. The oil from the bark is said to transmute iron into gold Even its flowers are used in Alchomy. A black ointment is prepared from its fruit, and it is held in the hand by a dumb person, he will be able to see and locate treasure trove. Its root if worn as talisman, the person can walk in the air, and pass from one body to another. The root bark is ful for rejuvenation. Its leaves are long thick pubescent with serrated margin.

Its fruit looks like a pup, and so the plant is called dog tree. When it gets ripe and falls from the tree a barking sound is heard. After remaining for some time on the ground, the fruits rises up and fixes itself into the tree. If it is picked, and cut before it joins the tree it will be found to be fleshy and butter like.

இப்பழத்தைக் கொஞ்சம் கொஞ்சமாகச், சாப்பிட்டுவர மூர்ச்சையுண்டாகும். அப்போது எவரேனும் பக்கத்திலிருந்து கொண்டு பசும்பால் நான்கு கொன்று தேன் கலந்து ஒரு கறண்டிவிதம் உள்ளுக்குச் செலுத்திக் கொண்டுவர 13ம் நாளில் மூர்ச்சை தெளியும், தேகமும் சித்தியாகும், If one eats this little by little he swoons and becomes senseles. Then if any body, feeds him with the mixture of milk and honey in the proportion of 4 : 1 he will revive on the 13th day. Then his body becomes immortal.

**சுணங்கிப் போதல்,** மெலிந்து போதல், to grow weak and thin

**சுணங்கிவிழல்,** களைத்துவிழல், to fall by exhaustion or over exertion.

**சுணங்கு,** தேமல், light coloured yellow paches on the skin; 2, சோர்வுறு, to get tired; 3. சதுரக்கள்ளி, square spurge Euphorbia antiquorum; 4. பூந்தாது, pollen; 5. பசலை அதாவது ஓர் சர்மரோகம், a skin disease; 6. நாய், dog; 7. மெலிவு, emaciation.

**சுணங்குபடர்தல்,** உடம்பில் தேமல் படருதல், spreading of yellow patches or spots on the skin especially of the women.

**சுணங்கு பூத்தல்,** See சுணங்கு படர்தல்.

**சுணச்சி,** பவளப்புற்று பாஷாணம், a kind of prepared arsenic; 2. பேய்க்கடலை; a kind of bitter wild gram; 3. பேய்த்தும்பை, devil toombay — Leucas linifolia. The fresh juice is employed in head ache & colds; 4 நாகதாளி, a plant found grown in tanks.

**சுணம்,** வெள்ளுள்ளி, garlic; 2. அழகு தேமல் yellow spreading spots which adds beauty to women.

**சுணவு,** See சுணைவு

**சுணை,** இலையின்சுணை, asperity of leaves; 2. சிறுமுள், prickle; 3. தினவு, Itching 4. சுணையுள்ள பதார்த்தம், 5. See சுணைக் கோரை.

**சுணைக்கரந்தை,** சுணையுள்ள கரந்தை, sharp sweet basil. Ocimum lanceolatum.

**சுணைக்கழியாப்பிஞ்சு,** அப்பொழுது பறித்த பிஞ்சு, a fresh downy fruit.

**சுணைக்காணம்,** பேய்க்கொள், wild horse gram.

**சுணைக்காது,** காதுமடலின் கீழ்த்தொங்கிக் கொண்டிருக்கும் மெதுவான சதைப்பாகம், the lower termination of the ear — lobule.

**சுணைக்காய்க்குள் பாஷாணம்கட்டும்,** பேய்க் குமட்டி, Colocynth—Citrullua colocynthr's.

**சுணைக்குறிஞ்சா,** சொர சொரப்புள்ள குறிஞ்சா, rough swallow wort — Gynema hirsutum.

**சுணைக்கொடி,** முசுமுசுக்கை, Bryonia scabra.

**சுணைக்கோரை,** சுணையுள்ள கோரைப்புல், a rough or downy reed.

**சுணைச்சி,** சிறுகாஞ்சொறி, small climbing nettle — Tragia involuerata.

**சுணைத்தல்,** தினவெடுத்தல், itching.

**சுணைத்தழும்பு,** சுணை உடம்பிற் படுவதனால் நமைச்சலெடுத்து தடித்துத் தழும்புண்டாதல், nettle rash.

**சுணைநெரிஞ்சில்,** ஓர் வகை முள்நெரிஞ்சில், of kind of nettle

**சுணைப்புல்,** சுணையுள்ளபுல், any grass. with rough surface; 2. கோரைப்புல், reed sedge grass.

**சுணையுள்ள,** முட்சுணையுள்ள, pubescence.

**சுணையுறுகாணம்,** பேய்க்கொள், wild horse gram.

**சுணையுறுகொத்து,** சுணையுறு மூக்கு, see சுணையுறுகாணம்.

**சுணைவண்டு,** ஒருவகை வண்டு, a kind of beetle.

**சுணைவு,** பேய்க்கடலை wild bitter bengal gram.

**சுணைவெள்ளரி,** நரிவெள்ளரி, downy cucumber Cucumis utilies simus.

**சுண்டகம்,** கள், toddy; 2, மூஞ்சூறு, musk rat.

**சுண்டக்கட்டுதல்,** இறுகக்கட்டுதல், to be hardended after boiling.

**சுண்டக் காய்ச்சல்,** நீர் வற்றும்படி காய்ச்சுதல், to heat till it completing dries.

**சுண்டக்காய்தல்,** இருகும்படி காய்தல், to dry in the sun till it completely dries.

**சுண்டக்கீரை,** நீர்ச்சுண்டி, floating sensitive plant Nepuntia genus.

**சுண்டங்காய்,** சிறுகாய், small fruit; 2. See சுண்டைக்காய்.

**சுண்டம்,** கள், fermented liquor.

**சுண்டலி,** ஓர்ப்பூடு, false holly. Gophandra axiclaris.

**சுண்டல்,** சுண்டுதல், getting evaporated or dried; வேகவைத்தகாய் தானியம் காலையுணவுக்குச் சிறந்தது, Boiled pulses good and recomended for breakfast.

**சுண்டற்கறி,** பழங்குழம்பு, பழங்கறிகளை ஒன்றுசேர்த்துக் காய்ச்சி வற்ற வைத்து எடுத்த பொருள், a mixure obtained by heating the remmant sauce, pepper, water and curries of the previous night.

**சுண்டன்,** மூஞ்சூறு, musk rat; 2. சுண்டெலி mouse.

**சுண்டாங்கி,** துவையல், a seasoning used with curry; 2. சட்டினி, chutney.

**சுண்டாலம்,** See சுண்டாலி.

**சுண்டாலி,** யானை, elephant.

**சுண்டான்,** கள், toddy; 2. மூஞ்சூறு, musk rat c. f. shrew rat.

**சுண்டி,** கள், toddy; 2. புளித்தமது, any fermented, liquor; 3. சுக்கு, dried ginger; 4. ஓர் வகைக் கண் வியாதி, a kind of eye disease; 5. நீர்சுண்டி, see சுண்டக்கீரை. 6. தொட்டால்வாடி, sensitive plant Mimosa Pudica; 7. see சுண்டிக்கீரை; 8. வறட்சுண்டி, floating sensitive plant; 9. இஞ்சி. ginger; 10. See சுண்டை, 11. கருஞ்சுண்டி, Mimosa rubicaulis.

**சுண்டிகை,** உண்ணாக்கு, uvula; 2. see சுண்டைக்காய், 3. வண்டின் நாக்கு, tonge of bittie.

**சுண்டிக்கிருதம்,** ஒரு சேர் சுக்கு அரைத்தும் அத்துடன் 8, சேர் சுக்கைக் கஷாயம் வைத்தும் இரண்டையும் கலந்து, அதற்கு நெய்பு மிட்டுப் பக்தவப்படுத்திய ஆ. வே. மருந்து இதனால், பாண்டு வீக்கம், சீதபேதி இவைகள் குணமாகும், the ingredients of I seer of dry ginger. made into a paste to which is added 8 seers of dry ginger decoction and ghee. By boiling the mixture ghee is prepared. It is an Ayurvedic preparation given for dysentery, anemia and dropsy.

**சுண்டிக்கீரை,** நீர்ச்சுண்டி, water mimosa.

**சுண்டிப்போதல்,** சுருங்கல். to be reduced by boiling or evaportion.

**சுண்டியம்,** சுக்கு see சுண்டி.

**சுண்டியாதிக்கியாழம்,** சுக்கு, கோரைக் கிழங்கு, அதிவிடயம், சீந்திற்கொடி சம எடை சேர்த்துக் கஷாயமிறக்கி அக்கினி மாந்தம், ஆமவாதம், கிருணி முதலிய நோய்களுக்குக் கொடுக்கும் ஆயுள் வேதகஷாயம். This is a decoction prepared out of dry ginger. Moon creeper stem, bulb of nut grass, Indian atee. It is useful for chronic diarrhoea, loss of appetite etc.

**சுண்டியாதிச் சூரணம்,** சுக்கு, சீரகம், இந்துப்பு, பெருங்காயம், மாங்காய்ப் பருப்பு, வில்வப்பழம் இவைகளைச் சூரணித்து வஸ்திரகாலிதம் செய்து தயிர் வார்த்துச் செய்யும் ஆ. வே. மாத்திரை, இதை ஆமாதிசாரம் அக்கினி மாந்தம் அருசி முதலிய நோய்களுக்குக் கொடுக்க அப்பொழுதே தீரும், an Ayurvedic preparation of some bazzar drugs dry ginger, cumin, rock salt as foetida, etc with curd. It is useful for diarrhoea loss of appetite, nausea etc.

**சுண்டியிலை,** தொட்டால்வாடியிலை — leaves of Mimosa pudica.

**சுண்டியுண்டை,** சோறு, கஞ்சி இவைகளைப் புளிக்கவேண்டி மூலிகை வேர்களைக் கொண்டு செய்யும் மாத்திரை, a pill prepared out of certain roots to ferment rice porridge etc. இந்த மாத்திரை சுக்கு சதுரக் கள்ளி, கொழிஞ்சி, சீரகம் முதலான பல மூலிகைகளின் வேர்ப்பட்டைகளால் செய்யப்படுகிறது, a medicinal pill prepared with dried ginger, root barks of square purge, (கொழிஞ்சி) ctruis, cumin seed It is used as a fermenting agent to ferment rice gruel and other liquids; 2. சதுரக் கள்ளி, square spurge — Euphorbia antiquorum; 3. கொழுஞ்சி சீரகம், a kind of cumin seed.

**சுண்டிலி,** மயில் peacock மூஞ்சூறு musk rat.

**சுண்டில்,** தொட்டாற் சுருங்கி, sensitive plant Mimosa pudica.

**சுண்டு,** தலைப்பொடு, dand druff; 2.விறைப்பு, rigidity; 3.வண்டல், sediment; 4.சுண்டுதல், getting reduced by heat as liquid does; 5. ஓர் சிற்றளவு, a small measure; 6.மூக்கு, nose, 7. கீழுதடு, lower lip; 8. சதை இழுத்துக்கொள்ளுதல். tightening of muscle as in a cramp.

**சுண்டுதல்,** நீர் வற்றுதல், process of getting dry; 2. வேகவைத்தல், process of boiling; 3. நரம்பிழுத்தல், contracting or stretching of muscle.

**சுண்டுதலை**, சொறித்தலை, head with scurf.

**சுண்டுவாதம்**, நரம்பை உள்ளேயிழுக்கும் வாதம், a disease marked by contraction of muscles as cramp – spasm etc.

**சுண்டுவிரல்**, சிறுவிரல், little finger.

**சுண்டெலி**, சிறிய எலி, அல்லது சிற்றெலி, mouse. a small rat.

**சுண்டை**, கள், toddy; 2. see சுண்டைக்காய், 3. வெண்ணொச்சி, the white species of negundo — Vitex negundo; 4. காட்டுச் சுண்டை, Solanum Verbacifolium; 5 சுண்டைச் செடி, Solanum pubescens.

**சுண்டைக்காய்**, சுண்டைச் செடியின் பச்சைக்காய். இது கறிக்கும் வற்றலுக்கும் உபயோகப்படும். இதை சிவக்க வறுத்துப் பொடி செய்து உப்புக்கல்லோடு கூட்டிக் கொடுக்க அசிரணம், வயிற்றுப் பொருமல் இவைகள் தீரும். இதை வறுத்துத்தின்ன மலக்கிருமி, பித்த அரோசகம் இவை போம் கஷாயமாக உபயோகிக்க சீதக்கட்டு, சீதபேதி, மூலவியாதி, கிருணி இவைகள்போம். இது ஓர் பத்தியப்பண்டம். இதைக் குழம்பு செய்துண்ண கபத்தை அறுக்கும். நெஞ்சு சளி போம். வாயுவைக் கண்டிக்கும். மலக் கிருமிகளைக் கொல்லும். ஆசனத்துவார சீதக்கட்டு போம், the fruit of unarmed night shade — Solanum pubescens. The unriped fruit is used in curries when fresh. The dried ones are seasoned in butter milk with salt. They are again dried and stored. Whenever required they are fried in oil or ghee and used as an adjunct to food. If taken in sufficient quantity it cures indigestion. diarrhoea rumbling noise in the stomach biliousness and kills worms in the intestines. A decoction of them is a good remedy in mucous diarrhoea dysentery and hemorroids (piles). It is a dietic substance. It serves as an expectorant and carminative.

**சுண்டைச்செடி**, சுண்டைக்காய்ச் செடி; அல்லது மரம்; 8—12 அடி உயரம்; இதன் இலை அகலமாயும் சொரசொரப்பாயும் இருக்கும். மரம் சிறியது ஆயினும்விசாலம்,வெள்ளைப்பூ சதா பூக்கும். காய் சிறியது. உருண்டை, பச்சை நிறம், குழம்புக்குதவும். இதனை மோரிலிட்டுக் காயவைத்து வற்றலாகவும் உபயோகிக்கலாம். சிறிதுகசக்தம். ஆயினும் உடம்புக்கு நல்லதெனக் கருதப்படும். இதன், வேர் தும்மலையுண்டாக்கும். இதில் அனேக விதங்களுண்டு; அவையாவன; It is a shrub or tree about 8—12 feet high, leaves are broad pubesent on both sides. flowers are white and short. It flowers and bears fruits all round the year. Fruits are small round and green They are slightly bitter but good for health.

1. ஆனைச்சுண்டை, Solanum ferox.
2. மலைச்சுண்டை, Solanum torvum.
3. இராமேஸ்வரச் சுண்டை, Solanum pubescens.
4. முட்சுண்டை, Solanum trilobatum.
5. கருஞ்சுண்டை.
6. காட்டுச் சுண்டை. Solanum verbascifolium.
7. பேய்ச்சுண்டை. same as முட்சுண்டை
8. நஞ்சுண்டை, poisonous variety.
9. இலைச்சுண்டை.
10. குத்துச்சுண்டை.
11. முள்ளிலாச் சுண்டை. same as மலைச்சுண்டை.

**சுண்டைப்பிரமாணம்**, சுண்டைக்காயளவு; சில மருந்துகளில் (மெழுகுகள், லேகியங்கள்) அளவைக் குறிக்கும். The size of fruit of Solanum pubescens.

NOTE:—generally in Tamil medicine the doses of medicine are given as the size of rice, paddy. green gram, black gram, red gram. seed of Abrus precatorius, fruit of Solanum pubescens and gooseberry and soon.

**சுண்டைவற்றல்**, சுண்டைக்காய் வற்றல், அதாவது பச்சைச் சுண்டைக்காயைக்காய வைத்து பிறகு உப்பிட்டபுளித்த மோர் அல்லது தயிரிலிட்டு ஊறவைத்து, மறுபடி தயாரித்த வற்றல், இதை நெய்யிலாவது நல்லெண்ணெயிலாவது வறுத்து ரசஞ்சாதத்துடன் சாப்பிட வாயுவைக் கண்டிக்கும். ஆசன சீதக்கட்டு, மலக்கிருமி போம், பசியுண்டாம். dried unriped fruits of solanum pubescens. The fresh fruits are smashed and dried. Then they are soaked in sour curd or butter — milk with salt to taste during nights, and dried in the sun during day till it becomes completely dry. That is how the fruits are seasoned. They are fried in gingelly oil or ghee and taken as an adjunct to food. The dry fruits or seasoned ones are used in medicine.

**சுண்டைவேர்,** சுண்டைச் செடியின் வேர் இது தும்மலை யுண்டாக்கும், the root of solanum pubescens. It causes sneezing.

**சுண்ணக்கரி,** சுண்ணும்பு சேர்ந்தகரி.

**சுண்ணக்கல்,** சுக்கான்கல் lime stone; 2. வெண்சுக்கான்கல், white lime stone derived from meta-morphosed rocks; 3. கருஞ் சுக்கான்கல், black lime stone obtained from aqueous rocks: 4. சுண்ணும்புக்கல், slaked lime.

NOTE :— Lime stone are formed mechanically, Chemically, organically, but always in water.

**சுண்ணக்குகை,** சுண்ணும்புக் கல்லினுல் செய்த குகை, crucibles made of slaked lime. அஞ்சு சுண்ணக்குகை, அதாவது கடல் நுரை, கிளிஞ்சில், வலம்புரிச்சங்கு, வெள்ளை கல் குக்குடம் இவைகளினுல் செய்தகுகை, crucible prepared with five varieties of lime — cuttle fish bone lime, common oyster shell lime, slaked lime of lime stone, conch shell lime. egg shell lime. Another process of making crucible of five limes is as follows — crab shell (field crab) snail shell, conch shell common oyster or be valve shell and (hens' hatched) egg shell are taken in equal quantities and grinded with the sufficient quantity of milk of madar — calatrophis gigantia — till they become a fine paste. Then the paste is made into a disc about 3 m.m. thick and dried under the sun. When completely dry, it is packed in shallow earthern crusibles with cloth strips smeared with clay. Again it is dried and subjected to a big puttam of cow dung cakes. After cooling, it is taken out, and opened. The disc will be found white soft and calcified.

Sufficient quantity is taken and grinded with white of egg and then with the milk of Madar. Lastly it is mixed with slaked lime water and made into crucible and lid.

**சுண்ணக்குகையிலூதல்,** மருந்தைச் சுண்ணும் புக்குகையில் வைத்தூதல், to blow with belows the lime crucible contaning the medicine which is to be calcified.

**சுண்ணக்குரு,** பூநீரையும் கற்சுண்ணும்பை யும் தண்ணீரில் விட்டுக்கரைத்து சிவ கரந்தை சத்தில் சொல்லியபடியே இதிலும் செய்து 4ம் நாள் பார்க்கத் தண்ணீர் மீது நுரையைப்போல் மிதக்கும் சத்தை சத்து பூர்க்கும்வரை தினப்படிவழித்து மற்றொரு பாண்டத்தில் சேகரித்து வெயிலில் வைக்க உப்பாகியிருக்கும். இச்சத்துக்கு வைத்திய முப்பு என்றும் பெயர், ஆகவே இதை ஒவ் வொரு மருந்திலும் சேர்ப்பதால் அம் மருந் தின் குணம் சிறந்ததாகக் கருதப்படும். ஆகவே வைத்தியர்களுக்கு இது அவசியம், This salt is a highly concentrated extract from quick lime and dhoby's earth containing carbonate of soda. In Siddha Medicine there are innumerable ways of preparing this quintessence salt. The secret involved in the preparation is not fully divulged because of its mystoc use in Alchemy. It is consideerd as an universal solvent or powder of a very high potency and is capable of curing all ailments.

According to the secret science of Hermatic Philosophers the Rosycruciems considered this quintessence as a fifth essence of the ancient and medieval philosophy.

**சுண்ணக்கூர்மை,** See நாகரவண்டு.

**சுண்ணச்சத்து,** சுண்ணும்புச்சத்து essence of lime; 2. எலும்பிலுள்ள சுணணச்சத்து calcium phosphate found in bones; 3. சுண்ணுயபிலுள்ள உலோகச்சத்து. the metalic basis of lime — Calcium; 4. குருச் சுண்ணம், see சுண்ணக்குரு.

**சுண்ணச்சிறுநீர்,** அதிக சுண்ணும்பு சத்து மூத்திரம், excess of calciam salt in the urine.

**சுண்ணச்சீலை,** சுண்ணும்பு தடவிய சீலைத் துணி, a piece of cloth luted with lime and used for packing the container of medicine which is to be exposed to fire.

**சுண்ணச்சீலை சுற்றல்,** சீலைச் சுண்ணம் சுற்றுதல், to pack by winding the piece of of cloth luted with time over the container of medicine.

**சுண்ணச்சீனிநீர்,** சர்க்கரை கலந்த சுண்ணு ம்புத் தெளிவு, saccharated solution of lime.

**சுண்ணத்துக்குயிர்,** முட்டை, egg supposed to possess a life giving virtue to lime.

**சுண்ணத்துக் கூர்மையோன்,** நாகரவண்டு, a beetle supposed to carry water to snake holes.

**சுண்ணத்தோன்,** See கற்பூரசிலாசத்து.

**சுண்ணநீர்,** சுண்ணாம்பு தெளிந்த நீர், lime water.

**சுண்ணநீறு,** நீற்றியசுண்ணாம்பு, slaked lime 2. நீற்றிய சுண்ண மருந்து, a calcium compound.

**சுண்ணப்பூச்சவுடு,** உவர்மண், dhoby's earth; உவர்மண்காரம், impure carbonate of soda.

**சுண்ணப்பூமி,** பூநீறு எடுக்கும் நிலம், soil of fuller's earth.

**சுண்ணப்பொடி,** வாசனைப்பொடி, an aromatic powder; 2. சுண்ணாம்புத்தூள், lime powder or dust; 3. see சுண்ணநீறு; 4. சுண்ணமருந்து, calcined medicine.

**சுண்ணமண்,** சுண்ணாம்புமண், sand mixed with lime; 2. உவர்மண், fuller's earth.

**சுண்ணமாஞேன்,** கொறுக்காய்ப் புளி, sweet babool — Pithecolobium dulce.

**சுண்ணம்,** சுண்ணாம்பு, slacked lime; 2. கந்தப்பொடி fragrant powder; 3. see சுண்ணப்பொடி, 4. சுண்ணமருந்து, calcined compound; 5. பச்சைக்கற்பூரம், Borneo camphor; 6. சுண்ணபற்பம், oxide of calcium; 7 சுண்ணச்சத்து, precipitate substance thrown down from a liquid containing calcium; 8 புடமிட்ட சுண்ணம். sublimate of calcium; 9. பராகம், pollen; 10. see சுன்னம்.

**சுண்ணலோகச்சிந்தூரம்,** அயப்பொடியில் சாரநீர் விட்டு அரைத்துக் காய வைத்து 3 முறை புடமிட்டெடுக்கச் செந்தூரமாம். இது பாண்டு, சோகை, மகோதரம் இவைகளுக்குக் கொடுப்பது, பருத்த தேகம் இளைக்கும். If purified iron filings are ground with pungent liquied prepared from salammonac and subjected 3 times to fire as rules of calcination the filings become fire red powder — It is the red calcination of iron useful for anaemia, dropsy and ascites, reduces obesity.

**சுண்ணவரசி,** முல்லை, malabar jasmine—Jasminum malabaricum.

**சுண்ணவிரத்தம்,** சுண்ணாம்பு அதிகமுள்ள இரத்தம், blood that contains more calcium than normal.

**சுண்ணவுப்பு,** lime salts,

**சுண்ணவிரோதி.** சவ்வீரம், perchloride of mercury.

**சுண்ணவைப்பு,** சுட்ட சுண்ணாம்பு,burnt lime stone; 2. புடமிட்டெடுத்த மருந்துச் சுண்ணம், a kind of alkaline salt such as calcium carbonate obtained by process of calcination; 3. சுண்ணாம்பு வண்டல், calcareous deposits; 4. தமிழ் வைத்திய நூலின்படி தயாரித்த உலோகச் சுண்ணம், compound of calcium carbonate prepared as prescribed in Tamil medicine

**சுண்ணாம்பு,** நீற்றிய சுண்ணம், slaked lime — Calx; 2. சுட்டசுண்ணாம்பு; unslaked lime. 3. தாளித்த சுண்ணாம்பு, இது வெள்ளை நிறம் அதில் சாம்பல் நிறம் சாயலும் கலந்தது. வாசனையற்றது, விருவிருப்பும் காரச்சத்துமுள்ளது. இது கற்சுண்ணாம்பு, இது கிளிஞ்சிற் சுண்ணாம்பு, என இருவகைத்து, கற்சுண்ணாம்பு கரங்கங்களினின்று வெட்டியெடுக்கப்பட்டது, கிளிஞ்சிற் சுண்ணாம்போ உப்பங்கழிகளில் தங்கி நிற்தம் ஊமைச்சியோடு; சுண்ணாம்பு மண்ணிரல் வீக்கத்திற்தம் வெளிக்கு சுடுவதற்கும் உபயோகப்படும், கிளிஞ்சில் சுண்ணாம்பு தாம்பூலத்தோடு சேரும்.

மருந்து வகையில் பல வகை சுண்ணாம்புகள் உண்டு எந்த பொருள் சுண்ணாம்பாக மாற்றப்படுகிறதோ அதன் பெயரால் வழங்கும், உதாரணமாக 1. கற்சுண்ணாம்பு: 2. கிளிஞ்சல் சுண்ணாம்பு 3. சிப்பிச் சுண்ணாம்பு, 4. நத்தைச் சுண்ணாம்பு 5. சங்கு சுண்ணாம்பு; 6. நண்டு ஓடு சுண்ணாம்பு; 7. முட்டையோடு சுண்ணாம்பு; 8. முத்து சுண்ணாம்பு; 9.முத்துச்சிப்பிச் சுண்ணாம்பு;10. கௌரி சுண்ணாம்பு இப்படி பல. calcium Hydroxide or calcium Hydras (slaked lime). It is a white substancs of a pale grey tint opaque inodorous acrid and alkaline taste comercially two kinds existo — stone chunnum and shell chunnam. The former is taken from querries the later from salt water marshes. The chunnam is used internally in dyspepsia loss appetite enlargements of spleen and externally as a caustic. Shell chunnum is chewed with betel leaf. Kings used pearl chunnam to chew betels.

NOTE :— Lime is an oxide of metal calcium. It is literally calcic oxide or carbonate of lime deprived of its carbonic acid. The pharmaceutical preparations of quick lime are 1. calcishydrus — caustic and eschoratic internaly administered as a corrosive poison; 2. Liquor calcis — antacid, masticatory, alterative and astringent; 3. Liquor calcis saccharatus; 4. Linementum calcis; 5. calx chlorata — a well known deodiser; 6. calcis phosphas — alterative and antacid.

In Tamil medicine or Hindu medicine several kinds of lime are used. They go by the name of the substance used to prepare the lime. They are lime from lime stone, calcined Bivalve shells, snail shell, conch shell, crab shell, egg shell pearl oxyster shell, gowri and soon.

**சுண்ணும்புக்கரடு,** சுண்ணும்புக்கல்லில் சேர்ந்த ஓர் கரடான வஸ்து. இது தண்ணீரில் கரையாது, The impurity of limestone containing magenesite ($Mgco_3$).

**சுண்ணும்புக்கல்,** சுக்கான்கல், இது சுட்டகல் சுடாதகல் லென இருவகைப்படும். lime stone or indurated carbonate of lime. It consists of two varieties, unslacked lime or lime stone, and slaked lime or quick lime Quick lime is oxide of calcium.

NOTE :— chalk (*சீமைச் சுண்ணும்பு*) is a soft amorphous carbonate of lime, which can be converted into quick lime by calcination and used for all purposes as lime stone.

**சுண்ணும்புக்கிளிஞ்சில்,** See சுண்ணும்பு சிப்பி.

**சுண்ணும்புக்கீரை,** அரைக்கீரை, garden spinach — Amaranthus tristi's.

**சுண்ணும்புச்சத்து,** சுண்ணம், calcium.

**சுண்ணும்புச்சிப்பி,** சுண்ணும்பாக நீற்றவுதவும் சிப்பி, lime shell.

**சுண்ணும்பு தாளித்தல்,** சுண்ணும்பு நீற்றல் slaking lime.

**சுண்ணும்புத் தண்ணீர்** சுண்ணும்பு கலந்த தண்ணீர், solution of chunam (lime).

**சுண்ணும்புத்தித்திப்பு,** சுண்ணும்புடன் சர்க்கரை கலந்து தண்ணீரிலிட்டுத்தெளிவிறுத்த நீர், இதை குழந்தை பேதிக்கும், நூலப்பிடிப்பினுல் வருந்துபவர்களின் குன்மத்திற்கும் கொடுப்பதுண்டு, saccharated solution of lime — liquor Calcis Saccharatus. It is a mixture of lime and sugar to which water is added and filtered after a few hours.

**சுண்ணும்புத் தெளிவு,** தெளிந்த சுண்ணும்புத்தண்ணீர், இது வயிற்றுப் புளிப்பைப் போக்கும், நமது நாட்டு வைத்தியர்கள் இதை சீதபேதி, அசீரணம், அசீரணபேதி குடல்ரோகம், வயிற்றுப் புளிப்பு முதலிய ரோகங்களுக்குக் கொடுப்பதுண்டு. இதைப் பாலில் கலந்து வயிற்றுப்புண், கண்டமாலை சயரோகம் முதலிய நோய்களுக்குப் பத்திய வுணவாகக் கொடுக்கக் குணமுண்டாகும். இத்துடன் கற்பூரம் தேங்காயெண்ணெயும் கலந்து நன்ருயடித்து கொப்புளம் சிரங்கு, முதலிய சர்ம நோய்க்கு இரணம் ஆறுவதற்குத் தடவவுதவும். இத்துடன் நல்லெண்ணெயும் சர்க்கரையும் கலந்து உறவாக்கி நாட்பட்ட வெள்ளைக்குக் கொடுப்பதுண்டு, இது மூத்திரக் கல்லைக் கரைக்கும், அன்றி தாது விஷத்தையும் திராவகத்தின் விஷத்தையும் போக்கும். இரணம் சரும நோய்களுக்கு மேலுக் குபயோகிக்கலாம். அன்றியும் சனனேந்திரியம் எரிச்சல் மூலக்காம்பின் புண் இவைகளுக்குதவும் பெரும் பாட்டிற்குக் கழுவுநீராக உபயோகப்படும் கருவேலம் பிசினேடு சேர்த்துக் கொடுக்க சீதபேதி போம், கந்ததுணியில் நனைத்து மேலுக்கிட மேகவிரணம், இலிங்கப்புற்று போம். காது மூக்கினின்று வரும் இரத்தவொழுக்கை நிறுத்தும் இதில், ஓமம் சுத்தியாகும், தாய்ப்பாலில்லாக் குழந்தைகட்கு மற்றப் பால் செரிக்கும்படி இதைக் கொடுக்கலாம். lime water — Aqua calcis or liquor calcis. It is a useful antacid Vaidyans of our country use this as a remedy of much value in dysentery, dyspepsia and diarrhoea connected there with acidity of the stomach or alimentary canal. Milk with a small

propostion of lime water has been found of great service as an article of diet in ulceration of stomach and also in scrofula and pthisis. *An emulsion of lime water* and cocoanut oil with or without camphor is applied for scalds and burns. Mixed with gingelly oil and sugar it is prescribed in obstinate cases of gonorrhoea. Mixed with gum arabica it is prescribed for dysentery. Mixed with gum boge it is applied to painful gouty joints. It is also used as a caustic in dog bite. As a solvent of urinary calculi it is held in much repute It acts as a chemical antidote in poisons by mineral and oxalic acid. It is applied for burning sensation felt in the genitals and nipple sore and used as a lotion in *menorrhagia. It is used as lint in veneral* sores — chaucre — for arresting bleeding from nose and ears Ajowan — Ptycholis ajowan — is purfied by soaking in this water and drying.

**சுண்ணாம்புநீற்றல்,** சுட்ட கற்கண்ணாம்புக் கல்லின்மேல் நீர் ஊற்றித் தாளித்தல், to sprinkle water on the burnt limestone *(quick lime) and reduce it to powder.*

**சுண்ணாம்புப்பதநீர்,** குடுவையில் சுண்ணாம்பு தடவி வடித்த பனஞ்சாறு or பதனி, sweet palmyra sap.

**சுண்ணாம்புப்பற்று,** சுண்ணாம்பு வண்டல், இஞ்சி இரசத்தின் அடியிற்காணும் வெண்ணிறமான வண்டல், a white sediment deposited at the bottom of fresh ginger juice This is known as lime deposit.

**சுண்ணாம்புவல்லி,** காட்டுக்கொடிமுந்திரிகை, Jungle angoor or Jungle grape vine Vitis latifolia.

**சுண்ணசி,** ஆண்குறி, male genital — Virile membrium.

**சுண்ணசித்தல்,** நீற்றுதல், அதாவது சுண்ணமாகச் செய்தல், to reduce any metal into calcis; 2. புடமிட்டு சுண்ணமாகச் செய்தல், the process of heating or calcining a metal in air as contemplated in Tamil medicine so as to convert it into a calx. The calces are generally equivalent to what the modern chemist calls 'metallic oxides'.

**சுண்ணு,** ஆமணக்கு, castor seed; 2. புனுகு, civet;

**சுதகம்,** சிறு நெரிஞ்சில், small caltrops. Tribulus terrestris.

**சுதகவாதத்திகம்,** புளியாரை, sour sorrel.

**சுதங்கம்,** தென்னைமரம், Cocoanut tree.

**சுதத்துவம்,** தும்மை, toombay flower — Leucas genus.

**சுதந்தசுரசரசம்,** கஞ்சாங்கோரை, white basil Ocimum album.

**சுதம்,** see சுதகம்; 2. மலத்துவாரம், anus; 3. பழய சுண்ணாம்பு. old slaked lime.

**சுதரிசா,** சம்புநாவல், black berry the fruits are elongated Syzgium jambolanum.

**சுதரிசனம்,** See சுதரிசா; 2. கண்ணாடி, mirror; 3. அழகு, beauty; 4. see இச்சி; 5. வலியான், a black bird; 6. ஒர்வகைக் கடற்பாம்பு, a kind of see snake — chloris — gracilis obscura.

**சுதர்ச்சி,** சதுரக்கள்ளி, Square spurge- Euphorbia antiquorum.

**சுதர்த்தனம்,** குயில், Indian cuckoo.

**சுதவரி,** சதகுப்பி, Dill — Peucedamum graveolens.

**சுதர்சரசம்,** கட்டுக்கொடி, cocculus villosus.

**சுதறு,** நறுங்குறிஞ்சி, see குறிஞ்சி.

**சுதறுச்சு,** மஞ்சிபத்திரி, not identified.

**சுதாகரன்,** கருடன், Brahminikite; 2. சந்திரன், moon.

**சுதாகிருது,** கருடன், Brahminikite—Haliastar indus.

**சுதாச்சி,** see சுதர்ச்சி,

**சுதாதாளி,** கிச்சிலிக் கிழங்கு, orange root. Curcuma — Zedoaria.

**சுதாநிதிரசம்,** சுத்திசெய்த கெந்திப்பாதரசம். இத்துடன் சுவர்ணமாட்சிக பற்பம், அயபற்பம் சமஎடை திரிபலை கஷாயத்தினால் அரைத்து இரும்புப்பாத்திரத்தில் மாத்திரை செய்து இரவில் கொடுத்தால் இரத்த பித்தம் நீங்கும், a pill containing calcined iron, calcined gold pyrites, mercury and sulphur and prepared as per the text. It is given for Raktha pitha rogam — Haemoptysis Haematemesis, malaene Haematurea, Haemophilla and other bleedings.

**சுதாரு,** கடம்பு, Cadamba tree—Barringtonia racemosa.

**சுதி,** மலவாயில், the anus; 2. பெண், female.

**சுதித்தகடுருட்சாசியம்,** see செமுமலர்க் கொன்றை, அல்லது கொன்றை.

**சுதுகி,** சதுரக்களளி. see சுதர்ச்சி.

**சுதுப்புறுங்காறல்,** ஓர் காறல் மீன், a kind of bridal fish. Equula insidiarix, 2. மண்டைக் காறல் மீன், horse mackerel — Equula edentula.

**சுதும்பு,** ஓர் கடல் மீன், milk fish — Lactarius delicatulus.

**சுதுரச்சி,** see சுதர்ச்சி.

**சுதேசமருந்து,** நாட்டு மருந்து, indigenous medicine.

**சுதேச வைத்தியம்,** நாட்டுவைத்தியம், native treatment i. e. treatment according to the Medical science of this country.

**சுதேசவைத்தியர்,** நாட்டு வைத்தியத்தைக் கையாள்வோர், One practising native medicine.

**சுதேவநாகிதம்,** சாதிக்காய், nut meg.

**சுதை,** சுவை, taste; 2. பால்,milk; 3. பூந்தேன் honey from flowers, gathered from flowers 4. சுண்ணும்பு, lime; 5 மருந்து, medicine, 6. அமிர்தம், nectar; 7. வெண்மை. whiteness; தித்திப்பு, sweet; 8. பெண், female.

**சுதையம்,** சுண்ணும்புச்சத்து. Calcium.

**சுதோற்பத்தி,** பிள்ளை பெறுதல். giving birth to a child; 2. பிள்ளைப்பேறு, child birth.

**சுத்த ஆர்த்தவம்,** பெண்தத்துவம்; female harmone; 2. நாதம், ovum; 3, சுரோணிதம் கற்பமுண்டாவதற்கு காரணமாயுள்ள முயல் ரத்தம் போலவும் கொம்பரக்கு கஷாயம் போலவும் துணியில் கறை ஒட்டாததாகவு முள்ள ஆர்த்தவம், Menstrual blood which does not stain the cloth and looks as red as shell lac decoction.

**சுத்தகங்கை,** பனி குடத்துநீர், fluid of the amniotic sac - Liquor amni; 2. ஆறுவகை செயநீர், solvent water extracted from six salts; 3. பூநீறு. efflorescent salt of the fuller's soil; 4. சுக்கிலம், semen; 5. சுரோணிதம், ovarian fluid.

**சுத்தகம்,** திமிசு, East Indian rino tree — Pterocarpus marsupium.

**சுத்தகேசி,** தண்ணீர் மீட்டான் கிழங்கு, water root — Asparagus racemosus.

**சுத்தகேவலம்,** மூன்றுஅவஸ்தைகளில் ஒன்று one of the three degrees of consciousness.

**சுத்தகைதவம்,** பெருங்காயநாறி, a herbaceous plant called Persian asafoetida. Ferula persica; It is so named from its odour which resembles that of asafoetida.

**சுத்தக்கட்டி,** கலப்பற்ற பொன், வெள்ளி கட்டிகள் — ingots of pure gold and silver.

**சுத்தக்கரி,** இருந்தை carbon.

**சுத்தக்கழலை,** சாதாரணமாக உண்டாகும் கழலை, தீவிரமாக பரவாது, innocent tumour not malignant.

**சுத்தக் குளியல்,** அதிகாலையில் குளிர்ந்த சுத்த நீரில் தலைமுழுகல், Both taken at early hours with cold water.

**சுத்தசலம்,** சுத்தநீர், clean or pure water 2. தெளிந்த நீர், clear water crystal water; 3. சிறுநீர் அல்லது மூத்திரம், urine; 4. திராவகம், acid; 5. பனிநீர், dew water 6. நிறமும் சுவையும் மற்றதும், வண்டல் படியாததுமான நீர், அதாவது வாலைநீர். water without colour taste odour or importities — Distilled water; 7. see சுத்தகங்கை; 8 கடற்பாசிநீர், sea moss water considered as pure.

**சுத்தசத்துவடிவம்,** மாயா விருத்தி.

**சுத்தசாமிகம்,** திருவாத்தி, holy mountain ebony — Bauhinia tomentosa.

**சுத்தசித்தம்,** பரிசுத்தமனது, pure mind.

**சுத்தசிவம்,** See சுத்தகங்கை.

**சுத்தசுக்கிலம்,** சிலேட்டு மாதிக்கத்தினால் கருவிழிமேல் வலம்புரிச் சங்குபோல் வெண்ணிறமான படலத்தை யெழுப்புமோர் வகைக் கண்ணோய், an eye disease where in a white coating developes on the correa.

**சுத்தசுக்கிலரோகம்,** கருவிழிமேல் நோவில்லாமல் சங்கைப்போல் வெண்ணிறத்தை யுண்டாக்கும், an eye disease of the black portion characterised by painlees white spot on the black portion.

**சுத்தசுரம்,** பிறிதொரு கோளாறென்றுமில்லாது தனிப்பட்ட முறையில் வரும் சுரம், simple fever — primary fever — not secondary to any other disease and with out any complications.

**சுத்த சூனியம்,** முழுப்பாழ், complete vaccum.

**சுத்த சூனியவாதம்,** எல்லாம் கடைசியாக ஒன்றுமில்லை யென்ற வாதம், the doctrine of all exsisting things coming to nothingness — Nihilism.

**சுத்த செம்பு,** கலப்பில்லாத தாமிரம், pure copper.

**சுத்த சைதன்னியம்,** விளக்கமடைந்த அறிவு, pure spirit or intellect as distinguished from matter.

**சுத்தசோபை,** பரிசுத்தமான, aspetic.

**சுத்தஞானம்,** கன்மக்கலப்பில்லா மெய்யறிவு unadulterated spiritual knowledg.

**சுத்தஞானி,** பக்குவமடைந்த ஞானி, perfect wise man with spiritual knowledge.

**சுத்த தத்துவம்,** மூன்று தத்துவங்களில் ஒன்று, one of the three tathu was.

**சுத்த தாமிரம்,** கலப்பில்லாத செம்பு, pure copper.

**சுத்ததேகம்,** கருவிகரணாதிகள் இறந்து அறிவு அருள் வடிவாய் பார்வைக்குத் தேகம் தோற்றம் கைக்குப் புலப்படாது நிழல் சாயையும் கிடையாது, a body that cannot be felt and which gives no shadow.

**சுத்ததேகி,** வாதம், பித்தம் அல்லது சிலேட்டுமக் கூறுள்ளவுடம்பு, a person with one or the other of the three houmours predominating in the body.

**சுத்ததேன்,** தெளிய வைத்த தேன், clarified honey.

**சுத்தநதி,** தலைமூளையின் நீர், water of the brain.

**சுத்தநரம்பு,** புத்திக்குத் தெளிவையுண்டாக்கும் நரம்பு, the thing that causes clear intellect.

**சுத்தநீர்,** see சுத்தநதி, 2. மூளையின் நிணநீர், serum of the brain; 3. நன்னீர், fresh water.

**சுத்தபனிநீர்,** See சுத்தநீர், 2. பனிக்குடத்து நீர் amniotic fluid.

**சுத்தபுடம்.** உண்ணலிற் களைந்தெடுத்தது, removal of injurious substances from the articles of fare or irgredients of food; 2. முழுவதும் எரிந்து நீராகும்படி போடும்புடம், with cow dung cakes — a process in calcination in which substances are reduced to metallic calx.

**சுத்தப்பூர பதங்கம்,** இதனால் 21 வித மேகங்கள் போம். sublimate of sub chloride of mercury. a remedy for 21 Mega diseases.

**சுத்தபைரவம்,** சுரத்திற்குக் கொடுக்கும் ஓர் ஆயுள்வேத மருந்து, an Ayurvedic medicine for fevers.

**சுத்த போசனம்,** மாமிசமில்லாதவுணவு (சைவசாப்பாடு) Vegetarian diet.

**சுத்தப்பட்டினி,** முழுதும்பட்டினி, complete starvation.

**சுத்தமண், (உவர்மண்)** இது உபரசச்சரக்கு, fuller's earth. It is one of the natural substances contemplated in Siddhar's science.

**சுத்த மண்டூரம்,** இரும்பு சிட்டத்தை சுத்தம் செய்து தயாரிக்கும் புடமிட்ட செந்தூரம். இதனால் ஐவகை பாண்டு நோய்களும் ஆறு வகைச் சோபை நோய்களும் தீரும், a medicine of red colour prepared out of ferroso ferric oxide which cures five kinds of anemia and six varieties of anasarca.

**சுத்தமாக்கல்,** கோதில்லாமற் களைதல், to free from impurities — heterogenous matter or feculence to depurate.

**சுத்தமாயை,** மாயை, developed or absolute Maya. It is opposed to *அசுத்த மாயை* undeveloped Maya see *சுத்தவித்தை.*

**சுத்த மேகம்,** மூத்திரமானது கோமயத்தைப் போல் மஞ்சளாகவும், குழம்பாகவும் சர்க்கரையின்றி ஒரு நாளைக்கு 4 புட்டி இறங்கும் ஓர் வகை நீரிழிவு நோய் மேற்கண்ட மூத்திரத்தைக் காய்ச்சித் திரியிட்டுக் கொளுத்த எரியும், a kind of diabetes marked by high coloured and thick urine and possage of a large amonut of urine-nearly four bottles of urine a day—hot with no sugar. This urine is heated to a concentrated solution, and when a wick is immersed in this solution and ignited, it burns like a lamp.

**சுத்தம்,** பால், milk; 2. சுசி, cleanliness; 3. மூன்று அவஸ்தைகளிலொன்று, one of the three ie the third and the highest state of separate souls next to absorption; 4. புளிக்க வைத்தகாடி, acid fermentation of any article; 5. சூனியம், nothingness — vacuum; 6. see *சுத்தமாயை;* 7. கலப்பில்லாதது, pure, without any impurities or other substances.

**சுத்தம் பண்ணல்,** see சுத்தி செய்தல்.

**சுத்தரசம்,** சுத்தி செய்த ரசம், வாலைரசம், mercury obtained by sublimation; 2. பத்துவகை ரசச்சத்துகளில் ஒன்று இது சாரணைக்குதவும், கெவுன குளிகை யாகும், செந்தூரித்தால் வேதைக்குதவும், one of the ten kinds of quint essence of mercury of high potency used for animating mercurial pills for flying in the aerial regions and when calcined into a red oxide it will be useful in Alchemy.

**சுத்தரசாயனம்,** இரசாயனமுறை ஒன்றைப் பற்றியே சொல்லும் நூல், pure chemistry, a science trating only of chemistry.

**சுத்தரத்தம்,** நுரையீரலில் தங்கிச் சுத்தமடைந்து மறுபடியும் இருதயத்திற்கு வந்து சேரும் சிவப்பு இரத்தம், red arterial blood restored to heart after purification in the lungs.

**சுத்தரத்த விரணம்,** கொப்புள ரூபமாய் நடுவில் உயர்ந்து வலியின்றி மிருதுவாய் வழுவழுத்து, சிவப்பாயும் சில சமயம் கருப்பாயுமிருக்கும் ஓர் விரணம், இதுவே ரத்தக்கட்டி, a soft and painless ulcer in the form of boil with a red or black appearance and an elevation in the centre.

**சுத்தலங்கணம்,** முழுப்பட்டினி, Complete fasting; 2. வெறும் வயிறு, empty stomach.

**சுத்தலவணம்,** வாகடமுறைப்படி யாதொரு களங்குமின்றிக், காய்ச்சி யெடுத்தவுப்பு, salt boiled and purified according to the rules of medical science.

**சுத்தவல்லாதி எண்ணெய்,** சேங்கொட்டையை முதன்மையாகக்கொண்டு மற்றக் கடைச்சரக்குகளுடன் சேர்த்து அத்துடன் எள்ளு ஏரண்டம், இலுப்பை வேம்பு, புன்கு இவைகளின் எண்ணெய்களும், பசும்பாலும் எலுமிச்சம்பழச்சாறும் கலந்து தயாரிக்கும் ஓர் மருந்தெண்ணெய், இது, வாயு ரோகம், பீனசம்,சூலை, சொறி சிரங்குமுதலிவைகளுக்குக் கொடுக்கலாம், a medicated oil prepared with marking nut as the chief ingredient as per the text. It is given for skin diseases, and diseases of wind humour.

**சுத்தவாசிகம்,** தங்கரளி, அதாவது மஞ்சள் நிற அலரிப்பூ, yellow coloured oleander.

**சுத்தவாதக்கட்டி,** பிரசவித்து உடம்பு முழுவதும் பச்சைப் புண்போல் இருக்கும். பெண்களுடன் எந்நேரமும் உடம்பு நலியும்படி புணர்ச்சி செய்வதனாலும், உடம்பின் 14 வேகத்தை அடக்குவதனாலும், கருப்பகாலத்தில் அவபத்தியக் கேட்டினாலும், கருப்பையில் வாயுவானது அதிகரித்து இடுப்பில்

உந்தி முதல் யோனிவரை பொறுக்கமுடியாத நோவை யுண்டாக்கும் ஓர் வகைக் கட்டி. இது பக்கங்களில் குத்தலையும் நோவையும் உண்டாக்கி, சமுத்திரத் தவளையைப்போல் கருப்ப முகத்தை அடைத்துக் கொள்வதுடன் மாதாந்த ருது காலத்தில் அதிகரித்த வாயுவின் வேகத்தால் அல்குல் வழியாக ஊன் தண்ணீரைப்போல், சில சமயம் கருத்தும், மற்றக்காலங்களில் உதிரமாகவும் ஒழுகும் இயற்கையாகவே இக் கட்டி கரைந்து விழுந்தன்மையற்றதால் இதைச் சிலர் இரத்த குன்மக் கட்டி யெனத் தவறுதலாய்ச் சொல்வர், a kind of swelling generally mistaken for uterine tumour blocking the enterance to the mouth of the womb and there by causing obstruction to the free flow of menstruation. It is marked by an umbearable pain in the loins, sides and in the uterus, oozing of serum or dark blood from the vagina. It is said that the disease is caused (1) by constant and untimely intercourse with a woman recovering after delivery. (2) suppression of the 14 natural cravings. 3. failure of regimen of diet when pregnant.

**சுத்தயோன்**, மனதில் யாதொரு களங்கமுமற்ற யோகி, a yogi free from all impurities of the mind

**சுத்தவித்தை**, சிவதத்துவ ஐந்தினுள் ஒன்றாகிய சுத்த வித்தியாதத்துவம், அதாவது எப்போதும் சுகத்தையே அளிக்கும் ஓர் மாயை, a form of Maya with prepondarance of spiritual knowledge above tendency to work.

**சுத்தவிரணம்**, ஆறிவருவதற்குண்டான குணத்தைக்காட்டும் ஓர் விரணம், இது பார்வைக்கு மிருதுவாயும் ஊன் தண்ணீர் தவிரமற்ற வேறுவித ஒழுக்கில்லாமலும், சிவந்தும், சொறசொறப்பில்லாது வழவழப்பாயும் வலியற்றும் இருக்கும், healing ulcer. characterised by healthy granules and border.

**சுத்தவுபவாசம்**, see சுத்தப்பட்டினி.

**சுத்தவெள்ளை**, கலப்பற்ற வெள்ளை. pure white; 2. சுண்ணம்பு, lime.

**சுத்தன்**, நின்மலன், one with soul in its third or highest stage next to absorption; 2. முத்திபெறும் நிலையிலுள்ள ஆன்மாவுடையவன், one where soul is ready for liberation from births. c. f. சீவன்முத்தன்; 3. 18 மேகநோய்களுளொன்று, one of the eighteen Mega diseases.

**சுத்தாத்துவைதம்**, சீவாத்துமா பரமாத்மாவோடு இரண்டறக் கலப்பதனல் ஏற்படும் ஆனந்தநிலை, supreme bliss from inseparable union or the merging of individual soul with the universal soul.

**சுத்தாநந்தம்**, ஆனந்தருப சத்தி.

**சுத்தாவத்தை**, கன்மம் நீங்கிப் பிறவியற்று ஆன்மா சுத்தமாயிருக்கும் நிலை, purity of the soul after liberation from births due to being rid of Karma.

**சுத்தான்னம்**, பழைய அரிசியைத் தவிடு நொய் போகத் தீட்டி அரிசியாக ஆய்ந்து இளவெந்நீரிற் கழுவி, துணியிற் கொட்டி ஆறவைத்து எடுத்து அரிசிக்கு 3 பங்கு சலம் விட்டு கொதிக்கவைத்து முக்காற் பங்கு வெந்தவுடன் துழாவி வடித்து மறுபடியும் நெருப்பில் முழுதும் பக்குவமாகும் சமயத்தில் இறக்கிக்கொள்வதாம், இதனுல் முத்தோஷ நோய்களும் குடலைப் பற்றிய நோய்களும் குணப்படும், Cooked rice. It must be perpared as follows old rice must first be freed from broken rice, stones, paddy, husk etc. It must be washed and cleaned in luke warm water and spread on a clean cloth for some time. In a suitable earthern pot water three times the volume of the rice must be boild. The aerated rice must be added to this boiling water. When it is three fourth cooked, it must be olirred, and the vessel must be taken out of the fire and the rice (cooked) must be strained. Then again the vessel with the cooked rice must be put on fire which is not inflames but hot cinders. In a few minutes, the rice gets fully cooked, it is brought down.

**சுத்தி**, அரைப்பலம், half a pallam — one and half tolas. 2. தும்பிடு கிளிஞ்சில், white bivalve shell shining like silver. 3. சங்கு, Conch; 4. மாங்கிஷப் பொரியல், curries prepared out of meat as in சுத்திபூஜை. a worship in which meat preparations are offered to go dess—Sakthi (universal energy) 5. கரந்தை, iron weed; 6. ஈருள்ளி, onion; 7. நெய், எண்ணெய் சொட்டு சொட்டாக விழும்படி அமைத்த சிறு கரண்டி. a small spoon for dripping ghee or oil etc. over any thing; 8. தட்டுங் கருவி, hummer; 9. பரிசுத்தம், purification

**சுத்திகரம்**, சுத்தியாயிருத்தல், state of being pure or clean.

**சுத்திகெந்தி**, சிவப்புக்கெந்தகம், red sulphur.

**சுத்திகை**, இப்பி, bivalvular shell fish; 2. சிப்பி, pearl oyster; 3. அகல், a shallow dish

**சுத்திக்கிரம அவுடதம்**, உடம்பிலுள்ள அழுக்கை யகற்றும் வாந்தி பேதிகளை யுண்டாக்கும் மருந்துகள், emetics and purgatvies that tend to remove the inpurities from the system.

**சுத்திக்கிரமம்**, பதார்த்தங்களை வைத்திய நூற்படி சுத்தி செய்யும் முறை. process of purification of drugs.

**சுத்திசலம்**, அழுக்கற்ற நீர், pure water; 2. சுத்திசெய்த நீர், filtered water; 3. வாலை நீர்; distilled water; 4. மழை சலம். rain water.

**சுத்திசெய்தல்**, இரச கெந்தக பாஷாண வகைகள் பூமியிலிருந்து வெட்டியெடுக்கும்போது மண்ணுடன் கலந்தும் மற்றதாதுக்களுடன் சேர்ந்துமிருப்பதால் அவைகளை வாகட முறைப்படி அழுக்ககற்றல். getting rid of impurities as from ones of minerals and poisons which are generally found mixed with other substances. 2. வயிற்றைச் சுத்திசெய்தல், discharging of fecal maters from the bowel — defecation; 3. பொன் முதலிய உலோகங்களைப் புடமிடல், purifying or refining as of gold etc. by subjecting it to fire; 4. ஊதுதல். blowing of metals like silver - gold etc. to purify them; 5. வடிகட்டல், filtering or straining.

**சுத்தித்தல்**, see சுத்தி செய்தல்.

**சுத்திபண்ணல்**, see சுத்திசெய்தல்.

**சுத்திபிண்டம்**, பெண்கள் கருப்பிணியாயிருக்குங் காலத்தில் மாதருது தடைபடாமல் 10 மாதமும் வெளிப்பட்டுப் பிறந்த பிறந்த குழந்தை. தாய்க்கு ஏற்படும் மாதவிடாயினுல் யாதொரு கெடுதியுமேற்படாது கர்ப்பத்தில் இருக்கும் பிண்டம், the foetus in the womb or the child that is born to a woman who was having regular menses, during her period of pregnancy.

**சுத்திமுறை**, சித்த வைத்தியத்தில் கூறிய படி மருந்து சரக்குக்குத்தக்கவாறு நூலில் குறிப்பிட்டபடி செய்யும் கிரமம்; இது அடியிற்கண்டபடி பலவிதமாக ஏற்பட்டிருக்கும் அவையான:

1. உதாரணமாக இரசத்தை மற்ற சரக்குகளோடு சேர்த்துக் கல்வத்திட்டு அரைத்தல்.

2. கெந்தகமென்றால் அதை உருக்கி வெள்ளாட்டுப்பால் முதலிய சரக்குகளில் காய்ச்சிச் சாய்த்தல்.

3. இலிங்கத்தை முலைப்பாலில் கணக்குப் படி ஊறவைத்தல்.

4 மனோசிலை; சீலைகட்டி அவித்தல்; நிமிளை பொன்னிமிளையும் இப்படியே.

5 தாமிரத்தைத் தகடுதட்டி மருந்து பூசி உலைமுகத்தில் உருக்குதல்.

6 இரும்பை பொடியாக ராவிப் பழச்சாற்றில் ஊறப்போட்டுப் பிறகு அவித்தல்.

7. பொன் வெள்ளி புடத்தில் சுத்தி; இந்துப்பை வறுக்கச் சுத்தி. இப்படி பலவிதமாக ஏற்பட்ட சுத்திமுறை. all drugs must be purified as told in the text before converting them into medicine; the process of purification of drugs is variable according to the drug to be purified and medicine that is to be prepared, a few examples are given above.

**சுத்திரசுவாசம்**, காசம், asthma.

**சுத்திரபலகறை**, சமுத்திரத்திலுண்டான ஒருவித சோழி, a kind of gowri grown in the ocean.

**சுத்திலப்பரணி**, see ஏழிலைப்புன்னை.

**சுத்திலாட்டம்**, நாணல், reed.

**சுத்திவேண்டா மருந்து**, பாம்புகடி விஷத்திற்காகத் தயாரிக்கும் மருந்து; இதற்குச் சுத்திமுறை அநுசரிக்க வேண்டியதில்லை. The drugs given for snake bite do not require purification.

**சுத்திகரணம்**, சுத்திபண்ணுதல், see சுத்தி செய்தல்.

**சுத்தூரம்**, } கண்டங்காலி, yellow berriep
**சுத்துரு**, } night shade. Solanum jacquini.

**சுத்துருகி,** see சத்துரு.

**சுத்தோதகம்,** நன்னீர், pure water; 2. சுத்த நீர், clear crystal water; 3. நீராகாரம், cold rice water; 4. மழைத் தண்ணீர், rain water; 5. வாலை நீர், distilled water.

**சுத்தோபவாசம்,** முழுப் பட்டினி, Complete starvation.

**சுநந்தனுகிரகம்,** குழந்தை பிறந்த 2வது நாள் மாதம், வருஷம் சிசுவை அல்லது தாயை பிடிக்கும் ஓர் கிரகம்; இதனால் குழந்தைக்குப் பல் கடித்தல், வயிற்றுப்பல், கண்மூடல், எப் போதும் அழுகை ஆகிய இக்குணங்கள் உண்டாம். c. f. நந்தனுகிரகம். a disease that affects the child or the mother during the 2nd day, or month, or year characterised by bloating of abdomen, ceasreless crying, biting of teeth etc. It is said to be caused by some planet.

**சுநாரம்,** see அடைக்கலங்குருவி; 2. நாய்ப் பால், dog's milk; 3. பாம்பின் முட்டை, snake's egg.

**சுநாறி,** see சுநாறிப்பட்டை.

**சுநாறிப்பட்டை,** காய்ச்சற்பட்டை, pittosporum tetraspermum.

**சுநி,** பெண்ணாய், female dog—bitch.

**சுநிஷணன்,** See ஆரைக்கீரை.

**சுநீரம்,** சிவப்புக்கல், sardine; 2. நீலக்கல் blue gem. Tacinth.

**சுநுகி,** சதுரக்கள்ளி, square spurge.

**சுந்தர அக்கினிகுமார ரசம்,** அசீரணம் மாந் தம் முதலிய நோய்களுக்குக் கொடுக்கும் ஓர் ஆயுள்வேத மருந்து, An ayurvedic medicine given for indigestion etc.

**சுந்தரகேசி,** தண்ணீர்விட்டான் கிழங்கு, water root.

**சுந்தரத்தாது,** துத்தபாஷாணம், a kind of arsenic compound with white vitriol as an ingredient. A sparagus racemosus.

**சுந்தரநங்கை,** அரசமரம், peepul tree — Ficus religiosa.

**சுந்தரப்பொடி,** வாசனைப் பொடி, aromatic powder: 2. சிந்தூரப்பொடி, Calcined red oxida.

**சுந்தரப்பொன்மலை,** ஏம(கூட)மலை, mountain containing gold ore.

**சுந்தர மண்,** வாழை, plantain tree.

**சுந்தரமாது,** வெற்றிலை, betel leaf.

**சுந்தரமாமணி,** சூடாமலைக்கல், a mineral stone.

**சுந்தரம்,** கண்டங்கத்திரி, see சுத்துரு; 2. சூதபாஷாணம், an arsenical compound perhaps; Composing of mercury. 3. சிந் தூரம், red paint.

**சுந்தரரேகை,** கையில்காணும், ஓர்ரேகை; a line an the palm of the hand.

**சுந்தரவித்து,** ஓர் யுனானிச்சரக்கு, இதற்கு அசீங் என்று பெயர். இது கசகசாவைப் போல் வெண்மையான ஓர் விதை, an Uunani drug known as flasing seeds. It is white and very much resembles poppy seeds.

**சுந்தரானந்தர்,** இவர் சதுரகிரி மலையில் பஞ்ச தரு நிழலிலும் குகையிலும் யூகிமுனி, கொங் கணவர் இவர்களுடன் வசித்துவந்தவர். இம்மலையின் விசேஷத்தால் அகத்திய முனிவரும் சுந்தரானந்தரிடம் வந்து ஒரு லிங்கத்தைத் தாபித்து, பூசித்து வந்தார், சில நாள் சென்ற பிறகு சுந்தரானந்தர் அகஸ்தியரைக் கண்டு அவர் செய்த லிங்கபூசையைத்தான் செய்து வர கிருபை புரிய வேண்டுமெனக்கேட்க, அதற்கு அவர் சம்மதித்து அதன் இரகசியங் களைச் சுந்தரானந்தருக்கு உபதேசம் செய்து விட்டு சதுரகிரிப் பக்கத்திலிருந்து கும்பமலை க்குச் சென்றார். அகஸ்த்தியர் உபதேசத்த படி அந்த லிங்க பூசையைச் செய்து வந்த னர். அதனால் அந்த லிங்க மூர்த்திக்குச் சுந்தரலிங்கமெனப் பெயர் வழங்கலாயிற்று சட்டமுனிவரும் இவர் கூடவிருந்து பூசித்து வந்தவர். அந்த லிங்கத்திற்கு மகாலிங்கம் என்று பெயராயிற்று. அவ்விடத்து இடை யனை பச்சைமாலை தடுத்தாட் கொள்ளும் பொருட்டு மேற்படி மகாலிங்க மூர்த்தி சுந்த ரானந்தரை நோக்கி அனேக தவத்தோர்கள் தன்னையறிந்து தானே பரமம் என்று தன் னையே பூசித்து ஆத்மஞானத்தை அடைகி றார்களே நீர் ஏன் அப்படி செய்யக் கூடாது என, அதற்கவர் அகஸ்தியர் உபதேசத்தின் படி ஆன்மாவிடத்தே சிவபெருமான் பிரகா சிப்பார் எனப்பதிலளித்தார். இவர் தமிழ் நாட்டு சாதியைச் சேர்ந்தவர். போகரிடத்தி லும், சட்டமுனி இடத்திலும் சில நூல் முறை களை இவர் கேட்டுமிருக்கிறார். சிவநேசத்தில் சிறந்து இவரது பெருமை அளவிடற் பால தன்று, இவர் செய்த நூல்களாவன, வைத் தியத்திரட்டு, 1500 வைத்திய காவியம் 1000

வைத்திய சூஸ்திரம் 500. வகாரம் 200. ருது நூல் 110 அதித சூத்திரம் 104 வாத சூத்திரம் 100. விஷநிவாரணி 100. வாக்கிய சூஸ்திரம் 64, கேசரி 55 சுத்த ஞானம் 51, தீட்சா விதி 50, தண்டகம் 47, பூசாவிதி, 37 அதிசயகாரணம் 36 சிவயோக ஞானம் 32, முப்பு 25, சிவக்கியான போதம் 16, இதுவு மன்றி இவர் செய்த மற்றும் பல நூல்களும் உள்ளன வெனக் கேள்வி, சோதிட நூல்களும் இவர் செய்திருப்பாதாகத் தெரிகிறது.

இவர் காயாதிகற்பங்கொண்டு வெகுகாலம் இருந்த சித்தர், இவர் சீஷவர்க்கத்தாருடன் சேர்ந்து ஐராவதி மலையருகே சிலகாலம் இருந்து ஆற்றோரத்தின் பக்கம்சமாதி தேடி அதில் பத்து வருடமிருந்து வெளிவந்து சீஷனாகிய புத்திரானந்தருக்கு உபதேசம் செய்து வந்தவர் சிக்கிந்திரா மலையினுச்சியில் வசித்த நவகண்ட ரிஷியின் பேரன் ஓர் சிறந்தஞானி இவர் பூமியில் வெகுசித்துகள் ஆடியவர், தேசமெல்லாம் சுற்றிவந்த சொரூப சித்தன் உலகத்தில் பெருமையாக வாழ்ந்த சித்தர் சீனபதி சென்று காலாங்கி நாதரைத் தரிசித்து தமது மகிமையை அவருக்குக் காட்டி மேக மண்டலத்தில் வாசியோகம் பூண்டு ஆகயத்திற் சென்று மேகத்தோடு இணைக்க மாகி மேகம் செல்லும் மார்க்க மெல்லாம் தாம் சென்றும் காட்டினர், பிறகு காலாங்கியிடம் உபதேசம் பெற்றுத் தம்பதிக்கு ஏகினர்.

Sundaranthar lived along with Ughi and Kongaravar in the mountain called Sathuragiri under the shade of Panchathara. On account of the greatness of the mountain Agasthiar also came to live there. He established a Phallas ( lingam ) and performed rituals daily One day Sundaranthar approched him and requeted permission to worship the Phallus. Then Agasthiar not only granted his wish but taught him the secrets of performing the rituals and left the place to live at a neighbouring mountain called Kumbamalai. Sundaranthur performed the daily rituals and the Phallus came to be known as Sundaralingam Sattamuni also joined him in the worship, and the Phallus came to be known as Mahalingam.

One day God appeared and asked him why he did not like most, other hermits workship the spirit in himself and obtain the spiritual wisdom he replied as Agastheir had tought him that. Siva would manifest in him.

He is a Tamilian and disciple of Bogar and Sattamuni. To his credit there are several works in Medicine, Alchemy. Yoga and Philosophy.

There seemed to have lived another Sundaranthar the grand son of Navakanda rishi who lived on the top of Secindra mountain. He took Karpam and lived for many years. He lived with his disciples on the bank of Iravathi river on the Iravthi mountain. There after being in Samathi for 10 year, he came out and tought his disciple Puthira anthar. He was a man of wisdom and possessed super natural powers He travelled in the air and visited many places. He was a great Siddar who lived in high estimation of others. In China he met kalanginather and exhibited his prowers. Admiring him, Kalanginather gave him further spiritual inspiration Sundaranthar moved among the clouds, and established one can live there.

**சுந்தரி,** மூஞ்சூறு. musk rat; 2. சிறுசெருப்படை; இது அறுத்த வயலில் முளைத்திருப்பதைக் காணலாம், a low spreading plant found grown in rice fields immediately after hervest—Glinus latoides; 3. பிண்டம், fetus; 4. பெண், woman; 5. சொன் முந்திரி மரம், looking glass tree. Haritiera littoralis; 6. அழகுடையவள், beautiful woman.

**சுந்தரிசுட்டது,** இந்துப்பு, rock salt.

**சுந்தரிபலா,** சிறுவிடுகொள். இது நீரைக் கட்டும், an unknown plant capable of freezing water.

**சுந்திரன்,** கிச்சிலிக்கிழங்கு, round white zedoary — Curcuma zedoaria.

**சுந்நத்து,** விருத்த சேதனம், Circumcison.

**சுந்நை,** விந்து, semen.

**சுபபுட்பம்,** கிராம்பு. clove.

**சுபகம்**, see சுபகபுட்பம்.

**சுபகரிகம்**, பவளம், coral.

**சுபகலவம்,** *சீத்தா,* Custard apple — Aona squamosa.

**சுபகாரசம்**, கொன்ணை, *(கொன்றை)* Cassia tree

**சுபகேசாதி**, இருள்விடு செடி, which see

**சுபக்கிரகம்,** நல்ல கிரகம், புதன், வியாழன், வெள்ளியாம், good planets — Mercury, Jubiter, Venus.

**சுபங்கே**, வறட்சுண்டி, a species of sensitive plant — Mimosa tripuetra.

**சுபசன்னி,** *துணியை, துண்டுதுண்டாகக் கிழிப்பதும், எதிர்ப்பட்டவர்களைத் துப்புவதும் மூத்திர மலத்தைப் புசிப்பதுமாகிய குணங்களையுண்டாக்கு மோர்வகை சன்னி,* a kind of delirium in which the patient is proned to mischievous activities such as spitting a persons. tearing of clothes into pieces, taking internally excretions, urine and facces.

**சுபச்சம்,** *சுத்தமுள்ளவன், man of purity; 2. சௌக்கியமுள்ளவன்,* man of health.

**சுபஞ்சு,** கடற்பாசி, Sea moss, ceylon moss; 2, கடற்காளான், sea sponge.

**சுபதம்,** *அரசமரம்,* peepul tree — Ficus religiosa.

**சுபதினம்**, நல்லநாள், auspicious day.

**சுபத்தி**, பவளப்புற்று பாஷாணம், a kind of *arrenic.*

**சுபத்திரம்**, வெள்வேல், white acacia. Acacia ferrugina; 2. *காட்டாத்தி,* Bauhnia purpurea; *3.* see *சரபாரி கந்தச் சுபத்திரம்.*

**சுபத்திரை**, *கராம்பசு கறுப்புப்பசு*, black cow.

**சுபமிருத்து**, நல்லசாவு, happy death ;2. துன்பம் அல்லது மரண வேதனை யில்லாமலே சாதல், dying without sufferings or pangs of death.

**சுபம்,** *காற்று,* wind; 2. வெண்மை, whiteness; 3. மங்கலம், sacredness.

**சுபரணி**, See ஏழிலைப்புன்னை.

**சுபரி**, பசு, cow.

**சுபலி**, *கள்,* fermented liquor,

**சுபலோகம்**, சுத்தி செய்த உலோகம், purified or rifined metal.

**சுபவாதனை**, ஞானுனுபவம், spiritual enjoyment; 2. ஆத்மானந்தம், blissful experience of soul.

**சுபவிதாசம்**, பரசிசுரம், அதாவது வயிற்றில் கருத்தரிக்கும் போதே மற்றொரு கருதரித்தல் அதாவது இரட்டைப்பிள்ளை யுண்டாயிருத்தல், the fecundation of a woman already pregnant, ie the fertilisation in the same uterus of two ova formed at different menstrual periods — Super foetation.

**சுபன்னன்**, கருடன், brahmin kite; 2. சேவல், cock fowl.

**சுபாங்கி,** அழகுள்ள அங்கமுடையவள், woman endowed with beautiful organs.

**சுபாங்கை**, *அழகுள்ளவள்* beautiful woman.

**சுபாசுபச குணங்கள்**, வைத்தியன் நோயாளியிடம் போகும் போது, நேரும் கெட்ட, நல்ல சகுணங்கள்; கெட்டதாயிருந்தால் போகாமல் திரும்புவதே நலம் நற்சகுணங்கள் கண்டால் நோய் குணப்படு மென்பதற்கு குறி, முதலாவது கெட்ட குணங்கள் அவையாவன:

1. நாற்றமுள்ள குப்பைவண்டி, மாதவிடாய்ப் பெண், மலங்கழித்தல், இறைச்சி, மீன், கருவாட்டுக்கூடை, சேற்றுப்புழுதி எருவடிக்கும் வண்டி முதலியன குறுக்கிடல்.

2. உப்பு பாசிப்பயிறு, எள்ளு முதலிய கருப்பு தானிய மூட்டை அல்லது அவைகள் அடங்கியவண்டி.

3. தைலம், எண்ணெய்க்குடம், நெய், வலை உரி நெருப்பு முதலியவைகளைப் பார்த்தாலும்.

4. சண்டை, கூச்சல், அழுகை, திட்டல் தும்மல் முதலியவையாலும்.

5. சண்டாளன், சந்நியாசி, சிப்பாயி, கைம்பெண், ஒற்றைப் பிராமணன், அம்பட்டன் இவர்களை எதிர்பட்டாலும்,

6. பூனை, குரங்கு, காக்கை, ஆந்தை கத்தல, நரி ஊளையிடுதல், நாய்ச்சண்டை, கலகம் அபாயம் முதலியவைகள்.

7. குதிரைச்சவாரி, நோயாளிப் படுக்கை, சில செந்துகள் வலமிடப் போதல், ஆண் யானை, ஆண் கோவேறுகழுதை, கருப்பு நாய் இவைகள் எதிரிடல்.

அபச குணம் அதிக விரிவாயினும் வைத்திய விஷயத்திற்குத் தகுந்தவைகளே மாத்திரம் இவ்விடம் சொல்லப்பட்டது. நல்ல சகுனங்கள், புருஷர்கள் இடமிருந்து இடம்போதல், பிணம் காணல், கல்யாண வைப்பவங்கள், கள்ளுக்குடம், கன்னிகை நரிவலமிடல், மேளசத்தம், கருடதரிசனம், கழுதைக்குரல், பசு, குடை, உத்தமயோகி இவைகள் எதிர்ப்படுதல்.

Good and bad omens that should be observed when then the physician starts to go and see the patient. If bad omen occurs, he must not visit the patient. The bad omens are :

1. A woman in menses, any body carrying flesh, fish, dry fish, filth or mire cart carring rubbish or filth or manure coming in the opposite direction.
2. Cart carrying salt or sesame, or green gram coming in the opposite direction.
3. Vessel containing oil or medicinal oil, ghee, fire appear in front.
4. Fighting, quarrel, shouting crying, sneezing, accusation if any of them is heard.
5. Hermit, sepoy, widow single brahmin. Crimnal barbar. If any of them come in the opposite direction.
6. Hearing Cooling of owls, crying of fox, cat monkey, crow, fighting of dogs.
7. Man on horse back, male elephant, male donkey, black dog sick bed coming in the opposite direction, cats, fowls etc. crossing the path from right to left.

Good omens are. 1. Males or fox crossing the path from left to right. 2. Females crossing from right to left; 3. Seeing a dead body, or the marriage procession or brahmin kite: 4. Vessel containg toddy, cow maiden conuing in the opposite direction. 5. Hearing the sound of drum or braying of the ass.

**சுபாதி**, நரம்பிசிவு, spasm; 2, ரத்தநாளத்தின் குழாயின் விரிவு, dilation of as blood vessel at a certain stage when it is considered as a dangerous ailment.

**சுபாதிட்டானம்**, See சுவாதிட்டானம்.

**சுபாலிகை**, அருப்பு, oven.

**சுபாவகாசத்தி**, பார்ப்பைமரம், அல்லது வன்னிமரம், Suma tree — Prosopis spicigera.

**சுபாவகுணம்**, இயற்கைக் குணம், natural disposition.

**சுபாவசம்பந்தம்**, இயற்கையிலே ஒன்றுக்கும் மற்றொரு வஸ்துவுக்கும் ஏற்ற சம்பந்தம் (in chemistry) natural offinity imperturbed mind engrossed in one's true spiritual dispensation of Nature.

**சுபாவ சித்தம்**,

**சுபாவசித்தி**,

**சுபாவநடை**, இருதயம், நாடி, மூச்சு முதலியவைகளின் கதி அல்லது போக்கு. Natural movement of organs like heart, lungs etc. 2. ஒருவனது இயற்கையாகவேயுள்ள நடை usual mode of walking.

**சுபாவநோய்**, உடம்பில் இயற்கையாகவேயமைந்த நோய், a morbid state of spontaneous origin in the system — Idiopathy.

**சுபாவமாய்ப்போதல்**, இயற்கையாய்விடல், becoming accustomed or habituated.

**சுபாவமுத்தி**, பிறப்பினின்று ஈடேறல், pertect liberation from birth.

**சுபாவம்**, இயற்கை, Nature.

**சுபாவவாதி**, மஞ்சளும் சுண்ணும்பும் சேர்ந்தால் எப்படி சிவப்புண்டாகிறதோ, அது போல் சுக்கிலம் சுரோணிதம் சேர்ந்த விடத்தில் அவயவங்கள் உண்டாகின்றன. ஆகவே, சகத்காரணத்திற்கு வேறே தெய்வமில்லை யென்று வாதுரைப்போன்,—Naturalist who does not believe in God.

**சுபாவிகம்**, 1. இயற்கைக் குணம், in herent quality, natural disposition; 2. இயற்கைத் தன்மை, natural state.

**சுபவிதாசம்**, பரசிசுதம், super foetation.

**சுபிரோதி**, வஞ்சி, common rattan of South India calamus rotang.

**சுபிரோதிகம்**, See சுபிரோதி.

**சுபிலம்**, வெள்ளி, silver.

**சுபுகம்**, மோவாய், chin.

**சுபுட்பம்**, கிராம்பு, clove; 2. பவளம், coral tree; 3. பவள மல்லிகை, night Jasmine, Nyctanthes —arbortristis.

**சுபுடனம்**, உடம்புறுப்பின் மூலவஸ்து, the rudimentary substance from which cells, tissues and organs are formed embryonic tissue Blastema.

**சுபை**, மூங்கில், bamboo—Bambusa.

**சுபோதம்**, மெய்ஞ்ஞானம், true wisdom; 2 சுயஞானம், self or natural wisdom.

**சுப்தசிவா**, நாக்கு மருத்துப் போதல், be numbed tongue; 2. நாக்கு செயலற்றுபோதல், Paralysed tongue.

**சுப்தபாதம்**, பாதம் செயலற்றுப் போதல். paralysed foot.

**சுப்தம்**, உறங்குதல், sleeping, dozing; 2. ஆட்டல், shaking,

**சுப்தவாதம்**, ஓர்வகை வாதநோய், a kind of rheumatic disease.

**சுப்திசாரம்**, சமுத்திரத்திலுண்டான சுத்திர பலகறையின் உப்பு, salt of a kind of gowri grown in the ocean.

**சுப்திபிண்டம்**, See சுத்தி பிண்டம்.

**சுப்பல்** } **சுப்பி** } மருந்தெரிக்கும் சுள்ளி, twigs for heating or burning medicine.

**சுப்பிகம்**, மாவிலிங்கு, lingam tree crataeva religiosa.

**சுப்பிடதகம்**, கூகை நீறு, the flour of curcuma angustifolia.

**சுப்பியம்**, வெள்ளிலோத்திரப்பட்டை, lodra bark; 2. விளாம்பட்டை, wood apple bark; 3. பாம்பு கொல்லி, snake killer. Ruta graveolens; 4, மாவிலங்கப்பட்டை, Bark of lingam tree.

**சுப்பிரகம்**, வெள்ளி, silver.

**சுப்பிரசாரம்**, முதியார் கூந்தல், sita's thread convoloulus tridentatus.

**சுப்பிரசுதை**, காட்டெருமைப்பால், திருக்கள்ளிப்பால், milky juice of Euphorbia tirucalli.

**சுப்பிரதட்டம்**, அதிமதுரம், liquorice root.

**சுப்பிரத்திட்டம்**, அத்திமரம், fig tree — Ficus indicus.

**சுப்பிரதிகம்**, நல்ல அவயவங்களுடையது. being endowed with good organs; 2. கூர்மை அறிவு, keen intellect; 3. மிக்க ஒளி, great lustre.

**சுப்பிரமணி**, வச்சிரம், glue மரவைரம்

**சுப்ரமணியமூலம்**, முருகரை உபாசிக்கும் மந்திரம், appropriate mantrains for workship of God Murugan: 2. மிளகுவேர். pepper root.

**சுப்ரமணியம்**, மிளகு, black pepper.

**சுப்பரமதுவா**, கூகை நீறு, malabar root flour of curcuma root.

**சுப்பிரமேகம்**, ஓர் வகை மேகநோய், இதில் மூத்திரம் கோமயம் போலிறங்கும், பால் நாற்றமடிக்கும், a variety of venerial disease where in the urine appears like cow's urine and smells like milk.

**சுப்பிரம்**, 1. வெண்மை, whiteness; 2 சந்தனம், sandal wood; 3. வெள்ளி, silver; 4. கருடப்பச்சியின் குணம். the quality of a medicinal green stone — beryl; 5. மிகுந்த ஒளி, great lustre; 6. தண்ணீர் water.

**சுப்பிரயோகம்**, ஓர் பஞ்சபாணவஸ்தை ஓர் கமாவஸ்தை, அதுபற்றியே பேச்சும் நினைவுமாயிருத்தல், thinking and taking of the person loved one of the five effects of love a condition of love affected person.

**சுப்புரா**, சருக்கரை. sugar.

**சுமங்கை**, See ஆடுதின்னுப்பாலை; 2. வறட்சுண்டி, sensitive plant Mimosa triquetra.

**சுமஞ்சரி**, துளசி, holy basil — Ocimum sanctump.

**சுமதாகம்**, சிற்றகத்தி common, sesban. Sesbania aegyptiaca.

**சுமதாசா**, செம்பை, foreign sesban Parkinsonia aculeata.

**சுமதி,** பேராமல்லி, long tubed Arabian Jasmine Jasminum sambac; 2. நற்குணன், man of good qualities; 3. நற்புத்தியுடையோன், man of intelligence.

**சுமம்,** பூ, flower; 2. கடம்பு, cadamba tree.

**சுமரணம்,** சுவர்ணை உணர்ச்சி, sensation.

**சுமரி,** பெண்கள் யோனி உதட்டுக்கு மேல் காணப்படும் இலிங்கவடிவமாயுள்ள நீண்ட உறுப்புப்பாகம், இது பெண் குறியில் முன் பாகத்திலுள்ள நரம்புப்பகுதி, an organ of the female homalogus with the penis of the male. It is a small elongated erectile body at the anterior of valva cletoris.

**சுமரிக்கசிவு,** சுமரியில் ஊறும் திரவம், smegna clitoridis

**சுமரிக்கவசம்,** சுமரியின் முன்பாகம், prepuce of the clitoris.

**சுமரித்தாபிதம்,** பெண்களின் யோனி லிங்கத்தின் அழற்சி, clitoritis inflammation of the clitoris.

**சுமரியெழுச்சி,** சுமரி அடிக்கடி விரைத்தல், persistent erection of clitoris — clitorism.

**சுமலி,** கள், toddy.

**சுமனசம்,** பூ, flower.

**சுமணு,** சிறுசண்பகம். small sampank flower. see சுரபி.

**சுமாக்,** (Hina) பசையுள்ள ஓர் மரம், Sumach — Ahus genus.

**சுமாரகம்,** நினைப்பு, thought.

**சுமாரி,** சிறுபுள்ளடி; which see.

**சுமார்,** வலி அல்லது நோய்க்குறைவு, mitigation or decrease of pain or suffering or of any symptom or condition in disease.

**சுமாலி,** see சுமலி.

**சுமி,** செம்மரம், Soymida febrifuga.

**சுமித்திரி,** சங்கினி சாதிப்பெண், the third and most libidinous class of women described in the erotic science.

**சுமிருதம்,** பலாவிளி, see விழுதி.

**சுமிருதோதாரு,** தேவதாரு, deodar tree.

**சுமிர்தம்,** நொச்சிலி, Vitex negunda; 2. see உகா; 3. ஈருள்ளி, onion; 4. காட்டு முருங்கை, which see.

**சுமிர்த்தம்,** உதிரிமாரி, which see.

**சுமுகம்,** கஞ்சாங்கோரை, see சரச்சுமுகம். 2. துளசி, holy basil.

**சுமுத்திரா கற்பூரம்,** சுமுத்திரா தீவில் தயாரிக்கும் கற்பூரம், Sumutra camphor.

**சுமைத்தயிர்,** ஆடைத்தயிர், Curd with cream. 2. கட்டித் தயிர், solid curd.

**சும்பகம்,** ஊசிக்காந்தம், magnet attracting needle; 2. காந்தக்கல், load stone; 3. இரும்புச்சலாகை, iron probe; 4. தீத்தட்டிக்கல், fire stone.

**சும்பல்,** கடம்பு, white Indian oak — Baringtonia racemosa; 2. முத்தஞ்செய்தல், act of kissing.

**சும்பனம்,** ஓர் சுரதலீலை; பெண்களின் யோனியின் மணியை நாவால் வருடல்; இதனால் பெண்களுக்கு உணர்ச்சி ஏற்பட்டு நாதஞ் சுழலும்; முத்தமிடுகை, சப்புகை, இதழ் முதலியவற்றைச் சுவைத்தல், (In erotic science) a pervert act in the sexual congress. In this the clitoris is licked with the tongue for purposes of exciting a women to bring about the discharge of semen mulicbre—Cunnilingus. 2. நாயகனும் நாயகியும் தலைமாறி ஒருவரை ஒருவர் குறியை நாவினால் சுவைத்துக் காமநீர் பெருகும்படி செய்தல், man and woman sucking the genitals of each other; 3. முத்தமிடுகை, Kissing, 4. சப்புகை, sucking 5. இதழ் முதலியவற்றைசுவைத்தல் sucking lips etc.

**சும்பன்,** சும்பனம் செய்வோன். a sexual pervert who licks the vulva Cunnilinguist.

**சும்பிதம்,** இரண்டு உதட்டினாலும் நெருக்குதல் see சும்பனம்.

**சும்பிதகரணம்,** see சும்பனம்; a made of copulation.

**சும்பித்தல்,** சப்புதல், sucking; 2. முத்தமிடுதல், Kissing; 3. வாடல், withering.

**சும்புதல்,** வாடி சுருங்குதல், withering

**சும்புளித்தல்,** பேரொளியால் கண் கூசுதல். clazling of the eyes.

**சும்புள்,** கடம்பு, which see.

**சும்மா,** அடிக்கடி, often, repeatedly; 2.காரணமின்றி, without cause; 3. சாதாரணமாக, சும்மாயிருக்கும்போது, casually; 4. இயல்பாக naturally; 5, தொழிற்படாமை, being inactive; 6. மௌனம், silence.

**சும்மி**, பெருங்குமிழ், இதன் வேர் தசமூலத்தொன்று, gmelina arborea.

**சும்மை**, ஆவாரை. tanners Cassia — Cassia auriculata; 2. நெற்பொறி, fried paddy; 3 ஆளிவிதை, lin seed.

**சும்மோகம்**, பெருலவங்கப்பட்டை, Cimamomum tamala.

**சும்மோதகம்**, கொழுக்கட்டைத் தேக்கு, இதுவே கொள்ளிக்கட்டைத் தேக்கு, bastard teak. Premna tomentosa.

**சுய**, இயற்கைக்குரிய, natural: 2. சுபாவத்திற்தரிய, idiopathic.

**சுயகுணம்**, சுபாவகுணம், natural disposition.

**சுயசி**, குருஞ்சூலி, அல்லது அகச்சூலி, Toon tree — cedrela. toona.

**சுயசிகிச்சை**, தானே பரிகாரம் செய்து கொள்ளுதல், self treatment — Autotheraphy.

**சுயதீபகம்**, நீலச்சொலிப்பு, the property of certain bodies especially or gamic fluids and solutions manifest when irradiated emitting a blue ray — Fluorescence.

**சுயத்தங்கம்**, பிறவித்தங்கம், natural gold as opposed to வைப்புத்தங்கம், alchemic gold.

**சுயத்தேன்**, கலப்பில்லாத் தேன், pure honey.

**சுயநாசம்**, தற்கொலை, suicide.

**சுயநோய்**, சுபாவ நோய், idiopathic disease.

**சுயபவம்**. இயற்கைக்குணம்; சுபாவக்குணம், idiosyn crasy.

**சுயப்பால்**, தண்ணீர் கலக்காத தனிப்பால் unadulterated pure milk.

**சுயப்புணர்ச்சி**, தானாகவே செய்துகொள்ளும் புணர்ச்சி, அதாவது முட்டிமைத்துனம், self pollution. Masturbation — Onanism.

**சுயமக்கினி**, மந்த முதலான நோய்களைக்கண்டிக்குமோர் மருந்து, a medicine which relieves indigestion and loss of appetite; 2. ஓர்வகைச் செந்தூரம், see சுயமக்கினி செந்தூரம்,

**சுயமக்கினிகுமாரன்**, அகஸ்தியர் செந்தூர 300ல் சொல்லியுள்ள மருந்து, a preparation of medicine contemplated in Agastya's Chendooram 300.

**சுயமக்கினிசெந்தூரம்**, அய அரப்பொடியோடு காந்தம், கந்தகம், இரசம், மனோசிலை தனித்தனியே தூள் செய்து பிறகு ஒன்று சேர்த்து கற்றாழை சாற்றாலரைத்து ஒரே வில்லையாக தட்டி உலர்த்தி ஓட்டிலிட்டுச் சீலைமண் செய்து புடமிட்ட செந்தூரம், இதனால் வயிற்றுப்பொருமல், அசீரணம் அக்கினி மந்தம் போம், Purified iron filing, magnet, mercury, sulphur, red orpiment all five must be ground with aloe juice, and subjected to fire as per rules of calcination. The resulting red powder is given for indigestion, flatulence etc.

**சுயமக்கினிமாத்திரை**, வாத அஜீரணத்திற்காகக் கொடுக்கும் ஓர் மருந்து மாத்திரை, a medicinal pill prescribed for indigestion arising from flatulence.

**சுயமருந்து**, கலப்பில்லாத மருந்து, pure medicine. 2. உரித்தான மருந்து, specific medicine.

**சுயம்**, கலப்பற்றது, unadulterated.

**சுயம்பாகம்**, தானாகவே தன்கையாற் சமைத்துக் கொள்ளல், self cooking.

**சுயம்பாகன்**, சவர்க்காரம், fuller's earth soap.

**சுயம்பாகி**, See சுயம்பாகன்.

**சுயம்பாசி**, இயற்கைப்பாசி, lichen,

**சுயம்பான**, இயற்கையான, natural.

**சுயம்பி**, நேயமரம், an unknown tree.

**சுயம்பு**, தானாய் உண்டாதல், produced or effected by nature — Natural.

**சுயம்புச்சரக்கு**, இயற்கைச்சரக்கு, natural drugs as opposed to artificial drugs (செயற்கைச் சரக்கு.)

**சுயம்புச்சரக்கைச் சுண்ணமாக்கி**, } See இலவண பாஷாணம்.

**சுயம்புத்தங்கம்**, இயல்பாகவே பூமியில் விளையும் தங்கம், தானாகவே உற்பத்தியாகும் தங்கம் natural gold.

**சுயம்புருவண்டு**, இரசம், mercury.

**சுயம்புலிங்கம்**, ஈசனுப்பு, which see; 2. பளிங்கு, crystal; 3. தானேயமைந்த லிங்கம், self produced Phallus.

**சுயரசம்,** பச்சை அல்லது உலர்ந்த மூலிகைகளின் வேர், பட்டை, இலை, பூ, விதை முதலியவைகளைத் தண்ணீரில் ஊறப்போட்டு இடித்து வடித்த ஊறற் கஷாயம், the water in which the root, bark. leaf, flower fruit seed either fresh green or dried are allowed to soak and then extracted after filteration — cold infusion.

2. மேற்கண்ட சரக்குகளைப் பச்சையாகவே தண்ணீர்கலக்காமல் இடித்துப்பிழிந்து வடிக்கும் இரசம், the juice extracted from fresh green plant after pounding and expressing them and straining it through a thin cloth.

3. மூலிகைச்சரக்குகளைத் தண்ணீரில் ஊற வைத்து, அதற்கு காட்டாத்திப்பூ சேர்த்து புளிக்க வைத்து வடித்த ஆசவம், a kind of medicinal extract which is rendered less strong than the fluid extract as mentioned in No. I & 2.

4. மூலிகைச் சரக்குகளைச் சாரயம் அல்லது காடியிலூற வைத்து வடித்த சத்து, an extract or solution of the active principles of drugs or herbs whether green or dry in proportional spirit or alchohal — Spirituous or alchoholic tincture.

**சுயலோகம்,** இயற்கையாக அகப்படும் உலோகம், native metal.

**சுயவசனுதம்,** கருவழிக்குமியற்கை குணம் அமைந்த மருந்து, specific abortive.

**சுயவதை,** தற்கொலை, suicide; 2. சுயநாசம், self destruction.

**சுயவல்லியுப்பு,** ஆறுங்காய்ச்சல் வெடியுப்பு, nitre boiled and purified six times according to the process prescribed in Siddhar's science.

**சுயவியாதி,** சுயநோய், peculiar. temperament — Idiosyncrasy; 2. இயற்கை நோய், natural disease as opposed to acquired disease.

**சுயவெள்ளி,** சுத்தவெள்ளி, pure silver.

**சுயிரசம்,** குசப்புல், kuse grass or sacrificial grass Eragrostis — cynosuroides.

**சுயிலகரி,** மருளூமத்தை, a kind of datura, see ஊமத்தை.

**சுயோகி,** கல், toddy — Palm wine.

**சுயோதிஷ்பதி,** சிறு வாலுளுவை, small chintoo. Celastrus paniculata.

**சுயோநாகம்,** பெருவாகைவேர், root of sirissa tree—Mimosa sirissa,

**சுரகணரோகம்,** பிறவி குற்றத்தினால் குழந்தைகளுக்குக் காணும் சுரம், chronic fever of children due to congenital causes.

**சுரகரகாரி,** காய்ச்சலை போக்கு மருந்து, a remedy that dispels fever — Febrifuge.

**சுரகரி,** பேய்த்தும்பை, devil toombay — Leucas linifolia.

**சுரகாஞ்சிமூலி,**

**சுரகாமலிகம்,** செருந்தி, golden champak ochna squarrosa or O. lucida.

**சுரகுயிலம்,** பிசின், gum.

**சுரகேசரிக்குளிகை,** தோஷ சுரத்திற்குப யோகிக்கும் மாத்திரை, pill used for fevers of children.

செய்முறை; செஞ்சந்தனம், விடை 5 கோரோசனம் விடை 2½ ஏலரிசி, இலவங்கம், அதிமதுரம், பேரீச்சு, இலுப்பை, நன்னாரி, தாளிசபத்திரி, தேவதாரம், மாசிக்காய், ருத்திராட்சம், முந்திரிகை, ரோகணி வகைக்கு விடை 1, இடிக்க வேண்டியதை இடித்து, தூள் செய்து கல்வத்தலிட்டுப் பன்னீரால் 1 சாமம் அரைத்து குங்குமப்பூ 1 விடை சேர்த்து இளநீர் விட்டரைத்துக் குன்றியளவு (மாத்திரை) செய்து உலர்த்து எடுக்கவும், அனுபானம் தேன். இஞ்சி சுரசம், இருவேளை கொடுக்கவும் புளி ஆகாது. A pill containing red sandalwood, saffron and other bazar drugs prepared according to the text is given for all fevers in suitable vehicles such as honey, ginger juice etc.

**சுரகை,** சுண்ணும்பு, slaked lime; 2. வசம்பு sweet flag Acorus calamus.

**சுரகோசுவரூபம்,** உருத்திரனுடைய கோபாக்கினியில் உற்பத்தியான கோபாவேசமுள்ள புருஷன், இவன் பயங்கரமான உருவத்தையும் பலத்தையும் உடையவனுகி உலக நாசனத்திற்காகப் பிறந்தவன், இவன் ஆவேசந்தான் சுரம் எனப்படுவது, இச்சுரம் என்னும் புருஷன் எல்லா மனித தாவரசங்கம

மான சகல வஸ்துக்களிலும் வெவ்வேறு பெயர்களால் விளங்குகிறான், இவன் முக்கியமாய்ப் பிராணிகளின் உற்பத்தி காலத்திலும் முடிவு காலத்திலும் தோன்றுகிறான், இவனது வேகம் மனிதர்க்கல்லாது வேறு பிராணிகள் சகிக்க முடியாது. a person born from the anger of Rudra. He has inense strength but awful features.He has born only to destroy the world. His passion is conceived as fever. He affects various objects and goes by various names. Only human beings can bare his out bursts. He effects things especially at the time of their birth and death.

**சுரக்கட்டி**, காய்ச்சற்கட்டி, அதாவது மண்ணீரல் வீக்கம், enlargement of spleen due to fever.

**சுரக்கணை**, சுரங்கண்டு அத்துடன் வாய் நீருறலுங் காணுமோர் வகை கணைச்சூடு, congenital heat in children accompanied by fever and salivation.

**சுரக்கரந்தை**, See சிவகரந்தை, fever basil: 2. கொழும்புச் சிவகரந்தை, Ceylon toolsy — Sphoeranthus zeylanicus.

**சுரக்காலிக்கம்**, சுரம், சன்னி இவைகள் காணும் காலத்தில் கண்ணினிலிடு மருந்து, an eye salve used on the eye lids in cases of fever.

**சுரக்கழிச்சல்**, சுரத்தோடு கூடிய கழிச்சல் இது சிகிச்சைக்கு எளிதில் வசப்படாது, ஏனெனில் ஒன்றுக்கு மருந்து கொடுத்தால் மற்றொரு நோய் அதிகமாகும், ஆகவே, இதற்குத் தனிப்பட்ட முறையில்தான் அவுடதம் கொடுத்து நிவர்த்திக்க வேண்டும். diarrhoea with fever.

**சுரக்கள்ளி**, செம்மரம், red cedar — Coromandal red wood — Soymida febrifuga. It is so named, as its bark possesses the quality of chincona and dispels fever; 2. ஓர்கள்ளி, fever milk hedge, fever rohitacum.

**சுரக்காமலிகம்**, See சுரகாமலிகம்.

**சுரக்காய்ச்சல்**, மிகுந்த சுரம், a high degree of fever — Hyper pyrexia; 2. உடம்பில் எரிச்சலை யுண்டாக்கும் சுரம், fever causing burning sensation over the body.

**சுரக்கிருத்தியம்**, சுரங்கண்ட நோயாளிகளை கவனிக்க வேண்டியதும் அவர்களுக்குச் செய்ய வேண்டிய விஷயங்களும், things one should do to the patients suffering from fever.

**சுரக்கினி**, சுரத்தைத் தணிக்கும் மருந்து. remedy for dispelling or reducing fever — Febrifuge.

**சுரக்கினி ரோகம்**, கண்டத்துள்ளும், தாடையுள்ளும் பேசமுடியாமல் விரணப் புடைகளை யெழுப்பி, குரல் வளையை அடைப்பதனால் மூர்ச்சை தறட்டையோடு மூச்சுவிடல், தொண்டைக் கம்மல், வறட்சி, உணர்ச்சியின்மை முதலிய குணங்களைக் காட்டும், இது வாயு வினாலுற்பத்தியாகி, சிலேட்டுமம் கோளாறடைவதனாற் காணும் a disease of the throat in which the patient faints owing to the choking of larynx. It is marked by stertorus breathing hoarseness, dryness and paralysed condition of the throat. It is carried by deranged vayu giving rise to disturbance of kapham.

**சுரக்குடாரம்**, சுரத்துக்குப் பயன்படும் மாத்திரை, a medicine for fever.

**சுரக்குடிநீர்**, சுரக்கஷாயம், a decoction given for fever.

**சுரக்குளிர்**, குளிர் காய்ச்சல், srivering accompanied fever an intermitent fever — Ague.

**சுரக்கோடரி**, See சுரக் கோடாலி.

**சுரக்கோடாலி**, காய்ச்சலைப் போக்குவதில் இணையில்லா மருந்து, an infalliable remedy for fever. It is so called from its cradicating every kind of pyrexial disease.

செய்முறை: method of preparation. வெள்ளைப் பாஷாணம், கௌரி, துதம், வகைக்கு 1 விடை இவைகளை கிழிக்கட்டி கஷாயத்தில் கிழிக்கட்டி போட்டு வைத்து பிறகு ஊமத்தை, கொம்புபாகல் சாற்றில் தனித்தனியாக 2. சாமம் அரைத்து பயிறளவு மாத்திரை செய்யவும் இளநீர் அல்லது வெந்நீரில் ஒரு உருண்டை கொடுக்க சுரம் தீரும், a pill prepared with while white arsenic, yellow oxide of arsenic, and mercury as per the text and given for fevers with suitable vehicles — hot water tender cocoanut water etc.

**சுரக்கோது**, சுரதோஷம், vitiation caused by fever.

**சுரங்கம்**, சாதிலிங்கம், cinnabar — Vermilion 2. சிந்தூரம், red powder; 3. தேன், Honey; 4. தோடம்பழம்,

**சுரங்கவூற்று**, சுரங்கங்களின்று வரும் தண்ணீர், இதில் உலோகங்கள் கரைந்து சுவைக்கும், spring issuing out from mines. This spring water has the taste of the metal in solution Mineral water.

**சுரசகஷாயம்**, அதிநீருக்காகக் கொடுக்கும் கஷாயம், a decoction prescribed for diabetes.

**சுரசபிருதம்**, வேளை, velaiplant — cleome pentaphylla.

**சுரசமணி**, See ஆடாதோடை.

**சுரசமான**, சுவையுள்ள, delicious 2. தித்திப்புள்ள, sweetish.

**சுரசம்**, இஞ்சி முதலிய சரக்குகளைத் தண்ணீர் விட்டரைத்து அதனின்று எடுக்கும் ரசம், Juice extracted from a solution of triturated drugs; 2.சுவையுடைமை, deliciousness; 3. போளம், myrrh; 4. சுயரசம், juice extracted without mixing water; 5, கற்கண்டு முதலிய சுயசார வஸ்து, substance prepared from the original extract like; 6. தித்திப்பு ரசம், sweet juice or essence; 7. சிறுகாட்டுக் கிழங்கு, a small species of yam — Dioscorea aculeata; 8. அரத்தை galangal Alpinia galanga; 9. பாதரசம், quick silver or mercury; 10. நொச்சி, notchy Vitex negunda; 11. துளசி, holy basil Ocimum sanctum; 12. முறித்தசாறு, juice of a plant or leaf or root into which a red hot iron is plunged to get rid of the noxious products in it; 13. சாறு, juice or extract; 14. நறும் பிசின், a fragrant resin; 15. இன்பமான ரசம், சுகிர்த ரசம், a delicious juice or essence; 16. சூடுதேய்ாந்த அல்லது முறித்த மருந்துச்சாறு, a medicinal juice warmed by introducing a red hot iron.

**சுரசம்செய்தல்**, சுயரசம் எடுத்தல், to extract pure essence.

**சுரசம்பண்ணல்**, See சுரசம் செய்தல், 2. சாறு முறித்தல், eliminating noxious elements from a juice by heating or dipping a red hot iron.

**சுரசம்மாரி**, சுரத்தைப் போக்கு மருந்து, a medicine for eradicating fever — Febrifuge.

**சுரசவாகுதிரசம்**, ஓர் வகைத்துளசி, a variety of holy basil.

**சுரசவிதி**, சுரசம் செய்யும் முறை, the method of heating the juice of plants or their parts to get rid off its noxious elements.

**சுரசனி**, இரவு, night.

**சுரசா**, See சுரசம், 2. துளசி, holy basil.

**சுரசாதரோகம்**, தொண்டைக் கம்மலையுண்டாக்கு மோர் வகை நோய், இது கருமணத்தக்காளியால் போம், a disease causing soreness of throat. Hoarseness

**சுரசாதிகணம்**, வெண்ணொச்சி கரிசாலை, வெண்கடுகு, துளசி, வாய்விளங்கம், சித்தாமுட்டி, சுக்கு, மணத்தக்காளி முதலிய சரக்குகளை நல்லெண்ணெயிலிட்டுக் காய்ச்சிக் குழந்தைகட்குத் தடவ, கபம், கிருமி இவைகள் போம், a madicinal oil prepared as per text and used externaly for worms and phlegm in children.

**சுரசாதிக்காய்**, விளாம்பிசின், gum of wood apple tree Feronia elephantum.

**சுரசாதிபேதம்**, மனிதர், மிருகம் முதலிய பிராணிகளுக்கும் மற்றுமுள்ள வஸ்துகளுக்கும் ஏற்படும் பலவிதமான சுரங்கள் அவை யாவன:

1 பாகலம் — ஆனைக்குண்டாகும் சுரம், Fever affecting the Elephant.
2. சிலாசத்து—மலைக்கு ஏற்படும் சுரம், Fever affecting the Mountain.
3. நிர்மோகம்—பாம்புக்கு ஏற்படும் சுரம், Fever affecting the Snake.
4. நிலாகா—தண்ணீருக்கு ஏற்படும் சுரம், Fever affecting the Water.
5. சீதிகா — பசுக்களுக்கு ஏற்படும் சுரம், Fever affecting the Cow.
6. ஊசரம் — நிலங்களுக்கு, ஏற்படும் சுரம், Fever affecting the Earth.

7. அளர்க்கம்—நாய்களுக்குஏற்படும் சுரம், Fever affecting the dog.
8. திருஷ்டி பிரதியவரோதனம் — புலிகளுக் குண்டாகும் சுரம், Fever affecting the tiger.
9. அபஸ்முருதி—குதிரைகளுக் குண்டாகும் சுரம், Fever affecting the horse.
10. சிகோத்பேதம் — மயிலுக் குண்டாகும் சுரம், Fever affecting the Peacock.
11. பிரவாசதம் — காக்கைக்கு குண்டாகும் சுரம், Fever affecting the Crow.
12. பிருட்டபேதம் — உரோம நாசனம் பூனை களுக் குண்டாகும் சுரம், Fever affecting the cat.
13. தத்துரம் — பெருச்சாளிக் குண்டாகும் சுரம், Fever affecting the bandicoot.
14. சுரம்பித்திகாயம் — கிளிக் குண்டாகும் சுரம். Fever affecting the parot.
15. சிரம் — சிருத்தைக்குண்டாகும் சுரம், Fever affecting the leopard.

மனிதர்களுக்கு உணவு முதலியவற்றால் ஏற்படும். யானை முதலிய காட்டு மிருகங் களுக்கு மரணகாலத்தில் கடைசிகாலத்தில் கடைசியாக உண்டாகும்.

**சுரசாந்தரோகம்**, See சுரசாரோகம்.

**சுரசாந்தினி**, வல்லாரை, Indian Penny wort Hydrocotyle asiatica.

**சுரசி**, வெண்ணொச்சி, a white variety of chaste tree. Vitex negundu.

**சுரசிசா**, சுண்டைச்செடி, jungle unarmed night shade Solanum pubescens.

**சுரசிலேட்டுமரோகம்**, சுரத்தோடு கூடிய சிலேட்டுமக் குறிகள், அதாவது இருமல், கண்டத்தில்கபம், சீதாளம், நாவறட்சி, தாகம் முதலியன, A fever with symptoms, phlegm and cold.

**சுரசு**, வேளைப்பூடு, five leaved cleome. pentaphylla.

**சுரசுரப்பு**, (in botony) — சுணை, hispid.

**சுரசூடாமணி மாத்திரை**, இரசம், கெந்தகம், சாதிலிங்கம் இம்மூன்றையும் கருமத்தை விதையினுல் சுத்தி செய்து பின்பு திரிகடுகு சேர்த்துப்பழச்சாற்றால் அரைத்துருட்டிய மாத்திரை. இதனுல் வாதம், வாயு, நீங்காத சுரம் முதலியவை போம், a pill given for fevers.

**சுரசூலை**, சுரத்தினுலேற்படும் இருபக்கத்து விலாக்குத்தல், இதனுல் உடம்பு கனத்து, எரிச்சலுண்டாகி, வயிற்றில் வாய்வும் சல முங் கொண்டு கடுத்து, இடுப்பு, சந்து, கால் உளைந்து உணவு செல்லாது, excruciating pain in the region of the sides along with fever. It is marked by heaviness of the body, disorder of stomach, pain in the hip, groin and legs, loss of appetite etc. 2. சுரத்தினுல் கைகால் உளைந்து ஓய்ச்சல் கண்டு, மூட்டுகளில் குத்தலாகி, விருவிருத்து வலிக்கும் ஓர் சூலை நோய், a febrile disease characterised by darting pain in the muscles and joints weakness of the limbs etc.

**சுரசை**, சிற்றரத்தை, lesser glangal — Alpinia galanga (minor).

**சுரஞ்சனம்**, கமுகு, arecanut tree.

**சுரஞ்சா**, துளசி, holy basil.

**சுரஞ்சி**, உசில், sirissaticle from its clearing rancidity. Albizzia amara.

**சுரணி**, அனுகதத்தானத்திலிருக்கும் அதி தேவதை, a goddess.

**சுரணை**, சுவர்ணை, feeling sensation sensitiveness: 2. See சுரணை மரம்.

**சுரணைமரம்**, ஓர் மாமரம், a mango tree.

**சுரண்டல்**, சுரண்டுதல், scraping; 2. நகத் தாற் பீறுதல், scratching with finger nails; 3. கவருதல், to grow lusty: 4. சீண்டுதல், tickling; 5. விபசாரஞ் செய்தல், prostituting.

**சுரண்டி**, புண் சுரண்டும் ஆயுதம், a sharp instrument used for scraping wonds; 2. சட்டுவம். an iron instrument for removing the adhered substance in a vessel a metal instrument used to scrape anything — Scraper; சுரண்டினது, scrapings.

**சுரத்தாது**, இந்திரியம், semen.

**சுரதநீர்,** சுக்கிலம், semen; 2. காமநீர், venereal secretions of woman — semen muliebre; 3. பெண் காமக்கழி, vaginal secretions in woman during intercourse; 4. சுரோணித நீர், a misnomer for menstrual blood.

**சுரதநூல்,** காமநூல், sexual science; 2. கொக்கோகம், a treatise on erotics compiled by Kokkoga muni.

**சுரதமங்கை,** காமவிச்சையுடைய பெண், possionate woman. voluptuous women; 2. வேசி, prostitute.

**சுரதம்,** பாதரசம், quick silver; 2. புணர்ச்சி, sexual intercourse coition; 3. மருந்தின் சாரம், juice of herbaceous plants; 4. தைல சாரம்; the essence of medicated oil.

**சுரதரு,** தேவதாரு, deodar Erythroxylon monogynum.

**சுரதலீலா விளையாட்டு,** காமவிளையாட்டு, love play.

**சுரதலீலா விநோதம்,** புணர்ச்சி விளையாட்டின் பொழுதுபோக்கு, love sport as pastime.

**சுரதலீலை,** புணர்ச்சிக்குரிய சரச விளையாட்டு, wanton play or love play. sportive indulgence in sexual intercourse; 2. கரணம் different postures in coition.

**சுரதவித்தை,** கலவிக்குரிய இரகசியங்கள், secret doctrines of sexual science.

**சுரதவிளையாட்டு,** மகளிர் விளையாட்டு, love play.

**சுரதவின்பம்,** புணர்ச்சியின்பம், sexual pleasure.

**சுரதாக நாசினி,** see இருவேலி,

**சுரதாக்கு,** அரத்தை, galangal.

**சுரதாக்குதம்,** பேரரத்தை. greater galangal.

**சுரதாப தைலம்,** சுரத்திற்கு கொடுக்குமோர் மருந்தெண்ணெய், a medicinal oil for burning fever.

**சுரதாரம்,** விரணங்களுக்கு செய்யுமோர் சிகிச்சை, a treatment for ulcers.

**சுரதாரு,** செம்பரத்தை. red shoe flower. Hilbiscus rosa sinensis; 2. தேவதாரு, deodar

**சுரதுருமம்,** தேவதாரு, deodar—Erythroxylon monogynum.

**சுரதோஷ நிவர்த்தி,** see ஆதளை.

**சுரத்தல்,** ஊறுதல், உண்டாதல், forming or secreting as milk in the breast.

**சுரத்திருமம்,** தேவமரம்.

**சுரத்துக்காதி,** திப்பிலிமூலம், root of long pepper.

**சுரத்துக்குரிய,** காய்ச்சலுக்குரிய, febrile.

**சுரத்தை,** முந்திரிகைப்பழம், cashew nut fruit (fruit of) Semicarpus — anacardium.

**சுரநீக்கு மருந்து,** சுரநாசினி, febrifuge.

**சுரந்தா,** தேவதாரு, see சுரதாரு.

**சுரபங்கம்,** குரற்கம்மல். Hoarseness of voice.

**சுரபத்திரி,** ஓர்வகைச் சாதிப்பத்திரி, tapering nutmeg.

**சுரபரலரி,** முறைக்காய்ச்சல். intermittent fever.

**சுரபாஷாணம்,** காய்ச்சற் பாஷாணம், a kind of prepared native arsenic.

**சுரபாண்டம்,** கர்ப்ப பெண்களின் கருக்குழியில் இருக்கும் பனிக்குடம் என்னுமோர் பை, foetal membrane forming the bag of water in the womb.

**சுரபானம்,** சாராயம், arrack; 2. கள், toddy.

**சுரபி,** கந்தக்கதூள், sulphur powder; 2. கள்ளி, milk spurge; 3. சாதிக்காய், nut meg 4. பனங்கள்ளு, toddy of palmyra; 5 துளசி, holy basil; 6. மது, arrack; 7. மல்லிகை, Jasmine; 8. பல்லி, lizard; 9. பசு, cow; 10. வாசனை, fragrance; 11. பிரமி, வழுக்கை, gratiola nonieri; 12. இலவம் பிசின், gum of silk cotton tree; 13. see இருவாட்சி; 14. பசி, hunger; 15. தேள்கொடுக்கி, Scorpion plant Helitropium indicum; 16 மருதமரம், Terminatia arjuna; 17. ஓர்வகை இரசக்குளிகை, இது வங்கத்தில் நீரை வாங்கும்; கெவுனம் பாயும்;(கநவூ-குருநா-சூத்) a kind of mercurial pill It absorbs the fluid in the lead and aids one to travel in the aerial region. 18. மாட்டுக் கொம்பு, cow's horn; 19. மல்லிகைப் பூ, Jasmine flower; 20. வெண்பசு, white cow; 21. சண்பகம், champak flower; 22. வெண்கடம்பு, white cadamba; 23. குந்துருக்கம், Indian frank in cense.

**சுரபிகா**, தேள் கொடுக்கி. scorpion plant.

**சுரபிகாசி**, வரிக்கற்றாழை, a kind of striped aloe.

**சுரபிகோசம்**, சம்பு நாவல், East Indian Rose apple Eugena jambos.

**சுரபிசனம்**, See சுரபிசித்தி.

**சுரபிசித்தி**, கருவிழி, chili fruited caper. Cadaba indica; 2. ஓர் கற்பமூலிகை, a rejuvenating drug — (unknown).

**சுரபிசேகம்**, வரிக் கொம்மட்டி, striped colocynth. Citrullus colocynthis.

**சுரபிதானி**, சண்பகம், Champak — Michelia champaka.

**சுரபிபத்திரை**, சம்புநாவல், jambu tree malay apple tree.

**சுரபிபோதம்**, See சுரபுன்னை.

**சுரபிமணி**, இரசமணி, mercurial pill.

**சுரபிமேற்புல்லுருவி**, மருதமரத்தின் புல்லுருவி, a parasite found grown on marudah tree.

**சுரபியாங்கம்**, வெண்கடம்பு, white cadamba tree.

**சுரபில்லை**, சுரக்கட்டி, enlargement of spleen.

**சுரபிவழுக்கை**, ஓர் வழுக்கை,

**சுரபிவிருட்சம்**, கற்பத்துக்கடுத்த ஓர் மரம், a tree useful in rejuvenation.

**சுரபின்னை**, See சுரபுன்னை.

**சுரபு**, இலைம்பிசின், gum of silk cotton Bombax malabaricum: 2. துளசி, holy Basil 3. மல்லிகை, Jasmine; 4. இலவு, silk cotton

**சுரபுகி**, துளசி, holy Basil — Occimum sanctum.

**சுரபுங்கு**, சுனைப்புங்கு.

**சுரபுன்னுகம்**, See சுரபுன்னை.

**சுரபுன்னை**, ஓர் மலைப்புன்னை, இது ஓர் சிறிய மரம், இலைக் கொழுந்து சிவப்பாய் இருக்கும் இலையோ கரும்பச்சை நிறம் பூ வெண்மை இதன் காய்க்குள் சதைப்பற்றுள்ள ரசமும் கொட்டையுமுண்டு, நாகசம் பங்கிக்குண்டான மருந்தின் குணம் இதற்குமுண்டு, sorra poon fragrant poon — Ochrocarpus longifolius. It is a small tree tender leaves are bright copper coloured, matured leaves are dark green. Flowers are white. The fruit encloses a large stone with a pulpy juice Medicinal properties are very similar to those of Mesua ferrea. The flowers are stimulant and carminative.

NOTE: The flower buds are of the size of cloves and of a red colour Habitat — Malabar and western ghats. It is a very weak substitute for spirit lavender and peppermint, Globular flower buds are used for dyeing and are used as perfume. 2. வாழை, calophyllum longifolium; 3. கமேலா மாவு மரம், Mallotus philipinesis; 4. ஓர் பூடு, Rhizophora macronata.

**சுரபேதம்**, see சுரவகை: தொண்டை. hoarse throat.

**சுரப்பட்டை**, கொய்னாப்பட்டை; சாதாரணமாக இதை மரத்தினின்று 5-6 வருஷம் சென்ற பிறகுதான் எடுக்கப்படும். இதை அநேகவிதமாக எடுப்பதுண்டு. ஆனால் மிக்க சாக்கிரதையாய் எடுக்கவேண்டும். கழித்த பட்டையில் காரச்சத்து மிகுதியாக உண்டாகும் இப்பட்டையில் 2 விதம் உண்டு. வேர்ப்பட்டையோ அடி மரத்தின்பட்டையை விடக் கணதியாயும் வெளிப்பாயுமிருக்கும்.

இதை வெயிலில் காயவைத்துச் சுருணைகளாகச் சுருட்டி வைப்பதுண்டு. இளமையும் முதிர்ச்சியுமடையாத நடுத்தரமான மரத்தின் பட்டைதான் சத்தெடுக்க மிக்க சிலாக்கியமானது, இப்பட்டைகளுள் பாசி படர்ந்ததுதான் மேன்மையானது. ஏனெனில் அதில் காரச்சத்து மிகுதியாக ஏற்படும். இதனின்றுதான் கடையில்விற்கும் கொய்னா மருந்து தயாரிக்கப்படும், fever bark or Peruvian bark — Cinchona genus. This bark is usually removed about the fith or sixth year and there are several methods of harvesting the bark. Great care should be taken to avoid injuring the plant while removing the bark. There will be found a great Increase of alkaloids in the renewed bark is called morsed bark. The removed bark is placed to dry before the sun and the pieces which are thin are rolled up longitudinally into cylinders. The barks of moderately grown trees are the richest in the powerful alkalies and amongest them the morsed bark is

considered superior for it contains more of cinchona alkaloids the product of which is the quinine of the market.

NOTE: The following are the principal species known in South India:—
Officinalis. Succirubra, Hybrids, Calisaya, Lancifolia, Micrantha, Nitida.

The following are the commercial names of the different barks and the species to which they belong.

| | |
|---|---|
| Bogota—lancifolia. | Columbian—lancifolia |
| Bolivian — calisaya. | Crown — officinalis. |
| Calisaya—calisaya. | Fine crown - officinalis. |
| Caqueta—lancifolia. | Finest grey—Peruvian. |
| Carthagena — lancifolia. | |

சுரப்பட்டைச்சத்து, சின்கொய்னா பட்டையினின்று தயாரிக்கும் ஓர் சத்து; இதுவே கொய்னா மருந்து; இதில் இரண்டுவிதமுண்டு. சிகப்புக்கொய்னா — இது சிகப்பு (நிற) (சுர)ப்பட்டையினின்று தயாரிக்கப்படும். மஞ்சள் கொய்னா, மஞ்சள் சுரப்பட்டையினின்று தயாரிப்பதுதான் சாதாரணமாக வழங்கப்படுவது. இது சுரத்தைப் போக்கும். பலந்தரும்; துவர்ப்பு; எல்லாவித சுரங்களுக்கும் உபயோகிக்கலாம். ஆனால் விஷ சுரத்திற்கு உலோகத் திரவங்களில் சிறிய அளவில் கலந்துகொடுக்கக் குணப்படும். குருக்களை யெழுப்பும். சுரத்திற்கு கொடுக்கப் பலத்தைத் தருவதுமன்றி உடம்பையுந் தேற்றும். விஷ சுரத்தினாலேற்பட்ட சுரக்கட்டிக்குப் பேதிமருந்தோடு கலந்து கொடுக்க ஓர்வித குணமுண்டாகும். வாதப்பிடிப்பு, நரம்புவலி, இவ்வித ரோகங்களில் சில நாளைக்குத் தொடர்ச்சியாய்க் கொடுக்க நன்மையை உண்டாக்கும். இரைப்பு, மூச்சுத் திணரல், கக்குவான், கொடிய கபவாத சுரம், நுரையீரல் தாபிதம், மார்அழிவிரணம கண்ணோய், கருவிழியழற்சி, அன்றி கண்டமாலையினாலேற்படும் கண்ணோய்கள், அக்கினி விசர்ப்பி, உஷ்ணத்தடிப்பு, சீதபேதி, விஷ சுரத்தாலுண்டான அதிசாரம், அழிவிரணம், நமர், சயம் முதலிய நோய்களைக் குணப்படுத்தும், இது எல்லாவித ரோகங்களையும் கண்டிக்கும். குணத்தால் அபினிக்கு அடுத்ததென்றே சொல்லவேண்டும். இதை சாதாரணமாக எலுமிச்சம்பழச்சாறு, தேன், கந்தகத்திராவகம், கடல் புளிப்பு முதலிய அனுபானங்களில் கொள்ளப்படும், வெறு வயிற்றில் உட்கொள்ளுவதுதான் சிறந்தது. சிகப்பு கொய்னா, குணத்திலும் உபயோகத்திலும் மேற்கண்ட மஞ்சள் இனத்திற்கு சமமாகவே சொல்லலாம். வேறு ஒன்றும் வித்தியாசமில்லை, Quinine is prepared from the cinchona bark — fever bark — is called cinchona quinquina. It consists of two kinds viz; red and yellow. Red is the one obtained the red cinchona bark — Cinchona succirubra where as the yellow kind, sulphate of quinia — Quiniae sulphas which is common is some what aromatic and persistently bitter. It is a powerful antiperiodic, tonic and astringent. It is used for all kinds of fever — paroxysmal periodic, remittent and intermittent, In continued fevers it is less benefical. It has however, proved serviceable in typhoid (enteric) fever in small doses in combination with mineral acids. In the advanced stages of exanthema it is of great service in reestablishing the strength and restoring tone to the system. In spleenic enlargement particulary of malarial origin it is very useful. In rheumatic and neuralgic afftections. When they assume a periodical character, it is often productive of excellent results. Amongst other diseases in which it has been found serviceable are croup, laryngismus stridulous hooping cough, the advanced stages of pneumonia, pleurisy gangrene of the lungs, opthalmia, iritis and other affections of the eye connected with scrofulous diatheris erysipelas, urticaria, dysentery, diarrhoea, gangrene tetamus and phthisis, with the exception of opium, no other remedy perhaps has a wider range of the rapeutic uses than quinine. It acts best when given in juice of lime and in solution with sulphuric acid. Its good effects are more speedily and certainly manifested if taken on an empty stomach.

NOTE :— The following are the other preparations from quinia and cinchona bark.

1. பாவனத்திரவம் — tincture of quinia.
2. மாத்திரை — pill of quinia.
3. கஷாயம் — decoction of yellow cinchona bark.
4. ஊறல் கஷாயம் — infusion of yellow cinchona bark.
5. திரவசத்து, — liquid extract of yellow cinchona bark.

**சுரப்பாலை**, ஓர் வகைப்பாலை, இது வெட்பாலையைப் போலிருக்கும், இலை வேப்பிலையைப் போலும் மொக்கிலிருந்து வரும், பால் கருவம் பிசின் போலும் வெண்மையாயு மிருக்கும், இதற்குக் கிருமிகளைப் போக்குங் குணமும் புண்புரைகளை ஆற்றுந்தன்மையு முண்டு, இப்பிசினை எண்ணெய் வகைகளிற் சேர்த்துக்காய்ச்சி இரணங்களுக்குப் பூசப்புண்களை ஆற்றும், இதன் பட்டைக் கஷாயம் சுரத்தைக் கண்டிக்கும், இது கொய்னாவைப் போல் கசப்பாயிருக்கும், a kind of paulay much resembling downy oleander. Leaves look like margosa leaves, and the gum exuding from the bud is similar to that of Acacia arabica — gum arabic, and is white. It is anthel mintic and vulnerary. The gum boiled in oil is an external application for wounds. Decoction of the bark of this tree is a febrifuge and is bitter like quinine.

**சுரப்பி**, See அதிங்கம்.

**சுரப்பு**, சுரத்தல், issuing out as milk; 2 இரத்தம் சுரத்தல், அல்லது ஊறுதல், suffusion as blood; 3. கதிப்பு, excess of forming as blood; 4. வீக்கம், swelling; 5. இரத்தக் கனப்பு, which see; 6. ஊதுதல், bloating.

**சுரப்புக்குறைவு**, பால் அதிகமாக சுரக்காமை, deficient seretion of milk.

**சுரப்புத் தண்ணீர்**, ஊற்றுத் தண்ணீர், spring water. Fountain water.

**சுரப்புவடிவு**, முலைமேற்றிரள், nipple.

**சுரப்புன்னை**, See சுரபுன்னை, — soora poon tree, Octrocarpus longifolia.

**சுரமகம்**, செருந்தி, see சுரகாமலிகம்.

**சுரமடித்தல்**, சுரம் காய்தல், to suffer from fever — to be attacked by fever.

**சுரமணிமாத்திரை**, நேர்வாளத்தைக் கடைச்சரக்குகளுடன் சேர்த்துக் கொடுக்கும் ஓர் பேதிமாத்திரை, இதனுல் சுரம், கல்லடைப்பு, குன்மம், அண்டவாதம் இவைகள் போம், a purgative pill prepared with croton seed as a chief ingredient along with other bazaar drugs and prescribed for fever gravel or urinary calculus dyspepsia testicular complaints etc.

**சுரமண்டலம்**, see சலமண்டலி.

**சுரமதி**, See சுரமகம்; 2. சிலந்தி ulcer; 3. மேகவிரணம் syphilitic sore.

**சுரமதில்**, சீந்தில், moon creeper.

**சுரமயக்கம்**, சுரத்தினுலேற்படும் மயக்கம், giddiness from fever.

**சுரமருந்து**, சுரத்தைப்போக்கு மருந்து, a medicine for the cure of fever — Pyretic.

**சுரமலி**, See சுரமலிகம்,

**சுரமலிகம்**, செந்திக்கரப்பான், அதாவது உடம்பில் பல விடங்களில் வரும் அக்கி, eruptions of a fiery acrid humour in different parts of the body — Ery sipelas 2. செருப்படை, a low spreading plant — Glinus laloides; 3. செருந்தி, see சுரகாமலிகம்

**சுரமாத்திரை**, சுரத்திற்குக் கொடுக்கும் மருந்துக் குளிகை, fever pill; 2. கொய்னு மாத்திரை, qunine pill.

**சுரமாந்தம்**, செரியாமை, மந்தம் இவைகளினுல் குழந்தைகட்குண்டாகும் சுரத்தோடு கூடிய ஓர் வகைக் கழிச்சல், diarrhoea in children attended with fever due to indigestion and other disorders of bowel.

**சுரமாந்தை**, அகோரமாய்ச் சுரங்காய்ந்து, இருமல், ஆயாசம், அன்னத்துவேஷம், அரோசிகம், முதலிய குணங்களை காட்டுமோர் மாந்தை நோய், a kind of tuberculosis marked by excess of fever, cough fatigue loss of appetite etc

**சுரமாய்க்கிடத்தல்**, காய்ச்சலினுல் படுத்த படுக்கையிலேயே கிடத்தல், to be laid up with fever.

**சுரமாலிகை**, சுரம், சன்னி இவைகளைப் போக்குவதற்காக அகத்தியர் வைத்திய காவியம் 1500 இல் சொல்லியுள்ள ஓர் மருந்து, a medicinal preparation contemplated in the Agastiyar work 1500 on medicine for curing fever, apoplexy etc.

**சுரமாருட்டம்**, சுரத்தின் வேகத்தால் புத்தி மயங்கி பிதற்றல் முதலிய மாறுபாடுகள், several bad symptoms such as loss of senses, incoherent talk etc. due to excess of fever.

**சுரமுண்டாக்கல்**, காய்ச்சல் வரும்படியாகச் செய்தல், causing or giving room for fever. This entirely due to irregularity in diet.

**சுரமுண்டாக்கி,** சுரமுண்டாக்கு மருந்து, any thing causing or producing fever — Febrifacient.

**சுரமுதல்,** காய்ச்சலினால் பீடிக்கப்படல், getting feverish

**சுரமும்மரம்,** சுரத்தின் உக்கிரம், severity or intensity of fever.

**சுரமுறுசூலை,** காய்ச்சல், தலையிடி, உடம்பில் வீக்கம், பலவீனம் முதலிய குணங்களை யுண்டாக்கி, மொளிகள் மோதுகட்டி வீங்கித்துன்புறுத்து மோர் வகைச் சூலை நோய், a kind of acute arthritis or gout marked by febrile symptoms head ache, swelling and weakness. It is a disease of metabolism attended by formation of chalky deposits in the cartilages of the joints and attacks of acute pain characterising arthritis.

**சுரமெழுப்பி,** சுரமுண்டாக்கும் வஸ்து, any substance which excites fever — Pyretogen 2. see சுரமுண்டாக்கி

**சுரமேதம்,** குமுதை, ஒரு வகை மரம், a tree unknown.

**சுரம்,** காடு, jungle desert; 2. கள், toddy; 3. உட்டுளை, inner cavity; 4. ஒருப்பு, a kind of salt; 5. காய்ச்சல், fever; 6 நகக்கண், that portion uniting the nail with the flesh; 7. உப்பு, salt.

**சுரம்,** அறுசுவை உணவுகளினாலும் உடம்பை யடுத்த உட்கொதிப்பினாலும், ருதுகால பேதங்களினாலும் தகாத நடத்தைகளினாலும், மற்றும் இரகக் கோளாறு, விஷச் சேர்க்கை, மனோவியாகுலம் முதலிய காரணங்களினாலும் வாதபித்த சிலேட்டுமங்கள் தனித்தனியாவது ஒருமித்தாவது இரைப்பையிலிருக்கும் அக்கினியை வெளிப்படுத்தி, சீதக்கட்டுகள் உள்ளவிடத்தை இளக்கி உப்பச்செய்து பின்பு செரியாமையாயிருக்கும் அன்னரசத்தை அநுசரித்து அவ்விடம் நாடோறும் அன்னரச நரம்புகளின் வாரங்களையும், உரோமத் துவாரங்களையும் மறைத்துப் பின்பு நாபிதானத்தில் சேர்ந்து சராக்கினியைத் தாண்டி அத்துடன் கலந்து உடம்புமுழுவதும்பரவி அதிகமான சூட்டையுண்டாக்கும், இது பில்லி சூனியம் முதலிய மாந்திரீகச் செயல்களினாலும் சாபத்தினாலும் இத்தகைய நிலைமையும் ஏற்படக்கூடும் இதனால் உடம்பு முழுவதும் வலி, வியர்வை, கைகால் சோர்வு, தாகம், தலைவலி, கண் உள்ளாங்கை எரிச்சல் முதலிய குணங்கள் உண்டாகும். இது, அடியிற் கண்டபடி அனேக விதங்களுண்டு, இவ்வித பல சுரங்களுக்குக் கட்டிய வெள்ளைப் பாஷாணத்தில் அரிசி எடை கொடுக்கப்போம். According to Indian Medical science the derangement of three humours in the system either singly or in conjunction with others effect the stomach, causing indigestion and dislodge the gastric fire which finds its way into the indigestion setting up inflammation of the mucous walls. The gastric heat evolved enters the naval region developing the presence of some poison in the blood under the influence of which the tissues are more rapidly consumed with the result that heat is created in large amount and spreads though the whole organism.

It is due to one of the many causes such as errors in diet especially tainted food, internal heat sudden change of seasons or other atmospheric disturbances, untoward actions, malignant influences of inauspicious stars or planets, agitation of mind from emotional feelings etc.

Such conditions may also be brought about by witch craft, sorcery or other dynamic forces of deadly incantations, magic spells, charms and curses.

It is marked by pain all over the body, profuse perspiration sense of numbness in the limbs thirst, head ache burning of the eyes and palm of hands etc.

Fever consists of different kinds viz:—

I. According to Ayurveda:

1. சன்னிபாத சுரம் — Typhus fever.
2. தாபச்சுரம் — ardent or remittent fever.
3. விஷமச்சுரம் — intermittant fever.
4. வாதச்சுரம் — rheumatic fever.
5. பித்தசுரம் — bilious fever.
6. சிலேட்டுமச்சுரம் — phlegmatic fever.
7. அசாத்தியசுரம் — chronic fever.
8. கோபச்சுரம் — irritation fever.
9. ஆமரசயசுரம் — gastric fever.
10. தாதுகதசுரம் — fever affecting the dhathus (tissues).
11. அபிசாரசுரம் — deadly incantation fever.

12. சாபச்சுரம் — curse fever.
13. பூதாவேசசுரம் — fever caused by spirits and devils.
14. பயச்சுரம் — anxiety or emotional fever.
15. காமச்சுரம் — love fever.
16. பிரலாபசுரம் — delirious fever.
17. நிசிசுரம் — mid night fever.
18. அக்கினி மந்தசுரம் — dyspeptic fever.
19. சுட்கசுரம் — ricketic fever.
20. புராணசுரம் — chronic fever.
21. போடககசுரம் — inflammatory fever
22. சோபை சுரம் — anemic fever.
23. ஆநாககசுரம் — enteri fever.
24. சயசுரம் — consumptive fever.
25. அவிநியாச சன்னி சுரம்.
26. ஆமாதிசாரசுரம் — dysentric fever.
27. அசீகசுரம்.
28. அசீகசீதசுரம்.
29 சித்தவிப்பிரம சன்னி சுரம்.
30. தருணசுரம்.
31. விஷசன்னி சுரம் — toximic fever.
32. அதிசார சுரம் — fever with diarrhoea
33. இரத்தத்தாதுச்சுரம் — fever affecting blood tissue.
34. சரும தாதுச்சுரம் — fever affecting the skin.

II. According to Tamil Medical science:

1. சொற்பசுரம் — ephemeral fever.
2. அறைவீட்டுசுரம் — puerperal fever.
3. படுக்கை சுரம் — bed fever.
4. பித்தசுரம் — bilious fever.
5. முடக்கு சுரம் — dengue fever.
6. அக்கிசுரம் — herpetic fever.
7. கபால சுரம் — cerebral fever.
8. விடாச்சுரம் — continued fever.
9. பெருவாரிசுரம் — epidemic fever.
10. குருசுரம் — eruptive fever.
11. களைப்பு சுரம் — fatigue fever.
12. நஞ்சுபாய்ந்தசுரம் — septic fever.
13. கிரந்திசுரம் — syphilitic fever.
14. விரணசுரம் — tranmatic fever.
15. அத்திசுரம் — fever settled in the bones.
16. எலும்புருக்கி சுரம் — ricketic fever.
17. உதரசுரம் — gastric fever.
18. அண்டைக்கட்டி சுரம் — sympathetic fever.
19. சூதகவாயுசுரம் — hysteric fever.
20. சூதகசுரம் — inter menstral fever.
21. முறைசுரம் — inter mittent fever.
22. அழற்சிசுரம் — irritation fever.
23. மட்டுசுரம் — low fever.
24. விஷசுரம் — malarial fever.
25. வெளிசுரம் — external fever.
26. உட்சுரம் — internal fever.
27. கொடிய சுரம் — malignant fever.
28. கொசுக்கடி சுரம் — musquito fever.
29. எலிக்கடிசுரம் — rat bite fever.
30. நாய்க்கடிசுரம் — dog bite fever.
31. நான்காமுறைசுரம் — quarton fever.
32. மூன்றும்முறைச்சுரம் — tertian fever.
33. மக்களிக்குசுரம் — relasping fever.
34. அம்மை சுரம் — pox fever.
35. நடுக்கல் சுரம் — shivering fever same as குளிர்சுரம்.
36. அசீரணசுரம் — fever due to indigestion.
37. மாறல் சுரம் — alternative fever.
38. அவசுரம்.
39. சன்னிசுரம் — same as முத்தொடி சுரம்.
40. மேகசுரம்.
41. தடிமன் சுரம்.
42. கோழைசுரம்.
43. அக்கரசுரம்.
44. பறவைசுரம்.
45. முத்தோஷ சுரம் — triple dosha fever (affecting the three humours).
46. ஐயசுரம் —
47 மீளாச்சுரம் — தீராச்சுரம்.
48. வாதசுரம் —
49. மாந்தசுரம் — same as அன்னபாலுதி சுரம்.
50. அதிசார சுரம் —
51. ஆமசுரம் —
52. சீதசுரம் — same as ஐயசுரம்.
53. குளிர்சுரம்.
54. விடசுரம் — same as விஷசுரம்.
55. ரணசுரம் — same as விரண சுரம்.
56. இரத்தசுரம் —
57. மாங்கிஷசுரம் —
58. ஊன்சுரம் — same as மாங்கிஷ சுரம்.
59. தாபசுரம் — burning fever due to distress.

60. உடம்புநோய் சுரம் —
61. அன்னபளுதிசுரம்-same as உத்வசுரம்
62. பழஞ்சுரம் — chronic fever.
63. பித்தசிலேற்மன சுரம் —
64. அசதிசுரம் — same as களைப்புசுரம்.
65. அட்சரமாந்தசுரம்.
66. அர்த்தராத்திரி சுரம்—midnight fever.
67. இராசுரம் — night fever.
68. கடுஞ்சுரம் —
69. கபசுரம் — same as ஐயசுரம்.
70. சளைக்கடுப்பு சுரம் —
71. சாமசுரம் —
72. தனிசுரம் —
73. கபவாதசுரம் —
74. மாந்தக்கணை சுரம் —
75. வாதபித்த சுரம் —
76. சனிசுரம் — same as கோழைசுரம்.
77. கிருமிசுரம் —

NOTE:- Fever is an elevation of the body temperature accompanying all infections diseases and occuring in many other conditions such as shock, sunstroke, derangement of the digestive system, hysteria presence of some poison in the blood. So it is held that fever is only a symptom but not a disease by itself.

**சுரம்காய்தல்,** காய்ச்சலினால் பீடுறல் being affected by fever, raging with fever.

**சுரர்துருமம்,** தேவதாரு, deodar tree—Erythroxyton monogynum; 2. ஓர்வகைத் தேவ தாரு, a kind of Pine tree Erythroxylon aureolatum.

**சுரயோகம்,** a disease.

**சுரவதிசாரம்,** See சுரக்கழிச்சல்.

**சுரவல்லி,** அப்பிரக பாஷாணம், which see.

**சுரவன்பாக்கு,** ஓர் உயர்ந்த பாக்கு. a kind of superior areca nut.

**சுரவி,** சண்பகம், champaka flower; 2. பசு, cow

**சுரவிகாரநாசினி,** பாதிரி, Sterospermum suaveolens.

**சுரவிஞசி,** இடவகம், which see.

**சுரவின்பால்,** பசுவின்பால், Cow's milk.

**சுரவீக்கம்,** காய்ச்சலிற் காணும் உடம்பு, கை, கால் வீக்கம், Swelling due to fever.

**சுரவெப்பம்,** சுரத்தின் உஷ்ணம், temperature of the body during fever.

**சுரவேகம்,** சுரத்தின் தீவிரம், அல்லது கடுமை, high degree of fever.

**சுரவை,** வீக்கம், swelling.

**சுரழ்,** இலவம் பிசின், gun arabic, gum of silk cotton tree.

**சுரளம்,** புன்னை மரம், Common poon tree—Calophyllum inophyllum.

**சுரளிகை,** பாலை மரம், iron wood tree—Minu sops hexandrus.

**சுரஞசி,** விஷ்ணுகரந்தை, which see.

**சுரஞசினி,** See திருநாமப்பாலை; 2. see சீரான யிருசுவம்; 3. see பேராமல்லி; 4. see விஷமச் சுரஞசினி, 5. see சித்தாமல்லி.

**சுரனுவா,** பேராமல்லி, big Jasmine—Jasminum undulatum.

**சுரன்,** சூரியன், sun; 2. சுரம், fever; 3. ஓர் சிறு மீன், a small fish.

**சுரா,** கள், toddy.

**சுராகரம்,** தென்னை மரம், Cocoanut tree.

**சுராகரி,** நஞ்சுமுறித்தான், Indian or country ipecacuanha.

**சுராகாரம்,** ஓர்வகை யுப்பு, an unknown salt.

**சுராக்கம்,** பொன், gold.

**சுராங்கிஷக் குளிகை,** அகஸ்தியர் வல்லாதி 600ல் சொல்லியபடி பலவகை சுரங்களுக் கும் கொடுக்கும் மாத்திரை, a medicinal pill described in Agasthiar vallathi 600 and prescribed for different kinds of fever. see சுராங்கிஷ மாத்திரை.

**சுராங்கிஷச்சுருக்கு மாத்திரை,** கந்தகம், ரசம் இவைகளை எலுமிச்சஞ் சாறுவிட்டரைத்து ஓமம் அல்லது சீரகக் கஷாயத்தில் மேகக் கொதிப்பு, சுரம் இவைகளுக்குக் கொடுக்கு மோர் மாத்திரை. a pill containing mercury and sulphur as chief ingredients is given for venerial fever etc. with suitable vehicles, causmin or ajowan decoction.

**சுராங்கிஷமாத்திரை,** இரசம், கெந்தகம், அரிதாரம், வெங்காரம், அக்கராகாரம், மிளகு, திப்பிலி, நெல்லிமுள்ளி, கடுக்காய், காந்தம். இவைகளை வகைக்கு 1 விடை எடுத்து கலுவத்திலிட்டு வாளம் 10 விடை கூட்டி, முசுமுசுக்கை, ஆடாதோடை, கண்டங்கத்திரி, எலுமிச்சஞ்சாறு இவைகளை ஒவ்வொரு நாளைக்கும் ஒவ்வொரு சாருகவிட்டு அரைத்து மிளகு பிரமாணமாகச் செய்யும் மாத்திரை, இதனால் சர்வசுரமும் தீரும், இஞ்சி சுரசம், தேன், முலைப்பால் இவைகளில் 3நாள் 6 வேளை கொடுக்கலாம் புளியாகாது, a pill prepared with mercury, sulphur, arsenic sulphide, borax, magnet, and some bazaar drugs, as told in the text and given for all kinds of fever in suitable vehicles such as honey, ginger juice breast milk etc. twice daily; tamerind free diet.

**சுராங்குசரசம்,** நந்தி தேவரால் சகல சுரங்களுக்கும் சொல்லப்பட்ட ஓர் மருந்து, அதாவது, சுத்தி செய்த ரசம், கெந்தி, தாம் பூரபற்பம், மனோசிலை, தாளகம் ஏமாட்சிகம், சபரி இவைகளையும், அப்பிரகபற்பம், காவிக்கல், நாகதந்திவிரை, உ.லோக பற்பம், வெங்காரம், வங்கபற்பம் இவைகளை வகைக்கு 1 பலம் வாங்கி பழச்சாற்றால் 3 நாள் சித்திரமூல ரசத்தால் 3 நாள் புளியிலைச் சாற்றால் 3 நாள் அரைத்து அதை மேற்படி மிச்சம் நாலு ரசச்சாற்றிலும் ஊறப்போட்டு உலர்ந்தபின் (நிழலில்) கடலைப்பிரமாணம் மாத்திரை செய்து இஞ்சி சுரசத்தில் கொடுக்க சகல சுரங்களும் போம், இம்முறையை அநுமார் சீதையைத்தேடிக் கொண்டு தென்திசைக்கு வந்த பொழுது வியாகுலத்தால் சுரம் கண்டு உண்டான பொழுது அகஸ்தியர் முறையை செய்து கொடுத்து அந்த தாபசுரத்தை குணப்படுத்தினாராம்.

A pill, the preparation of which is said to given by Nandhidever. It contains calcined powder of iron, tin, mica, copper, besides mercury, sulphur, yellow orpiment, red orpiment borx etc. It is given for all varities of fever with ginger juice.

It is said that Agastiyar prepared this pill and gave to Ajeenayar who was affected by Thapa jwaram — fever due to distress — when he was going in search of Sita.

**சுராதி,** துளசி, holy basil Gcimum sanctum; 2. வட்டத்திருப்பி Indian pareira cissampeloe pareira.

**சுராதிசாரம்,** (சுரம் + அதிசுரம்) சுரத்தோடு கூடிய அதிசாரம், இதனால் அதிதாபம், மார்பு நோய், அருசி, பேதி, சீதம், ரத்தம் வீழ்தல், diarrhoea attended with fever.

**சுராபகம்,** See சுண்டைக்காய்,

**சுராபானம்,** கள், சாராயம், முதலிவைகளைக் குடித்தல், drinking toddy arrack or other in intoxicating liquors.

**சுராபானி,** குடிகாரன், drinkard.

**சுராமேகம்,** மூத்திரமானது கள்ளைப்போல் வெளுத்தும் நுரைத்தும், குழம்பாகவும் இறங்கு,மோர் வகை மேக நோய், இதைக் காய்ச்சினால் மாப்போல் வண்டல் படிந்து கள்ளைப்போல் மணக்கும், a disease in which the urine is white, frothy and thick like toddy a milky condition of the urine chylurea c. f. பிஷ்டமேகம்.

**சுரார்க்கம்,** பொன், gold, see சுரார்க்கம்.

**சுராலை,** சாம்பிராணி, gum benzoin — Styrax benzoin

**சுரி,** ஆண்நரி, male jackal 2. சுற்று spirital winding as crupers do 3. முறுக்கு, twist,

**சுரியகுழல்,** சுருண்ட கூந்தலை யுடையபெண் woman having curly hair; 2. பெண் மயிர், female hair.

**சுரிசுன்னபுட்பம்,** நந்தியாவட்டம், Indian rosabay — Tabernaemontana—coronaria.

**சுரிஞ்சான்,** ஒரு பழுப்புநிறமான கிழங்கு; இது மஞ்சட் கிழங்கைப் போன்ற ஓர் யுனானிச் சரக்கு. இது தித்திப்புச் சுரிஞ்சான், கசப்புச் சுரிஞ்சான் என இருவகைப்படும். தித்திப்பு வகையே வெண்மையாயும், உலர்ந்தபின் பழுப்பு நிறமாயும். விரிந்த தாமரை மொக்கைப்போலுமிருக்கும். இதை யுனானி வைத்தியர்கள் வாதரோகம், கபரோகம் இவைகளுக்குபயோகப்படுத்துவார்கள். தாதுவிர்த்தியை யுண்டாக்குவதுடன் கபத்தைப் பேதி மூலமாய் வெளிப்படுத்தும். கசப்பு வகையோ விஷத்தன்மை யுடையதாதலால் உள்ளுக்குக்கொடுக்க உதவாது. a yellow bulbous root known as mercury's finger—Hermodactylus—Colchicum luteum. It is an Unani drug. It consists of two kinds—Sweet and bitter. Sweet is white when fresh and yellow like crocus saffron when dried. It resembles like a blosso-

med lotus flower Unani doctors prescribe it in cases of rheumatism and phlegmatic diseases. It acts like a purgative in removing phlegm from the system. It is a good tonic. The bitter variety should not be used internally.

**சுரிஞ்சான்மிசிரி**, See சுரிஞ்சான்.

**சுரிஞ்சி**, மஞ்சணுற்றி; நுரை. small dyeing mulberry Morinda citrifolia.

**ரிதல்**, சுருங்கல், to shrink; 2. திரைதல், become wrinkled in the skin.

**சுரித்தமுகம்**, திரைந்த முகம், wrinkled face.

**சுரித்தல்**, சுழித்தல், winding spirally; 2. சுழித்து உள்ளே வாங்கல்.

**சுரிப்புறம்**, சங்கு, Conch; 2. நத்தை, snail.

**சுரிமண்**, சேறு, mire.

**சுரிமுகம்**, See சுரிப்புறம்; 2 துவாரமுள்ள பக்கம், that portion containing the hole.

**சுரியல்**, மயிர், hair; 2. நீர்ச்சுழி, whirl pool; 3. இளையோர் மயிர்; hair of the young. 4. பெண் மயிர், hair of the female.

**சுரீரெனல்**, see சுறிரெனல்.

**சுருக்கங்கோரை**, ஓர்வகைக்கோரை, a kind of koray root.

**சுருக்கம்**, சுருங்குதல், stricture; 2. ஆசனச் சுருக்கம், anal stricture; 3. குறைவு, diminution

**சுருக்கல்**, ஒடுக்கல், Contracting; 2. குறைத்தல், diminution as food.

**சுருக்கி**, ஆமை, tortoise; 2. சிறுகீரை, pig greens. Amaranthus campestris; 3. தொட்டாற் சுருங்கி, sensitive plant — touch me not plant.

**சுருக்கி**, சாதிலிங்கமயினம், cinnabar variety; 2. கசப்புபசளை, bitter purslane.

**சுருக்கிக்காய்சல்**, சுண்டக்காய்ச்சல், boiling down to reducible quantity.

**சுருக்கிடல்**, சுருக்குப்போடுதல், to strangulate 2. உருக்கு முகத்தில் உலோகங்களுக்கு மூலிகைக் குடிநீர் அல்லது சாறுவார்த்து அதன் சத்தை இழுக்கும்படி செய்தல், in Medicine pouring the juice or decoction of drugs in small quantities from time to time to metals in melting state in the process of calcination so as to absorb the essence of drugs. See also சுருக்கிடல்; சுருக்குக்கொடுத்தல்; சுறுக்கேற்றல்.

**சுருக்கிடு சரக்கு**, சுருக்குக்கொடுக்க உபயோகப்படும் சரக்குகள்; அவையாவன:— drugs useful for imparting while metals are in fusion viz:

1. இலிங்கம், cinnabar; 2. வெள்ளை, white arsenic; 3. மால்தேவி, yellow arsenic; 4. சிலை, red arsenic; 5. வீரம், per chloride of mercury; 6. கெவுரி, yellow oxide of arsenic 7. கெந்தி, sulphur; 8. சூதம், mercury. 9. நாகம், Zinc; 10. காரீயம், lead; 11. வங்கம், tin; 12. துரிசு, Copper sulphate; 13. செம்புசாரம்; 14. சிங்கி, galena.

**சுருக்கிட்டுக்கொள்ளல்**, See சுருக்குப்போட்டுக்கொள்ளல்.

**சுருக்கு**, சுருங்கச் செய்தல், causing anything to shrink; 2. வற்றச் செய்தல், causing to be reduced as கஷாயம், decoction which is reduced by boiling; 3. உருகிய உலோகத்திற்கு மூலிகை சாற்றைவிடல், administering or imparting juice of drugs to metals in fusion; 4. சுருங்குகை, contraction; 5. நீர்ச்சுருக்கு, burning sensation while passing urine; 6. சுருக்குதல், to lessen; 7. வில்வம், bael tree.

**சுருக்குதல்**, உள்ளுக்கிழுத்தல், drawing in contract; 2. இறுகப்பண்ணல், reducing; 3. குறைத்தல், lessening.

**சுருக்கெனல்**, சுருக்கென்று குத்தல், a feeling of lanciating pain.

**சுருக்கேற்றல்**, மேலும் மேலும் சுருக்குக் கொடுத்துக்கொண்டே போதல், increasing the imparting of juice of drugs to substances to increase their potencey.

NOTE:—This is done either to add or impart additional virtues to substances or to get rid of their injurious effects or impurities.

**சுருக்குக்கொடுத்தல்**, ஓடும் சரக்குகளைக் கட்டுவதற்காக, அச்சரக்கை ஓட்டிலிட்டு அடுப்பில் வைத்து மூலிகைச் சாற்றைச் சிறுகச்சிறுக அதில்விட்டுக் கட்டியைப் புரட்டிக்கொடுத்துச் சாறு செல்லச் செல்ல, பழையபடியும் விட்டுப்புரட்டிக் கொடுத்துக் கொண்டே வருதலாம் இந்தவிதம் நெருப்பின் சூட்டில் வைத்தும் அல்லது சூரிய வெப்பத்தில் வைத்தும் சுருக்குக்கொடுக்கலாம், to purify or consolidate such substances as cinnabar, sulphur, arsenic etc. which pass of as fumes by slight heat, this process is used; keep the substance on a mica plate and heat it with low

fire (தீபாக்னி) while droping continuously the juice is liquid which will consolidate or purify the substance. The substance also must be rotated very often during the process.

சுருக்குச்சதை, ring like muscle which closes a natural orifice sphincter muscle.

**சுருக்குத்தாக்கல்,** See சுருக்கிடல்.

**சுருக்குத்தைலம்,** தலைவலிக் குபயோகிக்கும் ஓர்வகைத் தைலம், a medicated oil or ointment applied to headache; 2. சுருக்குக் கொடுக்க பயன்படும் தைலம், oil used for சுருக்குக்கொடுத்தல்.

**சுருக்குப்போடல்,** See சுருக்கிடல்; 2. கழுத்துக்கு சுருக்கிட்டு உயிர்ச்சேதம் விளைவித்தல், causing death by strangulation in which rope is applied to the neck.

**சுருக்குப்போட்டுக் கொள்ளல்,** கழுத்திற்கு தானே சுருக்கிட்டு உயிரை மாய்த்துக் கொள்ளல், committing suicide by hanging ie. suspension from the neck.

சுருக்குவிழல், தோலில் சுருக்கம் அல்லது மடிப்பு விழல், formation of folds in the skin from corpulency.

**சுருங்ககம்,** நாபியைப் போன்ற ஓர்வகை விஷக்கிழங்கு, இதைப் பசுவின் கொம்பில் அதன் பால் செந்நிறமடையுமெனக் கருதப்படும், an unknown drug said to resemble aconite. It is said that it is capable of converting the milk of a cow into red colour if only the drug is tied to one of its horns.

**சுருங்கண்,** கண் குவளை புண்ணாகி நாளுக்கு நாள் கண் சுருங்கும் ஓர்வகைக் கண்ணோய், an eye disease marked by gradual wasting or diminution of the eye due to inflamation in the socket — phthisis bulbi.

**சுருங்கம்,** பீச்சுங்குழல், an instrument for expelling the fluid contained in it with some force — Syringe.

**சுருங்கலவாதம்.**

**சுருங்கல்,** குறைதல், being reduced; 2. பட்டினியாயிருத்தல், starving; 3. திரைவு அதாவது தோல் சுருங்குதல், formation of wrinkles on the body due to old age; 4. ஒடுங்குதல், shrinking.

**சுருங்கியாதி சூரணம்,** சுவாசம், காசம், விக்கல், வாயு, அருசி இவைகளுக்குக் கொடுக்கும் ஆ. வே. மருந்து சூரணம், An Ayurvedic medicine given for asthma, hiccough, vayu, nausea etc.

**சுருங்கீ,** கிளைமான் கொம்பு, stag's horn.

**சுருங்குகண்,** see சுருங்கண்; 2. கிழத்தினால் ஏற்படும் கண் சுருக்கம், shrunken eye due to old age.

**சுருங்குசதை,** துவாரத்தை அடைப்பதற்கேதுவான சுற்றிலுமுள்ள சதைகள், the circular muscles which contract and close the natural apertures orifices — Sphincter muscle — constrictor muscle.

**சுருங்குதசை,** See சுருங்குசதை.

**சுருசாவர்த்தம்,** தைவேளை. cleome felina.

**சுருசி,** நாவல்மரம், Jambul tree — Eugenia jambolana.

**சுருசுரெனல்,** வெயிலினால் அறை கொள்ளுதல், feeling hot from exposure to the sun.

**சுருட்காய்,** See சுண்டைக்காய், Solanam verbiacifolium.

**சுருட்கொள்ளல்,** சுருண்டுவிழுதல், fainting—falling from weakness.

**சுருட்டல்,** See சுருட்டிக்கொள்ளல்.

**சுருட்டி,** மயிர்ச்சிகைப்பூடு, Peacock's crest plant—Actincopteris dichotoma,

**சுருட்டிக்கொள்ளல்,** சுருண்டுகொள்ளுதல், winding into round folds coiling reptiles do. 2. களைப்படைதல், to be fatigued - lying tired.

**சுருட்டிப்பிடித்தல்,** வயிற்றில் சுருட்டி வலித்தல், twisting and griping pain as in the bowls; 2. குலையைப் பிடித்தல், a peculiar pain of liver; 3. பசியால், வயிறு சுருட்டி நோதல், twitching pain or sensation experienced in the stomach in excessive hunger.

**சுருட்டி மூலி,** பொன் முசுட்டை, Indian pareira gravel plant — Cissanpelos parelra.

**சுருட்டியடித்தல்,** மயக்கத்தினால் கீழே வீழ்த்தி மோதும்படி செய்தல், falling and dashing from giddiness.

**சுருட்டியிழுத்தல்,** ஓர் நரம்பிழுப்பு, twitching of the nerve.

**சுருட்டிவாங்கல்,** குறட்டை வாங்குதல், as cramp; 2. இழுப்போடுகூடி மூச்சுவாங்குதல், spasmodic breathing.

**சுருட்டிகம்,** நொச்சுளி, which see.

**சுருட்டு,** புகைச்சுருட்டு, Cigar; 2. மடக்குதல், rolling.

**சுருட்டுக் குடித்தல்,** சுருட்டுப்புகை யுட்கொள்ளல், smoking cigar.

**சுருட்டுப்பாசி,** கடற்பாசி, sea moss.

**சுருட்டுப்பிடித்தல்,** See சுருட்டுக்குடித்தல்.

**சுருட்டுப் புகையிலை,** சுருட்டுப்பிடிப்பதற்காக உபயோகப்படுத்தும் புகையிலை, dried leaves of tobacco plant formed into small rolls for smoking. It is opposed to மெல்லும் புகையிலை, the used for chewing with betel.

**சுருட்டுவாதம்,** முடக்குவாதம், அதாவது கை, கால்களை மடக்கும் ஓர் வாதநோய், a chronic inflammation of the joints of arms or legs with deformity — Arthritis deformans.

**சுருட்டை,** சுருட்டை விரியன் பாம்பு; இது சிறியதாயும் கபில நிறமாயும், ஓரத்தில் கருப்பாயுள்ள வெண் புள்ளிகளையுடையதாயுமிருக்கும். பிறைபோன்ற வெள்ளைப் பட்டை முதுகின் இருபக்கமும் அமைந்துள்ளது. வயிறு வெண்ணிறம், இதுசீறிப்பாயுந் தன்மையுள்ளது. இரு பக்கமும் சுருட்டிக் கொண்டு மடிப்புகள் உராய்வதால் புஸ் என்று சப்தமுண்டாகும்; பற்கள் மிக நீளம், வளவளப்புள்ளன. கண்களோ கொடிய பார்வை யுள்ளன. விஷப்பாம்புகளில் இது மிகக் கொடியது. இதன் கடியினால் உடம்பு மதமதத்து பிறகு கொல்லும், அடியிற்கண்டபடி இது பலவகைப்படும்; carpet snake Echis carinata (alias) Pseudoboa carinata. It is a small viper brown or brownish grey in colour with a series of whitish spots edged with blackish brown a semi circular whitish band on each side of dossal spots; belly whitish. It is fierce and aggressive and ready to attack.

It throws itself into a double coil, the folds of which rub against each other making a rustling sound very like hissing. Its fangs are very long and mobile and its eye has a peculiarly vicious appearence. It is the most active and aggressive of all poisonous snakes. Kills by slow poisoning followed by gangrene or mortification.

The following are the different kinds:

1 இரத்தச்சுருட்டை — blood carpet snake the bite of which causes vomitting of blood.
2. அரணைவாற் சுருட்டை — lizard - tail carpet snake. It has a tail like a green lizard.
3 நெடுஞ்சுருட்டை — long carpet snake.
4 செஞ்சுருட்டை — red carpet snake.
5. குறுஞ்சுருட்டை — short carpet snake.
6. ஊதுசுருட்டை — swelling carpet snake' its bite causes swelling.
7. அங்குலச்சுருட்டை — inch carpet snake so called from its small size.

**சுருட்டை,** சுருட்டைமுடி, curly hair; 2. மிளகாய்ச்செடிக்குக் காணும் ஓர் நோய், a disease attacking the chilly plants.

**சுருட்டைக்கழலை,** சுருட்டிக் கொண்டிருப்பதைப் போற் காணப்படும் ஓர் வகைக் கழலை, skin tumour having the look of a coil of intestine — Eiloid tumour.

**சுருட்டைத்தலை,** சுருள் மயிருடைய தலை, head having curly hair.

**சுருட்டைநரம்பு,** தளர்ந்த முடிச்சுகள் போற் காணும் (கருநிற) இரத்த நாளங்கள், enlarged veins appearing like knots. Varicore veins.

**சுருட்டைப்பாம்பு,** ஓர் விஷப்பாம்பு, a kind of poiscnous snake.

**சுருட்டைமயிர்,** சுருள்மயிர், curly hair.

**சுருட்டையட்டை,** தொட்டால் சுருட்டிக் கொள்ளும், a leech which curls when touched.

**சுருட்பட்டை,** பப்பிளி, red creeper.

**சுருட்பள்ளம்,** காதின் மேல் வளைவின் பள்ளம், the margin of the pinna of the ear — Helix.

**சுருணி,** தொழுகண்ணி, unidentified plant.

**சுருண்டுபோதல்,** சோர்வடைதல், to get exhausted; 2. பலங்குன்றல், to become weak; 3. ஒழுங்குதல், a state of extreme prostration and depression as in the case of one attacked by cholera. 4. இறத்தல், dying.

**சுருண்டுவிழல்,** மெலிவினால் மயங்கிவிழல், drooping down from fatigue.

**சுருண்டைக்காய்,** See கண்டைக்காய்

**சுருதஞானம்,** கல்வி கேள்விகளினாலுண்டாகும் அறிவு, knowledge derived from education and culture.

**சுருதா,** கருப்பறுகு, black variety of Adenema hissopifolia.

**சுருதி,** ஒலி, sound; 2. காது ear; 3. மந்திரம் mantric formula sacred to some diety. 4. ஆகமம் புராணம் இசுமிருதி சேர்ந்த வேதங்கள் Vedas embracing Agamas, Puranas and Smritis.

**சுருதி நேத்திரம்,** கருப்பு அகரம், probably a black variety of அகரு.

**சுருதிபெற்றவன்,** கழுதை, ass so called from its unpleasant cry.

**சுருபகாஷ்டம்,** செவ்விறகு, red fuel — red wood.

**சுருபவேர்,** See அத்திமல்லிகை.

**சுருமரம்,** பெரிய சவுரிமான், bosgrunnieus.

**சுருமா,** See சுருமாக்கல்.

**சுருமாக்கல்,** See சுக்கான்கல்.

**சுருமாக்கல்,** அஞ்சனக்கல் அல்லது நீலாஞ்சனக்கல். 1. சுரோத்தாஞ்சனம்; 2. சவ்விரஞ்சனம். இது ஈயத்தைப் போல் சாம்பல் வர்ணமாயிருக்கும். இது சியாம் இஜிப்து தேசம் இவ்விடங்களில் மிகுதியாக அகப்படும். இது சாதாரணமாய் சருமநோய்க்கு உபயோகப்படும். இதில் மை தயாரித்துக் கண்ணுக் கிடவுதவும். இது இருவகைப் படும் 1. சுரோத்தாஞ்னம்; 2. சவ்வீராஞ்சனம் ஒன்று, புற்றுக்காளான் போல் சிறிது கருப்புக் கூடிய காவிக்கல்லைப் போலிருக்கும், மற்றொன்று வெண்ணிறம் அல்லது புகை நிறமாயிருக்கும், டில்லிக்கு மேற்கேயுள்ள பூமியெல்லாம் சுருமாக்கல்லாகும் இக்கல்லின் மட்டத்திற்குக் கீழ் இருக்கும் பாறை தான் நீலாஞ்சனக் கல்லாகும், native sulphide of Antimony Antimonium sulphuratum or Antimonium nigrum. It is of two kinds. One is blackish brown and the other is white or smoky colour. It is found in great quantities in Siam and Egypt It is generally useful in cutaneous diseases collyrium is prepared from this and applied for the eyes and is also used for painting the eye brows and eye lids.

NOTE:— From the composition and uses of lead and galena described under Anjanam it would seem that by the term 'Surma' the Hindus meant sulphide of lead and not sulphide of antimony as is generally supposed.

**சுருமாரம்,** See சாரணை.

**சுருமிடகப்பொட்டி,** an unknown drug supposed to fix arsenic.

**சுரும்பாரோகம்,** அடிக்கடி முறுக்குக் கொட்டாவி விடும் நோய், இது சாதாரணமாய் மூளைக்கேற்படும் கோளாறினால் உண்டாகும்; the act of stretching and yawning frequently. This is often the result of some disorder in the cerebral system, a lethargic state.

**சுரும்பர்,** வண்டு, beetle; 2. ஆண் வண்டு male bettle drone.

**சுரும்பிதம்,** ஓர் வித காமலீலை, இதில் பெண்கள் தங்கள் குறி சிறிதாகவும் ஆழமில்லாமலும் இருக்கும் காரணத்தை முன்னிட்டு இரண்டு துடைகளையும் உயரத்தூக்கி எவ்வளவு பரப்ப முடியுமோ அதுவரைப் பரப்பி குறி விரித்துப் புணர்ச்சிக்குத் தோதுவாகும் படி இயற்றிக் கொள்ளும் ஓர் நிலைமை, (In sexual Science) a position in which young girls having short and small vagina are forced to raise thighs upwards and draw them wide apart to the fullest extent so as to allow penetration during intercourse.

**சுரும்பு,** See சுரும்பர்; 2. ஓர் கடல் மீன் உணவுக்குதவும், a sea fish good for eating Lactarius delicatulus; 3. மலைவண்டு, mountain beetle.

**சுரும்புக்காரல்,** ஓர் வகைக் காரல் மீன், a fish of the Equnala genus.

**சுரும்புமீன்கறி,** சுதும்பு என வழங்கப்படும் கடல் மீன் வறுவல், see சுரும்பு இது ருசியாக விருக்கும்; இதனுல் வயிற்று பிணிகள் நீங்கும், வீரியத்தையும் பசியையும் தரும், பத்தியத்திற் றதவும். fried curry of Lactarius delicaulus, it is tasteful, capable of curing tympanitis and other abdominal disease, it stimulates sexual desire and hunger and useful for those on diet.

**சுருவம்,** நெய்த்துடுப்பு, a stirring rod used in ghee; 2. ஓர் அகப்பை, a kind of laddle.

**சுருவநாதியுப்பு,** See சத்தியுப்பு.

**சுருவவாசனி'** கற்ருழை, aloes.

**சுருளட்டை,** சுருண்டு கொள்ளும் அட்டை, a leech capable of coiling round.

**சுருளப்பட்டை,** See சுருள்பட்டை.

**சுருளவதக்கள்,** பச்சிலையை சுருங்கும்படி வாட்டல், roasting leaves for medicinal purposes till they are completely shrunk.

**சுருளவாட்டல்,** See சுருளவதக்கல்.

**சுருளி,** தலைச்சுருளி Indian birth wort; 2. தொழுகண்ணி, telegraph plant — Hedysarum gyrans; 3. சந்தனவேம்பு: sandal neem cadreia toona;. 4 ஜவாதேசத்துப் பூ மரம், Java flower tree Mesua ferrea.

**சுருளிமாமுனி,** ஓர் குறிஞ்சிப்பூடு, cone head — Strobilanthes barbatus.

**சுருளுதல்,** பசியால் சோர்தல், drooping from hunger.

**சுருளுப்பட்டை,** வெம்பாடம்பட்டை, see சுருள்பட்டை.

**சுருளுப்பூலா,** விஷப்பூலா, poisonous poolah.

**சுருளை,** சுருள், coil — roll 2. குருத்து, tender shoot.

**சுருள்,** சுருட்டை curl — coil; 2. தாமரை உட்சுருள், the inner fold of the young lotus. 3. see சுருள்பட்டை; 4. பெண்மயிர் female hair.

**சுருள் தங்கம்,** தங்கரேக்கு, gold leaves.

**சுருள்தேவதாரி,** சீமைத்தேவதாரி, இதனின்று எடுக்கும் எண்ணெய் வயிற்றுக் கோளாறுக்குக்கும், கட்டி சீழ் கொள்ள மேற்பூச்சு மருந்தாகவும் உபயோகப்படும், English deodar — Pinus longifolia. Fine turpentine exuding from the bark on incision is internally a stomachic and externally applied as a plaster to abscesses to cause rapid supurration.

**சுருள்நாரி,** உரோமவிருட்சம், which see.

**சுருள்பட்டை,** வேம்பாடம்பட்டை அல்லது செங்கத்தாரிப்பட்டைக் கொடி, அதாவது சாயப்பட்டை dye root of red creeper bark of felse peacock's foot tree — Ventilago madraspatana.

**சுருள்பட்டைக்கொடி,** see சுருள்பட்டை.

**சுருள்பூச்சி,** நிலக்கடலைச் செடியை அரிக்கும் பூச்சி, insects which bright the ground nut plant — Pulchriphyllum.

**சுரூபகலை,** சந்திரகலை, the vital air passing through left nostril.

**சுரூபகாஷ்டம்,** செவ்விறகு, red fuel.

**சுரூபக்குளிகை,** see சொரூபக் குளிகை.

**சுரூபக்கேடு,** அங்ககுறைவு, defect in the organs or limbs.

**சுரூபநிலைப் போதகம்,** கஞ்சாக் குடுக்கை, gunjah (Indian hemp) smoking pipe. It is so called because it induces trance.

**சுரூபமணி,** உடும்பின் வாயில் கழஞ்சி இரசம் விட்டு வாயை நூலால் தைத்து, பாணையிலேற்றி நிறைய உப்பிட்டு அதன் வாயை மூடி மேலும் நிறைய எருவடுக்கிப் புடம் போட்டு, ஆறியபின் இரசம் மணியாகி உருண்டு நிற்கும் பிறகு ஒரு கரண்டியில் வெள்ளியமிட்டுருக்கி மணியைப் போட நீர் வாங்கிக் குளிகை யாகும் இதைப் பசுவின் பாலில் போடசாக வெள்ளி யாகும். Put 2½ Pagoda a weight of purified mercury into the mouth of water lizard and stitch it. Put it in a pot. fill it with common salt. Then subject it to fire Mercury will become a consolidated ball. If this ball is put into melted tin, the tin becomes silver. It must be immersed in cow's milk & taken.

**சுரூமம்,** See சொரூபக் குளிகை; 2. வடிவம், image; 3. தன்மை, nature.

**சுருபளுதி**, குப்பைமேனி, rubbish plant — Acayptha indica.

**சுரே**, கொத்தான், green thread creeper — Cassytha filiforms.

**சுரேசுவரி**, முசுமுசுக்கை, bristly bryony — Bryonia Scabra.

**சுரோச்சியை, துளசி**, holy basil — Ocimum sanctum.

**சுரேந்திர சித்து**, கருடன் brahmin kite.

**சுரை**, கறிச்சுரை, சுரைக் கொடி இதை மழை காலங்களில் வீட்டுப்புறக்கடைகளிலும், தோட்டங்களிலும், கொல்லைகளிலும் பயிரா க்குவதுண்டு, இதன் காய் ஓர் உணவு பதா ர்த்தம் இது குடத்தைப் போல் உருண்டை யாயும் பருமனுயும் பளபளப்பாயும் மேல் தோல் மிருதுவாயிருக்கும், உள்ளே குடல் கள் விதைகள் வெண்மை, நீர் சுரந்திருக்கும். இது சீதளத்தைத் தரும், மூத்திரத்தை அதி கப்படுத்தும், இதன் கஷாயம் வீக்கம் மகோ தரம், நீர்க்கட்டு இவைகளைக் குணப்படுத் தும், இதைச்சர்க்கரையோடு கலந்து அல்வா முதலிய மிட்டாய் வகைகள் செய்ய உதவும் இதன் குடல்புண்களுக்கு வைத்துக் கட்ட வுதவும், பேதி மருந்திலும் சேரும். பேய்க்கு மட்டிக்குப் பதிலாக இதை உபயோகிப்ப துண்டு, இதன் இலைக்கஷாயத்துடன் சர்க் கரை கலந்து காமாலைக்குக் கொடுக்கலாம். விதைகளினின்று எடுக்கும் எண்ணெய் தலைவலிக் குபயோகமாகும், இதன் கீரை கடைந்து தின்னலாம், காய்ந்த சுரை வாத் தியம் செய்யவுதவும், trumpet gourd — Lagenaria vulgaris — It is grown in rainy season in back yard of houses, gardens fields etc. It is a vegetable common in Hindu houses. The fruit is either long with broad base or round resembling a pot. It has a smooth surface. It is yellow when ripe — pulp and seeds white. It is cooling and diuretic. A decoction of this is useful for swelling in dropsy, suppression of urine. Mixed with sugar and ghee it is useful in preparing sweets such as halva.

Pulp of fruit used in poultices and purgative and is substituted for bitter water melon (colocynth). It is also used as a cooling application to the shaven head in delivium. Decoction of leaves mixed with sugar is given in jaundice; seeds yield a clear limpid oil and is used for headache. In houses it is sliced and cooked as curry; its shoots and leaves are eaten by all classes. Dried fruits are used for making stringed instruments and converted into bottles to store seeds, medicines etc.

1. கற்சுரை — spinous wild indigo. Tephrosia spinosa.
2. பேய்ச்சுரை — bitter gourd.
3. காய்ச்சுரை — புளிச்சைக் கீரை, Indian sore green — Hibiscus cannabinus.
4. கறிச்சுரை — bottle gourd used for culinary purposes. Lagenaria vulgaris.
5. காட்டுக் காய்ச்சுரை — wild sour green. Hibiscus Suratensis.
6. காட்டுச்சுரை — false calabash Cucurbita Lagenarius (alias) Rupo lagenarius.
7. கும்பச்சுரை — which see.
8. கருஞ்சுரை — black gourd.
9. கின்னரைச்சுரை —
10. பாத்திரச்சுரை —

**சுரை**, கறிச்சுரை. bottle gourd; 2. கள், toddy, 3. கறவைப்பசு, milch cow; 4. தேன், Honey; 5. சூரணம், medicinal powder; 6. உட்டுளை inner cavity; 7. அமுதம், nector; 8. பூட்டு வாய், joint; 9. பசுவின் முலை, teat of a cow, 10. உள்ளீடில்லாது குழிந்தவிடம், any depression or indentation caused on the surface; 11. மூங்கிற்குழாய், bamboo tube; 12. துவாரம், hole or cavity.

**சுரைக்கந்தகம்**, இது ஓர் வைப்புச் சரக்கு; இது நாற்றமில்லாக் கந்தகம்; நெருப்பிற்கு ஓடாது; brim stone in round pieces or sticks a prepared sulphur. odourless, does not fume in fire.

**சுரைக்கந்தி**, see சுரைக்கந்தகம், 2. வானக் கந்தி, sulphur used in fire works. மச்ச முனி 800ல் சொல்லியபடி துருசு. நாகம், இரசம், வீரம், இலிங்கம், மனோசிலை, அரி தாரம், சத்திசாரம், இவைகளைப்பொடித்துக் குப்பியில் வைத்து எரித்திட ஒன்றாய்க் கட்டி உருகும், இதுதான் சுரைக்கெந்தி, It is a kind of prepared sulphur. copper sulphate, zinc, mercury, corosive sublimate, cinnabar, red orpiment, yellow orpiment and sathi sarnam are powdered & put in a boule, and burnt as told in Matcha muni 800. The resultant is சுரைக்கெந்தி.

**சுரைக்கரந்தை,** See சுரக்கரந்தை.

**சுரைக்கருவி,** இருதயம், the heart.

**சுரைக்காய்,** சுரைக்கொடியின் காய்; கறிச் சுரை; இதனால் வாதபித்தம், அரோசிகம், பீலிக நோய் இவை யுண்டாகும்; சூடுபோம், fruit of bottle gourd creeper. See சுரை.

**சுரைக்காய்க் கந்தகம்,** See சுரைக்கந்தகம்,

**சுரைக்காய் முலை,** தளர்ந்த முலை, a loose breast.

**சுரைக்குடுக்கை,** காய்ந்த சுரை அல்லது சுரைக்காயோட்டுக் குப்பி, boul made of the shell of dried fruit of bottle gourd —fakeer's bottle used as feeder bottle.

**சுரைக்குழல்,** மூத்திரக் குழல், the coiled corticle portion of the urinary tube— spiral tubule.

**சுரைக்கெந்தி,** வாணகெந்தி, See சுரைக்கந்தி

**சுரைக்கொடி.** See சுரை.

**சுரைக்கொழுந்து,** சுரைக்கொடியின் இளம் இலைகள், tender leaves of the bottle gourd creeper.

**சுரைசமூலம்,** முழுச் சுரைச்செடி, இது மூத்திரச் சிக்கல், உடம்பு வீக்கம், பைத்திய ரோகம் போக்கும், bottle gourd plant. The entire plant is usefully employed in cases of urinary troubles swelling of the body and lunacy.

**சுரைச்செப்பு,** see சுரைக்குடுக்கை, இது மருந்துகள் வைப்பதற்குதவும், it is useful to keep certain medicines.

**சுரைபவனி,** கள், toddy.

**சுரைப்பரணி,** சுரையிலை, leave of bottle gourd creeper.

**சுரைப்பழம்,** பழுத்த சுரைக்காய், riped fruit of bottle gourd creeper.

**சுரையிலந்தை,** ஓர் வகை இலந்தை, see இலந்தை.

**சுரையிலை,** சுரைக்கீரை, இதனால் கோவை, உடம்பு வீக்கம். முத்தோஷம் போம்; மலமிளகியிறங்கும்; நீரிறங்கும்; bottle gourd leaf. It is useful in cases of anemia. swelling due to dropsy derangement of the three humours in the system. It is a laxative and digestive.

**சுரையிலைச்சுவரம்,** வங்கூழ். மரம், spleen tree — Amoora rohituka (செம்மரம்).

**சுரைவிளக்கு,** மருந்தெரிக்க உபயோகிக்கும் விளக்கு, lamp used for heating medicine.

**சுரோணம்,** சிவப்பு, redness

**சுரோணராசவர்த்தம்,** ஓர்வகை சிவப்பு இராசவர்த்திக்கல், a kind of red precious stone.

**சுரோணி,** யோனி, female genital. Mons veneris; 2. பிட்டம், buttocks; 3. அநாமிரை, pelvic region; 4. இடுப்பு. hip.

**சுரோணி கந்தம்,** கவுட்டி, acetabulum.

**சுரோணிசூலை,** வாதத்தினால் இடுப்பின் பக்கங்களிலும், பிட்டத்திலும் சூதத்தால் உண்டாகும் குத்தல்; ஓர் வாத நோய், pain in the loins and buttocks due to vascular causes; acute pain in the pelvic region.

**சுரோணிதக்கட்டு,** சூதகக்கட்டு, supression of the menses.

**சுரோணிதக் கரப்பான்,** செங்கரப்பான், a kind of rash.

**சுரோணிதக்கிருமி,** நாதக்கிருமி, germ cell.

**சுரோணிதக்கேடு,** மாதவிடாய் கோளாறு, disorder of menstrual blood, deranged menstruation.

**சுரோணிதநீர்,** பெண்காமக்கனீ, a seminal fluid in a woman semen muliebre

**சுரோணித நோய்,** மாதவிடாய் சம்பந்தமாயேற்படும் நோய், diseases of menstruation.

**சுரோணிதம்,** உதிரம், blood; 2 மகளிர்சூதகம் menustral blood; 3. கந்தகம், sulphur; 4. பூநீறு, efflorescence in the soil of fullers earth; 5. நாரிசுக்கிலம், seman like fluid prostate fluid; 6. இந்திரக் கோபப்பூச்சி, scarlet moth, Mutella occidentalis.

**சுரோணிதவரிசம்,** கண் இரைப்பையில் நினவோடும் எரிச்சலோடும் கூடிய மெல்லிய சதை வளர்ந்து இது சுத்தி கொண்டு நீக்கினும் மறுபடியும் கிளைக்கும், a disease of the eye lid marked by soft and fleshy growth with itching and burning sensation and recurring even after operation.

**சுரோணித வாதம்**, நெஞ்சு, கைகால்களுக்கு அதிர்ச்சி கண்டு அசைக்க வொட்டாது வலித்து, உடம்பு வறண்டு, நாவும் பல்லும் கடுத்து நொந்து, உளைவுடன் குத்தலுமுண்டாகுமோர் வாதநோய், யூகிமுனி 1200 a disorder of menstruation in woman marked by affection in the chest and limbs extreme sensibility to pain, dryness in the skin pain in the dentrin nervous shock, accompanied by intense bodily pain.

**சுரோணிதவாயு**, பெண்களுக்குப் பிள்ளைப் பெற்றவுடனே யோனி உள்ளடங்கி, பிறகு இரத்தம் துளிதுளியாய்ச் சிலையில் படுதலும், மூத்திரம் சரவர இறங்காமலும் உடலில் தங்குவதால் ஏற்படும் வலி, a disease in women marked by pain due to suppression of menses or irregular menstruation caused by the contraction of the passage immediately after delivery urinary disorder pain etc.

**சுரோதசம்**, channels.

**சுரோதசாதி**, சாமசாதியாகிய ஆண்சாதி நால்வகையிலொன்று, one of the four classes of men divided according to their lust.

**சுரோதமகடு**, சின்ன முள்ளங்கி, small radish

**சுரோதம்**, கால்வாய், தாரை உடம்பிற்குள் உணவு செல்லுமார்க்கம், the canal through which food and drink passes to the stomach — Oesophagus.

**சுரோதவிகாசம்**, உடலிலுள்ள எல்லாத் துவாரங்களையும் இரத்த நாளங்கள் முதல் எல்லாக் கால்களையும் திறந்து விடுவதாகும், opening out of channels including blood vessels

**சுரோதவிகாரம்**, இரத்தம் மாறுபாடுகள், vascular phenomena.

**சுரோதாஞ்சனம்**, இதுவே சுருமாக்கல் ஓர் வகைச் சுத்தமான கருப்புக்கல்; இது யமுனை நதியில் கிடைக்கும் அஞ்சனத்திற்குள் இது தான் மிக்க சுத்தமானது கண்ணின் எரிச்சலையும், நமைச்சலையும் போக்கும். உடம்பின் வலி, கெட்டநீர் முதலிய மாசுகளை சுத்தப் படுத்தும்; பார்வை தெளிவடையும், காற்று வெயில் முதலியவற்றின் கொடுமை சகிக்கக் கூடிய வலுவைக் கண்ணுக்குக் கொடுக்கும் இது புற்றின் மீது முளைக்குங் காளானைப் போல் கொஞ்சம் கறுப்பு (வெள்ளை) நிறமும் காவிக்கல்லையும் போலிருக்கும், இது கரிச்சாலைச்சாற்றினால் சுத்தியாகும் இது குணத்திலும் ரசம், வீரியம் முதலியவைகளில் சவ்வீராஞ்சனத்தை ஒத்தது, கறுப்பு, வெள்ளை என்ற வித்தியாசமே தவிர வேறொன்றுமில்லை, white galena or lead sulphide (antimony). It is produced on the banks of the river Jumna and is the best and purest of collyriums. It alleviates the burning and itching sensation of the eyes and removes all local pains secretions and impurities, increases the range of vision enables the eyes to bear the blasts of wind and glare of the sun and guards against the inroads of ocular affections.

NOTE :— It is of a white variety of anjana. (Galena or sulphide of lead). It is found in the bed of the river Jumna. It is known in Hindustani as saffed Surma. The article supplied under this name is calcareous or Iceland spar. It is considered inferior to the black surma or galena c. f. சவ்வீராஞ்சனம்.

**சுரோத்தரம்**, சந்தனம், sandal wood.

**சுரோத்திர நரம்பு**, காது நரம்பு இது காதுக்குள் சென்று அனேக இலைகளாய் பிரிந்து காதறைக்குள்ளிருக்கும் நீரின் மேல் மிதந்து கொண்டிருக்கும். vestibulo cochlear (eighth cranial nerve) divides into filaments in the internal ear and floats in the endolymph.

**சுரோத்திரம்**, காது, ear; 2. கேள்வி hearing.

**சுரோத்திரானகம்**, காதினுட்பறை, drum of the ear — Tymphanum.

**சுரோத்திரேந்திரியம்**, ஞானேந்திரியம், one of the five sensary organs organ of hearing — Ear.

**சுரோவத்திரவி**, தாளிசபத்திரி, East Indian plum. Flacourtia — cata phracta.

**சுர்மா**, See சுருமாக்கல்.

**சுலசிதகம்**, காமலீலைகளில் ஒன்று, பெண் ஒரு காலை தூக்கி தலைபக்கம் சாய்த்தும் மற்ற காலை தரையில் நீட்டியும் புணர்ச்சியில் ஈடுபடுதல், (In Erotic Science) a kind of posture in coitns with one leg on the head and the other downwards.

**சுலனன்,** நெருப்பு, fire.

**சுலாய்ப்பு,** ஒளி, lustre.

**சுலாவுரொட்டி,** மெதுவு ரொட்டி, pan cake.

**சுலானம்,** நாயுருவி, Indian burr. Achyranthas. aspera; 2. குறைவு, deficiency; 3. சேறு, mire.

**சுலி,** See சுல்லி.

**சுலுகம்,** சிறங்கை, handful.

**சுலுகை,** முதலை, Crocodile.

**சுலூனம்,** ஓர்வகை மலக்கிருமி, a worm in the intestine.

**சுலேதியம்,** மாவிலங்கு, three leaved caper —Crataeva religiosa.

**சுலோகி,** கள், toddy—vinous liquor.

**சுலோசனம்,** மான், deer; 2. மூக்குக்கண்ணாடி, spectacle; 3. அழகிய கண், beautiful eye.

**சுலோபம்,** எறும்பு, emmet, ant.

**சுல்,** வெள்ளி, silver.

**சுல்பசுந்தரரசம்,** சூலைக்குக் கொடுக்கும் ஓர் ஆ. வே. மருந்து, an Ayurvedic medicine for rehumatism.

**சுல்லம்,** செம்பு, copper.

**சுல்லன்,** பீளைக்கண்ணன், man with blear eyes.

**சுல்லி,** அடுப்பு, oven; 2. மடைப்பள்ளி, kitchen (in the temple).

**சுல்லு,** வெள்ளி, silver; 2. பல்லிப்பூடு, lizard plant.

**சுல்வம்,** சிறங்கை, handful; 2. செம்பு, copper.

**சுவகம்,** நூதனமாய் ஏற்பட்ட குணம் அல்லது நியமம்; peculiarity of temperament or constitution — Idiosyncracy.

**சுவகுப்தம்.** வெள்ளைப்பூனைக் காஞ்சொறி; couitch plant — white. Mucuna pruriens.

**சுவசகாசத்தி,** பார்ப்பை மரம்; அதாவது வன்னிமரம். suma tree. Prosopis spicigera.

**சுவசம்வேதனம்,** தன்னைத்தான் அறிகை, to realise one self.

**சுவசம்வேத்தியம்,** தன்னாலே அறியப்படுவது. that which is self taught.

**சுவசனம்,** மூச்சு உள்ளுக்கிழுத்தல், the act of drawing air into the lungs. Inhalation.

**சுவசனி,** சுவாச கருவி, அதாவது வாய், மூக்கு வழியாய், தூசு, சாரல், புகை முதலியவைகள் புகாதபடியுள்ள ஓர்வித மூடி, an appliance covering the mouth and the nose to exclude dust cold smoke etc — Respirator.

**சுவசாகம்,** பொருத்துகளுக்கயலாய், வன்னசைகள் தடங்கலின்றி, இயங்கும்படி அவைகளுக்குச் சமீபமாய் அமைத்திருக்கும் நிணம் நிறைந்த சிறு சிறுப்பை, a number of large or small pouches or sacs in the subcutancous tissue enclosing a clear viscid fluid near the joints as in front of kneecap etc — Bursa mucosa.

**சுவசுபம்,** அரக்காம்பல், அதாவது செவ்வாம்பல், red Indian water lily — Nymphae edulis.

**சுவச்சந்தபைரவரசம்,** சாரவுப்புகளைச் சேர்த்து எருக்கம்வேர்க் கசாயத்தால் அரைத்து கண்டகுப்த சன்னிக்குக் கொடுக்கும் ஓர் ஆயுள்வேத மருந்து, an Ayurvedic medicine for a variety of delirium.

**சுவச்சம்,** விளக்கெண்ணெய்; castor oil; 2. கண்ணிலுள்ள முக்குண நீரின் பொதுப் பெயர், a common name for the three humours in the eye; 3. ஒளி, transparency; 4. சுகம், convalescence; 5. நல்லெண்ணெய், gingelly oil; 6. சௌக்கியம், healthy; 7. முத்து, pearl.

**சுவச்சலம்,** பேராமுட்டி, fragrant pavonia—Pavonia odorata.

**சுவடு,** தழும்பு, a scar on the body. Cicatrice 2. அடிச்சுவடு, foot step.

**சுவணம்,** கழுகு, vulture: 2. பொன், gold; 3. கருடன், brahumini kite; 4. உலோகக்கட்டி. ore.

**சுவண்டிலை**, see சவண்டிலை,

**சுவதம்**, மாமரம், mango tree.

**சுவத்தம்**, சொஸ்தம்; சுகம், healthiness.

**சுவத்திட்சணம்**, இங்குணம், which see.

**சுவஸ்தம்**, சௌக்கியம், healthiness.

**சுவஸ்திகம்**, ஓர்வகைக் குறுக்குக் கட்டு; a circular cross bondage; 2. ஓர் சிலுவை போன்ற குறி, a cross shaped religious in signia — svastika. 3. It is a sign made by the crossing of two straight lines going in four directions.

**சுவஸ்திகாசனம்**, தொடைக்கும் முழங்காலுக்கும் நடுவே இரண்டுள்ளங் கால்களையும் செலுத்தி அமரும் ஓர் யோக நிலை, a posture in yoga practice.

**சுவநம்**, சண்பகம், champak flower.

**சுவந்தா**, இருவாட்சி, which see.

**சுவபாவசித்தி**, சஞ்சித கர்மத்தால் நேரும் இயற்கைப்பயன், development of nature referring to the unexhausted acts of previous lives.

**சுவபாவம்**, see சுபாவம், nature.

**சுவமை**, பொன், gold.

**சுவயதாபமானி**, தானாகவே உஷ்ண அளவை நிர்ணயிக்கும் கருவி, an instrument by which temperature is ascertained, self registering thermometer.

**சுவயமக்கினி குமாரரசம்**, சுத்திசெய்த ரசம் கெந்தியை கல்வத்திலரைத்துக் கூழ்போலாக்கி அதற்குச் சமஎடை அயபற்பம் சேர்த்து, கற்றாழைச் சாற்றினாலரைத்துப் பிறகு திரிகடுகு திரிபலை சூரணத்தில் சய ரோகம், காசம், முதலிய நோய்களுக்குக் கொடுக்குமோர் ஆ. வே. மருந்து, an Ayurvedic medicine containing mercury, sulphur and iron prescribed for bronchitis and consumption.

**சுவயமக்கினிரசம்**, இரசம், கெந்தி, அயபற்பம், இவைகளை மூலிகைகளின் சாற்றினாலரைத்து ஆயுள்வேத முறைப்படி பாவனை செய்துலர்த்தி சயம், காச ரோகத்திற்குக் கொடுக்கும் ஓர் ஆயுள்வேத மருந்து, an Ayurvedic medicine for consumption.

**சுயவம்குப்தா**, see சுவகுப்தம்.

**சுவரகரகாரி**, சுரத்தைத் தணிக்கு மருந்து, febrifuge.

**சுவரகுடாரம்**, சுரத்திற்காக பாஷாணத்தை கொண்டு செய்யுமருந்துகள், preparation arsenic medicines for fevers.

**சுவரக்கட்டி**, see சுரக்கட்டி.

**சுவரக்காய்ச்சல்**, சத்து இறங்கும்படியாகக் காய்ச்சுதல், heating or boiling so as to extract essence as in decoction.

**சுவரசதம்**, குரற்கம்மல், hoareness of voice; பேதி, loose or watery motion.

**சுவரசம்**, சுயசாறு, pure juice of fresh drugs.

**சுவரபங்கம்**, குரற்கேடு, affection of voice.

**சுவரபேதம்**, குரற்கம்மல், hoarse throat.

**சுவரம்**, சுரம், fever; 2. சவட்டுமண், fuller's earth. 3. குரல், voice.

**சுவரிலுப்பு**, அவிப்பிணம்;

**சுவரொட்டி**, சுவர்முள்ளங்கி, which see. 2. ஆட்டின் மண்ணீரல், spleen of sheep; 3. ஓர் வகைப்புறு, a kind of dove; 4. மூட்டுப்பூச்சி, bug which adhere to walls

**சுவர்**, முலை, female breast.

**சுவர்க்க புட்பம்**, தின்பூ, an unidentified plant.

**சுவர்க்கம்**, முலை, female breast; பேய்க் கொம்மட்டி, bitter apple — Cucuonis colocynthis.

**சுவர்க்கம் பிடித்தான்**, ஆவிரை, tanners cassia.

**சுவர்க் கருவிலி**, ஓர் வகைப் சுவர்ப்பாம்பு, a snake a kind of cobra found in the crevice of a wall.

**சுவர்க்காதி**, those regions where in must dwell for sometime before ones rebirth or reappearance in the world.

**சுவர்க்காயம்**, உறுப்பு அல்லது உட்கிளையின் சுவர், walls of an organ or cavity—parietes.

**சுவர்க்கோழி**, கூச்சலிடும் ஓர் வண்டு, a kind of beetle making a shrill noice — cricket — — Orthopetra of naturalists.

**சுவர்ச்சம்**, இச்சிமரம், which see.

5. Each drug must be powdered sieved in muslin cloth and then weighed and then mixed with other powders.

6. Adult Dose ½ to 1 tola: Children—7 - 21 Kundri.

7. Vehicle - Jaggery equal quantity Sugar double, water four times, ghee & honey sufficient quantity.

**சூரணன்**, கடலை, Bengal gram.

**சூரணு**, அனிச்சை, see சூரணம்.

**சூரணுநஞ்சனம்**, மிளகு, திப்பிலி, கடல்நுரை, கறிச்சாற்றிலும், ஆமை அல்லது மீன் பித்திலும் ஊறவைத்துப் பிறகு சூரணமாகச் செய்து கண்ணோய்களுக்கு அஞ்சனமாகத் தீட்டும் ஓர் ஆயுர்வேத மருந்து. a powder used as an application for the eyes. In Ayurveda it is made by pulverising pepper, long pepper. sea forth (cuttle-bone = கடல் நுரை) after keeping them soaked in meat juice or soup and the bile of a tortoise or fish.

**சூரணித்தல்**, தூளாக்குதல், powdering: மருந்துச் சரக்குகளை பொடி செய்தல், reducing a drug or medicine to a very fine powder and drying it — Levigation.

**சூரதாரு**, தேவதாரி, deodar cedar — Cedrus deodara.

**சூரத்ததிவிடயம்**, ஓர்வகை அதிவிடயம், a kind of Surat atees.

**சூரத்தைமிர்தை**, see சூரத்துக்கடுக்காய்.

**சூரத்தாவாரை**, see சூரத்து நிலாவிரை.

**சூரத்து**, இது கூர்ச்சர தேசத்துப் பூர்வீகப் பட்டணம்; இவ்விடம் திராவிடர்கள் தமிழ் வைத்தியப்படி அனேகம் மருந்துச் சரக்குகள் மூலிகைகளைத் தயார் செய்து வெளியூர்களுக்கு ஏற்றுமதி செய்ததாகத் தெரிகிறது, Surat, an ancient town of Goozerat peopled by Dravidians who had then a great manufacturing centre of Indian drugs and exported tham to Southern India.

NOTE: The drugs or medicine imported to Southern India had the term 'Surat' prefied to it, as could be seen from the drugs mentioned below like those imported from chima. There drugs were imported not because of its superiority but on account of its Cheapness.

**சூரத்துக்கடுக்காய்**, சூரத்து தேசத்திய கடுக்காய், surat gal nut.

**சூரத்துக்கருப்புப்பு**, சூரத்து, சுத்திசெய்யாத சோற்றுப்பு, impure common salt of Surat.

**சூரத்துக்கருப்பூரம்**, சூரத்து தேசத்தில் பூர்வத்தில் செய்துவந்த கற்பூரம், camphor formerly manufactured at Surat.

**சூரத்துக்காவி**, சூரத்தில் இருந்துவரும்காவிக்கல், red ochre from Surat.

**சூரத்துக்கொன்றை**, சூரத்து என்னும் ஊரில் விளையும் கொன்றை. Surat cassia — Cassia suratlensis.

**சூரத்துநாசனி**, மஞ்சிட்டி, monkey turmeric — Bixa orellana.

**சூரத்து நிலஅவுரி**, சூரத்திய அவுரி, Surat indigo.

**சூரத்துநிலவாகை**. சூரத்து நிலாவிரை; பூர்வத்தில் சூரத்து தேசத்தில் இருந்து இறக்குமதியாகும் நில ஆவாரை; இது கற்பத்துக்குதவு மூலிகை, Surat or East Indian senna cassia acutifolia. It was formerly obtained from Surat. It was considered to be of a superior quality and as such was used much by yogis for rejuvenation; 2. சீமை நிலாவிரை, Alexandrian senna; 3. திருநெல்வேலி நிலாவிரை, Tinnevelly senna.

**சூரத்துநிலவேம்பு**, சூரதேசத்து நிலவேம்பு, grand neem imported from Surat; 2. சீமை நிலவேம்பு, French ehiretta — Andrographis paniculata.

**சூரத்துநிலாவாரை**, see சூரத்துநிலாவிரை.

**சூரத்துநிலாவிரை**, இச்செடியில் இலைதான் விசேஷம். மருந்திற்குபயோகப்படும். இதற்குப்பதிலாக அனேக இழிவான போலிச் சரக்குகளை விற்று ஏமாற்றுவார்கள். நல்ல இலைகள் கஷாயமிட்டுப் பேதிக்குக் கொடுக்கவுதவும்; இதில் அடியிற்கண்டபடி வேறு தேசத்துச் சரக்குகளுண்டு, the leaves are

important in this plant as they are much used in medicine. They are generally adulterated with a similar looking leaves of other plants. Good leaves are boiled and the decoction is taken as a safe and efficient purgative. Different are the varieties according to the places where they are grown and they are as shown below.

1. Aleppo senna — Cassia obovata.
2. Alexandrian senna—Cassia acutifolia.
3. Bombay senna — Cassia collad.
4. Surat senna — Cassia delite.
5. Tinnevelly senna — Cassia angustifolia.

NOTE: Senna was formerly used by Arabian physician and through them introduced into Europe. No. 2 and 5 alone are officinal in Pharmacopoeia of India. In commerce three kinds are distinguised — first is No. 2; secondly is No.3 and thirdly is No 5.

The other names are:

Aleppo senna, Italian senna, Country senna, East Indian senna, Nubian senna. Indian senna, Foreign senna, Lotus senna. Mocha-senna, African senna, Kordofan senna, Sennaar senna, Narrow leaved senna, Officinal senna.

**சூரத்துநெல்லி,** சூரத்து தேசத்திலிருந்து இறக்குமதியாதும் ஓர் சீமை நெல்லி, Surat gooseberry.

**சூரத்துப்பன்னீர்,** சூரத்தில் இறக்கப்படும் பன்னீர், rose water manfactured at surat.

**சூரப்பட்டைச்சத்து,** See சுரப்பட்டைச்சத்து.

**சூரப்பத்திரி,** ஓர் வகை சாதிப்பத்திரி, Myristica attenanata.

**சூரப்பழம்,** See சூரைப்பழம்.

**சூரப்பானு,** ஓர் வகைச் சாதிக்காய், Travancore nutmeg. Myristica magnifica.

**சூரமிளகு,** வால்மிளகு, tail pepper — Piper cubeba.

**சூரம்,** கடலை, Bengal gram — Cicer aristinum; 2. வால்மிளகு, see சூரமிளகு; 3. எருக்கு, madar plant — Calotropis gigantia; 4. அம்பளங்காய், which see; 5. பெருங் கடலை, a big variety of Bengal gram.

**சூரல்,** பிரம்பு, common rattan; 2. சூரை, oblique leaved jujube — zizyphus; 3. நரி யிலந்தை, another variety jujube; 4. ஓர் வகை மரம், ever — green cypress; 5. கற்பூரம், date fruit; 6. வீரம், virility.

**சூரவிதளம்,** செழுமலர்க் கொன்றை, a kind of cassia (unidentified.)

**சூரளம்,** கருணைக் கிழங்கு, elephant foot yam.

**சூரனுடகனி,** மாங்கனி, mango fruit.

**சூரன்,** See கௌரி பாஷாணம், 2. நாய், dog; 3. நெருப்பு, fire; 4. மீன், fish; 5. சிங்கம், lion; 6. மூஞ்சூறு, musk rat; 7. நவாச்சாரம்; salammoniac; 8. சேவல் கோழி, cock fowl; 9. மாமரம், mango tree; 10. கரடி, bear.

**சூரன்கனி,** மாம்பழம்; மாங்காய், mango fruit.

**சூரன்பாஷாணம்,** கொச்சி வீரம், a corrosive sublimate formerly prepared at cochin.

**சூராதிபூடு,** See அழுகண்ணி.

**சூராவளி,** ஓர் கடுங்காற்று, tempest.

**சூரி,** நத்தைச்சூரி, (lit: Oyster pincher) bristly buttonweed — Spermacoce hispida. 2 புளிச்சைக்கீரை, sour greens, hemp leaved hibiscus — Hibiscus cannabinus; 3. எருக்கு, madar plant — calotropis gigantea; 4. வைசூரி — small pox.

**சூரிகாகிராணி,** புளிப்பு நாற்றம் வீசும் ஓர் வகைக் கழிச்சல், a kind of diarrhoea with an acid smell.

**சூரிக்காய்,** புளிச்சைக்காய், acid cucumber tree — bilimbi — Avarrhoea bilimbi.

**சூரிக்காயளவு,** இது மருந்தின் (லேகியத்தின்) அளவைக் குறிக்கும். This is measure of medicine (electuary) about the size of சூரிக்காய்,

**சூரிக்கிளிஞ்சில்,** பிளவுக் கிளிஞ்சில், bivalve shell — knife like mussel shell.

**சூரிக்கொழுந்து,** புளிச்சைக் கீரைத்துளிர், young shoot or tender leaves of hemp leaved hibiscus.

**சூரிபத்திரம்,** புளிச்சைக் கீரையிலை, leaves of Hibiscus cannabinus.

**சூரிப்புகை,** ஒட்டடை, smoky deposit on the spider web

**சூரிமுள்ளு,** See சூரையிலந்தை.

**சூரியகடிகை,** பகலில் நாழிகை நேரத்தைக் குறிக்கும் கருவி, an instrument showing the time of day by means of a shadow cast by the sun—Sun dial.

**சூரியகண்டம்,** நாற்பத்து முக்கோணம், அதாவது சிரீ சக்கரத்தின் ஓர் பகுதி, a portion of the magic diagram consisting of 40 triangles. see அக்கினி கண்டம், மணிப் பூரகம், அநாகதம், என்னும் இரண்டு ஆதாரங்களின் இடமாகவுள்ள ஓர் பகுதி, the place where the two Atharams — Manipooragam and Anagatham — are situated.

**சூரியகரந்தை,** துளசி, holy basil — Ocimum sanctum.

**சூரியகலை,** பிங்கலை, அதாவது வலது நாசியில் ஓடும் வாசி, the vital air passing through the right nostril.

**சூரியகாந்தக்கல்,** வெயிலிற் காண்பிக்க தீ விடுங் கண்ணாடிக்கல், glass emitting fire when focussed in sun's rays — burning glass.

**சூரியகாந்தக்கண்ணாடி,** See சூரிய காந்தக் கல்.

**சூரியகாந்தச்சிலை,** See சூரியகாந்தக்கல்,

**சூரிய காந்தத்தீ,** சூரிய காந்தக்கல்லை, வெயிலிற் காட்ட வுண்டாகும்தீ; இச்சூட்டால் மருந்துகளும் தயாரிப்பதுண்டு "செப்பமாய்ச் சூரிய காந்தத் தீவிழசுன்னமாகும்" (கருவூ - வாத - காவி) fire produced when sunstone is exposed in the sun. This heat was formerly used for preparing medicine.

**சூரியகாந்தம்,** see சூரியக்காந்தக்கல்; 2. பொழுது வணங்கி என்னும் சூரியகாந்திப்பூ sun flower; 3. ஓர் வகை ஆபரணக்கல், a jewel stone — jasper; 4. கண்ணாடிக்கல், pebble crystal; 5. பேராமுட்டி, large or fragrant pavonia Povonia odorata; 6. எரிகல், burning glass.

**சூரியகாந்தரசம்,** See சூரியகாந்தரசம்.

**சூரியகாந்தல்,** உடம்பின் தோலில் சூரிய வெப்பத்தினால் சுட்டபுண். dermatitis with burning and redness due to exposure to the rays of sun — Sun burn.

**சூரியகாந்தவாமணக்கு,** செவ்வாமணக்கு, red castor plant.

**சூரியகாந்தி,** எட்பூ. flower of pesamum; 2. சூரியகாந்திப்பூ, flower of sunflower plant Helianthus annuus; 3. ஓரிலைத் தாமரை, one petalled lotus — Ionidium suffruticosum; 4. சூரியவொளி, sun light or sun's lustre; 5. சூரியப்பிரகாசம், sun's brillance; 6. See சூரியக்காந்திக் கண்ணாடி.

**சூரியகாந்திக் கண்ணாடி,** சூரியனொளியில் எரியுங்கல், burning glass sun glass.

**சூரியகாந்திப்பூ,** சூரியனைக் கண்டு மலரும்பூ, lover of the sun — Hibiscus mutabilis. It is so called from its being like the sun in colour and form; 2, சூரியன் பக்கம் திரும்பி நிற்கும்பூ, flower facing the sun sun-flower — Helianthus indica, இதன்பூ பெரியது; மஞ்சள் நிறம் இதன் விதையினின்று இறக்கப்படும், எண்ணெய் கடலை எண்ணெயைப் போலிருக்கும், இது மருந்திற் குபயோகப்படும் இதைப் பூசினால், பனியினால் காலில் ஏற்பட்ட வெடிப்பு குணப்படும். flower. are large and yellow.

NOTE: This plant is cultivated in gardens purposely for removing malaria as it purifies the air. The Italian variety of this plant — Helianthes tuberosus is cultivated as vegetable for roots similar to small potatoes. See சூரியகாந்திவிதை.

**சூரியகாந்தி மூர்ச்சை,** வெயிலினால் ஏற்படும் மூர்ச்சை சன்னி, இதனால், வலிப்பு. மயக்கம், உடம்புச்சூடு மிகுதியாயிருக்கும், a condition like apoplexy produced by exposur to the sun and marked by convulsions, coma and a high temerature of the skin.

**சூரியகாந்திவிதை,** சூரியகாந்தி செடியின் வித்து இவ்வித்துகளிலிருந்து எண்ணெய் இறக்கப்படுகிறது. இது கடலை எண்ணெயைப் போலிருக்கும், சமையலுக்கும் மருந்துக்கும் உபயோகப்படும். Seed of sun flower plant oil extracted from it is used in cooking, medicine and industery.

**சூரியகாந்திவிரை**, see சூரியகாந்திவிதை.

**சூரியகிரகணம்**, சூரிய மறைவு, eclipse of the sun.

**சூரியகாந்திரசம்**, குட்டத்திற்கு கொடுக்கும் ஓர் ஆ. வே. மருந்து, an ayurvedic medicine given for skin diseases.

**சூரியகேளி**, See சூரிய கௌளி

**சூரியகௌளி**, ஓர் வகை இளநீர், a variety of tender cocoanut

**சூரியசரம்**, பிங்கலை, see சூரியகலை.

**சூரியசித்தாந்தம்**, ஓர் சோதிட நூல், an astronomical work.

**சூரியட்சாரம்**, பொட்டிலுப்பு, nitrate of potash.

**சூரியதாபிதம்**, பேரிக்காய், Indian apple (Berry) see அம்பளங்காய்; சூரிய உஷ்ணம், sun's heat.

**சூரியதீட்சணம்**, சூரியக்கிரணக் கொடுமை, the radiance of the sun.

**சூரியபாவகரசம்**, சீதகரத்திற்க்காக கொடுக்குமோர் ஆயுள் வேத மருந்து an ayurvedic medicine given for fever caused by phlegmatic humour.

**சூரியபுடத்தான்**, பூசுணிக்காய், sweet pumpkine — Cucurbita maxima.

**சூரியப்புடத் தைலம்**, வெயிலில் வைத்தெடுத்த தைலம், *medicated oil prepared by* exposing to sun's rays.

**சூரியப்புடப்பூச்சி**, தம்பலப்பூச்சி, ladys fly.

**சூரியப்புடம்**, சூடேறும்படி மருந்துகளை வெயிலில் வைப்பது, the process of drying and warming medicines in the sun's rays — Insolation. see வெயிற்புடம்.

**சூரியபுடம் வைத்தல்**, தைலம் முதலிய மருந்துகளை வேடுகட்டி வெயிலிற் காயும்படி வைத்தல், இதை சாதாரணமாக ஒரு மண்டலம் வைத்தல்; ஆயினும் மருந்திற்குத் தக்கபடியும் வைக்கலாம், the process of exposing medicated oil etc after covering the mouth of the container for purposes of drying it completely (or to bring about chemical combination) by the heat of the sun for a specific period but it is generally done for 40 days. It may be exposed for a lesser period according to the nature of the medicine exposed — Insolation.

**சூரியபேதி**, சூரியனால் பூரித்து, கும்பித்து, பிறகு சந்திரனால் ரேசிக்கப் பழகுதல், the process of inhaling the vital air (prana) through the right nostrils and then suppressing it for sometime as required and then exhaling it through the left nostril.

**சூரியப்பிரபாவகடிகம்**, ஆ. வேதப்படி சித்திர மூலம் சீமை நிலவேம்பு. முதலிய மூலிகைச் சரக்குகளுடன் இந்துப்பு, பிடாலவணம், முதலிய உப்புச் சரக்குகளையும் சிலாசத்து பற்பம், அயம், மாட்சிகம், முதலிய பற்பங்களும் சேர்த்துச் சூரணித்து, சர்க்கரை, நெய்யில் கொடுக்க ஆனைக்கால், குன்மம் பாண்டு காசம், அண்டவிருத்தி, சூலை, பகந்தரம், பிரமேகம்; காமாலை, சன்னிபாதம் இவைகள் போம், an ayurvedic preparation given for elephantasis, anemia, bronchitis, fistula jaundice, gulmam, delirious fever etc.

**சூரியபிரபாவகுடிகா**, சயம், காசம், பாண்டு, காமாலை, குன்மம், சூலை, குட்டம், மூலம் முதலிய பெரிய நோய்களுக்குக் கொடுக்கும் ஆ. வே. மருந்து, an ayurvedic preparation given for consumption bronchitis, anaemia, jaundice, piles etc.

**சூரியபிரபாவவடுகம்**, எட்டுவித சூலைநோய்களைப் போக்கத் தயாரித்த ஓர் ஆ. வே மருந்து, an ayurvedic medicine given for eight varieties of Soolai.

**சூரியப்பிரபை**, *சூரிய வெளிச்சம், sunlight* 2. சூரிய கிரணம், sun's rays.

**சூரியப்பூடு**, எருக்கு, madar plant — Sun plant.

**சூரியமணி**, See சூரியாகாந்தம், 2 ஓர் மல்லி jasmine bendy. Hibiscus hirtus.

**சூரியமண்டலம்**, தத்துவ நூலின்படி உடம்பினுள்ளமைந்த மூன்று மண்டலத்தொன்று இதுவே வயிற்றின் பின்புறமாக முதுகின் பக்கமாகவுள்ள நரம்பின் கூட்டம், (in yoga philosophy) a great network of nerves and ganglia on the darsal aspect of the stomach, giving off nerves to all the abdominal viscera and hence the name abdominal brain — Solar plexus.

NOTE: *This region is assigned to* worship of three female energies of the deity *ஞானசத்தி, கிரயாசத்தி, இச்சாசத்தி* under the emblems of the sun, moon and fiire.

**சூரியமந்திரம்**, பேராமுட்டி, fragrant pavonia —Pavonia odorata; 2. சூரியனின் மந்திரம். the mantras attributed to the sun.

**சூரியயோகம்**, ஓர்வகை யோகம், a variety of yogam.

**சூரியரசம்**, ரசம், கெந்தி, தாளகம், அபிரேக்கு, இவைகளுடன் கடைச்சரக்குகளும் சேர்த்து காசத்துக்குத் தயாரித்த ஆ வே. மருந்து; an ayurvedic preparation of mercury sulphur yellow orpiment of arsenic mica etc. for bronchitis.

**சூரியவர்த்தம்**, வெயில்கண்டவுடன் புருவத்தின் மேல் ஏற்படும் தலைவலி, வெயில் ஏற ஏற வலி அதிகமாகவும், இறங்க இறங்க வலி குறைந்தும் சூரிய அஸ்தமனத்தில் முழுதுமே இல்லாமற் போய்விடும், a kind of headache in which pain begins in the eyebrows, as the sun begins to rise and as it ascends, the pain increases, and when it sets the pain decreases, and finally with the disappearance of the sun the headache also disappears altogether.

**சூரியவர்த்தவலி**, ஒற்றைத் தலைவலி, lit: sunpain headache on one side of the head — Hemicrania. See சூரியவர்த்தம்.

Note by C. D.

முறைப்படி அரக்கு தைலம் ஸ்நானம் செய்தால் இந்த தலைவலி போம், There will be cure if regular bath is taken with araku thilam as instructed.

**சூரியவல்லி**, see சூரியவல்லீசம்.

**சூரியவல்லீசம்**, வேம்பாடன்; இதுவே சுருள் பட்டை, Vembaudam bark creeper — Ventilago Madras patana.

**சூரியவாதம்**: See சூரியகாந்திமூர்ச்சை.

**சூரியவாதி**, சூரியனையே தெய்வமென்றும் அதனை வழிபடுதலால் முத்தியடையலாமென்றும் வாதிக்கும் ஒரு சமயவாதிகள், a religious sect of people who believe in attaining salvation by worshiping Sun as God.

**சூரியவீச்சு**, கிரணவீச்சு, sunstroke see. சூர்ய காந்தி மூர்ச்சை.

**சூரியனையறியப்பண்ணி**, தின்பீர்க்கு, gourd plant common Luffa—Luffa acutangula.

**சூரியனில் சாயாதேவி**, நிழல் சாயாத மரம், a tree which does not cast its shadow (unidentified)

**சூரியன்**, ஞாயிறு; the sun 2. செவ்வெருக்கு, a red variety of maderplant; 3. செவ்வந்தி, Indian chamomile—Chrysanthamum coronarium 4. செம்புமலை, mountain containing copperore.

**சூரியன் விந்து**, வாலைரசம், mercury obtained or prepared by sublimation; 2. எருக்கு sunplant, calotropis gigantea.

**சூரியார்க்கம்**, பேராமுட்டி, fragrant pavonia— Pavonia odorata.

**சூரியாவர்த்தம்**, வாயுவானது பித்தத்திற் கூடி. கண் புருவம், நெற்றி இவ்விடங்களில் வியாபித்து அதனால் காலையில் தலைவலி ஏற்பட்டு வெயிலேறவேற வலி மிகுதியாகி சூரியன் சாய்ந்தால் வலிகுணப்பட்டுவரும் ஓர் வகைத் தலைவலி; இதற்கு ஏழு ஞாயிறு (என்று) தமிழில் சொல்லப்படும். சிலர் இதற்கு வேறு விதமாக அர்த்தங்கொண்டு, இம்மாதிரியே சாயுங்காலத்தில் தொடங்கி நடுராத்திரிவரைக்கும் இருக்கும் தலைவலிக்கு படு ஞாயிறு என்றும் சொல்லப்படும். இதற்கே வடமொழியில் சந்திரா வர்த்தமென்று பெயர், இது, தினப்படிகண்டு ஏழு ஞாயிறு வரை போராடுமெனச் சொல்லப்படும்.

Note: by C. D.

தேரன் தைலவர்க்கத்தில் கூறிய அரக்கு தைலத்தை முறைப்படி தேய்த்து குளித்து வந்தால் சூரியாவர்த்தம், சந்திரா வர்த்தம் நீங்கும்.

A kind of nervous head ache in which a severe pain is felt in the eye, eyebrow and forehead just at the sunrise and which goes on worse with the progress of the day and begins to abate only when the sun begins to set. It occurs daily and may continue for 7 weeks and is said to be due to the concerted action of the humours vayu and bile in the system. c. f. Migrane.

Note: by C. D.

This can be cured by taking oil bath applying Araku Thailam prepared according to Theran Thailavarka churukam.

**தூரியாவர்த்தவாதம்**, See தூரியாவர்த்தம்.

**தூரியானம்.** எருக்கு, Madar plant; 2. See தூரியன்.

**தூரியானி**, கத்தியைக் கொண்டு செய்யப் படும் சிகிச்சை, surgical operation. 2. இராட்சச வைத்தியம், barbarous way of treating diseases.

NOTE: In Tamil Siddhar's medical science this method of treatment is considered very low and crude, while occult method of treating diseases by way of suggestions is considered most superior.

**தூரியிண்டு**, இதுவே கழற்சிக்காய், Seed of Caesalpinia bonducella.

**தூரியிலந்தை**, ஓர் இலந்தை, a kind of jujuba-Zizyphus oenoplia. See தூரையிலந்தை.

**தூரிவித்து**, நத்தைச்சூரிவிதை, seed of the button weed plant—Spermacoce hispida.

**தூருசரக்கல்**, சுக்கான் கல், lime stone.

**தூருமகந்தம்**, தருப்பைப்புல், sacrificial grass.

**தூருமம்**, தூசைப்புல்; see தூருமகந்தம்: 2 கற்பூரப்புல், lemon grass. 3 மாந்தப்புல்

**தூருறை**, அரக்கர் சிகிச்சை. அதாவது கத்திக் கொண்டறுப்பது, Rakshasha's treatment of diseases—Surgical operation. see தூரியானி.

NOTE: It is said that in ancient days this kind of treatment was in vogue only amongst the mountainous and hill tribes who were ignorant of the then scientific methods.

**தூரேகம்**, பேய்ப்புடல், wild snake gourd, devils gourd.—Trichosanthes cucumerina.

**தூரை**, தூரையிலந்தை, Jujube—Zizyphus venoplia. 2. ஓர் மீன், a kind of tunny fish Thynnus; 3. காகோளி, capparis sepiaria; 4. தூதுவளை: three lobed night shade—Solanum trilobatum; 5. கருஞ்தூரை, hedge caper shrub; 6. கள், toddy.

**தூரை மீன்**, See தூரை—இருவகை. இரத்த தூரை—இரங்கூன் தூரை, it is of two kinds.

**தூரைகாரை**, முடிமயிர், tuft of hair on the crown of the head 2. தூரைப் பழம்.

**தூரைக்காற்று**, See தூருவளி.

**தூரைதடசி**, தூரைவேர்.

**தூரைப்பட்சி**, இதன் கறி உருசியானது பத்தி யத்திற்குதவும்: a kind of bird, its flesh is tasty It is good for people on diet or who take medicine.

**தூரைப்பட்டைச் சத்து**, see சுரப்பட்டைச் சத்து.

**தூரைப்பழம்**, காரைப்பழத்தின் இனத்தைச் சேர்ந்தது, இது மூன்று வகை. 1. கற் தூரை, 2. கருஞ்தூரை, 3. செஞ்தூரை, Zizyphus oenoplia.

**தூரைமான்**, பொன்னுங்கண்ணி, water olive—Alternanthera sessile.

**தூரைமுள்**, தூரைமீனின் முள், bone of the tunny fish. see தூரை.

**தூரைமுள்ளி**, தூரையிலந்தை See தூரை.

**தூரையிலந்தை**. See தூரை.

**தூரைவித்து**, தூரைமுள்ளுச் செடியின் விதை Seed of jackal jujube zizyphus xyeophorus.

**தூர்**, வால் மிளகு, tail pepper—Piper cubeba 2. நோய், disease; 3. மிளகு, pepper—Piper nigrum; 4. காரம் pungency; 5. கொடுமை, Cruelty.

**தூர்ணகம்**, பொரித்து இடித்த தானியம், cereal fried and smashed.

**தூர்ணபாகம்**, மூலிகைகளைக் காயவைத்துப் பொடியாகச் செய்யும் முறை, the process of preparing powders from dried herbs. See தூர்ணபாகம்.

**தூர்ணபாரதம்**, see இங்குலிகம்.

**தூர்ணபாலி**, வரிக்கும்மட்டி, bitter water-melon—Cucumis Colocynthis.

**தூர்ணம்**, see தூர்ணம், 2. சுண்ணும்புத் தூள், lime powdered; 3. இடித்த கற்பூரம். Camphor powder; 4. அரைத்த சந்தனம், அல்லது சந்தனத்தூள் sandal powder or paste.

**சூர்ணவிதி**, மருந்துச் சரக்குகளை இடித்து தூளாகச் செய்வதற்குண்டான விதிகள் rules for preparing medicinal powder. See சூரணவிதி.

**சூர்ணிகம்**, வாசனைத் தூள், fragrant powder.

**சூர்ணிகா**, see சூர்ணகம்.

**சூர்த்தம்**, நடுக்கம், shivering.

**சூர்ப்பசன்னம்**, யானை, elephant.

**சூர்ப்பிதகம்**, see ஏலாவாலுகம்.

**சூர்ப்பிராய்**, see கூட்டப்பிராய்.

**சூர்ப்புகா**, கழற்கொடி, bonducnut creeper—Caesalpinia bonducella.

**சூர்மா**, கண்ணுக்கிடும் அஞ்சனம், antimony. see சுருமா

**சூர்மிளகு**, வால் மிளகு, tail pepper; see சூர்.

**சூலகசகேசரி**, சகல சூலை நோய்களும் நிவர்த்திக்கக் கொடுக்கும் ஆ.வே மருந்து,an ayurvedic preparation for all stabing pain colic, pain etc.

**சூலகிருது**, பெருங்காயம், assafoetida.

**சூலகுடார ரசம்**, சகலவிதமான சூலைகளை நிவர்த்திக்குமோர் ஆயுள்வேத மருந்து, an ayurvedic preparation for all pains—colic pain—stabing pain etc.

**சூலக்கினி**, பேய்ப்புல், devil grass; 2. கருஞ்சீரகம், black cumin.

**சூலக்குறடு**, சூட்டுக்கோல். branding rod.

**சூலசத்துரு**, ஆமணக்கு வித்து, Castor seed.

**சூல சிதகம்**, இது ஓர் வகைக் காம லீலை, இதில் பெண் ஒரு காலை நீட்டிப் படுத்தபடியும், மற்றொரு காலைத் தன் உடம்பிற்கு மேலாகத் தூக்கி நீட்டித் தலையில்வந்து தண்டும்படி செய்தபடி இருக்க, ஆண் மேலேறிப்புணர்தல், ஆகவே, இப்புணர்ச்சி சூலத்தாற் குத்தியது போன்ற பாவனை காட்டுவதால், இந்த லீலைக்கு இப்பெயராயிற்று. It is one of the postures of sexual intercourse in which the woman streching her one leg straight in a lying posture and then raising the other above her trunk so as to touch the woman's head. Then the man thrusts his organ into the vagina just like a spear thrust and hence the name.

NOTE : It is to be undertood that according to sexual science of kokkogamuni, the sexual union is divided generally into three classes. Viz—weak or frigid, moderate, and furious (உத்தம, மத்திம, அதம புணர்ச்சிகள்) according to the intensity of passion in both man and woman. A man with over sexual passion is a misery to the life of his wife, just in the same way as a woman of that kind (nymphomaniac) is that to a man, and in the latter case no man can satisfy her passions and so there is every chance of her being led astray unless she is of a religious turn of mind, or is capable of restraining her passions to keep up her chastity which she may consider the most in the world.

**சூலநாசனம்**, கருவையழிக்கும்ஓர் வகையுப்பு, a kind of salt causing abortion.

**சூலநாமா**, செழுமலர்க்கொன்றை, a kind of cassia an unknown plant.

**சூலபீங்கா**, நாய்வேளை, wild or dog mustard. —Cleome viscosa.

**சூலமருது**, பேய்க்கடுக்காய், Travancore myrobalam.

**சூலம்**, சதுரக்கள்ளி, square spurge; 2. சூலை நோய், a severe colic pain in the region of abdomen; 3. மரணம், death; 4. இடிதாங்கி lightning absorber; 5. குத்தல், pricking pain.

**சூலம்புளி**, மங்குஸ்தான் பழம், common mangosteen Garcinia mangostena.

**சூலல்**, அறுத்தல், cutting;2. குடைதல். boring.

**சூலவாசனம்**, ஓர் உப்பு, a kind of salt.

**சூலஹுதி**, சிறுதும்பை, small tombay—Leucas rosmarinifolia.

**சூலாக்கினி**, விஷப்பாலைக்கொடி, a poisonous creeper of the Mimusops genus.

**சூலாதல்**, கருத்தரித்தல், impregnation.

**சூலாதவிருத்தி**, சிவப்பாமணக்கு, red castor seed.

**சூலாயிருத்தல்**, கருப்பிணியாயிருத்தல், to be pregnant with child.

**சூலாஞேன்**, சவர்க்காரம், soap.

**சூலி**, கருப்பிணி, a pregnant woman; 2. see அகச்சூலி; 3. சதுரக்கள்ளி, square spurge —Euphorbia antiquoram; 4. பெருஞ்சூலி அதாவது தூண்மரம், Toon tree, cadula toona.

**சூலிகம்**, கோழி, fowl.

**சூலிகணம்**, கருப்பத்திலேற்பட்ட கணச்சூட்டினால் குழந்தைகளுக்குண்டாகும் ஓர் மேல் மூச்சு, இதற்குக் கருப்பக்கணநோய் என்றும் பெயர், இதனால் நெஞ்சு, வாய், தொண்டை வெந்து புண்ணாகி, அதனால் குழந்தை முலையுண்ணாது, அத்துடன் வயிற்றுப் பொருமல் காணும், முகம் நாற்றம் வீசும், a wasting disease due to congenital heat in children — Tabes mesenterica.

**சூலிகை**, சூலம், bightning—rod; 2. முருங்கை, drum stick tree—Moringa ptery gosperma.

**சூலியட்சரம்**, குழந்தைகளுக்கு வாய் முழுவதும் வெந்து புண்ணாகி, நாற்றத்துடன் வாய் நீரொழுகி, வெள்ளோக்காளத்துடன் உடம்பு வாட்டமடையச் செய்யுமோர் நோய், a kind of stomatitis in children marked by ulceration of the mouth, fetid breath, in salivation, emaciation etc. It is due to congerital heat.

**சூலியா**, பிள்ளைத்தாச்சிமரம், an unknown tree.

**சூலிலை**, வெற்றிலை, betel leaf.

**சூலினி**, சவர்க்காரம், Soap; 2 வெற்றிலை, betel leaf; Piper betle; 3. காய்ச்சுவழலை, purified fuller's earth.

**சூலில்**, கருப்பவதி, pregnant woman.

**சூலுடைமை**, கருத்தரித்தல், pregnancy — gravidity.

**சூலுண்டாதல்**, கருப்பிணியாயிருத்தல், to conceive.

**சூலுதல்**, குடைதல் boring; 2. அறுத்தல், incisiag; 3. தோண்டல், digging.

**சூலுளைதல்**, பிரசவ வேதனைப்படல், travailing in labour. see ஈற்றுளைதல்; 2. சூலைக் குடைச்சல், a boring pain experienced in arthritis.

**சூலுளையல்**, சூலுளைதல்.

**சூலெலியன்**, ஒரு வகை எலிக்கடி விஷநோய், a disease due to the poison of rat bite.

**சூலேதம்**, புன்னை, a flowering tree—Alexandrian laural.

**சூலே**, குத்தல், acute pain.

**சூலே**, குன்மத்தினால் கீழ் வயிறு பக்கவிலாவில் வாயு தங்கிக் குத்தலையுண்டாக்கு மோர் நோய், இவ்வலி பொதுவாக விலாப்பக்கம், முதுகு, இடுப்பு இவ்விடங்களிற் காணும். இந்நோய் உடம்புக்கு ஒவ்வாப் பண்டங்களைத் தின்பதனாலும் மற்றும் வேறு வகைக் காரணங்களாலும் உடம்பில் வாயுகதித்து அதனால் ஏற்படும். அப்பொழுது உடம்பில் குத்தல் வலி, இசிவு முதலியனவுண்டாகி உள்ளுறுப்புகளைத் தாக்குவதால் சூலத்தாற் குத்துவதைப் போற் காணப்படும்; இதனால் மூச்சும் திணறும்; இது 15 வகையாகும். acute but more correctly, excruciating pain experienced commonly in the sides of abdominal region, back and waist. In Tamil medicine it is construed as a disease in which the bodily Vayu is aggravated by the derangement of humours in the system due to incompatable article of fare and by other extraneous causes. It is marked by a violent, sharp cutting and spasmodic pain in the main cavity of the trunk and a feeling of saffocation, when the patient complains as if being pierced with a spear inside.

The pain is sometimes unbearable and makes the patient restless and sometime unconscious. Several are the causes but the chief amongst them are excess in sexual congress, riding, night keeping, errors in diet, suppressing the natural urgings mental troubles as grief, fear etc. Pain grown on intensely during midday or midnight. It is born of indigestion or pungent food causing rumbling noise in the stomach or bowels vomiting nausea, suppression of stools and urine.

So, all kinds of rich food excessive eating pulses, large fishes curd, sour articles, chillies, sexual excess etc should be avoided. The fifteen kinds of soolai are: 1. Vatha soolai, 2. Pitha soolai, 3. Silatuma soolai, 4. Mega soolai, 5. Muri soolai, 6. Jwara soolai, 7. Gunma soolai, 8. Paka soolai,

9. Ama soolai, 10. Karba soolai, 11. Nithamba soolai, 12. Thura soolai. 13. Ularthu soolai, 14. Sarcara soolai, 15. Karai soolai.

NOTE: Sulai (சூலை) generally means a deep seated pain. Such pain is generally experienced in cases of Colic, gastralgia, gout, arthritis also in complaints of irregularity of menses, contraction of muscles and nerves, spasmodic pains etc.

**சூலை**, நரம்பின் வழியாய் கெட்ட நீர் சென்று உடம்பில் பரவி வீங்கி, கைகால் பொருத்து களில் கரடுகட்டி உடம்பெல்லாம் தடித்துப் புண்ணாகும், வெடித்து சீழும் நீரும் வடியும், புறங்காலில் நமைச்சல் ஏற்படும் வீங்கிக் கொப்புளம் போல் திரண்டு உடையும், இதில் கைகால் பொருத்துகளின் வீக்க முண்டாகி வலியும் ஏற்படும்.

NOTE: morbid fluid spreads all over the body through the nerves causing swelling of the body and ulcers all over through which pus and fluid ooze out. The joints of the limbs are specially swollen and attended with boils and itching. Besides the fifteen kinds mentioned before the following 34 varities of soolai are mentioned here and there in the Tamil medical books. 1. வெடிசூலை, 2. நீர்ச்சூலை, 3. வெறிச்சூலை, 4. வீரச்சூலை, 5. தண்டுச்சூலை, 6. இரணச் சூலை, 7. உட்டுச்சூலை, 8. இரத்தச்சூலை, 9. அண்டச்சூலை, 10. குதிகரட்டுச்சூலை, 11 புண்சூலை, 12. வறட்சூலை, 13. புத்துச் சூலை, 14. கபாலச்சூலை, 15. அடிநாக்குச் சூலை, 16. வாதபித்தச்சூலை, 17. கரட்டுச் சூலை, 18. அத்தி சூலை, 19. அடிவயிற்றுச் சூலை, 20. ஐயகணசூலை, 21. சிலேட்டும பித்தசூலை, 22. விலாசசூலை, 23. தொந்தசூலை 24. அட்சசூலை, 25 உற்கார சூலை, 26. கற்சூலை, 27. கன்னச்சூலை, 28. திரிதோஷ சூலை, 29. நாபிச்சூலை, 30. துடிசூலை, 31. இடிசூலை, 32. நேத்திரசூலை, 33 முடக்கு சூலை, 34. கிருமி சூலை.

**சூலைஅஸ்திசுரம்**, சூலை வியாதி, கைகால் உலர்ந்து எலும்பில் நெருப்பைப் போல் கொதிப்புண்டாகிச் சூலை வலி காணும் ஓர் வகைச் சுரம், (யூகிமுனி 1200) a kind of fever characterised by a progressive wasting in the size of the limbs and piercing pain due to the inflammation of the bones in affected part.

**சூலைகணம்**, விலாவில் மிக்க வலிகண்டு உடம்பை இளைக்கச் செய்யும் ஓர் கணம், atrophy marked by acute pain on the sides, due to congenital heat.

**சூலைகட்டு**, வாதத்தினுற் கெட்டவாயு இரத்தத் தின மூலியமாய் மூட்டுக்களிற் பிரவேசித்து, நடக்க முடியாது தாங்க முடியாத குத்தலை யுண்டாக்குமோர் நோய், இதை அமுரி இரத் தத்தோடு கலப்பதினுல் உண்டாகிற தென வும் கருதப்படும், a disease of metabolism dependant on the morbid Vayu which through circulation of blood entering especially the joints causes acute pain. It is also considered due to excess of uric acid in the blood.

**சூலைகரப்பான்**, குழந்தைகளுக்கு உடல் முழு வதும் வெடித்துப் புண்ணாகி, முகம்வாடி, கைகால் முடக்கி, சூலத்தாற் குத்துவதைப் போற் குத்தலை யுண்டாக்குமோர் வகைக் கரப்பான், a kind of eruption in children marked by cracked sores, depression in the features of the face, contractions of the limbs attended with pain.

**சூலைகிருது**, பெருங்காயம், asafoetida.

**சூலைகிருமி**, வாதப்பிடிப்பில் காணப்படும் நீளப்பூச்சி, a long shaped bacillus found in in the effusion of articular rheumatism — Bacillus rheumatarthirtis.

**சூலைகுன்மம்**, பித்தத்தில் வெப்பு தோன்றி அதனுல் வறட்சி கண்டு வீங்கி அந்தி நேரத் தில் குடல் வாதம் ஒடி அனற்று மோர் வகைக் குன்மநோய், a form of dyspepsia arising from the abnormal heat of the bilious system. It is attended with drynees of the part affected, swelling rumbling noise of the stomach in the evenings, low fever etc.

**சூலைக்கடுப்பு**, சூலைவலி, piercing pain.

**சூலைக்கட்டி**, தாங்கமுடியாத குத்தலை யுண் டாக்கும் ஓர் வகைகட்டி, a kind of abscess attended with an unbearable excruiating pain; 2. பெண் போகத்தினுலுண்டாகும் கட்டி, (அரபிக்கட்டி) bubo, venereal bubo.

**சூலைக்கட்டு**, நரம்புகளின் வழியாய்க் கெட்ட நீர் சென்று உடம்பில் பரவி, கைகால் பொருத்துகளிற் கரடுகட்டி, தாங்கமுடியாத வலியினுலும் அழற்சியாலும் நடக்க வொட்

டாமல்முடக்கிவிடுமோர் வகைக்வாதப்பிடிப்பு. இதனால் சுரம், தலைவலியுங் காணும், இது பத்தியக் கேட்டினாலுண்டாகு மெனக் கரு தப்படும், unbearable acute painful affection and severe inflammation of the joints especially of the limbs due to stiffness arising from bad fluid (noxa) spread in the system through the nerves. It is marked by acute darting pain, immobility of joints and consequent inability to move freely and is sometimes attended with even fever and headache—Rheumatic gout.

NOTE: it is a disease of the metabolism dependant on the deposit of purin substances in the body and excess of uric acid in the blood; but the ancients belief was that it was due to a poisonous fluid 'noxa' falling drop by drop into the joint.

**சூலைக்கணம்,** குழந்தைகளுக்கு வாய் முதல் நெஞ்சுவரையிலும் புண்ணாகி, சுவாசத்துடன் இருமல் காணும் ஓர் வகைக் கணம், an affection of congenital heat in children marked by inflamation of the oesophagus, hard breath, and cough.

**சூலைக்கிராணி,** கிராணிக் கழிச்சலிற் காணும் தாங்கமுடியாத வயிற்றுவலி, an acute and unbearable darting pain in the stomach in an attack of chronic diarrhoea.

**சூலைக்கிருது,** see சூலைகிருது.

**சூலைக்குடைச்சல்,** சூலைநோயினாலுண்டாகும் குடைச்சல்வலி, darting acute pain or writhing pain experienced in 'Sulai' which by itself is considered as a disease in Tamil Medical Science.

NOTE: 'Sulai' is a general term applied to the acute inflammatory pain in the metabolism of the tissues of the body, especially the organs such as the sides, the stomach, the joints etc.

**சூலைக்குத்து,** மாதவிடாய் தடைபடுவதால் பெண்களுக்கு யோனிக்குள்ளுண்டாகும் ஓர் வகைக் குத்தல் நோய், an affection of acute pain in the vagina in a female due to the obstruction of menstrual discharge.

**சூலைக்குன்மம்,** see சூலைகுன்மம்.

**சூலைச் சத்துரு,** ஆமணக்கு, castor plant—Ricimus communis.

**சூலைத்திரட்சி,** சூலைநீரின் திரட்சி, an accumulation of morbid fluid (sebum) a sebaceous cyst-wen.

**சூலைநாசனி,** பெருங்காயம், asafoctida; 2. குக்கில், bedellium; 3. மூக்கிரட்டை, spreadinghog weed—Boerhaavia diffusa. 4. சூலைநோயைக் குணப்படுத்து மருந்து, any medicine for the relief of acute pain in disease such as gout rheumatism etc. 5. see செம்பை, 6. நறுங்குறிஞ்சா. see சூலை பாண்டு குன்மநாசனி.

**சூலைநிவாரண சூரணம்,** வைசூ. குன்மம் இவைகளுக்குக் கொடுக்குமோர் ஆயுள்வேத மருந்து, an ayurvedic medicine for relief of Sulai.

**சூலைநீர்.** வாதபித்த சிலேட்டுமக் கோளாறுகளினால் உடம்பிலுண்டாகும் கெட்டநீர் அல்லது சீழ் நரம்புகளின் வழியாய்ச் சென்று பலவிடங்களிற்பரவி அவ்வவ்வுறுப்புகளுக்குத் தாங்கமுடியாத சூலைவலியையுண்டாக்கும். a morbid fluid originated in the metabolism of the human system from the derangement of the three humours and then spread to the several organisms therein through the nervous system and it is this that causes unbearable excruciating pain in the parts affected.

NOTE. This fluid was known as 'noxa' by the ancients of the Western countries and it is said to fall drop by drop into the joints of the body. 2. கெட்ட வியாதியால் ஆண்குறியினின்று வடியும் சீழ், See மேகநீர்; exudation of pus from penis due to venerial affection.

**சூலைநோய்,** சூலத்தாற் குத்துவதுபோல் உடம்பில் பக்கம், வயிறு, பொருத்து முதலிய பல உறுப்புகளுக்குக் காணும் வலி, an affection of a very acute shooting pain experienced, as if inflicted or caused with a trident in any part of the body such as sides, stomach joints etc.

**சூலை பாண்டு குன்ம நாசனி**, நறுங்குறிஞ்சி, fragrant nail dye—Lawsonia alba—It is so called probably of its curing colic, anaemia, dropsy and dyspepsia.

**சூலைப்பிடிப்பு**, சூலையினுல் கைகால் பொருத்துகளில் உண்டாகும் பிடிப்பு, athritis due to gout—Arthritis uritica, gouty seizure in a joint or joints—Arthragra.

**சூலைப்பித்த ரோகம்**, உள்ளங்கை, உள்ளங்கால், எரிச்சலையும் தலை சுழற்றலையும் உண்டாக்கும் ஓர் பித்த நோய், அன்றியும், இதனுல் நாபியில் குத்தல், அதிதாகம், மயிர்ச்சிலிர்ப்பு, வியர்வை, தினவு, நடுக்கம், குத்தல் முதலிய குணங்களும் உண்டாகும், a bilious disease marked by burning sensation of the palm and the sole and whirling of the head.

**சூலைப்புகைச்சல்**, சூலை நோய்களுக்குக் கொடுக்கும் மருந்து புகை, fumigation applied in cases of Sulai diseases.

**சூலைபூபதி**, இரசத்தைக்கொண்டு செய்யுமோர் மருந்து, medicine prepared with mercury.

**சூலைப்பூபதி**, சூலை, சன்னி, கீல்பிடிப்பு இவைகளைக் குணப்படுத்தும் ஓர் ஆயுள் வேத இரச மாத்திரை, an ayurvedic mercurial pill prescribed for contraction of the joints such as arthritis rheumatism, gout etc attended with acute pain and apoplexy.

**சூலைமுடக்கு**, See முடக்குச் சூலை.

**சூலைவாயு**, சூலையை யுண்டாக்கும் வாயு, flatulence giving rise to sulai diseases such as colic, iliac passim gout etc. 2. வாதநோய் rheumatism.

**சூலைவியாதி**, குடற் சூலை, severe colic due to intestinal obstruction ilens or iliac passim. 2. கணுச்சூலை, acute arthritis marked by pain due to gout, rheumatism etc.

**சூல்**, கருப்பம், pregnancy; 2. கரு, embryo; 3. பிண்டம், foetus; 4. முட்டை, egg — ovum.

**சூல்கொண்டிருக்கை**, கருப்பங் கொள்ளல், the carrying of the foetus in the womb — Gestation.

**சூல்கொள்ளல்**, கருப்பந்தரித்தல். to conceive to be pregnant.

**சூல்சின்னம்**, கருப்பந்தரித்தது என்பதற்குத் தகுந்த அடையாளங்கள் அவை யாவன: various symptoms in a woman to show that she has conceived.

1. சதாவாயூறல், constant salivation in the mouth.
2. உணவு வெறுப்பு, digust for food.
3. அரோசிகம், nausea.
4. உணவு கொள்ளாமை, aversion to food and drink.
5. சூதகம் நிற்பாடு, absence of menses.
6. புளிப்பு விரும்பல், longing for sour things.
7. கைகால்கனதி, heaviness of the limbs.
8. கண்சோர்வு, languidness of eyes.
9. முலைப்பால் காணுதல், appearance of milk in the breast.
10. முலைக்காம்பு முலைமுகம் கறுத்தல், darkness of nipple and areola.
11. புறப்பாதம் வீங்கல், swelling of the dorsa of the feet.
12. மர்மஸ்தானம் ஒட்டிப் போதல், flatness of the genital organs.
13. கண்டவஸ்துவின்மேல் இச்சை, gratification in things high and low.
14. மயிர்க்கூர்ச்செறிதல், slight erection of the bristles of the body.

**சூல்சொறிவு**, கருப்பிணியாயிருக்குங் காலதில் ஏற்படும் நமைச்சல். itching experienced during pregnancy.

**சூல்தல்**, See சூல்கொள்ளல்.

**சூல்பெற்றிருந்த பாலன்**, தை மாசியில் பாலைநிலத்தில் பிறந்த பூநீர், (போகர் 700) fuller's earth that sprouts in the desert in the months of January and February.

**சூல்மகோதரம்**, கருப்பிணியாயிருக்கும் போது வயிறு அதிகமாகப் பருத்துக் காணல், abnormal enlargement of the abdomen during pregnancy; 2. கருப்பிணியாயிருக்கும்போது காணும் மகோதரம், dropsy occuring during pregnancy.

சூல்வாயு, சூதகவாயு, flatulency in the womb causing hysteria.

சூவாரை, ஓர்மீன், a kind of fish.

சூவையிலசுவரம், செம்மரம், Amoora rohitka.

சூழகம், கடலை, bengal gram.

சூழக்குலைச்சி, See சுணங்கன் விருட்சம்.

சூழவரினி, பொற் சீந்தில், moon creeper — Menispermum cordifolium.

சூழாரை, See ஆவிரை.

சூழி, உச்சி, crown of the head; 2. கடல், sea; 3, நெற்றி, fore head.

சூழிகை, கள், toddy—palm wine.

சூழிக்கணம், See சுழிக்கணம்; 2. See சூழிக் கணம்.

சூழ். See சூழகம்.

சூழ்தாழை, தாமரை, lotus flower.

சூழ்ந்து, see சுளுந்து.

சூழ்ப்பிராய், சிறுசிகா, demon tree—Streblus asper.

சூளி, வெற்றிலை, betel leaf; 2, see சூழி.

சூளிகம், மாப்பண்டம், flour cake fried in ghee.

சூளுதல், குடைதல், boring pain.

சூளை, கற்சூளை, brick kiln; 2. நிச்சயம், certainity.

சூளைக்கல், see செங்கல்; 2. சுண்ணும்புக்கல், lime stone; 3. ஓர்வகைக் கல், a kind of stone.

சூளைசக்கரம், ஓடு, piece of broken pot; 2. அகல், an earthern lamp.

சூளையர், வேசியர், prostitute.

சூள், See சூழ்ந்து.

சூறல், தோண்டல், scooping out.

சூறன், மூஞ்சூறு, musk rat.

சூறு, சூத்து, எருவாய், anus.

சூறை, நெற்றி, forehead; 2. தூதுவளை, three lobed night shade. Solanum trilobatum; 3 see சூறைக் குருவி; 4. கடல் மீன், a sea fish; 5. சூரை மீன், tunny fish—Thynnus; 6. கழுத்தின் பின் பகுதி, hollow or cavity in the nape of the neck.

சூறைக்குருவி, சோளக்கொல்லையிற் காணப் படும் குருவி, இது சோளக் கொல்லையைக் கொள்ளையிடுவதால் இப்பெயர், இதற்குத் தலையில் கொண்டை, வால் கருப்பு, இதன் இறைச்சி பத்தியமாயுண்ண குன்மம், சோகை, குட்டம், வாயு போம்; rosy myna—Pastor rosens. It is so called from its plundering cholam fields. It has a crest in the head and a black tail.

சூறைக்குருவிக் கறி, சூறைப்பட்சிபிறைச்சி, இதை உண்பதால் குட்டம், புழு, கோர வாதம், பகந்தரம், வீக்கம், ஆறுவிரணம் இவைகள் போம், சாப்பிட ருசியாயிருக்கும். பத்தியத்திற்குதவும். the flesh of rosy myna is a palliative against leprosy, worms, severe rheumatic affections, annal fistula swelling and unhealed sores. It is a delicious food and also a dietic substance.

சூறையாடுதல், நோயால் தலை சுற்றல், getting dizziness as a result of hunger or disease.

சூற்கருப்பை, கருப்பந்தாங்கிய கருப்பை, the pregnant uterus—Gravid uterus.

சூற்கொள்ளல், See சூல்கொள்ளல்.

சூற்கொள்ளாமை, கருத்தரிக்காமை, absence of pregnancy.

சூற்சங்கு, முத்திருக்கும் சிப்பி. shell impregnated with or containing pearls.

சூற்சராயு, see சூற்கருப்பை.

சூற்பெண்டு, கருப்பவதி, pregnant woman.

சூனம், பூமலர், full blown flower; 2. மான், deer; 3. வீக்கம், swelling; 4. பூமொட்டு, flower bud.

**சூனம்வயிறு**, பெருவயிறு, a distended abdomen; 2. குழந்தைகளுக் குண்டாகும் பெருவயிறு, pot belly in children 3. மகோதரத்தினற் பருத்தவயிறு abdominal swelling of a dropsical nature—Edema.

**சூனன்**, பெருவயிற்றேன், a man with a big belly; 2. நோயால் வயிறு பருத்தோன், a patient with distended abdomen.

**சூனும் வயிறு**, see சூனம் வயிறு.

**சூனிய கும்பகம்**, 3 வகை கும்பகங்களில் ஒன்று, one of the three varieties of கும்பகம்.

**சூனியக்காரன்**, சூனியம் அதாவது மாரண வித்தை செய்வோன், sorcerer any practiser of witch craft or of any charm or incantation — wavlock.

**சூனியக்காரி**, சூனியம் செய்பவள், witchwife.

**சூனியத்திரவியம்**, சூனியவித்தைக்குபயோகமாகும் பொருள், அதாவது எலும்பு, எட்டி விறகு, ஊமத்தைவிதை, வேப்பெண்ணெய், கரி, எருக்கம் பூ, பாம்புமுள் மாலே, drugs required for sorcery such as bone, nuxvomica twigs, dhaturaseeds, margosa oil, flesh — flower of madar plant, skeleton of snake.

**சூனியத்துவம்**, ஒன்றுமில்லாமற் செய்தல், to creat vacuum.

**சூனியத் தொழில்**, black art.

**சூனியப்படுதல்**, பாழாதல், get wasted.

**சூனியப்பார்வை**, கெட்ட பார்வை, evil eye.

**சூனியம்**, பில்லி, sorcery; 2. மாரணவித்தை the art of killing; 3. பாழ், nothingness; 4. பார்க்கமுடியாதது, that which is non-apparent; 5. முப்பாழ், the regions vacuum as "முப்பாழும் பாழாய் முடிவிலொரு சூனியமாய்" 6. இல்லாமை, non existence — Nihilism; 7. இன்மை, vacuum-non entity. It is the empty space with in the Vindhu in the chandra mandalam which is in சகஸ்ராரா.

**சூனியம் எடுத்தல்**, ஒருவனுக்கு பில்லியினுல் இழைத்த தீங்கை மந்திர சக்தியால் நீக்கல், removing the evil effects of sorcery though the power of magic (ceremonial).

**சூனியம் செய்தல்**, பில்லியினுல் ஒருவனுக்குத் தீங்கிழைத்தல், doing harm or injury through the influence of evil spirits.

**சூனியம்போக்கி**, சூனியத்தை நிவர்த்திக்கு மருந்து. பொறிசில் வேர், எழுமுள் வேர், சென்னகரிவேர், நறுமுன்னை வேங்காய்த் தொட்டி, நிலப்பனை வேர், குருக்கத்திவேர், இவைகளைச் சந்தனம்போல் அரைத்து உள்ளுக்குக் குடித்து மேலும் பூச சூனியம்போம். a cure for one affected by sorcery. The paste of the drugs mentioned will cure its if taken in and applied externally too.

**சூனியம் வைத்தல்**, ஒருவனுக்குக் கொடிய தேவதைகளினுல் தீங்கிழைத்தல்; the practising of witch craft, a distructive magci, on a person through the influence of evil spirits. The purpose is for causing death. bewitching by hiding something in the ground.

**சூனிய வாதம்**, கடவுள் இல்லையென்றவாதம், doctrine of viod; 2. பில்லி சூனியம் witch craft.

**சூனியவாதி**, நாஸ்திகன், Ethist.

**சூனிய வித்தை**, பில்லி சூனியம், மாரண வித்தை, witch craft, art of killing through sorcery.

**சூனியன்**, முடவன், a criple or lame person.

**சூனியான்மவாதி**, ஆன்மா வென்று ஒன்றில்லையென்று வாதாடுபவன், one who says there is no 'ஆன்மா'

**சூனியோபதானம்**, மாயா உபதானம், (சூனியம்+உபதானம். non entity+foundation( the principle that non entity is the foundation or cause from which the material world came to existence.

**சூனை**, சிறு மூளைக்குள் உண்ணாக்கைப்போற் புதைந்து கிடக்கும் மாமிச மொத்தை, (in Anatomy) a lobe or small fleshy mass found demarcated in the little brain, intertonsillar lobe or uvula of the cerebellum—Uvula cerebelli. 2. வயிறு வீக்கம், swelling of abdomen.

**சூனைப்பற்றுதல்**, வயிறு வீக்கமடைதல், distension or swelling of the abdomen.

**சூனைவயிறு**, see சூனம் வயிறு.

**சூனைவிழுதல்**, சொத்தை விழுதல், to be rotten at the core as teeth.

**சூன்**, கை கால் முதலியன சூம்பியிருத்தல், withering as of a limb; 2. பெரு வயிறு; large belly.

**சூன் பிடித்தவன்**, வயிறு பெருத்தவன், one with swollen belly.

**சூன்மதம்**, பைத்தியம், lunacy.

**சூன்மத்தம்**, See சூன்மதம்.

**சூன்யம்**, See சூனியம் — void which is the seat of liberation.

**சூன்றல்**, தோண்டியெடுத்தல், (in Anatomy) scooping out.

**செ**, செம்மைப் பொருளடி, the radical of many words signifying rich, regular, good etc.

**செககவுரி**, கற்சூரம், dried date fruit.

**செகசாலக்குளிகை**, உலகத்தையே மயக்கச் செய்யும், சித்தர்களிடமிருக்கும் ஓர் குளிகை, a magic pill supposed to be in possession of Siddhars bewildering the whole world.

**செகசாலமாடல்**, உலகத்தை மயக்கல், fascinating the world.

**செகசாலம்**, உலகமயக்கு, bewilderment, bewitchment; 2. மாயாவித்தை, magic; 3. பொய்காட்சி, illusion.

**செகசாலவுப்பு**, வழலையுப்பு, an universal salt used in Alchemy.

**செகசோதி**, உலக முழுவதும் பிரகாசிக்கும் ஒளி, a flood of light of greatest splendour experienced by a spiritualist in his vision.

**செகதங்கமாக்குச்சி**, கணுக்கால் எலும்பு, ankle bone upon which the tibia rests Talus.

**செகப்பகில்**, குரங்கம், pink cedar — Acrocarpus fraxinifolius.

**செகப்பி**, தாம்பூரச் சிகை, an unknown plant supposed to have alchemical virtues.

**செகப்பிரட்டைமாதளை**, சிகப்பு இரட்டை மாதுளை, double flowered pomegranate Punica granatum(flore pleno) see பூமாதளை.

**செகப்பு**, see சிகப்பு.

**செகப்புக்கொடிவேலி**, see செங்கொடிவேலி.

**செகப்புச் சீயகு**, ஓர் வகையிண்டு, rosy flushed brasellita climber — Pterolobium indium.

**செகப்புமயக்கி**, உலகம் மயங்கும்படி செய்யும் திரோதாயி, the female energy of the deity which is operative in veiling or obscuring the spiritual faculty and causing the illusions of the world to appear as realities.

**செகமயக்கி**, உலகத்தை மயக்கச் செய்தல், the act of tempting to solicitations of the passions thus obscuring the true intellect and darkening the faculty of true understanding.

**செகப்பு மந்தாரை**, சிவப்பு மந்தாரை, red mountain ebony—Bauhinia purpurea.

**செகப்பு மரியங்காய்**, சிகப்பு மரிமாங்காய், hogplum (red) — Spondias mangifera or S. dulcis.

**செகப்புவகில்**, சிவந்த அகில் மரம்; red or pink cedar tree—Acrocarpus fraxini folius.

**செகப்பு வெட்சி**, ஓர் வெட்சி, pink jungle geranium—Ixorastricta.

**செகப்புப்பூலா**, பவளப்பூலா. coral berry tree—Breynia rhamnoides.

**செகமயக்கம்**, உலகப்பற்று, wolrdly temptations, that which is presented to the mind as an inducement to evil.

**செகமவுனி**, உலக நடவடிக்கை யற்று பேசா திருத்தல், one who enters into silence by restraining from all wordly activities.

**செகமுருகு மேனி**; குப்பைமேனி, rubbish plant—Acalypha indica.

**செகம்**, பூமி, world; 2. கர்மபூமி, material world.

**செகரம்**, வெள்ளி, silver—Argentum.

**செகராசம்**, தென்னை, cocoanut palm.

**செகரிகம்**, நாயுருவி, Indian Burr—Achyranthes aspera.

**செகவீரம்**, கொச்சிவீரம், native corossive sublimate formerly prepared in cochin.

**செகனம்**, சகனம், அதாவது தொடையினுட் பக்கம், interior of thigh; 2. இடுப்பு, loin.

**செகனவாதம்**, see சகனுவர்த்தவாதம்.

**செகிப்புட்லம்**, மரமஞ்சள், tree turmeric—Coscinium fenestratum.

**செகில்**, தோள்மேல், the upper part of the shoulder joint; 2. சிவப்பு, redness; 3. தோள், shoulder.

**செகிள்**, மீன் செதிள், fish scales; 2. கேழ்வரகின் கப்பி, the refuse or bran of broken ragi; 3. காய் அல்லது பழத்தோல், rind of fruit ripe or unripe.

**செகுடன்**, செவிடன், a deaf man.

**செகுடு**, செவிடு, deafness.

**செகுத்தல்**, கொல்லுதல்; killing.

**செக்கச்சிவத்தல்**, மிகச் சிவத்தல், becoming excessively red—blushing.

**செக்கச்சிவப்பு**, see செக்கர்ச்சிவப்பு.

**செக்கச்சிவரி**, இடது கால், left leg.

**செக்கச்சிவலே**, மிகவும் சிவப்பு நிறமுள்ளது, excessively red in colour said of a woman.

**செக்கமலம்**, செந்தாமரை, red lotus flower.

**செக்கம்**, மரணம், death; 2. சிவப்பு, redness.

**செக்கரம்**, மராமரம், Indian dammer—Vatica robusta.

**செக்கர்**, சிவப்பு, redness; 2. மாலேநேரம், evening.

**செக்கர்ச்சிவப்பி**, மிகச் சிவந்த பெண், very fair coloured woman.

**செக்கர்ச் சிவப்பு**, மிகச்சிவப்பு, excessively red—abnormally red in colour-crimson red.

**செக்கவுரி**, see கற்றூரை. spinous wild indigo —Tephrosia spinosa.

**செக்கான் கைதுவட்டு மெண்ணெய்ச்சி**, வாணியன் எண்ணெய் பிழிந்து கையைத் துடைக்கவுபயோகிக்கும் துணி, இது நாய் முள்ளேப்போக்கும், a rag used by oil monger to wipe his hands in an oil press. This piece of cloth is said to cure thorny eruptions.

**செக்கு**, எண்ணெய் பிழியும் யந்திரம், an oil press.

**செக்குக் கீரை**, ஓர் வகைக் கீரை, a variety of greens.

**செக்கெண்ணெய்**, செக்கிலாட்டிய எண்ணெய், pure oil drawn fresh from oil press as distinguished from bazaar oil (adulterated).

**செங்கடம்பு**, சிவப்புக்கடப்பமரம், small Indian oak—Barringtonia — acutangula

**செங்கடற்பாரை**, ஓர் பெரிய வெள்ளேக் கடல் மீன், a large silvery sea fish—caranx carangus.

**செங்கடியுப்பு**, see செங்கடி வாயுப்பு.

**செங்கடிவாயுப்பு**, வெடியுப்பு, இதனுல் இருமல், பீனிசம், கோஷழக்கபம், பயித்தியம், காணுக்கடி விஷம், வாதக் குடைச்சல், அக்கினி மந்தம் கிராணி, வயிற்றுவலி இவைகள் தீரும். nitre—Potassium nitrate. It cures, cough, peenasam, biliousness, urticaria loss of appetite diarrhoea, stomach ache, rheumatic pains.

**செங்கடுகு**, சிவப்பு கடுகு, red Indian mustard.

**செங்கடுக்காய்**, சிவப்புக் கடுக்காய், இது ஓர் கற்பக விருட்சம். வடபொதிகைச் சாரலிற் காணலாம், இதை மண்டலம் முறைப்படி உண்ண அனேக காலம் சீவித்திருக்கலா மெனச் சித்தர் கற்ப நூல்களிற் கூறப்படுகிறது. இதனுல் கனல் மேலாறுது, மலா சயசுத்தி, உடம்பில் பொற்சாயல் உண்டாம் இருமல் மலக்கட்டு போம். a red variety of gallnut — Terminalia chebula—seems to be very rarely obtained. It is said to be found in the Pothigay Hills and in North India. If taken according to the prescribed method, contemplated in Siddhar's science it is said to promote Longevity and one will not be easily affected by intense heat or temperature of the place, he is living in.

**செங்கடுக்காய் நீர்**, ஐங்காய நீர், அதாவது பிண்ட நீர், a technical term referring to a strong pungent liquid extracted from the foetus.

**செங்கட்டான் மரத்துப் புல்லுருவி**, ஓர் புல்லுருவி, honey suckle mistle toe—Loranthus Longiflorus (amplexicaule)

**செங்கட்டி**, காவிக்கல், red ochre; 2. சாதிலிங்கம், virmilin.

**செங்கணூர் கிழங்கு**, ஒரு வகை, கிழங்கு,a variety of tuber.

**செங்கண்**, சிவந்த கண், red eye; 2. கரடி, bear; 3. இரத்தக் கண், blood shot eye; 4. ஓர் சிவப்புக் கடல் மீன். a red sea fish, cirrhytichthys aureus.

**செங்கண்டங்கத்திரி**, சிவப்பு கண்டங்கத்திரி, a red variety of prickly night shade.

**செங்கண்ணன்**, இரத்தக் கண்ணன், one with blood shot eyes; 2. அழற்சிக்கண்ணன், one with inflamed eyes; 3. சிவப்புக் கண்களுடைய எலி, a red eyed rat.

subdariffa. It is chiefly cultivated for taking fibre. It is an emollient and demulcent. It neutralises the action of bile. The decoction of the seeds in prescribed in cases of dysurea, stranguary, in mild form of debility and dyspepsia. The fruit is much valued for its anti scorbutic properties. From calyx which is boiled in water a drink is prepared for biliousness, convalescense and mild fever.

**செம்புளியம்**, சிவப்பு சிறு குறிஞ்சா, a variety of small Indian ipecacuanha — Gymnema genus.

**செம்புளியம்பிரண்டை**, சிவப்புப் புளியம்பிரண்டை, a red variety hairy wild vine — Vitis setosa or Cissus acida.

**செம்புள்**, சிவப்புப்பறவை, red bird; 2. பருந்து, huwk; கருடன், brahmini kite.

**செம்புள்ள**, செம்படங்கிய, coppery, செம்பு போன்ற, copperish.

**செம்புள்ளி**, சிவப்புப்புள்ளி, red spot on the body as in diseases.

**செம்புரு**, கொண்டை யினத்தைச் சேர்ந்த ஓர் வகை ஆற்றுமீன், a fresh water fish of the carp family — Roach.

**செம்புறைக்கல்**, துருக்கல், see செம்பாரங்கல்.

**செம்புனல்**, இரத்தம், blood; 2. சிவப்பு நீர், red coloured water or fluid.

**செம்பூ**, சிவப்புப்புட்பம், red flower in general 2, கண்ணிற்படரும் சிவப்புப் பூ, a red film or cataract in the eye; 3. மகளிர் சூதகம், menstrual blood; 4. பெண்குறிப்பூ; a part of the female genital; 5. see செந்தாளம்பூ; 6. சண்பகப்பூ, Micheliachampaca; 7. நாவல்மரம், jambul — Eugenia Jambolana.

**செம்பூகப் பூ**, see சம்புகப்பூ.

**செம்பூகா**, சண்பகப்பூ, see செம்பூ.

**செம்பூசணி**, பறங்கிக்காய், red pumpkin as opposed to வெண்பூசணி, gray pumpkin.

**செம்பூநாகம்**, சிவப்பு மண்ணில் வசிக்கும் நாகப்பூச்சி, earth worm found in the red soil.

**செம்மபூருதோன்றி**, see செம்மருதோன்றி.

**செம்பூமி**, செம்மண், red earth soil.

**செம்பூரா** / **செம்பூரான்**, ஓர் வகைச் சிவப்புப் பூரான், a kind of red centipedes 2. செம்பாறைக்கல், which see.

**செம்பூவம்**, மலைப்பூவந்தி, burdock soap nut — Nephelium longana.

**செம்பூவன்**, சிவப்புப்பூவந்திக் கொட்டை, bur dock soap nut —Nephelium longana.

**செம்பூவாத்தி**, see செம்மாந்தரை.

**செமபூறல்**, செம்பின் களிம்பு, rust of copper — Verdigris; 2. களிம்புண்டாதல், por-mation of verdigris.

**செமபேரிகம்**, சிரிப்பூண்டு, mungooseplant—Indian snake root — Ophiorrhisa mungos.

**செம்பை**, ஓர் சிறிய மரம். இது எங்கும் சாதாரணமாய்க் கிடைக்கக் கூடியது. இது முள்ளில்லாதது, இலைகள் நீளம். 3—12. பூக்கள் காய்கள் நீளம், விதைகளின் நடுவே சுருங்கியிருக்கும். பூக்கள் மஞ்சள் நிறம், இதன் விதைகளை எண்ணெயிற் காய்ச்சித் தடவ குருக்கள் குணமாகும், மேலும் மாதவிடாயை அதிகப்படுத்தும், இலை கட்டிகளுக்கு வைத்துக்கட்டப் பழுக்கும், வதக்கிக்கட்ட வீக்கம்போம் இதன் பூ தைலக் காய்ச்ச உபயோகமாகும். இத் தைலத்தால் மண்டைக்குத்தல், தலைவலி நீங்கும் வாப்வுக்கட்டி, சோகை, உடம்பின் நீரேற்றம், வாத சிலேட்டுமத் தொந்தம் முதலிய நோய்களுக்கு இலையை வறுத்து ஒத்தடம் கொடுக்கலாம். இது அடியிற் கண்டபடி பலவகைப்படும். இதற்கு சுற்றத்தி யென்றும் பெயர். கருப்பு அல்லது ஊதா பூ பூர்ப்பது கரும் செம்பை எனப்படும். இதுதான் மருந்துகளுக்கு உபயோகப்படும், bastard sensitive plant — Sesbania aegyptiaca alias Coronilla sesban. It is a small tree common every where. It is unarmed, leaves longer, pendulous three to twelve flowered, legumes linear and contracted between the seeds and flowers are yellow. There is another variety that bears dark blue flowers, and it is this that is prefered for medicine. Seeds are described as stimulant, emmenagogue and astringent. Seeds and bark are useful in

checking diarrhoea and menorrhagia seeds in the form of ointment is used for skin eruptions and itch, leaves as a cataplasam to promote suppuration; roasted leaves form a remedy for swelling. The flowers are used for preparing medicated oil which is used with great advantage in hemicrania and headache. Leaves are useful in anemia, collection of morbid fluid in the system and also diseases due to the derangement of Vatha and phlegm.

It consists of different varieties viz :

1. கருஞ்செம்பை, sesbania aegyptiaca with dark blue flowers.
2. முட்செம்பை, prickly sesban — Aeschynomene sesban.
3. சீமைச் செம்பை அல்லது பரங்கிவேல் foreign sesban —Parkinsonia aculeata.
4. நீர்ச்செம்பை, water sesban — Sesbania aculeata.
5. செஞ்செம்பை, red solah — Coronilla aculeata.
6. வயல் செம்பை. another variety.
7. வெண்செம்பை. another variety.

**செம்பைக்குருவாய்ப்பண்ணரி,** கல்லறளி, which see.

**செம்பைப் பற்பமாக்கி,** see உச்சிலந்தி.

**செம்பையிரவுப்பூண்டு,** ஓர் மஞ்சள் மந்தாரை unarmed orange nail dye — Cressandra undulacfolia.

**செம்பொடி,** செம்புமணல், copper ore, 2. செம்மணல், red sand; 3. செம்புப்பொடி, copper filinga; 4. மகரந்தப்பொடி, pollen; 5. தேக்கல், gravel rock.

**செம்பொடி நீர்க்கல்,** செம்பாறைக்கல். graval stone, red laterite stone.

**செம்பொடுதலை,** சிவப்புப்பொடுதலை, a red variety of creeping varvain — Lippia genus.

**செம்பொற்றூள்,** ஏமமணல், gold ore.

**செம்பொன்,** சுத்தப்பொன். அதாவது புடமிட்ட பொன், refined gold; 2. பழுப்புப் பொன், alloy of gold and copper; 3. சிவப்புப் பொன், a kind of gold red in colour as opposed to வெண்பொன் silver; 4. களிம்பற்ற செம்பு, copper free from verdigris; 5. தங்கரளிமரம், common yellow trumpet flower tree — Trecoma stans. 6. செம்புமலை, mountain containing copper ore.

**செம்பொன் அவரை,** சிகப்புஅவரை, redbean or lablab.

**செம்பொன்னெரிஞ்சல்,** See செப்பு நெறிஞ்சில்.

**செம்போத்து,** கள்ளிக் காக்கை, see செம்புகம், 2. சகோரம். which see.

**செம்போத்து நாடி,** நோயாளிக்கு 3-நாடிகளும் கள்ளிக்காக்கை சிறகை அடித்துக் கொள்வதுபோல் மேலெழும்பித் துடிக்கும் நாடி, இப்படியாகில் 10 மாதத்தில் மரணமாவான், It all the three pulses - vatha pitha and kapa — beat like the wings of concal (செம்புகம்) the patient will die within 10 months.

**செம்மஞ்சள்,** சிவப்பு கலந்த மஞ்சள் நிறம், கிச்சிலி நிறம், orange colour.

**செம்ஞ்சாடி,** சிகப்பு ஆனைக்குன்றிமணி, Adenanthera Pavonia.

**செம்மட்டி,** மரமஞ்சள், tree turmeric —Coscinum feuestratum; 2. ஓர்வகைச்சிப்பி, a kind of mussel of oyster.

**செம்மட்டிமரம்,** see செம்மட்டி.

**செம்மட்டைமயிர்,** கபில நிறமானமயிர், hair brown in colour.

**செம்மணக்காதி,** see செவ்வாமணக்கு,

**செம்மணத்தக்காளி,** சிவப்பு மணத்துக்காளி, red berried night shade—Solanum rubrum.

**செம்மணத்தாவிகம்,** see செந்தொட்டி.

**செம்மணத்தி,** தேவதாரு, decany deodar—Erythroxylon monogyrum. see செம்புளிச்சை.

**செம்மணல்,** சிவப்பு மணல், red sand.

**செம்மணம்,** see செம்புளிச்சை.

**செம்மணி,** கண்ணின் நடுவேயிருக்கும் கருமணியைச் சுற்றிலுமுள்ள சிவந்தபாகம், the red portion encircling the pupil of the eye; 2. கெம்புக்கல், ruby; 3. இரத்தினம், red garnet; 4. குன்றிமணி. Jweller's bead; 5. குருவிந்தக்கல், emery; 6. மாமிசகந்தி, red or flesh coloured sulphur; 7. பவளம், coral.

**செம்மணித்தக்காளி,** சிவப்பு மணித்தக்காளி, இதன் காய் சிவப்பு. சிறிதுதித்திப்பு, இலைகள் கருப்பு மணித்தக்காளி இலைகளை விடப் பெரிது, கனதி வெளிர் நிறம், சிறிது அருவருப்புள்ளவாசனை, இதன் கஷாயம் நீரை பிரிக்கும், உடம்பைத் தேற்றும், மலத்தையிளக்கும், சிறிது மயக்கத்தையுண்டாக்கும் இதை பாண்டுவிற்கும் கொடுக்காலம், இலைச் சாற்றை ஈரல் வீக்கம், உட்சுரவேகம் வாத கப தொந்தம் முதலிய நோய்களுக்குக் கொடுக்கக் குணமாகும், இதன் காய் மேனாட்டில் விஷத்தன்மைய தெனக் கருதினாலும், தமிழ் தேசத்தவர்கள் கறிவகையிற் சேர்த்து விசேஷகுணமெனக் கொண்டுள்ளார்கள், red Indian hound berry—Solanum rubrum. In this plant the berries are red and slightly sweet, leaves are distinctly larger and thicker than there of the nigrum (black variety); paler in colour and posses a slight disagreeable smell. Decoction of the leaves is diuretic, alterative, laxtive and slightly narcotic and so is used in dropsical affction, the juice of the leaves is useful in chronic enlargement of liver, internal fever, and vatha and Phlematic tendencies Berry although reckoned poisonous in Europe is eaten in Tamil country with impunity as a curry considering it to have medical virtues.

NOTE : The juice of the leaves evaporated on a sand or water bath to the consistency of a soft mass forms an extract. It is substituted for British sweetnitre, cream of tartar and digitalis.

**செம்மண்,** காவிமண், இது தமிழ்வைத்தில் உபரசச்சரக்குகளுள் ஒன்று. இது ஓர் பிசுபிசிப்பான சிவந்தமண் அல்லது களிமண். இதைப்பூர்வத்தில் மருந்தில் உபயோகித்து வந்தார்கள். இப்போது பல் தூளிலும் மிருக வைத்தியத்திலும் உபயோகித்து வருகிறார்கள், armenianbole. It forms one of the 120 kinds of natural substances. It is a reddish unctuous earth or clay formerly much used in medicine and now in tooth powders and in veterinary practice. It is an absorbant and astringent. See காவிமண்.

**செம்மண் கவசம்,** செம்மண்சீலை.

**செம்மண் கவசம் செய்தல்,** செம்மண் சீலை செய்தல்.

**செம்மண்சிலை,** கற்காவி, a species of red earth used in Indian houses for marking the bottom and ends of the walls, ridges etc. rudde, 2. காவிக்கல், red chalk—reddle — 3 See சிகப்பு காவிக்கல்.

**செம்மண்சீலை,** புடமிடுவதற்குமுன் மருந்து சட்டிக்கு சுற்றும் செம்மண்சீலை துண்டு, a long narrow pieces of cloth used to lute the container of medicine before calcination.

**செம்மண்சீலை செய்தல்,** புடம் போடும் முன்பு, அல்லது எரிக்கும் முன்பு மருந்து வைத்திருக்கும் பாத்திரத்தை மூடி, காற்று புகாதப்படி நன்றாக செம்மண்சீலை சுற்றுதல், to lute airtightly the lid and crucible or container of medicine with long, narrow pieces of cloth smeared with red ochre before submitting it to fire.

**செம்மண் பூநாகம்,** செம்மண்ணில் உற்பத்தியாகும் நாகப்பூச்சி, earth — worm growing in red earth or soil.

**செம்மந்தாரை,** சிவப்புமந்தாரை. செம்பூவாத்தி, எங்கும் வளரும் மரத்திலொன்று. மரம், 20 - 30 அடி, முள்ளில்லாதது. இலை மேற்பக்கம் உருண்டை, அடியில் தறுகிய.து பூக்கள் பெரிது, பார்வைக்கு அழகாக விருக்கும்; ஆகவே, தோட்டங்களில் விசேஷமாய்க் காணலாம். பட்டையோ சாம்பல் நிறம் வழுவழுப்புள்ளது, உருசிக்கச்சிறிது துவர்ப்புள்ளது, இதை சுரத்திற்குப் பலவர்த்தினியாகக் கொடுப்பதுண்டு, காய்ந்தபூவின் மொக்குகளை அசிரண பேதியிலும், பூச்சிகளைக் கொள்வதற்கும் உபயோகிப்பதுடன் சமையலிலும் சேர்த்துக் கறிகளில் உண்பார்கள், இம்மரத்தினின்று எண்ணெய் பிசினும் எடுப்பதுண்டு, variegated pink mountain ebony—Bauhinia variegata (alias) B.purpurea. It is one of commonest species of trees, 20 - 30 ft. unarmed, leaves roundish on the upper side and cardate at the base floweas larger, hand some to look at and so

extensively planted in gardens. Bark is grey, smooth, reddish, brown feebly astringent in taste, it is medicinally a tonic in fevers. Dried buds being astringent, and an the lmintic are used in diarrhoea, and worms, eaten as vegetables when prepared with animal food. The tree gives a brown gum and oil is extracted from the seeds. The bark rubbed with rice water into an emulsion and mixed with ginger is given in scrofulous enlargement of the glands of the neck. The decoction is a useful remedy in diarrhoea, and is used as a wash in ulcers and skin diseases. The root is a carminative and flowers are laxative. The decoction of the root is an antifat remedy and so valuable for carpulent persons.

NOTE: The leaflets are oval, petals oblong nearly sessile, legumes five to twelve seeded. The bark is grey with elliptic warts of a dark colour and the internal surface is white, Gum brown. Bark is used in tanning and dyeing. The principal botanical varieties are red and white.

**செம்மயிர்க்கொன்றை,** *சிவப்பு மயிர்க் கொன்றை* red false peacock tree — Caesalpinia pulchersima; 2. பொன்மயிர்க்கொன்றை, this is yellow variety.

**செம்மரத்தி,** அழிஞ்சில் — sage leaved alangium— Alangium decapetalum.

**செம்மரத்தூள்,** செம்மரத்தின் பட்டைத் தூள், சுரக்கஷாயத்திற் சேருமோர் கடைச்சரக்கு, bark of Indian red wood — Soymida febrifuga. Powder of the bark of the tree is used in fevers. Decoction may also be used.

**செம்மரம்,** *சிவப்பு மரம்,* any red or red wood tree; 2. *சுரக்கட்டிக்காக உபயோகப்படும் ஓர் சிவப்பு மரம்.*red wood tree, spleen tree -- Amoora rohituka: 3. *சுரக்கள்ளி.* Indian mahogany—Soymida febrifuga; 4. வத்தங்கி அல்லது சப்பங்கம், red wood tree—Caesalpinia sappan; 5. திருக்கோணமலை செம்மரம், Trincomalce red wood tree — Berrya, ammonilla; 6. see *அழிஞ்சில்;* 7. *மஞ்சாடி,* barbadoes pride; 8. தேவதாரு, red cedar; 9. செஞ்சந்தனம், false red sanders; 10. *சாயமரம்,* malay red wood tree — Sandoricum indicum.

**செம்மரம்,** சிவப்புமரம், இதன் பட்டை துவர்ப்பாதலின் மருந்திற்குபயோகப்படும். இதைக் கஷாயமாக வைத்து, சுரக்கட்டிக்குக் கொடுக்கலாம், விதையிலிருந்து எடுக்கும் எண்ணெய் வாதப்பிடிப்புக்குபயோகிக்கலாம்; red wood — Amoora rohituka. The bark is used as a medicinal astringent and decoction from it is prescribed by Vaidyans for enlargement of spleen Oil from seeds is stimulent in rheumatism.

2. *சுரக்கள்ளி அல்லது வண்டு மரம் 60 அடி, பட்டை சிவப்பு, கசப்பு சிறிது உறைப்பு, இதைக் கஷாயமிட்டு சுரத்திற்குக் கொடுப்பதுணடு, இது குணத்தில் சுரப்பட்டையை யொத்திருக்கும், கடையில் இதற்குப் பதிலாக எட்டி மரப்பட்டை விற்பார்கள்,* Indian red wood tree. Coromandel red wood — Soymida febrifuga. It is a large forest tree of S. India. The bark is of a rich red brown colour and it is astrigent tonic It contains tannic acid and is used in dysentery and diarrhoca and also as febrifuge for fevers. The decoction of the bark is adopted as gorgles, enemata, vaginal douche and also as an application for rheumatic swellings. The power is applied as poultice.

**செம்மரம்,** *சாயமரம்,* இதற்குச் சாயமரச்சக்கை வத்தங்கி, சப்பங்கம் என்றும் பெயர். திருவாங்கூர். மலையாளம். வங்காளம் இவ்விடங்களில் விஷேசம், மரம் 40 அடி உயரம், முட்களுடையது. காய் தட்டை பூக்கள் மஞ்சள் நிறம். வெயிற் காலத்தில் பூக்கும், இம்மரத்தில் (tannic acid gallic acid) துவர்ப்புச் சத்தும், புளிப்புச் சத்தும் கலந்துள் ளன ஆகவே இதைச் சீமை வத்தங்கிக்குப் பதிலாக உபயோகிக்கலாம், இதன் கஷாயம் துவர்ப்பாதலின் ஆசிரணி பேதிக்குக் கொடுப்பதுண்டு; சாயமேற்றவும் உதவும். அன்றியும், சுரம், சயம், சயத்திற் காணும் சீதபேதி, இரத்தப்பெருக்கு முதலிய நோய்களில் உள்ளுக்கும், பெண்களுக்குக்காணும் கற்பநோயிலும் யோனிப்புற்றுக்கும் வஸ்தி

செய்யலாம். red wood tree, brazil wood—Caesalpinia sappan. It is especially in Travancore, Malabar, Bengal and West Coast. Tree is 40 ft. armed flowers yellow, blossoms in summer, legumes compressed. wood contains much tannic acid and gallic acid and is a good substitute medicinally for log wood. Decoction is useful for diarrhoca and is also used for dyeing. It is beneficial in fever, consumption, dysentery in tuberculosis and hemorrhage. It is used a vaginal douche for leucorrhoea — see சீமைச் செம்மரம். The tree is 60 ft. high, bark is of a dull red colour, its decoction is used in fever, its resembles cinchona bark, in quality In bazaars nuxvomica bark is sold as a substitute: see செவ்விறகு.

**செம்மராகிதம்**, சிவப்பு நெல்லி, a red variety of goosberry tree Phyllanthus embelica genus. 2. சிவப்புக் கீழநெல்லி. red niruri — Phyllanthus urinaria — It is diuretic.

**செம்மருதம்**, See செம்மருது.

**செம்மருது**, பூமருது, Indian blood wood — Lagerstroemia flosreginae.

**செம்மருதோன்றி**, பொன்னீர் பூவளமருதோன்றி, a red variety of fragrant nail dye — Lawsonia genus.

**செம்மருந்தாண்டம்**, நான்கு மாதத்திய கருப்பிண்டம், இது சிவப்பு நிறமாய் இருத்தல் பற்றி இப்பெயர் கொண்டது போலும், a foetus four months old. It is so called from its red colour.

**செம்மரோகதம்**, நீர்முள்ளி, water thistle — Hygrophila spinosa.

**செம்மலர்**, சிவப்புப்பூ, red flower.

**செம்மலா**, ஆவிரை, tanner's cassia —Cassia auriculata.

**செம்மலே**, See செம்மலா.

**செம்மலைப்பழம்**, ஓர் வகை வாழைப்பழம், இப்பழத்தினின்று தைலம் வடித்து வாத நோய்க்குப் பூசலாம், a red variety of plaintain fruit as opposed to கருமலைப்பழம், which see, oil prepared out of it is used as an external application for rheumatism.

**செம்மலைப்பாலை**, See செம்பாலை.

**செம்மலையகத்தி**, ஓர் மலையகத்தி, hill sesbane as opposed to வெண்மலையகத்தி.

**செம்மல்**, வதங்கியபூ பழையபூ, faded flower; 2 சாதிப்பூ, superior Jasmin flower; 3. வாடாப்பூ, ever green flower.

**செம்மல்லிகை**, செம்முல்லை, golden jasmine Jasminum — humile.

**செம்மறி**, See செம்மறியாடு; 2. ஆட்டின் பொது, sheep in general.

**செம்மறிக்கடா**, செம்மறியாட்டின் ஆண், இதன் கொம்பு கீழாக வளைந்து வட்டமாயுள்ளது, இதை நெல்லூரில் விசேஷமாய் வளர்ப்பதுண்டு, ram. Its horn is angular and turned down wards, almost into a circle, Nellore is famed for its large bread.

**செம்மறிக்குட்டி**, செம்மறி யாட்டுக்குட்டி, lamb.

**செம்மறிப்புருவை**, செம்மறி யாட்டுக்குட்டி, lamb; 2. பெண்ஆடு, ewe.

**செம்மறிச்சாணி**, செம்மறியாட்டுப் புழுக்கை' இது நிலங்களுக்கு வுபயோகப்படும், excrete (dung) of the red sheep is very useful as manure.

**செம்மறியாடு**, சிவப்பு ஆடு, இது ஆட்டின் ஓர் இனம், நெல்லூரில் இருப்பது விசேஷம், தென்னாட்டிலிருப்பவை வயிறு ஒட்டி ஒறுமையைப்போலிருக்கும், ஆனால், மலையாளம், கோயம்புத்தூர் மைசூர் இவ்விடங்களிலுள்ளவைகளுக்கு மயிர் அடர்த்தியாயிருக்கும், இது சிறியதாயிருந்தாலும் நன்ருய்க் கொழுக்கும், தமிழ்ப்பதார்த்த குண சிந்தாமணியில், அகஸ்தியர் 500 லும். இதன் கறிகபத்தத்தை அதிகப்படுத்துவதால் உதவாதென்றும், பால், தயிர், நெய் முதலியவைகளுக்கு வாயு கபமிருத்தியுண்டாம். ஆகவே இது பத்திய கறிக்குதவாது எனவும் கூறப்பட்டிருக்கிறது, a variety of red sheep — Ovis aries. Nellore district is famed for its large breed, the tallest in India. The Madras sheep resembles a hound with tucked up belly and rumbled horns, but Malabar. Coimbatore and Mysore are famed for a bread of wool producing sheep. Although small it fathens well. In Tamil Materia Medica and Agastiya Vaidya 500

speak unfavourably of its mutton as promoting skin and many other disease where as its milk, curd, and ghee are like wise wholosome and unconsequently prohibited in diet as they are said to cause skin disease asthma, and diseases due to increase of Vatha humour and also due to the combination of bilious and phelgam humours.

NOTE: It is so called because it is browner than goat. Horn in bath are large angular and heavity wrinkled turned down wards almost into a circle. The lips are protected by hair. It takes bite much closer to the ground than cattle and so it can thrive even in scanty pastures. The tail is short. Its mutton is sweet and is the lightest and safest of all kinds of animal food Vnidyans employ mutton suet in the preparations of oinments. With other drugs it is administered internally in cases of hemoptesis and in certain stages of phthisis pulmonis.

**செம்மறியாட்டிறைச்சி**, செங்கரப்பான் புதிதாகப் பலநோயும், மந்தமும் உண்டாம், கொடுத்தாலும் வாயுரோகங்களுண்டாகும், a sort of eczema, loss of appetite and some diseases are caused by eating sheep's mutton. It increases adipose tissue and causes better complexion.

**செம்மறி யாட்டுக்குட்டி**, செம்மறி யாட்டின் குட்டி, the kid of the red sheep — Lamb.

**செம்மறியாட்டுப்பால்**, செம்மறி யாட்டின் பால், இது மூளைக்கும் குடலுக்கும் பலத்தைக் கொடுத்தாலும் வாயு ரோகங்களுண்டாகும், the milk of the red sheep though increases the strength of brain and intes tiones, causes vatha diseases (due to wind).

**செம்மண் திருக்கை**, நீண்டவாலுள்ள சிவப்புத் திருக்கைமீன், long tailed brown stingray — Trigon bleekeri.

**செம்மாகிதம்**, See செங்கரந்தை.

**செம்மாதர்பால்**, சிவப்பு நிறமான பெண்களின் பால், இது வாதாதி முத்தோஷம் போம். breast milk of fair coloured woman. It alleviates the diseases caused by each of three humours.

**செம்மாந்தன்**, கானல்மா, jungle mango — Spondius mangifera.

**செம்மாரா**, ஓர் கடல் மீன், a sea fish — Lutjanus unimaculatus.

**செம்மானத்தண்ணீர்**, சிவந்த நீர், water of red soil.

**செம்மானரளி**, see சிவப்பலரி.

**செம்மிகி**, see செங்கீரைத்தண்டு.

**செம்மீன்**, மீனம்பர், a morbid intestinal secretion of the spermaceti whale — Ambergiris; 2. சிவப்பு மீன்; red coloured fish in common; 3. பெருந்தலைத் திமிங்கலம், sperm whale — Euphysites macro cephalus.

**செம்மீன்வயிரம்**, மீனம்பர். see செம்மீன்,

**செம்முகமேகம்**, முகத்தைச் சிவப்பு நிறமாக மாற்றும் ஓர் வகைக் கிரந்திமேகம், a form syphilis marked by red face.

**செம்முகம்**, குரங்கு, monkey so called from its red face.

**செம்முதல்**, சீலைமண் செய்தல். luting the lid and the vessel containing medicine before calcining.

2. கட்டியைக் கீறல். incising an abscess

3. கண் கலய்கி வீங்கல், swelling of the blear eyes

4 வயிறு பொருமல், rumbling noise of the stomach.

5. புண்ணின் வாயைத் தைத்தல், suturing a wound

**செம்முருங்கை**, சிவப்பு முருங்கை மரம், a rad variety of drumstick tree — Pterygospermamoringa; 2. சிவப்புப்பூப் பூக்கும் கலியாண முருங்கை, coral bead tree — Erythrina indica; 3. செங்கொன்றை, red Indian laburam — Cassia marginata.

**செம்முல்லை**, சிவப்பு முல்லை, red or golden jasmine — Jaminum humile

**செம்முள்ளங்கி**, சிவப்பு முள்ளங்கி, red rsddish; 2. சீமை முள்ளங்கி which see.

**செம்முள்ளங்கிக் கிழங்கு**, சிவப்பு முள்ளங்கிக் கிழங்கு, இதனால் கண்ணொளி அதிகரிக்கும், நீர்த்தாரையின் கற்களைப் பொடியாக்கி நீரின் வழிசேர்க்கும், இருமல் வயிற்றுப்புசம் போம், red radish. It is cures stone in the kidney and urinary tract, bloating of abdomen and cough, improves eye sight.

**செம்முள்ளாகி,** *காட்டுமுள்ளி,* wild thistle.

**செம்முள்ளி,** *சிவப்புமுள்ளி,* இச்செடி 2 அடி உயரம், அடித்தண்டு மூலிகைக் குணம், பூக்கள் கிச்சிலி நிறம்,வருஷ முழுவதும் பூக்கும், வேர் மரத்தைப்போலவும் பக்கத்தில் அநேக சிறிய வேர்கள் கிளைத்துமிருக்கும். இலைச்சாறு கசக்கும் ஆகவே அதில் சர்க்கரையும் தண்ணீரும் கலந்து சுரம், சளிப்பு இவைகளுக்குக் கொடுப்பதுண்டு, வியர்வையுண்டாக்கும், கோழையையறுக்கும், உள்ளங்காலுக்கு வெடிக்காமலிருக்கும்படி தடவலாம். இப்பூண்டைக் கொளுத்திய சாம்பலுடன் தண்ணீரும் அரிசிக் கஞ்சியும் கலந்து பாண்டு, இருமல் இவைகளுக்குக் கொடுக்கலாம் இதன்வேரை அரைத்துக் கொப்புளங்களுக்கும், கிரந்தி வீக்கங்களுக்கும் பூசுவதுண்டு, இதன் இலைகள், தண்டு இவைகளை சை தூள் எண்ணெயிற் கொதிக்க வைத்து விரணங்களுக்குப் பூசுவதுண்டு. "செம்முள்ளி யென்றால் சிலேட்டுமம் நடுங்கும்" ஆகவே. இதற்குக் கபத்தையறுக்கும் குணமுள்ளதால் இதைக் கஷாயமிட்டு குழந்தைகளுக்குக் காணும் கனைமாந்தம், மேல்மூச்சு இவைகளுக்குக் கொடுக்கலாம், common nail dye — thorny nail dye — Barleria prionitis, B. ciliata shrubly weed, 2 ft. stem herbaceous, leaves deep green, flowers *orange coloured, flowering nearly* all the years, root woody with numerous latteral rigid rootlets *juice of leaves, which* is rather bitter mixed with sugar or honey and water is given to children in fevers and calarrh. It is diaphoeretic and expectorant applied to the foot to prevent cracking or *laceration especially during* winter or cold season. The ashes of burnt plant mixed with water and rice conjee, *employed in* dropsy, anasarca and coughs, a paste is made of the root and applied to disperse boils, alsceoses and glandular swellings. A medieated oil, made by boiling the leaves *and stems* with sweet oil as a cleansing application. Being an expectorant it is prescribed *for children in cases of tabes* mesenterica hard breathing etc.

**செம்முள்ளி,** *சிகப்பு முள்ளுக்கீரை,* red nail dye, red prickly spinach — Amarauthus spinosus; **2.** *சிகப்பு குப்பை முள்ளிக்கீரை,* a red variety of prickly greens growing in the rubbish; *3.* see செவ்வகத்தி, **4.** ஓர் வகை *சமுத்திராபழம்,* Andaman Indian oak barringtonia speciosa; *5.* வெள்ளை நீலாம்பரம். crusted purple nail dye; *6.* செம்முள்ளி இனத்தைச் சேர்ந்த ஓர் பூடு, Berleria cristata.

**செம்மூக்கன்,** ஓர் முதலை, a species of crocodile. alligator. 2. ஓர் எலி, a species of red nosed rat.

**செமெலிச்சன்,** see செம்புளிச்சை.

**செம்மெழுகு.** சிவப்பு மெழுகு, red wax.

**செம்மேகத்தடிப்பு,** உடம்பில் பலவிடங்களில் இரண்டு கனம் தடித்துச் சிவந்து, *கிள்ளினால் சுவர்ணையிற்றிருக்கும் ஓர் வகை* மேகநோய், a favour of syphitis marked by raised patches of one cente metre diamater on the different parts of the body attended with loss of sensation on the affected part.

**செம்மேகம்,** மேகத்தினால் முகம், உடம்பு, *இவ்விடங்களில் சதைதடித்து சிவப்பு நிறம் அடைந்து காணும் ஓர் நோய்,* a skin disease in which the face and the body are marked by raised red patches due to syphilitic causes; *2.* *இரத்தம் கலந்த மூத்திரநோய்,* *aurinar* disease in which urine is discharged with streaks of blood; **3.** *இரத்த மூத்திரம், discharge of bloody urine* c. f. கருமேகம்.

**செம்மை,** திப்பிலி, long paper; **2.** *சாராயம்,* liquor; 3. *சிவப்பு,* reddness; 4. செம்மறியாடு which see; 5. கந்தகம், sulphur; *6.* ஆவிரை, cassia auriculata; **7.** *மாணிக்கம்;* ruby.

**செம்மைக்கல்,** *சிவப்புக் கானகக்கல்,* a red mineral stone.

*செம்மொச்சை, சிவப்பு மொச்சை,* a red bean — Dolichos genus. It is opposed to வெண் மொச்சை, a big variety of white bean of the same genus.

**செயகந்தி,** பொன்னிமிளை, gold pyrites.

**செயகாந்தம்,** இரும்பைக் கொண்டு செய்த *காந்தம், இது மின்சார சக்தியால் செய்யப்பட்டது,* artificial magnet prepared from iron through induced electricity.

**செயகானப்பூடு,** *மருளுமத்தை,* confusion creeper. head ache plant — Xanthium strumarium.

**செயசுண்ணம்,** தாளித்த சுண்ணாம்பு, slaked lime; 2. புடமிட்டெடுத்த சுண்ணம், a calcium compound derived from calcination.'

**செயசூத செந்தூரம்,** இந்திரசித்து, சிசுபாலன் இவர்கள் வாத வித்தைக்காக இரசத்தைக் கட்டிச்செய்த சிந்தூரம். calcined red oxide prepared from consolidated mercury. It was prepared by Indirajithu and Sisupalan and others.

**செயசூத தாம்பிரம்,** See தாம்பிரவேதை, செம்பைப் பொன்னுக்கு மருந்து, that which converts copper into oldg.

**செயசூதம்,** செயரசம், இது அப்பிரகத்தினின்று எடுப்பது, artificially prepared mercury which is extracted from mica.

**செயசெம்பு,** யூகிமுனி வாத காவியத்திற் சொன்னபடி வாதமுறையால் செம்பினின்று எடுக்கப்பட்ட களிம்பற்ற செம்பு, alchemical copper *(pure) obtained by removing the* verdigris from ordinary copper, according to the process laid down in Yugimuni works on Alchomy. 2. மூலிகை அல்லது தாதுப்பொருள்களினின்று எடுக்கும் செம்பு. copper extracted from herbs and animal matter or transmuted or extracted from other mineral drugs as contemplated in Siddhars' works. see செம்புச் சரக்கு; 2. செம்பு மூலிகை; 3. செம்பு.

**செயசோதி,** தயாரித் ஓர் வகையுப்பு, a kind of prepared salt.

**செயதீபகாரி,** பெருந்தும்பை. large leucas.

**செயதே,** உப்பு, salt.

**செயதேகி,** கல்லுப்பு, sea salt,

**செயநாதம்,** துத்தம், white vitriol — Zinc sulphate.

**செயநீராட்டல்,** மருந்துடன் செயநீர்கூட்டி அரைத்தல், grinding the medicine with the liquid prepared by keeping some chemicals in the open air at night.

**செயநீர்,** சுண்ணாம்பும், நவாச்சாரமும் சேர்த்துப் பொடித்துப் பனியில் வைத்திறக்கிய கார நீர், a pungent liquid prepared by exposing to nights dew a mixture of powdered lime and salammoniac; 2. பூநீறு. வீரம், சாரம் இவைகளைச் சமபாகமாக வெடுத்துப் பீங்கானிலிட்டு இராப்பனியில் வைத்து இறக்கிய காரமருந்து நீர், a medicinal preparation of pungent liquid obtained by exposing to nights' dew a porcelain dish containing a mixture of saline efflorescence, (purified fuller's earth) corrosive sublimate and salammoniac; 3. செய நீர். பனிக்குடத்து நீர், amniotic fluid found in fetal membrane-ous sac; 4. கருக்குழியில் அப்பு ஊறுவதினாலும், உதிரமும் சுக்கிலமும் நாதவிந்தாக மாறுவதாலும். ஆண்விந்து சிவமேயாகில் செயநீர் உண்டாம், a liquid that is formedin the womb on account of changes that take place in the womb; 5. ஓர் வகைத் திராவகம், a kind of acid.

NOTE: This செயநீர், is peculiar to Tamil Siddha science and it is a pungent liquid always prepared by exposing medicinal salts poisonous compounds ets. to night's dew. It is supposed to be a solvent medium for many insoluble substances and as such is used for preparing medicines of very high potency and in Alchemy it is chiefly consolidating or fixing up volatile substances. In medicine it forms a useful medium in the preparation of metallic oxides by process of calcination. Names of such liquids are given below:—

1. வெடியுப்பு செயநீர்.
2. சார செயநீர்.
3. காடி செயநீர்.
4. தாம்பூர செயநீர்.
5. துரிசு செயநீர்.
6. பூர செயநீர்.
7. உப்பு செயநீர்.
8. சாரக்கட்டு செயநீர்.
9. அறுவகை செயநீர்.
10. நாக செயநீர்.
11. அண்ட செயநீர்.
12. வீர செயநீர்.

13. கார செயநீர்.
14. சிப்பி செயநீர்.
15. கௌரி செயநீர்.
16. செங்குமரி செயநீர்.
17. அமுரி செயநீர் (அமுரி மூத்திரம்).

**செயநீர்,** ஒரு வகைப்பானம், any liquid prepared for drink; 2. சாராயம், arrack. 3. அமுரி, urine; 4. முலைப்பால், woman's breast milk; 5. குடிநீர், any cool drink; 6. ஓர் வகை அக்னித் திராவகம், இது தாதுப் பொருளைக் கரைக்கும், a pungent liquid used in Alchemy—Philosopher's acid.

**செயநீர்இறக்கல்,** வாத முறையில் தயாரித்த மருந்தை. செயநீர் எடுக்க வேண்டின் அதை ஒரு பீங்கானில் இட்டுபூரணை தொடங்கி. தை, மாசி மாதங்களில் இராப்பனியில் தினப்படி வைத்திருந்து இத்தனை நாள் என்னும் முறைப்படி விடிவதற்குள் அதாவது சூரியோதயத்திற்கு முன் வெயில் படாமல் எடுத்துவிடவேண்டிய முறை. This is the general method of preparing a pungent liquid. Invariably every preparation contains salammoniac.

**செயநீர்காலம்,** செயநீர் இறக்குங் காலம், season for preparing the pungent liquid or the philosopher's acid — January and February dew seasons.

**செயநீர்குத்தல்,** செயநீர் ஊற்றி அரைத்தல், grinding medicine with the prescribed pungent liquid.

**செயநீர்க்கருத்தன்,** நவச்சாரம், salammoniac. It is so called because it forms an important ingredient in the formation of most of the pungent liquids.

**செயநீர் காரணசித்தன்,** செயநீர் உண்டாவதற்கு ஆதியான நவச்சாரம், salammoniac is so called from its being an important ingredient in the formation of செயநீர்.

**செயநீர் சித்திரம்,** நவச்சாரம், Salammoniac.

**செயநீர் போக்கு,** இன்ன மருந்து தயாரிப்பதற்கு இன்ன விதமாக செயநீர் தயாரிக்க வேண்டுமென்கிற முறை, the process of preparing a particular pungent fluid (செயநீர்) for a particular medicine.

**செயந்தியாசம்,** see செம்பை.

**செயபச்சை,** மரமஞ்சள், tree turmeric. —Coscinium fenestratum.

**செயபரம்,** see செயபச்சை.

**செயபாக சாஸ்திரம்,** மருந்துகளை இன்ன விதமாகத் தயாரிக்க வேண்டுமென்கிற விஷயங்களை வடமொழியில் குறித்த ஓர் சிகிச்சாதந்திரம், an authoritative treatise in Sanskirit on drugs and their preparations — Pharmacopia.

**செயபீதம்,** கௌரிபாஷானம், a prepared yellow arsenic.

**செய பூநிம்பம்,** நிலவேம்பு, ground neem — Justicia paniculata.

**செயமதம்,** தயிர், curd.

**செயமாகம்,** தினை, millet.

**செயமரக்கி,** சேங் கொட்டை, marking or dhobys' nut — Semecarpus anacardium.

**செயரச கற்பூரக்குளிகை,** கல்லுளி சித்தன் முறைப்படி செரியாமைக்கும் கிராணிக் கழிச்சலுக்கும் உபயோகிக்கும் குளிகை, a pill prepared according to the method of Kalluli Suddhar and prescribed for indigestion and chronic diarrhoea.

**செயரசத்தின் சேவகன்,** வெள்ளியம், tin — white lead.

**செயரசப்பிரளயம்,** அகத்தியர் வைத்திய காவியத்திற் சொல்லியுள்ள ஓர் வகை இரசச் செந்தூரம், a kind of calcined oxide of mercury described in Agastiar's treatise on Medicine.

**செயரசம்,** இரசம் அடங்கிய இலிங்கம், வீரம், பூரம் முதலிய சரக்குகளினின்று வாலையில் இறக்கிய சுத்த ரசம், refind mercury extracted from its compound such as vermilin. corossive sublimate etc. 2. வாலை ரசம், sublimate of mercury. 3. நெருப்பிற்கு ஓடாதபடி கட்டிய ரசம்; consolidated mercury which will not disappear on heating, 4. கொங்கணவாத காவியத்திற்

சொல்லியுள்ள சித்தரசம், சிராவணரசம் முதலிய இரசமருந்துகள், mercurial preparation such as these mentioned above, ( விரம், பூரம், இலிங்கம் ) contemplated in Konganava's work on Alchomy. 5. ஓர் வகை ரசச்செந்தூரம், an oxide of mercury.

**செயலவணம்**, கடல் நீரைக் காய்ச்சியவுப்பு. salt prepared from sea water. 2. see ஆருங் காய்ச்சலுப்பு. 3. பிண்டவுப்பு, salt prepared from foetus. 4. சுத்திசெய்தவுப்பு, refind salt. 5. கட்டுப்பு, ( Alchemy ) consolidated salt. The stanza below is from Konganava's work on Alchomy describing the virtues of consolidated salt.

" இறுக்கிவைக்கும் செயலவணம் தின்று யானால்
எழும்பலாம் கேசரத்தில் மதியின் மட்டும்
தறுக்கிவைக்கும் விதியெழுத்தைத் தள்ளிப் போகும்,
சாகாமல் பண்ணுவிக்கும் சட்டை போக்கும்
முறுக்கிவைக்கும் சடத்தை நன்றாய் வைரம் போல்
மூச்சடாவோடாது மூலத்தேற்றும்
மறுக்கிவைக்கும் நித்திரையை வரவொட்டாது
மருந்துவங்கான் கட்டினதோர் லவணத் தாட்டே "
( கொங்க - வாத - காவி )

6. அப்பிரக முதலியவைகளினின்று இறக்கிய ரசம், mercury extracted from mica etc.

**செயலற்றுக்கிடத்தல்**, அசையாது கிடத்தல், lying prostrate.

**செயலிங்கம்**, கட்டியலிங்கம், consolidated vermilin.

**செயலுப்பு**, see ஆருங்காய்ச்சலுப்பு.

**செயலை**, அசோகமரம், Asoka tree — Uvaria longifolia

**செயலோகம்**, உலோகத்தினின்று தயாரித்த செந்தூரம், red oxide of a matal prepared by calcination. 2. இரும்பு செந்தூரம், calcined red oxide of iron.

**செயல்**, மருது, murdah tree — Terminalia tomentosa. 2. சேங்கொட்டை, marking or dhoby's nut — Semecarpus anacardium 3. வலிமை, strength; 4. ஒழுக்கம், behaviour.

**செயல் நீர்**, உண்டாக்கு மருந்து நீர் — ( lit ) manufactured water See செயநீர்.

**செயல் மாதரி**, சிற்றுமுட்டி, root of Ceylon pavonia — Pavonia Zeylanica.

**செயல் முகம்**, See கல்லாரை.

**செயவல்லி**, சிவகரந்தை, which see.

**செயவிரணம்**, காரமருந்து வைத்தோ, கத்தியால் கீறியோ உண்டான புண், a wound created by applying caustics or by incising.

**செயவிருட்சம்**, இதனை, which see

**செயற்கால்**, வியானன் வாயு, one of the ten vital airs of the body responsible for stimulating the functions in the body.

**செயற்கை**, தொழிலாலியற்றிய, artificial, synthetic.

**செயற்கைக் கஸ்தூரி**, கஸ்தூரி வைப்பு, fictitiously prepared musk see கஸ்தூரிவைப்பு.

**செயற்கைத்தங்கம்**, இதில் மாற்றுக்குத் தக்கதப்படி பலவிதமுண்டு. artficially prepared gold. It differs according to the degree of its purity.

**செயற்கைப்பசி**, சீரணவேதி மருந்து, சாராயம், சீரணகாரியுப்பு முதலியவைகளால் ஏற்படும் பசி,, hunger raised by medicines such as stomachis, liquor, digestive salts etc. to promote the functional activity of the stomach, hunger due to a medicine exciting the action of the stomach.

**செயற்கைப்பல்**, செய்தபல். artificial tooth; 2. பொய்ப்பல், false tooth.

**செயற்கையறிவு**, ஏற்பட்ட அறிவு, acquired knowledge or experience.

**செயற்கையுப்பு**, தயாரித்தவுப்பு, any artificial salt as distinguished from that found naturally like rock salt; 2. கறியுப்பு, common salt; 3. இரசாயனவுப்பு, chemical salt, salt derived from synthetic reaction.

**செயற்கையுணர்ச்சி**, சிகிச்சையினால் மூர்ச்சையை நீக்கி யுணரும்படி செய்தல், senses or consciousness brought about after treatment as in a case of swooning.

**செயற்கையுணவு**, சொந்தமாகச் செய்த சாப்பாடு, prepared food; 2. வீட்டில் சமைத்த சாப்பாடு, food prepared domestically,— home meals.

**செயற்கையுயிர்ப்பு**, உண்டாக்கிய மூச்சு. artificial respiration as opposed to இயற்கையுயிர்ப்பு — natural respiration.

**செயற்கைவாசனை**, சேர்க்கைக் குணம். habits acquired from association.

**செயின்,** இவர் டில்லிக்கருகில் அளகாபுரியில் (Aligarh) தமது சீடர் 1000 பேரோடு இருந்தார். இவரைப்போகர் போய் கண்டபோது போகருக்கு ஞானோபதேசம் செய்து தம் சீஷராக்கினர். அவருக்குச் சொல்லிய வித்தையும் கற்றுக்கொடுத்தார், பிறகு தென் பொதிகையின் சாரலிற் 20 வருஷம் சமாதி புகுந்து பிறகு மறைந்தார். a Siddhar named Seyan lived in Aligarh near Delhi with 1000 disciples whom Bogar saw and paid his respects. He took Bogar as his disciple and gave him spiritual instructions. Having tauget surgery to Bogar, he came to south and was in Somadhi for 20 years near Pothikai hills and then disappeared.

**செயாந்தன்,** ஆற்றுமருந்து, healing drug.

**செயால்,** பூனை, cat.

**செயிதூன் எண்ணெய்,** see சைதூன் எண்ணெய்.

**செயிர்,** நோய், disease.

**செய்கரி,** அடுப்புக்கரி, charcoal.

**செய்காந்தி,** காந்த சக்தியூட்டிய இரும்பு artificial magnet, iron to which magnetism is induced.

**செய்கீரை,** ஒருவகை கீரை. Indian endive wild endive — Chicorium intybus

**செய்,** உழுதல், to cultivate as in நன்செய்; 2. செய்தல், doing, manufacturing as in செய்பாகம்; 3. தயாரித்தல்; prepared as செய்யுப்பு (prepared salt); 4 சிவப்பு red; 5. மூன்று காலத்தையும் குறிக்கும் வினை as செய்காரியம், refering to actions of the post, present and future; 6. செய்யப்பட்ட, done, as in செய்வினை (acts done).

**செய்கை,** கையாற் செய்தல், artificial production as opposed to இயற்கை natural production; 2. see செயற்கை, 3. கருமம், karma; 4. பில்லி சூனியம், witch craft.

**செய்கையான்,** மாந்திரீகன், sorcerer; 2. ஏவலிடுவோன், one practising black art.

**செய்கைச்சரக்கு,** வைப்புச் சரக்கு, artificial or prepared drug or medicine.

**செய்கையுப்பு,** காய்ச்சி எடுக்கும் உப்பு, manufactured salt.

**செய்தகர்,** மிளகு, pepper.

**செய்தாடல்,** ஒரு மருந்தைச் செய்து கையாளுதல், preparing the medicine and tnen handling it or putting it to use.

**செய்நாதம்,** துத்தம். white vitriol — zinc sulphate.

**செய்நீர்,** see செயநீர்; 2. சுண்ணும்பும் நவச்சாரமும் சேர்த்து இராப்பனியில் வைத்து இறக்கிய ஓர் காரமருந்து நீர், a strong pungent liqnid obtained or derived from exposing to nights' dew a mixture of lime and salammoniac contained in an eartherned or porcelain dish or plate; 3. வாலையிலிறக்கிய நீர், distilled water; 4. கஷாயம், சர்பத், தித்திப்பு, சோடா முதலிய குடிநீர், a prepared liquid extract or manufactured water such as decoction, syrup, sweet essence, soda etc. used as a drink.

**செய்நீர்ச்சித்திரம்,** நவாச்சாரம், salammoniac

**செய்பாகம்,** வாகடத்தில் சொல்லிய விதிப்படி மருந்து சரக்குகள் அளவு, கால நிர்ணயம், புடதிட்டம், அரைப்பு, எரிப்புத் திட்டம் முதலிய கிரமங்களை அனுசரித்துச் செய்யும் மருந்து முறை, process or method of preparation as per rules contemplated in Indian medical science as opposed to (கைபாகம் which see) practical experience and skill; 2. பொதுப்படச் செய்யும் முறை, process of manufacture in general.

**செய்பாகம் கைபாகம் தவறுதல்,** செய்முறையும் கைமுறையும் தப்பி போதல், mistake committed in not observing the text or his experience while preparing.

**செய்மருந்து,** வாகடப்படி செய்யு மருந்து, medicine prepared according to the rules of medical science; 2. கைமுறையாய்ச் செய்யு மருந்து, medicine prepared by practical experience and skill.

**செய்முறை,** மருந்து செய்வதற்கும் கலப்பதற்கும் ஏற்பட்ட பழக்கம். the art or practice of preparing and compounding medicines — Pharmacy.

**செய்முறைக்குரிய,** வாகட விதிப்படி செய்தற்குரிய pharmacentical as opposed to கைமுறை அல்லது அனுபவ முறைக்குரிய empirical.

**செய்முறைவகுப்பு,** ஔதமுறை வைத்திய முறை இவைகளின்படி மருந்துகளை தயாரிக்கும் முறைகள் இதில் இரசாயன முறைகளும் சேர்ந்ததே அவையாவன:—

The names of various processes employed in preparing medicines for use in Alchemy and medicine are given below. For explantion refer the word concerned.

1. இலேகியங் கிளறல்.
2. உருக்குப்பாய்ச்சல்.
3. ஊஞ்சலேற்றல்.
4. ஊதுதல்.
5. கலிக்கமாட்டல், see கலிக்கம்.
6. களங்காக்கல்.
7. களிம்புசெய்தல்.
8. கற்பம் தயாரித்தல்.
9. காரசாரமேற்றல்.
10. கிராசங் கொடுத்தல்.
11. கிராவணம்.
12. குடோரிவைப்பு.
13. குருவாக்கல்.
14. குழம்பாக்கல்.
15. கூட்டுதல்.
16. சத்தெடுத்தல் — சாறுபிழிதல்.
17. சாரணை தீர்த்தல்.
18. சிந்தூரித்தல்.
19. சிராவணம்.
20. சுடரெண்ணெய் வடித்தல்.
21. சுண்ணமாக்கல்.
22. சுத்திசெய்தல்.
23. சுரசம்பண்ணல்.
24. சுருக்குக்கொடுத்தல்.
25. சூடுபோடல்.
26. சூரணித்தல்.
27. செயநீராக்கல்.
28. திராவகமிறக்கல்.
29. தைலம்வடித்தல்.
30. நீராக்கல்.
31. நீர்வாங்கல்.
32. நீற்றல்.
33. பதங்கித்தல்.
34. பற்பமாக்கல் அல்லது வெள்ளையாக்கல்.
35. பிரித்தல்.
36. புடமிடல், எரிப்பு அல்லது எரிப்புத்திட்டம்.
37. மணியாக்கல்.
38. மயனமாக்கல்.
39. மருந்துவைப்பு.
40. மாத்திரை அல்லது குளிகையாக்கல் அல்லது உண்டை செய்தல்.
41. மாற்றுயர்த்தல்.
42. முப்பு முடித்தல்.
43. மைசெய்தல்.
44. வாலையிலிடல்.
45. வெட்டையாக்கல்.
46. வெண்ணையாக்கல்.
47. வேதையாக்கல்.

ஒவ்வொன்றுக்கும் விளக்கம் see ஔடதவர்க்கம்.

**செய்ய,** சிவந்த, red.

**செய்யச்சம்,** செப்பு நெருஞ்சில், red neringy — Indigofera enneaphylla.

**செய்யதாமரை,** செந்தாமரை, red lotus — Nelumbium speciosum.

**செய்யபவளம்,** சிவப்புப்பவளம், red coral.

**செய்யமருந்து,** See செய்மருந்து.

**செய்யல்,** சேறு, mire mud.

**செய்யான்,** கடித்தால் தேளைப் போற் கடுத்து தடிப்புண்டாகும். ஓர் வகை சிவப்புப் பூரான் இது பலவிதம் அவையாவன; 1. வெள்ளை; 2. பட்டை; 3. பெரும்படை; 4. குருதி; 5. மருட்சி; 6. வன்மீகம்; a class of red venomous centipede. Its bite causes swelling in the affected part, and pain just as in scorpion sting. It is of six kinds or varities. see Tamil version above.

**செய்யுட்பொருத்தம்,** பால், milk.

**செய்புப்பு,** See செயற்கையுப்பு.

**செய்வித்தமண்ஒடு,** குயவன் பானையோடு, broken piece of pot.

**செய்வினை,** சூனியம், sorcery; 2 ஏவல், witch craft; 3. நோயாளிக்குச் செய்யக்கூடிய உபசாரணை, that which a person is bound by obligation to perform as regards a patient; 4. முற்பிறப்பிற் செய்த கருமம், karma of the past birth, 5. பில்லி, சூனியம், sorcery.

**செய்வொளி,** வைடூரியம், cat's eye; 2. உண்டாக்கிய வெளிச்சம். (lit) a light contrived by art or skill as electric light gas light etc.

**செரங்கை,** See சிறங்கை, handful.

**செரிகுடர்,** See செரிகுடல்.

**செரிகுடல்,** உண்டவற்றை அன்னரசமாகச் சமிக்கும் சிறுகுடல், that part of small intestine in which the greater part of the food is digested and turned into chyme.

**செரிக்குங்காலம்,** வைத்திய நூலின்படி மருந்துகள் பூசிய அல்லது உட்கொண்ட பிறகு செரிக்கும்படியான காலவளவு, இது மருந்திற்குத் தக்கவாறு அடியிற்கண்டபடி வரையறுக்கப்பட்டிருக்கிறது.

நசியம் — ½ நாழிகை.
அஞ்சனம் — 2 நாழிகை.
பச்சிலைச்சாறு — 6 கடிகை.
கஷாயம் — 7 கடிகை.
கனத்தகஷாயம் — 9 கடிகை.
சூரணம் — 10 கடிகை,

(In medicine) the time or period of digestion calculated as shown under in respect of various kinds of medicines according to their strength. See சீரணகாலம்.

Medicated snuff — 12 minutes.
Collyrium — 48 minutes.
Jucie of green herbs — 2 hours.
Decoction — 2 hours 48 minutes.
Thick decoction — 3 hours 36 minutes.
Powder — 4 hours.

2. உண்டவுணவு செரிக்குங் காலம், இது உணவிற்குத் தக்கபடி காலம் வித்தியாசப்படும். See சீரணகாலம்.

**செரிட்டம்,** சந்தனம், sandal wood.

**செரித்தல்,** சீரணித்தல், being digested.

**செரிப்பமிலம்,** பாசக நீரின் புளிப்பு, இது பன்றி, ஆடு, கன்றுக்குட்டி இவைகளின் வயிற்றினின்று எடுக்கப்படும் இது உணவிலுள்ள புரதங்களை (Protein) வெள்ளைக்கரு இனத்தைச் சார்ந்த பொருள்களாக (Peptone) மாற்றவுள்ளது. ஆகையால் செரிமானமுண்டாவதற்கும், வயிற்றினழற்சிக்கும் உபயோகப்படும், a chemical ferment of gastric juice formed by living cells of stomach — Pepsin It is extracted from the heathly stomach of pig, sheep or calf. It changes the proteins into peptones and as such helps digestion and cures cancer of the stomach. Pepsin is used in medicine as a digestant and as a remedy for dyspepsia.

**செரிப்பழம்,** காசுமீரப்பழம், a cherry of Cashmera, kashmere pistachio — Parinarium armeniaca.

**செரிப்பி,** மருந்து வகைகளைக் கொண்டும் புளிப்பு நீர் வகையாலும் உண்டவுணவைச் செரிக்கும்படி செய்தல், artificial digestion effected in the system with the aid of stomachics or acidulated water — promoting digestion by administering medicines.

NOTE : It is opposed to natural digestion taking place by the action of saliva, gastric juice, pancreatic juice bile and success entericus.

**செரிப்பித்தல்,** சீரணிக்கச் செய்தல், promoting digestion.

**செரிப்பு,** சீரணிப்பு, அதாவது உண்டவுணவை மாற்றி, உடம்பிற்குள் ஏற்றுக்கொள்ளுமளவாகச் செய்யுந்தன்மை, the act of converting food into materials fit to be absorbed and assimilated in the system — Digestion.

**செரிப்போன்,** பாசனநீரிலுள்ள செரிப்பமிலத்தால் உணவிலுள்ள புரதங்கள் மாற்றமடைந்து உண்டாகும் வெள்ளைக்கருச்சத்து சம்பந்தமான வஸ்து, protein produced by hydrolysis of native proteins of the food — Peptone

**செரிமானமின்மை,** செரியாமை, absence of the digestive function — Apepsia.

**செரிமானம்,** சமிக்கும் விதம், the act or the process of dissolving aliment in the stomach and preparing it for absorption into the system — Digestive process.

**செரியாக் குடல்,** உண்டது தங்காது கழியும் குடல், bowels incapable of digesting the food taken and causes purging — weak bowels causing loose motions.

**செரியாக்குணம்,** சீரணமாகாத தன்மை, இது கனத்த உணவினால் அல்லது பொருந்தாத கறி வகைகளைச் சேர்பதனுல் ஏற்பட்ட அசௌகரியமான நிலைமை, இதனுல் சாதாரணமாய் வயிறுப்பி வலிகானும், சில சமயங்களில் ஒக்காளம், வாந்தி, பேதி இக்குணங்களையும் காட்டும், lack or failure of digestion — Indigestion It is a condition of discomfort after heavy meals or unequal combination of food, difficult for digestion. Distension of stomach attended with pain is the usual symptom, sometimes nausea, vomitting and purging.

**செரியாக்கோளாறு,** செரியாக்குற்றம், digestive disorders, dyspeptic disorders.

**செரியாப்படுவன்,** செரியாமையினலுண்டாகும் ஓர் வகை விரணம். இது சாதாரணமாய் வாய், நாக்கு, தொண்டை, வயிறு இவ்விடங்களால் உண்டாகும், ulcers of the mouth, the tongue, the throat and the stomach through indigestion or dyspeptic disorders.

NOTE: The other pathological causes ascribed to such a kind are viz — 1. disease of gall — bladder, 2. appendicits. 3. eating when tired 4. severe nervous shock 5. serious accident. 6. gas in the stomach 7. intestinal or stomach ulcers. 8. gall stones and other liver troubles, 9. fautly chemical action, 10. colitis. 11. cancer of the stomach.

**செயாமாந்தம்,** வயிறு பொருமி மாவைக் கரைத்ததுபோல் புளித்த நாற்றத்துடன் கண்டல், கரைசலுமாக குழந்தைகளுக்குக் காணுமோர் அசீரணபேதி. இதனல் விக்கல், சுரம், தலைவலி, பலயீனம், சோர்வு முதலிய குணங்களைக் காட்டும்; diarrhoea of children due to indigestion attended with rumbling noise in the stomach. white stools which are semifluid often containing hard lumps with fetid smell.and sometimes accompanied by head ache, fever hiccups, and weakness — a kind of dyspepsia.

**செரியாமை,** சமியாமை, indigestion. இதுவே ஆமிலபித்தரோகம் என்பது, dyspepsia.

செரு, ஊடல், love quarrel.

**செருகுதல்,** See சொருகுதல்.

**செருகொடி,** பப்பிளி, red creeper.

**செருக்கம்,** *மாதுளை,* pomagranate — Punica-granatum; 2. *மயக்கம்,* giddiness; 3. *குடி மயக்கம்,* intoxication.

**செருக்கம்பம்,** பேரரத்தை, greater galangal, —Alpinia galanga ( major ).

**செருக்கல்வரகு,** பேதி, வாந்தி, மயக்கம் முதலிய குணங்களையுண்டாக்குமோர் வகை வரகு, a kind of coarse small, black millet — Papsalum frumentaceum — Cooked and taken as food, it brings on vomitting, purging often attanded with giddiness c. f. *சிறு வரகு.*

**செருக்கற்பாக்கு,** மயக்கத்தையும் நெஞ்சடைப்பையும் உண்டாக்குமோர் வகைப்பாக்கு, a stupefying arecanut causing obstruction in the chest and giddiness.

**செருக்கன்,** See கொடிவேலி.

செருக்கு, ஆண்மை, manliness; 2. இறுமாப்பு, pride; 3. *சாதிச் செருக்கு,* பொருள் செருக்கு, கல்விச் செருக்கு, arrogance through caste, wealth, and culture; 4. அகங்காரம், egoism.

**செருத்தல்,** *பசுவின் பால் மடி,* the udder of a cow.

**செருந்தி,** செங்கோடு, red jovy — Ochna squarrosa; 2. *மணத்தக்காளி,* black berried solanum — Solanum nigrum; 3. *வாட்கோரை* a kind of koraiy grass — Ceyperus genus; 4. see கெட்டிக்கோரை; 5. *சிலந்தி மரம்,* pear tree — Ochna gamblei

**செருந்திகா,** See செருந்தி.

**செருந்து,** பூவிதழ், petal of a flower; 2. See செருந்தி,

**செருப்படி,**
**செருப்படிநாயன்,** } See செருப்படை.

**செருப்படை,** இது பனிகாலங்களில் வேலி ஓரங்களிலும் வயல்களிலும் தரையோடு படர்ந்து வளரும் ஒரு பூடு. இதில் பெரு செருப்படை, சிறு செருப்படை என இரண்டு வகைகள் உண்டு. பொதுவாக இது செருப்படையே குறிக்கும். இது உஷ்ணத்தைத் தரக்கூடியது. இதை சூரணித்துச் சாப்பிட வெள்ளை, சூலை, குன்மம் இவைகள்போம். கசாயமிட்டுக் குடிக்க வாதகோபம், மந்தாக்கினி, தம்ப வாதம் முதலியவைகள் நீங்கும், a low spreading creeper — Glinus lotoides. It grows in the dew seasens along the hedges and fields. It consists of two classes big and small ( leaves ). It is heat — making in its potency. Dried powdered leaves are prescribed for gonorrhoea, gout, dyspepsia etc., decoction of the leaves is considered advantageous in cases of rheumatic inflammation, dulness of appetite. numbness, in rheumatic complaints etc. The dried plant mixed with fenugreek seeds and rubbed into a fine paste is used to promote the suppuration of boils and abscesses.

**செருப்பு,** see செருப்படை.

**செருப்புக்கால்,** *சிறு செருப்படி.* see செருப்படை.

**செருப்பு நெருஞ்சி.** see செப்பு நெருஞ்சி.

**செருமல்,** see செருமுதல்.

**செருமுதல்,** அழும்போது அடிக்கடி திணருதல், repeated choking or stopping of the breath while crying under grief or affliction or in exclamations of sorrow; 2. இருமுதல், coughing as beasts; 3. கணைக்குதல், hemming see செறுமுதல்.

**செருவிளை,** வெண்காக்கணம், white mussell shell creeper — Clitoria ternatea (albiflora)

**செலகம்,** மல்லிகை, Arabian jasmine — Jasminum sumbac.

**செலகூடபம்,** நண்டு, crab; 2. நத்தை, snail.

**செலக்குரு,** நவச்சாரம், salammoniac.

**செலக்குலவங்கம்,** கெந்தகமாஞ்சில் அல்லது புறங்கைநாரி, botanical name not known.

**செலக்கூடபம்,** நண்டு, crab.

**செலக்கூர்மை,** see செலக்குரு.

**செலக்கூறு,** நத்தை, snail.

**செலசரம்,** நீர்வாழும் பிராணி, aquatic animals.

**செலசரி,** see சலசரி,

**செலசூகன்னி,** தாமரைக் கிழங்கு, lotus root, see சலசூகன்னி.

**செலதம்,** கோரைக்கிழங்கு, cyperus root.

**செலதிம்,** எலும்பு முருந்து, தோல் முதலிய பகுதிகளிலுள்ள பசையான வஸ்து, a viscous substance found in the tissues of bones cartilages skin etc, of animals — Gelatin.

**செலந்தி,** புண், ulcer. see சிலந்தி.

**செலப்பிரீதி,** கற்பூரச்சிலை, crystallished foliated gypsum; 2. மூத்திரமும் மலமும், urine and faeces.

**செலமலம்,** கடற்பாசி, sea weed.

**செலமாகிதம்,** கெட்டி வஞ்சி, a species of south Indian willow — Salix tetasperma.

**செலம்,** வெட்டிவேர், khuskhus root. Andropogon muricatus; 2. சலம், water; 3. கோரைக்கிழங்கு, cyprus root.

**செலவழிதல்,** பெருவாரியில் இறத்தல், dying in an epidemic.

**செலவியம்,** மிளகுக்கொடி, pepper creeper — Pipernigrum. see செவ்வியம்.

**செலவு,** இறப்பு, death.

**செலாகை,** see சலாகை.

**செலிதம்,** பாகு போன்ற இந்திரிய வஸ்து, gelatinous substance.

**செலியம்,** விலாமிச்சை வேர், a fragrant grass root, cuscus root.

**செலியாமம்,** கொட்டைப்பாசி, seed moss.

**செலு,** நறுவிலிமரம், common sebesten Cordia obliqua; 2. மீன் செதிள், fins of fish.

**செலுகம்,** see செலு; 2. குடமல்லிகை, sambacjasmin — Jasminum sambac.

**செலுகுதல்,** ஓர் வகை மீன், a kind of fish.

**செலுத்துதல்,** உட்புகுத்தல், thrusting in side stuffing as lint; 2. உண்பித்தல், causing to eat; 3. உள்ளுக்குக் கொடுத்தல், administer as of medicine.

**செலுப்பட்டி,** ஓர் வகை மீன் a kind of fish.

**செலுப்பை,** கருவாலி, Ceylon tea.

**செலுப்பைமரம்,** கருக்குவாவரம், இதன் பூ சிறியதாகவும் மஞ்சளாகவும் இருக்கும். வேர்ப்பட்டை வெளிப்புறம் கபிலநிறம், உட்புறம் செங்கல் நிறம், பட்டையின் சிலதுண்டுகளில் மேற்புறம் சொரசொரப்புள்ளது, இலைகளும் பட்டையும் துவர்ப்பும், ருசிக்கச் சிறிது கசப்பாயுமிருக்கும், பிசின் ருசியற்றதாயும், தேன்நிறம் போலவும் இருக்கும். இதன் வேர் பாம்புகடிக்குதவும் வேர்ப்பட்டையைத் தண்ணீரிலரைத்து வீக்கங்களுக்குப்பூச வாடும். இது மிக்க துவர்ப்பாதலின் சாயமேற்றவுதவும், olive wood — Elaeodendron glaucum. It is a tree with small flowers, bark of the root is brownish outside and bright brick red inside, some pieces of the bark show smell warty prominences. Both leaves and bark are astringent and slightly bitter to the taste, gum is tasteless and honey coloured, root is specific in snake bites, fresh bark of roots ground with water and applied externally for swelling, being a very strong astringent the bark is used for dying.

**செலுமுரல்,** ஓர் மீன், a kind of fish.

**செலுவன்,** மெலிந்தவன், emaciated man.

**செல்,** கறையான், white ant; 2. மேகம், cloud; 3. ஆகாயம், sky; 4. இடி, thunder bolt.

**சேஷ்மம்**, See சேட்டுமம்.

**சேட்டை**, பெருவிரல், thumb. 2. கைகால் அசைத்தல், motion of limbs.

**சேட்டைப்படல்**, உருவாதல், taking a shape.

**சேணம்**, பருந்து, kite.

**சேணுவனன்**, ஆகாச கருடன் கிழங்கு, sky root — Bryonia epiguaca.

**சேண்**, ஆகாயம், sky.

**சேண்மரம்**, See அழிஞ்சில்.

**சேதகம்**, சிவப்பு, redness; 2. சேறு, mire mud.

**சேதகி**, ஓர் வகைக்கடுக்காய், Indian gall nut இது இமயமலையிலுற்பத்தி, மூன்று வகைகள் உள்ளது, இதற்கு திருவிருதை என்றும் பெயர். see கடுக்காய்.

**சேதனகி**, See சேதகி, கடுக்காய், Indian gall-nut.

**சேதனக்கிரியை**, துண்டிக்கும் கருமம், amputation.

**சேதனபிண்டம்**, தரித்தெடுத்த பிண்டம், foetus brought out after crushing or cutting some parts.

**சேதனம்**, அறிவு, wisdom; 2. அறுத்தல், incision, amputation; 3. சேதன பண்டம் organic substance as opposed to அசேதனம் —in organic; 4. கபத்தை அறுக்கு மிளகு முதலிய வஸ்துக்கள், substances removing phlegm eg. pepper. 5. தமாலபத்திரி, hill green — Gurciniaxanth chymus; 6 உணர்ச்சி, consciousness; 7. வெட்டல், cutting; 8. விருத்த சேதனம், circumcision; 9. பிளத்தல், splitting; 10. கருப்பிண்டத்தில் பஞ்சபூதங்களோடு சேர்ந்த ஆறுவது பூதம், sixth element added to the foetus besides the five.

**சேதனம்பண்ணல்**, துணித்தல், amputating, operation of cutting — Tomy.

**சேதனராசயனம்**, சேதன பொருள்களைப் பற்றிய நூல், organic chemistry.

**சேதனவைத்தியம்**, கைகால்களைத் துணித்துச் செய்யும் இரண வைத்தியம், the surgical cutting off of a limb or other part — Amputation.

**சேதனன்**, ஆத்துமா, soul; 2. உயிர், life.

**சேதணு**, விந்து, semen.

**சேதணுசாரம்**, சுன்னத்து, Circumcision.

**சேதணு சேதனத் திரவியங்கள்**, organic and inorganic substances.

**சேதணுநிலையம்**, உணர்ச்சியுள்ள நரம்புத் தானம், any sensory nerve centre, more frequently the whole sensory apparatus of the body — Sensorium.

**சேதா**, சிவப்புப்பசு, red cow.

**சேதாம்பல்**, செவ்வாம்பல், red Indian water-lily; 2. தேன், honey.

**சேதாரகம்**, see சேதாரம்.

**சேதாரம்**, தேமாமரம், sweet mango tree; 2. வெட்சி மரம், jungle geranium — Ixora coccinca; 3. நஷ்டம், loss; 4. அழிவு, waste 5. உருக்க பாவியால் வரும் நஷ்டம், waste derived by melting; 6. தெங்கு, coconut tree.

**சேதி**, வெட்டுகை, amputation; 2. கபம்முதலியவைகளை அறுத்து வெளிப்படுத்துங்குணம், expectorant; 3. தன்மை, nature.

**சேதிகதிகா**, see கண்டில் வெண்ணெய்.

**சேதிகா**, ஓமை, mango tree — Mangifera Indica.

**சேதிக்கல்**, see அண்டக்கல்.

**சேதிசத்தா**, கிளிமூக்குச் செடி, a rare plant known as parrot's beak — Cilanthus punicans.

**சேதித்தல்**, அறுத்தல், amputating; 2. வெட்டுதல், cutting dissecting.

**சேதித்தா**, கழற்கொடி, bonduc creeper — Guylandina bonducella: 2. பொடுதலை, Lippia nodiflora.

**சேது**, சிவப்பு, redness; 2. மாவிலிங்கம், lingam tree.

**சேதுபந்தனி**, கிராணி அல்லது அதிசாரத்தைப்போக்கும் மருந்து, any medicine arresting diarrhoea.

**சேத்தரவிஞசினி**, உத்தாமணி, hedge cotton — Daemia extensa.

**சேத்தரு**, (சே + தரு) சேரான் கொட்டை மரம், markingnut tree.

**சேத்தல்**, சிவத்தல், becoming red; 2. உறங்கல், sleeping; 3. தங்குதல், to dwell.

**சேத்திரசன்**, ஒரு மனைவியிடம் அவள் புருடனால் சந்தான விருத்திக்காக நியமிக்கப்பட்டவன், a male person introduced to the wife by her husband to be get a child.

**சேத்திரசாதன்**, see கேத்திரசன்.

**சேத்திரபர்ப்படி**, இதுவேபர்ப்படம், இதைக் கஷாயம் வைத்து சொற்ப சுரத்துக்குக் கொடுப்பது பழக்கம், daman parpata — Mollugo cerviana. Its decoction cures fever.

**சேத்திரம்**, உடம்பு, body; 2. காற்று, wind; 3. செழிப்பு வாய்ந்த கருக்குழி, fertile womb.

**சேத்து**, சிவப்பு, red; 2. உறுப்பு, limb; 3. மிகச்சிவப்பு, crimson red; 4. கருத்து, idea, opinion.

**சேத்துநகைவிரணம்**, அடிவயிற்றில் விரணங் கண்டு அதிக நீரேற்றம் கொண்டு, பசிதாக மின்றி வெள்ளைப்பூண்டின் வாசனையுடைய ஏப்பத்தை யுண்டாக்கித் துன்புறுத்தும் ஓர் நோய், இதற்கு முத்து பற்பம் குணப்படும், ulceration of the innerwall of the stomach. It is a condition attended with pain, nausea helching with gralic smell, vomiting due to gastri ulcers — Phlegmonous gastritis, calcined pearl is a good remedy.

**சேத்துமகாமாலை**, ஓர் வகைக்காமாலை, இதனால் இருமல், இளைப்பு, வீங்கிவெடிதல், முகம், கண், கைகால், வெளுத்துக்காணல், தாது கெடல், முதலிய குணங்களைக் காட்டும், a kind of dropsy marked by cough fatigue, swelling and shrivelling, anemic condition of face, eyes and limbs, seminal defects etc.,

**சேத்துமக்கிராணி**, ஓர் வகைக் கழிச்சல், இதனால் நெஞ்சு விலாவலி, இருமல், வயிற்று வலி, வாய் நீரொழுக்கல், வெள்ளுடைப் பாகக் கழிதல் முதலிய குணங்களைக் காட்டும், a kind of diarrhoea characterised by pain in the chest and the sides, cough, colic, salivation, white stools etc.

**சேத்துமநோய்**, ஈளைநோய், asthma; 2. சிலேட்டுமநோய், any phlegmatic disease.

**சேத்துமம்**, சிலேட்டுமம், phlegm.

**சேந்தகனி**, கருவாடு, dry fish.

**சேந்தமங்கலத்தெண்ணெய்**, சோம்பு, தாளிசபத்திரி, குரோசானி, ஓமம், சாதிபத்திரி, வெட்பாலை, சாதிக்காய்வகைக்கு 1-பலம், கடுக்காய், சிறுலவங்கப்பட்டை, வாய்விளங்கம், கசகசா வகைக்கு 2 பலம், இலவங்கப்பூ, வால் மிளகு, இலவங்கம், கடுகுரோகணி வகைக்கு 3 பலம், பரங்கிச்சக்கை, கருஞ்சீரகம், வகைக்கு 5-பலம், உரித்த பூண்டு 10-பலம், இவைகளை வஸ்திரகாயம் செய்து 1 வீசை விளக்கெண்ணெயை எரிக்கும்போது அதிலிட்டு பூவரசம்பட்டைத் தூள் 1 பிடி கரிசாலை, சங்கம் வேர், இவைகளைக் கலந்து இறக்கியபின் திராட்சை, கற்கண்டு கலந்துகொள்ளவும், இது மேகம், வெள்ளை, கிரந்திப்புண் இவைகளுக்குக் கொடுக்கலாம், a castor oil preparation for syphilis and its complications. It is prepared as stated above.

**சேந்தாடுபாவை**, see செந்தாடுபாவை.

**சேந்தி**, கள், toddy.

**சேந்திகா**, வள்ளைக்கொடி, a kind of vegetable green.

**சேந்து**, நெருப்பு, fire; 2 அசோகு, asoka — Polyalthia longifolia; 3. சிவப்பு, redness.

**சேந்துகம்**, அசோகு, see சேந்து.

**சேந்துபந்தம்**, அரக்கு, sealing wax.

**சேந்துவாரம்**, வெண்ணொச்சி, white notchi — Vitex regunda.

**சேபத்தம்பம்**,

**சேபம்**, இலிங்கம், vermilion; 2. கோதுமை wheat.

**சேபாலங்கொட்டை**, see சேபாலம்.

**சேபாலம்**, சேரான்கொட்டை, marking nut; 2 ஓர் நீர்ப்பூண்டு, an aquatic plant.

**சேபாலிகாதிகியாழம்**, நொச்சியிலைக் கஷாயம் ஊருஸ்தம்ப வாதம்போம, decoction of Negundu alleviates the rheumatic affection of the thighs.

**சேபாலிகை**, கருநொச்சி, a black variety of three leaved chaste tree — Vitex trifolia.

**சேப்பங்கிழங்கு**, சேம்பின் கிழங்கு, Indian kales root, cocoa root — Colocasia antiquorum root of see சேம்பு.

**சேப்பந்தண்டு**, சேம்பு செடியின் தண்டு, stem of Indian kale.

**சேப்பு**, சிவப்பு, redness; 2. கெம்பு, ruby; 3 see சேம்பு, 4. சிவப்புக்கல், any red stone.

**சேப்புகண்டன்**, ஓர் நோய், a disease.

**சேப்பை**, சேம்பு, which see.

**சேமகம்**, ஓர் வாசனை, a perfume.

சேமகருணி, கருடன், the brahmine kite, coromendal eagle bird—Falco pontecerianus.

சேமகுதூகலம், சேமசருமன் செய்த ஓர் ஆயுள் வேதநூல், an Ayurvedic science compiled by Semasarman.

சேமக்கபாடம், அஷ்தத்தை அல்லது நெருக்கடியைப் போக்குவதற்காக அமைக்கப் பெற்ற கதவு, any value fitted so as to decrease the pressure when it is too high for safety — Safety valve.

சேமக்கிழங்கு, see சேப்பங்கிழங்கு.

சேமக்குழல். சதா திறந்தேயிருக்கும் கன்னக் குழாயின் ஓர் பகுதி. that portion of the eustachien tube which is always open — Safety tube.

சேமங்கிழங்கு, see சேப்பங்கிழங்கு.

சேமணியம், நரியிலந்தை small jujube — Zizyphus horrida.

சேமதீபம், அபாயமில்லாத விளக்கு, இது சுரங்களில் உபயோகப்படும், a lamp used in mines without danger. safety lamp.

சேமந்தி, சிவப்புக்குரங்கு red faced monkey; 2. ஓர் வகை சிவப்பு சாமந்திப்பூ, a variety of chamomile flower.

சேமபலம், see சேமபலே,

சேமபலே, பேயத்தி, devil's fig Ficus opposititolia.

சேமப்படை. தேமல், a yellow discolouration of the skin occuring in patches.

சேமம், நல்வாழ்வு, welfare; 2. இன்பம். happiness.

சேமயாரி, see சேமக்க பாடம்.

சேமரம், அழிஞ்சில், alangium tree, சேங் கொட்டை மரம், marking nut tree.

சேமனம், உணவு, food.

சேமனவம், நரி வழுக்கை, hedge hysop — Gratiola monnieria.

சேமா, எருது, bull; 2. சேமியா, vermicelli.

சேமாப்பாயசம், சேமியாபாயசம், vermicelli pudding.

சேமாளே, ஓர் வகை உயர்ந்த சம்பா நெல், superior variety of samba paddy.

சேமாறி, எருதுகளின் விதை யடிப்போன், one who castrates bull — Gelder.

சேமாறி, எருதும் பசுவும் புணர்தல், copulation of bull and cow.

சேமாறுதல், விதையடித்தல், castrating; emasculating, gelding.

சேமி, அடி நாவில் திருக வாயிலுக்கு முன்னே நிற்கின்ற இழை முருந்துகளாகிய மஞ்சள் நிறமான மெல்லிய தகடு. இது விழுங்குகையில் குரல் வாயிலே முழுதுமுடைந்துக் கொள்ளும், (in Anatomy) the yellow cartilage plate at the root of the tongue covering the entrance to the larynx during the act of swallowing — Epiglottis; 2. மருந்துக்குக் கவசம் செய்தல், luting the lid and the vessel containing medicine to render it air tight.

சேமியா, கோதுமையினுல் திரிதிரியாகப் பிழிந்து உலர்த்திய பண்டம், இது பல காரம் செய்ய உதவும், a dried article of food made of wheat flour in the form of thin wire like thread by squeezing out in a press — Vermicelli. It is used for preparing several kinds of dishes.

சேமை, see சேம்பு.

சேமைக்கிழங்கு, see சேப்பங்கிழங்கு.

சேம், see அழிஞ்சில்.

சேம்பா, see சேம்பாரோகம்

சேம்பாரோகம், மூக்குச் சளியைப்போல் வாயினின்று ஒழுகும் ஓர் குதிரை நோய், இது மனிதர்களையும்பற்றி உயிரைக் கொள்ளைக் கொள்ளும், a disease of the mucous membrane and glands about the month of horses capable of being transmitted to human beings with fatal results — Glanders.

சேம்பி, மருதாணி, fragrant naildye — Lawsonia alba.

சேம்பிலே, see சேம்பு.

**சேம்பு,** ஓர் மெல்லிய தண்டு வாய்ந்த செடி. ஆற்றோரங்களிற் பயிராகும், இதற்குக் கனமான அடித்தண்டு கிடையாது. இலைகள் செழித்து பெரிதாக வளரும், நசுக்கினால் கையில் ஒட்டிக்கொள்ளும், இதன் தண்டுக்குத் துவர்ப்புக் குணமுண்டு, கிழங்குக்குச் சேமைக் கிழங்கென்று பெயர். இது உணவுப் பதார்த்தமாக உபயோகப்படும், இது வாதம், தொண்டையில் கபம் இவைகளை உண்டாக்கினும் மேக நோயை நீக்கும். இது வீக்கம், கட்டி இவைகளுக்கு கட்டுமருந்தாக உபயோகப்படும். இதன் தண்டின் சாறு பிழிந்து வெட்டுக்காயம், இவைகளிலிருந்து ஒழுகும் இரத்தத்தை நிறுத்தி இரணத்தை ஆற்றும், காதில் சீழ் வடி தலுக்கும், குத்தல் வலி இவைகளுக்கும் இச்சாற்றைப் பிழிய கிரந்தி வீக்கத்திற்கு இதன் தாள் அல்லது கிழங்குடன் உப்பைச்சேர்த்துக் கட்ட வீக்கம் கரையும். அன்றியும் வெள்ளை மேகம், துடையிடுக்கிலுண்டாகும் கிரந்தி வீக்கம் கண்டமாலை இவைகளுக்குதவும், இத்தண்டைச் சமையல் செய்து சாப்பிட பலவீனத்தைப்போக்கும், தொண்டை கட்டும், நல்ல மருந்தைக் கெடுக்கும், இதன் இலை இரத்த கடுப்பு, சூட்க மூலத்தைப்போக்கும், Indian kale, cocoa root — Colocasia antiquorum. It is a vegetable herb with tubers found grown in the shores of the river, large leaves borne on long foot stalks, rising from a short farinaceous corm; leaves viscous the petioles, are astringent root used as a vegetable in food. Though a little vatha and phlegmatic in its nature, it is useful in urinary disorders, it is used as an external application for swelling and in abscess. Pressed juice of the petioles is slyphic and as such is used for bleeding wounds and ulcers. It has healing virtues. Drops of the juice may be let in cases of otorrhoea, otitis and otalgia. Petioles or the root mixed with common salt is useful application for glandular swellings in the groins, scrofula etc foot stalks when cooked and used in food removes weakness of the body. Leaves are useful in piles and bleeding irritation.

NOTE:— It is said that the pressed juice of the petioles is capable of arresting arterial hemorhages and that the wound after its application generally heals by first intention.

The following are the different varieties:—

1. கல்லடிச் சேம்பு, Kales found grown in the crevices of rocks and stones — Colocasia montana.
2. ஈர்ச்சேம்பு, kales with slender foot stalk.
3. கருஞ்சேம்பு. black kachvee — Colocasia nigra
4. சீமைச்சேம்பு, foreign kachvee.
5. பேய்ச்சேம்பு, wild kachvee — Arum lyratum.
6. வறட்சேம்பு, dry garden kachvee — Colocassia indica(alias)Arum indicum.
7. நீர்ச்சேம்பு, pit nelumbo, water kachvee — Saggetaria obtusifolia.
8. களர்ச்சேம்பு, kales grown in saline soil.

NOTE:— Many varieties rest upon the outer markes of distinction and the different tinge observable in the corm. leaf, stalks and ribs of the leaves, white, yellow, purple etc.

**சேம்புக்கீரை,** சேம்புச் செடியின் இலை, leaves of colocasia.

**சேம்புகா,** பொன்னூமத்தை, yellow datura — Datura fastuosa.

**சேம்பை,** see சேம்பு.

**சேம்மரம்,** சிவப்புமரம், red wood tree — Rohun tree.

**சேயக்காய்,** see சீயக்காய்.

**சேயதி,** கௌரிபாஷாணம், a kind of prepared arsenic.

**சேயபரம்,** மரமஞ்சள், tree turmeric — Coscinium fenestratum.

**சேயபற்பம்,**
**சேயமம்,** } கௌரிபாஷாணம், see சேயதி.

**சேயா,** கடுக்காய், Indian gall nut — Terminalia chebula.

**சேயாபகம்**, see சேயபரம்.

**சேயன்**, சிவப்பு நிறமுள்ளோன், ruddy man.

**சேயிலகம்**, **சேயிலம்**, **சேயிலி**, இலுப்பை, long leaved bassia—Bassia longifolia.

**சேயேபகம்**, **சேயோகம்**, மரமஞ்சள், tree turmeric — Cosinium fenestratum.

**சேய்**, சிவப்பு, redness; 2. மூங்கில், bamboo; 3. குழந்தை, child; 4. பிடரி, hape; 5. தொண்டை, throat; 6. இளமை, youth; 7. செவ்வாய், mars.

**சேய்திகா**, See சேயோகம்.

**சேய்நீர்**, see அறுவகை செயநீர்; 2. செயநீர், philesopher's acid for dissolving metals, an alkaline preparation conlemplated in Tamil medicine.

**சேய்மரபு**, இளமைப் பருவம், youth.

**சேய்வள்ளிக்கிழங்கு**, செவ்வள்ளிக் கிழங்கு, red sweet potato — Dioscorea purpurea (rubella).

**சேரங்கை**, ஒருகைகொண்டவளவு, a handful, See செரங்கை, சிறங்கை.

**சேரலி**, மலைநெல், mountain or hill paddy.

**சேரவிளங்கம்**, அமுக்கிரா, horse root—Withania somnifera.

**சேரனி**, சதுகமரம், இது ஓர் காயகற்பக மூலிகை, an unknown tree used by siddhars for promoting longevity.

**சேரா**, கள், toddy, palm wine.

**சேராகக் காய்ச்சல்**, குழம்புபோற் காய்ச்சல், boiling to athick consistence.

**சேராங்கொட்டை**, see சேரான்.

**சேராங்கொட்டைத் தைலம்**, See சேங் கொட்டையெண்ணெய்.

**சேராங்கொட்டைப்பால்**, சேங்கொட்டை அல்லது மேற்படி மரத்திலிருந்து வடிக்கும் பால், juice extracted from the nut or wood of marking nut tree. See சேங்கொட்டைப் பால்.

**சேராங்கொட்டையெண்ணெய்**, சேங்கொட்டையினின்று பிழியும் எண்ணெய், எரித்தும் எடுக்கலாம். கொட்டையை கொதிக்க வைத்தும் எண்ணெய் வடிக்கலாம், குணம் மாறாது, பிழிவதினால் புகை முதலிய குற்றங் கள் இல்லாமல் சுத்தமாயிருக்கும், oil of marking nut either prepared by aid of heat or got by compressing the nut is quite free from smoke and so pure. It is also made by boiling the entire nut. It possesses the same properties.

NOTE: Doses of the acid oil is substituted for salicylate of soda, salicylic acid, either, colchicum, belladona, iodide of potassium, perchloride of mercury, aconite root, valerianate of zinc and strychnia. Externally it is substituted for cantharides.

**சேராசேர்த்தி**, தகாத கூட்டுறவு, undesirable association.

**சேராதிருப்பி**, கொழுப்பு, fat.

**சேரான்**, சேங்கொட்டை மரம், இது உடலுக்கு ஒவ்வாதது அல்லது பகைமையிடையது என்ற காரணத்தாலிப்பெயர் (பெற்றது). இப்பழத்தின் நடுவே கொட்டையிராமல் முந்திரிக் கொட்டையைப் போல் பழத்தின் வெளியே ஒட்டிக்கொண்டிருக்கும். ஆகவே பழத்தில் சேராத கொட்டை யாதலாலுமிப் பெயர் பொருந்துவது போலும், இம்மரம் 50 அடி உயரம், பூக்கள் பச்சை, சிறியன, ஆனி ஆடியில் பூக்கும், அடிமரம் நேராக விருக்கும், பட்டை சாம்பல் நிறம். இம்மரம் சாதாரணமாக இந்தியாவில் அதிக வெயிற் காயும் பாகங்களிலும் தண்ணீரில்லாக் காடு களிலும் விசேஷமாய்க் காணலாம். இதன் கொட்டை மருந்திற்குதவும், இதினின்று எண்ணெய் எடுத்தும் மேற்பூச்சு மருந்தாக உபயோகிக்கலாம். இம்மரத்தின் நிழல்கூட சிலருக்கு ஒத்துக்கொள்ளாமல் உடம்பெரிச் சலுடன் வீங்கும். நிழலை விட்டால் இது நீங்கும், இம்மரத்தின் ஒவ்வொரு பாகமும் கெட்ட குணம் வாய்ந்தது, ஆனால் பழம் மாத்திரம் தின்பதற்குதவும். இது வெகு தித்திப்பானதால் சனங்கள் இதை வெகு பிரீதியாய்த் தேடித்தின்பார்கள். சிலருக்கு நாவும் உதடும் வீங்கும், இதன் பழத்திற்கும் அதன் எண்ணெய்க்கும் ஒரே குணமுண்டு, உள்ளுக்குக் கொள்ள வலியை நீக்கி அழற் சியைப்போக்கும். நரம்புக்கு வலிவைக் கொடுப்பதுமன்றி உடம்பைப் பலப்படுத்

தும். வெளிக்கு மேற்பூச்சு மருந்தாக உபயோகிக்க, சூட்டையுண்டாக்கிச் சருமத்தைச் சிவக்கச் செய்யும், கொப்புளத்தையுமெழுப்பும், பூந்தாது அழற்சியைத் தந்து தூக்கத்தை யுண்டாக்கும் பூவிதழ் அடிப்பாகம் சதைப்பற்றுள்ளது, தித்திப்பும் புளிப்பும் வாய்ந்தது, இதைத் துவட்டித் தின்பார்கள், விதையும் தின்பதற்குதவும், மூளைக்குச் சுருசுருப்பைத்தந்து ஞாபக சக்தியை அதிகப்படுத்தும், இதன் பட்டை சாயமேற்றவுதவும். இதினின்று பிசினும் எடுக்கலாம், கொட்டையைப் போலவே, இம் மரத்தினின்றும் பால் வடியும், இதற்கும் வீக்கத்தையும் அழற்சியையும் உண்டாக்கும் குணமுண்டு, இதன் புல்லுருவியிலை கடிவிஷம் போம், இதன் விறகை எரித்துக் கரியுண்டாக்கி அடுப்பெரிக்கவுதவும்.

1. காட்டுச்சேரான், jungle marking nut — Holigarna arnollina.
2. நாட்டுச்சேரான், marking nut — Semicarpus travancorica.
3. பெரிய சேரான், glabrous marking nut — Semecarpus anacardium.
4. பொன்னஞ்சேரான், same as No. 5.
5. தேன்சேரான், same as No. 4.
6. வெள்ளைச்சேரான், Semecarpus auriculata.
7. மாஞ்சேரான், same as No. 6.
8. கருஞ்சேரான், rusty black varnish — Holigarna ferrugenia.

Marking nut tree — Semecarpus anacardium. It is called by various names as black beetle mango, black varnish, fireface tree, Indian varnish, intellect nut, Malacca bean, Malacca kidney bean, marking fruit tree, marsh nut, Singhalese varnish, sore plant, Sylhet varnish etc. The tree is not agreeable to the body and hence the name. Like cashewnut, the nut is outside the fruit and is attached to the fleshy torus and so the title may also be attributed to it. Tree 50 ft. leaves whitish beneath, flowers small and green with five petals, flowers in May to July, trunk straight covered with grey scabrous bark. The tree is found growing in the hottest parts of India and common in dry forests and elevated jungles The nut is used in medicine and the oil derived there from is useful as an external application. People frequenting this place for shade are stupefied and have their faces and limbs swollen. Every part of this tree is poisonous except the fruit which is eaten owing to its sweet taste and few even get their tongues and lips swollen in cases the fruits are not agreeable to their constitution. The fruit and the acrid oil have the same medical virtues, internally sedative, antispasmodic, nervine and alterative tonic; externally stimulant, rubifacient and vesicant. The farina of anthes of flowers is narcotic and irritating. The yellow mature corolla and receptacle are fleshy and of a sweetish sourtaste and are eaten roasted, seeds also eaten and supposed to stimulate the mental powers and especially the memory. The bark which is mildly astuingent is used for dyeing brown of various shades, the wounded bark yields a soft gum, the parasite of this tree is said to cure poisonous effects; wood contains like the nut an acrid juice which causes swelling and irritation, sometimes used for charcoal.

**சேரான் கொட்டை,** சேரான் பழத்தின் மேற்பக்கமுள்ள கொட்டை, பழத்துடன் இணைந்திருக்கும், இக்கொட்டையின் கரடுமுரடுள்ள பாகத்திற்குத்தான் மூக்கு என்று பெயர், இக்கொட்டை மிக விஷத்தன்மையது, இதனைக் கையாளுபவர் மிக்க சாக்கிரதையாயிருக்க வேண்டியது அவசியம், இதன் வாடையினாலேயே சிலருக்கு முகம், உடம்பு வீக்கமுண்டாகும், பால் பட்டவிடம் புண்ணாகியும் கடைசியாக அமைச்சலும் சகிக்க முடியாத எரிச்சலையுண்டாக்குதல் பற்றி நோயாளிகள் உடம்பின் சுபாவத்தை அறிந்து இதன் மருந்தை வைத்தியர்கள் பிரயோகிக்க வேண்டும், உபயோகப்படுத்துமுன் இதன் மூக்கையறுத்துச் சுத்தி செய்வது அவசியம், இதன் பால் உடம்பில் பட்டால் வெந்து போவதுமல்லாமல். இதன் வாடை வீசினாலும் சிலருக்கு கொப்புளம், வீக்கம் உண்டாதல் பற்றி, இதை வெகு சாக்கிரதையாக நறுக்க வேண்டும், இதன் விஷத்திற்கு வங்கவுப்பு செயநீர், புளிய இலைக்கஷாயம் இவைகள் முறிவு, பெண்கள் புன்க மரத்தையும், புளிய மரத்தையும் கட்டிக்கொண்டு அழ இவ்விஷம் நீங்குமென சொல்வதுண்டு.

இது நோய்களைக் குணப்படுத்துவதிற் சிறந்தது, தீராத மேக, வாத, சூலைப்பிடிப்புகள், வலி, குடைச்சல், சுளுக்கு, குட்டம், கண்டமாலை முதலியவைகள் குணமாகும், இதன் பாலை வண்ணார் துணிகளுக்குக் குறிபோடுவதற்குபயோகிப்பார்கள், இப்பால் முதலில் பால்போல் வெளுத்த நிறமும், பிறகு கறுப்புமாயுமிருக்கும், இது காய்ந்

தால கள் மரத்தைதப்போல் ஒடியுந்தன்மைய தாகவும், எரியக்கூடியதாகவுமிருக்கும், இது தண்ணீரில் கரையாது, எண்ணெயில் சேரும், பட்டவிடம் கொப்புளிக்கும்; புண்ணுக்க வேண்டி உபயோகிக்கப்படும், மேலும், இக்கொட்டைக்கு நீரைக்கட்டும் குணமுண்டு, இதை நசுக்கிக் கற்பவாயில் வைக்க கருவையழிக்கும், அன்றியும் இப் பாலை மரச்சாமான்களுக்கு மெருகெண்ணெயாக உபயோகிப்பார்கள், மரத்திலும் இப் பால்எடுப்பதுண்டு, மேலும் இதைக்கூட்டித் தயாரித்த மருந்தால் புழு, சயம், கீல்வாதம், கிரந்தி, திமிர்வாதம், வாதகுன்மம், உள் மூலம், காணுக்கடி, குட்டம் இவைகள் விலகும், marking nut, or dhoby's nut — Semecarpus anacardium. It is a fruit and not a nut as its name applies but commonly known as a nut in contradistinction to the *flesh torus to which it is attached. The* rough surface of the nut at one end is called its nose. The nut is very poisonous and so it has to be handled with great care and caution for medicinal purposes, erysipelatus inflammation, swelling of the face, body etc., have in some instances followed the free exposure to its irritating varpour. Some constitutions are more readily affected by it then others and so medicines prepared from this are to be prescribed with care by Vaidyans according to the constitution of the patient. Much caution is also requisite even when bruising there nuts for domestic purposes. The swelling and blister with febrile symptoms following the application are best relieved by the internal administration of salines and the local applications of Liquor Plumbi and decoction of tamarind leaves. It is alluded that the poisonous effects could be got rid of by women simply crying after embracing the tamarind and pungam trees and mentioning all about the action of the nut.

The juice of the pericarp has great medicinal virtues and it is employed in chronic cases of venereal complaints, rheumatic and gouty *affections, also in pains, aches, and* sprains, ulcerous sores, leprous and scrofulous affections and also in palsy epilepsy and other nervous diseases. It is also used by dhobies to mark the clothes. It is of a pale milk colour when afresh and black. *When the nut is ripe, when dry it has a* the appearance of a bitumen being brittle and very inflammable. It is not soluble in water but unites perfectly with oils. Owing to its powerful caustic properties, it blisters the skin when coming in contact with it and so is used as vesicant.

Moreover it arrests excessive secrition of urine and the bruised nut applied locally to the womb is one of the means amongst Indian women for procuring abortion. Juice is also used as a varnish and a preventive against whiteants, wood also contains, like the nut an acrid juice. Moreover, when mixed with other ingredients. it is employed as a palliative in the treatment of diseases viz — worms in the intestines, consumption, urithritis, syphlitic sores and complications. anesthesia affecting the lumbar region (numbness), indigestion from flatulency, internal piles, insect bites. leprosy etc.

NOTE:- 1. When applied to the skin it acts as a powerful escharotic It is externally used as a counter irritant in rheumatism and sprains. It also enters into the composition of caustic applications for warts and piles. The ripe fruits or nuts usad internally are heating. stimulant. digestive, nervine and escharotic. They are also used in dyspepsia. piles, nervous debility and skin diseases. They are boiled first in water and then in milk and then dried. Then again it is boild in milk with sugar and used as restorative tonic for appetite, strength, and nutrition. It is useful in hemorrhoids and other diseases of rectum.

NOTE:— 2. In Ayurveda an electuary is also prepared from the nut. and is prescribed *for increasing the appetite and promoting* nutrition and strength and also used in piles

in Tamil medicine the preparations are too numerous to be mentioned.

(In Arabic) The nut is described as resembling the heart of an animal, the fleshy stem representing the auricules and the fruit the ventricles.

**சேரான்கொட்டை,** see சேராங்கொட்டை.

**சேரான் நெய்க்கொட்டை,** சேரான்கொட்டை.

**சேரிகம்,** நாரத்தை, bitter orange — Citrus aurantium.

**சேருகம்,** நாகணவாய்ப்புள் அல்லது மைனுப் பறவை.

**சேருதனில் சிறுக்கி,** பிரமிப்பூடு, brahmi plant.

**சேருவை,** பித்தளை, brass.

**சேரை,** செரங்கை, handful; 2. சாரைப்பாம்பு; rattle snake.

**சேரோந்தி,** கோரோசனை, bezoar.

**சேர்,** See சேரான்; 2. எட்டுபலம் நிறை கொண்டது, a standard weight of eight palams, ( 24 tolas ) 3. முகத்தலளவை, dry or liquid measure consisting 70 cubic inches; 4. சேர்த்தல், to add.

**சேர்காய்,** செங்காய், fruit almost ripe.

**சேர்காலிடுதல்,** கால்தளை கூட்டல், Ramper-ing the feet. clogging.

**சேர்கால்,** தளை கால். clubbed or clogged foot as of animals.

**சேர்க்கை,** புணர்ச்சி, copulation; 2. கலவை, mixture compound; 3. ஐக்கியம், union; 4. வாசனைக்கூட்டு, mixed perfumes or scented substances; 5. மருந்துக்கூட்டு, mixture of medicines.

**சேர்க்கை மூலை,** சந்துமூலை, இடுப்பு, hip.

**சேர்க்கையவல்,** பால், நெய் சேர்த்து அல்லது மோர், புளிகூட்டி உண்ணப்படும் அவல், various dishes prepared from flaked rice.

**சேர்ச்சி,** see சேர்க்கை.

**சேர்தல்,** புணர்தல், having sexual connection; 2. கலத்தல், becoming mixed; 3. கிடத்தல், lying down.

**சேர்த்தல்,** கூட்டல், adding; 2. கலத்தல், mixing; 3. புணரச்செய்தல், causing sexual union.

**சேர்த்துக்கொள்ளல்,** கூட்டிக் கொள்ளுதல், adding with the original as; 2. புளிசேர்த்துக் கொள்ளல், adding or admitting tamarind as in diet; 3. வைப்பு வைத்துக் கொள்ளல் keeping a concubine.

**சேர்த்துதல்,** இணைத்தல், uniting.

**சேர்த்து வைத்தல்,** கூட்டிவைத்தல், providing or procuring women for the lust of others.

**சேர்ந்தலை,** புணர்ச்சி, sexual intercourse; 2. உற்ற சினேகம், intimate friendship.

**சேர்ந்தலை,** புணர்ச்சி, union ( sexual union ).

**சேர்ந்தாடுபாவை,** காயசித்திக்காக வேண்டிச் சித்தர்கள் உண்ணும் ஓர் மூலிகை, இது ஓர் செடி, குத்துக்காரைச் செடியைப் போலவும், இலை சம்மட்டி இலையைப் போலவும் இருக்கும், இந்த இலையைப் பிடுங்கிப் பிழிந்து தனிச்சாறு எடுத்து சூதத்திற்குச் சுருக்குக் கொடுக்கச் சூதம் கட்டும். அப்படிக் கட்டின சூதத்தைச் சாயாவிருட்சத்திற் பாலில் ஏழு நாள் ஊறவைத்து எடுத்துப் புடமிட்டுச் செந்தூரமாக்கிப் பசு நெய்யில் குழப்பி ஒரு வாரம் சாப்பிட, தேகசித்தியாகும், an unknown plant or drug used by Siddhar's for rejunuvation.

**சேர்ந்தாரைக்கொல்லி,** தன்னையடைந்ததைக் கொல்லும் தன்மையது, அதாவது நெருப்பு, that which destroys anything coming in contact with it i. e. fire.

**சேர்ந்தார்க்கொல்லி,** அடுத்ததைக் கொல்லுந் தன்மை வாய்ந்த நெருப்பு, fire destroying that which comes in contact with.

**சேர்ப்பால்,** திரட்டுப்பால், consolidated or condensed milk; 2. சேரைப்போல் குழம்பாகக் காய்ச்சியபால், well boiled milk.

**சேர்ப்பு,** கலப்பு வஸ்து, mixture; 2. கடற்கரை, sea coast; நீர் கலந்த பால், adulterated milk.

**சேர்மானம்,** கலக்கும் அல்லது கூட்டும் பொருள், anything added or mixed; 2. இணைப்பு, joint.

**சேர்மானம்சேர்த்துவிடல்,** கூட்டவேண்டியதைக் கூட்டல், adding what is required.

**சேர்வள்ளம்,** இரண்டுபடியளவு, two Madras measures.

**சேர்விடம்,** தூங்குமிடம், a place of sleeping.

**சேர்வை,** கலவை. mixture, compound; 2. மருந்திலிடும் கலப்புச்சரக்கு, ingredients, drugs to be added to a medicine; 3. சீலையில் தடவிய மருந்து, plaster; 4. உலோகக்கலப்பு, alloy; 5 கூட்டு, admixture.

**சேர்வைகட்டுதல்,** பச்சிலை அல்லது கடைச்சரக்குகளைக் கூட்டிக் கட்டி; புண் இவைகளுக்கு வைத்துக் கட்டுதல், bandaging ulcers, boils, wound or other injuries with herb aceous drugs or medicines.

**சேர்வைச் சந்தனம்,** கலவைச் சந்தனம், compound sandal paste.

**சேர்வைச்சீலை,** கூட்டு மருந்தை பூட்டியசீலை, adhesive plaster; 2. காரச்சீலை, corrosive plaster inserted into sinus, fistula etc.

**சேலகம்,** கோரைக் கிழங்கு, koray grass root Cyperus rotundus; 2. சந்தனம், sandal; 3. சிந்தூரம், red powder, probably redoxide — vermilion.

**சேலகி,** வேலமரம், acacia tree — Acacia arabica.

**சேலம்,** ஆண்குறி, penis.

**சேலம்சருக்கரை,** கருப்புச் சர்க்கரை, brown sugar; 2. மட்ட சருக்கரை, coarse sugar.

**சேலவாகை,** see சாயல்வாகை.

**சேலா,** நெடுநாளா, fragrant cherry—Polyalthia coffuoides.

**சேலிகம்,** see சேலம்.

**சேலியம்,** see சேலியால்.

**சேலியால்,** இலாமிச்சை, cuscus root.

**சேவிரு,** சிவப்பவரை, red bean.

**சேலேகம்,** செந்தூரம், vermilion; 2. வெண் சந்தனம், white sandal wood. see சேலோதம் See சேலகம்.

**சேலேசி,** அசோகு, asoka tree, mast tree—Uvaria longifolia(alias)polyalthia longifolia—P. fragrams.

**சேலை,** see சேலேசி.

**சேலைக்கலிச்சி,** இச்சி jointed ovate leaved fig — Ficus tsiela.

**சேலையுஞ்சை,** கருவாகை. fragrant sirissa.

**சேலையுடைத்தாள்,** கவிழ்தும்பை, stooping leucas.

**சேலைவாகை,** ஓர் வகை வாகை மரம், silken rose tree — Albizzia julibrissin.

**சேலொத்தபாலி,** see சேர்ந்தாடு பாவை.

**சேலொத்தம்,** see சேலோதம்.

**சேலொத்தவெண்கல்,** படிக்கல், red crystal known as Cashmerestone.

**சேலொளி,** வைடூரியம் cat's eye. 2. சேற்கெண்டை மீனின் கண்ணையொத்த ஒளி, light or lustre resembling the carpfish eye.

**சேலோகதம்,** அசோகு, see சேலேசி.

**சேலோகிதம்,** பொற்குண்டுமணி, a yellow jeweller's bead.

**சேலோதம்,** வெண் சந்தனமரம், white sandal wood tree — Santanumalla.

**சேல்,** சேற்கெண்டை, carnatic carp, shellcarp — Barbus dorslis; 2. கயல்மீன் carpfish.

**சேல்கண்ணளி,** அரிதாரம், orpiment.

**சேல்கெண்டை,** see சேற்கெண்டை.

**சேல்விழிப்பூடு,** எழுத்தாணிப்பூடு, style plant.

**சேல்விழிவஞ்சி,** இலுப்பை, long leaved bassia — Bassia longifolia.

**சேவகம்,** பேயுள்ளி, wild onion; 2 கோரைக் கிழங்கு, koray root; 3. தூக்கம், sleep; 4. சோம்பு, anise seed.

**சேவகனர்**, மஞ்சட் காளான், yellow fungus.

**சேவகனர்கிழங்கு**, கோங்கிலவங் கிழங்கு; the root of கோங்கிலவு which see; 2. பேய்வெங்காயம், devil's onion; 3. see சிவனர் கிழங்கு, c. f. கார்த்திகைக் கிழங்கு.

**சேவகனர்வேம்பு**, சிவனர்வேம்பு, Siva's neem — Indigofera asphalathoides.

**சேவகன்**, see சேவகன்பூடு; 2. சிற்றுமுட்டி Ceylon pavonia—Pavonia Zeylanica; 3. பேயுள்ளி, wild onion; 4. சவ்வீரம், corosive sublimate.

**சேவகன் பூடு**, சிற்றுமுட்டி, rose coloured sticky mallow; 2. காந்தள், Malabar glory lily — Gloriosa superba; 3. சிறுபுள்ளடி, small bird's foot — Hedysarum genus; 4. சிவனர்வேம்பு, Siva's neem; 5. பேய் வெங்காயம், wild onion; 6. அசையாப்பட்டை, an unknown bark.

**சேவதக்குதல்**, விதையடித்தல், gelding as ball. see சேமாறுதல்.

**சேவநீயம்**, கழுத்துப் பக்கத்திலோடும் நாடி, jugular vein.

**சேவமரம்**, சாயமரம், இதன் வேர் கசப்பு, மருந்துக்குதவும், wild mangosteen — Sandoricum indicum. Root — bitter, used medicinally.

**சேவம்**, ஆண்குறி, the genital of male 2. பாம்பு, snake.

**சேவயம்**, நாராக்கரந்தை, a kind of basil.

**சேவரி**, கழுதை, ass.

**சேவலஞ்சித்தி**, கீரிப்பிள்ளை, mungoose.

**சேவலவரை**, கோழியவரை, fowl bean.

**சேவலன் கொட்டை**, See சேவலாங் கொட்டை.

**சேவலாங்கொட்டை**, நேர்வாலக்கொட்டை, Indian Croton seed — Croton tigilium. See சேவாளங்கொட்டை.

**சேவல்**, ஆண்கோழி, cock fowl; 2. ஆண் பறவை, male of birds; 3, சக்கரவாகப்புள், ruddy goose; 4. கருடன், kite; 5. ஆண் குதிரை, male horse — Stallion; 6. சேறு, mire — mud; 7. ஆண்அன்னம், male swan

**சேவல்கொடி**, see சேவற்கொடி.

**சேவல் கொண்டை**, சேவற் கொண்டை, cocks crest, cock's comb.

**சேவல் கொண்டைச்செடி**, சேவற் பண்ணை, cock's comb—Celosia cristata.

**சேவல் நெஞ்செலும்பு**, இதனால் படலம், வெண் மாசு படலம் போம், ஆகவே கண்மருந்துக் குபயோகப்படும் சேவற்கோழியின் நெஞ் செலும்பு, cock fowl's breast bone used in the preparation of medicines applied for the eyes.

**சேவற்கொடி**, ஓர் கொடி, Cock creeper — Rubia cordifolia.

**சேவற் சூடு**, see சேவற் கொண்டை.

**சேவற் பண்ணி**, நாண்முகப் புல், nannal grass — Saccharum spontaneum.

**சேவற்பண்ணை**, see சேவல் கொண்டைச் செடி; 2. கோழிக்கொண்டை, cock's crest.

**சேவற்பூ**, சேவற்கொண்டைச் செடி, cock's comb.

**சேவனகாலம்**, மருந்து சாப்பிடும் வேளை, அதாவது, சாதாரணமாக காலை, மாலை அருந்த வேண்டும்; 2. சீரணம் தடையாக எண்ணின் புசிப்பதற்கு முன்னதாகவும்; 3. சீரணத்திற்காக எண்ணில் உண்ட பிறகும் 4. சீரணம் தடையில்லாவிடின் முந்தியாவது பிந்தியாவது கொள்ளலாம்; 5. அக்கினி தீபனத்தையுண்டாக்கு மருந்துகளை போசன மத்தியில் கொள்ளலாம்; 6. குமட்டல், விக்கல், இறைப்பு, விஷதோஷம் இவை களுக்கு உண்டபின் கொள்ளலாம். கண், செவி, நாசி, தலைரோமங்களுக்கு, சாயுங் காலம் அல்லது இராத்திரி கொள்வது உத்தமம்.

NOTE : by (c. d.) வாத நோய்களுக்கு உண வுக்கு முன்னும், பித்தநோய்களுக்கு உண வுக்கு நடுவிலும், கபநோய்களுக்கு உணவு செய்த பிறகும் மருந்து உண்பது நலம்.

The time prescribed to take or apply medicine. It is as follows: 1. Generally it is twice a day — morning and evening; 2. before meals, (in empty stomach) if it is thought that digestion will impair its action; 3. after meals if it is intended for digestion; 4. either before or after, if it is thought that the digestion will not impair its action; 5. during meals if it is to stimulate digestion; 6. after meals for hiccups, nausea, anorexia, heavy breathing and poisons; 7. evening or night for applica-

tion of medicines for the diseases of eye, ear, nose and head.

NOTE: by (c. d.) before meals for Vatha diseases, during meals for Pitha diseases, after meals for Kapha (phlegmatic) diseases.

**சேவனம்,** நோய்களுக்கு உபசாரமாகச் செய்யும் சிகிச்சை, palliative treatment.

**சேவனி,** ஆண் குறியிலோடும் ஓர் மெல்லிய நாடி, an artery in the male organ.

**சேவாங்கம்,** see சேவாளங் கொட்டை.

**சேவாலகம்,** சத்திசாரணை, spreading hogweed — Boerhaavia repens.

**சேவாலம்,** நேர்வாளம், see சேவாளம்.

**சேவாலிகம்,** கருநொச்சி, willow leaved justicia — Justicia genda russ; 2. மஞ்சள்சின்னி, yellow root of birch leaved a calypha.

**சேவாளங்கொட்டை,** see நேர்வாளக் கொட்டை.

**சேவாளம்,** see சேவளாங்கொட்டை.

**சேவிகம்,** see சேவாலிகம்.

**சேவித்தல்,** மருந்து உட்கொள்ளுதல், taking internally as medicine.

**சேவியம்,** வெள்ளை வெட்டிவேர், a white variety of cuscus root.

**சேவியால்,** இலாமிச்சை, cuscus root; 2. வேல், acacia tree.

**சேவியால் புல்லுருவி,** வேல மரத்தின்மேற் புல்லுருவி, a parasite on acacia tree.

**சேவுகன்,** பேயுள்ளி அல்லது நரி வெங்காயம், wild onion.

**சேவெண்ணெய்,** செவ்வெண்ணெய், சேங்கொட்டையைச் சிற்றாமணக்கு எண்ணெயில் போட்டு எரித்து, பிறந்தவுடனே குழந்தைகளுக்கு உள்ளுக்கு மந்திரம் சொல்லிக் கொடுக்கும் எண்ணெய். பலப்படுத்திநோய் முதலியவைகளால் உடம்பு இளைத்துவிடாத படிக்கு உடம்பிலூறிக் காப்பாற்றும் அமிர்தத்தைப் போன்ற மருந்து, இதில் இரசம், பொன், தேன், நெய் சேர்ந்திருக்கும், a medicated oil given to new born babies to prevent diseases and also to promote strength. It is prepared by boiling marking nut in castor oil. It is a cordial and an antiseptic and its reputed medical virtue is proverbial because of the vital essence contained in it and is even comparad to elixer owing to its everlasting vitality absorbed and retained in the system.

**சேவை,** ஓர் பணியாரம், a confection; 2. சாயமரம், malay sandal; 3. காட்டு மங்குஸ்தான், false or wild mangosteen — Sandoricum indicum.

**சேரும் பாம்பு,** சேற்று நிறத்தைப் போல் பழுப்பு நிறமான கடல் மீன், a kind of brown eel — Muraena macrura.

**சேறி,** 2 அடி நீளமும் சாம்பல் வர்ணமுள்ள ஓர் கடல் மீன், a grey seafish two feet in length — Aiagramma cinctum. 2. 4. அடியுள்ள மற்றொரினக் கடல் மீன், another veriety four feet in length — Mugil labiosus.

**சேறு,** இனிமை, sweetness: 2. கள், toddy; 3. விளா, wood apple; 4. தேன், honey; 5. சீழ், pus; 6. குழம்பு, thick consistency as of sandal paste; 7. உள்ளீடு, kernal as of cocoanut: 8. சகதி, mire; 9. சாரம், juice, 10. பாகு, syrup; 11. மிலாயச் சந்தனம், Malay sandal; 12. கலவை, mixture.

**சேறுகா,** விதை, seed.

**சேறுதடித்த நீர்,** சேறுகலந்த கலங்கலான தண்ணீர், இது குளியலுக்காகாது, muddy water. not fit even for both.

**சேற்கண்ணி,** அரிதாரம், orpiment. see சேல் கண்ணி.

**சேற்கெண்டை,** ஓர் ஆற்றுக்கெண்டை மீன், காவேரி கொள்ளடத்தில் விசேஷமாய் அகப்படும், இது கரும்பச்சை நிறமுள்ளது. shell carp — Barbus dorsalis. Fresh water fish found in Cauvery and coleroon rivers. It is greenish brown in colour.

**சேற்பம்,** சிலேற்பனம், phlegmatic. see சேற்பனம்.

**சேற்பனங்கட்டல்,** see சேற்பனந்தோடுதல்.

**சேற்பனசுரம்,** கபசுரம், phlegmatic fever.

**சேற்பனந்தொடுதல்,** மரணத் தறுவாயில் தொண்டையிற் சத்தமுண்டாகிக் கபங்கட்டியிழுத்தல், accumulation of phlegm in the throat which causes death rattle.

**சேற்பனம்,** சிலேட்டுமம், கபம், phlegm.

**சேற்றுமை,** சேற்றில் புதைந்துகிடக்கும் ஆமை, common terrapin — Emystrijuga. It is found buried in the mire.

**சேற்றுரால்,** சேற்றில் அழுந்திக் கிடக்கும் ஆரால் மீன், இது பழுப்பும் பச்சைநிறமும் கலந்தது, 15 அங்குல நீளம். a brown or green sandeel — Rhynchobdella aculeata. It is found buried in the mud. Biger variety is good for health smallar is bad.

**சேற்றில்வளர்ந்த மடச்சி,** பிரமிப்பூடு, brahmiplant — Gratiola monieri.

**சேற்றுக்கடி,** see சேற்றுப்புண்.

**சேற்றுக்கால்,** களிமண்வயல்,slushy, clay soil.

**சேற்றுப்புண்,** மழை காலத்தில் கெட்ட மண், கெட்ட நீர் இவைகளை மிதித்தலினாலும், அழுகிய சேறு முதலிய விடங்களில் நடமாடுவதாலும் பாதத்தில் சேர்ந்த சேற்றை அடிக்கடி கழுவிச் சுத்தி செய்யாத குற்றத்தினாலும் பாதத்தின் ஓரம், உள்ளங்கால், விரல்களின் சந்து, குதிக்கால் இவ்விடங்களிலுள்ள சதை வெளுத்து மேற்றோலுரிந்து. தினவுண்டாகி மேற்கண்ட பாகங்களில் கரையான் அரித்தது போற் காணப்படும் புண், இப்புண் குழாய்த் தண்ணீராலும் உண்டாதல்பற்றி இதற்குக் குழாய்ப்புண்ணென்றும் சொல்வதுண்டு. itching sore between the toes due to frequent walking during the season in the mire, impure water. putrefid soil etc. or by not properly cleaning or washing the feet then and there. It is marked sometimes by unbearable itching and burning in the affected parts paleness, and exfoliation of the skin and corrosion on the sole of the foot etc.

**சேற்றுப்புழுதி,** see சேறு கலந்த மண், mire.

**சேற்றுமக்கரப்பன்,** சிலெட்டுமத்தினால் குழந்தைகளுக்கு ஏற்படும் கரப்பன் நோய், Eczema of children due to phlegm humour.

**சேற்றுமம்,** சிலேட்டுமம். phlegm.

**சேனம்,** பருந்து, kite.

**சேனம்பாம்பு,** ஓர் சிவப்பு கடல் மீன், a brown sea fish known as true eel — Anguilla bengalinsis; 2. மலங்குமீன், a kind of eel with picked head.

**சேனு,** see சேனம்பாம்பு, 2. நிலாவிரை Tinnevelly senna; 3. விலாங்கு மீன், a kind of eel.

**சேனுமரப்பட்டை,** அழிஞ்சில்பட்டை, alangium bark.

**சேனுமரம்.** அழிஞ்சில்மரம், alangium tree— Alangium decapetalum.

**சேனுவு,** தகரை, foetid cassia — Cassiatora.

**சேனிடம்,** முள்ளி, Indian night shade — Solanum indicum

**சேனை,** see சேனைக்கிழங்கு.

**சேனைக்கிழங்கு,** மலையாளத்தில் உற்பத்தியாகும் பெருங்கருணைக்கிழங்கு. a big variety of elephant foot yam grown in Malabar — Typhonium origense; 2. ஓர் வகைக்கருணை another kind of yam with tuberous root — Amorphophallus campanulatus; 3. கூகைக் கிழங்கு அல்லது அரோரூட்டுக் கிழங்கு. thahiti arrow root — Tacca pinnatifida.

**சேனைப்படையாவம்,** சிறியாணங்கை, snake root — Polygula glabra.

**சேனைப்பால்,** பிறந்த குழந்தைக்கு ஊட்டும் தித்திப்புப்பால். sweetened milk used in feeding a new born baby for the time being; 2. கழுதைப்பால், asse's milk.

**சேனையிடக்கரு,** காட்டெருமை, wild buffalo.

# சை



**சை,** திணை, millet.

**சைகதம்,** மணல், sand, 2. மணற்கரை sand bank.

**சைகதவுண்டை,** மணலே திரண்டமைந்த மலை, hill formed by heaps of sand — Sand hill.

**சைகாட்டிலம்,** வெள்ளெருக்கு, madar or sun plant bearing white flowers — Calotropis gigantia (alba)

**சைகை,** see சைக்கினை.

**சைக்கினை,** காமப்பெண்ணின் சமிக்கை, the gestures of an amorous woman.

**சைங்கம்,** see சைங்கியம்.

**சைங்கியம்,** சிங்கம், lion.

**சைவம்,** இளமை, youth; 2. குழந்தைப் பருவம், child hood, infancy; 3. பதினாறு வயதுக்குட்பட்ட பருவம், அதாவது பால்யம் youth below sixteen years.

**சைவன்,** பாலியன், juvenile.

**சைதனம்,** சீவாத்துமா, இது பிறப்பிறப்பிற் குள்ளடங்கியது, individual soul subjected to births and deaths.

**சைதன்னிய நிலை,** பிறப்பிறப்பைக் கடந்து நிற்றல் a candition or state of being liberated from the tormentation of births and deaths.

**சைதன்னியநீர்,** பனிக்குடத்து நீர், first presentation — Liquoramni.

**சைதன்னியப்பிரகாச சாதி,** ஆண்சாதி நான்கு வகையிலொன்று one of the four classes of men divided according to his religious elevation to God.

**சைதன்னியம்,** தத்துவ ஞானம், wisdom, the knowing principle spirit as distinguished from matter; 2. அறிவு, intellect; 3 சீவாத்துமா, individual soul; 4. பரமாத்துமா, universal soul; 5. வாலைரசம், quick silver; 6. நாயுருவி, Indian burr — Achyranthus aspera; 7. பிரம்மம். Brahmam considered as the essence of all beings ie. Chitmanifested.

**சைதன்னியம் பாய்ஞ்சான்,** நஞ்சறுப்பான் கொடி, a creeper that is said to alleviate arsenic & snake poisons — Tylophora tenuis

**சைதன்னிய ரூபினி,** the aspect of sakthi as pure consciousness and itself.

**சைதன்னியவான்,** அறிவுள்ளவன், man of superior intellect; 2. ஞானி, man of wisdom.

**சைதன்னிய வுற்பன்னம்,** உணரும் மாற்றம், conscious phenomena.

**சைதான்,** பிசாசு, devil, satan.

**சைதிலி,** சைதிலிப்பொடி, seidlitz powder.

**சைதினி,** கருஞ்சீரகம், blackcumin.

**சைதூரன்,** கரிவெட்டிமரம். இம்மரம் ஐரோப்பிய தேசத்து மரம் என்று கொள்ளினும், ஆசியாவின் மேற்கேயுள்ள நாடுகளில்தான் உற்பத்தியானது. இது ஒரு வாடாமரம், அனேகாலம் சீவித்திருக்கும், இதன் பழத்தினின்று வெண்ணெய் வடிப்பதுண்டு, olive tree. European olive — Olea europaea. Though, called europaea, it is a native of western Asia (Asia minor) where from it extended south of Europe. It is an ever green tree, attaining extreme oldage. Oil is obtained from the pulp of fruit. Compare — Chinese olive, Indian olive, Indian wild olive, negro's olive etc.

**சைதூரன் எண்ணெய்,** ஒலிவை யெண்ணெய், இது கரிவெட்டி மரத்தின் பழத்தினின்று பிழிந்தெடுப்பது. இது வெளிர்மஞ்சளாயிருக்கும். வாசனையற்றது. சிறிது தித்திப்பு மலத்தை இளக்கும், அழற்சியைப்போக்கும், விஷத்தை முறிக்கும், சாந்தமாய்ப் பேதியாகும், இதைப்பூசு மருந்தாகவும் உபயோகிக்கலாம், உடம்பின் நமைச்சலைப்போக்கும், சுட்டப்புண், வெந்நீரால் வெந்த புண் இவைகளின் அழற்சியைப் போக்கும், அன்றியும் சோப் கிளிசிரின் இவைகளைத் தயாரிப்பதற்கு இது உபயோகமாகும், நாம் நல்லெண்ணெய் உபயோகிப்பது போலவே மேனாட்டில ஐரோப்பியர்கள் இதை உணவு, ஊறுகாய்; மருந்துத் தைலம் இவைகளில் உபயோகிப்பார்கள், இது உடம்பைப் போஷிக்கும், நாக்குப்பூச்சிகளைப் பேதியினால் வெளிப்படுத்தும், சன்னி பாதசுரம், கிராணிக் கழிச்சல், வயிற்றுவலி, விஷகடி இவைகள் குணமாகும், ஆசனத்தில் பீச்சிட வயிற்றுவலி, மலபந்தம் போம், திமிர்ப்பூச்சி வெளிவந்து விழும், இதைக் களிம்பாகச் செய்து சொறி சிரங்கு, தீப்புண், வெந்நீர் இரணம் சரும நோய் இவைகளுக்குப் பூசலாம், olive oil —

Olivae oleum- It is expressed from the pulp of this fruit and is of a pale yellow colour and in odorous. It is employed in cases of typhoid. chronic diarrhoea, colic, and poisonous bites. It is a mild laxative and so principally used as an emmolient in enemas to cure colic, constipation and to expel worms (thread warms). It is applied externally for itch. burns, scalds. prurities and other skin diseases. It is a mechanical antidote in cases of poisoning. It is employed in the manufacture of soap and glycerine. This oil is used in the European countries in the same way as gingelly oil is used in Tamil country. —food, pickles medicine etc. It is a good nutrient and anthelmentic.

NOTE:—Olive oil enters into the most of the preparations in English medicine as Hydrargyri compositum, Cataplasma lini, Emplastrum ammoniacum. Enema magnesiae sulphatis, Unguentum cantha rides etc.

**சைத்தியகுணம்**, வாதகுணம், rheumatic tendencies.

**சைத்தியக்கட்டி**, தொண்டைக்குள் இரண்டு பக்கங்களிலிருக்கும் கோளங்கள் சிவந்து வீங்கி வேதனையுண்டாக்குமோர் கட்டி, இது சாதாரணமாக சீதளத்தினுல் தொண்டைக் கட்டிக்கொண்டு பின்பு அதிகரித்துக் கோளங்களைத் தாக்கி எரிச்சலையும் குத்தல் வலியையும் உண்டாக்கும். இதனுல் விரணமும் ஏற்படுவதுண்டு, அழற்சி காணுவதால் வீக்கமுண்டாகும். அப்பொழுது விழுங்க முடியாது மேல் மூச்சுவாங்கும் மூக்கினுல் பேசும்படியாகவும், சிலசமயம் காது செவிடாகும், குழந்தைகளுக்குச் சீதளகாலத்திற் காணும், enlargement of the tonsils of the throat. It is a thick swelling appearing about the root of the palate and affecting the two glands on each side of the throat known as tonsils. It arises from cold constituting a common sore-throat, which when severe, sets up acute tonsilitis. After sometime, it becomes chronic, when the tonsils become enlarged and hardened being attended with burning piercing or pricking pain. It is marked by some difficulty in swallowing, heavy breathing and indistinct speech with a peculiar nasal twang. Some degree of deafness may also be present. It is often present in children during the cold season of the year — Tonsilitis.

**சைத்தியசுரம்**, தொண்டையின் கோளங்கள் வீங்குவதனுற் குழந்தைகட்குக் காணும் சுரம், fever in children attended with redness of throat and swelling of neck — Glandular fever.

**சைத்தியங்கொள்ளல்**, சீதளமடைதல், being attacked by cold.

**சைத்திய முறித்தல்**, சீதளத்தைப்போக்கல், breaking cold or removing chillness from the body.

**சைத்தியமூடுதல்**, மரணத்திற்கு ஏதுவாக உடம்பில் குளிர்ச்சி அல்லது சீதளம் மேலிடுதல், chilness overtakes the body and spreads foreboding death —Cold fits.

**சைத்தியம்**, உடம்பில் இரத்தமும் கபமும் கோளாறடைந்து, சீதளத்தினுல் தொண்டை கட்டிக்கொண்டு மேல் வாயில் வலி கண்டு, பிறகு நாளாவட்டத்தில் அலற்சி கண்டு கோளங்கள் வீங்கிக்காணும் ஓர் நோய், inflammation of the throat due to cold arising from the deranged condition of blood and phlegm ( humour ) attended with soreness of the throat which, when severe constitutes tonsilitis or qunicy.

**சைத்தியம்**, குளிர்மை. coldness, chillness.

**சைத்தியம் நீங்கல்**, சீதளத்தினின்று குணம் படுதல், getting rid of cold, being free from cold.

**சைத்தியவம்**, நின்றிடந்தீய்ஞ்சான், அதாவது ஓர் தீப்பூடு, a fire plant.

**சைத்தியோபசாரம்**, சீதளத்திற் குண்டான சாந்திகள், cooling refreshments such as cool drinks etc.

**சைத்திரிய ஞானம்**, சித்தருானம், அதாவது ஆன்மாவைப்பற்றிய ஞானம், knowledge of the soul, spiritual knowledge.

**சைத்திரியம்**, மஞேதிடம், firmness of mind.

**சைந்தங்குக்குலு**, See சயிந்தவகுக்குலு.

**சைந்தவம்**, சிந்துதேசம், Sindh; 2. இந்துப்பு, rock salt. It is one of eight salts mentioned by Susruta. It is so called because it is obtained in Sindh or the country about the Indus. It is best of the salts. It can be used by people of all temperaments; 3. தலை, head; 4. கருங்குன்றி, black variety of jeweller's bead; 5 குதிரை, horse,

**சைந்தவலவணம்**, இந்துப்பு, அல்லது சிந்து தேசத்தியவுப்பு, இதற்கு சோமனுப்பு, சிந்து நாட்டுப்பு என்றும் பெயர். இவ்வுப்பு 1 சேர் முதல் 5 சேர் வரை பெருங்கட்டிகளாகவும், வெளிப்பக்கம் மங்கல் நிறமாகவும், உட்புறம் வெண்மையாகவும், கைப்பாகவுமிருக்கும், இதைக் கஷாயத்துடன் சேர்த்து வாயு போக்குவதற்குக் கொடுப்பதுண்டு. சுளுக்குக்குப் பற்றுப்போடலாம், சோற்றுப்பைப் போலிருந்தாலும் பேதிக்குணமுண்டு, கருப்பிணிகளுக்கும் சூதக நோயால் வருந்துபவர்களுக்கும் கொடுக்க உதவாது, காயப்புண் வெந்நீர்ப்புண் இவைகளுக்குத் தடவலாம், இது எல்லாக் கடைகளிலும் கிடைக்கும், rock salt an impure chloride of sodium. It literally means Sindh salt for it is procurd in Sindh; occurs in large masses varying in weight from 1 to 5 seers, dull or brownish —white externally and white and crystalline internally, of a pure saline taste, procurable in all bazaars. Mixed in decoction it is used as a purgative, externally applied for sprains. Though a variety of common salt, it has a stronger purgative property. It cannot be used freely by pregnant women and those ailing from menstrual disorders. It can be applied for scalds and burns.

NOTE: The name is applied to Rock salt which is regarded as the best of salts. It consists of three varieties, red, white and crystalline. Pure white is prepared for medicinal use and crystalline is also used in Medicine. It is prescribed in abdominal diseases and dyspepsia. For alimentary purposes rock salt is considered superior to other varieties It is regarded as digestive, appetizing agreeable, palatable and relishing It is demulcent, spermetopoietic and cooling in its potency It is one of the potent auxilaries in combating the action of the deranged humours of the body.

**சைந்தவ வாதிச்சூரணம்**, இந்துப்போடு மற்றக் கடைச்சரக்குகளையும் சேர்த்துப் பொடி செய்த ஓர் மருந்து, a medicinal powder with Sindh salt as the chief ingrediant amongst other bazaar drugs.

**சைந்தனம்**, இந்துப்பு, see சைந்தவம்.

**சையகம்**, படுக்கை, bed.

**சையம்**, கல், stone; 2. மலை, mountain hill; 3. குடகுமலை, Coorg mountain.

**சையரியம்**, பெருங் குறிஞ்சி, Cone head — Strobilanthes consanguineus ( typica )

**சையுக்தம்**, / **சையுத்தம்**, } சையோக சம்பந்தம், sexual intercourse; 2. மயக்கம், giddiness.

**சையோகசம்பந்தம்**, புணர்ச்சியினாலேற்பட்ட சொந்தம், sexual connection relating to sexual intercourse.

**சையோகச் சுக்கிலம்**, ஆணும் பெண்ணும் புணருங்காலத்தில் வெளிப்படும் கலந்த விந்து நாதம், combined semen of the two sexes discharged during sexual intercourse.

**சையோக நிருவாகம்**, sexual tolerance.

**சையோகபயம்**, புணர்வதற்கு பயம், coito-phobia.

**சையோக புருஷ பரிச தோஷம்**, கண்ணிலும், உச்சியிலும் குழி விழுதல், உடம்பு பச்சை நிறம், சிறியழுதல், பட்சி குரலோடு அழல், குடித்த பாலை எடுத்தல் முதலிய குணங்களைக் காட்டும் ஓர் தோஷ நோய், see விஷ தோஷம்.

**சையோகப்பெண்தோஷம்**, புருஷனிடம் புணர்ச்சி செய்த பெண் குளிக்காமல் பிறர் கைக் குழந்தையைத் தொடுவதினால் ஏற்படும் தோஷம், moral difilement affecting the infant child of another when touched by a woman after the intercourse without bathing.

**சையோகம்**, புணர்ச்சி, copulation, coition; 2. கலக்கை, union; 3. கலவி, sexual union

**சையோகம்பண்ணல்**, புணர்தல், copulating, having sexual intercourse; 2. கலத்தல், uniting.

**சையோகவிச்சை**, காமவிச்சை, sexual desire.

**சையோகவிதி**, கொக்கோக நூலில் சொல்லியுள்ள புணர்ச்சிக்குரிய விதிகள், rules or principles of sexual congress laid down in the erotic science of Kokkaga Muni.

**சையோகவிர்த்தினி**, போகவிச்சையை மூட்டு மருந்து, aphrodisiac.

**சையோகித்தல்**, see சையோகம்பண்ணல்.

**சோகாத்தல்,** களைத்தல், fainting; 2. துக்கப்படல், mourning; 3. துன்புறல், being troubled in mind.

**சோகாப்பு,** துன்புறல், suffering; 2. துன்பம், sorrow.

**சோகாரம்,** குங்குமச் செவ்வந்தி, crimson coloured chamomile flower.

**சோகாரி,** கடம்பு, common indian oak — Barringtonia racemosa.

**சோகி,** பலகறை, coury—Cypraea moneta; 2. விஷவைத்தியன், physician curing poisonous bites and poisons; 3 மூர்ச்சையடைந்தவன், one who had swooned; 4. பாம்புப் பிடாரன், snake catcher, பாம்பாட்டி, snake charmer; 5. பாம்பு, நாய் முதலிய பிராணிகளின் விஷக்கடிகளைத் தீர்ப்போன். a class of persons known as Jogees practising medicine (anec-dotes) for snake or other doisons bites; 6 சித்திபெற்றோன், Siddhars who attained super natural powers; 7 சன்னியாசி a religious mendicant in general; 8. யோகி one who practices yoga.

NOTE:—Jogis are a class of wandering mendicants of Telugu community practising juggery, legerdemain etc., and some of whom are even snake charmers and pretenders to charms and medicine. They are actually beggars running about to eke out their livelihood in false pretences. Some of these are also ranked as criminals.

**சோகிகா,** மகிழம்பூ, west indian medlar — Mimusops elengi.

**சோகிக்கீரை,** பெருஞ்சீரகச்செடி sowa vegetable, sweet fennel — Foeniculum vulgare. 2. சதகுப்பைச்செடி, common dill seed plant, hogs fennel — Anethum graveolens. The leaves are eaten like vegetable greens. இதனால் சூதக சிக்கல்போம், It removes amenorrhoea. c. f. தொயிலிக்கீரை.

**சோகித்தலம்,** காற்சிகைப்பூடு, an unknown plant.

**சோகித்தல்,** துக்கப்படுதல், being grieved at; 2. மயங்குதல், fainting swooning.

**சோகிரசமாத்திரை,** கோடாசலக் குளிகை, இது கஞ்சாவைக் கொண்டு செய்யும் ஓர் மாத்திரை, a medical pill in which ganjah forms the chief ingredient; 2. கேர்வாளக் குளிகை, croton seed pill.

**சோகிவித்து,** see சதகுப்பை.

**சோகினா,** see சோகு.

**சோகு,** பிசாசம், devil, goblin; 2. சுடுகாட்டுப் பேய், vampire.

**சோகுவாகு,** வாலுளுவையரிசி, seeds of spindle tree — Celastrus paniculata.

**சோகை,** அப்பிராணி, impotent person; 2. காமாலை, jaundice.

**சோகை,** உடம்பில் இரத்தமில்லாமை, அல்லது இரத்தக் குறைவினால் பலங் குறைந்து உடம்பு வெளுத்து வீங்கும் ஓர் நிலைமை, இந்நோய் சாதாரணமாய் உடம்பின் இரத்தோட்டம் தடைபடுதலினாலும், உணவுப் போஷணைக் குறைவினாலும் களைப் படைந்து சோர்வடையும்படி மிகுதியாக உண்டாகும் இரத்தப்போக்கினாலும் அல்லது இரத்தத்தின் குணம் பேதித்து சத்து குறைந்து கேடுறுதலினாலும் உண்டாகும், இதனால் இரத்தம் வறண்டு உடம்பு வெளுத்து முகம் வீங்கி மார்பெலும்பும் விலாவெலும்பும் புடைத்து சீரணசக்தி குறைந்து கைகால் ஓய்ச்சலுண்டாகித் துன்புறுத்தும். இதற்கு வெள்ளரி விதையும், பொட்டிலுப்பும் சேர்த்து அரைத்து உப்புப்புளி நீக்கிக் கொள்ளக் குணமாகும், அயமருந்துகளும் வில்வாதி லேகியமும் சிறந்தது, an incipient jaundice, a morbid condition of body in volving either bloodlessness or diminution in the total volume of blood — Anaemia. It is marked by paleness of the skin, bloating of face, loss of energy, swelling of the body, projection of chest, and rib bones, decrease in digestive function weakness of the limbs etc. The deficiency of blood may be due to either mechanical intetference with the blood circulation in the affected part or to an in sufficient food supply or imperfect nutrition and exessive drain or blood waste or from repeated hemorrhages and exhausting discharges. It is also associated with the alternation in the quality of blood. Which is indicated by a diminished concentration of red cells or haemoglobins in the blood. The disease is cured by taking well ground cucumber seed mixed with nitre and keeping diet free from salt. Iron preparations and bael electivary have also salutary effects.

NOTE : It is an incipient jaundice with paleness and puffy face. Deficiency in the quantity of blood is known as oligemia, while the deficiency in quality consisting in diminution of the amount of hemoglobin is called oligochromemia and that consisting in diminution of the number of red blood carpuscles oligocythemia. Anemia it marked by the paleness of the skin and mucous membranes, loss of energy, palpitation of the heart, systolic murmurs and other general symptoms. Chlorosis is also a variety of anemia due to want of red carpuscles in the blood.

(a) தமிழ் வைத்தியப்படி இது பலவகைப் படும், அவையாவன, *according to Tamil* medicine there are several varieties, they are :—

1. வாதசோகை, anaemia and swelling *due to vitiation of wind humour.*

2. பித்தசோகை, anaemia and swelling due to vititation of bile humour.

3. சிலேட்டுமசோகை, anaemia and swelling due to *vitiation of phlegm humour.*

4. இரத்தசோகை, one due to degenerative changes in the circulation of blood — Aplastic anemia.

5. கபாலச்சோகை, anemia due to deficient blood supply to the brain — Cerebral anemia.

6. விஷச்சோகை, anemia due to toxic poisons in the blood — Toxic anemia.

7. பாண்டுச்சோகை, anemia attended with fever, dropsical swelling — Acute anemia dropsy.

8. காமாலைச்சோகை, anemia attended with or as a result of jaundice.

9. எலும்புருக்கிச்சோகை, anemia due to atrophy of the bone marrow.

10. கணச்சோகை, anemia of children due to diminution of blood without *any discoverable cause — Anaemia* infontum.

11. விரணச்சோகை அல்லது அபிகாத சோகை, anemia due to loss blood from injury or wound — Traumatic anemia.

12. ஈரற்சோகை, anemia due to disease of the liver — Hepatic lukemia.

13. சர்வாங்க சோகை அல்லது நிச சோகை, anemia affecting the whole of the blood and entire organism— General anemia.

14. தீராச் சோகை, chronic anemia generally fatal — Pernicious anemia.

15. சூதகச் சோகை anemia due to menstrual disorders such as menorrhagia hysteria and other nervous disturbances — Chlorosis.

NOTE:—If in chlorosis bile is excited and the blood and flesh are vitiated, it leads to Anemia. In this, a portion of the bilious secretions from the liver instead of finding its way to the intestine become mixed with blood in circulation. Anemia is produced. In anemia the eyes become pale and eye lids bloodless. The skin, face, nails and in fact the whole body gets a peculiarly pale and lifeless appearance. The bowels are irregular, and the urine high coloured and scanty, nausea, burning sensation, indigestion, weakness, anorexia and langour are also present. When the Anemia becomes chronic, it is called malignant anemia — கும்பகாமாலை, in which case the chances of recovery is too remote.

**சோகைப்பாண்டு.** இரத்த மில்லாமையால் ஏற்படும் பாண்டு ரோகம், dropsy due to anemic condition of the body — Anemic *dropsy.*

**சோகைப்பாண்டுநாசினி,** நறுந்தாளி, இவ் வியாதியைப் போக்குவதாலிப் பெயர், bin-weed — convolvulus genus. It is so called from its virtue of curing anemic dropsy.

**சோகை முஞ்சி,** ஊதின முகம், swollen face. 2. நீர்க் கோர்வையினுல் வீங்கிக் காணும் முகம், face grown turgid or swollen up as with water — Bloated face.

**சோகையன்,** சோகை பிடித்தவன், one attacked with anemia; 2. மெலிந்தவன் a weak person; 3. ஆண்மையற்றவன். impotent man; 4. காமாலை கொண்டவன், one affected with Jaundice.

**சோகைவீக்கம்,** சோகையினாற்காணும் வீக்கம், swelling through anemia; 2. விஷப் பாண்டு வீக்கம், dropsical swelling.

**சோங்கண்,** ஓரக்கண், அல்லது மாறுகண், squaint eye, strabismus.

**சோங்கம்,** அகில் மரம், the fine sandal tree. agilwood tree; 2. கிச்சிலிக்கிழங்கு, orange root. camphor zedoary. Hedychium spicutum; 3 சிங்குருபல்லி, a kind of plant; 4. தில்லை மரம், blinding tree.

**சோங்கல்,** மறந்துவிடல், forget fullness.

**சோங்கு,** கோங்கிலவு, false tragacanth, golden silk cotton—Cochlospermum gossypium; 2. நாரை, heron.

**சோங்குதல்,** தன்னை மறத்தல், forgetting oneself.

**சோங்குவெட்டு,** சரிவான வெட்டு, an oblique cut, slanting cut.

**சோங்குதவை,** பின்தொடரி, a magic plant (unidentified) so called from its virtue of making any woman follow one and subject to one's wishes by allwring her; 2. தொடரிப்பூடு, prickly buck thorn — Scutia indica.

**சோசகம்,** மரப்பட்டை, bark of a tree.

**சோசக்காய்,** தேங்காய், cocoanut.

**சோசம்,** தென்னை, cocoanut tree.

**சோசனம்,** வெள்ளை வெங்காயம், white onion 2. உள்ளி, garlic.

**சோசாங்கினி,** துளசி, sacred basil — Ocimum sanctum.

**சோசிச்சாரம்,** இது ஓர் வகை சாம்பலுப்பு, இதற்கு இந்துஸ்தானி பாஷையில் சஜ்ஜீகார் என்று பெயர், இது யவா கோதுமையின் வைக்கோலை எரித்துச் சாம்பலாக்கி அதினின்று எடுத்தவுப்பு. இதைத் தாம்பூர பற்பம் செய்வதில் உபயோகிப்பார்கள். சச்சிக்காரம், the chaff (straw) of yava wheat is burnt to ashes, and this salt is extracted. It is called sajjikaram.

**சோசித்தல்,** வற்றுதல். காய்தல், drying up, 2. சோர்வடைதல்; fatiguing, exhausting; 3. துக்கப்படுதல், to grieve, sorrow.

**சோச்சி,** சோறு, cooked rice.

**சோச்சிபாச்சி,** சோறும் பாலும், அதாவது பாற்சோறு, cooked rice soaked in milk.

**சோடசகலை,** மனிதவுடம்பில் பராசக்தி பரிணமித்திருக்கும் 16 யோக நிலைகள், (in Agama philosophy) the sixteen mystic centres in the human body in which the Goddess Sakthi (universal energy) manifests herself.

**சோடசத்தொன்று,** மாகாணி, வீசம். பதினாறிலொன்று, (1/16 part) one sixteenth part

**சோடசம்,** பதினாறு, sixteen; 2. மரப்பட்டை, bark of a tree; 3. நார், fibre

**சோடசவாண்டுமூலி,** பசியெடுக்காதிருக்க வேண்டி, சித்தர்கள் பதினாறு வருஷத்திற் கொருமுறை கொள்ளும் மூலிகை, a rare drug used by Siddhars to keep them off from hunger and thirst they ate this drug once in sixteen years.

NOTE: This will enable the Siddhars to continue their yoga uninterruptedly without being disturbed by hunger and thirst.

**சோடணம்,** சோஷணம், அதாவது உலருதல், drying: 2. உமிந்து குடித்தல், நாவினால் சாரம் வாங்கிக் குடித்தல், to sip.

**சோடணி,** வற்றச்செய்யக் கூடியது, anything which absorps — Absorbent

**சோடத்திராவம்,** ஓர் வகை உப்புத்திராவம், soda flux.

**சோடம்,** காமவிகாரச்சூடு, abnormal heat arising from love sickness.

**சோடா,** சோடாவுப்பு, மண் காரம், soda, bicarbonate of soda; 2. சோடாபானம், soda water.

**சோடாபொட்டிலுப்பு,** சோடா வெடியுப்பு, chilian salt petrenitrate of soda.

**சோடாப்புல்,** ஓர் வகை நீர்ப்புல், a grass growing in water — Panicum paludosum.

**சோடாவுப்பு,** மண்காரம், பூநீர் விளையும் நிலத்திலிருந்து உவர்மண் காரமெடுத்து அதைச்சுத்தி செய்தவுப்பு, அன்றியும் கடற் கரையிலுள்ள பூண்டுகளைக் கொளுத்தி அச் சாம்பலிறின்றும் இரசாயன வழியாகப் பிரித்தும் எடுப்பதுண்டு, இது பெரும் பான்மை ஐரோப்பிய தேசத்தினின்று இறக் குமதியாகிறது. இது ஓர் வைப்புச் சரக்கு, வைத்தியத்திற்கும் இன்னும் பல காரியங் களுக்கும் உபயோகப்படுத்துவதால் நன்ருக வியாபாரமாகிறது. இது வெள்ளைக்கட்டி யாயும் தூளாயும் கிடைக்கும். உவர்ப்பா யுமிருக்கும், இதை சாதாரணமாய்த் தண்ணீ ரிற் கரைத்து அசீரணத்திற்குக் கொடுக்க லாம், நெருப்புப் பற்றிய காயங்களுக்கும் தீச்சுட்ட புண்களுக்கும் இது உதவும், சோடாக் கட்டியைத் தண்ணீரில் நனைத்து நெருப்புப் பட்டவிடத்தில் தேய்க்க வலி குணமாகும், சீழ் கொள்ளாது. இது மூத் திரத்தை வடிக்கும், கட்டிகளைக் கரைக்கும், இதை வயிற்றுப் புளிப்பு, மூத்திர நோய், கீல் வாயு இவைகளுக்குக் கொடுக்கலாம், சொறி சிரங்கு புண் முதலிய தோலைப் பற்றிய நோய்களுக்கு இதை உபயோகிப்ப தால் குணமுண்டு எனக்கருதப்படும், இதைத் தண்ணீரிற் கலந்து குளிப்பதற்கும் புண் களைக் கழுவுவதற்கும் எண்ணெயோடு கூட்டி பூசிமருந்தாகவும் உபயோகப்படுத்த லாம், bicarbonate of soda. It is a carbonate of soda mixed with various impurities and is obtained from pooneer i e. Dhoby's earth. It is also derived from the ashes of marine plants or produced by chemical decomposition of sulphate of soda and is largely imported to India from Europe. It is a prepared salt and commands a large sale in commerse being useful in medicine and for various other purposes. It is procured in lumps and powder form and is alkaline in taste. Mixed with water, it is given for indigestion. It is a useful remedy in burns for a lump dipped in water and rubbed on the affected part affords a great relief, prevents suppuration. It is a diuretic and reduces swelling. It is used in medicine for neutralising the acidity of the stomach. It is a remedy of great value in rumbling noise of the stomach, cardialgia, indigestion or loss of appetite, flatulence, urinary diseases rheumatism etc. In some chronic skin diseases, especially those of a papular and scaly, it has been employed successfully both internally and externally in the form of baths, lotions and ointments. c. f. சாச்சிகாசாரம்.

NOTE— 1. Poongauram (பூங்காரம்) is found in the bazaar in regular whitish cakes about 1/3 inch thick and has smell like new burnt quick lime. When purified, it is employed by vaidyans as an acid alterative. It is substituted for British bicarbonate of soda. In India it was formerly and even now is used in preparing the lac dye, in the process of glass making, soap making and also in the process of dyeing.

NOTE- 2. Bicarbonate of soda ( $NaHco_3$ ) is prepared by passing a stream of carbonic acid gas through a mixture of one part of sodium carbonate and 1½ parts of dried carbonate of soda to saturation. It is an anti acid and alterative. In lithiasis, albuminurea and in purpura hemorrhagica it has been found highly useful. Effervescing solution of soda prepared from this is a well known anti alkaline and refrigerant. It is not to be confounded with ordinary soda water, which is nothing but a solution of carbonic acid in water.

NOTE - 3. Carbonate of soda is a different salt from which bicarbonate is prepared. Considerable quantities of impure carbonate of soda are prepared in India by the incineration of plants — Salicornia indica, S. brachiata, Suaeda nudiflora and probably of other allied species. Sea weeds especially of the species Gracilaria and Laminaria yield soda and iodine on incineration. It is not to be confounded with soda mineral product (பூநீறு) obtained from the soil which also contains 40 to 50% of carbonate of soda, from Dhoby's earth (உவர்மண்) also soda is prepared.

**சோடி,** உசிலம் பொடி; அல்லது சீக்கிராந் தூள். powder of the dried leaves of black sirissa; 2. புங்கங்கொட்டை பொடி, soap nut powder; 3. இரட்டை, double.

**சோடித்தல்,** வற்றுதல், drying up.

**சோடிசேர்த்தல்,** புணரவிடுதல், match making for intercourse.

**சோடு,** இரண்டு, two; 2. கவசம், cover; 3. துணை, mate, birds.

**சோடுகட்டுதல்,** see சோடிசேர்த்தல்.

**சோடுசெய்தல்,** மருந்து தெரியாதபடி மூடி மறைத்தல், covering the medicine before calcining; 2. சீலை மண் செய்தல், luting the lid and the container of medicine before calcination to render it air tight.

**சோடுபறிபூண்டு,** பேய்ப்புடலை, devil's gourd, wild snake gourd — Trichosanthus laciniosa.

**சோடுபிரிவு,** ஆணும் பெண்ணும் பிரிதல், separation of the couple as that of birds. 2. புருடனும் பெண் சாதியும் ஒன்று சேர்ந்து வாழாமற் செய்யுமோர் மந்திரம், in occult science) a charm used in Magic for separation of wife and husband.

**சோடை,** காய்த்து ஓய்ந்த மரம், tree which has stopped yielding fruit; 2. வாழை மரத்து நோய்; a blight attacking plaintain tree; 3. சோர்வு, faligue; 4. வறட்சி drought, dryness; 5. ஓர் நோய், a disease.

**சோடைபற்றல்,** பயிர் பூண்டு, செடி, மரம் முதலியவைகள் நோய் கண்டு அல்லது செழிப்பு ஒடுங்கி பலனற்றுப் போதல், crops, plants, shrubs. trees etc. resulting in stunted growth and fruitlessness as by scorch or blast due to climatic changes.

**சோடைபற்றுதல்,** பலன் கொடாது போதல், becoming unfruitful, becoming stunted in growth.

**சோடையன்,** பலவீனன், weak person; 2. நோயாளி, sickly person.

**சோஷணம்,** உலருதல், drynig; 2. முருங்கை drumstick tree.

**சோஷணி,** வற்றும்படி செய்யக் கூடியது, absorbent; 2. விரகதாபம், intense heat of the body from love sickness.

**சோஷம்,** விரகதாபத்தால் உடம்பிலுண்டாகும் கொதிப்பு, abnormal heat experienced in the system due to love sickness.

**சோஷயம்,** see அட்டிமதுகம்.

**சோஷரம்,** பெருவேம்பு, a large variety of margosa tree — Melia composita.

**சோஷஞ்சினி,** மகாமேதை, an unidentified plant

**சோஷித்தல்,** உலர்தல், causing to dry; 2. உறிஞ்சிக்கொள்ளுதல், to absorb.

**சோஷித்துப்போதல்,** உலர்ந்து வாடிப் போதல், tofade and dry.

**சோஷியம்,** உறிஞ்சி விழுங்கும்படியான மருந்து, medicine to be sucked in.

**சோஷை,** வறட்சி, dryness.

**சோஷைசுரம்,** உடம்பில் கொதிப்புக் கண்டு வறட்சியினால் ஏற்படும் சுரம், இதனால் மூர்ச்சை, பிரலாபம், கண் புகைச்சல், நீர் வடிதல், தேகம் சில்லிடல், வயிற்றுப்புசம், வலி, அடிக்கடி மூத்திரம், மயிர் சிலிர்ப்பு, அக்கினி மந்தம், படுக்கைபொருந்தாமை, வாந்தி, நாவுலரல், இக்குணங்களையுடையது, fever arising from dryness due to abnormal heat of the body. Loss of apetite, bloating of abdomen, vomitting, dryness of the tongue, pain. frequent micturition. fainting, chillness of the body are the few symptoms of the disease.

**சோனகசுரம்,** உடம்பில் சிவந்த குருக்கள் எழும்பிய சுரம். இது மகமதிய தேசமாகிய பாபிலோன், அரபி, கிரீஸ் முதலான விடங்களில் பரவி வந்த ஓர்வகைத் தொத்துசுரம். a kind of fever prevalent in Jonaca (Mahamadan) countries of Babylon, Arabia. Graece etc. It is contagious disease with rash—Scarlatina.

**சோணகத்திருக்கை,** முதுகில் முள்வாய்ந்த ஓர் வகைக் கடல் திருக்கை மீன், a species of thom back sea fish, known as English ray — Trygon warnak.

**சோணகம்.** see சோனகம்.

**சோணகவம்,** see சோணகசுரம்.

**சோணகவாளை,** see சோனகவாளை.

**சோணகாரி,** மருந்துபட்ட இடத்தை சிவப்பாக்கி எரிச்சலை யுண்டாகு மருந்து. rubefacient.

**சோணங்கி,** ஓர்வகைப் பெரிய ஜாதி வேட்டை நாய், a breed of hunting dog large and tall hound of superior breed. 2. இளைத்த மனிதர்; a lean person.

**சோணதி,** உடம்பில் பட்டவிடத்தில் கொப்பளிக்காமல் சிவக்க மாத்திரம் செய்யும் கடுகைப்போன்ற குணமுடைய ஓர் வஸ்து, a substance as mustard producing redness of the skin not followed by a blister — Rubifscient.

**சோணப்பூடு,** செம்பருத்தி, red cotton — Gossypium arboreum.

**சோணம்,** இரத்தம், blood; 2. சிவப்பு, redness; 3. கடல், sea; 4. பொன், gold; 5. செங்கரும்பு, a red variety of Sugarcane; 6. செந்தூரம், red powder, red oxides; 7. நெருப்பு, fire.

**சோணுகம்,** பெருவாகை, forest sirissa — Mimosa flexuosa.

**சோணுசலக்கம்பு,** ஓர் வகைக்கம்பு, a kind of bull rush millet or spiked millet.

**சோணி,** இரத்தம, blood; 2. பலகறை, cowry.

**சோணிதக்கட்டு,** சூதக்கட்டு, absence of or abnormal stoppage of menses — Amenorrhoea.

**சோணிதக்கணிகை,** இரத்தாணுக்கள், red corpuscles of the blood, see செங்குறுகடம்.

**சோணிததோஷம்,** see சோணிதபேதம்.

**சோணிதத்தாபனவருக்கம்,** இரத்தப் பெருக்கையடக்கும் பொருள்கள்; 2. தேன், honey; 3. அதிமதுரம், liquorice; 4. சர்க்கரை, sugar; 5. இலவம்பிசின், gum of capok tree.

**சோணிதநெரிசல்,** கண்ணடுவில் கருவிழியில் செம்படலம் படர்ந்து கண்ணை உறுத்தும் ஓர் நோய், a disease of the eye marked by red films, due to pressure resulting from the swelling of the eye ball — Conjunctivitis

**சோணிதபித்தம்,** இரத்த பித்தம், bleeding from the vessels — Hemarrhage.

**சோணிதபேதம்,** மாதவிடாய் ஒழுக்கின் பலவிதம், menstrual disorders

**சோணிதப்பெருக்கு,** அளவுக்குமிஞ்சி, சூதகம் வெளிப்படல், abnormally profuse menstruation — Menorrhagia.

**சோணிதம்,** பெண்களின் தாது, இதுவே நாரி சுக்கிலம், unfertilised ovum — Semen muliebre, it is opposed to சுக்கிலம் the male-semen. 2. மாதவிடாய் இரத்தம், a misnomes of menstrual blood; 3. சிவப்பு, red; 4. மஞ்சள்நிறம், yellow colour. 5. மஞ்சள், turmeric; 6. இந்திர கோபப்பூச்சி, scarlet moth, Murella occidentalis: 7. சோணித ரோகம், menstrual disease.

**சோணிதவாதம்,** உதிரவாதரோகம், நரம்பின் துவாரங்களில் ஓடப்பட்ட இரத்தம் தடைபடுவதால் இந்நோய் ஏற்பட்டு, கை கால் கீல்கள் அல்லது மற்றக் கீல்களில் தங்கி கண்டு கண்டாகக் கட்டிக்கொண்டு வெகு துன்பத்தை விளைவிக்குமோர் வாத நோய், articular rheumatism due to obstruction in the circulation of blood. It is marked by swelling of the joints especially of the limbs with the formation of nodules— Nodular rheumatism. 2. சூலைப்பிடிப்பு acute artheritis associated with gout 3. பெண்போகத்திலால் ஆண்பிள்ளைகளுக்கு காணும் கை கால் பிடிப்பு, acute artheritis from venereal causes.

**சோணிதவாயு,** See சூதகவாயு.

**சோணிதாட்சசி,** குந்துருக்கம், white dammer — Valeria indica,

**சோணிதாரசம்,** இரத்த சம்பந்தத்தினால் இரத்தப்பைக்குள் மிருதுவான சிவந்த முளைகளை எழுப்புமோர் கண்ணோய், a disease of the eye lids marke by some soft growths on the inner side.

**சோணிதார்மம்,** வெள்விழியில் சிவப்பு சவ்வு வளர்ந்து உண்டாகும் சதை வளர்த்தி, some red growth on the white of the eye.

**சோணிதார்வுதம்,** ( சோணித + அர்வுதம் ) இரத்தக்கழலை, blood tumour see இரத்தார்வுதம். 2. ஆண்குறியில் கருநிலமான கொப்புளங்களை எழுப்பி இரணமாயிருக்கும் பாகங்களில் மிக்க வலியையும் குத்தலையுமுண்டாக்கும் ஓர்நோய், இது பெண்போகத்தினாலுண்டாகும், a venereal disease in which the penis is marked by the eruption of black and red vesicles with an excruciating pain in the ulcerated parts.

**சோணிதாற்புத கிரந்தி,** இரத்த வோட்டம் தடை படுவதால் பலவிடங்களில் தேக்கப்பட்டு அவ்விடங்களிற் காணும் கட்டி. இதின் மேல் சிறுசிறு கொப்புளங்கள் பல்வி முட்டைகள் போற் காணப்படும், உடைந்தால் இதினின்று கெட்ட இரத்தமே ஒழுகும், on account of obstruction in the circulation of blood small bloody vesicles are formed in these places When they open, blood oozes out.

**சோணிதாற்புதம்,** புற்றுநோய், sarcoma.

**சோணை,** காதினருகு அதாவது காதின் அடித் தண்டு. the lower soft part of the ear; 2. காதுமடல் lobe of the ear.

**சோணைக்காது,** அடிபெருத்த காது. large lobed ear.

**சோதகம்,** சுத்திபண்ணல், cleansing, deterging

2. கழிதல், purging away foul or offending matter from.

3. சோதித்தல், investigation.

4. வருஷமுதன் மழை, the first rain in the season of the year.

5. காடிநீர், vinegar. any fermented liquid.

6. கருந்தேவதாரு, black deodar.

**சோதகரவருக்கம்,** வீக்கங்களைக் கரைக்கும் பொருள்கள், Resolvents. கண்டங்கத்திரி— Solanum xanthocarpum. பப்பரமுள்ளி— Solanum indicum. சாலபரணி — Hedysarum gangeticum. நெருஞ்சில் — Tribulus terrestris. வில்வம் — Aegle marmelous. முன்னை— Premna integrifolia.

**சோதக்கினி,** வீக்கத்தை வடிக்கு மூலிகை, a plant — Trianthema obcordata. Its root is used for dispressing morbid swellings. 2. கட்டிகளைக் கரைக்கு மருந்து, a medicined application which disperses a tumour or morbid swellings — Discutient.

**சோதநீசம்,** பேய்க்குமட்டி, bitter apple — Citrullus colocynthis.

**சோதம்,** சுத்தமான நீர், clean or pure water; 2. வாலையிலிறக்கிய நீர், distilled water; 3. வீக்கம், swelling.

**சோதரிமாதறம்,** கன்னல் சர்க்கரை, sugar prepared from the juice of sugarcane.

**சோதனங்காய்,** சமுத்திராப்பழம், Indian oak — Barringtonia speciosa.

**சோதன கஷாயம்,** சுத்தஞ் செய்ய உபயோகிக்கும் குடிநீர், disinfecting decoction.

**சோதனகிருதம்,** சுத்தப்படுத்த பயன்படும் மருந்து நெய், disinfecting ghee.

**சோதன தைலம்,** சுத்திசெய்ய உபயோகிக்கும் மருந்து, எண்ணெய், disinfecting oil.

**சோதனத்திரவியம்,** சுத்தி செய்வதற்காகவுபயோகிக்கும் ஆமணக்கெண்ணெய், அத்திப்பால், ஆலம்பால் முதலியன, drugs used to remove the impurities from the body e. g. castor oil, milky juice of fig. milky juice of banian.

**சோதனப்பிரலேபனம்,** சுத்தி செய்யும் களிம்பு, disinfecting ointment.

**சோதனம்,** சுத்தி செய்தல், refining metals.

2. சோதித்தல், examining, investigating.

3. மலங்கழியச் செய்தல், giving enema.

4. பேதிக்குக் கொடுத்தல், giving purgative to cause evacuation of bowels.

5. துரிசி, blue vitriol, copper sulphate or copper acetate.

6. புடமிடல், *subjecting materials to* fire for purposes of purification.

7. வாந்தி அல்லது பேதியாகும்படி மருந்துக் கொடுத்து உடம்பினுள்ளடங்கிநிற்கும் மலங்களைக் களைந்து சுத்தப்படுத்தல், cleaning the body with purgatives and emetics so as to eliminate foul or offensive matter from the system.

8. உலோகங்களின் தரத்தைச் சோதித்தல், examining the purity of metals — assaying.

9. நாணயம் முதலியவைகளில் பொன் வெள்ளி எவ்வளவு இருக்கிறதென்று பரீட்சித்தல், determining the quantity of gold or silver in a coin or buillion.

10. பொன் மாற்றறிதல், assaying gold as regards its purity or fineness.

**சோதனவர்த்தி,** துணியைத் திரித்து மருந்தில் நனைத்து இரணத்தின் உட்புறத்தைச் சுத்திப்படுத்தவேண்டி இரத்திற்குள் நுழைக்கும் ஓர் வர்த்தி, a lint soaked or saturated with medicine and inserted into an ulcer or sinus for the purification of interior — Aseptic plug.

**சோதனை,** புடமிடுகை, calcination of metals or other medicines.

2. சோதித்தல், examination, testing.

3. ஆராய்ச்சி, investigation.

4. உலோகத்தின் உயர்வைச் சோதித்தல். see சோதனம்.

5. நூல் வழியாய்ச் சோதித்தல், scientific examination.

6. நோய்களைச் சோதித்தல், diagnosing the disease of any kind.

NOTE:—One who does not enter the very inner most part of a patient in order to arrive at a correct diagnosis can never treat the diseases properly.

**சோதனைகனம்,** நோய்களைச்சோதிக்கும் வகையில் உபயோகப்படுவதாக ஆயுள்வேதத்திற் கூறியுள்ள பொருள்கள், drugs used for investigation of diseases.

**சோதனை கொடுத்தல்,** நோயாளிகள் தம்மை சோதிக்க வேண்டி வைத்தியனிடத்தில் காண்பித்தல். submitting one self as a patient for diagnosis.

**சோதனைக்கம்பி,** பொன்மாற்றுகளை அறிவதற்காகக் கம்பிகள் அல்லது ஆணிகள், a bunch of touch nails for finding out the different standards in the fineness of gold, as carats. see ஆணிக்கோர்வை, 2. see சோதனையூசி.

**சோதனைக்கருவி,** சோதிப்பதற்கு உபயோகப்படும் ஆயுதங்கள், articles or instruments used while examining such as probe, specula, catheter, stethescope etc.

**சோதனைக்கல்,** உரைகல், touch stone

**சோதனைக்காரன்,** சோதிப்போன், one who examines or investigates into anything — Testor or examiner.

**சோதனைக்குரு,** See சோதனையுப்பு.

**சோதனைக்குழல்,** மருந்தை சோதிக்கவேண்டி உபயோகிக்கும் ஓர் கண்ணாடிக் குழாய். இது ஒரு பக்கம் அடைத்துள்ளது, a test tube for testing medicine or other chemicals.

**சோதனைக்கோல்,** இரண வைத்தியன் புண் புரை முதலியவைகளின் ஆழத்தைச்சோதிக்கவேண்டி உபயோகிக்கும் வெள்ளி அல்லது செம்பினாற் செய்தகுத்தூசி, surgeons instrument or needls or thin rod made of silver or copper usually for examining the depth of sinus — probe; 2. மாத்திரைக்கோல், measuring rod; 3. மாற்றுச் சோதிக்கும் ஆணி, gold wire or rod used for testing gold.

**சோதனைசெய்தல்,** பரீட்சித்தல், examination. 2. நாடி, மலம், மூத்திரம் முதலியவைகளைச் சோதித்தல், examination of pulse, feaces, urine, sputum etc., for purposes of diagnosing the disease.

**சோதனைச்சாலை,** தொழில் வகைகளிலும் வைத்திய முறையிலும் உபயோகிக்கப்படும் மருந்துகளை சோதிக்குமிடம், a building set a part for examining or testing medicine and other chemicals used in arts and industries.

**சோதனைத்திரி,** கருவையழிக்க உபயோகிக்கும் காரத்திரி, Corrosive lint used or inserted into the vagina of females for aborting the child or foetus in the womb.

**சோதனைநூல்,** மருந்துகளின் சோதனையைப் பற்றிக் கூறும் நூல், experimental science.

**சோதனைபண்ணுதல்,** பெண்ணின் கற்பைச் சோதித்தல், testing the virginity of a woman. 2 கருப்பத்தைச் சோதித்தல், determining the pregnancy of a woman. 3. கடவுள் ஒருவன் மனத்தைச் சோதித்தல், testing of men by God as regards his integrity or mental state in adversity.

**சோதனை பார்த்தல்,** see சோதனை பண்ணுதல்.

**சோதனைமை,** பூமிக்குள்ளிருக்கும் நிதிகளைச் சோதிக்கவேண்டி உபயோகிக்கும் சாலமை, a magic paint used as a collyrium for the eyes for ascertaining the hidden treasures. 2. வசியமை, a magic paint used for fascinating or captivating woman for illegal intercourse.

**சோதனையுப்பு,** வாத முறையில் இழிந்த உலோகங்களைப் பொன்னாக மாற்றும் வகையைச்சோதிக்க வுபயோகிக்கும் குருமருந்து, quintessence salt used in Alchemy for testing the transmution of metals into gold.

**சோதி,** கருப்பூரம், camphor; 2. சாதிலிங்கம், virmilion; 3. சூரியன், sun; 4. ஒளி, effulgence or divine light; 5. பூநாகம், earthworm; 6. கற்றாழை, aloes; 7. பரிசோதித்தல், examining; 8. பரீட்சை பார்த்தல், testing, experimenting; 9. சுத்தம்செய்தல், cleaning; 10. கர்ப்பூரவொளி, the light of lit camphor; 11. சத்தியுப்பு, an alkaline salt; 12 பிரகாசம், splendour; 13. வெளிச்சம், light, one of the five gross elements; 14. விளக்கம், mental illumination; 15. தேவர், யோகி முதலியோரிடமிருந்து வீசும் ஒளி, divine halo or effluvium emanating from the ethereal person of a god, a holy saint (yogi) and such other highly bright; 16. இரவெரிமரம், See சோதிவிருட்சம்; 17. முத்துச்சிப்பி, pearle oyster.

**சோதிக,** பிரகாசம், brilliancy.

**சோதிகம்,** வாலுளுவை, spindle tree — Celastrus paniculata.

**சோதிகலை,** சந்திரகலை, the vital air passing through the left nostril.

**சோதிகவாரி**, புளி நறளை, fox grape — Vitis cornosa.

**சோதிகாந்தம்**, சித்திரமூலம், Ceylon leadwort — Plumbagorosea.

**சோதிகாவிரணம்**, see சோதியில் விரணம்.

**சோதிக்குண்மணி**, முத்து, pearl.

**சோதிக்குருடு**, யோகநிலை அல்லது தியானத்திற் காணும் சோதியினால் அந்தச்சமயம் ஏற்படும் குருட்டுத்தனம், temporary blindness due to the seeing of Astrual light.

**சோதிசாஸ்திரம்**, வானநூல், astronomy. 2. சோதிடநூல், astrology.

**சோதிடசாஸ்திரம்**, சோதிடநூல், astrology.

**சோதிடபீடிதம்**, சோதிடநூல் பிரகாரம் ஒருவனை நோய்வந்தணுகுதல், சாதாரணமாக ஒருவனுக்குப் பிறக்கும் போது சனிமத்தியில் கேது இருந்தால் அவனுக்கு வாதபித்த ரோகம் சம்பவிக்கும்.

2. சந்திரன் செவ்வாயுடன் கலந்தால் அவனுக்கு இரத்த பித்தம், சுரம், அக்கினி மாந்தம் சம்பவிக்கும், 3, 6 வது வீட்டில் சந்திரன் சுக்கிரன் இருந்தாலும் அல்லது அவர்கள் பார்வை இருந்தாலும் குன்மம் தாக நோயுண்டாம்.

3. கர்க்கடகத்தில் சூரியனிலிருந்து புதனால் பார்க்கப்பட்டால் கபநோய் வாதநோய் பிறக்கும்.

4 குருவுடன் புதனிலிருந்து சூரியனால் பார்க்கப்பட்டால் குன்மம் சூலப்பிரமேகம் அசுமரிரோகம் உண்டாகும்.

5. பிறக்கும்போது சந்திரனுடன் பாபக் கிரகங்கள் சேர்ந்து இருந்து 7 வது வீட்டில் சனியிருந்தால் அவனுக்கு சுவாசம், சயம், குன்மம், பீலிகம் இவைகள் உண்டாகும்.

6. சூரியன் வீட்டில் புதன் இருந்தாலும் அல்லது சூரியன்கூடச் சேர்ந்திருந்தாலும் சந்திரன் வீட்டில் புதன் இருந்தாலும், குட்டம், சயம், பவுத்திரம், பாண்டு இவைகளுண்டாகும்

7. கர்க்கடகராசியில் சூரியனிருந்து சனியால் பார்க்கப்பட்டால் வாதரோகம் பிடிக்கும்.

8. சந்திரனிடத்தில் அங்காரகனிருந்தால் இரத்தபித்த ரோகம், பலவித கெட்ட நோய்களுண்டாம்.

9. பிறக்கும் போது சொந்த விடத்தில் (சுஷேத்திரம்) கொடிய கிரகங்கள் இருந்தாலும் குருசுஷேத்திரத்தில் கொடிய கிரகங்கள் கூடியிருந்தாலும் மாந்தாக்கினி நோயுண்டாகும்.

10. இலக்கினத்தின் 4வது வீட்டில் சனியிருந்தால் மார்பு நோய், பாலிய வியாதி, பக்கு பீடையுண்டாம்.

11. இலக்கினத்திற்கு 8 வது வீட்டில் வியாழன் இருந்தால் ஆமவாதரோகம் உண்டாகும்.

12. அங்காரகன் 8வது வீட்டில் சூரியனுடன் இருந்தால் தாகநோய், சுரம் இவைகள் உண்டாகும்.

13. இலக்கினத்திற்கு 8வது வீட்டில் சனி செவ்வாய் சூரியன் இருந்தால் பலவித நோய்களும் அபஸ்மாரம் உண்டாகும்.

14. இலக்கினத்திற்கு 7வது வீட்டில் சனி இராகுவுடன் கலந்திருந்தால் மூத்திரக் கிருச்சிராதி நோய்களுண்டாகும்.

15. கர்க்கடகத்தில் சூரியனிருந்து புதனால் பார்க்கப்பட்டால் குருடு, கபம், வாதரோகம் உண்டாகும்.

16. சனனகாலத்தில் செவ்வாய் சந்திரனுடன் கலந்தால் சுரம், அக்கினி மாந்தம் (உண்டாம்).

17. நீசக்ஷேத்திரத்தில் இருக்கும் சூரியன் திசை மத்தியில் க்ஷீணச் சந்திரன் திசையிலும் கண்கள் நாசமடையும். according to astrology the diseases are caused by the influence of planets and stars. The above is the list of diseases caused by the planets when they stand in certain positions.

**சோதிடம்**, வானநூல், astronomy. 2. நாடிநூல், astrology.

**சோதிஷ்மதி**, முடகற்றான், balloon vine, palsy curer — Cardio spermum halicacabum.

**சோதிஷாதி விதை**, வாலுளுவைவரிசி, seeds of spindle tree — Celastrus paniculata.

**சோதிதனம்**, வைடூரியம். நவமணிகளில் ஒன்று, cat's eye, one of the ninegems.

**சோதித்தல்**, நோயாளியைப் பரீட்சை செய்தல், examining a patient, 2. see சோதனை செய்தல்.

**சோதிநிகரம்**, அரசமரம், peepal tree — Ficus religiosa.

**சோதிநிமிளை**, அஞ்சனக்கல், sulphuret of antimony so called from its being used in works.

**சோதிநீச்சடம்,** முத்துச்சிப்பி, pearl oyster.

**சோதிநூல்,** see சோதிசாஸ்திரம்.

**சோதிநெறி,** கண்ணில் பல முளைகள் கிளம்பி மூன்றும் நாளில் மறைந்து, பிறகு நாளுக்கு நாள் கிளைத்து, கண் வெளுத்து இமையைச் சுற்றிலும் சதை வளர்ந்து, அதனால் கீழ் நோக்கிய பார்வையாகி மிக்க தலைவலி, நீர் வடிதல், பீளைகட்டல், பிடரிவலி, நடுவிழிக் குத்தல் முதலிய குணங்களைக் காட்டுமோர் கண்ணோய், a form of conjunctivitis attended with a number of granulations which disappear on the third day and reappear gradually giving rise to the following symptoms viz. whitish appearance of the eyes membraneous growth in the eye lids, down ward look, excessive head ache, mucopurulent discharge, pain in the nape and acute pain in the pupil.

**சோதிபூநாகம்,** சூடன், camphor.

**சோதிப்புல்,** இரவெரியும்புல், காந்திப்புல், தீப்புல் என்றும் பெயர், இது சதுரகிரி மலையில் சட்டைநாதர்குகையண்டை இருப்பதாகவும், இது 4 விரற்கடை உயரம் சிலைப்புல்லைப் போலவும் இருப்பதாகவும் சித்தர் நூல் கூறும். இதன் சமூலம் வாங்கிச் சம்புச் சூரணம் பண்ணி சித்த நூலின் முறைப்படி களஞ்சிப் பொடி விதம் ஏழு தினம் கொள்ள உடம்பு கல்தூணாகி அநேக சித்திகள் உண்டாகும். பாலிவிட இரத்தம் பாலாகும். (இராம தேவர்—500) அப்போது ஒரு கழஞ்சு சூதம் சேர்த்து 100 எரு முட்டையிற் புடமிட சூதம் கட்டிவிடும். பிறகு அதை செந்தூரமாக்கி வெள்ளியிற் கொடுக்க ஏமமாகும். இந்தப் பொன்னைப் பற்பமாக்கி நெய்யிற் குழப்பி புசித்துவர தேக சித்தியாகும். இது பார்வைக்கு மலைப்புல்லுப் போலும் சிறிது மஞ்சள் நிறமாயும் இருக்கும். இம் மூலிகையின் சாபத்தை நீக்கி சமூலத்துடன் பிடுங்கி வந்து இரவு தண்ணீரில் இட்டுப் பார்த்தால் தீபம்போல் பிரகாசிக்கும். இது பலவித கண்நோய்களை நிவர்த்திக்கும். அவையாவன — விழிகாசப்படலம், கருவிழிநோய், நீர்ப்பில்லம், பூசாந்திரம், ஊன் படலம், பூ வெண்புள்ளி முதலியன, luminous grass. It is known by different names as brilliant grass, fire grass, etc. According to Siddhars' science, it is said to be found in the top of Sathuragiri hills in Madurai district near the cave of Sattamuni. It is four inches in height much resembling சிலைப்புல் another species of grass. The entire plant is dried and reduced to powder which if taken as per method contemplated in Siddhar's science for seven days at the rate of 'kalanji' a day it invigorates the system, and promotes many miracalous powers. It is capable of curing many kinds of eye diseases viz: cataract, disease of the black of the eye, blepharitis. tubercle in the angles of the eye, fleshy cataract, and opacity of the lens.

NOTE:—Luminous plants which are not unlike this have been a source of strange legends in India and Afghanistan. There is a mountain called Sufed Koli in Afghanistan on which the Hindus believe that gold and silver exist. In spring time, the slopes are covered with bushes which at night from a distance seem to be on fire, yet when you are close to them there is no sign of flame.

The natives of Simla say that at night the mountains are illuminated by some magical herbs and this is believed to be a species of Dictamus, which grows plentifully here. The burning bush at kew is a handsome plant about 3 feet high with pink flowers, leaves are much like those of ash tree.

**சோதிப்பூநாகம்,** கற்பூரம், camphor.

**சோதிமணி,** முத்து, pearl.

**சோதிமண்டலம்,** ஒளி வட்டம் astral region halo of light.

**சோதிமயம்,** வாலுளுவை. see சோதிகம், 2. ஒளி வடிவு, body of light

**சோதிமயவேதி,** பூநாகம், earth worm.

**சோதிமரம்,**<br>**சோதிமா,** } see சோதிவிருட்சம்.

**சோதிமார்ச்சுண்ணம்,** see ஈரற்சுண்ணம்

**சோதிமாவொலிச்சம்,** தேக்கு, teak wood.

**சோதிமுனி,** இவர் பிரமரிஷி மைந்தன், சூரிய குலத்தில் மறவர்சாதிப்பெண்ணுக்கு பிறந்தவோர் சித்தர், இவர் மலைகுன்றின் குகைகளில் சென்று அவ்விடத்து கற்களை ஆராய்ந்து வைரக்கல் கண்டெடுத்தார், He is the son of Brhmarishi. He is a Siddhar.

**சோதிம்பம்.**
**சோதியம்.** } வாலுளுவை, spindle tree — Celastrus paniculata.

**சோதியட்சரம்.** குழந்தைகளுக்கு வாய்வெந்து நாக்கும் பல்லும் நிறமாறி முதுகும் வயிறும் எரிச்சல் கண்டு சுரத்துடன் வாந்தியும், கழிச்சலுமுண்டாகும் ஓர் நோய், a kind of stomatitis in children marked by inflammation of the mouth, discolouration of tongue and teeth, burning sensation in the stomach and on the back, fever and diarrhoea — Stomatitis scorbutica.

**சோதியில்விரணம்.** வெள்விழி கருவிழியெங்கும் பூவுண்டாகி, நீர் வடிந்து, கண் விழிக்க முடியாமல் கூச்ச மடைந்து நடுவிழியில் நண்டின் கண்ணைப் போல் சிறியதாய் துருத்திக் கொண்டிருக்கும் ஓர் கண்ணோய், protrusion of cornea caused by the cornea losing its transparency by the formation of cataract and projecting beyond the eye lid like carbs eye. It is marked by watery discharge, sensitiveness to light, in capa bility of opening the eyes etc.

**சோதியுட்சோதி,** பிரமை, இதுவே பூரணம் என்பது, இது எங்கும் நிறைந்தது, ஆகாயத்தைவிடச் சிறந்தது, மேன்மையான குணம் வாய்ந்தது, எல்லா வஸ்துவிலும் நிறைந்தது, எல்லா வஸ்துக்களுக்கும் மூலப் பிரகிருதியாயுள்ளது, இவ்வொளியானது வேண்டும் போது அவ்வஸ்துக்களை மறுபடியும் தோன்றச்செய்யும் சக்தி வாய்ந்தது, ஆகவே ஓர் உக்கிரான அறையைப் போன்றது, அண்டம் மாதிரியே இப்பிண்டமான மனித உடம்பிலும் இப்பூரணமேயிருந்து பூர்வக்கியானத்தையும் கொடுக்கும், இவ் வஸ்து ஒவ்வொரு அண்டங்களுக் கிடையேயும எப்படி நிறைந்திருக்கிறதோ அது போலவே பிண்டத்திலும் மூளையிலும் முள்ளந்தண்டிலும் நரம்பின் கண்ணறைகளிலும் மிகுதியாகப் பொருந்தியுள்ளது, இதனால் தான் இவ்வுலகத்தில் நிறைந்துள்ள பூரணத்தில் என்னென்ன மாறுதல்கள் உண்டாகின்றனவோ அவைகளை மனிதன் இருந்தபடியே தன்னுடம்பிலுள்ள பூரணத்தினால் தெரிந்து கொள்ள ஏதுவாகும், இது தான் ஞானதிருஷ்டி எனக்கருதப்படும், இவ்விதமான ஏதுவால்தான் உலகத்தில் நடக்கும் தூரச் செய்திகளை இருந்தபடியே தெரிந்து கொள்ளக் காரணமாகும், உலகத்திலிருக்கும் ஒவ்வொரு பிராணிகளின் நரம்பிலும், தாதுக்களிலும், புல் பூண்டுகளிலும் இச்சோதி விளங்குகிற தென்பதை நன்கு ஊகிக்கலாம், Astral light. It is same as Archaes. It is a universal and living ethereal element, still more ethereal and highly organised than the Akasa (ஆகாசம்). The former is universal and the latter only cosmic ie pertaining to the Solar system. It is at the same time an element of power containing the character of all things. It is the store house of memory for the great world (*Macrocosm*) *whose contents may* become rembo died and re-incarnated in objective forms, so also it is stone house of the little world ie. Microcosm of men from which he may recollect past events. It exists uniformly through-out interplanetary spaces, yet it is more dense and more active around certain objects on account of their molecular activities, especially around the brain and the spinal cord of the human beings. It is this aura around nervecells and nerve tubes by which a man is enabled to catch impressions made upon *the astral Aura of the Cosmos and there by* read in the astral light (Clairvoyancy). It forms the medium of transmission thought and without such a medium no thought can be transferred to a distance. Every living nerve has its astrol aura every mineral every plant or animal is made to shine by its light.

NOTE: According to the Mysteries of Magic written by Arthur Edward waite in the doctrines of Occult Force, the Astral light is the key of all dominian, the secret of all powers, the Universal glass of vissions the source of prophecy, glory, and the instrument of thaumaturgic art and of divination. It is the common medium of *dreams* and *visions*. The *absolute secret* of this direction has been possessed by certain men — it is the Great Magic Arcanum. All magic science consists in the knowledge of this secret.

It is this Astral light that preserves the images of all that has taken place in the past, the reflections of worlds gone by and analogical foreshadowings of world to come. It is by means of this light that statical visionaries place themselves in communication with all the worlds. So, Clairvoyants merely evoke the images of places in the Astral light and they do not actually travel to those places.

It is this light that Christians call as Holy Ghost.

**சோதியொளி,** *விஷ்ணுகாந்தி* a medicinal plant — Evolvulus alsinoides.

**சோதியொளிதீபம்,** தூதுவளை, three lobed night shade — *Solanum trilobatum.*

**சோதிரவிமாலி,** *அத்தினி சாதிப்பெண்,* one of the four classes of women divided according to lust.

**சோதிராத்திரி,** நடு இராத்திரி, mid-night

**சோதிரிஷித் தைலம்,** சகல வலிப்புகளுக்கும் (உபயோகப்படும்) ஓர் வகைத் தைலம் இதில் கடைச்சரக்குகளுடன் மூலிகைச்சாறு, பசு, வெள்ளாடு, சிறுபிள்ளை மூத்திரங்களும் வௌவால் கள்ளிக்காக்கை ஓணான் உடும்பு இவைகளின் இரத்தம் இறைச்சி ரசம் (soup) நல்ல பாம்பு கண்டம் முதலியவையும் சேரும், This is an oil useful for all kinds of convulsions. Some of its ingredients are blood of bat, coucal, chameleon water lizard, the soup of their flesh, flesh of snake, urine of cow, goat, infants and many *bazaar drugs*

**சோதிவிரணம்,** கண்ணின் கருவிழிக்கு மையத்தில் அமைந்த சோதிக்குக்காணும் ஓர் விரணநோய். ulceration in the central part or area of the retina attended with the affection of the vision. 2. கண்பூவிழுந்து, நீர் வடிதல், இதில் நண்டு விழிபோல் நடு விழி புடைக்கும், ulcer in the eye marked by watery discharge and protrusion of that part of the eye. It then looks like crab's eye.

**சோதிவிருட்சம்,** இரவெரி மரம், இதற்கு, சாளஞ்சோதி, நீலஞ்சோதி எனப்பல பெயர் களுண்டு. இது மலைகளின் உச்சியில் விளையும், இதில் சித்தர்கள் குடியிருப்பு என நூல்களிற் கூறப்படும், இரவில் நெருப்பு பற்றி எரிவது போலிருக்கும், நிலவில்லாத இராத்திரிகளில் இது சோதிமயமாகப் பிரகாசிக்கும், ஆகவேதான் இதற்கிப்பெயர் வாய்ந்ததுபோலும், இதன் இலை ஊமத்தை யிலைபோலிருக்கும், பூ நீல நிறம், இதை வெட்டினால் பால் சொரியும், இம்மூலிகை சாபம் நீக்க வேண்டி, சித்தர் நூல்களிற் கண்டபடி இம்மரத்திற்கு காப்புகட்டி மந்திரம் செபித்து, கணேசருக்குப் பூசை செய்து பிறகு சமூலம் கொண்டுவந்து ஒரு பாண்டத்திற்றள் போட்டு தைலம் வாங்கி இருப்புப்பாத்திரத்தில் பதனப்படுத்தி நோள் கொள்ள மூர்ச்சையாகி 7 ஆம் நாள் கண் விழிப்பான், பிறகு முறைப்படி பத்தியங் கொள்ள காயசித்தியாகும். இதன் வேர்த் தோலை உலர்த்திப் பொடி பண்ணி பசு நெய்யில் குழப்பி பரணையிலிட்டு 21 நாள் நெற்புடம் வைத்து பிறகு எடுத்து ஒரு மாவிடை கொண்டு 4 நாழிகை சென்றபின் ஆவின்பால் குடிக்க வேண்டும். இப்படி 30 நாள் கொள்ள காயசித்தியாகும், கவுனம் பாயலாம், a luminess tree in the dark like burning bush. It is known by several names as mentioned above. It is rarely found on top of mountains and is said to be frequented by Siddhars. It is conspicuous by its brilliance in dark moonless nights and hence this name. The leaves resemble those of datura, flowers bright blue, when wounded yields milky juice.

Before the parts of the tree are removed for use some religious Cermonies such as chanting of appropriate mantrams, method of worshipping God Ganesha etc., are to be strictly observed as per instructions laid down in Siddhar's works. Every part of it is then removed according to the required quantity and then the whole is put into a pot and oil is extracted there from and preserved in an iron vessel. If this oil is taken internally as per directions given in the said Siddhar's works for six days the man gets swooned and recovers consciousness on the next day. The diet prescribed in this case is also to be followed strictly with the result that the body is rejuvenated. The bark of its root powdered and mixed with an equal quanity of cow's ghee has to be preserved under the heap of paddy for twentyone days and then taken out for use. Taken internally for thirty days at the rate of 'Ma' weight every day it rejuvenates the system and enables one to fly even in the aerial regions.

**சோதிவிருட்சம்,** இது சதுரகிரி மலையிலுள்ளது, இதன் தூர் வெண்மையாயும், பூ கொன்றை புட்பம் போலவும், காய் கொன்றைக் காய் போலவும் இருக்கும்.

இருட்டுக்காலங்களில் மரத்தைப் பார்த்தால் மின்மினிப்பூச்சிகள் சூழ்ந்திருப்பது போல் தோன்றும், இம்மரத்தின் பச்சைப் பட்டையைச் சீவிக்கொண்டு வந்து கள்ளி எருமை விருட்சத்தின் பாலில் ஊறவைத்து எடுத்து சுத்தி செய்த கெந்தகத்தை நாலுக்கொன்று போட்டு 21 நாள் கள்ளி எருமை விருட்சத்தின் பாலை விட்டு அரைத்து மிளகுப் பிரமாணம் குளிகை செய்து நிழலில் உலர்த்தி தினமும் ஒரு குளிகை விதம் ஒருவாரம் சாப்பிட்டுவர காயசித்தியாகும். This grows in Sathuragiri hills. Its root is white, flowers and fruits look like those of cassia. During dark nights the tree seems to be surrounded by number of glow worms. The bark of this tree is soaked in the milk of Euphorbia and triturated adding ¼ its weight of purified sulphur and milk of Euphorbia for 21 days Then it is made into pills of papper size and dried in the shade. If eaten at the rate of a pill a day the body will be rejuvenated.

**சோதிவிழுதல்,** பிளவு ஏற்படல், being cracked or fissured.

**சோதை,** சங்கினி சாதிப்பெண், one of the four classes of women divided according to lust.

**சோத்தமா,** பனிப்பயிறு, dewgram — Phaseolus radiatus.

**சோத்தான்,** சாப்பாட்டுராமன், glutton.

**சோத்தி,** தூக்கம், sleep. 2. சோற்றுமயக்கம், drowsiness after meals. 3. சுழுத்தி, deep sleep; 4. நடுச்சாமம், midnight.

**சோத்தியம்,** கற்றாழை, aloes; 2. வாலுளுவை, spindle tree.

**சோத்திரக்கன்னி,** See நீலஞ்சோதி.

**சோத்திரம்,** காது, ear 2. பஞ்சேந்திரியங்களில் ஒன்று, one of the five sensory organs 3. கேள்வி, hearing.

**சோத்திராதிசதவாதம்,** செவிமுதலிய இந்திரியத்தானத்தில் பிரகோபித்தவாதம், exess of vitiated vadha humour affecting the sensary organs as ear etc.

**சோத்துக்கற்றாழை,** see சோற்றுக்கற்றாழை.

**சோத்துப்பு,** சோற்றுப்பு, common salt.

**சோநிசி,** மலைக்குகை, mountain cave.

**சோபகாரி,** பேயத்தி, devil's fig — Ficus hispida.

**சோபகுஞ்சி,** கருஞ்சீரகம், black cumin — Nigella sativa.

**சோபக் கழிச்சல்,** பலவீனம் களைப் போடு கூடிய கழிச்சல், diarrhoea followed by weakness and exhaustion.

**சோபக்கிராணி,** பலவீனம் சோர்வு, இவைகளையுண்டாக்கும் கழிச்சல், a chronic diarrhoea allended with weakness and exhaustion.

**சோபக்கினம்,** தாபிதத்தைத் தணிக்கும் பரிகாரம், a treatment having for its object the alleviation of swelling.

**சோபக்கினி,** நிலவேம்பு, ground neem — Justicia paniculata.

**சோபங்கொள்ளல்,** மூர்ச்சையடைதல், getting swooned or fainted.

**சோபசுரம்,** பலவீனம், தளர்ச்சி முதலியவைகளையுண்டாக்கும் சுரம், fever marked by weakness, fatigue and fainting. 2. சோபத்தையுண்டாக்கும் அகோரக்காய்ச்சல், high fever causing faintness or swooning — Hyperpyrexia.

**சோபநசினி,** இடதுகை, left hand.

**சோபநாசனி,** கழற்கொடி, bonduc creeper — Caesalpinea bonducella.

**சோபநாசினி,** see சோபாநாசினி.

**சோபநித்திரை,** அயர்ந்த தூக்கம், sound sleep; 2. மூர்ச்சையோடு கூடிய தூக்கம், sleep as a result of fainting; 3. மயக்குத் தூக்கம், hypnotic sleep; 4. சோம்பலினால் உறங்குதல், sleep through drowsiness; 5. நோயின் களைப்பினால் அடிக்கடி உண்டாகும் தூக்கம், sleep recurring after paroxysm in diseases — Paroxysmal sleep; 6. கலவி முடித்த பின் உண்டாகும் அயர்ந்த தூக்கம். deepsleep after sexual intercourse.

**சோபம்,** கள், toddy; 2. மூர்ச்சை, fainting; 3. களைப்பு, fatigue; 4. சோம்பல், drowiness, 5. சோகை, anemia; 6. ஒளி, lustre; 7. தளர்ச்சி, langour; 8. இரத்தத்தைக் குறைக்கும் நோய். disease causing blood lessness — Anaemia.

**சோபரோகம்** see சோகை.

**சோபலம்**, சோம்பு, anise seed — Illecium anisatum.

**சோபவரி**, சேரான் கொட்டை, வீக்கத்தைக் குறைப்பதால் இதற்கு இப்பெயர், dhoby's nut—Semecarpus anacardiun. It cures *swelling hence the name.*

**சோபந்தெளிதல்**, மூர்ச்சையினின்று தெளிதல், recovering from swoon.

**சோபனசினி**, இடது கை, left hand.

**சோபனம்**, தாமரை, lotus; 2. அழகு, beauty; 3. ருதுசாந்தி, nuptial.

**சோபன்**, கள், toddy, சோபத்தைபுண்டாக்குதலாலிப்பெயர்.

**சோபாஞ்சனம்**, முருங்கை, drumstrick tree — Phyregosperma moringa.

**சோபாட்சிபாகம்**, (சோபம்+அட்சிபாகம்)திரிதோஷத்திறுல் கண் வீக்கம், சிவப்பு, வலி, எரிச்சல், வெள்விழி அத்திப் பழம் போலிருத்தல், பிசுபிசுப்பான நீரொழுக்கும் உண்டாகும் ஓர் கண்ணேறய், an eye disease marked by swelling, reddness; pain, burning sensation etc.

**சோபாதிகம்**, வலியிருத்தல் போல் தோற்றுதல், to feel as if there is pain.

**சோபாநாசினி**, வீக்கம், கட்டி இவைகளைக் கரைக்கும் மருந்து, medicine or drug supposed to have the power to resolve swelling tumour etc — Discutient.

**சோபாரீரசம்**, கிராணி, வாதரோகம், சூலை, பாண்டு முதலிய நோய்களுக் கொடுக்கும் ஆ. வே. மருந்து, an Ayurvedic medicine given *for chronic diarrhoea, anemia, and* rheumatic affections.

**சோபாரோகம்**, விஷப்பாண்டு, dropsy.

**சோபாலிகை**, குடைமேற் குடைச்செடி, an unknown plant; 2 அடம்பு, hareleaf plant — Ipomea b i l o v a ; 3. வெண்ணொச்சி, *vitex negundo;* 4. சுவாலை, fire flame.

**சோபி**, மூர்ச்சையாதல், getting swooned; 2 நேர்வாளம், croton seed— Croton tigilium

**சோபிதம்**, see சோபை; 2. துலக்கம்; காந்தி, lustre.

**சோபிதவாளம்**, நேர்வாளம் see சோபி

**சோபித்தல்**, மூர்ச்சையாதல், see சோபி; 2. சுவர்ணையில்லாது கிடத்தல், being bereft of conciousness.

**சோபித்துக்கிடத்தல்**, மூர்ச்சையால் சுவர்ணையற்றுக்கிடத்தல், lying unconscious through fainting.

**சோபீசம்**, எலுமிச்சை, *lime fruit.*

**சோபை**, சோகை, dropsy with anemia; 2. வீக்கம், swelling; 3. பிரகாசம், brilliance; 4. அழகு, *beauty.*

**சோபைசுரம்**, கீல்களில் வீக்கம், மார்படைப்பு, வயிறுப்பிசம், வலி, மலபந்தம், சுரகுணம், இவைகளாலுண்டாகும் வீக்க சுரம், fever through anemia which is marked by constipation, bloating of the abdomen, swelling of the joints choking of the chest etc — Dengue fever.

**சோபைரோகக்கூட்டம்**, சோகை சம்பந்தமான நோய்கள், group of diseases relating to anemia.

**சோபோதரம்**, (சோபை+உதரம்) சோபையினுலேற்படும் வயிறு வீக்கம், swelling of abdomen due to anemia.

**சோபோதாபா**, பேய்க்குமட்டி, bitter apple— Citrullus colocynthis,

**சோப்**, see சோப்பு.

**சோப்சீனி**, கொழும்பு வேர், china root, columbo root—Cocculus palmatus; 2. பரங்கிச்சக்கை, (china root) Smilax Chinensis.

**சோப்பு**, அடி, blow; 2. சவர்க்காரம், soap.

**சோப்புதல்**, அடித்தல், beating; 2. சோற்வுறச் செய்தல், causing to faint.

**சோமகண்ணி**, பொன்னுங்கன்னி, golden verbesenia Illecebrum sessile.

**சோமகீடம்**, புழுக்களின் ஓர் வகை பேதம். one of the several groups of worms.

**சோமகுணம்**, குளிர்ச்சியான தன்மை, colling *nature.*

**சோமக்கொடி**, சோமலதை, soma plant. See சோமப் பூடு.

**சோமசக்கரம்**, பதினாறு இதழ்களையுடைய சக்கரம், It is the sixteen lobed gangtion, the seat of altruistic sentements and volitional control viz; *compassion,* patience, renunciation meditative ness, gravity, determination, magnanimity, gentliness etc.

**சோமசபன்னி**, குங்கிலியம், Indian damer resin — Shorea robusta.

**சோமசம்**, பால், milk.

**சோமசாரம்**, வெண்கருங்காலி, a white spieces of ebony; egg fruited ebony — Diospyros oocurpa; 2. ஓர்வகைசாரம். காடிகாரம், Silver nitrate — Lunar caustic.

**சோமசியா**, சிறு கல்லூரி, இது கல்லுப்பைக் கட்டும், an unidentified plant said to consolidate sea salt, see *கல்லூரி*.

**சோமசொரூபம்**, குளிர்ந்த சுபாவம், cooling nature

**சோமணம்**, மலங்கழித்துக் குதத்தைக்கழுவிச் சுத்தம் செய்தல், cleaning or washing the the posteriors after evacuation of bowels.

**சோமதனம்**, செம்மரம், coromendel red-wood — Soymida febrifuga.

**சோமதாரி**, இந்துப்பு, rocksalt.

**சோமநாதச்சுண்ணம்**, இரும்பைக்கொண்டு தயாரிக்கும் இரத்தசுத்திக்காகக் கொடுக்கும் ஓர்வகை மருந்து, an Ayurvedic preparation *of iron prescribed for impurities of blood.*

**சோமநாதப் பெருங்காயம்**, ஆதிகாலத்தில் கூர்ச்சர தேசத்திலிருக்கும் சோமநாதபுரத்தி லிருந்து இறக்குமதியாகும் ஓர்வகைப் பெருங்காயம், a kind of pure assafoetida imported from Somanath in Guzerat.

**சோமநாதரசம்**, மனோசிலையைச் சுத்தி செய்து பிறகு இரும்பு, அப்பிரகம், வெள்ளி இவை களைச் சேர்த்துப் புடமிட்டு எடுத்த ஆயுள் வேத மருந்து. இதைத் தேனிற் கலந்து நீரிழிவு, பெண் சம்பந்தமான மேகநோய்கள் இவைகளுக்குக் கொடுப்பதுண்டு, an Ayurvedic preparation given for diabetes and venerial diseases. Its ingredients are iron, mica, silver red orpiment etc.

**சோமநாதி**, See சோமநாதப் பெருங்காயம்.

**சோமநாயகம்**, வேலிப்பருத்தி, hedge cotton — Daemia extensa.

**சோமநோய்**, கர்ப்ப வெட்டை, இது பெண் களின் கருப்பையிலிருந்து பால்போலாவது, சீழ்போலாவது வெளிவரும் ஓர் வெண்ணிற மான ஒழுக்கு, இது நாளுக்குநாள் உடம்பை வெளுக்கச் செய்யும், இது பலவீனத்தாலும் இரத்தக் குறைவினாலு முண்டாகும், இது அதிசையோக முதலிய காரணங்களினால் கருப்பை கலங்கி, பெண்கள் உடம்பு முழுவதிலும் கெட்டநீர் பரவி, கடைசியாக யோனித் துவாரத்தில் சேர்ந்து ஒழுகிக் கொண்டிருக்கும், இதற்கு ஏலக்காய், இலவங்கப்பத்திரி சூரணித்து கள்ளுடன் கலந்து கொடுக்க குணமாகும், whites. It is a discharge of a whitish colour, sometime yellow or green, coming from the vagina or from the neck of the womb — cervix — or from with in the womb itself. *It is whitish in colour like milk or yellow* like pus, or viscid like mucous or more like white of egg. It gradually renders the patient anemic and so it is said to be caused by loss of blood in the system and weakness due to abnormal sexual intercourse causing congestion of the womb or the organs in the pelvis or displacement of the womb — Leucorrhoea. Powder mixture of cardamom and cinnamon leaf is said to cure this disease.

NOTE: It may also occur in children and *unmarried women but most frequently in* women who have borne children. Many women avoid consulting a doctor untill their health is seriously impaired. In some *cases, it is very abundant, in others it is* quite scanty, it may be without odour or with offensive smell.

**சோமபந்து**, ஆம்பல், water lily — Nymphaea lotus; 2. பெருங்காயம், assafoetida.

**சோமபானம்**, சோமரசம் குடித்தல், drink of Soma juice beverage.

**சோமப்பால்**, சோமச்செடியின் பால்போன்ற வெண்ணிறமான சாறு, இப்பாலின் குணம் மிக்க சிறந்ததாகக் கூறப்படும், ஏனெனில் இது மூப்புப் பிணி சாக்காடு இவைகளை அகற்றி நெடுநாள் அதாவது நூற்றுக் கணக்கான வருஷங்கள் வரை யௌவனத் தோடு இருக்கச் செய்யும், நெருப்பு, நீர், விஷம், ஆயுதம் முதலியவைகள் இவனை ஒன்றும் தாக்காது, the milky juice of soma plant. It is said to have great virtues. The extra ordinary properties of the exhilarating juice of the plant are that it prevents death and decay of the body, enables one to live for hundreds of years in full enjoyment of new youthful body and it is a proof against fire, water, poisons, weapon etc.

**சோமப்பிலனி**, நீரிழிவு, diabetes — Diabetes mellitus.

**சோமப்பூடு**, சோமலதை அல்லது கொடிக் கள்ளி, ஓர் கற்பமூலிகை, இதற்கு ஓஷதி ராஜன் என்றும் பெயர், இது 24 விதமெனக் கொள்ளப்படும். எல்லாவித பூடுகளிலும் பால்வரும். இப்பூடு இமயமலை, மகேந்திர மலை, மலையாதேசம், ஸ்ரீபர்வதம், விந்திய மலை ஆகிய இவ்விடங்களில் கிடைக்கும். ஆனால் மகான்கள் கண்ணுக்கு மாத்திரம் தோன்றும், இது தெய்வத்தன்மை பொருந்தியது. எல்லா மருந்துகளுக்கும் நாயகம் எனக்கருதப்படும், எவ்வகையைச் சேர்ந்த தாயினும் இம்மூலிகையில் 15 இலைகள் இருக்கும், சந்திரன் வளர்பிறை தேய்பிறைக்குத் தக்கவாறு தினம் ஒவ்வொரு இலையாக வளர்ந்தும், உதிர்ந்தும் வரும், பூரணச் சந்திரனாகிய பௌர்ணமி யன்று எல்லா இலைகளும் பொருந்தியிருக்கும், பிறகு நாளுக்கு நாள் உதிரும், இதினின்றுதான் சோமப்பால் எடுக்கப்படும், பூர்வத்தில் வடதேசத்து ஆரிய மக்கள் இப்பாலினின்று மது பானம் தயாரிப்பார்கள், இப்பாலைப் புளிக்கவைத்து அத்துடன் வாற்கோதுமை நெய் முதலியவைகளைச் சேர்த்து யாகம் செய்யும் காலத்தில் ரிஷிகள் சோமரச சாராயம் என இதைக்குடிப்பார்கள், அன்றியும் உணவுடன் மாட்டிறைச்சியும் சேர்த்து உண்பார்கள், சாமவேதத்தில் இது விஷயம் விரிவாகக் காணப்படும், இச்சோமரசத்தைத் தேவர்களும், மனிதர்களும் அமிர்தமாகக் கருதி உட்கொண்டதால் அவர்கள் காயத்தை நீடூழிகாலம் இருத்துவதுமல்லாமல் பலப்படுத்தும்; இதன் சாறு குடிக்க ஆனந்தமாகவிருக்கும், ஆகவே பிரயாணிகள் தங்கள் தாகத்தைத் தீர்த்துக் கொள்ள இதன் தளிர்களை உறிஞ்சுவார்கள், moon creeper, creeping milk hedge — Asclepias acida. It is a plant classified into twenty-four species. The milky juice is the general characteristic of all the some plants. It is a divine plant and is the lord of all the medicinal herbs and whatever may be the species, the plant is furnished with fifteen leaves which grow and fall with the waxing and waning of the moon. The maximum leaves will be found only on the night of the full moon then the leaves begin to decrease in number by one every day.

Among the ancient Aryans a fermented liquour was prepared by mixing its juice with barley and ghee, this wine was drunk at all the religious ceremonies especially during the performance of 'yakam' (sacrificial fire) and so was used as an intoxicant by the Rishis (Vashista and others), who in the very early age of Hinduism, combined it at their meals with leaf. A more detailed account of this wine will be found in Soma Vedam.

Devas and men considered this as a kind of amirtham (ambrosia) confering eternal life and vigour both on Gods and Men. The raw juice is so mild that travellers suck the tender shoots to allay their thirst. c. f. கொடிக்கள்ளி.

NOTE: In some books this Soma plant or at least one of the varieties is said to be கொடிக்கள்ளி, creeper kalli — Sarcostemma brevistigma, which is doubted very much for the reason that this kalli is a hedge plant very commonly found in South India and the structure and the properties assigned to the Soma plant are found in this species. It appears to belong to a quite different botanical group.

**சோமமணல்**, வெள்ளிமணல், sand containing silverore.

**சோமம்**, ஆட்டாங்கொடி, see சோமலதை, a kind of creeper (unidentified); 2. ஓர்கொடி, the moon plant — Asclepia, acida alias Sarcostemma viminalis, கொடிக்கள்ளி, milk hedge or Somam — Sarcostemma brevistigma: 3. கஞ்சி, liquid, rice (conjee). 4. அருவதா, rue, any fermented liquor; 5 கள், toddy.

NOTE :— It is doubted if this is a correct synoym. Further it is not known if this ஆட்டாங்கொடி, is the same as ஆட்டாங்கள்ளி, which is ordinary திருகுகள்ளி, tursting milk hedge — Euphorbia tortilis.

**சோமயோனி**, ஓர்வகைச் சந்தனம், a kind of sandal wood.

**சோமரசகுணம்**, The properties of the Soma juice. The juice of the plant is said to cause immortality and is a medicine for sick. The God who is in possession of it is said to clothe whatever is naked and to heal whatever is sick and through Him the blind sees, the lame walks abroad. The exhilarating and in vigourating action of Soma led to its being regarded as a divine drink that restores ever lasting life. Hence it is called Amirta — the immortal draught (allied to the Greek ambrosia). Soma is the stimulent which conferred immortality upon the Gods. Thus soma naturally has medicinal power also. M. Blavatsky says it to be the fruit of the tree of knowledge forbidden to Adam and Eve. It is the king of medicinal plant and as such is the real of cause of health and acts on diseases by its action on the phlegm of the body. The tree waxes and wanes like the moon and it is called as சோமலதை. The leaves grow with the moon and fall off with her and on the full moon it is adorned with 15 leaves and on the new moon it is shorn off all its leaves.

**சோமரசம்**, See சோம்பல்.

It is the juice of a milky climbing plant — Asclepias acida-extracted and fermented to form a beverage liked by the Gods. and priests. There are many hymns devoted in its name Gradually Soma was deified as a God, powerful and capable of healing disease and bestower of worldly fortunes. It became the gwardian of healing herbs or the moon plant, said to be produced on the Mujavat mountains.

The juice is described as sweet honied, pungent flavourous and exhilarating and calls forth ideas, It is said to confer immortality and to nourish the body. Some consider this plant to be of Semitra genia, while others think it to be Sarcostem a viminalis although the plant is identified as Asclepias acida.

It is said to have been brought by a falcon or by a bird from the sky or from a mountain where Varuna (வருணன்) husbanded it. A Gandharva is said to be its protector.

The soma plants are pressed by the stones and the juice flows through the woollen strainer into the wooden vats in which it is finally offered as a beverage to the Gods in a litter of grass.

**சோமராசி**, கார்போகவரிசி, seeds of hazel leaved psoralea — Psoralea corylifolia. 2. காட்டுச்சீரகம், purple fleabane — Vernonia anthelmentica

**சோமரிதம்**, தூதுவளை, three lobed night shade — Solanum trilobatum.

**சோமரீரசம்**, பெண்களின் சோமரோகத்திற்கு சாப்பிடும் ரசம்சேர்ந்த மருந்து, a mercurial preparation given for சோம ரோகம், a disease of women.

**சோமரோகம்**, see சோமநோய். 2. நீரிழிவு diabetes — Diabetes mellitus. See சோமப் பிணி. 3. பெண்களுக்கு வருமோர் நோய், அதிக புணர்ச்சியால் பெண்கள் உடம்பு க்ஷீணித்து யோனித்துவாரத்தின் வழியாய், வெண்ணிறமான விஷநீரும் மூத்திராதிசார மும் சேர்ந்து ஒழுகப்பெற்று மிக்க பலஹீ னத்தை உண்டாக்கும். இதற்கு ஏலக்காயும், இலவங்கப்பத்திரியும் சூரணித்துக்கொடுக்க நிவர்த்தியாகும், a disease of women marked by a white discharge through vagina. This is cured by taking the mixed powder of cardamon and cinnamon leaf.

**சோமலதை**, கொடிக்கள்ளி, creeping milk hedge. 2. See சோமப்பூடு.

**சோமவட்டம்**, அமிர்தம் சிந்தும் புருவமத்தி, the mystic centre between the eye brows from which nector is said to drip through the hole in the palate into the bucal cavity

**சோமவலகம்**, பார்ப்பை, which see. 2. சிந்தில். see சோமவல்லி.

**சோமவலக்கம்**, பெருங்குமிழ், Cashmere tree, white teak — Gmelina arborea—G. tomentosa.

**சோமவலக்கலம்**, வெண் கருங்காலி, See சோமசாரம்.

**சோமவல்கா**, பார்ப்பை, which see.

**சோமவல்லரி**, பொன்னாங்காணி, see சோம கண்ணி.

**சோமவல்லி,** சீந்தில், moon creeper — Menispermum cordifolium. 2. கார்போகவரிசி, see சோமராசி. 3. பாகல், bitter gourd. 4. ஓமை, which see.

**சோமவாலி,** பெருங்குமிழ், see சோமவலக்கம்

**சோமவிருட்சம்,** சிவகிரியின் மேலுள்ள ஓர் கற்ப விருட்சம், an unknown tree said to be found on the top of Sivagiri hills (Madurai or Tinnavelli Districts). It is useful in rejuvenation.

NOTE: It is not definitely known. 1. If this tree is the same as சோமப்பூடு soma plant which is also useful for rejuvenation; 2. If it is the same as சோதிவிருட்சம். Some writers and commentators go to the extent of stating that சோதி (tree of light) போதி (tree of knowledge) and Soma (tree of moon) are all one and the same and cannot be different although called by diffarent names.

**சோமவுலுக்கம்,** தேக்கு, teak wood — Tectona grandis.

**சோமனுசி.** See சோமநாதப் பெருங்காயம்.

**சோமனுப்பு,** இந்துப்பு, rock salt; 2. பச்சைக் கற்பூரம், crude camphor; 3. நீலபாஷாணம்; a kind of prepared arsenic.

**சோமனோய்,** (சோமன் + நோய்) see சோம நோய்.

**சோமன்,** அமுதம், nector. 2. கற்பூரம், camphor. 3. சிலேட்டுமம், phlegm (Charaka). 4. காற்று, wind. 5. தண்ணீர், water; 6. சவர்க்காரம், soap; 7. நீலபாஷாணம், a prepared arsenic; 8. வெள்ளிமணல், sand mixed with silverore; 9. சந்திரன், moon, 10. செம்பு, copper; 11. பச்சைக்கற்பூரம், crude camphor; 12. மலை mountain; 13. a sympol of mildness, contantment and satisfaction.

**சோமன்ரவிவன்னியானோன்,** சவர்க்காரம், soap.

**சோமாக்கியம்,** செந்தாமரை, red lotus. 2. செவ்வல்லி, red Indian waterlily.

**சோமாறுதல்,** ஒருத்தியைப் பலபேர் புணர்தல், several copulating a woman.

**சோமேஸ்வரரசம்,** சோமநாதரசத்தைப் போலவே தயாரித்து எடுத்த ஓர் ஆயுள்வேத மருந்து, இது பெண்கள் வெள்ளை ஒழுக்கு மற்றும் உண்டான பெண்களின் மேக ரோகத்திற்குக் கொடுக்கப்படும் மருந்து, an Ayurvedic medicine useful for white discharge of women. It is prepared in the same manner as Somanatharasam can be used for venereal diseases.

**சோமேதா,** see சோமதனம்.

**சோம்பரக்கு,** சோம்பை வாலையிலிட்டு இறக்கிய தீநீர், distilled liquid of anise seeds, see சோம்புதீநீர்.

**சோம்பரை,** சோம்பல், laziness, drowsiness.

**சோம்பலம்,** சேரான் கொட்டை, marking nut — Semicarpus anacordium.

**சோம்பல்,** see சோம்பு. 2. அலுப்பு, drowsiness; 3. மயக்கத்தைத்தரும் வைசூரி, smallpox causing stupor; 4. சேங்கொட்டை, marking nut, see சோம்பலம். 5. வாதகப தோஷம், தமோகுணம் இவற்றின் சம்பந்தத்தினாலுண்டாகும் மயக்கம், a lethargic state experienced as a result of the affection of morbid changes due to the combrination of deranged humours Vatha (wind) and Phlegm (Rapam) along with Tamas. (தமோ குணம்)

**சோம்பற்றழும்பு,** அம்மைத் தழும்பு, scar or pitted marks of smallpox.

**சோம்பாகம்,** பிள்ளைமருது, flowering murdah — Terminalia paniculata.

**சோம்பிப்போதல்,** வாடுதல், drooping whithering

**சோம்பு,** பெருஞ்சீரகம், இது சோம்புச் செடியின் விதை, இது வட இந்தியாவிலும் பாரசீகத்திலும் விசேஷமாகையால் அவ்விடங்களினின்று இறக்குமதியாகும், எல்லா கடைகளிலும் கிடைக்கக் கூடிய சரக்கு, இது பசுமை கலந்த மஞ்சள் நிறம், சிறுதித்திப்பு, காரவாசனையுள்ளது, இது மருந்திலும் கறி மசாலையிலும் சேரும், இது சீரகத்தைப் போல் வாசனை பொருந்தியது, மலத்தை இளகக் கூடியது. நீரை வடிக்கும் சீரண சத்தியையும், வியர்வையையும் முண்டாக்

கும், வயிற்றிற்கு நல்லது, யூனானி வைத்தியர்கள் இதைக் குழந்தைகளுக்கு அதிகமாகப் பிரயோகிப்பார்கள், இதினின்று புகைநீர் தயாரிக்கப்படும். மூத்திரத்தையும் வியர்வையையும் அதிகமாகச் சுரப்பிக்கும், வயிற்றுவலி வயிற்றுக் குமட்டலை நீக்கும், முலைப்பாலை அதிகமாகச் சுரப்பிக்கும், மூத்திரத்தைத் தெளியச் செய்யும். உதிரவாதத்தைப்போக்கும், இதன் கஷாயம் பெண்கள் கர்ப்பவலியை நீக்கும். இதைத் துவையலாகச்செய்து சுரசாந்திக்குக் கொடுக்கலாம் சநமநோய்களுக்கு இத்துடன் சர்க்கரை, கிராம்பு, உலர்ந்த புளி இவைகளைச் சூரணமாகச் செய்து உபயோகப்படுத்தலாம். இதன் சூரணம் வயிற்றுவலி, வயிற்றுப் பொருமல், வயிற்றுப்பிசம், சுரம், இருமல், பீநிசம், தும்மல், இவைகள் போகும். வாலையிலிட்டு வடித்த இதன் தைலம் மஞ்சளாயும் வாசனையாயும், தித்திப்பாயுமிருக்கும், இது வயிற்றில் உஷ்ணத்தைஉண்டாக்கி பசியை அதிகப்படுத்தி குன்மம் இவைகளைப் போக்கும், இத் தைலம் தலையில் பேன் பிடித்திருந்தால் போக்கும்.

இதன் பூ வாசனையாயிருக்கும், குழந்தைகளுக்குக் காணும் வயிற்றுவலி, வயிற்றுப் பொருமல், கக்கிருமல் இவற்றைப் போக்கும். இதை வாலையிலிட்டுத் தீநீர் இறக்கலாம். இது உடம்பிற்கு சூடு உண்டாக்கி உதரவாதத்தைப் போக்கும். anise seed — Pimpinella anisum—This is the seed of the plant Pimpinella. It is a well known herb cultivated abundantly in Northern India, and Persie and is Imported from those places to Southern India. It is a bazaar drug and so procurable in all the bazaars. It is green mixed with yellow auromatic, sweeatsh and warm tasted. It is useful in Medicine and an ingredient in the curry spices, it is a laxative diuretic, carminative and stomachic. it is frequently used by the hakeems for children. A liquid is distilled from this and is much used in colic and nausea. It is increases secretion of milk from the woman's breast and purifies the urine and cures rheumatisum arising from impurities of blood. A decoction of this seed is a good remedy in uterus complaints. Seeds are used in confectionery and chutney made of them are useful in fever, mixed with sugar, clove, and dried tamarind and pulverised, it forms a useful application for skin disease. The powder of this seed is employed with great advantage in colic, rumbling noise in the stomach, flatulence, fever, cough, catarrh of the nose, sneezing etc, Essential oil obtained by distilling seeds with water, is aromatic, yellow and slightly sweet, it is a stimulant, stomachic and digestive. When anointed in the head, it kills the louse. Its fragrant flowers are a good remedy for children's diseases such as colic, flatulence, whooping cough etc. Flowers can also be distilled and used as a stimulent. It cures all rheumatic complains arising from impurities of blood.

NOTE: Seeds are often confounded with sweet fennel seeds. It is also known as sweet cumin. It is chiefly imported from Persia it is the oldest of medicines and spices. Seeds allay griping of purgative medicine, hence such purgatives are usually given with their decoction.

**சோம்புச்சூரணம்,** இதை இடித்துச் சூரணம் செய்து சமன் சர்க்கரை கூட்டிச் சித்திரை முதல் ஆவணி வரை சாப்பிட அவ்வருட முழுமையும் நோய்வராது, if the powder of anise seeds mixed sugar is taken for four months from the middle of april one can remain healthy. from disease, for the next eight months.

**சோம்புதல்,** வாட்டங்கொள்ளல், withering as of a paralysed limb; 2. வாடுதல், drooping as of plants; 3. அறிவு குன்றல், being lethargic; 4. சோம்பலடைதல், becoming idle; 5. கெடுதல், being marred.

**சோம்புத்தீநீர்** பெருஞ் சீரகத்தை வாலையிலிட்டு இறக்கிய திரவகம், distilled liquid from anise seed. see சோம்பரக்கு.

**சோம்புத்தைலம்,** பெருஞ் சீரகத்தினின்று வடித்த எண்ணெய், essential oil obtained by distilling anise seeds with water — Oleum anise.

**சோம்பூசிகம்,** கருப்புமந்தாரை, black mountain ebony — Bauhimia genus.

**சோம்பேறி,** சுவர்ணபேதி, a mineral liquid capable of dissolving gold — Aquaregia. 2. சோம்பி, alazyman.

**சோம்பேறித்தனம்,** சோம்பல் குணம், sluggishness.

**சோயவபலம்,** மூங்கிற் குருத்து, shoots of bamboo tree — Bambuso arundinacea.

**சோயாஅவரை,** ஓர்வகை அவரை, Soyabean.

**சோயிக்கீரை,** சதகுப்பி, சோகிக்கீரை, which see,

**சோய்வு,** சோர்வு, fatigue.

**சோரகம்,** ஓர்புல், a kind of grass — Andropogon acicularis, benificial in insanity.

**சோரக்கதண்டு,** கருவண்டு, a kind of black bettle.

**சோரக்கறி,** சின்ன துவரை, small leaved ebony — Diospyros macrophylla.

**சோரக்குரு,** நாரிசுக்கிலம், semen of females. 2. பெண்ணின் முதல் ருதுவோடு ஆண் பெண் கூடுவதால் உண்டான விந்து நாதத்தையும் சேர்த்து சித்த நூலிற் சொன்ன பல கடைச்சரக்குகளையும் அத்துடன் சேர்த்து வெய்யிலில் வைத்து சூரியபுடத்தில் இறக்கியவோர் குருமருந்து, இது வேதைக்குதவும், to the first menustrual blood mixed with the combined semens obtained from the sexual intercourse of man and woman is added different ingredients — medicinal drugs — as contemplated in Siddhar's science and the whole product is exposed to the sun when the highest essence useful for alchemy is said to be obtained.

**சோரங்கபாஷாணம்,** ஓர் வைப்புப் பாஷாணம், a kind of prepared arsencial poison.

**சோரங்கொடுத்தல்,** பெண்ணைக் கூட்டிக் கொடுத்தல், offering, woman for the lust or the gratification of others — Pimping.

**சோரசத்துரு,** சவ்வீரம், அதாவது சோர பாஷாணத்தின் சத்துரு, sublimate of mercury which is an antidote to (சோர பாஷாணம்) a kind of prepared arsenic.

**சோரசெந்தூரி,** நாகதாளி, இது சோரபாஷாணத்தைச் செந்தூரிப்பதாலிப்பெயர், a plant of the convolvulus genus (unidentified) capable of calcining சோரபாஷாணம் (a kind of arsenic) into a red oxide.

NOTE;— நாகதாளி is not the prickly — pear plant as is given out by many authors.

**சோரத்தனம்,** வியபிசாரம், adultery.

**சோரத்திரீ,** விபசாரி, prostitute.

**சோரத்துவம்,** see சோரத்தனம்.

**சோரத்தேய்த்தல்,** எண்ணெய் அல்லது தைலம் மயிர்க்கால்களின் வழியாக சேரும்படி தேய்த்தல், rubbing an oil or medicinal oil or ointment so as to soak through the hair follicles.

**சோரத்தோய்த்தல்,** வாதமுறைப்படி மருந்துக்கட்டி அல்லது மருந்து முடிச்சி, உலோகக்கட்டி இவைகளைச் செயநீர் திராவகம் முதலியவற்றில் சோரும்படி பலமுறை அமிழ்த்தியெடுத்தல், (in Alchemy) dipping or immersing a mass or lump of medicine or a medicine tied up in a cloth or a piece of metal, into a synthetic pungent fluid known as Philosophers fluid or acid etc. several times so as to absorb the fluid and get soaked or saturate in it.

**சோரநாயகன்,** கள்ளப்புருஷன், paramour.

**சோரபத்திரி,** ஓர் சரக்கு, a drug — Myristica altenuata.

**சோரபாஷாணம்,** வைப்புப்பாஷாணம் 32ல் ஒன்று, one of the 32 kinds of prepared arsenic according to Tamil Siddha Medicine. இது நாகபாஷாணம் தயாரிக்கும்போது பாண்டத்தின் பக்கத்தில் நின்றது, It is a biproduct obtained while preparing Naga pazhanam.

**சோரபுட்பம்,** சங்கங்குப்பி, smooth volkameria — Clerodendron incrme.

**சோரபுட்பி,** See சோரபுட்பம்.

**சோரபேதி,** அஞ்சனபாஷாணம், a kind of native arsenic.

**சோரப்பார்வை,** புணர விருப்பங்கொள்ளும் பார்வை, amorous look — Ogling.

**சோரப் புணர்ச்சி,** கள்ளப் புணர்ச்சி, illicit intercourse.

**சோரமார்க்கம்,** வியபிசாரம், adultery.

**சோரம்,** see சோரபாஷாணம். 2. கோடாசுரி, which see; 3. நாகம், zinc; 4. மாதவிடாய், menstrual blood; 5. கற்பழித்தல் அல்லது வியபிசாரம், adultery.

**சோரம்போதல்,** கள்ளப்புணர்ச்சி செய்தல், commetting adultery.

**சோரல்,** சோர்தல், fainting.

**சோரன்,** ஆட்டுக்குட்டி, lamb, kid; 2. வெடியுப்பு, nitre. 3 சவ்வீரம், corrosive sublimate; 4. நாகம், zinc; 5. வியபிசரிப்பவன், adulterer.

**சோரன் கிழங்கு,** பூமிசருக்கரை கிழங்கு, ground sugar root.

**சோராக்கண் துடிப்பு,** கண்ணின் பாவைக் கடுத்துக் குத்தலுண்டாகி, இமைகனத்து, நீர்வடிந்து கிடைகொள்ளாமலும், தூக்கம் பிடிக்காமலும் அடிக்கடி கண் சிவந்து துன்புறுத்துமோர் கண்ணோய், an eye disease marked by irritation of the lens, boring pain swelling thickening of the eyelids, watery discharge, restlessness, sleeplessness, frequent inflammation of the eyes etc.

**சோராஞ்சனம்,** களவுபோன சொத்தைக் கண்டுபிடிக்கவும் பெண்களை வசியப்படுத்தவும் உபயோகிக்கும் ஓர் மாந்திரீகமை, a magic paint used for tracing stolen property and for captivating women.

**சோராபுட்பம்,** see சோராபுட்பம்.

**சோராவரி,** பலாத்காரம், out raging as on a woman's modesty.

**சோரி,** இரத்தம், blood. 2. மழை, rain; 3. சிறுசெருப்படை, a low spreading medicinal plant — Coldenia procumbens; 4. கொடிக்கள்ளி, creeper milkhedge — Sarcostemma brevistigma.

**சோரிக்கடுப்பு,** இரத்தக்கடுப்பு, irritation and pain while passing stools mixed with blood.

**சோரிக்கட்டி,** உடம்பின் கொதிப்பினால் கோடைகாலத்தில் எழும்பும் கட்டி, summer boils arising in several parts of the body; 2. இறுகின இரத்தம், clots of blood — Crassamentum.

**சோரிக்கட்டு,** சூதகக் கட்டு, suppression of menses — Amenorrhoea.

**சோரிநார்,** இரத்தம் உறைவதினால் இரத்த நீரிலுண்டாகும் நார் போன்ற ஓர் வஸ்து, a peculiar organic fibre like substance found in serous fluids of the body owing to congelation of blood — Fibrin; 2. இரத்தம் உறையும் காலத்தில் இரத்த நீரிலுண்டாகும் வஸ்து அதாவது வர்ண மற்ற திரவநீர், liquor sanguines.

**சோரிப்படர்த்தி,** வெள் விழியில் இரத்தம் குழம்பும்படி செந்நிற சதையை வளர்க்கச் செய்யுமோர் கண்ணோய், a disease of the eye marked by reddish growth of flesh in the sclerotic coat.

**சோரியிளநீர்,** இரத்த வர்ண செவ்விளநீர் இதனால் குடலிலுள்ள பூச்சி — பாம்புக் கிருமி, சன்னக் கிருமி (திமிர் பூச்சி) இவை போம் water of reddish tender cocoanut. When drunk, snake worms (round worms) minute worms (thread worms) in the intestine will be destroyed.

**சோரியோமம்,** சிவப்பு ஓமம், இது ஓர் கடைச் சரக்கு, a red variety of sison or bishops weed.

**சோரிவரி,** இரத்தப் படலம், அதாவது கருவிழியில் கடைக்கண் வரைக்கும் சிவப்பு வரி படர்ந்த ஓர் கண்ணோய், an eye disease characterised by red lines or streaks or cornea as wellas sclerolic coating of the eye.

**சோரிவிழல்,** இரத்த பீனசம், அதாவது மூக்கில் வரும் இரத்த வொழுக்கு, bleeding of the nose, epitaxis — Rhinorrhagia.

**சோருதல்,** see சோர்தல்.

**சோர்,** see சோர்தல்.

**சோர்கண் துடிப்பு,** விழிகடுப்பு, இமைக்குத்து வலி, தூக்கமின்மை, நீர்வடிதல் ஆகிய குணங்களுடன் கூடிய கண்ணோய், an eye disease characterised by irritating pain sleeplessness, and oozing of tears.

**சோர்ச்சி,** சோகம், to be depressed; 2. தளர்ச்சி, to feel weak.

**சோர்தல்,** தளர்தல், being exhausted; 2. மனந்தளர்தல், being depressed in mind; 3. மூர்ச்சித்தல், swooning; fainting; 4. கசிதல், oozingout, exuding; 5. வாடுதல், whithering; 6. மெலிதல், getting emaciated; 7. இறத்தல், dying; 8. தள்ளாடுதல், tottering through old age; 9. எண்ணெய், தைலம் இவைகள் உடம்பில்ஊருதல், absorbing of oil, medicated oil etc. in the body, when rubbed: 10. தடுமாறல், faltering in speech; 11. கண்ணீர் சோர்தல், shading tears; 12. அழிதல், to get destroyed 13. விழுதல், to fall; 14. துயர் உறுதல்; to be struck with grief.

**சோர்ந்தகால்கை**, உணர்ச்சியற்றுச் சோம்பிய கால்கை, whithered; atrophied or paralysed limbs.

**சோர்பதன்**, தளர்ந்த காலம், one's weak moments.

**சோர்பு**, see சோர்வு.

**சோர்பொழுது**, மாலைப் பொழுது, evening time.

**சோர்பௌவம்**, நறும்பிசின், fragrant resin.

**சோர்வடைதல்**, பலவீனத்தால் களைப்படைதல், getting exhasted through weakness.

**சோர்வாதம்**, கால் கை உணர்ச்சியற்று அயர்ச்சியையுண்டாக்கி விழச்செய்யுமோர் வாதநோய், paralysis causing loss of power in the limbs; 2. திமிர்வாதம், palsy.

**சோர்வு**, பலக்கேடு, palsy; 2. நரம்புத்தளர்ச்சி debility, nervous break down; 3. மறதி, forgetfulness; 4. அயர்ச்சி, faintness; 5. உணர்ச்சியின்மை, loss of sensation as from paralysis; 6. மெலிவு, weakness; 7. விபச்சாரம், debautchery.

**சோர்வுகாலம்**, மனவுறுதியற்ற காலம், weak moments; 2. பலவீனமாயிருக்கும் வேளை, time of weakness attending the body.

**சோலிக்காய்**, கற்றேக்கு, racemed fishbone tree — Dillenia bracteata.

**சோலை**, உலாவுவதற்காக, குளிர்ச்சியைத் தரும் பல மரம் செடிகள் வைத்துப் பயிராக்கிய தோட்டம், a park or a place of amusement or recreation consisting of several flower and fruit bearing plants and trees for rendering the place cool; 2. நந்தவனம் flower gerden; 3 மலை, mountain; 4. ஓர் பூடு, tetrameles nudiflora.

**சோலைகொடுக்காய்ப்புளி**, சோலைப்புளி, hill tamarind — Garcinia xanthochymus or G. morella; 2. மஞ்சள் நாங்க, obtuse rounded leaved xanthochymus, a kind gamboge — Garcinia spicata (ovalifolia).

**சோலைப்பாக்கு**, வங்காளா தேசத்தில் பயிராகும் செடி. இதன் பூ சமைத்து உண்ணப்படுகிறது. விதை பேதியாகும், It is grown in Bengel. Its acid and astrigent spadic is eaten in curry seeds are purgative — Artocarpos lakoocha.

**சோலைப்புளி**, இரேவற்சின்னி அல்லது கொழும்புப்பிசின். Ceylon gam boge or Siam gamboge, see சோலைக்கொடுக்காய்புளி

**சோலைமரம்**, see சவுக்குமரம்.

**சோலைவெண்தேக்கு**, சௌந்திரிகை looking glass plant of S. ghauts — Heriteira papilio.

**சோலைவேங்கை**, காட்டுச்சாதிக்காய், wild mace — Myristica malabarica.

**சோவன்னமில்பொறி**, பாதாள கருடன், common snake dogbane—Rauwolfia serpentina.

**சோவி**, பலகறை, cowry.

**சோவை**, சோகை, anaemia; 2. உடம்பின் நீர்கோவை அல்லது பாண்டு, dropsy.

**சோழகம்**, தென்றல், the gentle south wind.

**சோழங்க பாஷாணம்**, ஓர் வகை வைப்புப் பாஷாணம், a kind of prepared arsenic.

**சோழி**, பலகறை, cowrie. see சோகி.

**சோழிப்பல்**, பலகறையைப் போன்ற பல், tooth like cowry.

**சோழியப்பல்**, see சோழிப்பல்.

**சோளகாண்டம்**, நீர்க்கடம்பு, water cadamba, female cadamba — Stephygyne, parvifolia, Nauclea orientalis.

**சோளச்சாதம்**, சோளச்சோறு, food prepared from maize; 2. சோளக்கூழ், liquid food or puddings prepared from maize.

**சோளச்சொறி**, சோளக்கூழ் அதிகமாகக் குடிப்பதால் உடம்பில் ஏற்படும் சொறி சிரங்கு, a kind of skin disease due to the free use of maize as principal food — Pellagra — Zeisin or Zeismus.

**சோளச்சோறு**, சோளச்சாதம், boiled maize.

**சோளம்**, நாட்டுச்சோளம், இது கரும்பைப் போல் வருஷத்திற் கொருமுறை களிமண் நிலங்களில் பயிராகும், இது தென்னிந்தியாவில் சாதாரணமாய் எங்கும் விளையக் கூடியது, இது 8-10 அடி உயரம் வளரும். தண்டு நேராகவும் ஒவ்வொரு தாளிலும் கதிர்கள் விடும், ஒவ்வொரு கதிரும் மக்காசோளத்தைப்போல் நீண்டிருக்கும், ஆனால் அவ்வளவு செழிப்பாயிராது, சிலக்கதிர்கள் தலைப்பக்கம் மிகவும் கனதியுள்ளதால் கீழே விழாதபடி பக்கத்துச் செடியை உதவியாகச் சேர்த்துக் கட்டுவதுண்டு, இத்தானியம் மிகவும் கடினமானது, இதற்கும் மக்காச் சோளத்திற்கும் மிக்க வித்தியாசமுண்டு, இதன் விளைவு மழையை அனுசரித்தே நிற்கும், இது நட்டு 4-5 மாதத்திற்கெல்லாம் வெட்டிவிடலாம். நன்செய்நிலங்கள் பயிரிட

உதவாமற்போன காலத்து இதைப்பயிரிடலாம், இதன் கூடவே துவரையும் பச்சைப் பயறும் தெளிப்பதுண்டு, இது மேட்டுப் பூமியில் பயிரிடுவோர்களுக்குத் த ந் த உணவாகும், இதன் மாவை அடைதட்டலாம் இதைச் சுட்டும் தின்னலாம், இதைச் சில பாகங்களில் களியாகக்கிண் டி உப்பும் மிளகாய்த் தூளும் சேர்த்துச் சாப்பிடுவதுண்டு, இதன் இலையும் தட்டையும் மாடுகளுக்கு உணவாகக்கொடுப்பதுண்டு, இத் தானியத்தினின்று கஞ்சாம்தேசத்தில் மது பானம் இறக்குவார்கள். இது கமைச்சல், சொறிசிரங்கு இவைகளையுண்டாக்கும், இதில் அனேக வகைகள் உண்டு, அவை யாவன, Great Indian millet — Sorghum vulgaris alias Holcus saccharatus. It is an annual plant like sugarcane, commonly cultivated in South India in black loamy soil, 8-10 ft. culms erect. In each stalk will be found a dense head of spike lets bearing numerous corn grains, similar to Indian corn (மக்கா சோளம்) but it is not so strong in growth as the latter, the heads of some kinds are so heavy that three or four stems have to be tied together near the top for mutual support, the grains are very hard, little different from maize (மக்கா சோளம்) in chemical composition. The crop is mostly dependant on rain and it is cut after four or five months, the grain is separated from chaff by beating with a sticks and by winnowing fans. In places where the arid soil and the scorching influence of the sun are incongenial to the production of other grains, this millet can be most successfully cultivated. Red gram and green gram are often shown with it. It forms the principal article of food among agricultural classes in the table land, the meal is often made into cakes and the grains are parched and eaten. In some places it is made into a paste (களி) and eaten mixed with salt and chillies. It is useful to have the chatney (சட்டினி) made of gingelly seeds — seasame seeds or greengram sauce as a side dish. This will prevent to a certain extent the skin disease that usually occurs when this millet forms the principal or staple diet. An intoxicating drink called pachwye is made from this grain in Ganjam. Dry stalks and leaves are chopped into small bits and given to cattle as fooder.

1. சிவப்புச் சோளம் அல்லது செஞ் சோளம், red great millet — Holcus rubens.
2. வெள்ளைச் சோளம், white great millet — Andropogon sorgum.
3. கருப்புச்சோளம், black great millet. · Sorgum nigrum.
4. மஞ்சட்சோளம், yellow great millet.
5. மக்காச்சோளம், mecca great millet or Indian corn — Zeamays.
6. சீமைச் சோளம், maize — Mays-americana.
7. மப்புச்சோளம், hard maize causing indigestion — Holcus dona.
8. இறுக்குச்சோளம், sweet or sugar millet, American broom corn — Sorghum saccharatum.
9. முத்துச் சோளம், சோளம், Great millet — Sorghum vulgare.
10. காக்காய்ச்சோளம், crow cholam.
11. பேய்ச் சோளம், wild sage, wild cholam — Santana indica.
12. துலுக்கச் சோளம் Turk great millet — Zea altissima.

சோளம், மக்காச்சோளம், இது சோள வகைகளிற் சிறந்தது, இது தென்னிந்தியா, மத்திய இந்தியா, அமெரிக்கா முதலியவிடங்களில் விளையும். ஆனால், பஞ்சாப், அயோத்தி, ஐப்பான், சைனா, ஐரோப்பா, பெருவியா, மெக்ஸிகோ இவ்விடங்களில் விசேஷம், இது 4-5 அடி உயரம், அடிபாகத்தில் ஒன்று அல்லது பலகிளைகளுண்டு, இலைகள் அகலம்; தட்டை, ஒவ்வொரு தாளிலும் 4-5 அங்குல நீளமிருக்கும், இக்கதிர் மட்டைக்குள்ளிருக்கும், இத்தானியம் உருண்டையாயும், வாசனையற்றதாயும், உருசிக்கச் சப்பென் பென்றுமிருக்கும் பச்சைச் சோளம் காய்கறியோடு சேர்த்துப் பட்டாணியைப் போல் சமையல் செய்யலாம். இச்செடியைச் சர்க்கரை எடுப்பதற்கும் உபயோகிக்கலாம். முற்றிய விதையை நெருப்பில் சுட்டுத் தின்னலாம். இதன் நொய்யை மாவாகச் செய்து குழந்தைகளுக்கும் நோயாளிகளுக்கும் கொடுக்கலாம். இத் தானியத்தைப் பொரியாகப் பொரித்து சர்க்கரையுடன் கலந்தும் உண்ணலாம். பஞ்சாப், அயோத்தி; வடமேற்கு மாகாணங்களில் இச் சோளத்தை

அரிசிபோல் சமைத்தும் கூழாகக் காய்ச்சியும் உண்பதுண்டு. தென்னிந்தியாவில் இதைச் சமைத்துச் சாதமாகக்கொள்வார்கள்.

ஐரோப்பிய, அமெரிக்க தேசங்களில் நாகரீக மேம்பாட்டினுல் ஆடு, மாடு, கோழி, வாத்து முதலியவைகளுக்குத் தீனியாகப போடுவார்கள். இதன் புறவிதழ்களிலிருந்து ஜர்மனி, ஆஸ்திரியா, அங்கேரி இவ்விடங்காகிதம் செய்வார்கள்.

இச் சோளத்தின் மாவைக் களிப்போல் கிண்டி இரணங்களுக்கு வைத்துக் கட்டவும், கஞ்சியாகக் காய்ச்சி நோயாளிகளுக்கு கொடுக்கவும் உபயோகப்படும். இதை யூனானி வைத்தியர்கள் அதிக சத்துள்ள தென்றும் க்ஷயரோகத்திற்குச் சாப்பிட்டால் குணப்படுமென்றும் அவர்கள் அபிப்பிராயம் இக்கதிரில் தொங்கும் பட்டுக்குஞ்சம் போன்ற வஸ்துவைக் கஷாயமிட்டுக் கொடுக்க நீரடைப்பு, நீர்ச் சுருக்கு முதலான நோய்கள் குணப்படுமென ஆங்கிலேயரின் அபிப்பிராயம். இதன் தட்டையை எரித்த சாம்பலுடன்சோற்றுப்பை கலந்துகொடுக்க நெஞ்சு சளி, கக்குவான்; இருமல் முதலிய நோய்களுக்குச் சிறந்ததெனக் கொள்ளப்படும். Macca cholam, Indian corn, maize—Zea mays. It is the most superior among Indian corns. Although a native of South America. It is also cultivated in South India Central India and other places, but in Punjab, Oudh, Jappan, China, Europe, Peruvia, and Mexico it is abundantly obtained. The plant is 4-5 ft. high, the stem below is generally furnished with single or many sprerding branches in every stalk. Sheath 4 to 5 spathe form bears a dense head of closely packed grains 4-9 inches long, esclosed in a sheath. Grains are rounded, smooth inrdorous and insipitia. The greens cobs are gathered and cooked with vegetables like pea, plant is also employed in the manufacture of sugar, ripened grains are usually roasted infire and eaten, dried before a fire and ground into a meal for making porridge which being very nutritious, is given tochildren and convalescents. The grian is also fried and removing the husk, mixed with sugar and eaten In Panjab. Oudh and N. W. Provinces it is used as staple food by cooking it like rice or by boiling as a pop but in S. India. it is boiled and taken like rice.

In Europe and America owing to advanced civilization, it is condemmed for human consumption as food, but used for feeding poultry and cattle. In Germany, Austria and Hungary the outer sheaths are selected for the manufacture of paper. In medicine the meal is boiled into a paste and used as a poultice for wounds and the pap prepared with it may be taken adlibitum by patients. It is much esteemed by Hakeems — Unani doctors and is prescribed by them for consumption, being very nutritious. Decoction of the bunch of filaments enclosed in the cob is said to be a useful remedy in cases of stranguary and dysurea as opined by English doctors. The stalk burnt to ashes and mixed with the common salt is a useful remedy in cases of phlegm in the chest, whooping cough, simple cough etc. occurring in children.

NOTE:—This millet contains about 9 percent of nitrogenous matter and 70 percent of starch. The plant is very nutritious and it contains 6 to 7 percent of a yellowish fat. It also yields a fibroue material capable of being spun and woven like flax.

**சோளம்,** சங்கஞ்செடி, four spined monetia — Monetia barberioides.

**சோளன்,** see சோளம்; 2. மக்காச்சோளம், Indian corn — Zea mays.

**சோருக்கழிகிராணி,** உண்ட சாதம் செரியாமல் சோறு சோருய்க் கழியும் ஓர் வகைக் கிராணி, a kind of chronic diarrhoea in which food taken, simply finds its way in purging without being digested.

**சோருக்குதல்,** உணவு சமைத்தல், cooking food.

**சோருய்க்கழிதல்,** உண்டவுணவு செரியாமற் கழிதல், purging the food taken without thes ame being digested.

**சோறி**, see செந்தொட்டி.

**சோறு**, அன்னம், cooked rice; 2. கற்றுழைச் சோறு, aloe pulp; 3. பனை முதலிய வற்றின் சதைப்பற்று, pith in palms etc. 4. தாழைமடலின் உள்ளீடு, filaments as of the flower of screwpine; 5. பூஞ்சுண்ணம், soft portion of lime.

**சோறுகொல்லி**, அன்னபேதி, green vitriol; 2. அதிகமாகச் சாப்பிடுபவன், one who indulges in excess eating of rice etc.

**சோறுண் பருவம்**, குழந்தைகள் அன்னம் உண்ணத்தகுந்த காலம், period fit for taking rice.

**சோறுவகை**, பலவகையான சோறும் அதன் குணமும், அடியிற்கண்டவாறு, the different kinds of cooked rice with their characteristics as under :—

1. அசுசி சோறு, சுத்தமில்லாத அருவருப்பைத் தரும் சோறு அதாவது கல், மண், உமி, மயிர், கிருமி முதலியவைகளைச் சரியாக களையாது அவற்றுடன் சமைத்த சோறு, இதை உண்பதால் குமட்டல், அரோசகம், குன்மம், பேதியுண்டாகும், cooked rice prepared without properly removing the foreign bodies like small stones, husk, worms, hair etc., not cleanly cooked rice, this causes nausea, pain in the stomach and diarrhoea.

2. அதிகடுகை சோறு, அதிக சூடாயுள்ள சோறு, இதனை நித்தியமும் புசித்து வந்தால், இரத்த பித்தம், தாகம், பிரமை, மதரோகம் இவையுண்டாகும், if very hot cooked rice is eaten daily, it vitiates blood and bilious humour and causes blood to ooze out through skin, anus or nose, thirst and mental affections.

3. அற்ப கடுகை சோறு, கொஞ்சம் சூடாயுள்ளசோறு, இது உத்தமத்திலும் உத்தமம், சரீரத்துக்கு வன்மை தரும், வாதபித்த கபங்களினாலும் பீநசத்தினாலும் விளைகின்ற நோய்களையும், அரோசகத்தையும் போக்கும், cooked rice which is slightly hot or warm is the best for health, it cures nausea, anorexia and other diseases caused by each of the three humours.

4. உலர்ந்த சோறு, நீண்ட நேரம் திறந்து வைப்பதால், காற்றினால் ஆறி வரட்சியான சோறு, இதனால் விதுமாசீரண ரோகம் உண்டாகும், due to long exposure, the cooked rice gets dried up or parched and causes indigestion called vidumum.

5. ஊசிய சோறு, நீண்ட நேரம் மூடி வைத்திருப்பதால் நொந்து, நூலிழைந்த சோறு, இதைப் புசித்தால் உடனே தூக்கம் வரும். ஒவ்வொரு தோடமும் விருத்தியடையும், cooked rice by keeping in a closed vessel for a long time becomes moistened and sticky, this when consumed will at once cause drowsiness and sleep, each of the three humours will increase and get vitiated.

6. கட்டுசோறு, தயிர் அல்லது பக்குவப்படுத்திய எலுமிச்சம்பழச் சாறு, அல்லது பக்குவப் படுத்திய புளிச் சாறு அல்லது இவைபோன்ற ஒன்றுடன் கலந்து, இலையிலாவது தக்கப் பாத்திரத்திலாவது கட்டி முடிந்த சோறு, see கட்டமுது, இதை நித்தியமும் புசித்து வந்தால் தேகமுற்றிலும் குத்தல், சுக்கிலாஸ்மரி, இரைப்பு இருமல், கண்டமாலை, முதலியரோகங்கள் உண்டாகும், cooked rice mixed with curd or prepard lime fruit juice or prepared tamarind juice or one of such things and packed in leaves or proper vessel, this when consumed daily for a long period causes pricking pain all over the body, cancretion ( stone formation ) of semen, asthma, cough, glandular swelling etc.

7. காந்தல்சோறு, சமைக்கும் போது பானையில் போதுமான நீரில்லாததாலும் அதிக தீயாலும் பானையின் அடிபாகத்தில் தீய்ந்து போன சோறு, இது அசீரண ரோகத்தை யுண்டாக்கும். on account of excess of fire and want of sufficient water the cooked rice gets charred at the bottom of the vessel. The cooked rice causes indigestion.

8. குழைந்த சோறு, அதிகமாய் வெந்து, அளிந்த சோறு, வாதபிரமேகம், இருமல், அக்கினிமந்தம், துர்பலம், பீநசம் இவைகளை யுண்டாக்கும், over boiled rice, couses cough, loss of appetite, extreme loss of strength, diseases of the nose etc,

9. சுத்த சோறு, குற்றமில்லாது சமைத்த சோறு, இதைக் கீழ்கண்டவாறு சமைக்க வேண்டும், பழைய அரிசியைத் தவிடு, நொய், நெல், கல், மண், உமி, பூச்சி முதலியவைகளைப் போம்படி தீட்டி முழு அரிசியாக ஆய்ந்து எடுத்து, இள வெந்நீரால் கழுவி, சுத்த துணியிற் கொட்டி, சற்றே ஆறவைத்து, ஒரு பாண்டத்தில் அரிசிக்கு மூன்று பங்கு நீர்விட்டு அடுப்பேற்றி, அது நுரைக்கட்டிக் கொதிக்கும்போது, அந்த அரிசியை அதிற் போட்டு, முக்கால் பாகமாக வெந்தவுடன் கரண்டியால் துழாவி

வடித்துக்கொண்டு மறுபடியும் தணலில் வைத்துப் பக்குவமாயிருக்குஞ் சமயத்தில் இறக்கிக் கொள்வதாம். இந்த அன்னம் மூவிததேகிகளுக்கும் உதவும். இது பத்தியத்திற்கும் வாதகதி மூவித நோய்களுக்கும் ஆகும். அன்றியும் குடலைப்பற்றிய சகலநோய்களும் விலகும், clean cooked rice, it is prepared as follows: old rice is freed from broken rice paddy and foreign bodies. and is washed in clean lukewarm water and spread over a clean cloth. Water, three times the volume of rice is boiled in a suitable vessel. When boiling the rice is added. When the rice is three fourth cooked. stir it well with a paddle or long spoon, take it out from the oven and decant the liquid and again put the vessel over the oven on low fire, close the vessel with a plate, the rice gets fully cooked. Then remove the vessel and allow it to cool down. Rice must be served while it is warm. It is useful for the diseases of the stomach and intestines, and forms a good diet the sick and for all sorts of people

10. நட்டரிசிசோறு, வெளிபுறம் வெந்து நடுவில் வேகாது. அரிசியாக விருக்கும் நன்றாக சமையாத சோறு, இதனால் மலசலம் சிக்குவதுந்தவிர, அது மறுநாளும் செரிக்க மாட்டாது அன்னரசம் உடலில் பரவாது, cooked rice which is not properly and fully boiled. It can not get digested even the next day a.1d will bind the bowels and urine. The chyle (அன்னரசம்) formed from that food will not spre≥d properly in the body.

11. பச்சையரிசி சோறு, பச்சையரிசியைக் கொண்டு சமைத்த சோறு, பலத்தையும் குழந்தைகளுக்கு மாந்தத்தையும் உண்டாக்கும். பித்த கோபத்தையும் சிரீசரத்தையும் நீக்கும். இதில் வாயு வுண்டென்பர், cooked raw rice gives strength but causes indigestion in children. It alleviates bilious humour and burning sensation during micturition but creates wind.

12. பழஞ்சோறு, இரவில் நீருட்டிய சோறு, அந்நீராகாரத்துடன்; சூரியோதய காலத்தில் அருந்தில் சுக்கில விருத்தியும் உதாரக்னியும், சரீர முழுதும் தேஜசும் உண்டாம், பித்தவாத தொந்தம் நீங்கும். if fresh cooked rice is kept in water for one night. and taken at sun rise the next day along with the soaked water, it increases the semen, hunger and lustre of the skin. It alleviates the combined vitiation of wind and bilious humours.

NOTE: This water and rice get fermented if kept properly for a few days as stated in Tamil Medicine. If kept for six months, it becomes a perfect kadi.

13. பழய அரிசிசோறு, பழய அரிசியைக்கொண்டு சமைத்த சோறு. இது வேக நேரமாகும், ஆனால் சோறு அதிகமாக காணும். விருத்தர், பாலர் ரோகியர்களுக்குமாகும். பசியும குளிர்ச்சியுமாம். சிற்சில நோய்களும் கபமும் நீங்கும். cooked old rice, it takes a long time to get cooked, but the quantity of cooked rice will be more. It does good for all old, young and sick, cools the body and increases the arpetite, a few diseases and phlegm are alleviated.

14. புதிய அரிசி சோறு, அறுவடை செய்து ஆறு மாதங்கள் கூட ஆகாத அரிசியைக்கொண்டு சமைத்த சோறு, சீக்கிரத்தில் வெந்து குழைந்து கட்டி முட்டியாய்விடும் சோறு காணாது, குழைந்த சோறின் தன்மையைப் பெறும், new rice will get cooked very soon and invariably forms a sticky mass. Its qualities are similar to those of over boiled rice.

NOTE:--The new rice is the one got from the paddy that is not even six months old from the time of its harvest. The vitamin B contents of the paddy slowly spreads into the interior of the rice. as the time passes. One year old paddy rice is good. In the par-boiled rice the vitamin is spread all through the rice, even if it were to be new.

15. புழுங்கலரிசி சோறு, புழுங்கலரிசியைக் கொண்டு சமைத்த சோறு, இது வேக நேரமாகும் வாயுவும், உடல் வலியும் உண்டாகாது. நோயாளிகளுக்கு உதவும். ஆனால் பலம் தராது cooked par-boiled rice, does not create wind or pain it the body. It is good for the sick but gives no strength. It takes a long time to get cooked.

16. புளித்த சோறு, புளித்துப் மழுங்காடி சோறு, உஷ்ணமாம், நாளும் விருத்தியடைந்த பித்த கோபத்தைச் சாடும். வெளுத்தமலம், மந்தம், வாந்தி இவைகளை ஒழிக்கும், the fermental cooked rice increases the heat in the body, alleviates the increased bilious humour, cures vomiting, loss of appetite and white stools.

**சோறுவடித்தல்,** சமைத்த சோற்றிலிருந்து கஞ்சியை வடித்தல், straining conjee water from cooked rice.

**சோற்றப்பளம்,** திரிதோஷத்தை நீக்கும், கூழ்வடகம், cake or wafir prepared from cooked rice, capable of curing the derangement of all the three humours.

**சோற்றலகு,** வயிரமில்லாத பனை. pith of a palmyra tree.

**சோற்றவிழ்,** see சோற்றுப்பருக்கை.

**சோற்றி,** மரத்தினுட் சோறு, pith of a plant as opposed to மரவைரம், the solid or indurated portion—Medulla; 2. பாற்சோற்றி a plant with milky juice — Ruellia secunda; 3. வயிரமற்றது, that which does not passes the indurated centre core.

**சோற்றியற்ற,** குடலற்ற, சதைபற்றில்லாத, pithless.

**சோற்றிலை,** சோறு அடங்கிய இலை, அதாவது சோற்றுக் கற்றாழை, leaf containing pulp inside i. e. aloe or pulp aloe — Aloe vera.

**சோற்றிறக்கம்,** பசியுணர்ச்சி, appetite for food; 2. உணவு இறங்கல், அதாவது வயிற்றினுட் புகுதல், descent of victuals into the stomach.

**சோற்றுக்கட்டி,** உண்டைகட்டி, lump of cooked rice.

**சோற்றுக்கத்தலை,** ஓர் வகைக் கடல் கத்தலை மீன், a sea fish — Sciaena.

**சோற்றுக்களைப்பு,** பசியினால் ஏற்பட்ட களைப்பு, fainting through hunger.

**சோற்றுக்கற்றலை,** see சோற்றுக்கத்தலை.

**சோற்றுக்கற்றாழை,** நறுங்கற்றாழை, குமரி, கற்றாழை வகைகளில் செங்கற்றாழைக்கு அடுத்தபடி இதுதான் சிறந்தது, இதன் இலைகள் ஓரங்களில் முள்ளும், மிக்க சதைப் பற்றுமுள்ளவை. இது வைத்தியத்தில் உபயோகப்படும், இதனால் வாதமேகம், கப கோபம், கிருமிக் குத்தல், பெருவியாதி, மூலம், உன்மாதம், பகந்தரம், வயிற்றுநோய், தினவுள்ள பித்தக்கிரிச்சுரம் போம், இதன் உட்சோறு உடம்புக்கு மிக்க குளிர்ச்சி, ஆகவே இதை எங்கும் வைத்துப் பயிராக்குவார்கள், ஆனால் தென்னிந்தியாவில் விசேஷமாய்க் காணலாம், இதன் உட்சோற்றை எடுத்து நன்றாய்க் கழுவிச் சற்கரையிட்டுச் சாப்பிட உடம்பின் வெப்பம் தீரும், உடம்பு எரிச்சல் நீங்கும், மூத்திரஎரிச்சலையும் குணப்படுத்தும், இதினின்று தைலம் இறக்கி தினப்படி கொஞ்சம் அருந்த வெட்டைச்சூடு தணியும், உடம்பு பருக்கும்; மலச்சிக்கல் நீங்கும், சிறுஅளவில் வயிற்றுக்கு வலிவைக் கொடுக்கும், பெருமளவில் பேதியாகும், சூதகத்தை வெளிப்படுத்தும், குழந்தைகளின் வயிற்றுப் பூச்சிக்கு நல்லது, கண்ணுக்கு வைத்துக்கட்ட கண்சிவப்பை வாங்கும், கூந்தலுக்கிட மயிர் வளரும், சோற்றைச் சமையல் செய்து கொடுக்க மூலம் குணமாகும், இதன் சாற்றை அழற்சிக்குப்பூசலாம், இதைக் குளிர்ந்த தண்ணீரில் சுத்திசெய்து பொறித்தபடி காரத்தைக் கலந்து கொடுக்க சன்னியைக் கேட்கும், புத்தியை அதிகரிக்கும். அயகாந்தம், மண்டூரம் இவைகளைச் செந்தூரமாக்கும், இக் கற்றாழையில் கடுக்காய்த்தூள் தூவ நீராய் விடும், பஞ்சகாலத்தில் இதன் சோற்றை ஆகாரமாக உட்கொள்ளுவார்கள், common thick leaved Indian aloes — Aloe indica alias Aloe vera. It is a common indigenous plant and is next to red aloes in importance, leaves are thorn edged and thick. It is highly useful in Tamil Medicine and is an excellent remedy in venereal affections, aggravated form of phlegmatic diseases, affections through germs, leprosy, piles, giddiness and bilious affections. The ghee — like pulp has a cooling effect, leaves soft pale, green crossed with lines of spot. So, this plant is cultivated through out India but extensively in S. India. The pulp of the leaves taken out washed properly and taken mixed with sugar is said to remove bodily heat, burning sensation and difficulty in passing urine. Oil prepared from this and taken in small quantities daily forms an excellant remedy against venereal heat, it tones the system and removes constipation. In small doses, it is a stomachic, tonic and in large doses, a purgative and an emmenagogue. It is a favourite remedy for intestinal worms in children, it is externally applied in various affections of the eye such as catarrhal and purulent ophthalmia, used as a hair dye to stimulate hair growth. A sweet confection of the pulp is a cure for

piles. The juice of the leaves is applied to inflammations. The pulp washed in cold water and mixed with a little burnt alum is used with great advantage for persons predisposed to apoplexy, it improves intellect. Iron magnet, iron dross are easily reduced into red oxide by this pulp. The pulp becomes a liquid, when powdered gall nut is sactered over it and as such it is used in Tamil Medicine. Pulp of the leaves and the seeds are eaten in famine.

**சோற்றுக்குவீங்கி,** வயிற்றுக்கு இல்லாமல் ஏங்கி இருப்பவன், one who is craving for food.

**சோற்றுக்குழி,** உண்டவுணவு போய் விழும் குழிப்பை, இரைப்பை, stomach which is a membraneous sac or receptacle for receiving the food taken in.

**சோற்றுக்கை,** வலது கை, right hand.

**சோற்றுத்துருத்தி,** சோறு நிறைந்த காற்றுப்பை, அதாவது உடம்பு, human body, as a blowing machine filled with cooked rice or food.

**சோற்றுத்தூக்கம்,** வயிறு நிரம்ப புசித்தலினாலேற்படும் தூக்கம், sleep induced or prevailed upon as a result of eating stomachful or from overeating.

**சோற்றுநித்திரை,** see சோற்றுத்தூக்கம்.

**சோற்றுப்பக்கரை,** சாப்பாட்டு ராமன், glutton

**சோற்றுப்பக்கா,** சோற்றுப்பை, stomach.

**சோற்றுப்பக்காளி,** மிதமிஞ்சிப்புசிப்போன், one who indulges to exess in eating and drinking.

**சோற்றுப்பசை,** சோற்றை அரைத்த பசை, rice paste.

**சோற்றுப்பதம்,** காய்கள் பழுக்கத்தக்க பருவம், ripening state of fruits; 2. சோறு வெந்த நிலைமை, the stage at which the rice is sufficiently boiled.

**சோற்றுப்பருக்கை,** வெந்த சாதம், cooked rice.

**சோற்றுப்பற்று,** பானையின் அடியில் பற்றி நிற்கும் சோறு, the scorched cooked rice adhering; to the bottom of the pot from over heating; 2. பாத்திரத்தில் ஒட்டிக் கொண்டிருக்கும் சாதம், cooked rice sticking to the sides of the vessel.

**சோற்றுப்பனை,** வைரமில்லாத பனைமரம், pithy palmyra, palmyra which has not yet formed the hard solid part.

**சோற்றுப்பானை,** சோறுக்கும் பானை, cooking pot; 2. பெருவயிறு, pot belly.

**சோற்றுப்பு,** உணவிலிடும் உப்பு, கறியுப்பு, கடலுப்பு — see உப்பு, common salt used in food. இதனால் உடம்பில் கசிவுதோன்றி வியர்வையில் கக்கும், அமுரியிலே இறங்கி வெளிப்படும், நரையுண்டாம், this is excreated through perspiration and urine. This causes grey hair.

**சோற்றுப்பை,** வயிறு, stomach; 2. இரைப்பை, receptacle for food.

**சோற்றுப்பொதி,** கட்டுசோறு, food bundled up for use in journey.

**சோற்றுமயக்கம்,** உண்டபிறகு ஏற்படும் உறக்கம், drowsiness caused immediately after midday meals.

**சோற்றுமரம்,** இளமரம், a young tree; 2. வைரம்பாயாத மரம், pithy tree — a tree the stem and branches of which are not hardened.

**சோற்றுருவி,** உடல் body.

**சோற்றுறக்கம்,** சோற்று மயக்கம், which see.

**சோனகங்கெளுத்தி,** ஓர் வகை ஆற்றுக் கெளுத்தி மீன், a kind of river macrone fish — Macrones punctatus.

**சோனகத்திருக்கை,** கடலில் வாழும் ஓர் வகைத் திருக்கை மீன், இதன் முதுகு மஞ்சட் பழுப்பு நிறமும், அடிவயிறு வெண்ணிறமும் வாய்ந்தது, இது வயதுக்குத் தக்கபடி நிறம் மாறும், 13 அடி நீளமும், 5 அடி அகலமும் உள்ளது, உடம்பைவிட வால் பக்கம் 4 - 5 மடங்கு நீளமுள்ளது. வயது முதிர்ந்தது கரும்புள்ளிகள் வாய்ந்திருக்கும் இது கடலில் துள்ளிப்பாய்வது நன்றாகத் தெரியும். கழியில் அகப்படுவது முதிராத மீன், tiger tenkey, English ray — Trygon warnak. It is yellowish brown on the back

**தங்கபற்பி**, தங்கத்தைப் பற்பமாகச் செய்யும் மூலிகை அல்லது மருந்துகள். drugs or medicines capable of converting gold into oxide. vide page 907.

**தங்கப்பாரை**, கன்னப்பாரை என்னும் நீல நிறமான ஓர் கடல் மீன், உடம்பு கோழி முட்டை வடிவம், கீழ் வாய் நீளம், சிதல்கள் தலைப்பக்கத்திலும் உடம்பின் பக்கமும் 104 சிதல்களும் வால் உடம்பின் பாகத்திய அளவுக்குச் சரியாகவும் அமைந்திருக்கும். நீளம் சுமார் 20 அங்குலம் Cobbler fish — Caranx armatus alias C. ciliaris. Body oval, long lower jaw, scales few on the back of head, round the eyes and in cheeks lateral line consists of 104 scales. Its tail is as long as its body, length is about 20 inches. 2. சிறு கன்னப்பாரை, இது சுமார் 8 அங்குல நீளம் small horse mackerel about 8 inches long — Carank kulla; 3. சாம்பல் நிறமான ஓர் வகைப்பாறை மீன், இதற்கு பக்கங்களில் சுமார் 140 சிதல்கள் உண்டு. அனேக கரும் புள்ளிகள் வாய்ந்தது, gray puuray — Caranx nigrescens. Its lateral line consists of 140 scales, colour dusky grayish with innumerable black spots.

**தங்கப்பாளம்**, தங்கக்கட்டி, ingot of gold.

**தங்கப்பிரமி**, வாதவித்தை, alchemy.

**தங்கப்புரை**, பொன்முலாம், gold gilt, electro plated gold.

**தங்கப்பூச்சு**, பொன்முலாம். see தங்கப்புரை.

**தங்கமலாம்**, see தங்கமுலாம், தங்கப்பூச்சு.

**தங்கமாவாரை**, பொன்னுவாரை, tanner's bark, plant yielding yellow flowers — Cassia auriculata.

**தங்கமானிசியம்**, கரும்பு, sugar cane.

**தங்கமித்துரு**, தங்க சத்துரு சரக்குகள் நீங்கலாக மற்ற உபரச, கார, சாரசரக்குகள் தங்கத்தின் மித்துரு சரக்குகளாம், all other drugs except those that are enemical to gold are its friendly drugs.

**தங்கமிருதியாதி**, தங்கச் செந்தூரம், red oxide of gold; 2. தங்கபற்பம், per oxide of gold

**தங்கமேனி**, பொன்மயமான உடம்பு, gold coloured body.

**தங்கமூலிகை**, see தங்கச்சத்துமூலி.

**தங்கம்**, உயர்ந்த பொன், 10½ மாற்றுப்பசும் பொன், pure gold of 24 carats. இது இரு வகைப்படும் 1. பிறவி அல்லது இயற்கைத் தங்கம். 2, செயற்கை தங்கம். It is of two varieties. 1. natural. 2. artificial; 3. சூரியகாந்தம், sun flower.

**தங்கம்செம்பாக்கி**, பொன்னை செம்புநிறம் போல் சிவப்பாக்கும் செங்கத்தாரிப்பூச்சாறு the juice of செங்கத்தாரி flowers capable of turning the yellow colour of gold into red see தங்க செம்பி page 914.

**தங்கரசக்கலவை**, தங்கமும், பாதரசமும் சேர்ந்த ஓர் வகை இரசாயனக் கலப்பு, a chemical compound of gold and mercury.

**தங்கரசிதக்களங்கு**, பொன், வெள்ளி இவை களினின்று கொங்கணவர் வாதமுறைப் படி தயாரிக்கும் ஓர் அபூர்வ மருந்து, a rare preparation made according to the process laid down in Konganava's work on Alchemy with gold and silver as it chief ingredients.

**தங்கரவிப்பொடி**, பொன் இராவிய பொடி gold filings, gold dust.

**தங்கரளி**, See தங்கலரி.

**தங்கராசிகம்**, மஞ்சள் அந்தி மல்லிகை, 4 o' clock plant with yellow flowers — Mirabilis jalappa.

**தங்கரேக்கு**, உயர்ந்த பொன்னிலடித்த மெல்லியதகடு, thin foils or sheets of refined gold.

**தங்கரேக்கு**, தங்கத்தாலடித்த பொன் தகடு, gold leaf.

**தங்கலரி**, காசியலரிப்பூ, இதன் பால் துன் மாமிசத்தைக் கரைக்கும், excle oleander — Tecoma stans; its milk juice erodes over growth.

**தங்கல்**, See தங்குதல்.

**தங்காரி**, ஓர் பூடு, a plant — Physalis peruviana.

**தங்கான்**, அரை, half.

**தங்குதண்ணீர்**, தேக்கமுற்றநீர், நிலைநீர், stagnant water as in ditches, pits, tanks, wells etc.

**தங்குதல்**, வெளி வராது நிற்றல், தடைபடல், being obstructed as the menses.

2. படிதல், adhering as filth between the teeth.

3. இருப்பாயிருத்தல், being in deposit as retained urine.

4. அடியிற் படிதல், settling at the bottom as sediment.

5. நிலைபெறுதல், as கருத்தங்கல், being firmly fixed as retaining pregnancy without abortion.

**தங்குபிண்டம்,** பெண்கள் கருப்பிணியாயி ருக்குங் காலத்திற் கூடத்தவருது மாத விடாய் ஆவதினுல் அதிர்ச்சி கண்டு சுருங் கிக்காணும் பிண்டம், foetus reduced in size and rendered feeble owing to discharge of usual menses during the time of pregnance — See சுப்திபிண்டம்.

**தங்குமூச்சு,** மரணகாலத்தில் தடைப்பட்டு நின்று நின்று வரும் மூச்சு, last gasps of a dying person with inter mittance.

**தங்கை,** குவளை, indian water lily — Pontederia; 2. கருங்குவளை, blue nelumbo — Pontederia vaginalis.

**தங்கைச்சி,** See தங்கை; 2. கருங்குவளை, blue nelumbo — Pontederia Vaginalis.

**தங்கையைக் கொல்லி,** சிறியா ணங்கை, small species of milk wort — Polygala genus.

**தசகம்,** தசம், பத்து; ten.

**தசகரம்,** பகல் நித்திரை, day sleep; 2. காமம், lust.

**தச,** See தசம்.

**தசகாரியம்,** கைவல்யமாகுங் காலத்தில் ஆன்மா அடையும் பத்துவித அனுபவ நிலை கள், அவையாவன; The ten spiritual experiences of the soul on its way towards realisation or final deliverance viz : — (In Saiva Philosophy).

A. 1. தத்துவரூபம் — உண்மை வடிவம், true figure.

2. தத்துவ தரிசனம் — ஞானக் காட்சி, real vision.

3. தத்துவசுத்தி — தத்துவங்களின் பரிசுத்தம், purity of the constituent parts of the body.

4. ஆன்ம தரிசனம் — ஆத்தும நிலையறிதல், spiritual experience of the soul.

5. ஆன்மரூபம்—the true nature of the soul.

6. ஆன்மசுத்தி—பரிசுத்த நிலைமை, purification of the self.

7. சிவ தரிசனம் — appearance of God Siva.

8. சிவபோகம் —

9. சிவ யோகம்—a kind of yoga practice.

10. சிவராஜயோகம் — a kind of yoga practice.

B. (In Advita Philosophy)

1. மாயாரூபம், deceptive figure.

2. மாயாதரிசனம், deceptive appearance, illusion of Maya.

3. மாயாசுத்தி, purification from the effects of Maya.

4. சீவரூபம், form of life or the soul.

5. சீவதரிசனம், vision of the soul (individual).

6. சீவசுத்தி.

7. பிரமரூபம், form of the universal soul.

8. பிரமதரிசனம், vision or appearnce of the universal soul.

9. தேககைவல்யம்.

10. விதேககைவல்யம்.

**தசகுணம்,** பதின்மடங்கு, ten times.

**தசதீட்சை,** மாந்திரிக நூலிற் சொல்லியுள்ள சத்தி தீட்சை சிவதீட்சை, இது சாதாரண மாக, பிராணயாமம் செய்வதற்கு முன்ன தாகவே உடம்மைப் பலப்படுத்த வேண்டி ஓதப்பட்ட மந்திர வெழுத்துகள், (in Mantric Philosophy) the mystic letters chanted for purposes of invigorating the ten parts of the human system before siting up for practising Pranayama (yogic breathing exercise)

2. பூநீருப்பை,பத்துத்தடவை கரைத்தும், காயவைத்தும் அல்லது காய்ச்சியும் தெளி விறுத்தும் உப்பைச் சுத்தி செய்தல், (In Alchemy) purifying or cleaning the fuller's earth. It is disolved in pure rain water, filtered and kept in the hot sun for evaporation. The resulting salt is again dissolved in rain water, filtered and evaporated as before. Thus it is repeated ten times. This salt is used in Alchemy.

**தசதீட்சை,** ஞானிகள் தேகசித்தியாவதற்குச் செய்யவேண்டிய பத்துவிதசுத்தி முறைகள்

1. உரோமத் துவாரங்கள் வழியாகக் கெட்ட நீர்கள் வியர்வையாகக் கழியும்படி செய்தல், Sages to rejuvenate the body and to prolong the life they adopted ten methods to purify their bodies. They are I. through perspiration bad water in the body is got rid off.

2. முத்தோஷமாகிய வாத, பித்த, சிலேட்டுமதோஷங்களை நீக்குதல், keeping the three humours in balance.

3. பழைய கெட்ட இரத்தங்களைக் கசியச்செய்தல், letting out the blood.

4. சர்ப்பம் தோலுரிப்பதுபோல் உடம்பில் சட்டை கழற்றல், getting skin pealed off just as the snake peals off its skin.

5. சட்டை கழன்றபின் உடம்பு செந்நிறமாதல், உரோமம் கருக்கும், பஞ்சமூர்த்திகள் வசமாவர், After the pealing of the skin the body glows red, the hair becomes black and the five dieties will appear.

6. சுழிமுனை வாசல் திறந்து தூரதிருஷ்டி வசமாதல், Suzhimunai opens and person can see objects which are very far off.

7. உடம்பு சோதிரூபமாகி, தீபம்போல் பிரகாசித்தல், body becomes lustrous and glour.

8. உடம்பை உயரத்தூக்கி இலகிரியாதல், கூடுவிட்டுக் கூடுபாய்தல், the soul passes from one body to other.

9. யோகம் ஞானம் விளங்கி, உடம்பு சூரியபிரகாசமாகி அஷ்டமா சித்தியடைந்து தேவர்கள் ஏவல் புரிதல், the body shines like sun and obtains the eight psychic Divine miraculous powers and the devas will serve him.

10. உடம்பைவெட்ட கத்தி ஓடி ஊடாடும் சொரூப சித்தியடைதல்; நரை, திரை, மூப்புப்பிணி இவைகளைத் தவிர்த்தல், காற்று ரூபமாக விளங்கும் திருமேனி உடையவராவர், மரணமில்லை, there is no old age or its symptoms and no death and the body becomes ethereal.

**தசநரம்பு**, see தசநாடி.

**தசநாடி**, உடம்பிலுள்ள அடியிற்கண்ட பத்து வகை நாடிகள், இதுவே உயிருக்கு ஆதாரமாக உள்ளவைகள், உடம்பில் பத்துவிடங்களில் வியாபித்து பஞ்சேந்திரியங்களின் போக்குகளை அறியக்கூடிய தூல நாடிகள், ( In Eastern physiology ) the ten nerves or arteries of the human system forming the principal channals of vital spirit. They are:

1. இடைகலை, the vital air passing through the left nostril.

2. பிங்கலை, the vital air passing through the right nostril.

3. சுழிமுனை, the nerve that passes through the 6 regions of the body.

4. காந்தாரி அல்லது இடக்கணி, the nerve that extends from the nevel to the throat.

5. அத்தி அல்லது வலக்கணி.

6. சங்கினி அல்லது தலைச்சி, the artery that rises from the heart and terminates in the anus.

7. அலம்புடை அல்லது நாக்கி, tubular vessel extending from anal region to the temples.

8. புருஷன், the nerve situated in the region of the ears forming the auditory nerves.

9. குருவன். குறிச்சி, a tubular vessel seated in the umbelicus and extending to the pudendum.

10. சிங்குவை, nerve in the region of tongue.

**தசநாதம்**, சங்கு, conch.

**தசநாதம்**, மானிட சரீரத்தில் அந்தர்முக நோக்குடையவர்களுக்கு விளங்கும் பத்துவித நாதம் அல்லது ஓசைகள், அவை, the ten sounds heard by those who have the *sight. The sound are those of,*

1. மணி, bell.
2. கடல், sea.
3. யானை, elephant.
4. குழல், flut.
5. மேகம், clouds thunder.
6. வண்டு, bees.
7. தும்பி.
8. வளை, conch.
9. பேரிகை, big drum.
10. யாழ், veena like instrument.

**தசநோற்பவம்**, பல் முளைத்தல், dentition; 2. குழந்தைகளுக்கு பல்முளைக்கும் போது சுரம், பேதி, இசிவு முதலிய குணங்களைக் காட்டுமோர் நோய், a disease of common in children during their dentition period ( the cutting of teeth in infancy ) and marked by fever, purging or diarrhoea convulsions etc.

**தசபாஷாணம்**, பத்துவகைப் பாஷாணம், the ten kinds of arsenics or mineral poisons.

**தசப்பொருத்தம்,** பத்துவித மணப்பொருத்தம்; (In Astrology) the ten points of agreements in the horoscopes of the bride and bride groom.

**தசமச்சபாஷாணம்,** கச்சால பாஷாணம், a kind of arsenic.

**தசமபாகம்,** பத்திலொரு பங்கு, 1/10 of a share — Tithe or Tythe; 2. நாடிசோதிடத்திலோர் பகுதி, a portion of Nadi Astrology.

**தசமன்,** ஆன்மா, soul.

**தசமா,** நிர்ணயிக்கப்பட்ட மனித ஆயுள் 100 வருடத்தின் இறுதி பாகம், the 10th and the last stage of the prescribed human life (from 91 to 100 years)

**தசமாசியம், பத்துமாதக் குழந்தை,** full term foetus, 10 months foetus.

**தசமித்திரம்,** பத்துவகைத் துணைச் சரக்குகள் அவையாவன: The ten friendly drugs viz; 1. வெண்ணெய், butter; 2. வெங்காரம், borax; 3. குன்றி, jeweller's bead; 4. வெல்லம், jaggery; 5. ஆமணக்கு, castor seed; 6. பழம், lime fruit; 7. தேன், honey; 8. அளி, sweet liquor; 9. காடி, fermented liquor, vinegar; 10. புறவின் எச்சம், doves excreta.

**தசமுகவுதயாக்கினி,** சுரத்திற்காகக்கொடுக்கும் ஓர் ஆயுள்வேத மருந்து, an Ayurvedic medicine prescribed for fevers.

**தசமூத்திரகம்,** மிருகங்களின் மூத்திரம், the urine of the animals; 1. யானை, elephant; 2. எருமை, buffalo; 3. ஒட்டகம் camel; 4. வெள்ளாடு, goat; 5. குதிரை horse; 6. கழுதை, ass; 7. பசு, cow; 8. மனிதன், human.

**தசமூலக்கஷாயம்,** பத்து வகை மருந்துவேரை கொண்டு தயாரிக்கும் கஷாயம், decoction prepared from the roots of ten plants. see தசமூலம்.

**தசமூலக்கிருதம்,** தசமூலத்தால் செய்யப்படும் நெய், ghee prepared with the roots of 10 plants as chief ingredients.

**தசமூலம்,** பத்துவகை மருந்துவேர்கள்; அவை யாவன: வில்வம், பெருங்குமிழ், ஆனை நெருஞ்சில், முன்னை, சிறு மல்லிகை, சிறு வழுதுணம், கத்திரி, பாதிரி, பெருவாகை, தழுதாழை.

1. கண்டங்கத்திரி, prickly nightshade—Solanum xanthocarpum.
2. சிறுவழுதுணை, little brinjal.
3. சிறுமல்லி, small species of jasmin.
4. பெருமல்லி, large species of jasmin.
5. நெரிஞ்சி, small caltrope — Tribulus terristri.
6. வில்வம், bael tree — Aegle marmelos.
7. பெருங்குமிழ், large species of குமிழ் which see.
8. தழுதாழை, clerodendron phlomoides.
9. பாதிரி, trumpet flower tree — Stereospermum suavelolens.
10. வாகை, serissa — Mimosa flexuosa (alias) M. Sirisha.

NOTE: These drugs check all the three humours the mucous secretion digest food and cures fever, with asthama, cough and other supervening symptoms.

10 மூலிகை:

1. வாகை.
2. முல்லை.
3. பாதிரி.
4. நெருஞ்சி.
5. பேராமுட்டி.
6. கூவிளம்.
7. சிற்றாமுட்டி.
8. சிறுவழுதுணை.
9. கண்டங்கத்திரி.
10. குமிழ்.

1. கதிர்நெல்லி.
2. சோதிவிருட்சம்.
3. கருங்கொடிவேலி.
4. கல்தாமரை.
5. கருத்ததாழை.
6. பொற்சீந்தில்.
7. கருநீலி.
8. சொர்ணத்திராய்.
9. முண்டகம்.
10. சாயாவிருட்சம்.

"வில்வம் பெருங்குமிழ் மென்னெரிஞ்சில் முன்னையிரு
மல்லிசிறிய வழுதுணைவேர் — நலலகண்டங்;
கத்திரிபுன் காகிபெரு வாகையிவை வன்னேயைக
குத்தந் தசமூலங்கூறு."

—(மச்சமுனி 800).

**தசமைக்கண்ணி,** பொன்னாங்கண்ணி. sessile plant — Illecibrum sessile.

**தசரம்,** இரத்தம், அன்னரசம் முதலியவைகள் ஓடும் குழாய், vessels carrying blood, lymph etc. in the system of animals.

**தசராத்திரம்,** பத்து நாள், ten days.

**தசவாயு,** உடம்பில் தங்கி நிற்கும் உயிருக்கு ஆதாரமாகவுள்ள பத்து வாயுக்கள். அவை யாவன; the ten vital airs farming the main stay of life, operating in the human system viz:

1. அபானன் அல்லது மலக்கால, wind from the anus prevailing in the pelvis.
2. உதானன் or ஒலிக்கால், one of vital airs which rises from the naval by way of the throat passes into the head and causes speech and promoted digestion and prevails in the thorar.
3. வியானன் or செயற்கால், vital air which prevails over the entire body.
4. சமானன் or செரிகால், one of vital airs which is essential for digestion prevailing in the abdomen.
5. நாகன் or வாந்திக்கால் the vital air supposed to assish in extending and contracting the body and in speaking.
6. கூர்மன் or விழிக்கால், the vital air which causes horripilation and winking.
7. கிருகரன் or தும்மிக்கால், that which assists the digestive process and causes anger sneezing and heat.
8. தேவதத்தன் அல்லது கொட்டாவிக் கால், the one which is exhaled during yawning.
9. பிராணன் or உயிர்க்கால், the one responsible for the action of the heart and lungs in breathing and prevails in the chest.
10. தனஞ்சயன் or வீங்குகால், the one supposed to remain after death causing the body to swell and escape through the sutureo of the skull.

**தசவாயுக்கள்,** தசவாயுக்கள் கையின் 5 விரல்களில் தங்கி நிற்கும் 10 வித வாயுக்கள், the 10 vital airs found to prevail in the five fingers viz:

1. பெருவிரல், பிராணன் — அபானன், thumb. Pranan & Apanan.
2. சுட்டுவிரல், உதானன் — வியானன், fore finger uthanan and viyanan.
3. மத்திமவிரல், கூர்மன் — நாகன், middle finger kurman and nagan.
4. மோதிர விரல், சமானன் — கிருதரன், ring finger samanan and kirutharan.
5. சுண்டுவிரல், தேவிதத்தன்—தனஞ்சயன், little finger devathathan and Danancheyan.

**தசனபதம்,** பற்குறி, teeth mark, bite.

**தசனபீசம்,** மாதளை. pomegranate.

**தசனப்பொடி,** பற்களை கருப்பாக்கி வலுவடையச் செய்யுமோர் பற்பொடி, அதாவது தாசிஞுப்பொடி, a tooth powder rendering the teeth black and strong. It is a black mineral powder.

**தசனம்,** பல், tooth.

**தசனரம்,** பற்கொதி, inflammation of tooth, — Odontitis.

**தசனவாசம்,** உதடு, lip.

**தசனவுரு,** பல்வலி, tooth ache.

**தசஞுஞ்சு,** பல்லை மூடிக்கொண்டிருக்கும் மினுமினுப்பான ஓர் வைரவஸ்து, enamel of tooth.

**தசஞுத்தியம்,** புளியாரை. sore sorrel — Oxalis corniculata.

**தசனோச்சிட்டம்,** சும்பனம், licking each others genetals; 2. குறியை முத்தமிடல், kissing the organ from excessive love.

**தசனோற்பவம்,** பல்முளைத்தல், teething. dentition.

**தசா,** கிரகத்தைப் பொறுத்த விதிப்பயன், the fate of man as depending on the position of planets.

**தசாங்கம்,** பத்துவித வாசனைப் பொடிகளால் கலக்கப்பட்ட ஓர் தூபப்பொடி, an incense prepared by mixing togather 10 kinds of fragrant substances: 2. உடம்பின் 10 உறுப்புகளினின்று பிறக்கும் மேகநோய், a kind of veneral disease emanating from the affection of 10 organs in the human system.

**தசாண்டக்கூறு,** ஐந்துவித பறப்பினமாகிய கருடன், கோழி, மயில், குருவி, காக்கை இவைகளின் முட்டைகளும், ஊர்வனவாகிய உடும்பு, அளுங்கு, ஆமை, முதலை, பாம்பு இவைகளின் முட்டைகளும் ஆக இருபத்து முட்டைகளைக் கொண்டு தயாரிக்கும் தைலம் அல்லது மெழுகு, இது வேதையில் மிக்க சுவர்ணத்தைக் கொடுக்த மெனக் கருதப்படுகிறது, a medicated oil or wax like preparation made from the eggs of 5 birds such as bramini kite, fowl, peacock, sparrow and crow and those of reptiles such as guana, biwalve fish, tortoise, alligator and snake, It is considered that the product so obtained is greatly useful in lending or promting the colour gold.

**தாசாண்டம்,** மயில், கருடன், அடைக்கலங் குருவி, செம்போத்து, அளுங்கு, உடும்பு, முதலை முதலியவைகளின் 10 வித முட்டை, the eggs of 10 different kind of birds and reptiles — Peacock, bramani kite, Indian house sparrow, shall fish, guana, alligator etc.

**தசாமிசம்,** பத்திலொருபங்கு, a teenth part.

**தசார்த்தம்,** இறந்தபின் உடம்பு, ஐந்து பூதங்களாகப் பிரிந்து போதல், the dissolution of the body into five elements. The rosolution of the body into its constituent elements after death.

**தசிர,** இரத்தவோட்ட நாளங்களுக்குரிய, pertaining to the vessels or tubes of animals and plants — Vascularity.

**தசிரகம்,** இரத்தநாளங்கள், tubes or vessels of circulatary system.

**தசிரத்துவம்,** நாளங்கள் மூலியமாய் ஏற்படும் இரத்தவோட்டம், circulation of blood through the tuber and vessels of animals or plants — Vascularity.

**தசிரம்,** உடம்பிலே இரத்தமும், அன்னரசமும் முதலியவைகள் செல்லுங்குழல், the tubes or vessels carrying blood or lymph for circulation; 2. உட்டுளை, hollowness.

**தசிவேர்,** தவசுமுருங்கை, a medicinal plant with roundish small leaves — Justicia tranqubariensis alias J parvifolra; 2. புண்ணுக்குப்பூண்டு, a prostate plant.

**தசுமம்,** நெருப்பு, fire.

**தசும்பு;** பொன், gold; 2. குடம், pot; 3. மிடா, a big water pot; 4. கொப்பரி, brass boiler.

**தசேந்திரியம்,** கன்மேந்திரியம் 5ம் ஞானேந்திரியம் 5-ம் ஆக பத்து இந்திரியங்கள், உடலுறுப்பு பத்து. அவையாவன, the organs of the human body consisting of the five organs of sense and five organs of operation or action. They are:

1. ஆக்கிராணம், nose.
2. சட்சு, eyes.
3. சிங்குவை, tongue.
4. சுரோத்திரம், ears.
5. உபத்தம், skin.
6. தொக்கு, genitals.
7. பாணி, hands.
8. பாதம், feet.
9. பாயுரு, anus.
10. வாக்கு, mouth.

**தசை,** மாமிசம், flesh, muscle; 2. புலால், கறி, fish or meat or other animal food; 3. கெட்ட நாற்றம், bad smell; 4. பழத்தின் சதைப்பற்று, pulp of a fruit; 5. உஷ்ணத்திரைல் இரத்தம் மாறுதலடைந்து வாயுவினுவிறுகி உண்டாகும் சதை, flesh formed from blood by the action of heat and wind.

**தசைஒட்டல்,** சதையை ஒட்டவைத்தல், auto transplantation.

**தசைகொள்ளுதல்,** தசைபூரித்தல், which see

**தசைக்கட்டு,** சதையுறுதி, muscular strength.

**தசைக்கர்ப்பம்,** பலவித ரூபங்களும் கனமும் உடையனவாகி எல்லாம் கருத்த இரத்தமயமாய்க் காணப்படும் ஓர்வித சதைக்குறி, protruberance of fleshy masses of various shapes and density gorged with dark blood — Moles.

**தசைக்கனி,** பீசகோச மெலிந்து சதையைப் பெற்றிருக்கும் பழம், fruit with a, soft pulp as berry.

**தசைச்சுரப்பு,** புடைப்பு, a useless out growth of flesh as a tumour, excresence.

**தசைதல்,** உடம்பில் சதைப்பற்றுண்டாதல், becoming flesh; 2 தடிப்பேறல், growing stout.

**தசைத்தல்** சதைபிடித்தல், growing fleshy; 2. கொழுத்தல், becoming fatty.

**தசைநரம்பு,** பேசியின் அசைவுக்குக் காரணமான நரம்பு, nerve responsible for the movement of the muscle.

**தசைநார்,** தசையிழை, muscular fibres; 2. மாமிசநார், sinew.

**தசைநார்க் கயிறு,** நசை, எலும்புகளையும் சதையையும் பொருத்தவைக்கும் நரம்பு போன்ற கயிறு, a flexible cord by which a muscle is attached to a bone — Tendon.

**தசைநீர்,** நிணநீர், serum; 2. ஊன் தண்ணீர், fluid oozing from the flesh, the liquid matter that drips from flesh in cooking — Gravy.

**தசைநீளமுளை,** சடரக்குழியில் நீட்டிக்கொண்டிருக்கும் மாமிசமுளை, name for some of the columnae carneae of the heart ventricles — Musculi papillaris.

**தசைபூரித்தல்,** சதை பற்றுதல், அதாவது உடம்பு பிடித்தல், to grow in flesh.

**தசைப்பகந்தரம்,** மாமிச பகந்தரம், fistula in the muscle.

**தசைப்பற்றிடம்,** சதைபுஷ்டியானவிடம், the fleshy muscular part of the body — Brawn.

**தசைப்பற்று,** சதையுள்ளபாகம், the fleshy portion.

**தசைப்புற்றுள்ள,** கொழுத்த, corpulent, fleshy.

**தசைப்பிடி,** தசைப்பற்று, pulpiness.

**தசைப்பிடித்த,** கொழுத்த, corpulent.

**தசைப்பிடித்திருத்தல்,** கொழுத்திருத்தல், பருத்திருத்தல், being corpulent.

**தசைப்பிடிப்பு,** சதைப்பற்றுகை, growing fleshy.

**தசைபிடியில்லாத,** சதையற்ற, raw boned.

**தசைப்பிடியுள்ள,** பலத்த புஷ்டியான, brawny.

**தசைப்பு,** கொழுப்பு, fat.

**தசைப்புடைப்பு,** சதை வீக்கம், fleshy excrescence — Sarcoma.

**தசைமுற்றுதல்,** கொழுப்பேறல், being or becoming fattened.

**தசையடைப்பு,** சதைவளர்த்தி, out growth of fat; 2. கொழுப்படைத்தல், obstruction of fat; 3. மூத்திர துவாரத்தில் சதை வளர்ந்து, அதனால் ஏற்படும் தடை, a disease of the urinary passage due to obstruction caused by the growth of flesh — Stricture of urethra.

**தசையண்டம்,** ஆண்பிள்ளைக்கு வாயு அதிகரிப்பதனால் பிடுக்கின் சதை வளர்ந்து பருத்துக் காணும் ஓர் வகை அண்டநோய், (in males) elephantiasis of the scrotum in which the muscles of the scrotum is enlarged due to excessive growth of flesh arising from aggravated condition of Vayu. (wind)

2. அகாலசை யோகத்தினாலும் மிதமிஞ்சிப்புணருவதாலும் பெண்களுக்கு வாயு அதிகரித்து குடலினின்று கீழறங்கி அல்குலுக்குள் பூரித்துக் கொள்வதினால் அல்குலின் இரண்டு பக்கத்துச் சதையும், இதழும் விரிந்து தளர்ந்து காணுவது மன்றி, புணர்ச்சியில் விந்து போய்ப் பாய்வதற்கும், காமச்சலம் சுரோணிதம், கருப்பம் இவைகள் வெளிப்பட்டு வருவதற்கு தடைபட்டு அதனால் இரத்தம் கெட்டு கருப்பாசயத்திலிருந்து நிதம் பத்துக்குள்ளடங்கி நீண்டு வந்து இருக்கின்ற வங்குவாசல் என்னும் பூவும் தளர்ந்து ஆண்குறியைப் போல் வெளியில் வந்து தொங்குவது மன்றி, வாயுவினால் திரண்ட இரத்தம் அத்துவாரத்தில் தசை விழுது விட்டது போலும், தேங்காய்க்குள்ளிருக்கும் முளையைப் போலும், தாமரை மொக்கைப்போலும், குமிளங்காயைப் போலும் துன்மாமிசம் வளர்ந்து அண்டங்களைப் போலவே தொங்கும் ஓர் நோய், இதைத் தமிழில் கூதை எனவும், வடமொழியில் கானிகாயோனி யெனவும் சொல்லப்படும்.

Morbid enlargement of the muscles of the female genital forming a mass of extraordinary size and hanging down the vagina. It is said to be caused by the derangement of Vayu due to untimely and excessive indulgence in sexual intercourse consequently the walls of the vagina get relaxed thereby obstructing the free passage for secrections, and the circulating blood gets vitiated and the mass of flesh hangs like a scrotum. The clitoris is also elongated hanging like the penis.

**தசையத்தி**, சீமையத்தி, இது இரத்த விருத்தி தேக போஷணை தரும், foreign fig — Ficus glomerata, c. f. விதையத்திப்பழம்.

**தசையிதம்**, தசைகளினின்று வேகவைத் தெடுக்கும் மஞ்சள் நிறமான ஓர் பசை, elastine.

**தசையில்விலா**, சதையில்லாத விலா, spare rib.

**தசையிழை**, See தசைநார், muscular fibre.

**தசையூறுதல்**, உடம்பில் தினவெடுத்தல், itching.

**தசையொட்டியிலை**, சதையொட்டி, which see.

**தசைவலி**, தசையில் உண்டாகும் நோவு, muscular pain — Muscular rheumatism.

**தசைவளர்ச்சி**, சதைப்பற்றுண்டாதல், flaby growth; 2. சதை வளர்ந்து மூத்திர துவாரத்தை அடைத்தல், obstruction in the urethra from the growth of flesh.

**தசைவளர்த்தி**, புண்ணிலேற்படும் துன்மாமிச வளர்ச்சி, formation of proud flesh.

2. காய்ப்புண்டாதல், formation of a hard horny excrescence on a toe or foot.

3. சதைப்பற்றுண்டாதல், turning into flesh carnification.

4. மேகத்தினுல் மூத்திர துவாரத்தை அடைக்கும் சதை வளர்ச்சி, growth of flesh obstructing the passage of urethra.

**தசைவீக்கம்**, மாமிச வீக்கம், swelling of the flesh or muscle.

**தசைவேர்**, சதைப்பற்றுள்ள வேர், minute elementary part of the muscle: 2. கிழங்கு வேர், bulbous root; 3. ஈராண்டு பயிர்களின் வேர், (In Botany) the fleshy root of plants of two years growth.

**தசைவைத்தல்**, தசை கொள்ளுதல், to pick up flesh.

**தச்சத்தரு**, ஆமணக்கு, castor plant — Ricinus communis.

**தச்சநாசன்**. பொன்னம்பர். yellow coloured amber.

**தச்சர்**, அதிங்கன், licorice plant.

**தச்சனைமூலி**, see தச்சன்மூலி.

**தச்சன்குருவி**, மரங்குத்திப்புள், a bird called wood pecker.

**தச்சன்மூலி**, ஓர் மூலிகை, இதைச் சூரணம் செய்து திரிகடுகு சேர்த்து உண்ண தேகத்தை அநேக காலம் இருத்தும், சட்டைகக்கிபால வயதாகும், மேனிதங்கமாகும், இதனுல் அஷ்டமாசித்தியாகும். இதன் சமூலத்தை இடித்து சாறுபிழிந்து இதில் கல்லுப்பைத் தோய்த்து வாட்ட அது கட்டி மணியாகும், சூதம் கட்டும், பாஷாணம் மெருகாகும். வேதையிட்டால் வெகுதூர மோடும். an unknown plant. It is said that if its powder is taken with the powders of dry ginger, pepper and long pepper the body will live for many number years, body becomes youthful, it will glow like gold, and obtain the eight psychic Divine miraculous powers. Rock salt, melts and consolidates, if it is dipped in its juice and rosted. It turns arsenic into a waxy substance, and mercury into a ball.

**தச்சி**, தயிர், curd.

**தச்சினியம்**, உருவம், figure.

**தச்சுவை**, சேலை, a piece of cloth; sari.

**தஞ்சக்கேடு**, பலவீனம், weakness.

**தஞ்சகம்**, சுரத்தினுல் உடம்பின் மேற்காணும் தழும்புகள், eruptions or purple spots which appear on the skin in malignant fevers — Petechiae; vibices.

**தஞ்சம்**, அற்பம், smallness; 2. பெருமை, greatness; 3. புகலிடம், shelter.

**தஞ்சனம்**, தன்னையறிதல், to know oneself.

**தஞ்சன்பொளி**. துரிசு, blue vitriol.

**தஞ்சாபியம்**, நறும்பிசின், a fragrant resin.

**தஞ்சாவூர்க்கிட்டம்**, தஞ்சாவூரில் காணும் இரும்பு சிட்டம். scum of iron found in Tanjore.

**தஞ்சி**, ஓர் மருந்துப்பூடு, இதைப் பலந்தரு மருந்தாகவும். வயிற்றுப்பூச்சிகளைக் கொல்வதற்கும் உபயோகிப்பார்கள், a composite herb with yellow flowers formerly used as a tonic and anthelmentic — Tansy.

**தடக்கிப்பேசல்**, திக்கிப்பேசுதல் stammering.

**தடங்கல்**, தடை, hindrance; impediment; obstruction.

**தடங்கண்**, பெரியகண், large eyes.

**தடங்கண்ணி**, பெருங்கண்களையுடையவள், large eyed woman.

**தடங்குநாடி**, விட்டுவிட்டு அடிக்கும் நாடி, pulse beating at intervals; intermittent pulse.

**தடசல்**, சடைச்சி, common Indian Lindan— Grewia tilacfotia.

**தடசு**, see தடசல்.

**தடதடத்தல்**, பலவீனத்தால் கைகால் சோர்வடைந்து நடுக்கல், trembling of the limbs through weakness; 2. தள்ளாடுதல், tottering from age; 3. வாய்குழறுதல், becoming confused in speech; 4. பயத்தால் நடுங்கல், becoming nervous; 5. நாக்குத் தட்டல் sounding the tongue while tasting.

**தடதடப்பு**, தள்ளாட்டம், a symptom consisting of inability to stand or walk in a normal manner — Abasea.

**தடதடெனல்**, தள்ளாடுதல், tottering.

**தடத்தம்**, நடுவாய் நிற்றல், being neutral, maintaining neutrality; 2 வஸ்துவின் குணம் (In Agama Philosophy) the property of things in distinction from their nature.

**தடத்தம்**, லௌகீகக் கவலை விட்டிருத்தல், to be free from family or worldly attachments.

**தடத்தல்**, இலௌகீகக் கவலை விட்டிருத்தல் unattached towards the worldly affairs.

**தடமாண்டுபோதல்**, அடியோடு அல்லது முற்றும் அழிதல், to be ruined totaly.

**தடம்**, ஓர் மரம், a tree; 2. அகலம், breadth or width; 3 வளைவு, curve; curvature; 4. மூங்கில், bamboo; 5. சுவடு, foot step.

**தடம்படுதல்**, தழும்புண்டாதல். formation of scar.

**தடம்புரளுதல்**, பாதம் நரம்பு பிசகுதல், sprain of the nerves of the footstep; 2. நிலை கெடுதல் being disturbed from ones situation.

**தடல்**, சிதள், scale; 2. நார், fibre; 3. வாழை மடல், sheathing petioles of plantain tree; 4. பலாப்பழத்தின் உள் செதிள், the spongy internal fibres of jack fruit.

**தடவங்கம்**, காரீயம், black lead.

**தடவரல்**, வளைவு, bend, curvature.

**தடவல்**, பூசுதல், anointing, smearing, rubbing; 2. பொங்கல்.

**தடவலை**, பிடிப்பு, attachment.

**தடவாதல்**, see தடவல்

**தடவிக்கொடுத்தல்**, மருந்தை ஒக்காளிக்காது வயிற்றைத் தடவுதல்; passing the hand over the abdomen and chest to prevent vomitting as in administering medicine like caster oil.

**தடவித்தட்டிப்பார்த்தல்**, வயிற்றைக் கையினால் வருடிப் பிறகு தட்டிச் சோதித்தல், a kind of menual examination of the patients by gently by passing the hands over the abdomen and tapping.

**தடவிப்பார்த்தல்**, கையினால் உடம்பைத் தடவிச் சோதித்தல், manual examination, palpation.

**தடவு**, see தடவுதல்; 2. பாகம், portion; 3. வளைவு, bend, curve, 4. ஓர் மரம், a kind of tree.

**தடவுச்செவி**, பெரிய காது, large ears.

**தடவுதல்**, பூசுதல், besmearing, anointing as an ointment; 2. அடைதட்டல், preparing thin pancakes; 3. திருட்டுத்தனமாகப் புணருதல், having illicit inter course with a woman; 4. தடுமாறுதல், staggering.

**தடவுத்தாழி**, பெருஞ்சாடி, a big jar.

**தடவை**, தரம், முறை, times as two times.

**தடா**, பானை, pot; 2. வாயகன்றமிடா, large mouthed pot; 3. கணப்புச்சட்டி, earthern grate; 4. பருமை, largeness.

**தடாககருமம்**, மலங்கழித்தல், going to stools; 2. காலலம்புதல், washing the posteriors.

**தடாகத்தாடியர்**, தாமரையிலை, lotus leaf.

**தடாதடி**, குழப்பம், confusion; 2. கலக்கம், agitation of mind.

**தடாம்,** வளைவு, curve, curvature.

**தடாயகர்ப்பம்,** அங்கஹீனத்துக்கு உட்படும் கரு, embryo subject to deformities. See தடைகர்ப்பாசயம்.

**தடாரம்,** சின்னம்மை, measles.

**தடாரிக்கல்,** ஊடுருவல், piercing.

**தடாவுதல்,** வளைதல், bending.

**தடானனம்,** செங்கிலுகிலுப்பை, red species of rattlewort.

**தடி,** கழி, stick; 2. கருவாடு, dried fish; 3. ஊன், flesh; 4. உடும்பு, guana; 5. மின்னல், lightning; 6. உலக்கை, pestle; 7. வளைதடி, bent stick; 8. ஆண்குறி, a slang term for penis.

**தடிக்கந்தகம்,** உருளைக்கந்தகம், roll sulphur.

**தடிக்கல்,** வீங்கல், swelling.

**தடிக்கொன்றை,** பெருங் கொன்றை, large variety of cassia — Cassia nodosa.

**தடிசு,** see தாடி; 2. உடும்பு, guana.

**தடிச்சூலை,** நடக்க முடியாமல் தடியை ஊன்றிப்போகச் செய்யும் ஓர்வகைச் சூலை, a kind of gout rendering one unable to move about without a stick.

**தடிச்சை,** See தடசல்.

**தடிதல்,** அறுத்தல், incising; 2. வெட்டல், cutting; 3. குறைத்தல், decreasing, diminishing.

**தடித்ததேகம்,** பருத்த உடம்பு, stout body.

**தடித்தநாக்கு,** வீங்கியநாக்கு, இது நோயினுல் அல்லது விஷமுண்டதினுல் ஏற்படும் ஓர்வித குறி, swollen tongue, It is a symptom prominent in a case of poisoning or sometimes from a disease.

**தடித்தநாளம்,** பருத்து நெளிந்து முடிச்சு முடிச்சாகக் காணப்படும் நாளம், veins exhibiting a morbid enlargement of dilation and knotty and irregular appearance especially in the lower extremities — Varicose veins.

**தடித்த மண்ணெண்ணெய்,** மண் தைலம், a dark green kerosine oil commonly used for all engines — Crude oil.

**தடித்தமலடி,** குழந்தை பெருத பெறுத்த ஸ்திரி, a stout sterile woman.

**தடித்தல்,** கனத்தல், thickening, growing rigid, becoming stout; 2. உறைதல், congealing; 3. கெட்டி படல், hardening, consolidating; 4. வீங்குதல், to swell; 5. அறுத்தல், cutting; 6. மரத்தல், losing sensation.

**தடித்தவுடம்பு,** see தடித்ததேகம்.

**தடித்தவுதடு,** பருத்தவுதடு, thick lip — Macro cheilia.

**தடித்தனம்,** முரட்டுத்தனம், rudaness; 2, சோம்பேறித்தனம், laziness.

**தடித்து,** மின்னல், lightning.

**தடித்துபதி,** மேகம், cloud.

**தடிநான்கு,** சிறுநாகப்பூ, iron wood of ceylon — Mesua ferrea (typica); 2. கருநாங்கு.

**தடிப்பம்,** See தடிப்பு.

**தடிப்பு,** கனப்பு, thickness; 2. வீக்கம், swelling.

**தடிப்புப்படை,** உடம்பில் சதைத்தடிப்பை யுண்டாக்கும் ஓர்வகைப் படை, round or irregular patches of swelling or thickening of the skin on different parts of the body; 2. வண்டு அல்லது சில் விஷக்கடி, a contagious skin disease forming in the shape of rings due to bites of beetle or other poisonous reptiles and insects; 3. பித்த தடிப்பு, urticaria.

**தடிப்புரோகம்,** கண்களில் உண்டாகும் நோய்கள், இது இமைத்தடிப்பு, இளிச்சற் கண், முடமயிர் என மூன்று வகைப்படும், an eye disease. It is of three kinds characterised by swelling of the lids.

**தடிப்பேறுதல்,** தடித்துக்கொண்டே போதல், to grow thicker and thicker.

**தடிமம்,** ஓர் பூடு, an unknown plant; 2., சளி, phelgm.

**தடிமல்,** See தடிமம்,

**தடிமன்,** சலதோஷம், cold; 2. நீர்க்கோவை. catarrh of the nose; 3 பருமை, thickness; 4. ஓயாச்சளி. continuous. running of the nose.

**தடிமூக்குள்ளான்,** பருத்த மூக்குள்ள உள்ளான் குருவி, a class of snipes with stout bills.

**தடியங்காய்,** See தடியன்காய்.

**தடியன்,** பருத்தமனிதன், a stout man.

**தடியன்காய்,** கலியானபூசனி, ash coloured pumpkin — Audhatoda vasica.

**தடியன்சிலா,** சாம்பற் பச்சை நிறமான ஓர் வகைக்கடல் மீன், a kind, of grey green sea fish — Sphyraena obtusata.

**தடியாத்தடை,** ஆடாதோடை, Malabar winter cherry.

**தடு,** தடுத்தல், preventing; 2. மறித்தல், resisting checking.

**தடுக்கல்,** See தடுத்தல்.

**தடுக்கு,** இடதுகை, left hand.

**தடுத்தல்,** தடைசெய்தல், obsctructing; 2. நிறுத்தல், stopping as bleeding; 3. அடைத்தல், plugging, blocking up; 4. அடக்குதல், controlling; 5. விலக்குதல், awerting.

**தடுத்தாளுதல்,** கெட்ட வழியினின்று மீட்டல் அல்லது திருத்துதல், redeeming or rectifying a person from evil habits or ways.

**தடுத்துவைத்தல்,** நிறுத்திவைத்தல், stopping from bleeding.

**தடுப்பு,** தடுக்கை, checking, preventing.

**தடுமல்,** } சலதோஷம், attack of cold.
**தடுமன்,** }

**தடுமாறுதல்,** தள்ளாடுதல், see தடுமாற்றம்; 2. கோளாறடைதல், getting derenged as in humours; 3. மனங்கலங்குதல், being preplexed in mind; 4. புத்திகலங்கல், mistaking through failure of senses through old age.

**தடுமாற்றம்,** தள்ளாடுகை, tottering. staggering; 2. மனக்கலக்கம், mental disorder, agitation of mind confusion; 3. மயக்கம், giddiness.

**தடை,** தன்னைக்காத்துக் கொள்ளும்படி அணியும் காப்பு, amulet worm to prevent evil effects; 2. மந்திரத்தடை, magic spell as a preventive, charm; 3. 80 பலங் கொண்ட அளவு, a measure of weight equivalent to 80 palams; 4. வெண்ணுங்கு, lance wood — Pterosperm suberifolium; 5, இடையூறு, obstruction.

**தடைகட்டுதல்,** பாம்பு முதலியவைகளை மந்திர சக்தியினால் தடுத்தல், preventing or controlling cobra etc., by magic spells.

**தடைகர்ப்பாசயம்,** கருதரிக்கும் போது ஏற்படும் அவையவக்கேடு, embryo subjected to deformity.

**தடைநீக்கி,** பேதிமருந்து, medicine for opening the bowels — Aperient; 2. உடம்பிலிருந்து கழியும் நீரைத் தடைசெய்தல், medicine having the powder of clearing, opening or controlling the natural ducts of the fluids and secretions of the body— Deobstruents.

**தடைபண்ணல்,** see தடுத்தல்; 2. வழிதலை நிறுத்தல், arresting or stopping as in bleeding.

**தடைமரம்,** ஓர்மரம், Pterospermum suberifolium alias P. acrifolium.

**தடைமருந்து,** தடுப்பு மருந்து, preventive medicine.

**தடையம்,** எதிர் நிறை, counter weight used as token; 2. கத்திப்பிடி, hilt of a knife or sword.

**தடையறுத்தல்,** மந்திர சக்தியால் முன் கோளாறுகளை நீக்குதல், removing the previous magic spells by counter charms; 2. உடம்பில் ஏற்பட்ட மலம், நீர் முதலிய கழிவுத் தடைகளை நீக்குதல், clearing the obstructions caussed by the suspension of feces, urine and secretory or excretory fluids.

**தட்குதல்,** கட்டுதல், binding; 2. தடுத்தல், preventing.

**தட்சணகௌளி,** மங்கலகரமாக வலதுபக்கத்திலிருந்து பலுக்கும் பல்லி, lizard chirping from the right side which is considered auspicious.

**தட்சணத்துப் புலவன்,** அகத்தியமுனி, the sage Agastiya an erudite scholar of the South.

**தட்சணநீர்,** தென் பூமிசலம், அதாவது காவேரி. water of the south i. e. the river Cauvery.

**தட்சணபத்திரி,** ஒட்டொடப்புல், sticking grass; 2 சானம், Deccany grass as disting-uished from Bengal grass.

**தட்சணப்புல்,** சானம், deccany grass,

**தட்சணம்,** அதேகாலம், at the same moment; 2. உடனே, instantaneously; 3. வலப்பக்கம், right side.

**தட்சன்,** சேவல், cock; 2. நெருப்பு, fire; 3. பரஸ்திரீகமனன், sexual attraction towards other woman.

**தட்சாயம்,** கருடன், brahminury kite.

**தட்சிகம்,** வலப்பக்கம், right side.

**தட்சிணபந்தம்,** 3-வகைப்பாசங்களில் ஒன்று, one of the three kinds of bondage.

**தட்டம்,** உண்கலம், eating dish; 2. பாம்பின் மேல் வாய் நச்சுப் பல், one of the poisonous fangs on the upper row in a cobra; 3. பரந்த இதழுள்ள பூ; broad petalled flower; 4. கைகொட்டல். clapping of hands, 5. மோவாய், chin; 6. பல், tooth in general; 7. அல்குல், female generative organ; 8. தாடி, beard; 9. வெள்ளை, whiteness.

**தட்சிணாமூர்த்தி** வைணவகுலத்தில் பிறந்த ஓர் மாயாசித்தன், ஆவணி மீ. திருவோண நட்சத்திரத்தில் முதற்காலில் பிறந்தவன் கொல்லிமலை நாதன்பேரன், grand son of Kollimalai nathan. He belongs to Vaisnhava caste.

**தட்சிணாமூர்த்தி,** அகத்தியமுனி see தட்சணத்துப்புலவன், so called from his dwelling in the south on the Pothigay Hills near Tinnevelli district.

**தட்சிணாவசரம்,** கருப்பையில் வலதுபக்கம் உலாவல், moving in the right part of the womb as foetus.

**தட்சிணாவர்த்தகம்,** காஞ்சொறி, climbing nettle — Tragia involucrata.

**தட்சிணாவர்த்தம்,** வலம்புரிச்சங்கு, conch shell having its spiral twisted forwards on the right side; 2. பெண்ணின் கொப்பூழ், woman's naval.

**தட்சியராசன்,** பொன்னம்பர், gold coloured amber.

**தட்டகப்பை,** தகட்டகப்பை; சப்பை அகப்பை, flat laddle; a kind of spatula.

**தட்டத்துத்தி,** தட்டையான துத்தி. a species of mallow — Indian marsh mallow as opposed to வட்டத்துத்தி. which see.

**தட்டக்கிருமி,** சப்பையானகிருமி, tape worm.

**தட்டம்மை,** விளையாட்டம்மை, a kind of pox with flat eruptions chicken pox, measles.

**தட்டல்,** கைத்தட்டல், clapping: 2 அடித்தல், striking; 3. வயிறு தட்டல், tapping the abdomen as in ascites or in disorder of bowels etc.

**தட்டழிதல்,** கெட்டுப்போதல், becoming corrupted, 2. நிலைகுலைதல், change in ones situation in life.

**தட்டாங்காரல்,** ஓர் சிறிய கடல் மீன், a small sea fish. silvery olive — Equvla bindus.

**தட்டாடை,** இடுப்புத்துணி, loin cloth.

**தட்டாமல் வைத்தல்,** ஒன்றோன்று சம்பந்தப்படாமல் வைத்தல், keeping away from being united.

**தட்டாரப்பூச்சி,** ஓர் வகைப் பறக்கும் பூச்சி, dragon fly — Libellula rimaculata; 2. ஓர் வகைப்பூச்சி, miller's moth, butter fly.

**தட்டானுப்பி,** ஓர் கொடி, a creeping plant.

**தட்டான்,** வெண்கோஷ்டம், Arabian costum; 2. கிழக்குரங்கு, old monkey; 3. புடோல் gourd; 4. ஓர் பூச்சி, butter fly.

**தட்டான்காய்,** தட்டைப்பயறு, a variety of green gram.

**தட்டான் கொட்டோசை,** புடோல்; gourd common snake gourd.

**தட்டான்பூச்சி,** see தட்டான்.

**தட்டி,** வெண்கோஷ்டம் see தட்டான்; 2. வெற்றிலைக் கட்டு, bundle of bettle; 3. உடும்பு, guana.

**தட்டி,** வெட்டிவேர்த்தட்டி, இதன் மேல் தண்ணீருற்றி வேனிற் காலத்தில் குளிர்ந்த காற்று வீசும்படி உபயோகப்படுத்தப்படும். cuscus screen made of fragrant roots of cuscus grass with which windows doors openings are screened and kept wet in the summer season so that cool breeze may blow.

**தட்டிகமாலு,** see தட்டிகம்.

**தட்டிகம்,** நிலப்பனை, ground palm black musale,— Curculigo orchioides,

**தட்டிகா,** காசித்தும்பை Beneras lencas — Bolsom.

**தட்டிக்கொடுத்தல்,** சாந்தப்படுத்தல், quieting by gently tapping the head or the back.

**தட்டிச்சொல்லல்,** திக்கிப்பேசுதல், stammering.

**தட்டித்தடுமாறல்,** தடுமாறுதல், stumbling and groping about tottering.

**தட்டிப்போடுதல்,** இடித்து அல்லது நசுக்கிப் போடல், striking or pounding flat and putting as drugs to prepare decoction.

**தட்டியெழுப்பல்,** தூங்குகிறவனைத் தட்டி எழுப்புதல், to make a sleeping man rise by tapping him.

**தட்டிலம்,** சதகுப்பி, dill seed, bishops weed — Anethum sowa; 2. ஓமம், Sisonammi alias Carum copticum.

**தட்டு,** நொருக்குகை, crushing; 2. தட்டுகை breaking; 3. தகடு; any metal that is flat; 4. வளைவு, curve or bend; 5. முறம் sifting pan; 6. அடுக்கு, lamina; stratum, layer; 7. பக்கம், side, direction; 8. தட்டு வாணி அல்லது விபசாரி, prostitute a woman of loose character.

**தட்டுக்கெடுதல்,** தடுமாறிப் போகுதல், to be misled and getting confused through old age.

**தட்டுக்கெட்டுப்போதல்,** see தட்டுக்கெடுதல்.

**தட்டுக்கேடு,** குழப்பம், perplexity, confusion of mind.

**தட்டுண்டுபோதல்,** தவறிப்போதல், to get lost, turning aside as a blow.

**தட்டுண்ணல்,** குறைந்துபோதல் becoming decreased.

**தட்டுதல்,** நொருக்குதல், crushing by beating

2. அடித்தல், striking with a hammer as nail.

3. தட்டையாக்குதல், flattening with a hammer.

4. ரொட்டி தட்டல், beating into flat cakes.

5. தடுத்தல், warding off.

6. நாக்குத் தட்டுதல், அதாவது ருசித்தல் sounding the tongue when tasting.

**தட்டுத்தடங்கல்,** see தட்டுத்தடை.

**தட்டுத்தடை,** தவக்கம், hindrance.

**தட்டுப்படுதல்,** குறைவுபடல், to be lacking or wanting; 2. மேலேபடுதல், coming in touch.

**தட்டுப்பலா,** தந்தப்பலா, a kind of jack fruit (unidentified).

**தட்டுப்பளுட்டு,** பனை வெல்லக்கட்டி, பனங் கருப்பட்டி, cakes of palmyra jaggery.

**தட்டுப்புழுகு,** புனுகு பூனையினின்று எடுக்கும் ஓர் இழிந்த புனுகு, civet extracted from the dried flesh of civet cat.

**தட்டுமாது,** மேகசஞ்சீவி, a curative medicine for venereal disease or syphilitic complaints.

**தட்டுமாறி,** நிலைகுலைந்தபெண், unchaste woman.

**தட்டுமாறுதல்,** நிலைமாறுதல், change in position; 2. கெட்டுப்போதல், becoming corrupted morally.

**தட்டுருவுதல்,** ஊடுருவிச்செல்லல், penetrating, infilterating.

**தட்டுரொட்டி,** கையால் தட்டிய ரொட்டி, dough made flat with the hand and set on fire to make bread — hand made bread.

**தட்டுவம்,** பனையோலையாற் செய்த சாப் பாட்டு இலை, palmyra leaves plaited like a plate for eating food.

**தட்டுவாணி,** நாட்டுக்குதிரை, country horse; 2. விபசாரி, a prostitute.

**தட்டுவாய்விரிதல்,** வாத முறைப்படி செய்யாத குற்றத்தினால் பொன்னைச் சுத்தி கொண்டு தட்டும் போது நைப்பில்லாமல் வாய்பிளத்தல், (In Alchemy) a defect in the composition of gold arising from want of malleability by which a metal is rendered in capable of being shaped or beaten flat with a hammer.

**தட்டை,** தினைத்தாள், millet stalk, stubble of millet; 2. தட்டுபோன்றது, that which is flat; 3. மொட்டை, baldness; 4. நெருப்பு, fire; 5. தட்டைமூங்கில், spincy bamboo — Bambusa arundinacea; 6. கொட்டைக் கரந்தை, Madras absinth — Sphaeranthes hirtus; 7. தட்டையானது, that which is flat.

**தட்டைக்கருங்கொள்ளு,** ஓர் வகை அவுரிச் செடி, a kind of indigo — Indigofera hirsuta.

**தட்டைக்கரும்பு**, ருசியற்ற கரும்பின் மேற்பாகம், tasteless upper part of sugarcane.

**தட்டைக்காரை**, ஓர்வகை மீன், a kind of fish.

**தட்டைக்கிருமி**, வயிற்றிலுள்ள ஓர்வகைக் கிருமி, a kind of flat worm found in the intestines — Platy helminthes.

**தட்டைக்கிருமிரோகம்**, உடம்பில் தட்டைக் கிருமி அதிகப்படுவதாலேற்படும் நோய், disease arising from the presence of abnormal number of flat worms in the abdomen.

**தட்டைக்கோரைக்கிழங்கு**, கோரைப்புல்லின் கிழங்கு, the bulbous root of cyprus grass.

**தட்டைச்சம்பங்கி**, ஓர்வகைச் சம்பங்கி, tuberose garden bulb — Polianthes tuberosa

**தட்டைத்தலை**, தட்டையானதலை, flat head.

**தட்டைநாக்குப் பூச்சி**, வயிற்றிலுள்ள தட்டைப்புழு, a kind of tapeworm Taenia solium.

**தட்டடைப்பயறு**, பெருந் தட்டைப்பயறு அல்லது காராமணிப் பயறு, இதனுல் வாதம், உஷ்ணம் உண்டாம், flat bean or flat pulse, cowgram — Vigna catiang alias Dolichos catiang.

**தட்டைப்பாம்பு**, தட்டையாயிருக்குமோர் கடல்பாம்பு, a kind of flat sea snake — Hydrophis.

**தட்டைப்பீருகம்**, கம்பரிசி, rice of கம்பு which see.

**தட்டைப்புன்கு**, பால்புங்கு, Indian beech — Pongamia glabra.

**தட்டைப்பூச்சி**, தட்டைநாக்குப்பூச்சி, which see.

**தட்டைமூங்கில்**, ஓர்வித மூங்கில், spiny bamboo.

**தட்டையம்மை**, தட்டம்மை, measles.

**தட்டையரம்**, தட்டையான அரம், flat file.

**தட்டையாதீதம்**, சோளம், great millet.

**தட்டையாமணக்கு**, குச்சியாமணக்கு, a kind of castor plant — Ricinus genus.

**தட்டையெலும்பு**, தகட்டெலும்பு, flat bone — Ossa plana.

**தட்பம்**, குளிர்ச்சி, coolness, cold; 2. விசிறுதல், fanning.

**தணக்கம்**, தணக்கு, which see.

**தணக்காசிகம்**, நுணா, indian mulberry—Morinda umbellata.

**தணக்கு**, தடவுமரம், இதற்கு செந்தணக்கு, காராமணிக்காய்மரம், களாமரம், தெப்பமரம், எனப்பலபெயர்களுண்டு, இது கட்டைமரத்திற்குபயோகப்படுவதாலிப் பெயர் வாய்ந்தது போலும், இது ஒரு பெரியமரம், இலைகள் முனையில் கொத்துக் கொத்தாய்த் தொங்கும், பூக்கள் சிறியன, மஞ்சள்நிறம், இதன் விதைகள் செபமாலையாகக் கோக்கப்படும், மேலும் குயவன் மண்பானைகளுக்குப் பளபளப்புண்டாக உபயோகிப்பார்கள், இது அடியிற் கண்டபடி பலவகைப்படும், அவையாவன, catamaran wood tree — Gyrocarpus jacquini. It is a large tree, leaves crowded at the end of the branchlets, flowers small yollow. Necklace and rosaries are made from the seeds; seeds are used by potters to polish their earthern vessels.

1. சாம்பற் தணக்கு, white catamaran tree — Givotia rottleic forms.
2. செந்தணக்கு, false kuteerah — Sterculia urens.
3. வெண்தணக்கு, white tanak — Gyrocarpus acuminata.
4. கொட்டைத் தணக்கு, whirling nut — Gyrocarpus asiaticus.
5. மலைத்தணக்கு, bastard cedar — Chincona excelsa, See விலாரி. 2. வெள்ளைக்கடம்பு, — bridal conch plant — Hymeno dictyon excelsam.
6. மஞ்சள் தணக்கு, yellow flowered silk cotton — Cochlospermum gossypium.
7. புல்தணக்கு.
8. பஞ்சுத்தணக்கு, same as No. 6.
9. யானை வயிற்றுத்தணக்கு, elephant rope tree — Sterculia villosa.
10. நுணாத்தணக்கு, small ach root— Morinda umbellata.
11. வண்டுளைத்தணக்கு.
12. சாம்பரித்தணக்கு, same as No. 1.
13. முனுவுத்தணக்கு, potters' tree — Gyrocarpus jacquini.

14. சிறுதணக்கு, small dying mulberry — same as No. 10

15. முட்டைத்தணக்கு, same as No. 4.

16. வெள்ளைத்தணக்கு, same as No. 13.

17. சம்பீரத்தணக்கு, same as No 1.

**தணக்கு,** நுணாமரம். see தணக்காசிகம், 2. ஓடல், elephant rope tree; 3 வால், tail.

**தணக்குப்பருத்தி,** கோங்கிலவு, see தணக்கு.

**தணக்குப்பிசின்,** இது தென்னாட்டுகளிலும் மலையாளத்திலும் விளையும் கோங்கிலவ மரப் பிசின் இது வெண்மை, கருப்பு, சிவப்பு அல்லது ஊதா என பல நிறங்கள் வாய்ந்ததாயிருக்கும். சிவப்பும் வெள்ளையுந்தான் சிறந்தது. இது சயரோகத்தில் கபக் கோழை யானது மேலெழாமல் அடக்கும். இலேகியத்தில் உபயோகிக்க இந்திரியத்தைப்பலப் படுத்தும், இது சாதாரணமாய் விரணயெரிச்சல், நீர் சுருக்கு, இருமலில் தொண்டைப்புகைச்சல், இவைகளை நீக்கும். இது துவர்ப்பாகலின் இரத்தப் போக்கை நிறுத்தும். an excellant gum of false tragacanth tree — Cochlospermum gossypium alias Bombax gossypium. The tree is generally found in South India especially in Tamil districts and Malabar. clear white gummy substance exades from every part of the tree. The other varieties are red, black and purple; the red and white are employed for medicinal purposes. They are used with great advantage in suppressing phlegm in cases of consumption. It is an emmollient and demulcent. It is very useful in the irritation of the mucous membranes of the pulmonary and ganitourinary organs. Being an astringent it arrests bleeding. 2. வாதுமைக் கொட்டைப்பிசின், இதற்கும் மேற்கண்ட கோங்கிலவபிசினின் குணங்கள் உள்ளதால் இதற்கு இப்பெயர் வாய்ந்தது போலும். True tragacanth or gum of almond tree Astralagus verus (product of) This gum is yellowish red. It has the same properties as those of false tragacanth.

NOTE: It is also called gum kateerah and is in large vermicular pieces. When moistened it swells up into a trnsparent jelly, which may be diffused in large quantities of water. It is used as demulcent in coughs. It forms an ingredient for imparting firmness in lozenges and pill masses and as such it forms the basis of some medicinal lozenges and styptic powder and is extensively used as demulcent. It is chiefly used as a vehicle for move active medicines.

**தணலம்,** எருக்கு, madar plant — Calotropis gigantia.

**தணலாகினி,** See தணலாற்றி.

**தணலாற்றி,** கொடிவேலி, lead wort. plumbago genus; 2. மணித்தக்காளி, black berried solanum — Solanum nigrum.

**தணலி,** See தணலம்.

**தணல்,** நெருப்பு, fire; 2. கனிந்த நெருப்பு, live coals. cinders; 3. நிழலிடம், shady spot.

**தணல்விழுங்கி,** நெருப்புக்கோழி, ostrich.

**தணவகா,** மஞ்சள் கிழங்கு, yellow bulbous root; 2. மஞ்சட்சிற்றகத்தி மரம், Sesbania aegyptica with yellow flowers.

**தணவம்,** அரசமரம், peepul tree — Ficus religiosa.

**தணவு,** நுணா, indian Mulberry — Morinda citrifolia see சிலுதணக்கு.

**தணவையாதம்,** ஆகாச கருடன், sky root— Bryonia epigaea; 2. சிறுகாஞ்சொறி, small climbing nettle — Tragia cannabina.

**தணி,** மலை, mountain; 2. குளிர்ச்சி, coolness; 3. see தணிதல்.

**தணிசு,** சதைபிடிக்குகை, picking up of flesh 2. வளைவு, bend.

**தணிதல்,** குறைதல், growing less in severity; lessened in effect as in disease; 2. சாந்தமாதல், being mitigated or allayed cooling, 3, ஆறுதல், getting; soothed being allayed; 4. இளகுதல், being softened; 5. பருத்தல், growing thick in size; 6. கொழுத்தல், becoming fat; 7. வற்றுதல், drying; 8. திருப்தி அடைதல், being satisfied as from hunger; 9. குளிர்தல், cooling.

**தணிட்டை,** கபிலப்பொடி, which see.

**தணித்தல்,** ஆற்றுதல், healing mitigating, 2. குறைத்தல், diminishing, moderating; 3. நோய் தீர்த்தல், curing as of disease; 4. பசியாற்றல், appeasing as hunger.

**தணிந்தவேளை**, குளிர்ந்த வேளை அதாவது மாலைப்பொழுது, evening time as being the cool part of the days.

**தண ந்திருத்தல்**, சதைபிடித்தல், putting on flesh.

**தணிப்பு**, அழற்சியைத் தணிக்கு மருந்து, any medicine that lessens the effect of irritation — Demulcent.

The following are the examples:

1. குன்றிமணி, Indian liquorice—Abrus precatorius.
2. முள்ளுக்கீரை, thorny spinach—Amaranthus spinosus.
3. சதமூலி, Indian salap — Aspara gopsis asendeus அல்லது காட்டுக் காரட் கிழங்கு.
4. கருங் காக்கணம், crow creeper—Clitoria ternatea.
5. பேதணு, bedauna — Cydonia vulgaris.
6. கடற்பாசி, sea moss — Grace lariatichen rides.
7. வெண்டிக்காய், common bendy — Hibiscus esculentum.
8. சப்ஜா அல்லது திருநீற்றுபச்சை, fragrant basil — Ocimum basilicum.
9. இராமதுளசி, Rama thulasy — Ocimum grantissimum.
10. நெல், paddy — Oriza sativa.
11. ஆனை நெருஞ்சில், elephant caltrope —Pedalium murex.
12. இஸ்பகோல், spogel seed — Plantago ovata.
13. எள், gingelly seed — Sesamum indicum.
14. கழுதைத் தும்பை, donkey leucas — Trichodesma zeylanicum.

**தணியல்**, கள், toddy; 2. தணிதல், becoming less in severity.

**தணிவு**, குறைதல், diminution; 2. சாந்தம், mildness; 3. நீர் வற்றுதல், becoming dry.

**தணிவுசுரம்**, முறை சுரம், intermittant fever.

**தணு**, சூரியகாந்தம், sun flower.

**தணுப்பு**, குளிர்ச்சி, chillness; 2. நீர்கொள்ளுகை, attack of cold.

**தணுவங்கம்**, see தணு.

**தண்**, குளிர்ச்சி, coolness; 2. நீர், water; 3. களைப்புத் தீர்ப்பது, that which refreshes.

**தண்சொறிவு**, குளிர்ச்சியான தண்ணீர் பீச்சல், cold douche; 2. சில்லென குழாய்த் தண்ணீர்ச் சொரிவு, cold shower bath.

**தண்டகம்**, கரிக்குருவி, black sparrow or bird 2. நுரை, foam, froth; 3. வீணுதண்டம் என்னும் முதுகெலும்பு, vertibral column with the spinal cord as the seat connecting mystic centres; 4. அகஸ்தியர், இராம தேவர் இவர்கள் செய்த தமிழ் வைத்திய நூல், the name of a treatise on medicine written by Agasthiya and Ramadevar; 5. ஓர் வகை வலிப்பு; a kind of spasm; 6. தேக விறைப்பு, stiffness of the whole body.

**தண்டகவாதம்**, அவயவங்களைச் செயலறச் செய்து உடம்பைத் தண்டத்தைப்போல் வீழ்த்தி, நீட்டல், முடக்கல், அசைத்தல் முதலியவையில்லாமல் சவத்தைப்போல் கிடக்கச் செய்யும் ஓர் வகை வாத நோய், a kind of rheumatism characterised by great prostration in which the body is rendered like a log of wood, unable to stretch of fold the limbs and pass motion or urine. The whole body assumes a thorough rigidity as the stiffness appearing after death.

**தண்டகாகம்**, செம்போத்து, crow pheasant.

**தண்டகிபாஷாணம்**, தீமுருகல் பாஷாணம், phosphorus.

**தண்டக்காரி**, தொட்டால் வாடி, prickly sensitiva plant — Minosa pudica.

**தண்டங்கீரை**, தண்டுக் கீரை, common spinach — Amarantus blitum alias A. gangeticus

**தண்டச்சோறு**, புல்லுருவி, a parasite plant.

**தண்டதாமிரி**, சுன்னல் வட்டில், hour glass.

**தண்டபாலே**, ஓர் வகை பாலே, wrightin tinctoria.

**தந்திரயுக்தி,** பரிபாஷை, technical terms, code words.

**தந்திரயுக்தி** நூலின் யுக்தியால் அமைக்கப்படும் பொருள், anything or substance created or formed by secrets revealed by Tantric science.

**தந்திராகமம்,** யந்திர மந்திரங்களைப் பற்றிச் சொல்லும் ஆகமத்தின் ஓர் பிரிவாகிய தந்திரம்," one of the divisions of the Agama Philosophy treating on rites, operations of diagrams etc., Tantric science.

**தந்திராணுசாரணை,** தந்திர நூல் அனுசரித்து நடப்பது, following the authority of the Tantrams.

**தந்திரி,** சுறுமீன், shark.

**தந்திரிகன்,** சக்தன், அதாவது சக்தியைப் பூசை செய்வோன், worshippers of the Energy; 2. யந்திர மந்திரத்தைக் கொண்டு வேலை செய்பவன், a magician working with the aid of mystic diagrams; 3. பில்லிசூனியக்காரன், one skilled in witch craft and sorcery.

**தந்திரிகை,** நித்திரை, sleep; 2. சோம்பல், laziness, dullness; 3. நூல், science in general.

**தந்திரீதம்,** குந்துருக்கம், white dammer — resin of Vateria indica.

**தந்திரீகம்,** கற்சூரம், dried date fruit.

**தந்திரை,** சோம்பல், laziness, dullness; 2. தூக்கம், sleep, see தந்திரிகை.

**தந்திலத்தி,** யானைலத்தி, elephants excreta.

**தந்திவாளம்,** நேர்வாளம், croton seed. ( Indian )

**தந்திவிதை,** see தந்திவாளம்.

**தந்திவெட்டை,** ஆண் குறியிலுண்டாகும் பளபளப்பான வெள்ளையொழுக்கு, gleet, See தந்திமேகம்.

**தந்திவெள்ளை,** See தந்திவெட்டை, chordee,

**தந்து,** நூல், thread; 2. கல்விநூல், scientific or literary treatise; 3. சந்ததி, progeny; 4. இந்திரகோபப்பூச்சி,

**தந்துக,** சிறுதுவாரமுள்ள, capillary.

**தந்துகடம்,** சிலம்பிப்பூச்சி, spider.

**தந்துகக்கவர்ச்சி,** நுண்ணிய இரத்தக் குழலின் கவர்ச்சி, spontaneous elevation of liquids in fine hair like tubes — Capillary attraction.

**தந்துகக்குழல்,** சிறு அல்லது சன்ன துவாரமுள்ள குழல், capillary tube or vessel.

**தந்துகநுகர்ச்சி,** நுண்ணிய இரத்தக்குழலின் விலக்க, spontaneous depression of liquids in their tubes of porous nature — Capillary repulsion.

**தந்துகப்பிரதிசாரணம்,** தந்துகவிலக்கு, see தந்துகநுகர்ச்சி.

**தந்துகம்,** கடுகு, mustard; 2. தூக்கணங்குருவி, Indian tailor bird.

**தந்துகவிலக்கு,** see தந்துகநுகர்ச்சி.

**தந்துகனம்,** elastic tissues.

**தந்துகாசிதம்,** மகரவாழை, a kind of plantain tree.

**தந்துகி,** சிறிய நாடிக்கிளைகள் உடம்பு முழுவதும் அடர்த்தியாய்ப் பின்னிப் படர்ந்திருக்கும் நுட்பமான குழல்களிற்போய் முடியும் இரத்தக் குழாய்கள், one of the minute blood vessels that form the terminations arteries and begining of veins and link the one with the other — Capillaries.

**தந்துகிசஞ்சயம்,** நுண்ணிய இரத்தக்குழாயின் திரட்சி, capillary congestion.

**தந்துகிப்புடைப்பு,** தந்துகிக்குழல் பெரிதாய் விருத்தியாதல், enlargement of capillaries — Angiactasis.

**தந்துகிப்பொசிவு,** நுட்பமான இரத்தக் குழாயின் கசிவு, capillary infilteration.

**தந்துகிருமி,** vermicularis.

**தந்துகிவிரிவு,** நுண்ணிய இரத்தக்குழாய் விரிதல், dilatation of capillary vessels.

**தந்துகீடம்,** சிலாந்திப்பூச்சி, spider.

**தந்துசாரம்,** பாக்குமரம், areca nut tree.

**தந்துசீர்,** மகாமேதை, an unknown tree.

**தந்துநாபம்,** see தந்துபம்; 2. பசுவின் கன்று, cow calf.

**தந்துபம்,** கடுகு, mustard — Sinapis dichotoma.

**தந்துபலே,** திப்பிலி, long pepper — Piper longum.

**தந்துபாகம்**, சர்க்கரை அல்லது வெல்லப்பாகில் விரலை அழுத்தி எடுக்கும் போது நூலைப் போல்வரும் மருந்தின் பாகம், a stage in the preparation of syrup either from sugar or jaggery at which the boiled liquid can be drawn out like a thread when pressed with and taken out by fingers.

**தந்துபாவம்**, fibrin.

**தந்துப்பிரமேகம்**, மூத்திரம் துளிதுளியாய் விழல். stricture of urethra.

**தந்துமாத்திரிகம்**, fibroblasto.

**தந்துமேகம்**, se தந்திப்பிரமேகம்.

**தந்துரம்**, தாமரைக்கொடி, lotus creeper.

**தந்துரன்**, உயர்பல்லன், one having prominent teeth.

**தந்துருமம்**, பிரண்டை, adamantine creeper — Vitis quadrangularis.

**தந்துரைக்கிளவன்**, பிறவுயிர்ப் பிராணிகளின் குரலைப்போல் ஒலிசெய்பவன், one who is skilled in ventriloquism i.e. the art of imitating the voice of living animals, bires etc.

**தந்துலம்**, see தந்துரம்.

**தந்துவாயன்**, சிலம்பி, spider, so called from its webbing.

**தந்துவிகா**, see தந்துவிக்கிரியை.

**தந்துவிக்கிரியை**, வாழை, plantain tree.

**தந்தையர்**, ஐந்துவகைத் தந்தையர், 1. பெற்றோன்; 2. கற்பித்தோன்; 3. மணம் முடிப்பித்தோன்; 4. உணவு கொடுத்தோன்; 5. ஆபத்தில் காத்தோன். the five kinds of fathers—l. real father; 2. teacher or guru; 3. one who effected the marriage; 4. one who gave food; 5 protector in danger

**தந்தோமம்**, fibroma.

**தந்தோற்பவரோகம்**, குழந்தைகள் நூல், கயிறு, மயிர் முதலியவைகளை விழுங்ுவதனாலுண்டாகும் சுரம், பேதி, வாந்தி, மலபந்தம் முதலிய குணங்களோடு கூடியநோய் a disease in children marked by fever, purging, or constipation, vomitting due to, swallowing thread, cord, fibre, hair etc.

**தந்நியம்**, முலைப்பால், womans breast milk.

**தந்நீர்**, தன்னுடை மூத்திரம், self urine.

**தந்நுகர்ச்சி**, தன் அனுபோகம், self enjoyment; 2. பிராரத்தம், experience of ones pleasure or pain from former deeds.

**தபசம்**, பறவை, bird.

**தபசி**, ஆயா, entire leaved elm— Holoptelea integrifolia.

**தபசிக்கை**

**தபசியம்**, முல்லைப்பூ, a kind of jasmine.

**தபசு**, தவசு, ஆன்மசித்திபெறுதல், penance attaining the control of ones own soul.

**தபசுவினி**, சடாமாஞ்சில், Indian spikenard, valerian root — Valerinae rhizoma or V. jatamansi.

**தபநதநயை**, வன்னிமரம், the sumatree — Prosopis spicigera.

**தபநீயம்**, பொன், gold.

**தபநெட்டம்**, see தபநேஷ்டம்.

**தபநேஷ்டம்**, தாமிரம், செம்பு, copper.

**தபமேதம்**, செந்நாய், hound, a ferocious dog.

**தபம்**, வெப்பம், heat, temperature; 2. வேனிற்காலம், summer, 3. see தவம்.

**தபம்பண்ணல்**, தவசுபண்ணுதல், leading an austre life, to make penance.

**தபரியோன்**, பச்சைப்பாம்பு, green snake.

**தபலத்தி**, நிர்வாணி, the Goddess Sakti.

**தபற்சனதேக்கம்**, மரவட்டை, a kind of milli pedes.

**தபனகம்**, கொடுவேலி, hedge creeper —Lead wort.

**தபனமணி**, சூரிய காந்தக் கல், sun stone.

**தபனம்**, தாகம், thirst; 2. வெப்பம், temperature; 3. வெயிற் காலம், summer-season, 4. மனத்துயர், grief.

**தபனற்கஞ்சி**, மஞ்சள், turmeric —Curcuma longa.

**தபனன்**, கொடுவேலி, plumbago; see தபனகம்; 2. நெருப்பு, fire; 3. சூரியன், sun.

**தபனியம்**, பொன், gold.

**தபனீயகம்**, see தபனியம்.

**தபாகா அரிசி**, topioca. see டபாகா அரிசி.

**தபாத்தியம்**, மாரிகாலம், rainy season.

**தபாற்கஞ்சி**, மஞ்சள், saffron.

**தபாணுக்கினி**, செங்கொட்டை, marking nut.

**தபிஞ்சம்**, see தமாலம்; 2. ஆமணக்கு, castor seed.

**தபித்தல்**, see தவித்தல்.

**தபுதல்**, சாதல், dying; 2. கெடுதல், perishing

**தபுதாரம்**, மனைவியை யிழந்து புலம்பல், husband lamenting the loss of his wife.

**தபுதி**, சாவு, death; 2. கேடு, ruin.

**தபோக்கினி**, கடுந்தவத்தால் எழுஞ்சுவாலை, fire of austere penance.

**தபோதுக்கம்**, உலகவெறுப்பு, disgust with the world.

**தபோபலம்**, யோகத்தினாலடையும் சக்தி, power acquired by religious austerities.

**தப்பக்குட்டித்திருக்கை**, சப்பைத்திருக்கை, a kind of flat ray fish; 2. ஓர்வகை சிவப்புக் கடல்மீன், sting ray — Petroplatea micrura

**தப்பக்குழி**, see தப்பக்குட்டித் திருக்கை.

**தப்படி**, காலடி எடுத்து வைக்குந் தூரம், the space passed over by a long step — Stride; 2. தப்ப + அடி, false step.

**தப்பளம்**, எண்ணெய் முதலியவை தேய்க்குதல், smearing or rubbing oil etc; 2. தோள் சதை, shoulder muscle.

**தப்பளம்போடல்**, எண்ணெய் தேய்த்தல், anointing oil.

**தப்பளை**, ஓர்மீன், a kind of fish; 2. தவளை, frog; 3. பெருவயிறு, potbelly.

**தப்பிச்சி**, ஆவி, an unknown tree.

**தப்பிப்பிழைத்தல்**, உயிர்ச்சேதமடையாதிருத்தல், escaping death.

**தப்பு**, கைதப்பு, slip of the hand.

**தப்புச்செடி**, தானே தோன்றிய செடி, naturally grown plant.

**தப்புதல்**, ஆபத்தினின்று விலகுதல், escaping from danger or accident; 2. இறத்தல், dying; 3. அடித்தல், striking; 4. பலகாரம் தட்டுதல், beating into cakes; 5. அப்புதல், smearing cooling ingrediants; 6. சாவுதப்புதல், escaping death; 7. பயன்படாது போதல், becoming useless; 8. விலகுதல், to move off; 9. வெட்டுதல், cutting.

**தப்புவிரால்**, பூசிப்புணர்தல்.

**தப்பை**, முறிந்தவெலும்பு பொருந்துவதற்காக வேண்டி வைத்துக்கட்டும் மூங்கிற்பத்தை, bamboo splint or any flexible piece of wood used to confine a broken bone newly set, a splint or a thin piece of wood used by surgeons to hold the bone newly set after being fractured in its place, 2. அடி, blow.

**தப்பைக்காய்**, நாரத்தங்காய், bitter orange.

**தமகம்**, ஒருவகை சுவாசம், a variety of asthma with loss of virile power.

**தமசு**, தாமசகுணம், a third condition of human nature — Delusion.

**தமட்டன்**, வாளவரங்காய் — canavalica unsiformis.

**தமதம்**, பஞ்சேந்திரிய வெறுப்பு, preventing the action of the five senses, showing disgust with operation of five senses.

**தமத்தல்**, நிரம்பல், (உ. ம்.) வயிறுதமத்தல், becoming full as stomach; 2. பசிதீருதல், appeasement of hunger.

**தமம்**, இருள், darkness, mental darkness; 2. மாயை, illusion; 3. மனவிருள், mental darkness as obscuring the soul.

**தமம்**, கன்மேந்திரியங்களிற் போகாமல் மனத்தை மறித்தல், obstructing the mind from operating on the five senses; 2. தன்னையடக்கல், controlling one's self; 3. பஞ்சமாயையில் ஒன்று, one of the five Mayas; 4. இந்திரியப்போக்கை அடக்கும் சக்தி, the power by which the organs and faculties are kept in subjection.

**தமயந்தி**, ஓர்மல்லிகை, jasmine.

**தமரகசாகைநாடி**, உபதாபனநாடி, (in Anatomy) bronchial artery.

**தமரகசுவாசம்**, மந்தார சுவாசரோகம், இது கண்டத்திலிருக்கும் சளி அல்லது கோழையை வெளிப்படுத்தும்வரை பலமுறை இருமுதலால் உண்டாகும் இளைப்போடு கூடிய மேல்மூச்சு, difficuity in breathing or hard breathing attended with fatigue due to frequent exertion in coughing to bring out the phlegm or the mucous obstructing the bronchial tubes; 2. மந்தாரகாசம், an attack of asthma during the rainy season.

**தமரகதபம்**, சுவாசக்குழலுக் குண்டாகும் அழற்சி, inflammation the wind-pipe.

**தமரகம்**, வங்கம், lead; 2. சுவாசக்குழல், wind-pipe. trachea; 3. தமரத்தை, ewset blimbing — Averrhoa carambola; 4. இருதயம், heart.

**தமரகம்போலாடல்.**

**தமரகலம்**, சுவாசக்குழல் திறப்பு, opening of the trachea.

**தமரகவாதம்**, See உருத்திரரோகம்; 2. மாரடைப்பு, அதாவது மூச்சுவிட முடியாது பொறுக்க முடியாத வலியையும் பஞ்சேந்திரியங்களுக்கு இளைப்பு மயக்கம் முதலிய கஷ்டங்களையு முண்டாக்கி உயிரைக் கொள்ளை கொள்ளும் ஓர் மார்புநோய், a fatal disease characterised by paroxysms of intense pain and a feeling of constriction in the chest — Angina pectoris.

**தமரகவாயு**, See தமரகவாதம்; 2. மூச்சுவிட முடியாமை, difficulty in breathing; 3. நெஞ்சடைப்பு, obstruction in the chest.

**தமரகவொலி**, கிலுகிலுப்பை, rattle wort.

**தமரகி**, கொடுவேலி, leand wort.

**தமரத்தங்காய்**, } See தமரத்தை.
**தமரத்தர்**,

**தமரத்தை**, தமரத்தங்காய் அல்லது பழமரம், இதற்கு தந்தசடம் அல்லது சகதம் என்றும் பெயர், இது இலங்கை. Moluccus இவ்விடங்களிலிருந்து கொண்டு வந்து இவ்விடம் பயிராக்கப்பட்டதெனச் சொல்லப்படும் மரம். 15-20 அடி உயரம் கொழுந்து காம்புகளில் 4-5 சதை கொத்தாக விருக்கும் பூவிதழ்கள் மஞ்சள் கலந்த ஊதா நிறம், காய் ஐகோணமாகவும், தோல் மஞ்சள் நிறமாகவும், வழுவழுப்பாயுருக்கும், விதைகள் உறைக்குள்ளாகவிருக்கும், பழம் கோழி முட்டையைக் காட்டிலும் பருமனுயிருக்கும், பழுப்பதற்கு முன் வாசனையாயும், பழுத்தபின் மணமிகுந்து மற்றோர் வாசனையாயு மிருக்கும், இலை, வேர், காய், இவைகள் மருந்தில் குளிர்ச்சிக்காக உபயோகிக்கப்படும், பழம் தின்னவுதவும், ஊறுகாயும் போடலாம், இலைகள் புளியாரைக்குப் பதிலாகவுபயோகிக்கலாம், காய் மிக்க துவர்ப்பாகவின் காரமாக வுபயோகிக்கப்படும், இதன் சாறு துணியிலுண்டாகும் இருப்புக் கறையைப் போக்கும், இதில் சிறிய இனம் பச்சை நிறமாயும், வாசனைபுளிப்பில்லாததுமாயிருக்கும், இப்பழத்தின் ரசத்தினின்று சர்பத்து காய்ச்சலாம், இது தேகஉஷ்ணத்தையும் பித்தத்தையும் போக்கும், இச் சாற்றுடன் சர்க்கரை கலந்து வாந்தி சித்தப்பிரமை, பித்தம், குரல் கம்மல் இவைகளைக் கண்டிக்கும். இதன் கஷாயம் சிலேட்டுமம், கண்ணோய், சுக்கில நஷ்டம் இவைகளைப் போக்கும், பழம் இரத்த மூலத்தைப் போக்கும், Coromandel goose berry, sweet blimbing — Averrhoe carambola. The plant was brought from Moluccus and Ceylon and naturalised in India tree 15-20ft, leaves slightly alternate, leaf lets two to five pairs on small petioles; petals yellowish purple, fruit acutely five angled with a smooth yellowish rind, seeds with aril. Fruit rather larger than hen's egg, previous to becoming quite ripe possesses a flavour, when perfectly ripe of a fine amber it possesses a peculiar flavour Leaves, root, and fruit used as cooling medicine. Fruit is eaten, preserved and pickled, leaves are a good substitute for sour sorrel unripe fruit is an astringent and is used as a mordant juice used in removing iron moulds from linen. The small variety when ripe is of a deep green colour without acidity and without its fine. flavour. Syrup can be prepared from its juice and given for excess heat in the body & biliousness. The fruit mixed with sugar and eaten is found efficacious in mental derangements, biliousness, sore throat etc, Decoction prepared from this, is said to cure phlegmatic disorders, eye diseases, spermatorrhoea etc. The fruit when taken will arrest bleeding piles.

**தமரத்தை**, கொச்சித்தமரத்தை, bilimbi — Averrhoa bilimbi.

**தமரம்**, அரக்கு, gumlac, lac; 2. ஈயம், lead.

**தமராக்கவம்** பீர்க்கு, luffa gourd — ridged gourd.

**தமராசம்**, ஓர் வகைச் சருக்கரை, a kind of sugar.

**தமரிடல்**, துளை செய்தல், perforating.

**தமரூசி**, துளையிடும் ஊசி, perforating needle.

**தமரொலி**, கிலுகிலுப்பை, rattle wort — *Crotalaria laburnifolia*.

**தமரோசை**, See தமரொலி.

**தமர்**, துளை, hole; 2. உரோமதமர், hair follicle.

**தமர்காயாச்சிலந்தி**, துளை ஆருதபுண், குழிப்புண், an [ulcer in which the sinus is not healed the opening of the sarpent s.

**தமர்க்கவம்**, See தமராக்கவம்.

**தமர்வாசல்**, குண்டலிசத்தியின்வாய், power at the base of the vertebral colum. 2. மேல் வாய்க்கு அடியிலுள்ள துளை, opening in the upper part of the mouth

**தமர்வாதம்**, மார்புநோய், chestpain; 2. மார டைப்பு, Anginapectoris.

**தமலி**, வன்னி, Arjunas penence tree — Prosopis spicigera.

**தமறைவாகி**, வேங்கை, kinotree — Pterocarpus bilobus.

**தமற்காவம்**, சுக்கு, dried ginger.

**தமனகந்தம்**, See தமனகம்.

**தமனகம்**, மருக்கொழுந்து, southern wood, maids love — Arteme vulgaris alias Aristalochia labiosa. See தவனகம்.

**தமனகன்**, ஓர் வகை நரி, a kind of jackal.

**தமனம்**, See தமனகம்; 2. சாரைப்பாம்பு, rat snake; 3. கண்டங் கத்திரி, prickly night shade; 4. உடம்பிலுள்ள குழாய்; 5. உடம்பின் நாடி நரம்பு முதலியன; 6. இருதயம் அல்லது நாபியினின்று அன்ன ரசம் ஓடும் குழாய்.

**தமனி**, வன்னிமரம், suma tree — Prosopis spicigera; 2. சுத்தரத்தம் ஓடும் நாடி, blood vessel carrying blood away from the heart — Atery; 3. நீர்த்திரவம் ஓடும் வாய்க்கால், any tube or canal by which fluid is conveyed Duct; 4. வாயுக்குழாய்; 5. சுவாசக்குழலின் கிளை, one of the bifurcalions of the wind pipe — Bronclus; 6. விந்துநாடி, spermatic card; 7. நரம்புத்தொந்தம், nerve chain.

**தமனிதி**, வன்னிமரம், see தமனி, 2. தொண்டை; 3. கழுத்து; 4. ஓர்வித வாசனை; 5. மஞ்சள்.

**தமனிதா**, கொட்டைப்பாக்கு, areca nut.

**தமனித்தமனி**, நாடிகளைப் போஷிப்பதற்காக ஏற்பட்ட சிறியநாடியும் தந்துகி நாளங்களும், the small nutrient arteries and veins in the walls of the large blood vessels — Vasa vasorum.

**தமனியக்கநரம்பு**, இரத்தக்குழாய்களை ஒட்டுவிக்கும்நரம்பு nerve the controls the blood vessels — Vasa motor nerve.

**தமனியக்கமாக்கல்**, பொன்னுக்கல், transmutation into gold.

**தமனியம்**, பொன். gold.

**தமனியமாக்கல்**, பொன்னுக்கல், to make into gold.

**தமனுயிருத்தி**, see ஏழிலைப்புன்னை.

**தமனுருபனி**, வேளைச் செடி, five leaved cleome — Gynandropsis pentaphylla.

**தமா**, கசகசா, poppy seeds.

**தமார்க்கதம்**, பீர்க்கு, ridged gourd.

**தமார்க்கவம்**, வேங்கை see தமறைவாகி.

**தமார்க்கவாகி**, see தமார்க்கவம்.

**தமாலகம்**, தாளிசபத்திரி, Himalayan silver fir—Hacourtea cataphareta.

**தமாலகி**, கீழ்க்காய் நெல்லி, niruri plant — Phyllum niruri.

**தமாலகிரி**, see தமாலகம்.

**தமாலதளம்**, பச்சிலை, green herb. green leaf —Zanthochymos.

**தமாலபத்திரம்**, see தமாலபத்திரி.

**தமாலபத்திரி**, திலகமரம், wild cinamum tree — Cinnamomum iners; 2. பெரிய இலவங்கப்பட்டை. cassia cinnamn — Cinnamom tamala. இதனுல் சுரம், சிலேட்டுமம் விஷம், தினவுபோம். It cures fever, phlegm, poison and itching.

NOTE: In former days this was dried leaf of various wild species of cinnamon. It was a classical export from India.

**தமாலம்**, வெள்ளைப் பூவும், மஞ்சள் காயும் வாய்ந்த பச்சிலைமரப், a tree bearing white flowers and yellow fruits like an orange, green leaf; 2. மலைப்பச்சை அல்லது சமுத்திரப் பச்சை அல்லது மலைப்புளி, yellow mangosteen, hill green — Garinia xanthochymus alias xanthochymus tinctorius; 3. மூங்கில்தோல். bamboo skin; 4. இலை, leaf; 5. see தமால்.

**தமாலோமயா**, செம்பரத்தை, changeable rose —Hibicus mutabilis.

**தமால்**, மக்கி மரம்.

**தமாளீதி**, see தமாலகி.

**தமி**, தவனம், maid's love; 2, இரவு, night; 3. ஏகம், single; 4. தனிமை, ஏகாந்தம் solitry.

**தமிசிரம்**, இருள், darkness.

**தமிசு**, வேங்கைமரம், kino tree — Pterocarpus bilobus.

**தமியம்**. கள், toddy; 2. பதினி, sap of palm tree.

**தமியவம்**, விடமருது, a kind of murdah—Terminalia genus.

**தமிரவிருட்சம்**, see திமிசு.

**தமிழாசான்**, see தமிழ்முனி.

**தமிழ்மருந்து**, தமிழ் மருத்துவ நூல்களின் முறைப்படி செய்யு மருந்து, medicines prepared according to ancient Tamil Medical works; 2. சித்த வைத்தியமருந்து, Siddha Medicine.

**தமிழ்முனி**, அகத்தியன், the great sage Agastiya, the patron of Tamil language.

**தமினியம்**, பலிசம், devil tanner, Gruvia asiatica. It is so called from the priest binding the devil he wishes to sub due to this tree

**தமை**, புறக்கரணத்தின் ஒடுக்கம், (in Vedantic Philosophy) restraining the external organs.

**தமையம்**, அரிதாரம். orpiment.

**தமையன்**, see தமையம்.

**தமோகுணம்**, முக்குணங்களில் ஒன்று, தாமசம். one of the three inherent qualities sluggishness, the quality of darkness or malignity, the source of inertness and ignorance. The order of transmigration is according to the influence of this cosmic duality.

**தமோமணி**, மின்மினி firefly.

**தமோமயம்**, இருளடைந்த மனம், the mind enveloped with darkness.

**தமோவிகாரம்**, நோய், disease.

**தம்**, மூச்சு, breath; 2. மூச்சடக்குதல், holding the breath.

**தம்பகம்**, see தண்புகை.

**தம்பசும்பால்**, கலப்பில்லாப்பால், unadulterated cows' milk.

**தம்பட்டங்காய்**, see தம்பட்டை.

**தம்பட்டன்கொடி**, See தம்பட்டை.

**தம்பட்டை**, வாளவரை, பாடாவவரை, இது ஓர் முறுக்குக் கொடி, இதற்குக் கோழியவரை என்றும் பெயர். இது சாதாரணமாய் வேலிகளின் ஓரங்களிலும் புதர்களிலும் பயிராதம் இலைகள் மூன்றுயிருக்கும், பூக்கள் பலவுண்டு, இரண்டு மூன்ருகச் சேர்ந்திருக்கும். ஊதாநிறம், காய்கள் அகலத்தை விடப் பதின் மடங்கு நீளமாயிருக்கும் இது மிக்க உயரமான மரங்களின் உச்சிவரை கொடிபாயும், மழை காலத்தில் பூக்கும். காய் பெரிதாகவும் தட்டையாயும் மேல்தோல் கனதியாகவும் ஒடியக் கூடிய தாயும் உள்ளே காகிதம் போலவும் இருக்கும், வாளைப்போலவும் 9 அங்குல நீளமாயுமிருக்கும். 1½ அங்குல அகலம். விதைகள் பெரியவை, சிவப்பு நிறம், மற்றவைகள் வெண்ணிறம், காயைத் துண்டு துண்டாகத்

தறித்து வேகவைக்க மிக்க மெதுவாயிருக்கும். ஆயினும் பிரென்சு அவரைக்குச் சமகாது. ஐரோப்பியர் இதைப் பிரியமாகத் தின்பார்கள். அவரையைப்போல் பலவித விதைகளைப் பெற்று, பல தினுசுகளாயிருக்கும். விதைகளையும் பூக்களையும் கருதினால் இதில் அநேக விதங்களுண்டு. அவற்றுள் வெள்ளை, சிவப்புதான் முக்கியமானவை. sword bean. jamaica horse bean — Canavalia ensiformis. It is called as fowl's bean. It is a common plant in hedges and thickets. it is a perennial turning creeper. flowers in pairs of two or three, purplish. legumes five to ten times longer than broad, outer skin thick and britle. An extensive climber ascending to the summit of loftiest trees, flowers in the rainy season, the pod is large flat, sword shaped about 9 inches long and one and quarter wide. seeds large, some red and others white. Pod when sliced and boiled is exceedingly tender, a little inferior to the french bean; most whole some and extensively used at the tables of Europeans. It consists of different varieties like beans according to seeds and flowers of different colours and the one with large white seeds and flowers is the most whole some. The red and white are two chief varieties. Note No. 2 is the most whole some of all the species red sword bean — Cannavalia (esculenta) ensiformis; 2. வெள்ளை தம்பட்டை. white flowered sword bean — Cannavalia ensiformis; 3. காட்டுத் தம்பட்டை. wild sword bean cannavalia ensiformis (virosa); 4. கொடித்தம்பட்டை fat podded sword bean — Cannavalia ensiformis (tuagida); 5. கொத்துத்தம்பட்டை downy leaved sword bean — Cannavalia ensiformis (mollis).

**தம்பதங்கம்**, விருசு, an unknown tree.

**தம்பதி**, கணவனும் மனைவியும், husband and wife.

**தம்பம்**, கற்பரிபாஷாணம், a kind of arsenic; 2. சாலம், magic; 3. அக்கினித் தம்பம், which see; 4 see தம்பனம்; 5. see தம்புகை.

**தம்பராமாலை.**

**தப்பலக்கருதும்**, வட்டக் கிலுகிலுப்பை, which see.

**தப்பலங்காய்**, பூவரசங்காய், fruit of portia.

**தம்பலச்சாறு**, வெற்றிலைச்சாறு, betel juice.

**தப்பலபடிகம்**, எச்சிலுமிழும் பாத்திரம், a vessel to receive discharges of spittle — Spittoon. See படிகம்.

**தம்பலப்பூச்சி**, இந்திரகோபப்பூச்சி, இது மிகவும் சிவப்பு நிறம், மேற்புறம் வெல்வெட் பட்டைப்போலிருக்கும், ஒரு பெரிய பட்டாணியளவு பெரிதாயிருக்கும், ஆனால் தட்டையாயிருக்கும், இது சாதாரணமாய் வருஷத்திய முதல் மழையில் சிவப்பு மணற்பாங்கான நிலங்களில் புல்லண்டை காணப்படும், உடம்படியில் கருப்புநிறம், சிறகில்லை, இது பாம்புகடிக்கு உதவுமென்றும் ஆகாச கருடன் கிழங்குடன் சேரத்து வலிபுறுத்தி மருந்தாகவும் கொள்ளப்படும், இதேமாதிரி வெளிநாட்டுப்பூச்சிகளும் உண்டு, leeds fly, scarlet moth — Mutella accidentalis alias Mantiguensis It is an insect scarlet coloured, velvet like coat about the size of a large pea but flat, commonly found immediately after first shower or during the first rain of the season on reddish sandy soil near grass, under part of the body is black, it has no wings Vaidyans consider it efficacious in snake bits, it is a tonic when dried and mixed with skyroot It is not to be confounded with the foreign cochineal insect or indigenous lac insect.

**தம்பலம்**, வெற்றிலைச் சாரம், the juice of betel; 2. see தம்பலப்பூச்சி; 3. இலந்தை, jujube; 4. பாக்குவெற்றிலை யெச்சில், the essence of chewed betel and nut.

**தம்பலி**, மருதமரம், which see.

**தம்பலை**, நில யிலந்தை, jujube; 2. பாக்கு வெட்டிமரம், a tree resembling the nut cracker.

**தம்பவகம்**, விலாமிச்சைவேர், which see.

**தம்பனக்காரன்**, வஸ்துக்களைக் கட்டும் மாந்திரீகன், கண்கட்டு வித்தைக்காரன், magician or conjurer performing magic or miraculous powers by arresting or controlling the Natures forces.

**தம்பனக்குளிகை**, குங்குமப்பூ, அபினி, ஆப்பில் விரைவகைக்கு 1 ரூ எடை, சாதிக்காய் விலை 1 இவைகளைத் தேன் விட்டரைத்து, கடலையளவு மாத்திரை செய்து மாலையில் 6 மணிக்கு சாப்பிடவும், படுக்கையில் வெற்றிலையருந்த வீரியம் அதிகரிக்கும், soffron, opium, seeds of apple each I tola, nut meg I Pw. grind them with Honey and make pills of bengal gram size One to be taken at 6 pm. and at bed time betel must be chewed. It will increase the vitality and consolidate the semen and prevent it from flowing out during intercourse.

**தம்பனக்குளிகை**, துப்பாக்கி அல்லது குண்டடி முதலான காயங்களுக்கும் கத்தி வெட்டுக் காயங்களுக்கும் உடம்பு இடங்கொடாது யாதொரு காயமடையாதபடி யிருக்கவேண்டியும் ஆகாயத்தில் அசைவற நிறுத்தச் செய்யவும் உபயோகிக்கும் ஓர் வித மாத்திரை, a kind of magical pill by which the body is made a proof not only to gun shot wounds but also rendered impenetrable to knife cut etc., so as not to sustain any injury on the body. It also enables one to remain motionless in the region of the sky.

**தம்பனசக்தி**, வஸ்துக்களைக் கட்டச்செய்யும் ஓர்மந்திரம், the art of binding or making a thing motionless through magic.

**தம்பனத்தொழில்**, see தம்பனவித்தை, அதாவது நெருப்பைக் கட்டுதல், restraining the power of fire; 2. வாயைக்கட்டுதல், checking the ferocity of wild animals; 3. அசைவற நிறுத்தல், causing one to stand motionless; 4. கைகால்விழச் செய்தல், suppressing or arresting the powers or faculties; 5. நாவெழாமற் செய்தல், depriving the power of speech etc; 6. மூத்திரம், இரத்தம் ஓடாதபடி செய்தல், restraining or stopping the flow of urine or blood; 7. இயற்கைக் குணத்தை நிறுத்தல், suspending the natural qualities; 8. வறட்சியை யுண்டாக்கி மலத்தைக் கட்டி விடுதல், bring about constipation; 9. விந்தைக் கட்டுதல் அதாவது புணர்ச்சிக் காலத்தில் வெளிவராமல் தடைப்படுத்துதல், மருந்துகள் வறட்சியை யுண்டாக்கி மலத்தைக் கட்டிவிடுதல், restraining or suppressing the secretion of semen during sexual intercourse.

**தம்பனமூலிகை**, 1. கட்டுக்கொடி; 2. பாற்புரண்டி: 3 பரட்டைச்செடி; 4. நீர்முள்ளி; 5. நத்தைச்சூரி; 6. சத்திசாரணை; 7. பூமிசருக்கரைக்கிழங்கு; 8. குதிரைவாலி.

**தம்பனம்**, அட்ட கருமத்திலொன்று, உடம்பிலுள்ள துவாரங்களையும் சுருக்குதல், one of the eight super natural powers i. e. binding or controlling a thing through magic.

**தம்பனம்**, உடம்பிலுள்ள எல்லா துவாரங்களையும் கால்களையும் சுருக்குதல், contraction of all the pores or passages; 2. சுத்தி முறைகளாகிய பஞ்சகருமம், அவையாவன: the cleaning processes of the body. They are:—

1. வாந்தியுண்டு செய்தல், vomitting.
2. பேதியுண்டாக்கல், purging.
3. ஆசனமூலம் குடல் சுத்திசெய்தல், enema.
4. நாசியில் நசியமிடல், nasal douche.
5. இரத்தத்தை வெளியாக்குதல், blood letting.

**தம்பனவாதம்**, திருத்தமாக பேசவொட்டாமல் நாக்கை இழுத்துக் கொள்ளுதல், paralysis of the tongue; 2. இரசம் முதலிய நெருப்புக்கு ஓடும் சரக்குகளை ஓடாமல்படி கட்டி மேற்கொண்டு வேலை செய்து இரும்பு, செம்பு, பித்தளை இவைகளைப் பொன்னுக்கும் வாதம், (In Alchemy) transmutation of inferior metals such as iron copper, brass etc., into gold by the process of consolidation of substances like mercury, sulphur etc.

**தம்பனவித்தகன்**, மாந்திரீகன், magician; 2. சூனியக்காரன், sorcerer.

**தம்பனவித்தை**, மந்திரத்தில் நாவெழாமலும் கைகால் அசையாமற்படியும் செய்தல், (in Magic) the art of making one incapable to speak or rendering him unable to speak and move about by arresting his limbs; (வாதத்தில்) 2. நெருப்புக்கு ஓடும் சரக்குகளை ஓடாதபடி நிறுத்துதல், (in Alchemy) the art of consolidating or arresting from evapourating substances which easily pass off into vapour mercury sulphur arsenic etc; 3. கண்கட்டு வித்தை, the art of creating illusion and making one believe what he would not do in the ordinary course.

**தம்பனவித்தைக்காரன்**, மந்திரத்தால் கட்டுபவன், one who is arresting the motion of any thing, a dabbler in spells.

**தம்பனை**, தமனமரம், tamana tree of Ceylon — Mischodon zeylanicus.

**தம்பா**, see தம்பலம்.

**தம்பாக்கு**, சொகுசா, அதாவது தங்கமும் செம்பும் சேர்ந்த ஓர்வகைக் கலப்புலோகம், an alloy of gold and copper; 2. ஓர்வகைத் தங்கத்தைப் போன்ற கலப்பு, a kind of pinch beck — an alloy of 3 of zins 16 of copper, brass being one of zinc and 2 of copper. It is ruddy like gold.

**தம்பிக்கச் செய்தல்**, அசைவறச் செய்தல், causing to become motion less: 2. நிறுத்துதல், causing to stop; 3. நெருப்பிற்கு ஓடாமற்படிச் செய்தல், causing a body not to evaporate before fire; 4. வாயு நிறுத்தல், stopping the respiration.

**தம்பிக்கப்பண்ணல்,** see தம்பிக்கச்செய்தல்.

**தம்பித்தல்,** வாயு அல்லது மூச்சை அடக்குதல், suppressing breath or respiration: 2. மந்திரசக்தியால் தடுத்தல், counter acting by magical incantations.

**தம்பித்துநிற்றல்,** அசைவறநிற்றல், standing motionless; 2. மயங்கி நிற்றல், the state or condition of being stunned.

**தம்பிரான்பூடு,** கருமத்தை, a black variety of datura.

**தம்புகை,** see தண்புகை.

**தம்புவான்,** ஓர் கடல்மீன், a sea fish

**தம்பைக்காய்,** நாரத்தை, bitter orange — Citrus aurantium.

**தம்மட்டை,** கஞ்சுண்டை, yellow flowered resin wood — Pittosperum floribundum.

**தம்மலே,** இலந்தை, jujube tree — Zizyphus jujube.

**தம்மி,** தாமரை, lotus flower.

**தம்மிலம்,** மயிர்முடி, tuft of hair on the head.

**தயங்கிப்போதல்,** திகைத்தல், being perplexed.

**தயங்குதல்,** மயங்குதல், wavering; 2 நடுங்கல், trembling.

**தயங்குவாளி,** மனோசிலே, red orpiment — impure bisulphate of arsenic.

**தயச்செவம்,** அவல், flaked rice.

**தயநாதசாதி,** சைதன்னிய பிரகாச சாதியாகிய நால்வகை ஆண் சாதிகளில் ஒன்று, one of the four classes of men.

**தயந்திரம்,** உறிஞ்சுகை, sucking.

**தயமணற்குன்றம்,** கருமணல். black sand.

**தயாநிதி,** பிராணயாமம், regulation of respiration.

**தயித்தமணி,** மரமஞ்சள், tree turmeric.

**தயிருறைதல்,** தயிர் இறுகுதல், thickening of milk into curd or cream

**தயிரேடு,** தயிரின்மேல் படர்ந்த ஏடு, cream over the curdled milk.

**தயிர்,** மூளைக்கொழுப்பு, fat of brain.

**தயிர்,** பிறையூற்றின அல்லது உறைந்தபால். இது சாதாரணமாய் காய்ச்சிய பாலில் சிறிது மோர் ஊற்றி இரா முழுதும் வைப்பதினாலுறையும் மோர், அல்லது சில சமயங்களில். காய்ந்த மாங்காய், புளி, எலுமிச்சமபழரசம், கருக்கள் வெள்ளி இவை உபயோகிப்பதனாலும் பால் தயிராக உறைபடும். ஆனால் மோரைப்போல் அவ்வளவு சீக்கிரத்தில் உறையாது.

இது ஆடை எடுத்த தயிர், ஆடை எடுக்காத தயிர் என இருவகையுண்டு. ஆடையெடுக்காத தயிரைத்தான் கடைந்து அதினின்று வெண்ணெய் எடுப்பதுண்டு,வெண்ணெய் பிரிந்த தயிருக்கே ஆடையெடுத்த தயிரெனப் பெயர், இவ்வாடை யெடுத்த அதாவது ஏடு நீக்கிய தயிரானது சிலேட்டும ரோகம், ஆயாசம், மூத்திரக் கிரிச்சரம், வாதக் கிராணி, குஷ்டம், மேகம் இவைகளை நீக்கும், வேனிற் காலத்தில் இதைச் சோற்றிலிட்டுண்ண உடம்பின் சூட்டைப் போக்கும், இதைக் கறிவகைகளில் சேர்த்து தயிர்க் குழம்பு, தயிர் வடை, தயிர்ப் பச்சடி டாங்கர் எனப் பலவகைப் பதார்த்தங்கள் செய்வதுண்டு, இத்தயிர் வகைகளில் பசுவின் தயிர்தான் உடம்பிற்கு சிறந்தது எனக் கருதப்படும். எருமைத் தயிரோ உடம் பெரிச்சல், பித்தநோய் இவைகளைப் போக்கினாலும் கபத்தைப்பற்றிய நோய்கள், கரப்பான் வாதம், அதிதூலரோகம், மந்தபுத்தி முதலிய நோய்களை உண்டாக்கும், வெள்ளாட்டின் தயிரோ உடம்பிற்கு அதிக உஷ்ணத்தையுண்டாக்கும், ஒட்டைத் தயிரோ அதிதூலரோகம், கரப்பான் இவைகள் உண்டாம் . யோகிகளுக்கோ அல்லது காய கற்பத்துக்கோ தயிர் உதவாது, curdled milk. It is generally prepared by adding a little butter milk to warm milk and allowing the whole to stand for a whole night. Sometime when butter milk is not available dried mango, a little tamarind lime juice and even a piece of tarnished silver are used, but they are not so very effective, as this process, however takes a longer time than is necessary to curdle the milk which will be found thick acidulous and jelly like mass. It consists of two kinds viz: one from which the cream is separated and the other

not and it is from the latter that butter is prepared. It is made by churning the curd and kneading the product.

The curd from which cream is separated is considered agreeable digestive and cooling and it is said to cure phlegmatic disease fatigue, stricture of urine or difficulty in passing urine, diarrhoea from, Vatha (humour) taints of leprosy etc — taken in excess it cures biliousness and catarrh. Mixed with cooked rice and eaten in summer, it is said to have cooling effects in the system and many preparations such as curd sauce curd cakes, puddings and jellies are domestically prepared with it.

Although curd is prepared from the milk of several demestic animals such as cow, buffalo, goat, sheep, camel etc, the one of cow is considered whole some, where as that from buffalo, though said to cure constitutional heat and bilious diseases, is said to give rise to various complaints as phlegmatic diseases, cutaneous eruptions of the skin, corpulency. dullness of intellec etc and that of camel is not free from causing the same said diseases. Curd as a whole is condemned in the diet of yogis and for those desiring rejuvination.

**தயிர்கடைதல்,** churning the curdled milk.

**தயிர்தோய்த்தல்,** பால் உறையிடல், thickening or coagulating milk curdling milk.

**தயிர்க்குழம்பு,** பசுந்தயிரைக் கொண்டு காமாலைக்காகத் தயாரிக்கும் ஓர் மருந்து, a thick paste made with cowcurd as a chief ingredient amongest other drugs and used for jaundice; 2. தயிருடன் இரும்புக்கிட்டத்தையும் சேர்த்துத் தயாரித்து பாண்டு, சோகை முதலிய நோய்களுக்குக் கொடுக்கும் ஓர் மருந்துக்கூட்டு, a semi solid preparation consisting chiefly scoria of iron diffused in thick curd, prescribed by Vaidyans for dropsy, anemia etc.

**தயிர்ச்சலம்,** see தயிர்த்தண்ணீர்.

**தயிர்ச்சுண்டி,** நீரை வடித்த அல்லது இறுத்த தயிர், curd deprived or devoid of water; 2. இறுகியதயிர், solid curd; 3. புளித்த தயிர், sour curd.

**தயிர்ச்சுண்டிச் சூரணம்,** மந்தம், வயிற்றுப் பொருமல், மூலவாயு, பேதி முதலியநோய் களுக்குப் புளித்தமோரில் போட்டுக் கொடுக்கும் ஓர் தயிரும் பஞ்சலவணம் சுக்கும் சேர்ந்த மருந்து, a medicinal powder prepared with solid curd, five salts and dried ginger and given for dullness of appetite diarrhoea etc.

**தயிர்த்தண்ணீர்,** தயிரின் மேல் நிற்கும் தெளிந்த தண்ணீர், water found along with thick portion of the curd, the watery portion of the milk separated from the curd — Whey.

**தயிர்த்தாழி,** தயிர் கடையுந் தாழி, a vessel in which curdled milk is put and churned. See குடாரு.

**தயிர்த்தேட்டை,** தயிரில் தெளிவிறுத்த நீர், See தயிர்த்தண்ணீர்.

**தயிர்மீதுதேட்டை,** See தயிர்த்தேட்டை.

**தயிர்மேல் தண்ணீர்,** தயிர்த்தெளிவு, அதாவது தயிரைத் துணியிற் கட்டித்தொங்க வைத்து அதினின்று வடியும்நீர், curd is tied in a piece of cloth and hung by a rope. Water like liquid will drip from that bundle and it is collected in a clean vessel. This is curd, fluid.

**தயிர்வேளை,** see தைவேளை.

**தயிலகித்தம்,** பிண்ணாக்கு, oilcake.

**தயிலசாதனம்,** நாவிநெய், ghee prepared with aconite.

**தயிலச்சிக்கல்,** எண்ணெய் அடியில் தங்கும் கசடு, the deposit found in stagnating oil.

**தயிலத்தளுக்கு,** வயிரம், diamond.

**தயிலபாணிகம்,** வெண்சந்தனம், santanum album.

**தயிலபீதம்,** அத்திப்பிசின், gum of fig tree.

**தயிலப்பிப்பிலிகை,** எண்ணெய்ப் பசையுள்ள எறும்பு, oily ant.

**தயிலப்போக்கு,** தைலங்கள் உடம்பினுள் தொழிலை நடத்தும் விதம், characteristic actions of oils in the body.

**தயிலமாடுதல்,** தைலம் தேய்த்து முழுகல், oil bath

**தயிலமாலி**, எண்ணெய்த்திரி, oil wick.

**தயிலமிறக்குதல்**, தயிலம் வடித்தல், filtering medicated oil.

**தயிலமெடுத்தல்**, தாவரம் அல்லது தாது வர்க்கங்களினின்று தைலச்சத்து எடுத்தல், extracting oil from oily substances whether of vegetable or mineral kingdom.

**தயிலமெரித்தல்**, சுடர்த்தைலம் வாங்கல், extracting medicated oil by burning or heating a twisted cloth steeped oleaginous substances.

**தயிலம்**, மருந்தெண்ணெய், see தைலம்; 2. எண்ணெய், oil in general.

**தயிலம் காய்ச்சுதல்**, தயிலம் தயாரித்தல், preparing medicated oil.

**தயிலம்தேய்த்தல்**, நோய்கொண்ட பாகத்தை மருந்தெண்ணெயால் உடம்பில் தேய்க்குதல், rubbing medicated oil on the affected part of the body.

**தயிலம் தேய்த்து முழுகல்**, மருந்தெண்ணெயைத் தலைகிட்டு நீராட்டல், anointing the head and body with medicated oil and then having a bath.

**தயிலம்பூசல்**, உடம்பில் எப்பாகத்திலாவது மருந்தெண்ணெயைப் பூசுதல், rubbing on any part of the body affected with medicated oil.

**தயிலம்வைத்தல்**, மருந்தெண்ணெயை அல்லது அதில் தோய்த்த சீலையை புண், புரைகளுக்கு வைத்தல், applying medicinal oil for ulcers and sinuses.

**தயிலவர்ணம்**, தேன், honey.

**தயிலவாரிப் பிரசாதனம்**, தேத்தான்கொட்டை, water clearing nut — Strychnos potatorum.

**தயிலாப்பியங்கனம்**, See தயிலம் தேய்த்து முழுகல்.

**தரகண்டிகம்**, தண்ணீர் விட்டான், water root — Asparagus racemose.

**தரகண்டிகை**, ஆனைநெருஞ்சில், elephant caltrope — Pedalium murex.

**தரகதி**, தேரகத்திமரம், ஓர்வகை அத்திமரம், இதன்பழம் வாய் வேக்காட்டுக்குக் கொடுப்பதுண்டு, இதைப் பாலில் வேகவைத்து, குடற் சிக்கலுக்குக் கொடுக்கலாம், சுனையுள்ள இலை உப்புக்கடிதாசிக்குப் பதிலாக மரச்சாமான்களை மெருகிட உதவும், large carausa rough leaf fig — Ficus cunia — alias F. Conglomerata. Its fruit is administered in aphthous complaints. It is boiled in milk and given for visceral obstructions. Rough leaf is used for polishing furniture in place of sand paper.

**தரகத்தி**, தேரகத்தி. a kind of fig tree; see தரகதி.

**தரகம்புல்**, வாசனைப்புல், fragrant grass.

**தரகு**, தரகம்புல், a kind of grass.

**தரக்கு**, புலிக்குடத்தி, hyaena; 2. புலி, tiger; 3. கழுதைப்புலி, chittah.

**தரசம்**, மாமிசம், flesh.

**தரசி**, ஒட்டப்புல், a kind of grass with little clots — sticky grass.

**தரஞ்சபீன்**, குராசான், குருடிஸ்தான் முதலிய தேசங்களில் முட்செடிகளின் மேற்கற்கண்டு துண்டுகளைப்போல் உறைந்திருக்கும் ஓர் வகைப் பனி, இதை செடியின் இலைகளின் மேல் துணிகளை விரித்துப்போட்டுப் பிறகு எடுத்துப் பிழிந்துகொள்வதுண்டு, இது பழுப்பாயும் தித்திப்பாயுமிருக்கும். பேதிக்குணமுண்டு; dew drops found frozen on the thorny plants in Khurassan, Kurdistan and other countries. In is used by Unani doctors. It is obtained by spreading cloth over the plants and wringing out water soaked in the cloth. It is sweet and laxative.

**தரட்டை**, ஓர் கடல் மீன், a sea fish.

**தரணம்**, அரிசி, rice.

**தரணி**, பூமி, earth; 2. சூரியன், sun; 3. மலை, mountain; hill; 4. முட்பன்றிகொம்பு, quill of porcupine; 5. மருத்துவன், physician.

**தரணிகந்தம்**, ஓர் தின்னும் கிழங்குச்செடி, esculent root of a bulbous plant.

**தரணிகளைகொம்பு**, பன்றிக்கொம்பு, hog's horn.

**தரணிசம்**, அனேக நுண்ணிய இரத்தக் குழல்கள் பின்னுதலினாலாகிய கண்விழியின் இடைச்சவ்வு, the vascular coat or layer of the eye — Choroid.

**தரணிநாதம்**, காந்தம், magnet.

**தரணிநாதன்**, சவர்க்காரம், fuller's earth.

**தரணிரத்தினம்**, மாணிக்கம், a kind of ruby dug out from the ruby mines; 2. நாகரத்தினம், that variety which is supposed to be on the head of certain cobras.

**தரணிவாரக்கல்**, கானக்கல்.

**தரணீதரம்**, ஆமை, tortoise.

**தரதம்**, சாதிலிங்கம், vermilion.

**தரந்தம்**, தவளை, frog.

**தரம்**, அரக்கு, lac; 2. சங்கு, conch, chunk; 3. பூண்டு, small plant; 4. அச்சம், fear, terror; 5. மலை, hill; 6. வலி, strength; power; 7. கருப்பை, uterus; 8. உடம்பின் நாளம் அல்லது குழாய், tubulare vessel of the body or vain; 9. தலை, head.

**தரம்புஜம்**, ஒருவகைச்செடி, citrullus vulgaris.

**தரல்**, தருதல் as வலி தரல், giving pain.

**தரவு**, பிடரி nape.

**தரவூடான்**, வெண்ணிறமுள்ள ஓர் வகைக் கடல்மீன், a white sea fish.

**தரவை**, களைமூடிய உவர்நிலம், brackish soil full of weeds.

**தரளம்**, முத்து, pearl; 2. அரக்கு, lac.

**தரளை**, கஞ்சி, boiled liquid rice; 2. கள், toddy; 3. மது, any fermented liguor.

**தரா**, ஓர்வகைக் கசப்புக்கீரை, a kind of bitter green a low spreading bitter herb resembling chick weed; 2. திராயிலை, Indian chick weed -- Mollugo spergula; 3. செம்பும் காரீயமும் சேர்ந்த கலப்பு, a mixture of copper and spelter; 4. தம்பாக்குத் தததவும் கலப்புலோகம், a compound of copper & zinc making pinchbeck; 5. see கச்சந்திராய்; 6. சங்கு, conch.

**தரா**, இது ஓர் படரும்கொடி, எங்கும் கிடைக்கக் கூடியது, உழுத நிலங்களில் செழிப்பாக வளரும், இதற்கு துரா, பம்பந்திராய், மதுகம், செந்திராளனப் பல பெயர்களுண்டு, அன்றியும் வியர்வையையும், சிறுநீரையும் பெருக்கும், இது கிருமிகாசினி, இலகுவிரேசனி குணம் வாய்ந்தது; இது மாத விடாய்ச் சிக்கல், கண்காசம், கண் புகைச்சல், சந்நிபாத தோஷம், வித்திரதிக்கட்டி இவைகளைக் குணப்படுத்தும், பெண்களுக்கு முலைப்பால் சுரக்கும், இதன் இலை அரோசகம், திரிதோஷம், நீர்த்தாரை எரிச்சல், தாகம், ஆயாசம், களைப்பு, இங்நோய்களைப் போக்கும். மேலும் இதில் செந்தரா என்று வேறு இனம் உண்டு. அதன் இலையை அரைத்து தாம்பிரம் அதாவது செம்புத்தகட்டிற்குப் பூசிபுடமிட களிம்புபோய் வெட்டை ஆகும், இலைக் கஷாயம் ஷெ நோய்களுக்குக் கொடுக்கலாம், இவ்விலையை உலர்த்திக் கஷாயமிட்டுக் குடிக்க மலபந்தம் நீங்கும், இவ்விலையுடன் மஞ்சள் சேர்த்து அரைத்துப் பிளவைகளுக்குக் கட்ட பழுத்துடையும், ஷெ இலையுடன் பன்னீர்ப்பூ சேர்த்து கஷாயமிட்டுக் குடிக்க வெண் குஷ்டம் மாறும், இலையைச் சூரணம் செய்து சுரத்திற்கும் காமாலைக்கும் கொடுக்கலாம், தராவிற்கும் பம்பந்தராவிற்கும் பேதமுண்டு, தரா — படர்ந்த கொடி, சிறிய இலைகள், பம்பந்தரா — தரையில் அதிகம் படராது, இலைகள் பெரியவை. ஆனால் இரண்டிற்கும் குணம் ஒன்றே, common fumitory — Fumaria parviflora — It is a common creeper to be found all over India. It grows luxuriously in cultivated soils. Although it has several names, the red variety is the most useful for its medicinal effects. It is said to cure many diseases — Menstrual disorder especially amennorrhoea, eye diseases, cataract, presbyopia, typhoid fever, cancer etc. It is diaphoretic. and diuretic as also anti dotel and aperient. The leaves of thy seed variety made into a pasts and applied to copper leaf and then calcined is said to came brittle thus removing the verdigris. They form all effcacious remedy. When used as decoction for the above mentioned disease. The infusion of dried leaves is laxative .The leaves mixed with turmeric powder and made into past is an application for boils and abscesses or carbuncile. When mixed with lavender flower and made into a decoction is effective in white lepresy. The leaves when taken internally as a powder is said to cure fever and jaundice.

**தராகதம்பம்**, see கடம்பு.

**தராக்கினி**, see சடாாக்கினி.

**தராசதம்**, See கொடுக்காய்ப்புளி.

**தராசத்து**, பூமிக்குள்ளிருந்து வெட்டியெடுக்கப்படும் வஸ்து, anything due out of the earth in the condition of fossic.

**தராசிகம்**, பெருமருந்துப்பூடு, ஈஸ்வரமூலி, great medicine, Indian birth wort — Aristolochia indica.

**தராசிதா**, கொட்டாஞ்சி, a kind of fruit.

**தராசு**, வெள்ளெருக்கு, madar bearing white flowers. Calatrophis gigantia lalbiflora; 2. *கைச்சந்திராய்*, a prostate plant.

**தராசுக்கொடி**, பெருமருந்து அல்லது ஈசுர மூலி, see *தராசிகம்*: 2. *முல்லை*, a kind of jasmine — jasminum sambac.

**தராச்சம்**, see *தராச்சா*.

**தராச்சா**, முந்திரிகை, grapes — Vitis vine fera.

**தராணி**, எருக்கு, madar plant — Calotrophis gigantia.

**தராதரம்**, மலை, mountain; 2. *மூலாதாரம்*, ( in Philosophy ) one of the six psychic centres of the human body ( one of the six supports of the body )

**தராபகம்**, இடம் விட்டு பாய்தல், the escape of anything from its proper place — Extravasation as blood from blood vessels.

**தராபத்திரம்**, *தர்ப்பைப்புல்*, sacrificial grass.

**தராபற்பம்**,

**தராப்பற்று**, *தராசேர்ந்த ஓர் கலவைலோகம்*, an alloy of *தரா*, which see.

**தராப்பூடு**, நாரத்தை, bitter orange.

**தராமணல்**, வெள்ளிமணல், sand mixed with silver — Silverore.

**தராமண்டலம்**, பூமி, earth; 2. *மூலாதாரம்*, the lowest situated centre or support of the body.

**தராமலை**, *நாகம் கிடைக்கும் மலை*, mountain in which zine is found.

**தராய்**, see *திராய்*; 2. *கச்சந்திராய்*, Indian chick weed — Mollugo paroiflora; 3. see பிரமிப்பூடு.

**தரிசநரம்பு**, பார்வைநரம்பு, optic nerva.

**தரிசநரம்புச் சாலம்**, பார்வை நரம்புகள் சேர்ந்த வலைபோன்ற சாலங்கள், a fine network of optic nerve — Retina.

**தரிசநூல்**, பார்வையைப்பற்றிச் சொல்லும் நூல், the science of the nature and laws of vision and light — Optics

**தரிசம்**, பலவீனம், weakness; 2. அலித் தன்மை, importance; 3. *பேடி*, eunuch.

**தரிசவம்**, *சந்திரகாந்தச் செடி*, a plant.

**தரிசனபேதி**, காட்சியிலிரும்பைப்பொன்னுக்கு மருந்து, a medicine capable fo converting iron into gold by merely exposing it; 2. குரு தரிசனத்தால் ஆன்மாவுக் கேற்படும் மாற்றம், transforming effects on the soul on the appearance of a spiritual leader, See தெரிசனபேதி.

**தரிசனம்**, கண்பார்வை, eye sight; 2. *கண்ணாடி*, mirror; 3. *மனக்காட்சி*, mental illumination; 4. *அறிவினாற் காணும்காட்சி*, intellectual perception; 5. *ஆறுவகைதத்துவ விசாரணை*, six systems of Philosophy.

**தரிசனவேதி**, See *தரிசனபேதி*; 2. *இழிந்த உலோகங்களைப் பொன்னுக்கும் பச்சிலை வகை*, a medicine capable of converting iron into gold by merely exposing it.

**தரிசனுவரணீயம்**, பார்வைக் குறைவு, imperfection of sight.

**தரிசனை**, *கண்ணாடி*, mirror.

**தரிசி**, see *தரிசநரம்பு சாலம்*; 2. பார்வை தெரியும் படியாக உள்ளே ஏற்படுத்தப்பட்ட ஓர்வித அமைப்பு the innermost perceptive structure of the eye.

**தரிசித்தல்**, ஞானக்கண்ணாற்காணல், perceiving with spiritual faculty.

**தரிசியம்**, *காணப்படுகிற பொருள்களின் உருவங்கள் விழும் கண் விழியின் உட்சவ்வு*, the inner membrane on which the reflection of the objects around [fall in the shape of an image, apple of the eye so called from the baby like figures seen on it pupil; 2. தோன்றுவது, that which is visible; 3. retina.

**தரிசில்**, *சத்தியுப்பு*, which see.

**தரிஞ்சகம்**, *அன்றில்*, nightingale of India celebrated for its song.

**தரிஞ்சி**, *சுரபுன்னை*, sorra poon, fragrant poon — Calophyllum longifolium.

**தரித்தல்,** கருபந்தரித்தல், receiving into and forming in the womb; 2. தங்குதல், remaining, lodging; 3. தரித்துப் பிறத்தல், being conceived and born; 4. சுமத்தல், bearing; 5. நிலைபெற்று நிற்றல், to stand firm; 6. தின்னுதல் as in தாம்பூலந்தரித்தல், chewing as betel nut.

**தரித்துவம்,** தரித்தலாலான செய்கை, the act of retaining.

**தரிபடுதல்,** நிலைபெறுதல், becoming stationary.

**தரிபெறுதல்,** see தரிபடுதல்.

**தரிப்பு,** நிறுத்துகை அல்லது தங்குகை, retention.

**தரியாமை,** கொள்ளாமை as கருப்பந்தரியாமை, not conceiving as pregnancy,

**தரு,** மரம். tree; 2. தேவதரு, devdar, Deccany deodar — Erythroxylm monogynum; 3. பாரிசாதம், a devine flower; 4. மந்தாரம், coloudy weather, 5, தேரையர் செய்த ஓர் தமிழ் வைத்திய நூல். a Tamil-treatise on medicine compiled by Teraiyar, a sage; 6. அரிசந்தனம், a kind of sandal tree.

**தருகண்ணி,** ஓர் வகை காக்கட்டான். a kind of mussel, shell creeper—Clitorea ternatia.

**தருகுதல்,** நிலைத்தல், தங்குதல். being retained.

**தருக்கல்,** சிலாநாகம், which see.

**தருக்கு,** செருக்கு, egoism.

**தருக்குப்புடம்,** குறைந்த நெருப்பைக் கொண்டு போடும்புடம், calcination effected with small fire.

**தருசனி,** வேசி, prostitute.

**தருசனம்,** புணர்ச்சி, copulation.

**தருசாந்திரம்,** தயிர், curd.

**தருசாயி,** பறவை, bird.

**தருசாரம்,** கற்பூரம், camphor.

**தருசிரோணி,** பெருங்குரும்பை, Ceylon sanseviera —Sanseviera roxburghiana.

**தருசீவனம்,** மரவேர், root of a tree.

**தருச்சா,** கற்பூரம், camphor, see தருச்சாரம்.

**தருச்சாயி,** பறவை, bird.

**தருச்சாரம்,** கற்பூரம், camphor.

**தருச்சிதம்,** தாகம், thirst.

**தருடம்,** தாமரை, lotus.

**தருணகமாதி,** ஆமணக்கு, castor seed.

**தருணகாகித்தம்,** குறண்டி, corandy — Lepidagathis.

**தருணக்கஞ்சி,** உரிமைக் கஞ்சி, a liquid food administered to a patient at the last moment of death.

**தருணசீரம்,** பெருஞ்சீரகம், large cumin, sweet cumin — Pimpinella anisum.

**தருணசுரம்,** சுரம் ஆரம்பித்தது முதல் 9 நாள் வரை காயும் சுரம், the name given to fever continuing upto nine days; 2. முதிர்ச்சியடையாத காய்ச்சல், ஆரம்பக்காய்ச்சல், incipient fever, slight fever.

**தருணசேபிகம்,** குறட்டை, a kind of gourd—Trichosanthus palmata.

**தருணதை,** see தருணி.

**தருணஸ்தி,** முருந்து எலும்பு குருத்து—Cartilage.

**தருணநாரி,** சிறு நன்னாரி, small leaved sarsaparilla, swallow wort — Hemidesmus, indicus.

**தருணப்பிரசவம்,** கருப்பம் நிறைந்து இன்றைக்கோ நாளைக்கோ என்ற நிலைமையிலிருக்கும் பிரசவம், pregnancy in which delivery is expected every day — Fullterm pregnancy.

**தருணம்,** see தருணசமாதி; 2. இளமை tenderage; youth; tenderness; 3. பெருஞ்சீரகம், large cumin seed; 4 முருந்து, cartilage; 5. see ஆமணக்கு, castor.

**தருணவக்கினி,** சித்திரமூலம், Ceylon lead wort — Plumbago zeylanica.

**தருணன்,** சரியான வாலிப வயதுள்ளவன், young man at the age of puberty.

**தருணஸ்தி,** கொழுப்பு, fat; சவ்வு, membrance; 3. சளிசவ்வு, mucous membrane; 4. மெது வெலும்பு, soft bone; 5. முருந்து, cartilage.

**தருணயம்,** இளமையாதல், becoming or remaining young or fresh.

**தருணி,** கற்றாழை, aloe; 2. மங்கை பருவமுள்ள பெண்; a girl between 12 and 13 years of age; 3. பதினாறு வயது தொடங்கி 30 வயது வரை (யுள்ள பருவப் பெண்) woma'n age between 16 and 30 years; 4. ஓர் செடி, Rosa alba.

**தருணிகம்,** see தருணி, 2. தகரை, ring worm plant — Cassia tora.

**தருணிமான்,** இளமை, youth; juvenility.

**தருணீர்,** குங்குமச் செவ்வந்தி, red chamomile — Chrysanthemum indicum (rubra)

**தருணோத்தமம்,** chondroma.

**தருதித்தம்,** சிறு நீலி, a small variety of indigo plant.

**தருத்துமணி,** மரமஞ்சள், tree turmeric.

**தருநாடகம்,** ஓர் தமிழ் வைத்திய நூல், a Tamil treatise on Medicine.

**தருநிறப்பஞ்சரம்,** காந்தம், magnet; 2. காந்தபாஷாணம், a kind of arsenic.

**தருபகா,** செம்பரத்தை, shoe flowers shrub— Hibiscus rosa sinensis.

**தருபதில்,** புட்பராகம், one of nine gems — Topaz.

**தருப்பகச்லேட்டுமம்,** உடம்பை காப்பாற்ற வேண்டி (அமைந்த) ஐந்து பிரிவாகிய சிலேட்டுமத்தில் சிரசிலுள்ள ஓர் பகுதி. இது கபம் தலையில் தங்கி நிற்பதால் அப்பாகத்தினது உறுப்பின் தொழில்களுக்கு ஆதாரமாயுள்ள ஓர்வித நீர்ப்பசை, one of the five phlegms, the cerebral fluid functioning in the organ of cerebral region — Cerebral ventricles.

**தருப்பணம்,** கண்ணடி, mirror, see தர்ப்பணம்.

**தருப்பம்,** நாவிச்சட்டம், அதாவது கஸ்தூரி, musk; 2. வெப்பம், heat.

**தருப்பி,** அகப்பை, wooden spoon.

**தருப்பூசணி,** See தர்ப்பூசணி.

**தருப்பூசை,** கெவுளிபாத்திரத் தென்னை அதாவது கெவுளி பாத்திரமாகவுபயோகிக்கப்படும், பெரிய ஓட்டையுடைய தேங்காய் மரம், a variety of cocoanut tree which bears big fruits whose shell is used by beggars or medicants as bowl.

**தருப்பை,** தருப்பைப்புல், இதற்குக் குசப்புல், நாக்கறுத்தான்புல், ஓமப்புல், அருச்சானைப் புல், குசதர்ப்பை எனப்பல பெயர் வழங்கும், அமிர்தங் கடைந்த காலத்தில் அவ்வமுதம் தர்ப்பைப் புல்லின் மேல் சிந்த அதை ஆவலுடன் பாம்புகள் நாவால் நக்க நாக்கறுப்புண்டநால் நாக்கறுத்தான்புல் எனப் பெயர், இதன் வேர் படருந் தன்மையது, அடித்தண்டு கனதியாகவும் நாணலைப் போலவுமிருக்கும், இலைகள் உறப்பாயும், தட்டையாயுமிருக்கும், இது உலர்ந்ததரைகளில் முளைக்கும், கிளைகள் அடர்த்தியாயும், பரந்ததாயுமிருக்கும், அடித்தண்டு நேராகவும் உருண்டையாகவும், வைதீக கருமங்களுக்கு முக்கியமானதாகவும் கருதப்படும். ஓமங்களுக்கு இதைப் பிராமணர்கள் கையிலணிந்து சடங்குகளை நிறைவேற்றுவார்கள், விக்கிரகங்கள் ஆராதனைக்கு இதை அடியில் பரப்புவார்கள், சிரார்த்தங்களில் பிண்டபிரசாதங்களை இப்புல்லின் மேல் வைத்து அதன் மேல்பூக்களையும் சந்தனக்குழம்பையு மிடுவார்கள், சாகுந் தருவாயிலிருப்பவனையும் இப்புல்லின் மேலிட்டு சாங்கியம் செய்வதுண்டு, வைத்தியத்தில் இப்புல்லை நீரைப்போக்கவும் சுறுசுறுப்பை உண்டாக்கவும் உபயோகிக்கலாம், இதைக் கஷாயமிட்டுக் கொடுக்க சில் விஷ தோஷங்கள், சுரம், கபம், தாகம், தினவு முதலியவைகள் சர்ந்தப்படும், இதை விசேஷமாகப் பெரும்பாட்டுக்கும், சீதபேதிக்கும் கொடுப்பதுண்டு, இப்புல்லில் பிரம தர்ப்பை, காட்டுத்தர்ப்பை என பல வகைகளுண்டு, sacred kusa grass, daub grass — *Eragrostis cynosuroides.* It is also known as coosha grass, tongue grass and sacrificial grass. It alludes to a legend that serpents greedily licked the Amirtha that had fallen upon this grass, when churned and had their tongue forked. The root is creeping, culms stout and reed like, leaves rigid and flat, common in dry ground. branches scattered and dense, culms straight, round and smooth, leaves long with sharp points. It is especially holy and in great demand in votive offerings and religious ceremonies, it is strewed in the alter and held by brahmins in their hands whilst repeating the

ritual. It is also placed on the ground as a seat for the idols. In the shrauddham (*anneal ceremonies for the dead*) the fineral cake is placed on this grass and before offering it water mixed with flowers and sandal paste is poured on the cake. A dying Hindu when hopes for his recovery are lost is laid on a bed of darbay grass and ceremonies are performed. Medicinally it has *diuretic and stimulent properties*. Decoction of the leaves is said to alloy small poisonous bites, fever, thirst itching etc. There are several varieties as Brahmas dharbay, wild dharbay etc.

**தருப்பைபுழுனை**, நுண்ணியவறிவு, a sharp intellect of a clever man.

**தருமசந்ததி**, ஆயிரங் காய்ச்சித் தென்னை a variety of cocoanut tree yielding abundant fruit.

**தருமணம்**, சடச்சி, matted hair plant — Grewia arborea.

**தருமணற்சுக்கான்**, கருப்பு சுக்கான்கல், black lime stone.

**தருமதனம்**, கன்னல் சருக்கரை, sugar obtained from sugarcane.

**தருமதேவதை**, the great Diety of right eousness.

**தருமபத்திரம்**, அத்தி, fig tree — Ficus glomerata.

**தருமராசன்**, பாலைமரம், iron wood tree — Mimusops hexandra.

**தருவங்கம்**, (தரு + அங்கம்) அதாவது மரத்தின் பலபாகங்கள், the several parts of the tree viz, அவையாவன :

1. வேர்ப்பட்டை, root bark, 2. வேர்க்கட்டை, wood of the root; 3. கிளை, branch; 4. மரம், wood; 5. பட்டை, bark; 6. இலை, leaf; 7. பூ, flower; 8. காய், fruit (raw); 9. பழம், riped fruit; 10. கிழங்கு, bulbous root; 11. விதை, seed; 12. சமூலம், entire plant; 13 பிசின், gum; 14 இலைக்காம்பு, petiole; 15. தண்டு, stem or stalk.

**தருமவைத்தியசாலை**, பணம் வாங்காமல் மருந்து இலவசமாகக் கொடுக்கும் இடம், place where medical treatment is given free dispensary; 2. உபகாரமாக வைத்திய சிகிச்சை செய்யுமிடம், a building for the reception of the sick and the wounded requiring public help — Hospital, a place where the infirm or the sick are lodged and nursed.

**தருமவைத்தியம்**, பணம் வாங்காது இலவசமாகச் செய்யும் வைத்தியம், free medical treatment.

**தருமாதிரை**, இலவங்கப்பூ, flower of cloves.

**தருமிருகம்**, குரங்கு, monkey.

**தருமூலம்**, மரவேர், root of a tree.

**தரும்பாறை**, கருஞ்சுக்கான், black lime stone.

**தருராகம்**, தளிர், tender leaves; 2. தழை, sprout.

**தருராசம்**, பனைமரம், palmyra tree.

**தருவதச்சுருட்டி**, மயில் சிகைப்பூடு, peacock's crest plant — Actiniopteris dichtoma. It is a fern like a miniature palm.

**தருவாரி**, கல்லுப்பு, rock salt; sea salt.

**தருவானி**, வேளைப்பூடு, vailay plant — Cleome pentaphylla

**தருவிராகம்**, பனை, palmyra tree.

**தருவிராகிகம்**, குளோப்புக் கொன்னை, a variety of cassia.

**தருவிராசன்**, பாலைமரம், iron wood tree — Mimusops hexandras.

**தருவீகரசர்ப்பம்**, கடித்தல் மூலம் உடம்பைக் கறுப்பாக்கி வீங்கச் செய்யும் ஓர் பாம்பு, a snake which when bites causes the body to swell and become black.

**தருடம்**, தாமரைப்பூ, lotus flower.

**தரை**, கருப்பாசயம, womb-uterus; 2. நரம்பு, nerve.

**தரைக்கஷாயம்**, வெந்நீர் ஊறல் கஷாயம், decoction obtained by steeping herbaceous drugs in hot water — Infusion.

**தரைபடர்மாமரம்**, கொடிமாமரம், creeper mango.

**தரைப்பசலி**, தரையோடு படரும் பசலிக்கீரை low spreading spinach.

**தரைப்பனை**, நிலப்பனை, see தலத்தாது.

**தரைமாது**, கஞ்சா, gunjah plant — Canabis sativus; 2. நரம்பு, nerve; 3. நாளம்; vein.

**தரையில்லாக் குருவி**, பூமியில் தண்டாத குருவி, a bird or sparrow which never touches the ground and generally of migratory habits — Swallow.

**தரைவிளாம்**, நரிவிளா.

**தரோகம்**, நீர்க்கடம்பு, water cadamba; female cadamba — Nauclea orientalis alias N. parviflora.

**தர்கியகரம்**, உப்பு வாயு, nitrogen.

**தர்கியசம்**, நச்சுவாயு, a gas unfit for respiration formerly known as nitrogen.

**தர்க்கியசமற்ற**, நச்சுவாயு சம்பந்தமில்லாத; non nitrogenous.

**தர்க்கியசமற்ற இந்திரிய உபாதான பூதங்கள்,** } உப்பு வாயு சம்பந்தமில்லாத இந்திரிய உபதான பூதங்கள். non nitrogenous as opposed to nitrogenous organic compound c.f. உருசகதேந்திரியோ பாதான பூதங்கள்.

**தர்க்கியம்**, பொட்டிலுப்பு, nitre.

**தர்க்கியாமிலம்**, வெடியுப்புத் திராவகம், nitric acid.

**தர்க்கு**, புலி, tiger.

**தர்க்குமயம்**, நூல் திரிக்கும் ஊசியின் வடிவம் a pin in the shape of a spindle — Fusiform.

**தர்க்குமயவிரிவு**, நூல் திரி யூசி விரிவு, fusiform dilatation.

**தர்ஜினி**
**தர்ச்சனி** } சுட்டுவிரல், fore finger.

**தர்த்துரம்**, ஓர் வகை அப்பிரகம், a kind of talc, mica.

**தர்த்துருரோகம்**,

**தர்ப்பகெந்தி**, தலைச்சூடுவள்ளி, an unknown drug said to be capable of binding mercury c.f. தலைச்சுருளி.

**தர்ப்பணம்**, சாந்தப்படுத்துமுறை, soothing measures.

2. திருப்தியடையக்கூடிய ஆகாரம், refreshing food, a pleasing tonic.
3. கரைத்த வாற்கோதுமை,flour of barley dissolved in water, barley water.
4. கண்ணாடி, mirror.
5. வாயுகோளாறினால் கண்களிலுண்டாகும், வியாதிகளை நீக்கி அவற்றிற்கு வேண்டிய வலிவையும், ஆரோக்கியத்தையும் கொடுத்து,, குணப்படுத்துமோர் சிகிச்சை முறை, a soothing application antidotal to the deranged vayu used in cases of eye-diseases attended with pain.
6. இறந்தோர்க்குச் செய்யும் கிரியை, water ceremony done as a scarifice to ancestors.
7. cooling and nourishing liquids for alluviating fever as புனற்பாகம்.

**தர்ப்பம்**, கஸ்தூரி, musk.

**தர்ப்பனி**, medicine cooling the system thus promoting nutrition.

**தர்ப்பி**, நாணல், reed.

**தப்பூசி**, இரத்த பூசினி, see தர்ப்பூசினி.

**தர்ப்பூசினி**, தித்திப்பு அல்லது சர்க்கரைக் கொம்மட்டி, பிச்சைப்பழம், sweet water melon — Citrullus vulgaris. see சர்க்கரைக் கொம்மட்டி.

**தர்ப்பூசினி**, இதற்குப் பிச்சிக்காய் அல்லது சர்க்கரைக் கொம்மட்டி என்றும் பெயர்; இது பூசினிக்காயைப் போல் வடிவமுள்ளதும், மேலே பச்சையாயும், உள்ளே வெளிர் சிவப்பு அல்லது குங்கும நிறமாயு, சதைப் பற்றும் நீருள்ளதும் இடையே சிறு நார்களாகவும், மணற் போலவும் தித்திப்பாயுமிருக்கும். இது மைசூர், பெங்களூர், மலையாளம், தென் தேசங்களிலும் உண்டு.

இது கோடை காலத்தில் குளிர்ச்சியைத் தருவதுமன்றித் தாக விடாயையும் தீர்க்கும் இதற்கு மூத்திரத்தை அதிகப்படுத்துங் குணமுண்டு. இதன் விதைப்பருப்பு தாது புஷ்டியைத் தரும், இப்பழத்தின் சாற்றினின்று சாராயம் காய்ச்சுவ துண்டு. இது நீர் சுருக்கு அத்தியுஷ்ணம் இவைகளைப் போக்கும், sweet water melon, musk melan — Citrullus vulgaris. It resembles pumpkin in size but green out ward and reddish or reddish white inside. The pulp is fibrous and porus and sweet. This favourite fruit is largely cultiveted in Mysore, Banglore, Malabar, and some parts of South India. It grows and yields in summer season, and it is very refreshing to take it during the hot weather. It quenches thirst. It is cooling and diuretic. The seeds are strengthen and is said to be aphrodisiac. The juice is fermented and used as spirituous liquor.

**தர்ப்பை**, தருப்பை, which see.

**தர்மகாலினி**, see தர்மதேவி.

**தர்மதேவி**, சாயாவிருட்சம், a tree which does not cast its shadow because of its transparent nature.

**தர்மவைத்தியம்,** See தருமவைத்தியம்.

**தர்மவைத்தியன்,** பணம் வாங்காது தர்மத்திற்கு வைத்தியம் செய்பவன், a practitioner who treats the sick and the afflicted gratuitously — Anargyrus.

**தர்வீகரம்,** ஓர்வகை நாகப்பாம்பு, hooded cobra.

**தலகபுட்பம்,** சதலபுட்பம்.

**தலகிதம்,** சிலந்தி, spider.

**தலக்கிருதயம்,** உள்ளங்கால், sole of foot.

**தலச்சன்,** see தலைச்சன்.

**தலதாலம்,** பனைமரம், palmyra tree.

**தலதம்பவாதம்,** உள்ளங்காலில் மிகவும் குடைச்சலுண்டாகி, மேன் மேலும் வலித்து உடம்புலர்ந்து, தளர்ச்சியடைந்து, மேல் மூச்சு, தாகம் முதலிய குணங்களுண்டாகும், இவ்வாதநோய் மிகுதியாக உப்பு, புளி சாப்பிடுவதால் வாதம் கோளாறடைந்து ஏற்படும், (யூகி.-800) a kind of rheumatism due to indulging in excessive salt and tamarind in food. It is marked by gradual increase of boring pain in the sole, parched condition of the body, fatigue, hard breathing thirst etc.

**தலத்தாது,** நிலப்பனை, ground palm — Curculigo orchioides.

**தலத்துநோய்,** உடம்பை பயடுத்தநோய், constitutional disease; 2. ஏற்கனவேயுள்ள நோய், local disease.

**தலநீலி,** வேரில்லாத தாளி, Sita's knot — Convolvulus denticulatus.

**தலபத்மம்,** Hibiscus mutabilis.

**தலபம்,** பொன், gold.

**தலபுட்பம்,** தாழை, screwpine — Pandanas odoratissima.

**தலபேதம்,** இடம் மாறுதலால் உடம்பிற்கு ஏற்படும் அசௌக்கியம், ill health due to change of climate and defference of place; 2. நிலைமாறுதல், the act of migrating of removal of one place to another.

**தலபோடகம்,** ஆவிரை, tanner's senna — Cassia auriculata.

**தலபோடம்,** பொடுதலை, creeping vervain — Verbesena nodiflora.

**தலம்,** இலை, leaf; 2. இடம், place, residence; 3. ஆறுதலத் தொன்று, one of the six psychic centres of the human body; 4. உள்ளங்கால், sole; 5. பனைமரம், palmyra tree; 6. பாதி, half; 7. காடு, forest; 8. கைத்தலம், palm of the hand; 9. அடித்தலம், sole of the foot; 10. செவித்தலம், the ear; 11. கண்டலம், the eye; 12. உரதலம், the breast.

**தலம்புடம்,** see தலபோடம்.

**தலரூபகத்தாதி,** ஆமணக்குவேர், root of castor plant.

**தலரூபகம்,** சிற்றாமணக்கு, small castor seed, Ruinus communis.

**தலனம்,** மான், deer.

**தலாகினி,** நிலநெல்லி, Indian gooseberry tree — Averrhoa carambola.

**தலாடகம்,** அணில், squirrel; 2. காட்டெள், wild sesamum seed.

**தலாடம்,** அணில், squirrel.

**தலாமலம்,** தவனம், அதாவது மருக்கொழுந்து, southern wood — Artemesia austriaca.

**தலிகம்,** விறகு, fuel; 2. மரம், tree.

**தலிதம்,** மலர்ந்தது, that which is blossomed.

**தலூரப்பனை,** see தாளிப்பனை

**தலூரம்,** கருமருது, taloora soul, bastard soul — Shorea talura; 2. பச்சையரக்கு, gum lac or raw lac.

**தலை,** சிரசு, head; 2. ஆகாயம், sky, etheric region.

**தலை,** ஆதி, beginning; 2. இடம், place; 3. தலைமை, priority; 4. தலைக்கடை, beginning and end; 5. உடம்பின் மேற்பாகம், the upper most part of the body.

1. சட்டித்தலை, large sized head.
2. பறட்டைத்தலை, head with very little over spread loose hair.
3. சுருட்டைத்தலை, head with curly hair.
4. உடுக்கைத்தலை, hour glass head.

5. பொடுகுத்தலை, scald head.
6. கோபுரத்தலை, tower head.
7. சொட்டைத்தலை, head with depression.
8. வழுக்கைத்தலை, bald head.
9. மாங்காய்த்தலை, tiny head.
10. பெருந்தலை, see சட்டித்தலை.
11. மொட்டைத்தலை, clean shaven head.
12. இரட்டைத்தலை, head of an oblong shape.

**தலைகாட்டல்,** குறிகாட்டுதல், showing symptoms as diseases.

**தலைக்காட்டாதோடல்,** முழுதும் நீங்கல், being cured radically as diseases.

**தலை கிறுகிறுத்தல்,** see தலைகிறுகிறுப்பு.

**தலைகிறுகிறுப்பு,** தலை மயக்கம், reeling of the head giddy sensation; 2. தலைநடுக்கம், dizziness of the brain; 3. நோயினாலுண்டாகும் தலை மயக்கம், giddiness arising from ill health or some disorder of the system — Vertigo.

**தலைகீழ் தொங்கி,** வௌவால், bat.

**தலைகீழ் தொங்கும் பறவை,** பழந்தின்னி வௌவால், fruit eating bat. It is so called because of its hanging with its head down.

**தலைகெட்டோடல்,** நோய் வேரற்றுக் குணப்படல், being radically cured from a disease.

**தலைக்கடுவன்,** தலைமண்டையின் தோலுக்குக் காணும் தாபிதம், irritation of the scalp.

**தலைக்கட்டு,** தலையிலிடும் காயக் கட்டு, a bandage for the head.

**தலைக்கணை,** மொச்சைக்காய், country bean — Dolichos lablab.

**தலைக்கணை மந்திரம்,** படுக்கையில் மனைவி புருஷனிடம் சரசமாய்ச் சொல்லும் வசிய வார்த்தைகள், entising words of the wife while the husband and wife are in bed.

**தலைகண்விருத்தி,** பதுமாசனம், one of the poses in yoga asanam—lotus pose.

**தலைக்கல்,** ஆட்டுக்கல், which see.

**தலைக்கழல்,** தலையில் புடைப்பாகக் காணும் சதைக் கட்டி, a tumour or protuberance on any part of the cramial cavity — Cranivela.

**தலைகறிச்சாறு,** ஆட்டின் தலைக்கறி கொதிக்க வைத்து இறுத்த சாறு essence or soup from the flesh and bones of sheep's head.

**தலைக்கனப்பு,** நீரேற்றத்தால் தலைகனத்தல் heaviness of head from cold.

**தலைக்கனம்,** தலைப்பாரம், see தலைக்கனப்பு.

**தலைக்காய்,** மரத்திற் காய்க்கும் முதற்காய், the first fruit borne by the tree; 2. தலைக் கழலை, a tumour of the head.

**தலைக்கிறுதி;**

**தலைக்குடைச்சல்,** தலைக்குள் வாதம் பாய்ந்து அதனால் சயித்தியம் உண்டாகி அதிர்ந்து குடைச்சல் வலி ஏற்படும் ஓர் வாத நோய் (யூகி-1200), a kind of neuralgia attended with boring pain from cold due to derangement of vatha humour prevailing in the region of the head.

**தலைக்குத்தல்,** மண்டைக்குத்தல், throbbing of the head; 2. ஓர்விதத் தலைவலி, migraine.

**தலைக்குத்து,** குத்தலையுண்டாக்கும் ஓர் வித தலை நோய். head ache attended with acute pain; 2. கபாலசூலை, neuralgic head ache.

**தலைக்குப்பதமிடல்,** தலைக்கு எண்ணெயிடல் anointing the head; 2. எண்ணெய் தேய்த்து முழுகல், having an oil bath.

**தலைக்குலுக்கம்,** see தலைநடுக்கம்.

**தலைக்குலை,** தென்னை பனை முதலிய வற்றில் முதலில் விடும் குலை. the first bunch yielded by cocoanut tree or palmyra tree.

**தலைக்குறை,** தலையின் வடிவத்திலேற்படும் குறைவு, diminution of head; 2. சிறிய தலை மாங்காய் தலை, abnormally small head about the size of a mango.

**தலைக்குற்றல்,** see தலைக்குத்தல்.

**தலைக்கூற்றல்,** தலைமுழுக்காட்டல், giving a head bath.

**தலைக்கேறல்,** மண்டைக்கேறுதல், ascending to the carebral region as bile.

**தலைக்கொள்ளுதல்,** விஷம் தலைக்கேறி அதிகப்படல் getting or reaching the cerebral centre as poison.

**தலைசாய்தல்,** உறங்கல், sleeping; 2. சாதல்; dying.

**தலைசாய்ந்த வாயு,** தலையை ஒரு பக்கம் சாயும்படி செய்யும் ஓர்வித வாயு, a disease causing the head to inclinc on one side; 2. வலிப்பினால் தலையை ஒரு பக்கமாகச் சாய்க்கும் நோய், a kind of fits causing contortion of the head.

**தலைச்சன்,** முதல் பெற்ற பிள்ளை, first born child.

**தலைச்சன் பிள்ளை,** see தலைச்சன்.

**தலைச்சன்பிள்ளைத்தாச்சி,** முதல் தடவை கர்ப்பிணியாயிருக்கும் பெண், female being pregnant for the first time—first pregnancy.

**தலைச்சி,** சங்கினிநாடி, இத்தசநாடியில் ஒன்று இது சுழி முனையிலுற்பத்தியாகி மூலாதாரத்தில் ஒடுங்கும், one of the ten tubular vessels in the region of the heart, said to raise from (சுழிமுனை) the spot between the eye brows and terminate ingenitalibus etano.

**தலைச்சீரன்,** கூகை நீறு, Malabar arrowroot flour — Curcuma angustifolia.

**தலைச்சுண்டு,** தலைமண்டைத் தோலினின்று உதிரும் சுண்டு, dry scaly matter or flakes on the surface of the scalp — Scurf on the head — Dandruff.

**தலைச்சுருணி,** see தலைச்சுருளி.

**தலைச்சுருளி,** பெருமருந்துப்பூடு, great medicine Indian birth wort — Aristolochia indica, see ஈசுரமூலி; 2. சிந்தில், moon creeper — Menispermum cordifolium; 3. கலப்பைக் கிழங்கு, plough root — Gloriosa superba.

**தலைச்சுருளிவள்ளி,** கருடக்கொடி, braminy kite creeper —Aristolochia indica see தலைச்சுருளி.

**தலைச்சுருள்,** see தலைச்சுருளி.

**தலைச்சுழல்,** see தலைச் சுழற்சி.

**தலைச்சுழல்மூலி,** கஞ்சாங்கோரை white basil — Ocimcm canum alia O. album.

**தலைச் சுழற்சி,** தலைசுற்றல், dizziness of the head; in this the patient believes that his own body and all the surrounding objects are revolving and so cannot stand up—right and if he does so he is liable to fall down 2. இராஜசகுணத்தில் பித்தத்தினுலேற்படும் தலைமயக்கம், giddiness due to vitiousness or bilious disorder of the system with the attributes of Rajus (passion).

**தலைச்சுற்றல்,** see தலைச் சுழற்சி.

**தலைச்சுற்று,** தலைசுழற்சி, reeling of the head.

**தலைச்சூடி,** கொன்றை, cassia tree.

**தலைச்சூடுவல்லி,** See தலைச்சுருளி, இதில் இரசம் கட்டும், This will consolidate mercury.

**தலைச்சூலை,** கபாலச்சூலை, which see.

**தலைச்செறி,** see தலைச்சீரன்.

**தலைச்சொறி,** தலையிலுண்டாகும் சொறி, scurf which forms on the head attended with itching; 2. தலைச்சுண்டு, dandruff.

**தலைச்சேரிப்பட்டை,** கசப்புவெப்பாலை, Tellicherry bark — Nerium antidum.

**தலைச்சொறிநீராம்பல்.**

**தலைதடுமாறுதல்,** ஒழுங்கு மாறுபடல், becoming deranged; தலைமயங்குதல், dizziness.

**தலைதப்பல்,** ஆபத்தைக் கடத்தல், escaping a danger.

**தலைதாங்கி,** தலையைத் தாங்கிக்கொண்டிருக்கும் கழுத்தின் பாகத்திலுள்ள ஓர் உள்ளெலும்பு, the first vertebra of the neck, so named because it supports the head — Atlasbone.

**தலைதுலக்குதல்,** அச்சத்தால் தலை நடுக்கல், shaking of the head due to fear.

**தலைதேய்த்தல்,** நீராடல், having a bach.

**தலைதூக்காமை,** மயக்கத்தால் தலையைத் தூக்க முடியாமை, in ablitity to raise the head due to dizziness.

**தலைத்தாது,** நிலப்பனை, ground palm — Curculigo orchioides.

**தலைத்திருப்பம்,** குழந்தையின் தலை வெளி காணும்படி கருப்பையினுள் விரலையிட்டுத் திருப்புதல், the manual turning of foetus by which the foetal head is caused to present; 2. மயக்கம், giddiness.

**தலைத்திருப்பு,** தலைசுற்றல், giddiness; 2. மூளையில் வியாபிக்கும் இரத்தவோட்டம் விகற்பமடைந்து காணும் தலை மயக்கம், swimming or dizziness in the head due to some disorder in the circulation of blood in carebral region, 3. ஓர் பனை, a kind of palmyra.

**தலைத்தூகம்,** இரும்பகம், black rats' ear plant — Ipomaea renifornois.

**தலைநசுக்குண்ணல்,** பிரசவத்தில் குழந்தையின் தலை நொருங்கல், crushing of the foetal head — Cranioclassis; 2. பிரசவ காலத்தில் குழந்தையின் மண்டையோட்டின் அடிபாகம் நெரிவுறல், crushing of the base of the skull during delivery — Basy lysis.

**தலைநஞ்சுக்கொடி,** தலைச்சன் பிள்ளையின் நஞ்சுக்கொடி, the naval cord of the first born child.

**தலை நடுக்கம்,** கிறுகிறுப்பு, giddiness; 2. கிழத்தனத்திறுற் காணும் தலை அசைவு, shaking of head in old persons as a result of advanced age; 3. ஓர்வித வாயு, tremer of the head due to vayu.

**தலைநடுக்குவாதம்,** உணவின் குற்றங்களினுல் வாயு அதிகரித்து தலையை அனுசரிக்கும்போது தலைநடுக்கம், காது, கண் இவைகளில் வலியுண்டாகும் ஓர் வாத நோய், இதை வடமொழியில் சிரக்கம்பவாதம் எனச் சொல்வதுண்டு, shaking palsy due to aggravated vayu prevailing in the head as a result of errors in diet. It is marked by involuntary shaking of the head and pain in the ear, eyes or other parts of the facial region.

**தலைநான்கு,** வாதம், பித்தம், ஐயம், தொந்தம், wind, bile, phlegm and their combination.

**தலைநித்தம்,** பித்தளை, brass.

**தலைநிமிர்ந்துட்காரல்,** to sit erect.

**தலைநிம்பகி,** நிலவேம்பு, ground neem — Justicia paniculata.

**தலைநிம்பம்,** சிவனுர்வேம்பு, Shiva's neem — Indigofera asphalathoides. It is so called from the use or application of its burnt ashes to clean dandruff from the hair.

**தலைநில்லாப் பருவம்,** குழந்தைகளுக்கு தலை நிற்காத பருவம், that state of in fancy or early child hood when the head cannot support itself.

**தலைநிற்றல்,** குழந்தைகளுக்குத் தலைச்சோர்வில்லாமல் நிற்றல், the state during which the child's head is capable of supporting itself and remaining errect.

**தலைநீட்டராசன்,** ஓணுன், lizard.

**தலைநீரேற்றம்,** சளிப்பு, cold.

**தலைநீரோட்டம்,** கபாலத்திற்குள் ஏற்படும் நீரேற்றம், accumulation of fluid within the cavity of the cranium, water in the head — Hydrocephalus.

**தலைநீர்க்கோவை,** see தலைநீரோட்டம்; 2. சீதளத்திஞல் தலையில் நீர்ஏறித் தோஷங் கொள்ளல், heaviness of the head through affection of cold.

**தலைநெரிதல்,**
**தலைநெரித்தல்,** } see நசுக்குண்ணல்.

**தலைநெரிப்பிரசவம்,** குழந்தையின் தலையை நசுக்கி வெளிப்படுத்தல், delivery attended with the crushing of the foetal head — Basilysis.

**தலைநோய்,** - தலையிலுண்டாகும் நோய்கள், diseases of the head in general; 2. தலைவலி, head ache.

**தலைநோய்ச்செடி,** மருளுமத்தை, head ache tree — Xanthium strumarium.

**தலைநோவு,** இரத்தக்கேடு, நரம்புக்கோளாறு, திரிதோஷக்கோளாறு, கிருமிக்குற்றம் முதலிய காரணங்களை முன்னிட்டு, தலையிற் காணும் வலி, இது அடியிற்கண்டபடி 11 வகைப்படும், head ache or pain in the head arising from various causes such as changes in the composition of blood, disorder of the nerves in the head and of the three humours in the system, action of the germs etc. It is divided into eleven varities viz.

1. வாதசிரோரோகம் ,- வாதத்தலைவலி, head ache in which the head is suddenly affected with pain which is severe at night but it is diminished by hot applications and bandages.

2. பித்தசிரோரோகம் :- பித்தத் தலைவலி, இதில் தலைக்கொதிப் பெடுத்து வாயின்வழியாய் ஆவிபறக்கும், the one in which the head is hot as if burning charcoal is placed over it, and there is an appearance of vapour like smoke proceeding from the mouth, the pain is diminished when the head is kept cool and dnring the night.

3. கபச்சிரோரோகம் :- சிலேட்டுமத் தலைவலி, இதனுல் தலைபாரம், தலை திருப்ப முடியாதவலி, தலையில் குளிர்ச்சி, கண் இரப்பை, வாய்வீக்கம் முதலிய குணங்களுண்டாகும், that in head is heavy and dull and it cannot be turned about without pain, the head feels cool and the eye lids and mouth are swollen.

4. சன்னிபாதிகம் :- மேற் சொன்ன வாதபித்த சிலேட்டுமக் கோளாறுகள் சேர்ந்ததலைவலி, that variety of head ache in which the symptoms of the foregoing varieties are combined.

5. இரத்தசிரோரோகம்:- இரத்தக் கோளாறினால் ஏற்படும் தலைவலி, a form of head ache due to changes in the blood and in which the symptoms are the same as those of பித்த சிரோரோகம் in No. 2. but the pain is so severe that the head cannot be touched or bent forward.

6. சயசிரோரோகம், மூளை, கொழுப்பு, இரத்தம் இவைகள் குறைவினாலுண்டாகும் தலைவலி, இது எவ்விதமான சிகிச்சைக்கும் தணியாமல் மேன் மேல திகரிக்கும், a variety which is produced by a diminution of brain, fat, phlegm or blood in the head. It is marked by great uneasiness and pain which is increased on the other hand by hot applications, by smoke, by errhines and by blood letting.

7. கிருமி சிரோ ரோகம், புழுக்களினாலேற்பட்ட தலைவலி, இதனால் தலை பிடுங்கல் அல்லது கிழித்தலைப் போன்ற வலியையும், மூக்கில் இரத்தம் வடிந்து உயிருக்கு அபாயமும் உண்டாகும், head ache due to the action of worms in the head. It is marked by a severe pain as if an animal is gnawing or tearing the head a watery red or bloody discharge flows from the nose and the patients life is considered as in danger.

8. சூரியா வர்த்தம், மண்டை குத்தல். இது வெயில் ஏற அதிகமாயும், வெயில் சாயக் குறைந்தும், இரவில் குணப்பட்டும் காணும், a form in which the pain is gradually increased in the region of the eyes and eye brows as the sun rises high in the sky and it dicreased in the evening and towards night.

9. ஆனந்த வாதம், மண்டையிடி. இதனால் புருவம், கன்னப்பொட்டு, கன்னம் இவ்விடங்களில் வலியும், தலைநடுக்கம், தாள்வலி, கண்ரோகம் இவைகள் உண்டாகும், the one marked by great digging pain particularly in the eye brows !temples and checks, shaking of the head, pain in the lower jaw and diseases of the eye.

10. அர்த்தாவபேதகம், தினப்படி அல்லது வாரந்தோறும் அல்லது பதினைந்து நாளைக்கொருதரம் காணும் ஒற்றைத் தலைவலி, இதனால் ஒரு பக்கத்துக் கழுத்து, புருவம், கன்னப் பொட்டு, காது, கண் இவைகளுக்கு அதிகவலி காணுவதுடன், பார்வையும், கேள்வியும் குறையும், a form of head ache characterised by an attack occuring every day or once a week or fortnight. In this half of the neck, brow, temple, eye ear are rendered very painful and the sight and hearing become imperfect. The disease is most obstinate and very distressing.

11. சங்கசம், உயிரைக் கொள்ளை கொள்ளும் தலைவலி, one in which severe pain is produced in the temples and head which becomes hot. It may prove dangerous and fatal in three days, sometimes when the patient is unable to swallow but if he lives medicine may be continued to effects cure.

**தலைபவனிவருவான்**, சுழல்வண்டு, beetle or an insect whirling in water.

**தலைபளுவு**, see தலைப்பாரம்.

**தலைபுரட்டல்**, see தலைப்புரட்டல்.

**தலைபோடகம்**, பொடுதலை, creeping vervain —Lippia nodiflora alias Verbena capitala.

**தலைபோடம்**, see தலைபோடகம்.

**தலைப்படி**, 6 பலம் கொண்ட நிறை அளவு, weight of 6- palams or 180 grams, the other two weights are இடைப்படி, கடைப்படி, which see.

**தலைப்பத்து**, see தலைப்பற்று.

**தலைப்பற்று**, தலைக்கிடும் மருந்துப்பற்று, an application of ointment or other paste applied to the head; 2. பனையோலை, palmyra leaf.

**தலைப்பனி**, முன்பனி, the early part of the dew season.

**தலைப்பாரம்,** தலைகனதி, heaviness of the head; தலைநீரேற்றம், accumulation of serous fluid in the cranial cavity — Water in the brain.

**தலைப்பாரம்.** தலைகனதி, heaviness of the head through cold — Coryza.

**தலைப்பிடிக்கி,** கூட்டிவைப்போன், one who procures for another the means of gratifying his passions — *Pander or Pimp.*

**தலைப்பிடித்தல்,** கூட்டிக்கொடுத்தல், ministering to the passions of other — Pandering.

**தலைப்பிணி,** தலைச்சன் பிள்ளைதரித்த கர்ப்பிணி, a woman who is pregnant for the first time; 2. தலையில் உண்டாகும் நோய்கள், diseases in general of the head.

**தலைப்பிண்ட செயநீர்,** மூன்று மாதத்திய தலைச்சன் பிண்டத்தினின்று தயாரித்த உப்பை இராப்பனியில் வைத்து இறக்கிய செயநீர், a strong alkaline salt prepared from the first foetus ( 3 months old ) and exposed to night's dew to convert it into a liquid — A strong alkaline fluid prepared by exposing to night's dew an alkaline salt extracted from the first foetus ( 3 month's old ) of a woman.

**தலைப்பித்தம்,** தலையில் நிற்கும் பித்தம், bile in the head

**தலைப்பிரட்டை,** கடற்றவளை, sea frog; 2. தவளைமீன், tod pole, frog fish; 3. ஓர் எறும்பு, the name of an ant; 4. பிலாச்சை, tod pole.

**தலைப்பிரிதல்,** விட்டுப்பிரிதல், separating *entirely from.*

**தலைப்பீ,** காட்டுப்பீ, which see.

**தலைப்புரட்டல்,** தலையை அடிக்கடி உருட்டும் ஓர் மரணக்குறி, rolling the head very often — a symptom of approaching death.

**தலைப்புரட்டி யெறும்பு,** ஓர்வகைக் கறுப்பு எறும்பு, a black ant with a large shaking head.

**தலைப்புழுவெட்டு,** தலையில் பலவிடங்களில் வழுக்கையாக உண்டாகும் வட்டத் தழும்புகள், இது பூச்சிக்கடியால் உண்டாகுமெனக் கருதப்படும், circular blotches destitute of hair formed in several parts of the scalp due to poisonous insect bites.

**தலைப்புற்று,** தலையிலுண்டாகும் ஓர் விரணம் a disease attacking the scalp and characterised by yellowish dry incrustations; 2. தலைமண்டையிலேற்படும் ஓர் வகைப்புண், canker on the head; 3. மண்டைக்கரப்பன், scald head Achor; 4. ஓர் எறும்பு, a species of ant.

**தலைப்பூச்சி,**

**தலைப்பெயல்,** மாரிகாலத்து முதன் மழை, opening shower of the rainy season.

**தலைப்பெய்தல்,** மூலத்தைப்பிடித்தல், getting to the origin.

**தலைப்பேரண்டம்,** தலைச்சன் பிள்ளைத் தலை மண்டையோடு, the skull of the first born child.

**தலைப்பேன்,** தலைமயிரில் உற்பத்தியாகும் பேன், a parasite found in the hairs of the head — Louse.

**தலைமஞ்சன்கொடி,**

**தலைமண்டை,** தலையோடு, skull, the cavity of the skull containing the brain.

**தலைமயக்கம்,** தலைச்சுழற்சி, giddiness; 2. மதிமயக்கம், dizziness of the brain.

**தலைமயிருதிர்தல்,** தலைமயிர் கழலல், falling off the hair of head; 2. வழுக்கையாதல், becoming destitute of hair on the head; getting bald.

**தலைமாட்டு வைத்தியன்,** மருத்துவந் தெரியாது உயிருக்கு தீங்கு அல்லது அபாயத்தை விளைவிப்போன், a pretender to medical skill likely to endanger life—Quack, Charlatan.

**தலைமாந்தம்,** குழந்தைகட்கு உடல் ஊதல், வயிறு நொந்து, பொருமுதல், மார்புவலி, கைகால் இசிவு, ஏப்பம், கொட்டாவி, தலைகனதி முதலிய குணங்களை யுண்டாக்கு மோர் மாந்த நோய், a form of indigestion or dyspepsia in children characterised by swelling of the body, pain and rumbling noise in the abdomen, chest pain, convulsions, belching, yawning etc.

**தலைமாந்தரோகம்,** தலை கழுத்து வீங்கி, உடம்பெங்கும் வலியை உண்டாக்கும் ஓர் வகை அசீரண நோய், a kind of dyspepsia attended with swelling of the head and the neck and pain all over the body.

**தலைமுகறந்தஎன்,** தேத்தான் கொட்டை water clearing nut strchynos potatorum.

**தலைமுடி,** தலையினுச்சி, crown of the head; 2. தலைமண்டையோடு, the skull; 3. தலை மயிர்லைடிச்சி அல்லது சிகை, lock or tuft of hair.

**தலைமுடிச் சுண்ணம்,** அண்டச் சுண்ணம், any medicinal powder prepared from the skull; 2. தலைச்சன் பிள்ளை மண்டையோட்டினின்று தயாரிக்கும் ஓர் சுண்ண மருந்து, a calcined oxide prepared from the skull of the first born child. This preparation is peculiar to Tamil Medicine and is said to be used in Alchemy.

**தலைமுடியுப்பு,** தலைச்சன் பிள்ளை மண்டையோட்டை யெரித்துச் சாம்பலாக்கி அதினின்று எடுக்கும் ஓர்வகையுப்பு, salt extracted from the ash obtained by burning the skull of a first born child c. f முடியண்டபடருப்பு.

**தலைமுழுக்காட்டுதல்.** குளிப்பாட்டுதல், causing to bathe.

**தலைமுழுக்கு,** தலைக்கு எண்ணெய் தேய்த்துக் கொண்டு வெந்நீரிற் குளியலாடல், anointing the head with gingelly oil and bathing in hot water — Oil bath; 2. மகளிர் சூதகம், menses.

**தலைமுறி,** சுன்னத்து, circumcision.

**தலைமுறியன்,** சுன்னத்து செய்துகொண்டவன், one with circumcised penis.

**தலைமைஞ்சக்கொடி,**

**தலையகண்டம்,** ஓணான், lizard.

**தலையணையகண்டம்,** பிண்டம், foetus.

**தலையண்டக்கருவழுக்கை,** இளவழுக்கை, அதாவது மூன்று மாதத்திய தலைச்சன்பிண்டக்கரு, immature three month's first foetus.

**தலையண்டம்,** மண்டையோடு, skull bone.

**தலையழுக்கு.** பெண்கள் முதல் மாதவிடாய், the first monthly course or menstrual blood of a female — Catamenia.

**தலையாட்டம்,** கிழத்தனத்தால் தலைக்குண்டாகும் ஆட்டம் அல்லது அசைவு, involuntary shaking of the head due to advanced age; 2. அதிர்ச்சி பயத்தினால் தலை நடுக்கம், an involuntary trembling of the head through shock or fear.

**தலையாரிப்பு,** கட்டியகல்லுப்பு, consolidated common salt; 2. உப்புமணி, beads obtained by consolidating or binding salt.

**தலையிடி,** மண்டையிடி, digging pain in the head.

**தலையில்லாக் குருவி,** தகைவிளான் குருவி, (lit) bird without fatigue, swallows and swifts.

**தலையில்லாச் சேவகன்,** நண்டு, crab.

**தலையில்லாடி,**

**தலையில்லான்,** see தலையில்லாச் சேவகன்.

**தலையிறக்கம்,** தலைநாணுதல், looseness of the head; 2. தலையைத் தொங்கப்போடுதல், ஓர் மரணக் குறி, head hangs down a death symptom.

**தலையீற்று,** முதலீற்று, that which was born first said of calf; firstting of a cow.

**தலையீற்றுப்பசு,** முதல்முதலீன்ற பசு, cow in calf for the first time.

**தலையுண்டம்,** தலைச்சவ்வு, membrane of the head.

**தலையுதயம்,** பிரசவ காலத்தில் வெளிப்படக் காணும் தலை, presentation of head in delivery.

**தலையுருட்டல்,** படுக்கையில் தலையை, சதா உருட்டிக்கொண்டிருத்தல், இது ஓர் மரணக் குறியாகக் கொள்ளப்படும், tossing or rolling of the head of a patient restlessly while in bed which is considered as a symptom of death.

**தலையுலாஞ்சல்,** தலைநடுக்கம், shaking or involuntary trembling of the head; 2. தலை கிறுகிறுத்தல், reeling of the head.

**தலையெலும்பு,** மண்டை யெலும்பு, cranial bones.

**தலையெழுத்து,** கருமத்தின்படி தலையில் எழுதியதாகச் சொல்லும் பிரம்மலிபி; அறிவீனத்தால் தலையின் மண்டைப் பொருத்தைப் பிரம எழுத்தெனக்கொள்ளப்படும், pre-ordinations of Brahma regulated by the actions of former births and those of the parents are supposed to have been written. It should not be confused with the sutures connecting the margins of the several cranial bones.

NOTE: by C. D. Each living cell in the body, whether in the heart, lung, liver, stomach, brain or any part of the body, possesses a nucleus. The nucleus contains DNA, an abbreviation for desoxyribonucleic acid ( translated, " an acid in the nuclei of cells made of deoxidised sugar " ). This single molecule is the marvellous inheritance machine.

Modern research has discovered that the DNA stores a vast number of directions and blue prints which it issues at the right time and place to trigger the building of all the cells and structure of the body, make them grow and synchronize their operations at every second during their entire allotted life. The coded directions in DNA were compiled by selection from those of the mother and father at the conception of the egg cell. The nucleus of this single fertilised cell possesses the DNA, which determines exactly by the type of human being to be produced down to the waviness of hair and colour of the eyes.

The DNA consists of two intertwined tape like coils connected by crosspieces at regular intervals — like a spiral staircase. If the DNA tapes inside the nucleus of a single human cell were uncoiled and laid end to end, they would extend to three or four feet. It has a capacity like a magnetic recording tape for storing all the vast quantity of information needed in a life time. Countless atoms make up the internal structure of the DNA molecule. The tapes themselves are made up of sugar and phosphal of groups. Embossed on the sugar groups are nube of four kinds of nitrogen compounds the steps of the spiral staircase. The nitrogens together spell out a mysterious code. For it is the sequence of these nitrogen nubs on the DNA tapes that spells out the events which makes the body grow. It has been estimated that if we were to put the DNA code of a single human cell into the English letters and a typist copied them they would fill 1000 volume encyelopedia.

Hence, it is clear, that even before you were born, your fate, ( தலையெழுத்து ) what you are destined to be, was determind and written in code (பிரம்மலிபி) first in the DNA of the nucleus of the single fertilised cell (the mother cell) which was a complete you, then on every DNA, which is peppered throughout the body in millions of specks corresponding to the number of living cells, the mother cell has divided to build your entire body. The code is named Brahma libi after Brahma the creator, the God of Creation.

**தலையோடு,** மண்டையோடு, cranialbone.

**தலையோட்டு செயநீர்,** அண்ட செயநீர், a strong alkaline liquid prepared from the human skull.

**தலையோட்டுப் பொருத்து,** தலையோடுகளை ஒன்ருகச் சேர்க்கும் அல்லது இணைக்கும் பொருத்துகள், seams or joints which unit the bones of the skull — Sutures.

**தலைவலி,** இது சாதாரணமாய் திரிதோஷக் கோளாறிஞல் ஏற்படும், கண்ணியாதி, பல் வலி, குளிர்காய்ச்சல் முதலிய காரணங்களைக்கொண்டு ஏற்படும் தலைநோய், இது தனிப்பட்ட ஓர் நோயல்ல, மனக்கவலையாலும் காற்று, பனி, சீதோஷ்ண நிலைகளிஞலும் இத்தகைய வலியும் ஏற்படும், ஆகவே, காரணமாயுள்ள நோயைப் போக்க தலைவலி தானே நிற்கும், தலைவலிசூரணம், தைலம், உப்பு முதலியவைகளை உபயோகப்படுத்துவது சுத்த பிசகு, It is generally due to the derangement of the three humours. The head ache appears as a symptom in the disease. If the eyes, ears, teeth, ague etc. It is not a disease by itself and it will disappear when the disease of which it is a symptom is cured. It may be caused as a result of climatic changes. Chemical powders, oil extracts, medicinal salts should not be used for a cure.

NOTE — 1. Several are the causes of head ache viz. 1. Migraine; 2. epilepsy; 3. tumours of the brain; 4. chronic lead poisoning; 5. head injury; 6. high fever; 7. mumps; 8. kindney and brain disorders. It is also attributed to worms in the head, when it is marked by biting, piercing and throbbing pain.

NOTE — 2. Head ache is a symptom of a disease rather than a disease itself. The following are the principal kinds of head ache — 1. Dyspeptic head ache arising from stomach, bowl or liver derangement. 2. Nervous head ache — Common in delicate persons leading a sedantary life and in nervous woman about the monthly periods known as megrims. Hysterical girls are often subjected to one sided ache. 3. Neuralgic head ache marked by migraine, occuring at intervals and is called inter miltent head ache. 4. Brain head ache occuring in old persons disposed to epilepsy, apoplexy, sun stroke, change of life and in women. 5. Rheumactic or Gouty head ache affecting the muscles of the scalp.

**தலைவலிபோக்கி,** கிச்சிலிக்கிழங்கு, orange root — Curcuma zeadoria, கஸ்தூரிமஞ்சள், musk turmeric — Curcuma aromatica.

**தலைவலிமருந்து,** தலைவலிக் குபயோகிக்கும் மருந்து, that which is acting remedially on the head, any medicine for head ache — Cephalic.

**தலைவழுக்கு,** see தலையழுக்கு.

**தலைவறட்சி,** சூட்டினால் ஏற்படும் கபால வறட்சி, dryness in the head due to excess of constitutional heat.

**தலைவாதை,** தலைநோய், head ache.

**தலைவாள்,** மீனெலும்பு, fish bone.

**தலைவிதிபாராயணம்,** துரிய நிலை, the highest digree next to absorption in which the ascetic attains entire quiescence.

**தலைவிரிச்சான்,** சாரணை, one styled trian thema — Trianthema monogyna; 2. பேய்க் கொம்மட்டி, bitter apple, Devil water melon — Citrullus colocynthis; 3. செருப் படை, a cow spreading plant found in rice fields after harvest — Coldenia procumbens.

**தலைவிரித்தான்,** see தலைவிரிச்சான்.

**தலைவீச்சு,** தலைச்சுழற்சி, reeling of the head; 2. தலையாட்டம், shaking of the head; 3. நரம்பின் செய்கையால் தலையைப்பின்னுக்கு ஆட்டுவிக்குமோர் நோய், a spasmodic ret-roplexion of the head — Retrocolic spasm.

**தல்லு,** புணர்ச்சி, copulation.

**தல்லுதல்,** புணர்தல், copulating.

**தல்லுநீர்,** இந்திரியம், semen; sperm.

**தவகிருதயம்,** உள்ளங்கால், sole, the under side of the foot.

**தவக்கம்,** தாகம், thirst.

**தவக்கரடி,** தவழ்க்கரடி, இதன் உடம்பு மேற்பக்கம், வெள்ளை அல்லது சாம்பல் நிற மாயும், பக்கங்களிலும்; அடிப்பாகத்திலும் கருப்பு நிறமாயும், வால் சிறியதாகவு மிருக்கும், மலைப் பிரதேசங்களில் முக்கியமாகக் காணப்படும். இது பூமியின் கீழ் குழி பறித்து அதில் வசிக்கும், இது சாதாரண மாய் எலி, பறவை, தவளை, கறையான் இவைகளைப் பிடித்துத் தின்னும், கோழி முதலிய பட்சிகளையும் கொன்று தின்னும், creeping bear — Badger. The animals upper portion is white or grey coloured, the sides and the portion beneath are black, tail is short. Found in hilly districts where it has great facilities for constructing holes and dens. It lives upon rats, frogs, birds, white-ants, and other insects. It is often destructive to poultry. See தகசு.

**தவக்களை,** see தவக்கை.

**தவக்குறை,** முன் சன்மத்தில் ஏற்பட்ட தவத்தின் பிழையை இச்சன்மத்தில் சரிப்படுத்துதல், a defect of penance in the former birth to be made up or compensated in the present birth.

**தவக்கை,** தவளை, a kind of frog.

**தவங்கிடத்தல்,** தவநிலையில் நிற்றல், being in a state of resolved penance.

**தவசி,** நாரை, crane; 2. முருங்கை விதை, moringa seed; 3. முருங்கைப் பிசின், gum of drum stick tree; 4. see தவசுமுருங்கை.

**தவசிபிள்ளை,** தவசிக்கு சமையல் செய்வோன் a cook boy tending a guru.

**தவசிமரம்,** see தவசுமரம்.

**தவசுமரம்**, நாட்டு வாதுமை மரம், sage tree, country almond tree — Terminalia catappa; 2. காட்டு மாமரம், hermits tree — Buchanania latifolia.

**தவசுமுருங்கை**, புண்ணுக்குப் பூண்டு, இதுவே நரிமுருங்கை, இதன் பூ, மஞ்சள் நிறம், ஊதா புள்ளிகள், இதன் இலைச்சாறு உடம்புக்கு குளிர்ச்சி, கபத்தை அறுத்து மலத்தை இளக்குந்தன்மையது, குழந்தைகளுக்கு அம்மை கண்டால் இதைக் கொடுப்பதுண்டு, கோழையை அகற்றும், இலையை இடித்து வதக்கி அடிப்பட்ட காயங்களுக்கும், வெளிவிரணங்களுக்கும் வைத்துக் கட்டலாம், இதன் கஷாயம் சுவாச காசம், சிறுக்கிருமல் இவைகளைப் போக்கும். Tranquebar gendarussa —Justicia parviflora alias J. tranquebariensis. Flowers yellowish with purple dots, small roundish leaves. The juice of the leaves is cooling and aperient and is prescribed for children in small pox. It is an expectorant. Bruished leaves are applied to blows and other external injuries. The decoction of the leaves is found useful in asthma and dry cough.

**தவிச்செறி**, see தலைச்செறி.

**தவஞானநிட்டை**, தவத்திற்குண்டான் ஒழுக்கங்கள், இதில் மேம்பாடு உடையவர், கலைக்கோட்டு மகாமுனி, the rituals of penance Kalaikotthumuni is one who is known as one who had observed these rituals strictly.

**தவஞ்செய்முனிபட்சனி**, அவல், flaked rice, so called because of its usefulness as a diet for one performing penance or otherwise engaged in religious austerities.

**தவடை**, கன்னம், check. 2. தடை, jaw.

**தவடைப்புற்று**, கன்னப்புற்று cancer of the check.

**தவட்சீரம்**, மூங்கிலுப்பு, bamboo salt.

**தவட்டை**, கபிலப்பொடி, kamela dye — Mullotus philipinensis.

**தவஙியம்**, கந்தகம், sulphur.

**தவதலம்**, வெள்ளிலோத்திரம், the bark of lodra tree — Simplocos racemosa.

**தவதாட்சம்**, குழிவிழுந்த கண், sunken eyes.

**தவத்தில் நிற்றல்**, இடைவிடாது தவஞ் செய்தல், to be constant in doing penance.

**தவத்துப்பொலவு**, மலையாளப் பூடு, Malabar croton — Croton malabaricus.

**தவத்துமுருங்கை**, see தவசு முருங்கை.

**தவபோடகம்**, ஆவிரை, tanner's cassia — Cassia auriculata

**தவபோதசாதி**, அஸ்தகுக சாதியாகிய ஆண் சாதி, நான்கு வகையிலொன்று. one of the four classes of men divided according to lust.

**தவப்பெண்**, மடக்கன்னி. a virgin separated from the world — Nun.

**தவமுருங்கை**, see தவசுமுருங்கை.

**தவம்**, நெருப்பு, fire; 2. வெப்பம், heat; 3. வெண்கருங்காலி, a whitish black wood; 4. காட்டாக்கினி, conflugration; 5. முக்குணத்தொன்று, one of the three inherent qualities of man; 6. தவசு, penance mortification done to one self, an austre life.

**தவம்புரிமாதர்**, கலைமான், stag, the male red deer.

**தவராசன்**, வெள்ளை சருக்கரை, white sugar.

**தவலம்**, அவுபல பாஷாணம், a kind of native arsenic; 2. ஓர்புறு, a kind of dove.

**தவலல்**, குறைதல், decreasing, diminishing; 2. சாதல், dying.

**தவலி**, எருது, bull; 2 ஓர்மீன், a kind of fish; 3. வெண்பசு, white cow; 4. வெண்ணிறம், white colour.

**தவலிமன்**. வெண்ணிறம், white colour.

**தவலோகசீவன்**, காந்தம், magnet.

**தவல்**, குறைகை, diminution.

**தவழ்கரடி**, see தவக்கரடி.

**தவழ்தல்**, மாரால் தவழ்தல், crawling with the chest as a child does.

**தவழ்புனல்**, ஆற்றுநீர், river water.

**தவழ்வன**, தவழ்சாதி, reptiles.

**தவளச்சங்கு**, வெண்சங்கு, white conch.

**தவளத்திசைநாதம்,** see தவளச்சங்கு.

**தவளநிறக்காக்கணம்,** வெள்ளைக் காக்கணம், clitoria ternatia bearing white flowers.

**தவளநீறு,** வெண்ணிறமான சாம்பல், white ash.

**தவளபக்கம்,** வெண்ணாரை, white crane.

**தவளபாடலி,** வெண்பாதிரிமரம், white trumpet flower tree — Ptereospermum chelonoides.

**தவளமாதல்,** வெண்ணிறமாதல், becoming white.

**தவளமாய்நீறுதல்,** வெண்ணிறமான சாம்பலாய்ப்போதல், being reduced to white ashes; 2. பற்பமாகுதல், becoming a full calcined powder.

**தவளமிருத்திகை,** வெள்ளைப் பாஷாணம், white arsenic; 2. வெள்ளைமணல், white sand; 3. சுண்ணாம்பு, quick lime.

**தவளமிளகு.** வெண்மிளகு, white pepper.

**தவளம்,** கருப்பூரம், camphor; 2. சங்கபாஷாணம், a kind of arsenic; 3. வெண்மிளகு, white pepper; 4 வெள்ளைகோடாசூரி, a virulent type of arsenic; 5. பற்பம், calcined powder; 6. வெள்ளைக்கரு, white of the egg albumin; 7. வெள்ளைப்பாஷாணம், white arsenic; 8. வெண்மை, whiteness; 9. சாம்பல் நிறம், ash colour.

**தவளம்பண்ணி,** காட்டுத்துளசி, wild basil.

**தவளவர்ணம்,** மேகநோய் 18 வகைகளுள் ளொன்று, one of the 18 venerial diseases.

**தவளவைசூரி,** காய்ச்சல்கண்டு நடக்க முடியாமல் அன்னஞ் செல்லாது, ஆறும் நாள் சிரசில் குருக்கள் தோன்றி ஒன்பதாம் நாள் இறங்கும் ஓர் வகை அம்மை a kind of small pox marked by fever, weakness, resulting in ability to walk, loss of appetite etc. In this, the vesicles are found on the sixth day and they dry up on the ninth day.

**தவளாங்கம்,** வெண்ணிறமானவுடம்பு, white body; 2. வெளுத்தவுடம்பு, pale body.

**தவளாமுரிகம்,** (தவளம் + அமுரிகம்) மூத்திரத்தில் முட்டை வெண்கருவைப் போல் விழும் ஓர் நீர் வியாதி, a disease of the kidneys in which the urine contains albumin — Albumenurea.

**தவளிதம்,** வெண்மை, whiteness.

**தவளை,** தவளை, இது தாவிச்செல்வதாலிப் பெயர், இதற்கு வடமொழியில் மண்டூகமெனப்பெயர், இது பூச்சிபுழுக்களைத்தின்று வாழும், இதை சதுப்புநிலத்திற் காணலாம், வெயிற்காலத்தில் வளைகளில் வசிக்கும், சிறு தவளைக்குக் கால் கிடையாது, நீண்ட வாலினுல்தான் உலாவும், இது அழுகின பண்டங்களையும் தின்னும், இதில் அடியிற்கண்டபடி அனேக விதங்களுண்டு, frog, toad — Batracia ecaudata. It is so called because of its leaping nature. Its food consists of insects and worms but the largest kinds feed on small vertebrates. They are found only in damp pleces or in the neighbourhood of water. In the hot season they bury themselves deep in holes made underneath the earth. Young ones or tadpoles are without legs but moves in water with the aid of a compressed tail. They live on decayed vegetable and animal substances.

The following are the principal South Indian species.

1. மிடர்த்தவளை, bull frog — Rana tigrina.
2. சொறியாந்தவளை. chunam frog or flying frog — Rhacophorus maculata.
3. குளத்துத் தவளை. tank frog — Rana hexadactyla.
4. கிணற்றுத் தவளை, well frog — Rana cutipora.
5. பச்சைத் தவளை, green frog, tinkling frog — Ixalus variabilis.
6. மணற்றவளை, sand frog, nued frog — *Rhacophorus plenrostictus*.
7. சிறுதவளை, small frog — Bufo pulcher.
8. சிவப்புத் தவளை, red frog — Microphyla rubra.
9. வறட்டுத் தவளை, ventriloquist frog — Ixalus signatus.
10. நாமத் தவளை.

NOTE: There is another species of tadpole without legs — Batrachia apola. It is worm like with long body, skin smooth and viscous. They constantly live in water below the ground. some of the species have proper of changing their colours.

The green frog is given to tuberculosis patients in the form of soup. It is said to alleviate the disease. The other varieties are eaten by some.

**தவளைக்கடி,** தவளையினால் உண்டாகும் கடி, இதனால் கடிவாயில் தினவும், வாயினின்று ஓர் வித மஞ்சள் நிறமான நுரையும் தள்ளும் frog bite, the bite of any of these kinds is attended with itching sensation in the site of the bite and a flow of yellow coloured froth or foam from the mouth.

**தவளைக்கல்,** சொறிக்கல், இது உபரசச் சரக்குகளி லொன்று. இது பொடிக்கக் கூடிய சிவப்பு நிறமான அயம் அதாவது இரும்பு சேர்ந்த மண்கல். இதற்கு வட மொழியில் மண்டுகசீவன் எனப் பெயர், any ore of iron; iron stone. It is an iron found in the form of a friable earthy substance of a red colour. It is classified in Tamil medical science as one of 120 natural substances.

**தவளைக்குஞ்சு,** சிறுதவளை, indian tadpole—Bufo melanostictus.

**தவளைக்குட்டம்,** ஒரு சர்ம நோய்— A variety of leprosy with circumscribed patches developing in the extremities to begin with. The progress may be slow or rapid. A sense of stiffness on the skin which is unusually hard and firm It interferes even with movements of the joints. The skin has a dead white appearance — Scleroderma.

**தவளைக்கூறு,** தவளையை அறுத்த பாகுபாடு physiological and anatomical analysis of frog for purposes demonstration and study.

**தவளைச்சங்கு,** இரசமணிக்குச்சாரணை தீர்ப்ப தற்காக வேண்டி உபயோகிக்கும் ஓர்வித சொறிச் சங்கு, a rough conch used in Alchemy for purposes of animating consolidated mercury pills.

**தவளைச்சினை,** தவளை வயிற்றிலிருக்கும் சினை, the ovum of a frog, frogs spawn.

**தவளைச்சுக்கான்,** கருஞ் சுக்கான், black quick lime, black lime stone.

**தவளைச்சொறி,** சிலேட்டும வாதங்களினால் தாமரைக்கொடியின் முட்களைப்போல் நோவு அல்லது வலியில்லாத சொறிகளை உடம்பு முழுவதிலும் பிறப்பிக்குமோர் நோய், இதற்கு வடமொழியில்பதும கண்டகரோகம் எனப்பெயர், a kind of rash with painless eruptions either in parts or the whole body It is due to derangement of phlegm and vayu (humours) in the system. It is so called because of its rendering the skin rough like the frog's skin or lotus stem. Note by C. D. Vitamin A defficency causes this disease and so taking shark liver oil, eating greens especially drum stick leaves, carrots are recommended.

**தவளைமுகம்,** மூக்கு நோயால் ஏற்பட்ட சப்பை முகம், flatness of the face due to intra nasal disease — Frog face.

**தவளையாதல்,** see தவளமாதல்.

**தவளையுடம்பு,** சொறிகொண்டவுடம்பு, body with eruptive itch.

**தவளையம்மை,** சின்ன அம்மை, measles.

**தவளைவயிறு,** சூனம் வயிறு, frog belly — a semi tympanitic state of the abdomen especially in ricketty children.

**தவளைவிஷம்,** தவளை தொல்களிலிருக்கும் நஞ்சு பொருள், a poisonous principle contained in the skin of toads.

**தவளோற்பலம்,** வெள்ளாம்பல், Indian white water lily.

**தவறல்.** குறைதல், falling short. being defficient: 2. சாதல், dying.

**தவறிப்பேசல்.** வாய்தவறல், slip of the tongue.

**தவறுகம்.** எரிசாலை, a plant.

**தவனகம்,** மருக்கொழுந்து,wormwood, maids-love — Artemesia austriaca alias A. oricutalis.

**தவனகி,** எரிபூடு, plant causing burning sensation, 2. எரியும் பூடு, burning bush.

**தவனட்சம்,** ஓர் மருந்துப் பூடு, a medicinal plant.

**தவனட்சபுட்டம்,** கோகிலம், Indian cuckoo.

**தவனட்சமாசி,** சிறுமணித்தலை, Indian nightshade — Solanum idicum.

**தவனத்திராவகம்,** அக்கினித் திராவகம்,nitric acid.

**தவனமடங்கல்,** தாகம்தீரல், thirst becoming quenched.

**தவனமாயிருத்தல்,** தாகமாயிருத்தல், being thirsty.

**தவனம்,** வெப்பம், heat of the sun; 2. வறட்சியினாலேற்படும்தாகம், thirst due to fatigue arising from exposure; 3. மருப்பூண்டு & மருக்கொழுந்து, maids love — Boys love, see தவனகம்; 4 மாசிப்பத்திரி, Indian absinth — Artemesia vulgaris; 5. ஆயாசம், fatigue

**தவனம் தீர்த்தல்,** தாகத்தைத் தணித்துக் கொள்ளல், quenching the thirst.

**தவனன்,** சூரியன், the sun; 2. நெருப்பு, fire.

**தவனுட்சவல்லி,** புன்கு, poongu tree — pongamia glabra.

**தவனி,** சாவிகை, See தீர்க்கமூலம்.

**தவனிபோதம்,** ஓர்வகைப்புல், a kind of grass.

**தவா,** தாதகி, காட்டாத்தி, downy grislea — Grislea tomentosa alias Bauhimia tomentose.

**தவாட்சரி,** see தவாட்சொரி.

**தவாட்சொரி,** ஓர் பூண்டு, an unknown plant.

**தவாணகம்,** காற்று, wind.

**தவிசு,** திராவகம், acid, any distilled liquid; 2. ஆசனம், posture.

**தவிடச்சு,** செஞ்சடைச்சி, doy bran plant — Grewia pilosa.

**தவிடாதிகம்,** கொய்யா. guava.

**தவிடிலை,** ஓர்பூடு, Indian linden — Grewia columnaris

**தவிடு,** அரிசியின்தூசி, the fine dust of bran; 2. தவிட்டுச்செடி, which see.

**தவிட்டான்,** see தவுட்டை; 2. வெட்பாலை which see.

**தவிட்டுக்களி,** a thick pap made of bran.

**தவிட்டுக்கிளி,** தவிடு நிறத்தையொத்த தத்துக்கிளி, bran coloured locust.

**தவிட்டுக்குஞ்சு,** larvae of insects.

**தவிட்டுக் கொய்யா,** மலைச்சிறு கொய்யா, bran coloured guava hill guava — Myrtus tamentosa; 2. காட்டுக் கொய்யா, wild guava of ceylon.

**தவிட்டுச்செடி,** see தவிட்டுக்கொய்யா,

**தவிட்டுண்ணி,** புதர்களில் வசிக்கும் உண்ணி, tiks frequenting woody places; 2. ஆட்டுண்ணி, sheep tick.

**தவிட்டுப்பழம்.** see தவிட்டுக்கொய்யா; 2. மலைநெல்லி, hill gooseberry.

**தவிட்டுப்பாற்சோற்றி,** தவிட்டு நிறத்தைப் போன்ற பாற் சோற்றி, brown coloured exudation similar to

**தவிட்டுப்பு,** see தவிட்டுமேனி.

**தவிட்டுப்புரு,** தவிட்டுநிறமான ( புரு ), bran dove. turtle dove, brown pigeon —Turtur cumbayensis.

**தவிட்டுமேனி,** தவுட்டுப்பு, prepared brown salt.

**தவிட்டை,** see தவுட்டை.

**தவித்தல்,** தாகத்தால் இளைத்தல், being wearied with thirst.

**தவிப்பு,** தாகம், thirst; 2. இளைப்பு, fatigue.

**தவியாகிகசுரம்.**

**தவிர்த்தல்,** விலக்குதல், விட்டுவிடல், removing the prohibited articles as in diet.

**தவுகஞ்சம்,** தாமரைமணி, lotus bead.

**தவுசயம்,** கலியாணமுருக்கு, Indian coral tree — Erythrina indica.

**தவுச்லம்,** தின்முருங்கை, drumstick tree; 2. நிலப்பனை, ground palm — Curculigo orchioides; 3. வராகிக்கிழங்கு, a tuber; 4. முருங்கை, horse raddish —Hyperanthra moringa,

**தவுடி,** ஆடமரம், Nilgiri elm — Celtis tet randra.

**தவுடு,** see தவிடு.

**தவிட் டிலை,** தவிடிலை,

**தவுட்டை,** தவுட்டுமரம், இதன் பழம் தவிட்டு நிறத்தையொத்த தாலிப்பெயர், bran plant. It is so called from the appearance of its fruit — Grewia hirsuta; 2. நாய்த்தவிட்டுச்செடி, dog bran plant — It is a small shrub — Grewia pilosa; 3. ஐங்கணைக்கள்ளி, a kind of milkys shrub fof the Euphorbia genus.

**தவுதல்,** சாதல், dying.

**தவுதாயப்படல்,** see தபுதாரம்.

**தவுவறுத்துத்தைத்தல்,** துளை செய்து தைத்தல், perforating and stiching.

**தவை,** முருங்கைவிதை, seed of Erythrina indica.

**தவ்வி,** அகப்பை, laddle; 2. சட்டுவம், a large laddle.

**தவ்வு,** துளை, perforation.

**தழம்,** தைலம், medicated oil.

**தழலகலல்,** அழற்சிநீங்குதல், subsiding inflammation.

**தாதுசாமியம்,** திரிதோஷசமநிலை, equalibrium of the three humours-wind, bile and phlegm — if the body as they should be in the proportion of 4 : 2 : 1.

**தாதுசீவநீர்,** தேன், நெய், வெண்காரம், இம் மூன்றையும் சமஎடை சேர்த்து அரைத்த வஸ்து, இது பற்பங்களைச் சோதனை செய்ய உபயோகப்படும், a paste made of honey, ghee, and borax in equal parts. It is used for testing calcined metals

**தாதுசூரணம்,** உலோகப்பொடி, mineral powder.

**தாதுசேகரம்,** துரிசு, blue vitriol.

**தாதுசேகரம்,** அன்னபேதி, green vitriol, chief a minerals.

**தாதுச்சயம்,** சயம், consumption; 2 திரிதோஷவீனம், waste of the humours.

**தாதுச்சயகாசம்,** சயத்தோடு கூடிய இருமல், consumptive cough.

**தாதுசம்பவம்,** see தாதுசோதனம்.

**தாதுடைதல்,** இந்திரியம் நீத்தல், semen becoming thin or watery.

**தாதுத்தழைப்பு,** சுக்கில விருத்தி, increased secretion of semen.

**தாதுத்திராவகம்,** உலோகங்களைக் கரைக்கும் மருந்து நீர், acid dissolving metals.

**தாதுநடை,** நாடி நடை, beating of the pulse — Pulsation.

**தாதுநட்டம்,** விந்து அடிக்கடி வெளிப்படல் சதாசம்போக சிந்தையுடையவர்களுக்கும், அதிகொழுப்புள்ளவர்களுக்கும் கனவினால் இது ஏற்படும்.

**தாதுபந்தினி,** நாகசிங்கி, இதை பொழுதிற்கு முந்திப் பிடுங்க தும்மலையுண்டாக்கும், an unknown aphrodisiac plants. It is said to induce sneezing if plucked before sunset.

**தாதுபம்,** உடம்பின் 7 வகை தாதுக்களில் ஒன்றாகிய அன்னரசம், one of the seven Dhatus of the body — chyle; 2. பிரதான ரசம். elementary juice.

**தாதுபரீட்சை,** நாடிசோதித்தல், examination of pulse; 2. தாதுவர்க்கங்களைச் சோதித்தல் examination of minerals.

**தாதுபரீட்சைநூல்,** பூமியிலுள்ள தாதுப் பொருள்களைப் பற்றிச் சொல்லும் நூல் the science which treats of minerals — Mineralogy.

**தாதுபலக்குறைவு,** பெண் சம்போகத்திற்கு வேண்டிய பலக்குறைச்சல், want of virile power sufficient for sexual intercourse.

**தாதுபலம்,** விளைசுண்ணாம்பு, chalk, a mineral like stone.

**தாதுபற்பம்,** பொன், வெள்ளி, செம்பு முதலிய உலோகங்களைப் புடமிட்டெடுத்த வெள்ளைத்தூள், white powder derived by calcination of metals as gold, silver, copper etc — calx.

**தாதுபாகம்.** தூக்கம் பிடியாமை, மலபந்தம் மாரடைப்பு, உடம்பு வலி முதலிய துர்க்குணங்கள், morbid symptoms as sleeplessness constipation, breast pang, bodily pain etc தாதுபாகம் — liquefaction of tissue, retrogressive tissue.

**தாதுபார்த்தல்,** கை நாடி பார்த்தல், feeling the pulse.

**தாதுபுஸ்டி சரக்கு,** வெள்ளைக் கற்கண்டு, சாதிக்காய், கிராம்பு, சாதிபத்திரி, வால் மிளகு, அபினி, நீர்முள்ளிவிரை, பேரீச்சம் பழம், சாலாம் பிசின், கருவாப் பட்டை, வெங்காய விரை, செம்முள்ளங்கி விரை, பேரரத்தை, white sugar candy, nut meg, cloves, mace, cubels, opium, seeds of Hygrophila spinosa, dry dates, resin of Indian dammer cinnamon bark, onion seeds etc., are all aphrodisiac.

**தாதுபுஷ்டி,** விந்தூறல், secretion of semen.

**தாதுபுஷ்டி சூரணம்,** நிலப்பனங் கிழங்கு வேண்டிய அளவு கொண்டு மேல் தோல் சீவி இடித்து வஸ்திரகாயம் செய்து சம எடை சர்க்கரை சேர்த்து தினம் திரிகடிப் பிரமாணம் கொள்ள சொறி சிரங்கு போம், தாது புஷ்டி அதிகரித்து விந்தூறும், This powder is aphrodisiac, contains root of ground palm — Curculigo orchioides and sugar. It cures itch.

**தாதுபுஷ்டி சூரணம்,** நீர்முள்ளிவிரை, சாலாம் பிசின், கருவாப்பட்டை, சமன் இடித்து வஸ்திரகாயம் செய்து கொடியாட்டின் பால் ஆழாக்கில் ½ பலம் தூவிட்டு காய்ச்சிக் குடித்துவர வீரிய விருத்தியுண்டாம், This powder contains the powder of seeds of Hygrophila spinosa resin of shorea robusta and cinnamon bark. If ½ Pal of this powder is boiled in one ollock of goats milk and drunk in the morning it acts as aphrodisiac.

**தாதுபுஷ்டிமூலி,** அமுக்கிராங் கிழங்கு, நிலப் பனங் கிழங்கு, பூமி சருக்கரைக் கிழங்கு, வெள்ளை வெங்காயம், Root of withaina somnifera, root of Curculig orchioides, tuber of Merma are nario and white onion are all aphrodisiac.

**தாதுபுஷ்டி மருந்து,** விந்தூறுவதற்காகக் கொடுக்குமருந்து, any medicine prescribed for increasing the secretion of semen in the system; 2. சம்போகத்திலிச்சையை உண்டாக்குமருந்து, a proprictory aphrodisiac remedy for promoting the sexual instinct — Virisanol.

**தாதுபுஷ்டி லேகியம்,** திப்பிலி. சித்தரத்தை, அமுக்கிருங்கிழங்கு, ஏலரிசி, கோஷ்டம், சடாமாஞ்சில், அதிமதுரம், தான்றிக்காய், சாதிக்காய், மாசிக்காய், ஏலக்காய், கடுக்காய், சாதிபத்திரி, வால்மிளகு, நற்சீரகம், அக்கிரகாரம், மிளகு, கிராம்பு, இருவேலி, கருஞ்சீரகம், சந்தனம், வகைக்கு களஞ்சி 1¼ எடுத்துக்கொண்டு சுத்தி செய்த கஞ்சா 5 பலம் இவைகளை இடித்து சூரணித்து வஸ்திரகாயம் செய்து வெங்கலப்பாத்திரத்தில், முதலாக தேன், நெய் ¼ சேர், வெள்ளைக் கற்கண்டு ½ பலம் போட்டு பாகுபோல் கிளறி வைத்துக் கொண்டு வேளைக்கு பாக்களவு இருவேளை 10 நாள் சாப்பிட விந்து அதிகரிக்கும், ஒரு வேளை உடம்பில் சிரங்கு உண்டானலும் நிறுத்த வேண்டாம். அன்றியும் இதனுல் வாதம், வாயு, உடம்பு மெலிவு. மயக்கம், உட்புண்ணு முதலியவை போம். This electuary is aphrodisiac in action and hence its name. It is prepared as detailed above. Even when eruptions appear it must be continued. It cures rheumatism, emaciation, giddiness internal ulcers. Its chief ingrediant is cannabis sativa — Ganjah.

**தாதுபுட்பிகம்,** தாதகிப் பூ, flower of downy grislea so called from its red flowers — Grislea tomentosa alias wood fordin floribunda ( flower of ).

**தாதுபேசல்,** நாடிதுடித்தல், beating of the pulse — Pulsation.

**தாதுப்புண்,** விந்தூறும் குழாய்களுக்கு ஏற்படும் புண், ulceration of spermatic vessels.

**தாதுப்பொருள்,** பவழம், முத்து. வைரம் முதலிய இயற்கைப் பொருள்கள், the natural products such as coral, pearl, diamond etc.

**தாதுப்பொருள் நூல்,** இரசாயன நூல், alchemical science; 2. பௌதிக நூல், chemistry — physics.

**தாதுமலம்,** உடம்பினின்று கழியும் மலம், வியர்வை, கோழை முதலியன, impure excretions from the body such as fecies, sweat, phlegm etc; 2. ஈயம், lead ( as the most impure of metals.

**தாதுமற்று,** சர்க்கரைவேம்பு, sweet margosa.

**தாதுமாசிகம்,** கந்தகம் சேர்ந்த ஓர்வகை இரும்புமண், sulphuret of iron.

**தாதுமாதுளை,** பூமாதுளை, pomegranate bearing only flowers but no fruit; 2. இனிப்புக் கொடி மாதுளை, sweet pomegranate.

**தாதுமரணம்,** உலோகக்கட்டு, consolidation of metals; 2. ஓர் மருந்து, name of a medicine.

**தாதுமாரின்,** உலோகங்களைக் கரைத்தல், dissolving metals; 2. கந்தகம், sulphur.

**தாதுமுரிதம்,** கொடி எலுமிச்சை, lemon creeper — Citrus medica limonum.

**தாதுமுறை,** உடம்பினில் நாடிக்குரிய இடங்களான கை, மார்பு முதலிய பத்து இடங்களில் சோதிக்கும் கிரமம், the method of examining the centres of pulsation as detailed in the following staza.

> " தாதுமுறைகேள் தனித்தகுதிச் சந்தோடு
> ஓதுது காமியம் உந்திநெடு மார்பு
> காதுநெடு மூக்கு கண்டம் கரம புருவம்
> போதுறும் உச்சி புகழ் பத்தும் பார்த்திடே "
> (திருமூலர்)

**தாதுமூலசீவன்,** இரசநிரசவஸ்துவும், inorganic and organic bodies.

**தாதுமெலிதல்,** தாதுமெலிவு, emaciation.

**தாதுராசகம்,** விந்து, semen, as chief fluid of the body.

**தாதுரோகம்,** விந்தைப் பற்றிய நோய், வெள்ளை, வெட்டை முதலியன, diseases relating to semen such as spermatorrhoea gonorrhoea etc.

**தாதுவத்தினை,** புட்கரமூலம், அதாவது தாமரைக் கிழங்கு, lotus root.

**தாதுவஸ்து,** தாதுப்பொருள், mineral substances.

**தாதுவர்க்கம்,** தாதுவகை, mineral kingdom.

**தாதுவர்த்தகம்,** மலம் முதலிய கழிவுப் பொருள்களை அதிகப்படுத்தல், promoting the animal secretions.

**தாதுவலுத்தல்,** விந்து பலப்படுத்தல், thickening or strengthening semen.

**தாதுவல்லபம்,** பொரிகாரம், borax.

**தாதுவழுதலை,** வழுதலை, brinjal plant.

**தாதுவழுந்தல்,** நாடிஒடுங்குதல், sinking of the pulse.

**தாதுவாதம்,** தாதுப்பொருளைப் பற்றிய நூல், இது 64 கலைக்கியானங்களுள் ஒன்று, the science which treats of minerals — Mineralogy. It is one of 64 arts and science of ancient Hindus; 2. நாடி அறிவு, knowledge of pulse.

**தாதுவாதி,** பொன் முதலிய உலோகங்களைப் பேதித்தும், சோதித்தும் பார்ப்பவன், one who is in the art of examining by analysis the different metals such as gold etc — Mineralogist.

**தாதுவாரிணி,** சேவகனுர் கிழங்கு அல்லது கார்த்திகைக் கிழங்கு, plough root — Gloriosa superba.

**தாதுவிகற்பம்,** ஒரே தாதுப் பொருள் 2, 3, மாதிரி பல குணங்களோடு அமைந்த தாய்க் காணப்படல், the fact of certain elements existing in two or more conditions with different physical properties as carbon existing in the form of coal, charcoal, plumbago, diamond etc.

**தாதுவிஷமம்,** தாதுவின் கோளாறு, disarrangement or disturbance of the equilibrium of humours in the body.

**தாதுவிஷம்,** பாஷாணம், அதாவது தாம்பிரம், ஈயம், வீரம் முதலியவைகளின் விஷம், mineral poison as of copper, lead, corrosive sublimate etc.

**தாதுவிரசம்,** இரசம், blood; 2. சுக்கிலம், semen; 3. உலோகங்களின் சத்து, metallic essence.

**தாதுவிருத்தி,** தாதுவிளைவு, increase of secretion of semen.

**தாதுவிருத்திமூலி,** உடம்பில் சுக்கிலத்தை அதிகப்படுத்து மருந்து மூலிகைகள், அவை யாவன: சிவப்பு முள்ளங்கி, முள்ளங்கிக் கிழங்கு, வெங்காயம், பேரீச்சங்காய் வாதுமைப் பருப்பு, சாலாமிசிரி, தண்ணீர்விட்டான் கிழங்கு, கசகசா, வெள்ளாட்டுப்பால், பசும்பால், நெய், herbs and other substances capable of increasing semen in the body — Aphrodisiacs.

**தாதுவிருத்தினி,** சுக்கிலத்தை அதிகப்படுத்தி காமத்தை மூட்டும் மருந்து, aphrodisiac.

**தாதுவிழல்,** நாடிபலவீனப்படல், failure or sinking of the pulse.

**தாதுவிளக்கம்,** நாடி நடையைப் பற்றி விவரமாகச் சொல்லும் நூல், the book that treats about pulse.

**தாதுவிளைவு,** சுக்கில விருத்தி.

**தாதுவின் உபதாது,** சப்த தாதுக்கள் கிடைக்காவிடில் அதற்குப்பதிலாக உபயோகப்படும் வஸ்துக்கள்; அவையாவன:பொன்னுக்கு சுவர்ணமாட்சிகம், வெள்ளிக்கு-தாரமாட்சிகம், தாம்பிரத்திற்கு - துத்தம், வங்கத்திற்கு - கங்கோஷ்டம், ஜாதசம் - கற்கபரி நாகம் - சிந்தூரம், உலோகம் — கிட்டக்கல்.

**தாதுவைரி,** ஏலம், cardamon; 2. கடுக்காய், gallnut; 3. கந்தகம், sulphur.

**தாதுவைஷமியம்,** susceptibility on the part of the tissues.

**தாதை,** பேய்க்கொம்மட்டி, bitter apple — Cucumis colocynthis.

**தாதோடல்,** நாடி நடத்தல், beating of the pulse — pulsating

**தாதோட்டம்,** நாடியோட்டம், pulsation.

**தாத்தாரி,** நெல்லி, Indian goose berry — Phyllanthus emblica alias Emblic myrobalum.

**தாத்தி,** ஆத்திமரம், mountain ebony — Bauhinia racemosa.

**தாத்திரகம்,** சுக்கு, dry ginger

**தாத்திரி,** ஆடுதின்னுப்பாளை, worm killer, ulcer plant — Aristolochia *bracteata;* 2. நெல்லி வற்றல், dried goose berry; 3. நெல்லிமரம், Phyllanthus embica alias Emblica officinalis; 4. ஆயாள், nurse; 5. மருத்துவிச்சி, midwife.

**தாத்திரிபத்திரம்,** தாளிசபத்திரி இலை, leaf of East Indian plum — Flacourtia *cataphracta* (leaf of).

**தாத்திரிபலம்,** நெல்லிக்கனி, see **தாத்திரி.**

**தாத்திரிபலை,** see தாத்திரிபலம்.

**தாத்திரிபுட்பிகம்,** see தாதுபுட்பிகம்.

**தாத்திரிமோதகம்,** நறுபுகைப் பிசின், sweet smelling resin burnt to disinfect or scent the air of a room (particularly of patients) — Pastile or Pastille.

**தாத்திரியாதி கஷாயம்,** நெல்லிவற்றலோடு மற்ற கடைச் சரக்குகளையும் சேர்த்து இரக்கும் கஷாயம், decoction extracted from a mixture of dried Indian gooseberry, with a few other bazaar drugs.

**தாத்திரியாதி சூரணம்,** பித்த சூலைக்குக் கொடுக்கும். ஆ. வே. மருந்து. நெல்லி வற்றல் சூரணத்துடன் தேன் கலந்து அல்லது கடுக்காய் தோல் சூரணத்தில் வெல்லம் நெய் கலந்து சாப்பிடுவது, an Ayurvedic medicine containing either gooseberry or gallnut powder. The former is given with honey late with jaggery and ghee for rheumatic pain caused by heat.

**தாத்திரீஸ்வரி,** தாதகிபுட்பம், see தாதுபுட்பிகம்.

**தாத்துருரோகம்,** படர் தாமரை, உடம்பில் பலவிடங்களில் வளையம்போன்ற தழும்புகளாகப் படருமோர் சர்மநோய், a skin disease in which itchy pimples appear in rings — Ringworm.

**தாத்திரேயகி,** பால் கொடுக்கும் பெண், a nurse engaged to suckle an infant — Wet nurse.

**தாத்தினி,** நெல்லி, see தாத்தாரி.

**தாத்துவாகினி,** ferments.

**தாத்துவாசம்.** செவ்வியம், root of black pepper.

**தாத்விகம்,** உண்மையை அநுசரித்த, comfortable to or in accordance with reality.

**தாநகம்,** கொத்தமல்லி, coriander.

**தாநம்,** யானை மதம், periodic heat of animals or rut especially of an elephant.

**தாநாகம்,** see தாநகம்.

**தாந்தகாரி,** வாதமடக்கி, wind killer — Cleodendron phlomoides.

**தாந்தனம்,** காற்று, wind; 2. வாதம், vatha ( wind humour ).

**தாந்திமம்,** பஞ்சேந்திரிய நிக்கிரகம்.

**தாந்திரி,** see தாத்திரி.

**தாந்திரிகசன்னி,** குழந்தை முலையுண்ணாது காய்ச்சல் கண்டு தலைசுழற்சி, மூர்ச்சைக் காணும் ஓர் நோய், typhus fever in children marked by unwillingness to suck milk and giddiness, attended with fatigue.

**தாந்திரிகசுரம்,** உடம்புவலி, பிரலாபம், பலவீனம், நாடிசூட்சுமம் அல்லது அதிவேகம் முதலிய குணங்களோடு பொருந்திய சுரம், fever marked by pain all over the body, raving, weakness attended with weak or sometimes repid pulse etc.

**தாந்திரிகம்,** தாந்திரிக சன்னி; 2. உடல் காய்ந்து வாய் பிதற்றி, வாந்தி, தாகம் இவைகள் கண்டு, உண்ணாக்குத வறண்டு, வயிறு கழிந்து 25 நாளில் குணப்படும் ஓர் வகை சன்னி நோய், a kind of typhus fever characterised by rise of temperature, raving or talking irrationally, vomitting, thirst, parchedness at the root of the tongue, purging and other prominent symptoms. The incubation period is twenty five days; 3. தாந்திரிகநூல், இது கிரந்தத்தில் எழுதியது, the doctrines of tantric science written in grantham i. e. Sanskrit of Dravadian characters.

**தாந்திரிகன்,** நூல் வல்லோன், a scientist one completely versed in any science or system, as follower of Tantra doctrine.

**தாந்திரீகம்,** ஓர் வைத்திய நூல், a medical science.

**தாந்துநாகம்,** சுறு, shark.

**தாபகம்,** வெப்பம், heat; 2. துக்கம், grief; 3. அடுப்பு, cooking stove or oven.

**தாபகரி,** ஓர்வகைத் தித்திப்பு பருப்புக் குழம்பு, a kind of soup of pulse and grain fried with ghee and terrmeric and afterwards boiled with salt and sugar.

**தாபக்காய்ச்சல்,** உடம்பு முழுவதும் எரிச்சல் காணும் ஓர்வகைக் காய்ச்சல், a kind of fever in which burning sensation is the prominent symptom, See தாபச்சுரம்.

**தாபக்கினி,** காட்டாக்கினி, a great burning or fire; 2. தாகத்தை உண்டாக்கும் வெப்பம், excess of heat in the system causing thirst; 3. விரகதாபம் அல்லது காம வருத்தத்தினாலேற்படும் உடற் கொதிப்பு, bodily heat experienced from love passion.

**தாபசத்தருவு,** see தவசுமரம்.

**தாபசப் பிரியை,** கொடி முந்திரிகை, vine grape — Vitis vinifera; 2. காட்டுமா, hermit's tree — Buchanma latifolia.

**தாபசம்,** ஓர்மரம், a kind of tree; 2. கொக்கு, stork

**தாபசுர மாத்திரை,** சுத்திசெய்தவாளம் விடை-8, சாதிலிங்கம் விடை-5, அரிதாரம் விடை-3, வெண்காரம் விடை-6, கடுகுரோகணி விடை-7, மனோசிலை, நாபி, வகைக்கு விடை-1, இவைகளை எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்து குன்றியளவு செய்து உலர்த்திய மாத்திரை, இஞ்சி சாற்றில் கொடுக்கவும், a fever pill containing vermilion, yellow arsenic sulphide, borax, red arsenic sulphide, aconite, black hellebore. All ground with the juice of lime fruit and made into pills of the size of jeweller's bead, one pill is given with ginger juice for remittent fever.

**தாபசுரம்,** உடம்பில் மிக்க வெரிச்சல், நாவுலரல், மார்பெரிச்சல், நித்திரையின்மை, பிரலாபம், பலவீனம், சுவாசம் முதலிய குணங்களை யுண்டாக்கும் ஓர் வகைக் காய்ச்சல், இது 64, வகை சுரங்களிலொன்று, a kind of burning fever marked by burning sensation in the body, parched tongue, burning of the chest, sleeplessness, irrational talking, weakness, hard breathing etc; 2. விட்டுவிட்டுக் காயும் ஓர் விஷக்காய்ச்சல், a kind of malarial fever with exacerbations and remissions — Remittent fever Malarial fever. It is one of 64 kinds of fever.

**தாபசாதரு,** நாட்டுவாதுமை, country almond — Terminalia catappa.

**தாபச்சுவாலை,** கொடியசுரம், burning fever.

**தாபதி,** செம்பு, copper.

**தாபதிவிருட்சம்,** இங்குணம், a unknown tree.

**தாபத்திரயம்,** மூன்றுவகைத் தாபங்கள், அவையாவன, கோபதாபம், விரகதாபம், மனத்தாபம், the three kinds of strong emotions or excitements divided according to their sources viz. sexual passion, anger and agitation of mind; 2. மூவகைத் துன்பம், the three kinds of afflictions from.

1. தெய்வீகம், divine hand.
2. ஆன்மீகம், mankind or animal kingdom.
3. பௌதீகம், elements.

**தாபநமனி,** இளைத்தல், pining; 2. வருந்தல், grieving.

**தாபந்தம்,** see தாபந்திரியம்.

**தாபந்திரியம்,** வேதனை, pain; suffering.

**தாபபதம்,** தாபப்பரிமாணம், அதாவது வெப்பத்தின் அளவு, the thermal condition or the degree of heat of the body — Temperature.

**தாபமாயிருத்தல்.** வெப்பத்தினால் வேதனைப்படுதல், suffering pain from heat.

**தாபமாறி,** தான்றி, devil's abode — Terminalia bellerica.

**தாபமாற்றி,** தாகத்தைத் தணிக்கும் வஸ்து, any substance allaying thirst; 2. உடம்பின் எரிச்சலையடக்கு மருந்து, any medicine or application tending to soothe the burning sensation of the body — Emollient; 3. உடம்பினழற்சியைப்போக்கு மருந்து, any soothing or oily medicine or application allaying irritation of inflamed surface — Demulcent.

**தாபமானி,** உடம்பின் வெப்பத்தை அல்லது இடத்தின் சீதோஷ்ண நிலையையும் குறிப்பிக்கும் ஓர் கருவி, clinical thermometer for taking the temperature of the surface of the body or an instrument for measuring the variations of sensible heat of a particular place — Thermometer.

**தாபம்,** உஷ்ணம், heat; 2. தாகம், thirst; 3. உடம்பின் சூடு, bodily heat; 4. அழற்சி inflammation, 5. அதீதவெரிச்சல், intense burning sensation as in an intoxicated person; 6, காட்டாக்கினி, see தாபக்கினி, 7. துக்கம், grief, 8. பரிதாபம், sympathy.

**தாபரசங்கம்,** see தாவரசங்கம்.

**தாபரசாஸ்திரம்,** பூண்டு அல்லது மூலிகைகளைப்பற்றிக்கூறும் நூல்; science of medicinal plants or of the vegetable kingdom — Botany.

**தாபரமுப்பு,** சிந்துலவணம், sindh salt; sea salt.

**தாபரம்,** see தாவரம்; 2. உடல், body.

**தாபரவம்,** கெருடன் கொடி, அதாவது பெருமருந்துக் கொடி, Indian birth wort — Aristolochia indica.

**தாபரவியாபகம்,** தேகவுஷ்ணம் பரவி நிற்கும் தன்மை. diffusion of temperature.

**தாபனச்சடம்,** புனுகு பூனை, civet cat; 2. சேரான் கொட்டை, marking nut—Semicarpus anacardium, 3.முன்னை Indian head ache tree — Premna spinosa.

**தாபனம்,** தாபம், inflammation; 2. எரிச்சல், burning, 3. வெப்பம், heat; 4. நோயுண்டாக்கல், causing pain or distress.

**தாபாக்கினி,** see தாபக்கினி; 2. உஷ்ணம், heat; 3. தாகத்தை யுண்டாக்கும் வெப்பம், heat creating thirst.

**தாபிசு,** நோயில்லாமலே சதை கரைதல், wasting of flesh without apparent disease— Marasmus.

**தாபிஞ்சம்,** ஆமணக்கு விதை, caster seed; 2. பச்சிலைமரம், Mysore gamboge — Garcinia xantho chymus; 3. தமாலம். a tree— Xanthochymus pictorius.

**தாபிதகுணம்,** வெப்பத்தை அல்லது அழற்சியை யுண்டாக்கும் குணம், quality of causing heat or inflammation; 2. எரிச்சல் உண்டாக்குங்குணம். burning nature.

**தாபிதக்குறி,** தாபித சுரத்தின் அடையாளம், symptoms of typoid fever.

**தாபிதநோய்,** அழற்சியை உண்டாக்கும் நோய்கள் அவையாவன :—

நாடி தாபிதம், inflammation of an artery — Arterities.

மூட்டுதாபிதம், inflammation of a joint — Artherities.

இலிங்கமலர் தாபிதம், inflammation of the glans penis — Balanitis.

கண்ணிரப்பைத் தாபிதம், inflammation of the eye lids — Blepharitis.

சுவாசக்குழல் தாபிதம், inflammation of the bronchial tubs — Bronchitis.

கடைக்கண் தாபிதம், inflammation of the canthus — Canthitis.

இருதயத் தாபிதம், inflammation of the heart — Carditis.

அடிவயிறு தாபிதம், inflammation of the abdomen — Celitis.

கண்ணறைத் தாபிதம், inflammation of the cellular tissues — Cellulitis.

சிறுமூளைத் தாபிதம், inflammation of the cerebellum — Cerebellitis.

முருந்து தாபிதம், inflammation of the cartilage — Chondritis.

உண்ணாக்குத் தாபிதம், inflammation of the uvula — Clonitis.

சுமரித் தாபிதம், inflammation of the clitoris — Clitoritis.

மலக்குடற்றாபிதம், inflammation of the colon — Colonitis.

மூத்திரப்பைத் தாபிதம், inflammation of the bladder — Cystitis.

கழுத்துக் கோளத் தாபிதம், inflammation of the glands of the neck — Deradenitis.

தோல்தாபிதம், inflammation of the skin — Demratitis.

பிடுக்குவிதைத் தாபிதம், inflammation of the testicles — Didymitis.

இருதயச்சவ்வுத் தாபிதம், inflammation of the endocardium — Endo carditis.

இரைப்பைத் தாபிதம், inflammation of the stomach — Gastritis.

பிட்டத் தாபிதம், inflammation of the bullock — Glutitis.

தாடைத்தாபிதம், inflammation of the jaw — Gnatheitis.

கல்லீரற்றாபிதம், inflammation of the liver — Hepatitis.

கருப்பைத் தாபிதம், inflammation of the uterous — Hysteritis, Metritis.

விழித்தாபிதம், inflammation of the cornea — Keratitis.

மண்ணீரற்றாபிதம், inflammation of the spleen — Lienitis, Splenitis.

முலைக்காம்புத் தாபிதம், inflammation of the nipple — Maminitis.

முலைத்தாபிதம், inflammation of the breast — Mastitis.

தசைத் தாபிதம், inflammation of the muscle — Myostitis.

குண்டிக்காய்த் தாபிதம், inflammation of the kidney — Nephritis.

பல்லுத்தாபிதம், inflammation of the tooth — Odontitis.

தோள்த் தாபிதம், inflammation of the shoulder — Omitis.

தொப்புள்தாபிதம், inflammation of navel — Omphalitl.

கண்தாபிதம், inflammation of the eye — Ophthalmitis.

விதைத்தாபிதம், inflammation of the testis — Orchitis, Testitis.

இடுப்புத் தாபிதம், inflammation of the boins — Osphlitis.

எலும்புத் தாபிதம், inflammation of the bone — Osteitis.

செவித் தாபிதம், inflammation of the ear — Otitis.

மேற்பரடு தாபிதம், inflammation of the palate — Palatitis.

கணைய தாபிதம், inflammation of the pancreas — Pancreatitis.

வயிறுறைத் தாபிதம், inflammation of the peritoneum — Peritonitis.

நாளத் தாபிதம், inflammation of the vein — Phlebitis.

விதானத் தாபிதம், inflammation of the diaphragm — Phrenitis.

பரிபுப்புசத் தாபிதம், inflammation of the pleura — Pleuritis.

புப்புசத் தாபிதம், inflammation of the lungs — Pulmonitis (Pneumonia).

மலவாய்த் தாபிதம், inflammation of the rectum — Rectitis.

தரிசியத் தாபிதம்,inflammation of the retian — Retinaitis.

மூக்குத் தாபிதம், inflammation of the nose — Rhinitis.

விந்துக்குழாய்த்தாபிதம்,inflammation of the vas deferens — Spermatitis.

வாய்த் தாபிதம், inflammation of the mouth — Stomatitis.

தாபிதம், inflammation of the thyroid body — Thyroiditis.

செவிப்பறைத் தாபிதம், inflammation of the eardrum (tympanum) — Tympanitis.

மூத்திரதாரைத் தாபிதம், inflammation of the urethra — Urethritis.

உண்ணாக்குத் தாபிதம் inflammation of the uvula — Uvulitis.

யோனித் தாபிதம், inflammation of the vagina — Vaginitis.

கடிதடத் தாபிதம், inflammation of the vulva — Vulvitis.

**தாபிதம்,** உடம்பின் எப்பகுதியிலாவது சூடுண்டாகி சிவந்து வலியுடன் உண்டாகும் வீக்கம், இது நுண்ணிய இரத்தக் குழல்களிடையே நடைபெறும், அப்பொழுது சதைக்காவது உள்ளுறுப்புக்காவது பிரகோபத்திலேற்படும் அழற்சி, இது பல வகைப்படும், any part of the body or its internal organs marked by heat, redness and pain with swelling. It is a change taking place in the blood and walls of the small vessels. It is a condition in which tissues enter as a reaction to irritation. It consists of different varieties viz-

1. அதீதவழற்சி, one in which the process is active — Acute inflammation.
2. இணைக்கும் தாபிதம், one promoting the union of cut surfaces — Adhesive inflammation.
3. சளித் தாபிதம், one marked by discharge of mucous — Catarrhal inflammation.
4. இழுக்குத் தாபிதம், inflammation of long duration — Chronic inflammation.
5. பரவிய தாபிதம், one that is spread over a large area — Diffused inflammation.
6. ஒழுக்குத் தாபிதம், one in which prominent exudation is present — Exudative inflammation.
7. வலித் தாபிதம், one attended with great irritation — Irritative inflammation.
8. சூலைத் தாபிதம், that which is due to gout — Gouty inflammation.
9. வாதத் தாபிதம், one due to exposure to chillness — Rheumatic inflammation.
10. ஊனொழுக்குத் தாபிதம், one that pro-duces an exudation of serum — Serrus inflammation.
11. தனித் தாபிதம், one which is with-outpus or other products — Simple inflammation.
12. விஷத் தாபிதம், that which is caused by poison — Toxic inflammation.
13. காயத் தாபிதம், one that is caused by injury — Traumatic inflammation.
14. சீழ்க்கொள் தாபிதம், one which is characterised by the formation of pus — Suppurative inflammation.
15. அழுகற்றாபிதம். one that is followed by decomposition or rottenness.

**தாபியாட்சணம்,** காட்டுத்துளசி, wild basil —Ocimum adscendens.

**தாபிலிகை,** இலைக்கள்ளி, leaf spurge —Euphorbia neriifolia.

**தாமகந்தி,** சிறுவழுதலை, wild Idian brinjal — Solanum indicum.

**தாமசபதார்த்தம்,** தாமச குணத்தை அதிகப் படுத்தும் உணவு பொருள், — stupefying food.

**தாமசம்,** மந்த தணம், quality of being dull, 2. முக்குணத்திலொன்று, one of the three inherent qualities of man — Tamasic, 3. மடமை, want of knowledge—Nescience, 4., இருள் மயக்கம், இது தூக்கத்தை மூட்டும் principle of illusion Sleeps sets in as a result of the effect of this principle.

**தாமசவித்தியா,** பிறப்பிலேற்பட்ட 3. வித குணங்கள், the three qualities or constitutants of everything in creation.

**தாமசி,** நோயுண்டாக்கும் பேய், a damon causing diseases.

**தாமணி,** வலம்புரிக்காய், tursted horn — Isora corylifolia alias Helicteres isora.

**தாமதப்பிரசவம்,** பிள்ளைப்பேறு நீடித்தல்— tedious labour.

**தாமதவேளை,** 3¾ நாழிகை கொண்ட காலம், a period of 90 minutes or 1½ hours.

**தாமமாதிகம்,** கொடிமுந்திரி, grape vine.

**தாமம்,** உடம்பு, body; 2. பிரகாசம், lustre rediance; 3. கொன்றைமரம், cassia tree — Cassia; 4. சுகம், health, pleasantness; 5. பிறப்பு, birth, 6 மறுபிறப்பு, transmigration — rebirth; 7. பூ, flower, 8. மலை, mountain; 9. வேங்கைமரம், Indian kino tree.

**தாமரசம்,** செப்பு, copper; 2. தாமரை; lotus flewer. 3. பொன், gold.

**தாமாம்,** தாமிரம், copper, 2. நெய், ghee; 3. தாமரை, lotus flower; 4. கார்முகில் பாஷாணம், a kind of prepared arsenic.

**தாமருபுட்பி,** பாதிரி, trumpet flower tree— Bignonia chelonvides.

**தாமரை,** கமலம், இதற்கு அம்புசம், அரவுந்தம், திருமாலுந்தி, எல்லி, மரை, முளரி, சூரியநட்பு, சரோருகம், சேகயம், வனசம், பங்கசம், நளினம், முண்டகம், சரோசம், கோகனகம், கஞ்சம், அம்போருகம், வாரிசம், பங்கேருகம், புண்டரீகம், சதபுட்பம், பதுமம் எனப் பல பெயர்களுண்டு, இது நீரில் விளையும், இதன் இலை காம்பைவிடப் பூவின் காம்பு மிக்க நீளம், சதைப்பற்றுள்ளது, அடிப்பாகத்திினின்று அனேக இழைகள் பிரியும், கொட்டைக்குள் ஒன்று அல்லது இரண்டு விதைகளிருக்கும், பூ பெரிதாகவும் வெள்ளை நீலம் அல்லது சிவப்பு நிறமாகவும் இருக்கும், வருஷந்தோறும் பூக்கும், இலை மெத்த அகலமாயிருக்கும், குளத்தில் முளைக்கும், வெள்ளைப்பூவைவிட சிவந்த பூவிற்கு மணம் அதிகம். விதைகள் பட்டாணியை விட இருமடங்கு பருமனும் கடினமாயும் (இருக்கும்), காய்ந்தால் கரய்க்குள் ஆடும், இதன் தண்டு பூக்காம்பு இவைகள் தண்ணீரில்மேல் காணப்படும், இதன் கிழங்கு கடைகளில் பலமாதிரியாகக் காணலாம்; வாசனையில்லை, ருசிக்க வழவழப்பாயிருக்கும், இப்பூ, விஷ்ணுவிற்கும் இலக்குமிக்கும் உகந்ததாகக்கொள்ளப்படும். இதைப் பெண்கள் முகத்திற்கு ஒப்பிட்டும், அவர்கள் அழகிற்கு அறிகுறியாகவும் சொல்லப்படும், இது சூரிய உதயத்தில் மலர்ந்து மறையும்போது மூடிக்கொள்ளும், இதன் பூக்கள், விதைகள், கிழங்குகள் மருந்திற்குபயோகப்படும், குணத்தில் அல்லியைப்போன்றது, இதன் காம்புகள் துவர்ப்பும், குளிர்ச்சியுமுள்ளவை விதைகள் மூத்திரத்தைப் போக்கும் தன்மையதும், சூட்டைத் தணிக்கும் குணமுள்ளதுமானது, இதன் இலைகளை சுரம் காய்பவர்களுக்கு அடியில் பரப்ப குளிர்ச்சியாயிருக்கும், இதன் தண்டு இலைப்பால் அசீரண பேதிக்குக் கொடுக்கலாம், இதினின்று சர்பத், தயாரித்து குளிர்ச்சியுண்டாகக் கொடுக்கலாம், இதன் வேரை அரைத்து சரும நோய்களுக்குப் பூசலாம், கிழங்கை பச்சையாகவும், வருத்தும் அல்லது வேகவைத்தும் தின்னலாம், இதை துணுக்கிட்டு, காயவைத்து, எண்ணெயில் இட்டு வருத்து, தின்பதுண்டு, தண்டு இலை இவைகளை காய்கறியாகவும் கீரையாகவும், கொள்ளலாம், இலைகளை உண்கலமாகவும் பூசை சாமான் வைக்கவும் உபயோகிக்கலாம், இது சாதாரணமாக இரண்டுவிதமாயினும் பல காரணங்களை முன்னிட்டு பல வகைகளாகக் கருதப்படும், அவையாவன:—

Lotus flower — Nelumbium speciosum. It is called by several names as kamala, waterborn, Vishnu's navel, white lotus, hundred petalled flower. Padmam etc. It is an aquatic flowering plant, peduncles longer than the petioles, root stock fleshy, send-

ing out many fibres from the under surface, petioles long, rising above the surface of water, nuts loose, one to two seeded, flowers large, white or rose coloured, flowering nearly all the year leaves are round, large and broad. It is not only a sedative expectorant and demulcent, but also a cooling tonic and nutrient, It is also an astringent. It flowers during hot season, rosecoloured flowers have more agreeable fragrance than the whit ones or blue ones, seeds consist of nuts twice the size of peas and when ripe, they are hard and if shaken make a noise like a rattle, stems petioles and flowerstems are raised above the water the seeds have white and swcetish kernel. The root occurs in the bazaar in small pieces of varied sizes, it is odourless and slightly mucilaginous in taste, it is the immediate attribute of Vishnu and is also sacred to Lakshmi. It is generally compared to a female face and regarded as an emblem of female beauty. It blosoms with the sun and closes with sun set.

The flowers, seeds and roots are medicinally similar to Indian waterlily, filaments are astringent and cooling, seeds are diuretic and refrigerant, large leaves form a cool bed in fever and the milky viscid juice of the leaf and flower stalks is a remedy in diarrhoea, petals are slightly astringent, syrup of the plant is used as a refrigerant, root is used as a paste in cutaneous affections. Seeds are eaten either raw roasted or boiled, roots after being cut into slices, are dried and fried in oil or ghee and eaten, *stalk and leaf are used like greens in eating* and as a dish on which offerings are placed. Although, it consists chiefly of two varieties white ( alba ) and red ( rubra ) it must be distinguished from the various other varieties of the same name viz:

NOTE :— Seeds when ripe are so hard as to require a hemmer to break them. Lotus is the poetic flower of the Hindus.

1. வெள்ளைத் தாமரை, white lotus — Nelumbium speciosum (alba).
2. சிவப்புத் தாமரை, செந்தாமரை, red lotus — Nelumbium speciosium ( rubra ).
3. நீலத்தாமரை, blue lotus — Pontederia vaginalis.
4. ஓரிலைத்தாமரை, one leaf lotus — Ionidium suffruticosum.
5. மலைத்தாமரை, hill lotus or hill nelumbo or will sarsaparilla — Similax ovalifolia.
6. ஆகாசதாமரை, sky lotus — Pistia straliolus alias Tala indica.
7. வட்டத்தாமரை, round leaved lotus — Macuranga indica.
8. கற்றாமரை, stone lotus — Elacocarpus monocera.
9. நிலத்தாமரை, the rose shrub.
10. கடற்றாமரை.
11. குளிர்தாமரை.
12. அல்லித்தாமரை.
13. மேட்டுத்தாமரை, dry ground lotus, see சிமையவுத்தி.
14. முழுகுதாமரை, ஆரை, auray — Marsilea quadrifolia so called from the plant the leaf of which resembles lotus being submerged under water.
15. கிருஷ்ணதாமரை, அதாவது கல்வாழை, stony plantain — Canna indica.
16. அந்தரத்தாமரை, see ஆகாசத்தாமரை.
17. அல்லித்தாமரை, red Indian waterlily — Nymphaca lotus alias — N. esculenta.
18. மஞ்சள்தாமரை.
19. ஈரிலைத்தாமரை.
20. மூவிலைத்தாமரை.

**தாமரை, தாமரைக்காய்**, அதாவது இரத்தாசயம், the seat of blood circulation in an animal; 2. படர்தாமரை, a kind of spreading ring worm; 3. ஓர்வகைப்பூ, elliptic leaved olive linden — Elevcarpus venustus.

**தாமரைக்கண்ணி**, அவுரி, Indigo plant — indigo fera tinctoria.

**தாமரைக்கரடை**, ஓர் மருந்துச் சரக்கு, a medicinal drug.

**தாமரைக்காய்,** see தாமரை.

**தாமரைக்கிஞ்சில்கம்,**

**தாமரைக்கிழங்கு,** தாமரையின் கிழங்கு, இது தின்பதற்குதவும், இது கண்ணுக்கு ஒளியையும், குளிர்ச்சியையுந் தரும், அன்றியும் தவளைச்சொறி, வயிற்றுக்கடுப்புப் போம், the balbous root of lotus. It is eaten. It is cooling improves sight, cures pain on the stomach toad's skin disease.

**தாமரைக்கொட்டை,** தாமரை விதைகளடங்கிய கொட்டை, nut of the lotus containing seeds.

**தாமரைச்சத்துரு,** ஓர்வகைப் பாஷாணம், a kind of native arsenic.

**தாமரைச் சுருள்,** see தாமரை வளையம்.

**தாமரைத்தண்டு,** தாமரைப்பூவின் அடிபாகம், the stem or stalk of lotus. Its juice extract cures heart diseases.

**தாமரைத்தாது,** தாமரையின் பூந்தாது, pollen of the lotus flower.

**தாமரைநாளம்,** தாமரைத் தண்டு, stem of the lotus.

**தாமரை நூல்,** தாமரை வளையத்தின் நூல், the fibre of the water lily.

**தாமரை நோய்,** உடம்பின் மேல் படரும் செம்படைகள், இதனால் மேனி தளரும், a kind of ring worm marked by red patches. It causes relaxation of the skin.

**தாமரைப்பருப்பு,** தாமரை வித்தின் பருப்பு, the inner kernel of shelled seeds of lotus.

**தாமரைப்பூ,** வெண்டாமரை, white lotus; 2. அல்லித்தாரை; red Indian water lily — Nymphae lotus.

**தாமரைப்பூத்தேன்,** தாமரைப் பூவிலுள்ள தேன், இது கண்ரோகங்களைப் போக்கும், honey from the lotus flower — a remedy for ophthalmia.

**தாமரைப்பொகுட்டு,** (தாமரைப்பூவினுள்ளிருக்குங் கொட்டை) the pericarpium or seed vessel.

**தாமரைமணி,** தாமரைப்பூச் செடியின் மணி, pericarp of lotus. see தாமரைக்கொட்டை.

**தாமரைமுள்,** நாய் முள்ளைப் போன்ற ஓர்வித சரும நோய், a kind of skin disease attended with eruptions.

**தாமரைமொட்டு** ,விரியாத தாமரைப்பூ, lotus flower bud.

**தாமரையாசனி,** அரிதாரம், orpiment.

**தாமரையாள்,** ஓர் மஞ்சள் பாஷாணம், yellow sulphuret of arsenic.

**தாமரைவளையம்,** நஞ்சைமுறிக்குங் குணமுள்ள தாமரைத் தண்டு, coils of fresh lotus young stalk having the properties of counter acting poison.

**தாமரைவற்றல்,** வெட்டி உலர்ந்த தாமரைத் தண்டு, dried lotus stalks used for food.

**தாமரைவாசனையாள்,** see தாமரைவாசினி.

**தாமரைவாசி,** மனோசிலை, red arsenic — sulphuretted arsenic.

**தாமரைவாசினி,** see தாமரைவாசி.

**தாமரைவிதை,** இதனால் சுக்கில விருத்தியுண்டாம், seed of lotus it increases semen sec. retion in the system.

**தாமலகம்,** கீழ்க்காய் நெல்லி, Indian annual phyllanthus—Phyllunthus niruvi; 2. பனங்குருத்து, the head of palmyra palm — Borassus flabelliformis.

**தாமலகா,** கொடி நெல்லி, creeper embelica.

**தாமலகி,** see தாமலகம்.

**தாமலகிதளம்,** தாளிசபத்திரி, Indian plum — Flacourtia cata phracta.

**தாமலபத்திரி,** see தமாலபத்திரி.

**தாமலம்,** இலை, leaf.

**தாமலேக்காய்,** நெல்லிக்காய், Indian gooseberry — Emblica officinalis.

**தாமனை,** புன்னை, poon tree — Alexandrian laurel.

**தாமனி,** நரம்பு, nerve, vein.

**தாமன்,** சாரைப்பாம்பு, rat snake.

**தாமாசெங்கமலம்**, செங்கழுநீர், red Indian waterlily — Nymphae lotus.

**தாமார்க்கவம்**, நாயுருவி, Indian burr — Achyranthes aspera.

**தாமி**, மஞ்சள், turmeric.

**தாமிகி**, கொடி நாரத்தை, which see.

**தாமிஞ்சம்**, ஆமணக்கு, castor plant.

**தாமிரகண்டகம்**, சிவப்புமுள், red thorn.

**தாமிரகிருமி**, இந்திரகோபப்பூச்சி, lady's fly — scarlet moth — Mutella occidentalias alias M. antiguensis.

**தாமிரகம**, குன்றி, red jeweller's bead — Abrus precatorus.

**தாமிரகம்**, செஞ்சந்தனம், red sandal; 2. ஆனைக்குன்றி, elephant.

**தாமிரகூடம்**, ஓர் வகைப்புகையிலை, a kind of tobacco.

**தாமிரசிகி**, கோழி, fowl.

**தாமிரக்களிம்பு**, செங்கல் பச்சை, verdigris of copper.

**தாமிரசூடன்**, ஓர் வகைத் தாது, இது உயர்ந்த ரத்தினம், a crystallised mineral, known as garnet.

**தாமிரசூடி**, சிவப்புக் கொண்டையுடைய பறவை, red crested bird; 2. சேவல், cock

**தாமிரச்சிகை**, see தாம்பூரச் சிகை.

**தாமிரச்செந்தூரம்**, செம்பைப் புடத்திலிட்டு எடுத்த சிந்தூரம், red oxide of copper — a red calcined preparation of copper.

**தாமிரபரணி**, செம்புத் தகடு, copper leaf.

**தாமிரபஸ்பம்**, தாம்பூரபற்பம், இதை அடியிற் கண்டமுறைப்படி செய்யப்படும், ஒரு செம்பு நாணயத்தைப் பழுக்கக் காய்ச்சிப் புளியிலைச் சாற்றில் பல தடவை துவைத்துப் பிறகு மூசையிலிட்டு, இரண்டு தடவை அவ்வுருக்கு முகத்தில் கந்தகத்தைச் சேர்த்துருக்கவும், பிறகு அதை எடுத்து நொறுங்கப் பொடி செய்து எலுமிச்சம் பழச்சாற்றில் சுத்தி செய்ய தாம்பிரம் வெளுத்துக்காணும், இதைப்புடமிடப் பற்பமாகும். இதை வேறு விதமாகவும் செய்வதுண்டு. அதாவது செம்பு, முட்டையோடு, நவாச்சாரம், சவ்வீரம், வெண்காரம், அரிதாரம், இரசம், இவைகளைச் சுண்ணும்புடன் சேர்த்துப் புடமிட்டெடுக்க பற்பமாகும், இப்பற்பத்தைக் குட்டம் முதலிய சரும நோய்களுக்குக் கொடுக்கக் குணமாகும், அன்றியும் பல்வலி மண்ணீரல் வீக்கம், ஈரல்வீக்கம், சூலைப் பிடிப்பு, வாதநோய் முதலிய நோய்களுக்கும் கொடுக்கலாம்.

Calcined oxide of copper. It is a white powder chemically prepared from copper. This medicinal powder of copper is made by plunging coppercoin made red hot into acid juice expressed from tamarind leaves. This process is repeated several times after which the coin is melted in a crucible with sulphur thrown into it at two different times. This mass is then ground moistening it with juice of lemon which renders it white. It is then calcined into a white powder. There is another way of preparing this powder by Vaidyans i. e. copper, egg shells muriate of ammonia corrosive sublimate, borax, orpiment, mercury and lime are taken together and then put into a crucible and then calcined. This powder is administered in leprosy and other cutaneous affections. It is used with great advantage in cases of tooth ache enlargement of spleen and the liver gout rheumatism etc.

**தாமிரபலகம்**, கொள்ளு; horse gram,—Dolichos biflorus.

**தாமிரபலம்**, அழிஞ்சில், red fruited Alangium — Alangium delapitalum.

**தாமிரபல்லவம்**, அசோகமரம், asoka tree— Saruca indica.

**தாமிரபல்லியம்**, see தாமிரபல்லவம்.

**தாமிரபீசம்**, கொள்ளு, horse gram — Dolichos biflorus.

**தாமிரபுட்பகம்**, செந்தாமரை, variegated mountain ebony — Bauhimia variegata.

**தாமிரபுட்பம்**, தாதகிப்பூ, downy grislea — Grislea tomentosa.

**தாமிரபுட்பம்,** நேர்ப்பிசின், ground champak — Koempfevia rotunda.

**தாமிரமாரணம்,** செம்பை, பௌதிகப்படி அதன் தன்மையை மாற்றி மருந்திற்கு உப யோகப்படுத்தல், decomposition of copper and its application as a remedy.

**தாமிரமிருகம்,** சிவப்பு மான், red deer.

**தாமிரமுகம்,** சிவந்த முகம், copper faced; 2. சிவந்த நிறம், red complexion.

**தாமிரமூலம்,** சிவந்தவேர், red root; 2. சிவப்புக் கிழங்கு, red bulbous root; 3. மஞ்சிட்டி, copper creeper — Rubia manjista; 4. சுண்டி, a sensitive plant — Mimosa indica.

**தாமிரமெழுகு,** copper made or turned into wax like substance and used as medicine.

**தாமிரம்,** செம்பு, இது ஓர் வகை சிவப்பு உலோகம், இதைத் தகடாய்த் தட்டலாம், கம்பியாகவும் இழுக்கலாம், இதை ருசிக்க அல்லது முகர அருவருப்பைத் தரும், இதைக் காற்றுப் படும்படி வைக்க களிம் பேறும், இது நமது நாட்டில் சாதாரணமாய் ஜெய்ப்பூர், திருவாங்கூர், நெல்லூர் முதலிய விடங்களில் அகப்படும், கடையில் விற்கும் செம்பு வெளி தேசங்களிலிருந்து வரும், பூமி யினின்று தனியாகவும், கந்தகம், பாஷா ணம், இரும்பு முதலியவைகளோடு கலந்தும் காணப்படும், ஆனால் இக்கலப்பில் கந்தகத் தோடு கலந்து அகப்படுவதுதான் மிகுதி, இச்செம்புடன் வெள்ளீயத்தைச் சேர்ப்பதால் வெண்கலம் கிடைக்கும், துத்தநாகத்தைச் சேர்த்தால் மடல் துத்தம் உண்டாகும், இவ் வித கலப்பு வகையால் பித்தளை, தம்பாக்கு முதலியவைகளை நமது நாட்டவர்கள் சுலப மாகச் செய்வார்கள், பொன்னோடு செம்பு கலப்பதுதான் பழுப்புப் பொன் எனப்படும், தனிமையாகச் செம்பினின்று பாத்திரம் செய்து குடிக்கும் தண்ணீரை இறைக்க உபயோகித்தாலும் மேற்கண்ட செம்பு பாத் திரங்கள் சமையல்வகைக்கு உதவாது,ஏனெ னில் உப்பு, புளி முதலியவை சேருங்காலத் தில் செம்பினின்று களிம்பேறி பாஷாண மாக மாறும், இச்செம்பினின்று களிம்பு எடுத்துத்தான் வாதமுறையில் பொன் தயா ரிப்பது, இச்செம்பு தங்கச் செம்பாகில் அதற்கு வாதமுறைப்படி வெள்ளி சேர்த் துருக்க பொன்னாகும், தாமிரச் சுண்ணம் தயாரித்து சித்த முறையில் சொல்லியபடி பொன் செய்யலாம், copper — Cuprum of chemists. It is the only red coloured metal and is malleable and ductile. It has a disagreeable taste and smell when rubbed. When exposed to air a green crust is formed on its surface. In our country it is largely found in Jeypore, Travancore, Nellore and other places, but greater part exposed for sale is imported from foreign countries. It is either procured in metallic state or sulphuretted in combination with iron or iron and arsenic. The sulphurets are the most abundant ores. Copper fused with tin forms bronze and bell metal; with zinc calamine is obtained. Brass is formed when copper and zinc are mixed in proper proportions and it is prepared here in a simple way. Another alloy is pinch beck, copper mixed with gold is known as in the market as sovereign gold and is like the ancient Aescorinthium. Clean copper vessels are safely used for lifting as well as storing drinking water, but copper cooking vessels are dangerous because they get oxidised and become poisonous.

In Alchemy, verdigris is removed from copper and used for transmutation of metals into gold, when concentrated, it is melted with silver in proper proportions to get gold. Chemically calcium compound is prepared with this and is used for transmutation of gold as contemplated in Siddhar's science.

NOTE :— Ideally pure copper occurs very seldom in nature. It has also been found in the feathers of some birds. When copper is near its melting it becomes brittle so as to be powdered. It is soft, malleable and ductile. It is one of the best conductors of heat and electricity.

**தாமிரம்,** மந்தாரை, variegated mountain ebony; 2 பூண்டின் முதற்பெயர்; (உ-ம்.) தாமிரபுட்பி, தாமிரவல்லி முதலியன, plants first term as mentioned above.

**தாமிரவர்ணம்,** செம்பு நிறம், copper colour, 2. சிவப்பு போஸ்தகாய்ச் செடி, copper rose — Papaver rhoeas; 3. எள்ளுப்பூ, flower of sesamum.

**தாமிரவல்லி,** மஞ்சிட்டி see தாமிரமூலம்.

**தாமிரா**, வேங்கை மரம், Indian kino tree — Ptero carpus marsupium.

**தாமிராட்சம்**, குயில், Indian cuckoo; 2. ஓர் பாம்பு; a kind of snake.

**தாமிரிகை**, குன்றிக்கொடி, licorice creeper — Abrus precatorius.

**தாமிரேசுவரம்** } **தாமிரேஸ்வரம்** } இது ஓர் ஆயுள்வேத செம்பு மருந்து, இச்செம்புடன் இரசம், வெண்காரம், இரும்பு, கந்தகம், திப்பிலி, வேப்பம்பூ இவைகளைச் சேர்த்துகூட திரிகடுகையும் கூட்டித் தயாரிக்கு மருந்து. an Ayurvedic medicine prepared by mixing purified copper, mercury, borax, iron, sulphur, long pepper flowers of margosa and the three myrobalams and prescribed for skin diseases and a cooling regimen is necessary.

**தாமிரை**, செம்பு, copper.

**தாமிலம்**, கோதுமை, wheat.

**தாமுகவாக்கி**, மனோசிலை, red arsenic.

**தாமோதரன்**, ஆமை, tortoise, turtle.

**தாம்பம்**, ஓர் கடல் மீன், a sea fish — Lutjanus genus. cf. பனையேறி.

**தாம்பலம்**, ஓர்வகைச் சணல், a kind of hemp.

**தாம்பிகவைத்தியம்**, மூடவைத்தியம், quackery.

**தாம்பிகன்**, மூடவைத்தியன், quack, empiric.

**தாமிரபுள்ளி**, சிவந்த புள்ளிகள் வாய்ந்த ஓர் வகைக்குட்டம்; a kind of leprosy with large red spots.

**தாமிரப்பொடி**, செம்புத்தூள், copper filings.

**தாம்பிஞ்சம்**, ஆமணக்கு, castor plant; 2. பச்சிலைமரம், acheen leaf — Pogoste mon patchouli alias Origanum indicum.

**தாம்பியம்**, பீச்சுங்குழல், syringe, piston.

**தாம்பிரகம்**, செம்பு, copper.

**தாம்பிரகருப்பம்**, துரிசு, blue vitriol — Copper sulphate.

**தாம்பிரக்களங்கு**, செம்பு துட்டுக்கு வேளைச் சாறு விட்டரைத்து அரிதாரத்தைப் பூசி அதையே கவசம் செய்து வெள்ளியத் தகட்டைச்சுற்றி சீலைமண் செய்து புடமிட்டெடுத்த வெண்பொடி, yellow orpiment is ground with the juice of Cleome pentaphylla and smeared thickly all over a purified copper coin or plate and then it is covered by tin foils. Then it is sealed with earth smeared cloths, dried and submitted to puttam (heat) a white powder will obtained.

**தாம்பிரக்குருசெயநீர்**, புளியம் புறணியைச் சாம்பலாக்கி, பிறகு நீரிலிட்டு தெளிவிறுத்து, அதைக் காய்ச்சி உப்பெடுத்து நவச்சாரக் கட்டிக்குக் கவசம் செய்து புடமிட்ட பற்பத்தை பனியில் வைத்து உண்டான செயநீர், Salt extracted from the ash of tamarind bark is smeared over a lump of Salammoniac and calcined. This calcined powder is exposed to dew and a pungent liquid is obtained and this is called தாம்பிர குருசெயநீர்.

**தாம்பிரகூடம்**, செம்புமலை, copper mountain; 2. புகையிலை, tobacco — Nicotiana tobacum.

**தாம்பிரக்கோல்**, கண்ணோய்களுக்கு மருந்தை யெடுத்துக் கண்ணில் தீட்டுவதற்காக வுபயோகிக்கும் தாம்பிரத்தினாற்செய்த நீளமான தடித்த கம்பி, copper rod with which eye salves are applied to the eyes in cases of eye diseases.

**தாம்பிரசங்கம்**, இரும்பு, iron.

**தாம்பிரசத்துமூலி**, see செம்புசத்துமூலி.

**தாம்பிரசத்துரு**, சாலாங்க பாஷாணம், a kind of arsenic.

**தாம்பிரசவ்வு**, கருப்பிண்டத்தைக் கவர்ந்துள்ள 7 சவ்வில் 4வது சவ்வு, the fourth of the seven membranes with which an embryo is covered.

**தாம்பிரசிந்தூரம்**, செம்பைக் கொண்டு தயாரிக்கும் ஓர் சிவப்புப் பொடி, இது செம்பின் களிம்பைநீக்கி, சுத்தி செய்து பிறகு மருந்து மூலிகைகளைச் சேர்த்துப் புடமிட்டெடுப்பது, இதனால் குட்டம் முதலிய சருமநோய்களெல்லாம் அகன்று உடம்பு பொன்னிறமாகும், இதை இரண்டு விதமாக வாத முறையிலும், வைத்திய முறையிலும் தயாரிப்பதுண்டு, ஆனல் வாதமுறை மிகவும் அசாத்தியம், calcined red oxide of copper. It is generally prepared by Vaidyans by first cleaning or purifying it so as to be free

from verdigris and then by calcining it after treating it with drugs and other medicinal plants. It is prescribed by veidyans for leprosy and other skin diseases. It may be prepared in two ways — One prepared by medicinal process and given for diseases and the other by alchemical process for transmutation of metals into gold and also for rejuvenation.

**தாம்பிரசிலாசத்து,** இது நீல நிறம், கனமுள்ளது, உஷ்ண விரியத்தை உடையது, (கபம், வாதம், சயம்)

**தாம்பிரசுத்தி,** செம்பின் களிம்பை நீக்குவது, removing the verdigris from copper; 2. புடமிடுவதற்கு முன் வைத்திய முறைப்படி மருந்து மூலிகைகளைக் கொண்டு செய்யும் சுத்தி, cleaning or purifying copper before calcining it; 3. வாதமுறைப்படி செம்பினின்று களிம்பை அறவே போக்குதல், removing the verdigris from copper by alchemical process.

**தாம்பிரசூடம்,** சேவல், cock fowl.

**தாம்பிரசெந்தூரம்,** இளையைப்போல் செம்பு தகடுகளாக வேண்டியஅளவு தட்டின பிறகு நன்ருய்ப் பழுக்கக் காய்ச்சித் தோய்த்த பிறகு, அகத்திக் கீரையை அரைத்து ஒவ்வொரு தகட்டுக்கும் கனமாய்ப் பூசி அல்லது ஒவ்வொரு மொத்தைக்கு நடுவில் தகட்டைச் சொருகி எல்லா வுருண்டையையும் ஒருமிக்கத் திரட்டி சன்னகோணிப் பையைச் சேற்றில் புரட்டி மேற்கண்ட மொத்தைக்குக் கவசம் செய்து 2 முழ ஆழம் 2 முழ அகலமுள்ள தாய்க் குழி தோண்டி கஜபுடத்தில் (100 விரட்டி) புடமிட்டு 4 நாள் சென்ற பிறகு மொத்தையை எடுத்து மெதுவாகப் பிரித்து எடுத்து கல்வத்திலிட்டு வெள்ளெருக்கம் பாலால் அரைத்து பில்லை தட்டி நிழலில் உலர்த்தி அகலில் வைத்து மேல் அகல்மூடிச் சீலை செய்து 50 கை விரட்டியில் புடம் போட்டு மறுநாள் எடுத்து அரைத்து வைத்துக் கொள்ளவும், இது ஊதா நிறமாய் இருக்கும். இதற்கு அனுபானலேகியம் ¼ படி புளித்த தண்ணீரில் (காடி) 2½ பலம் மிளகிட்டு 3 நாள் ஊறவைத்து பிறகு வெய்யிலில் உலர்த்திச் சூரணம் செய்து பழகிய சட்டியில் 1 ரூ. எடை தேன் 1 ரூ. எடை இஞ்சிரசம் 1 ரூ எடை பசுநெய் இம்மூன்றும் விட்டு ஷை சூரணத்தை அதில் போட்டு லேகியமாகக் கிளறிக்கொண்டு புளியங்கொட்டையளவு லேகியத்தில் அரிசியெடை ஷை சூரணத்தை வைத்து உட்கொள்ளவும், இதனுல் பாரிசவாயு, மேகவாயு, கண்டமாலை, கிரந்தி, சகலசருமநோய், புண்புரை இவைகள் குணமாகும், இச்சாபத்தியம், கடுகு, நல்லெண்ணெய் ஆகாது.

**தாம்பிரசெந்தூரம்,** See தாம்பிரசிந்தூரம்.

**தாம்பிரசெந்தூரி,** செம்பைச் செந்தூரமாக்கும் சரக்குகள், See page 909.

**தாம்பிரதோஷம்,** செம்பிற்குண்டான எட்டு வித தோஷங்கள், அவையாவன:—

1. வாந்தி.
2. பிராந்தி.
3. விரேசனம்.
4. இளைப்பு.
5. தாகம்.
6. இந்திரியநாசம்.
7. நமைச்சல்.
8. சூலை.

**தாம்பிரத்தாரமாக்கி,** இரசித பாஷாணம், a kind of mineral poison.

**தாம்பிரபத்திரி,** செம்பிலை, copper leaf, the three seeded mercury — Acalypha genus.

**தாம்பிரப்பச்சை,** செம்பின் பச்சை நிறமான களிம்புள்ள ஓர் வகைத் தாது, a mineral resembling the verdigris of copper.

**தாம்பிரபற்பம்,** செம்பைச் சுத்தி செய்து புடமிட்டெடுத்த பற்பம், copper oxide obtained by processes purification and calcination see தாமிரபற்பம்.

**தாம்பிரப்பிரியம்,** செருப்படை, a medicinal prostate plant — Coldenia procumbens.

**தாம்பிரபுட்பி,** மந்தாரை, variegated mountain ebony — Bauhinia variegata; 2. கழற்கொடி, bonduc creeper — Guilandina bonducella alias Caesalpinia bonducella.

**தாம்பிரமண்,** செம்மண், red earth; 2. செங்காவி, red ochre.

**தாம்பிரமலை,** செம்புமலை, copper mountain.

**தாம்பிரமூலி,** பெருங்காஞ்சொறி, scorpion leaf — Toragia involucrata; 2. செம்பு அடங்கிய மூலிகைகள், plants containing copper. see செம்பு மூலிகை.

**தாம்பிரம்,** செம்பு, copper. see தாமிரம்.

**தாம்பிரம்,** இது பிறவி, வைப்பு என இரு வகைத்து, ஆயினும் வேறு சில வழிகளாலும், முறைகளாலும், கற்கள், மூலிகைகள், இவைகளிலிருந்தும் மஞ்சிலை, கெந்தகம், துருசு, இரும்பு, கடுக்காய், பூநாகம், மயிலிறகு, நிமிளை, தொட்டி பாஷாணம், தாளகம், வெண்காரம், ஆகியவைகளிலிருந்தும், சிலவகை ஈக்கள், பாம்புகள், முதலிய பூச்சிகளிலும் பிராணிகளிலும் இருந்தும் எடுக்கப்படுகிறது, இவற்றுள் மயிலிறகுத் தாம்பிரம் சிறந்ததாகக் கொள்ளப்படும், வெண்காரத்திலின்று எடுக்கப்படுவது எல்லாவற்றிலும் சிறந்தது.

இத் தாம்பிரம் உரமுள்ளதாயும், ஒட்டத்தக்கதாயும், சற்றே கடினமானதாகவுமுள்ள உலோகம்; வர்ணம், சிவப்பு, தேய்த்தால் ஒருவித நாற்றமுண்டாகும், இதை மெல்லிய கம்பியாயும் இழுக்கலாம், தகடாயும் அடிக்கலாம், நுட்பமான ரேக்குகளாக சுற்றலாம், மேலும் இது நேர்த்தியான மின் வாங்கியும் அவ்விதமே சூடுவாங்கியுமாம், காற்றுப்பட களிம்பேறும், நெருப்பிற் பழுக்கக்காய்ச்சி ஆறவைக்க அதன்மேல் சிவந்த துகள் படியும், இதைப் பழுக்கக் காய்ச்சி தண்ணீரில் தோய்க்க அதன் மேல் சிதல்கள் உண்டாகும், இதில் கெந்தகம், இரும்பு ஆகிய இவைகள் பெரும்பான்மையும் கலந்திருப்பதாலும், பச்சை ஊதா வர்ணமுள்ள உப்புகள் சிறுபான்மையும் கலந்திருப்பதாலும் இதைச் சுத்தி செய்துதான் மருந்திற் குபயோகிக்க வேண்டும். இவ்வுலோகம் பூமியின் சுரங்கங்களிலிருந்து எடுக்கப்படும். தோஷமுள்ள இரசமும் கெந்தகமும் சமபாகமாகச் சேர்ந்து பூமி அடிச்சூட்டினால் தங்க வர்ணம் மாறி தாமிரம் உண்டாகிறது என்பது இரசவாத சாஸ்திரிகளின் தீர்மானம். ஆகவே நம் முன்னோர்கள் ஆதிகாலம் தொடங்கி இதைப் பற்ப செந்தூரமாகச் செய்து நோய்களுக்குபயோகப்படுத்தி வந்தார்கள்.

**தாம்பிரவண்ணமண்,** செம்புமணல், sand mixed copper.

**தாம்பிரவயச்சத்துமூலி,** சிறுகீரை, அழவணை Amaranthus campestris, பூமி சருக்கரை, *Ipomea digitata Henna — Lawsonia spinosa.* கருந்துளசி, Ocimum sanctum ((rigrum).

**தாம்பிரவல்லி,** தித்திப்புக்கோவை, இது இரசத்தைக்கட்டும், a kind of sweet caper (unidentified) it is said that it binds mercury; 2. மஞ்சிட்டி, copper creeper — Rubia cor difolia; 3. தண்ணீர் விட்டான் கிழங்கு, tuberous root of Asparagus.

**தாம்பிரவேதை,** நாகம், zinc.

**தாம்பிராட்சம்,** குயில், Indian cuckoo — Cuculidae.

**தாம்புலோவல்லி,** மஞ்சிட்டி, see தாம்பிர வல்லி.

**தாம்பூரகி,** வாழை, plantain tree.

**தாம்பூரக்கட்டி,** செம்புக்கட்டி lump of copper; 2. see தாம்பூரச்சிகை.

**தாம்பூரக்களங்கு,** செம்பு துட்டுக்கு அரிதாரத்தை வேளைச்சாறுவிட்டு இரண்டு தடவை துட்டுக்குத் தடவி யுலர்த்திப் பிறகு வெள்ளியத் தகட்டைச் சுற்றிக் கவசம் செய்து சீலைமண் செய்து புடமிட்டு எடுத்த களங்கு, see தாம்பிரக்களங்கு.

**தாம்பூரச்சிகை,** நவலோகத்தைப் பேதிக்கச் செய்யும் ஓர் அபூர்வ மூலிகை, an unknown or a rare drug capable of acting chemically on nine metals in general.

**தாம்பூரத்தைநிர்தூளியாக்கி,** தொழுகண்ணி a rare plant - Hedysarum gyrans. It is so called from its virtue of turning or converting copper into a white powder (calcined oxide)

**தாம்பூரபற்பஷப்பரம்,** நறுவிலி.

**தாம்பூரபற்பம்,** see தாமிரபற்பம்.

**தாம்பூரமல்லி,** மஞ்சிட்டு, copper creeper — Rubia cor difolia.

**தாம்பூரம்,** see தாமிரம்.

**தாம்பூரவல்லம்,** வாழை, plantain tree.

**தாம்பூரி,** கொடி நாவல், jammoon creeper.

**தாம்பூலக்கமலம்,** see தாம்பூலக்கன்னி.

**தாம்பூலக்கன்னி,** வெற்றிலை, betel leaf.

**தாம்பூலபலம்,** பாக்கு, areca nut; 2. வெற்றிலை, betel leaf

**தாம்பூலமாதா,** see தாம்பூலக் கன்னி.

**தாம்பூலம்,** வெற்றிலை, பாக்கு, சுண்ணாம்பு, ஆகிய இம்மூன்றும் சேர்ந்தது, a name referring to betel leaf, areca nut and slaked lime taken together or considered as a whole.

**தீட்சணசுரம்**, ஆரம்பத்திலேயே கடுமையாக வரும் சுரம், a fever marked by high temperature even at the start.

**தீட்சணதண்டு**, வாயுவிளங்கம், wind berry — Embelia ribes alias E. grandulifera.

**தீட்சணதன்டுலம்**, திப்பிலி, long pepper— Piper longum.

**தீட்சணதைலம்**, காரமான எண்ணெய், pungent oil.

**தீட்சண நந்தியாவட்டை**, குடைநந்தியாவட்டை, see அடுக்கு நந்தியாவட்டம்.

**தீட்சணபத்திரம்**, அலரி, oleander—Nerium odorum; 2. கொத்தமல்லி, coriander.

**தீட்சணபத்திரா**, see தீட்சணபலம்.

**தீட்சணபலம்**, தூம்புரு, tooth ach tree — Xanthoxylum genus.

**தீட்சணபலை**, உகாமரம், tooth brush tree — Salva dora persica; 2. கொத்தமல்லி coriandar.

**தீட்சணபுட்பம்**, கிராம்பு, clove; 2. கிராம்பு மரம், clove tree; 3. தாழை, fragrant pine — Pandanus odoratissimus.

**தீட்சணம்**, see தீட்சணபலை; 2. இரும்பு, iron; 3. உறைப்பு, acrimony; 4. கொள்ளை நோய், epidemic or endemic disease; 5. மரணம், death; 6. வெப்பம், heat; 7. மிளகு, black pepper—Piper nigrum; 8. திப்பிலி, long pepper — Piper longum; 9. வெண்கடுகு, white mustard — Brassica alba; 10. கஞ்சாங்கோரை see தீசனம்; 11. நாய் வேளை, dog vailay — Cleome viscosa; 12 காரம், hot pungency; 13. புளிப்பு, sour, acid; 14. வெள்ளைத் தர்ப்பை, white kusa grass; 15. கடலுப்பு, sea salt; 16. வெடியுப்பு, nitre, 17. குந்திரிக்கம், Indian olibanum; 18. காரவுணவு, pungent food; 19. பேதியையும் வாந்தி போன்ற நோய்களை உண்டாக்கும் பொருள், that which has violent effects on the body causing vomitting and purging. அதிக விரைவாக உடம்பினுள் அந்தந்தத் தாதுக்களில்புகுந்து அதற்குண்டான செயல்களைச் சீக்கிரத்தில் முடிக்குந்தன்மை யதல்லாமல், மேற்படி தாதுக்களில் ஊறி அதி சீக்கிரத்தில் பரவுந் தன்மையது, any agent capable of producing a morbid or dangerous effect by acting on the living tissues only by being absorbed by them and then spreading into the system as rapidly as possible as observed in the case of virulent poisons.

**தீட்சணரசம்**, வெடியுப்பு, nitre— Potassium nitrate.

**தீட்சணலவணம்**, கடுங்காரவுப்பு, pungent salt.

**தீட்சணவிஷம்**, கொடிய விஷம். virulent poison.

**தீட்சணவெயில்**, கொடிய வெயில் scorching sun.

**தீட்சணுக்கினி**, உட்கொண்ட பதார்த்தங்களை எரிக்கும் சக்தி வாய்ந்த சடராக்கினி; gastric fore capable of digesting all that is consumed; 2. எளிதில் சீரணிக்கக் கூடிய சக்தி, a very keen digestive capacity, sharp appetite, powerful digestion.

NOTE:— Agni is the functional activity of Pitha.

**தீட்சணி**, கக்கரி, small cucumber — Cucumismelo; 2. கொடிக்கள்ளி, moon plant — Sacrostemma brevistigma.

**தீட்சணியம்**, வெப்பம், heat temperature.

**தீட்சரட்சிணி**, அசமதாகம், omum seed — Ethiopian cumin Sison ammi.

**தீட்சாரம்**, வெளித்தாமரை, sky lotus. see ஆகாயத் தாமரை.

**தீட்சை**, உபதேசம், inspiration or initiation by a guru; 2. சித்திமுறை the process of purification.

**தீட்சைசெய்தல்**, உபதேசம் செய்தல், admission by application of ceremonies, initiating; 1. சத்திதீட்சை; 2. சிவதீட்சை; 3. வாலைதீட்சை; 4. சரியைதீட்சை; 5. கிரியைதீட்சை; 6. யோகதீட்சை; 7. ஞானதீட்சை; 8. நவக்கிரக தீட்சை; 9. உலோக தீட்சை; 10. சித்தர் தீட்சை.

**தீட்சைபண்ணுதல்**, See தீட்சை செய்தல்.

**தீட்சைபாகம்**, எரிப்பு, புடம், வறுப்பு, காய்ச்சு ஆகிய திட்டமுறைகள், (in Medicine) the several processes for the regulation of burning, calcining, frying or boiling intended for purification of substances.

**தீட்சைபெறல்**, உபதேசம் பெறல், receiving initation.

**தீட்சைமுடித்தல்,** உப்பு முதலிய சரக்குகளை வாகடப்படி காய்ச்சி சுத்தி செய்தல், (in Medicine) the processes of cleansing or purifying salt or other substances by boiling.

**தீட்சைமுறை,** see தீட்சைபாகம், சுத்தி முறையைப் பத்து தடவை செய்தல், repeating the process of purification — burning, boiling etc., of a substance ten times.

**தீட்டக்கல்,** சாணைக்கல், whit stone; 2. மாக்கல், marble stone.

**தீட்டக்காரி,** மாதவிடாய்ப் பெண், women in her menses.

**தீட்டடைப்பு,** தீட்டு வெளிவராது தடைபடல், suppression of menses.

**தீட்டணசாகியும்,** குருவெங்தெல்லு, an unknown creeper.

**தீட்டணசாரம்,** இலுப்பை, mahwa; see தீட்சணசாரம்.

**தீட்டணம்,** see தீசனம்.

**தீட்டம்,** see தீட்டு.

**தீட்டரிசி,** தவிடு நீக்கிய அரிசி, rice cleaned from bran.

**தீட்டலரிசி,** see தீட்டரிசி.

**தீட்டல்,** தீட்டுதல், sharpening knife etc., 2. மை தீட்டுதல், painting eye with collyrium; 3. அரிசி தீட்டுதல், cleaning rice.

**தீட்டறுக்குஞ்செல்லி,** நாதவுப்பு, a kind of salt prepared from woman's secretions.

**தீட்டாதல்,** மாதவிடாயாதல், appearance of menses.

**தீட்டிரவம்,** தங்கரளி, yellow oleander, exile oleander.

**தீட்டு,** மாதவிடாய், memstral blood.

**தீட்டுக்கழித்தல்,** இறப்பு, பிரசவம், மாதவிடாய் இக்காலங்களில் ஏற்படும் அசுத்தத்தை தலைமுழுக்கு, வீடு சுத்தி முதலிய முறையால் சுத்தமாக்கல், removing the pollution caused by child birth, death, puberty, etc., ceremonically by bathing, cleaning etc.

**தீட்டுக்காரி,** தீட்டக்காரி, which see.

**தீட்டுச்சீலை,** மாதவிடாய்ச்சீலை, menustral cloth, cloth piece stuffed into the vagina during menses.

**தீட்டுடைத்தல்,** தடைபட்ட சூதகத்தை வெளிப்படுத்தல், causing the discharge of the suppressed menstrual blood.

**தீட்டுதல்,** பல் விளக்குதல், cleansing the teeth, கத்தி முதலியவைகளைக் கூர்செய்தல், sharpening knife etc.

**தீட்டுத்தடை,** மாதத்தீட்டு வாராமல் தடைபடல், obstruction or suppression of the menstrual flow.

**தீட்டுப்படுதல்,** மாதவிடாய் இரத்தம் வெளிவரல், discharge of menstrual blood.

**தீட்டொழிவு,** மாதவிடாய் ஒழிந்து போதல் அதாவது நின்று விடல், the stopping of the menses entively, the change of life — Menopause.

**தீண்டல்,** கடித்தல், being bitten or affected by venemous bites; 2. தொடுதல், touching.

**தீண்டாதவள்,** see தீட்டக்காரி.

**தீண்டாப்பாஷாணம்.**

**தீண்டியம்,** பவளக்குறிஞ்சா, unarmed organnaile dye — Crossandra undulacifolia alias Lawsonia spinosa.

**தீதபிட்டா** வட்டத்திருப்பி, see திருப்பி.

**தீதம்,** இரும்பு, iron.

**தீதல்,** கருகுதல், scorching.

**தீதனம்,** மாமரம், mango tree — Mangifera indica.

**தீதி,** தாகம், thirst.

**தீத்தகம்,** பொன், gold.

**தீத்தகி,** see திருப்பி.

**தீத்தசிருவை,** நரி, fox.

**தீத்தட்டிக்கல்,** சக்கைமுக்கிக்கல், தீக்கல்; a siliceous stone or concretion usually translucent and tolerably homogenus.

**தீத்தட்டிக்குடுக்கை,** சக்கைமுக்கிப் பஞ்சுக் குடுக்கை, tinder box.

**தீத்தந்திடும்புண்,** நெருப்பு சுட்டபுண், ulcer caused by fire; burns.

**தீத்தம்,** பெருங்காயம், asafoetida; 2. பொன் gold; 3. சிங்கம், lion.

**தீத்தரசம்,** நாங்கூழ், அதாவது நாக்குப்பூச்சி, round worm in the intestine — Ascaris.

**தீத்தரோகிணி,** தரகம்புல், which see.

**தீத்தலோகம்,** வெண்கலம், bell metal, 2. மாந்துளிர்க்கல், dark red stone.

**தீத்தலோசனம்,** பூனை, cat.

**தீத்தல்,** கருக்குதல், scorching.

**தீத்நா,** see திருப்பி.

**தீத்தாங்கம்,** see தீத்தாட்சம்.

**தீத்தாட்சம்,** மயில், peacock; 2. பூனை, cat.

**தீத்தாங்கி,** புடத்தீ வெளி போகாமற்படி நான்கு பக்கமும் இடும் மறைப்பு, any covering hung over the four sides of a calcining fire to prevent the heat escaping out, a fenter for the fire.

**தீத்தி,** see தீத்தலோகம்; 2. பிரகாசம், lustre.

**தீத்தியம்,** அரத்தை, galangal — Alpinia galanga.

**தீத்தெய்வம்,** வன்னிமரம், Indian mequit—Prosopis spicigera.

**தீத்தோபலம்,** சூரிய காந்தக்கல், sunstone.

**தீநாய்,** கொடிய நாய், fierce dog; 2. வேட்டை நாய், hound.

**தீநிறம்,** மாந்துளிர்க்கல், see தீத்தலோகம்.

**தீநீர்,** ஆவிநீர். vapour steam; 2. வாலையிலிட்டு இறக்கிய நீர், distilled water; 3. திராவகம், acid obtained by distillation; 4 வாலையிலிட்டு இறக்கிய சாராயம், distilled spirituous liquor.

**தீநீர்த்தைலம்,** சரக்குகளைத் தூளாக்கிப் பானையில் போட்டு சலம்விட்டு எரித்துவடிக்கும் தைலம், any medicated oil obtained by boiling a solution of powdered drugs.

**தீநீர்வாலை,** ஆவிநீரிறக்கும் யந்திரம், distilling apparatus, retard.

**தீநுரை,** கடனுரை, see தீச்சலம்.

**தீந்தது,** காற்று மழையால் உதிர்ந்தது, that which is made to wither by some pernicious influence.

**தீந்துபோதல்,** கரிந்துபோதல், seething over the fire.

**தீபகமருந்து,** பலமுண்டாக்கு மருந்து any drug or medicine which tends to tone the system — Tonic.

**தீபகம்,** மஞ்சள், turmeric.

**தீபகற்பூரம்,** ஆலாத்திக் கற்பூரம், ordinary camphor used as incense as diatinguished from இரசகற்பூரம் impure subchloride of mercury.

**தீபகாந்தி,** வைரக்கல், diamond.

**தீபக்கிட்டம்,** விளக்குப்புகை, lamp black.

**தீபக்கொடிச்சி,** சூடன், camphor.

**தீபசாலம்,** சோதிவிருட்சம், burning bush, luminous tree in the dark or during nights.

**தீபசோதி,** கருப்பூரம், camphor; 2. see தீபசாலம்.

**தீபதாட்சம்,** பளபளப்பான கண், glittering eyes as those of cats tigers etc; 2. மயில் peacock.

**தீபதி,** வாலுளுவை, spindle tree — Celastrus paniculata.

**தீபதிச்சம்,** see தீபதி.

**தீபதைலி,** ஆமணக்கு, castor plant — Ricinous communis.

**தீபநிறம்,** மாந்துளிர்க்கல், red ochre.

**தீபந்திருஷ்ணுமேகம்,** தேத்தான்கொட்டை, water clearing nut — Strychnos potatorum.

**தீபபுடம்,** விளக்கு நெருப்பிலிட்டெரித்துப் போடல், preparing anything, in a lamp light. see தீப்புடம்.

**தீபபுட்பம்,** சண்பகப்பூ, champauk tree — Michelia champaca.

**தீபமரம்,** சோதிவிருட்சகம், see தீபசாலம்.

**தீபம்,** சத்தியுப்பு, which see 2. இராவெரி மரம், a tree luminous in the dark; 3. விளக்கொளிச்சம், lamp light; 4. சூடன் camphor.

**தீபயம்,** அசமதாகம், bishop's weed — Sison ammi.

**தீபரசவாலை,**

**தீபவாயு,** எரியுந்தன்மையுள்ள வாயு, inflammable gas as hydrogen, coalgas etc.

**தீபவிருட்சம்,** தீபசாலம், which see.

**தீபனி,** காயா, biberry tree — Memecylon edule.

**தீபன,** பசியெடுக்கக்கூடிய, appetising

**தீபனக்குறைவு,** பசிக்குறைவு, want of appetite.

**தீபனக்கெடுதி,** பசியெடுக்காத குற்றம், defects in the natural desire for food.

**தீபனசக்தி,** பசியை உண்டாக்கும் வல்லமை, power of promoting hunger and appetite.

**தீபனநாடி,**

**தீபனபாசனம்,** medicine having both properties of appetising and digesting.

**தீபனமந்தம்,** பசிமந்தப்படல், dullness of appetite; 2. செரியா மந்தம், want of hunger due to indigestion.

**தீபனமின்மை,** பசியின்மை, loss of appetite — Anorexia.

**தீபனமுண்டாக்கல்,** பசியெடுக்கும்படி செய்தல், causing hunger, பசிமூட்டல், promoting hunger.

**தீபனமுண்டாதல்,** பசியெடுத்தல், feeling hungry.

**தீபனம்,** ஆகாரம், food; 2. பசி, hunger; 3. மஞ்சள், turmeric; 4. கொடுக்காய் புளி, manilla tamarind—Pithecolobiumdulce 5. கொடிய பசி, keen appetite; 6. தமல பத்திரி, which see; 7. பிரகாசம், brilliancy; 8. தீபன வஸ்து, அதாவது பசியையுண்டாக்கு மருந்து, an agent or substance which promotes hunger; 9. சடராக்கினியை எழுப்பிப் பசியையுண்டாக்குந் தன்மை, stimulating hunger by stirring the action of gastric fire; 10. புடமிடல், the process of calcination to which minerals are subjected; 11. செரிக்காத உணவை செரிக்கவைக்கும் சக்தியில்லாமலே பசியை மாத்திரம் உண்டாக்கு மருந்து, that which increases the appetite only — medicines which only promotes but do not aid in digesting undigested food.

**தீபனரசம்,** பலாசு; Bastard teak — Butea frondosa.

**தீபனவர்த்தனகாரி,** பசியை உண்டாக்கு மருந்து, any medicine promoting appetite — Stomachic. see page 883.

**தீபனவுண்டி,** " தீபனவுண்டியாலே சேர்ந்திடு நோய்களெல்லாம் ".

**தீபனி,** தீபன வர்த்தன காரி, carminative; 2. மாவிலிங்கம், garlic pear — Crataeva relijiosa; 2. கக்கரி, small cucumber — Cucumis melo", 3. ஓமம், bishop's weed — Sison ammi; 4. கடுக்காய், gall nut; 5. பொடுதலை, creeping vervain — Lippia nodiflora alias Verbina nodifiora.

**தீபனிசம்,** பனிதாங்கி, southern wood — Artimesia abrotanum.

**தீபனிலகு,** குங்குமச் செவ்வந்தி, red chamomile — Chrysanthemum indicum.

**தீபனீயம்,** சீரணவிருத்தி, promotion of digestion; 2. சீரணவிருத்தி செய்யுமருந்து a digestive — drugs that kinds the digestive power and enhance appetite provacative of digestive fire.

**தீபனீயவர்க்கம்,** சீரண விருத்தியையுண்டாக்கு மருந்துகள்: மிளகு, திப்பிலி, சித்திர முலவேர், கக்கு, சேரான், பெருங்காயம் ஓமம், ஆகியவை; drugs that induce appetite. e.g. black pepper, long pepper root of plumbago, dried ginger, marking nut, asafoetida, ajwon etc.

**தீபாக்கினி**, முத்தீயிலொன்று, see அக்கினி, 2. மகாக்கினி, *voracious appetite. It is a* term used figuratively for strong digestive faculty; 3. இரண்டு விரற்கனமுள்ள ஒரு விறகால் எரிப்பது, a small fire for heating medicinal preparations with one fuel of two fingers' thickness; 4. விளக்குத் தீ, flame of the lamp.

**தீபாக்கினி சூரணம்**, பசியையுண்டாக்கும் பொடி, mixture of powders of drugs which promote appetite and digestion.

**தீபாக்கினி லேகியம்**, பசியையுண்டாக்கும் ஓர் வகை லேகியம், an electuary prepared, to promote hunger and digestion.

**தீபாங்கம்**, பெருவள்ளிக்கிழங்கு, *large yam* — Dioscorea alata

**தீபாந்தம்**, பெருச்சாளி, bandicoot.

**தீபிகாதைலம்**, see தீபிகைத்தைலம்.

**தீபிகைத்தைலம்**, மகா பஞ்சமூலத் தைலம், இது காதிற்கு விடும் துளியெண்ணெய், இதை அடியிற் கண்டபடி தயாரிக்கப்படும், பஞ்சமூலத்தைக் கத்தையாகத் துணியில் கட்டி எண்ணெயில் ஊறவைத்துக் கொளுத்துவதால் துளி துளியாக எண்ணெய் சூடாக வழியும், இதைச் சூடு பொறுக்கக் காதில் துளிதுளியாய் விடப்படும், அன்றியும் இதை வேறு முறையாகவும் செய்யலாம், தேவதாரு சரளதேவதாரு முதலிய கட்டைகளைக் கொளுத்தியும் மேற்கண்ட வண்ணம் செய்யலாம், ear drops of hot oil. This is generally prepared by taking pancha moolam the renowned five (drugs) roots and soaking it in gingelly oil after them well with a linen. The stick so formed is lighted when the hot oil which is pouring down in drops is collected and applied lukewarm. It may like wise be prepared also from deodar wood or yellow deodar etc., by maintaining the same process as mentioned above. It is a scriptural medicine prescribed for diseases of the ear.

**தீபினி**, தீபனி, which see.

**தீப்தம்**, மூக்கினழற்சி, inflammation of nose; 2. கார்த்திகைக் கிழங்கு, November flower plant — Methonica superba alias Gloriosa superba; 3. முடக்கொத்தான், palsy creeper — Cardiospermum halicacabum.

**தீப்படவெரிப்போன்**, நாகபாஷாணம், an *arsenical compound of zinc.*

**தீப்பருத்தி**, Madagascar mangrave — Lumnitzera racemosa.

**தீப்பறக்கத்தேய்த்தல்**, உடம்பில் சூடுண்டாகும்படி தேய்க்குதல், rubbing the body with oil as to cause heat on the body.

**தீப்பற்று**, தீச்சுட்ட புண்ணின் பக்கு, scab of blister or burns.

**தீப்பிடுங்கல்**, see தீயைப்பிடுங்கல்.

**தீப்பியம்**, ஓமம், bishop's weed — Sison *ammi;* 2. see *தீபனியம்; 3. சீரகம்*, cumin seed; 4 பண்ணை, cocks comb.

**தீப்பிரகாசி**, குங்கிலியம், Indian dammer resin — Shorea robusta.

**தீப்பிரண்டை**, சதுரப்பிரண்டை a kind of adamant creeper — Vitis quadrangularis.

**தீப்பிரயகம்**, see தீப்பியம்.

**தீப்பி**, நெருப்பு, fire.

**தீப்புடம்**, மருந்துக்குத் தக்கபடி போதுமான துணி சுற்றிக் காற்றுப்படாமல் கொளுத்தி எரிப்பது, one of the processes of calcination by which the medicine to be calcined is rolled by *cloth airtightly to that extent* required according to the nature of medicine and then burning it.

**தீப்புண்**, அக்கினி விரணம், அதாவது நெருப்பு சுட்ட அல்லது வெந்நீர் பட்ட விரணம், அல்லது அக்கினி பிளாஸ்திரியிட்டு வந்த புண், burns or scalds.

**தீப்புண்களிம்பு**, கற் சுண்ணாம்பு தெளிந்த நீரும் தேங்காயெண்ணெயும் சம எடை எடுத்துக் குலுக்கித் துணியில் நனைத்து புண்ணுக்குப்போடும் மருந்து, an ointment or emulsion made of lime water — Calcium hydroxide and cocoanut oil in equal parts. This can be applied to burns or scalds.

**தீப்புல்**, சோதிப்புல், burning bush a species of grass luminous in the dark.

**தீப்புசுரம்**, திலக விருட்சம், sandal wood tree.

**தீப்பூடு**, நீர்மேல் நெருப்பு, fire on water blistering ammania; 2. கல்லுருவி, (lit) stone melting plant, gravel plant — Ammania vesicatoria; 3. கொப்பளம் எழும்பும் பூடு, any plant the paste of which when applied causes blister like cantharides.

**தீப்பெட்டி,** நெருப்புக்குச்சிப் பெட்டி, match box.

**தீப்பொறி,** நெருப்புப் பொறி, spark of fire 2. தீயவழியிற்செல்லும் புலன், any of the senses being allowed in evil ways or attracted to immoral tendencies.

**தீப்போடுதல்,** நெருப்பிட்டு எரித்தல், kindling fire

**தீமதா,** காரெள், black variety of sessamum seed.

**தீமதாகி,** see தீமதா.

**தீமயக்கி,** திகைப்பூச்சி, which see.

**தீமலம்,** கரி, charcoal as refuse of fire.

**தீமிதித்தல்,** நெருப்பில் நடத்தல், walking on fire.

**தீமுகமெழுகு,** நெருப்பு மூன்பாக இளகும் மெழுகு, wax melting in fire.

**தீமுருகல் திராவகம்,** இது தண்ணீரைப் போன்றது, நிறம் இராது, ருசிக்கப் புளிப்பாயிருக்கும், திராவகத்திற்குண்டான வேகம் இதற்குமுண்டு, இது மருந்திற்குபயோகப்படும், சிறியவளவில் பலத்தைத் தரும், உஷ்ணத்தைத் தணிக்கும், தாதுபுஷ்டியை உண்டாக்கும், மிதமானவளவிற் நரம்புகளை முறுக்கேற்றும், அதிகவளவில் விஷத்தன்மையுள்ளது, அசாத்திய சன்னிபாத சுரத்தையும், கண்டமாலை முதலிய புண்வுரைகளையும், நீரிழிவு, எலும்புளுத்தல்; பாண்டு, நெஞ்செரிச்சல் முதலிய நோய்களையும் கண்டிக்கும், நேராக இத்திராவகத்தைக் கொடுப்பதைவிட இப்பாஷாணம் கலந்த சுண்ணம்பு, சாம்பலுப்பு, சோடா, நவாச்சாரம், இவைகளைக் கொடுக்க அழற்சி முதலிய தீங்கில்லாமலே சயரோகம், சோகை, வெட்டை, குன்மம், காக்கைவலி முதலான் நோய்களுக்கும், உடம்பில் எலும்பின் சத்துக் குறைந்த காலத்திலும் இதை ஷர்பத்தில் கலந்து கொடுக்க குணமர்கும், diluted phosphoric acid — Acidum phosphoricum dilutum. It is a colourless liquid with sour taste and strongly acid reaction. It is useful in medicine. In small doses it is a tonic, refrigerant and aphrodisiac, in large doses, it is a stimulant especially of the nervous system and in over doses, it is a poison.

In the advanced stages of typhus and typhoid fevers, sacrofulous and calculus affections, diabetes, caries, dropsy, cardialgia or heart burning etc., it has been used with alleged benefit As a substitute for this hypophophites of lime, potash soda ammonia and iron have been strongly recommended on the ground that they produce all the beneficial effects of phosphorous, without the irritant and other evil effects, which occasionally follow its internal administration. They have been employed in phthisis anaemia, leucocythemia, dyspepsia, epilepsy and other affections supposed to be connected with a deficiency of phosphates in the system. They are administered in small doses in conjunction with a bitter infusion or in the form of a syrup.

**தீமுறுகல்திராவகம்,** தீமுறுகற் பாஷாணத்தினின்று தயாரிக்குமோர் வகைத் திராவகம், phosphoric acid.

**தீமுருகல் பாஷாணம்,** தண்டகிபாஷணம், phosphorous a kind of prepared arsenic.

**தீமுருகற் பாஷாணம்,** இது சாதாரணமாக எலும்பினின்று எடுக்கப்படும், அன்றியும் இது மனித உடம்பின் எலும்புகளிலும், நரம்பு மண்டலங்களிலும் சாதாரணமாகக் காணப்படும், முட்டைகோஸ், உருளைக் கிழங்கு, முட்டை, இருல் இவற்றில் இவ்வஸ்து உள்ளடங்கியிருக்கும். இதுகனிஜ பதார்த்தங்களின் இனத்தைச் சேராவிட்டாலும் உணவு பண்டங்களில் இயற்கையாகவே சுண்ண ரூபமாக அடங்கி யிருக்கின்றது, மிளகிலும் இதுவுண்டு, இது காற்றுப்பட தீபற்றுந்தன்மையதாதலால் இதை தண்ணீருக்குள் போட்டு வைப்பதுண்டு தண்ணீரில் கரையாது மிக சிறிய வளவில் சுறுசுறுப்பைத் தரும், பெருமளவில் விஷத் தன்மையது, அதிக வளவில் கொடுக்க மரணத்தையுண்டுபண்ணும், இது காக்கை வலி மூளையைப் பற்றிய கோளாறு பேடித்தனம், சயம், தீராத சரும நோய் வாந்திபேதி, முதலிய நோய்களுக்குத் கொடுக்கலாம், ஆனுல் மற்ற மருந்துகளை விட விசேஷமாகச் சொல்வதற்கில்லை, இது நேராக சுவாச சயங்களுக்குள் வேலை செய்ய இயல்புடையதாதலர்ல், சுவாச சயத்தைப் பற்றிய எல்லாவித நோய்களுக்கும் வெகு சிறியவளவில் தண்ணீரிற் கலந்து கொடுக்க

அனுகூலமுண்டு, ஆகவே காசநோய்க்கும் கொடுக்கலாம், இது உடம்பிற்குப் பலந்தருவதுமன்றி ஆரோக்கியத்தையும் கொடுக்கும், தாதுவைக் கட்டும், உடம்பில் எலும்புகளிலும், நரம்பு மண்டலங்களிலும் இப் பாஷாண சக்தி குறைவதால் ஏற்படும் சயம், கழலை, ரோகம் முதலியவைகளையும் போக்கும். It is a poison obtained from bones. It also commonly exists in bones and the nervous system of the human body, cabbage, potatoe, egg, prawn contain this substance. Although it does not belong to the mineral kingdom it is found naturally mixed with calcium in food stuffs. Pepper also contains this. It is easily inflammable and so retained in water, in soluble in water. In very small doses, it is a stimulent, powerful irritant in large doses and fatal in over doses. In epilepsy, softening of brain, impotence, phthisis, inveterate skin diseases, cholera etc, it has been advised, but in safety and efficacy it cannot be said to be superior to other medicines. As it is supposed to act naturally on the respiratory organs, it is recommended in diseases relating to those organs in the form of a diluted phosphoric acid. It can also be given for asthma. It is not only an alterative but also a tonic and an aphrodisiac. It is used with great advantage in phthisis and tumours and other cases supposed to be connected with a dificiency of phosphates in the system.

**தீமுறி,** அனல்முறிப்பூடு, உதவகன்பூடு, an unknown plant suspending the action of fire.

**தீமுறுகல்,** see தீமுருகல் பாஷாணம்.

**தீமுறுகல் பருவுக்குள்குரு,** கருவேல், black acaua — Acacia arabica.

**தீமூட்டல்,** see தீப்போடுதல்.

**தீம்,** இனிமை, தித்திப்பு, sweetness.

**தீம்பண்டம்,** தித்திப்புப்பண்டம், sweet eatables.

**தீம்பாலை,** கொடிப்பாலை, இதுவே பாலைப் பழம், இதனால் சன்னிவிஷ பாகம் தீரும், green wax flower — Drega volubilis. It is capable of removing poisonic symptoms intetanus or toxemia; 2. a plant with milky juice — Croton polyandrum.

**தீம்பால்,** திரட்டுப்பால், milk thickened by boiling: 2. தித்திப்புப்பால், sweet milk; 3. பாலைப்பழம், mimusops — Mimusops hexandra.

**தீம்பாவை,** மிதிபாகற்கொடி, ground creeper — Mimordica humilis.

**தீப்பிரண்டை,** தீப்பிரண்டை, as opposed to புளிப்பிரண்டை.

**தீம்புகை,** நீர்மேல் நெருப்பு, sodium plant; 2 நறும்புகை, fragrant incense.

**தீம்புரணி;** காகதிண் கொடி, இது ஓர்வகை கருங்காலி, toomal tree — Diospyros tomentosa.

**தீம்புழல்,** இனிய பலகாரம், sweet eatables.

**தீம்பூமரம்,** தித்திப்பான அல்லது உண்பதற்குறிய பூமரம், a tree yielding sweet eatable flowers as moringa and sesbane flowers etc.

**தீய,** இனிய, sweet.

**தீயச்சுண்டல்,** தீய்க்கின்ற பதம் வரும் வரையில் கொதிக்க வைக்குதல், boiling anything till scorching point; 2. அதிகமாகச் சுண்டும்படி காய்ச்சுதல், boiling any liquid to excess till it becomes a concentrated solution, boiling away, seething.

**தீயபுட்பம்,** சண்பகப் பூ, Champauk flower — Michelia champauka.

**தீயம்,** தித்திப்பு, sweetness.

**தீயல்,** தீய்ந்து போதல், heating to scorch; becoming or getting scorched; 2. பொரித்த கறி, fried curry.

**தீயனி,** காய், immature or unripe fruits, 2. காயா, bilberry tree — Memecylon edule.

**தீயாக்கண்ணணி,** பொன்னாங்கண்ணி, sessile plant — Illecebrum sessile.

**தீயாக்கீரை,** see தீயாக்கண்ணணி.

**தீயாங்கம்,** நான்முகப்புல், buffalo reed — Saccharum spontaneum.

**தீயாற்றியெடுத்தல்,** நெருப்பு ஆறிய பின் புடத்தினின்று மருந்தை வெளிப்படுத்தல், removing the medicine from the heap of fire after the fire is completely cooled after calcination.

**தீயில்கழிக்கும்பச்சை,** நாகப்பச்சை, kind of green stone a mineral probably of zinc compound. It is selected as one of the 120 kinds of natural substances in Tamil medicine.

**தீயினுடபுட்பம்,** குதிரைவாலிப்பூ, purple wrath creeper — Petraea volubilis.

**தீயின்வயிரம்,** மீனம்பர், a concentration found in the intestines of whales — Ambergiris.

**தீயுப்பு,** எரிசசலைத் தரக்கூடியவுப்பு, caustic soda; 2. பூண்டுகளைக்கொளுத்தியெடுத்த வுப்பு, salt derived from the ashes obtained by burning plants; 3 காடிக்காரம், lunar caustic in sticks used by surgeons — Argenti nitras.

**தீயெரு,** வயித்தியமுப்பு, see தில்லையெரு.

**தீயைப்பிடுங்கல்,** நெருப்பிட் டெரிவதைக் குறைத்தல், reducing the heat by removing a portion from the fire—lessening the heat.

**தீயோதகம்,** வெடியுப்புத் திராவகம், nitric acid

**தீயோந்தி,** திப்பிலி, long pepper — Piper longum.

**தீய்க்கும்மருந்து,** பட்டவிடத்தில் சுட்டுவிடும் மருந்து — eschortic, cauatic.

**தீய்ச்சலம்,** அக்கினிக்கட்டி, which see.

**தீய்தல்,** தீய்ந்து போதல், being scorched by over heating, 2. உலர்தல், being scorched by sun's heat as plants

**தீய்த்தல்,** தீயச்செய்தல், scorching.

**தீய்த்துப்போடல்,** சுட்டுப்போடல் scorching by burning away.

**தீய்ந்தசருக்ரை,** burnt sugar — Caramel.

**திரக்காரு,** நிலப்பனை, ground palm — Curculigo orchioides.

**திரநாடி,** வெகுகாலமாய் நோயினுல் பீடிக்கப் பட்டவனுடைய நாடி, pulse of a patient ailing for a long time.

**திரம்,** வலிமை, strength; 2. குளிர், chillness; 3. மஞ்சள், turmeric; 4. வல்லமை vigour, power; 5. போதையைத் தரும் குடிநீர், any intoxicating beverage; 6. தைரியம்; courage.

**திரல்,** see திருதல்.

**திரவந்தி,** எலிச்செவி, rat's ear plant — Ipomaea reniformis

**திரவுப்பு,** சத்தியுப்பு, which see.

**திரா,** நீங்காத, everlasting; 2. குணப்படாத, incurable.

**திராக்கடுப்பு,** திராக்கோபம், anger not easily subsided, unabated anger; 2. இடைவிடாத நமைச்சல், constant irritation; 3. எளிதில் குணப்படாத தினவு, irritation not easily curable — Chronic irritation.

**திராக்குறி,** நோய் குணமாகாத அடையாளங் கள், incurable or chronic symptoms.

**திராச்சன்னி,** அசாத்திய சன்னி, cerebral apoplexy, indicating persisting depression or increase or rise of tempature.

**திராச்சிரங்கு,** அடிக்கடி கிளைத்துக்கொண்டே யிருக்கும் சிரங்கு, itching occuring repeated by on the body; 2. ஆருச்சிரங்கு an incurable or chronic itch.

**திராச்சுரம்,** குணப்படுத்த முடியாத சுரம், incurable chronic fever.

**திராதவெள்ளை,** எளிதில் சிகிச்சைக்கு வசப் படாத மேகத்தினுல் வந்த இந்திரிய வொழுக்கு இதற்கு படிகாரத்தைப் பொரித்து சமன்கற்கண்டும் சேர்த்து உலர்ந்த நெல்லிக் காயுடன் பொடித்து வஸ்திரகாயம் செய்து 3 வேளைக்கு 2 விடை விதமாக பசுவின் மோரில் கரைத்து 8 நாள் சாப்பிட தீரும், இச் சாபத்தியம், white discharge from the genitals which is not easily amenable to treatment. Goose berry pulvis along with those of alum and sugar candy, if given for eight days with cow's butter milk according to the text the disease gets cured.

**திராநோய்,** எளிதில் வசப்படாத நோய், disease not easily amanable to treatment; 2. அசாத்தியநோய், obstinate disease.

**திராந்தி,** மச்சுமரம்.

**திராப்பசி,** கடும்பசி, great hunger; 2. எளிதில் திருப்தியடையாத பசி, canine apetite, one who is not easily.

**திராப்பசியன்,** பெருவயிறுள்ளவன், glutton, satiated due to voracious hunger; 2. மகோதரன், one with ascites.

**திராப்பரங்கி,** நெடுநாள்வரை குணமாகாத அல்லது ஆருப்புண், chronic syphilitic sore.

**திராப்பாடு,** நீங்காது எப்பொழுதும் இருந்து கொண்டேயிருக்கும் வேதனை, constant and incurable suffering.

**திராப்பித்தகாசம்,** மேகநீர் கொண்ட ஓர் கண் ணேய், a chronic eye disease.

**திராப்புண்,** ஆருதபுண், chornic (incurable) sore or ulcer

**திராவிக்கல்** இடைவிடாத விக்கல், constant hiccough which is fatal symptom of other diseases.

**திரிகாதம்,** வெள்ளரி, cucumber.

**திருதல்,** குணப்படல், being cured as from disease.

**திருநோய்,** குணப்படும் நோய், curable disease as opposed to திராநோய், which see.

**திருவியாதி,** திருநோய், which see.

**திரை,** குடல் திரண்டு, மேனி மெலிந்து, வயிறு வலித்துத் துன்பறுத்துமோர் நோய், a disease marked by prominent symptoms of disorder of the intestines, progressive emaciation and colic.

**தீர்க்ககணம்,** வெண்சீரகம், common cumin seed — Cuminum cyminum.

**தீர்க்ககந்தகம்,** முருங்கைமரம், Drumstick tree — Hyperantherus moringa.

**தீர்கக்கந்தை,** மெருகன் கிழங்கு, bulbous root of the plant of Arum mucrorhizon

**தீர்க்ககாண்டம்,** கோரைப்புல், sedge grass — Cyprus.

**தீர்க்ககிரந்தி,** கணு, node on stem of plant knot; 2. பொருத்து, joints; 3. ஆனைத் திப்பிலி, elephant long pepper.

**தீர்க்ககேசம்,** கரடி, bear.

**தீர்க்கசங்கம்,** தொடை, thigh; 2. ஓர் நாரை, a crane.

**தீர்க்கசஞ்சுகம்,** நாரை, heron — Ibises

**தீர்க்கசடம்,** கரும்பு, sugarcane.

**தீர்க்கசன்னி.**

**தீர்க்கசாலம்,** ஆச்சா, timber tree — Diosphyros ebenaster.

**தீர்க்கசிகுவம்,** பாம்பு, snake, serpent.

**தீர்க்கசிரம்,** ஓர் பறவை, a kind of bird.

**தீர்க்கசீவன்,** நீண்ட ஆயுளுடையோன், man of great age.

**தீர்க்கசுகுவம்,** see தீர்க்கசிகுவம்.

**தீர்க்கசுரதம்,** நாய், dog.

**தீர்க்கசுவாசம்,** பெருமூச்சு, deep drawn sigh; 2. முழுமூச்சு, deep breathing, yogies breath.

**தீர்க்கசூத்திரம்,** கண், eye; 2. குன்மநோய், dyspepsia; 3. வயிற்றுவலி, colic.

**தீர்க்கச்சம்,** தேக்கு, teak wood tree.

**தீர்க்கதண்டம்,** ஆமணக்கு, castor plant — Ricinus communis.

**தீர்க்கதமசம்,** அசாத்திய நோய், a long chronic disease.

**தீர்க்கதரிசி,** முக்காலத்தையு முணர்வோன், a sage having the knowledge of the past, present and future.

**தீர்க்கதாதி,** நிலப்பனை, ground palm — Curculigo or chioides.

**தீர்க்கதிரணம்,** ஓர்புல், a kind of grass.

**தீர்க்கதிருஷ்டி,** தூரத்துப் பார்வை, long sight.

**தீர்க்கநாதம்,** சங்கு, conch; 2. சங்கங்குப்பி, smooth votakameria — Cleodendron incrme.

**தீர்க்கநிச்சுவாசம்,** பெருமூச்சு, in haling and expiring a long breath audibly as from grief or melan choly — Sighing.

**தீர்க்கநித்திரை,** நெடுந்தூக்கம், deep long sleep; 2. மரணம், death — Ever lasting sleep.

**தீர்க்கபத்திரகம்,** see தீர்க்கபத்திரம்; 2. ஆமணக்கு, see தீர்க்கதண்டம்.

**தீர்க்கபத்திரம்,** உள்ளி, onion; 2. வாழை, plantain; 3. வஞ்சிக்கொடி, common rattan of S. India — Calamus rotang; 4. see குதிரைச்செவி; 5. சாரணை, trianthema — Trianthema monogyna; 6. மலையிலுப்பை, wild mohwah — Bassia latifolia alias B. longifolia: 7. ஓர் கசப்புக்கொடி, a bitter creeper; 8 தாழை, fragrant screwpine — Pandanas odoratissium.

**தீர்க்கப்பத்திரா,** ஓர் வகைக்கரும்பு, a kind of sugar cane; 2. வெங்காயம், onion.

**தீர்க்கப்பத்திரி,** சங்கஞ்செடி, see தீர்க்கநாதம்; 2. பிண்டவல்லி, Bandolier fruit tree — Zanonia indica.

**தீர்க்கபடோலிகம்,** சுரைப்பீர்க்கு, Luffa cylindrica.

**தீர்க்கபரணி,** வாழை, plantain tree — Musa paradisiaca.

**தீர்க்கபலகம்,** அகத்தி, sesbania grandiflora.

**தீர்க்கபலம்,** சரக்கொன்றை, Common cassia — Cassia fistula.

**தீர்க்கபலவம்,** கஞ்சா, Indian hemp — Cannabis sativa; 2. கொழுந்து, tender shoots.

**தீர்க்கபலே,** புரசு, bastard teak — Butea frondosa: 2. திராட்சை, vine with reddish grapes.

**தீர்க்கபன்னி.** see தீர்க்கபரணி.

**தீர்க்கபாகு,** நீண்டகைகளுடையவன், a long armad man said of a king.

**தீர்க்கபாங்கம்,** கடைக்கண், outer corners of the eyes.

**தீர்க்கபாசி பத்துவம்,** கரு மருந்து, Negroe's olive — Terminalia tomentosa.

**தீர்க்கபாதவம்,** தென்னைமரம், cocoanut tree — Cocos nucifera.

**தீர்க்கபி,** பாம்பு கொல்லி, snake killer.

**தீர்க்கப் பிரமேகம்,** நாட்பட்ட பிரமேகம், chronic gonorrhoea.

**தீர்க்கபிருட்டம்,** பாம்பு, snake.

**தீர்க்கபுட்பம்,** சண்பகம், champauk — Michelia champaca, 2. எருக்கு, madar.

**தீர்க்கபுட்பி,** சதாபுட்பி, அதாவது வெள்ளெருக்கு, white flower giant swallow wort — Calotropis gigantea (albiflora).

**தீர்க்கமண்டலம்,** வெள்ளையா மணக்கு; a white variety of castor plant — Jatropha curcas.

**தீர்க்கமந்திரம்,** தர்ப்பைப்புல், sacrificial grass — Erogrostis cynosuroides.

**தீர்க்கமூலகம்,** அழிஞ்சில், alingil tree — Alangium lamarckii.

**தீர்க்கமூலர்,** ஓர் வகை வில்வம், a kind of ball tree; 2. தொட்டாற் சுருங்கி, sensitive plant — Mimosa pudica; 3. முடக்கொற்றான்; smooth leaved heart pea — Cardio spermum halicacabum, 4. விடத்தேர்; sore eye plant — Mimosa cinerea; 5. வெட்டி வேர்; Cuscus root — Andropogan muricatus.

**தீர்க்கமூலம்,** கரிமுள்ளி, Indian night shade — Solanum indicum; 2. ஓர் வகை முள்ளங்கி, a kind of radish; 3. சாலிகை honey suckle plant — Desmodium gangeticum; 4. பால்வல்லி, milk creeper — Ichnocarpus frutescens.

**தீர்க்கமூலி,** சரக் கொன்றை; cassia — Cassia fistula.

**தீர்க்கமேதி,** கனையெருமை விருட்சம்; see எருமைக்கனைச்சான்.

**தீர்க்கரசனம்,** பாம்பு, snake.

**தீர்க்கரதம்,** பன்றி, hog; 2. அதிகப்புணர்ச்சி, excess of sexual intercourse.

**தீர்க்கராசிகை,** மஞ்சள், turmeric — Curcuma longa.

**தீர்க்கராத்திரம்,** நெடுங்காலம், long time, long duration.

**தீர்க்கரோகம்,** தீராநோய், incurable or chronic disease

**தீர்க்கரோமன்,** கரடி, bear.

**தீர்க்கலோகிதம்,** தருப்பைப்புல், see தீர்க்கமந்திரம்.

**தீர்க்கவற்ச்சிகம்,** see தீர்க்க வர்ச்சிகை; 2. நோய், disease.

**தீர்க்கவர்ச்சிகை,** முதலை, crocodile.

**தீர்க்கவறுகு,** ஆனையறுகு, elephant grass.

**தீர்க்கவிருகதம்,** see தீர்க்க விருட்சம்.

**தீர்க்கவிருக்கம்,** see தீர்க்க விருட்சம்.

**தீர்க்கவிருட்சம்,** பெருமரம், fetid tree — Sterenlia foetida; 2. மராமரம், ebony tree — Bauhinia racemosa.

**தீர்க்கவிருந்தம்,** பாளையுடைச்சி, Indian calosanthes, Indian trumpet flower — Calosanthes indica alias Oroxylum indica.

**தீர்க்கவோகி,** நறுஞ்சோந்தி, இது உப்பை வைரமாக்கி, சுண்ணத்தால் கல்லுப்புகட்டும் an unknown plant capable of consolidating common salt.

**தீர்க்கன்,** பூவழலை, a universal solvent prepared from fuller's earth; 2. பூநீறு, the efflorescent salt found on the soil of fuller's earth.

**தீர்க்காசனம்,** பாம்பு, snake.

**தீர்க்காயு,** காகம், crow; 2. பூரணவயது, long life — longevity; 3. நெடுநாள்வரை சீவிக்கும் மரம், tree existing for ages as oak etc.

**தீர்க்காயுசு,** see தீர்க்காயு, 2. காக்கை, crow; 3. நீண்டநாள் வாழ்தல், long liveliness.

**தீர்க்காயுஸ்து,** நீண்டநாள் சுகத்தோடு வாழ் வாயாக, a blessing — Life and health to you — Vive vabeque.

**தீர்க்காயுசினி,** சிங்கம், lion.

**தீர்க்காயுதம்,** முள்ளம்பன்றி, porcupine.

**தீர்க்காயுள்,** see தீர்க்காயு.

**தீர்க்காலேகிதம்,** திருதுழாய், holy basil — Ocimum sanctum.

**தீர்க்காலோகிதம்,** நறுங்குறிஞ்சி, see குறிஞ்சி.

**தீர்க்கி,** கொத்தான், airplant — Cassytha filiformis.

**தீர்க்கிதாரு,** see தீர்க்கதாரு.

**தீர்ணம்,** தீரணம், அதாவது தீகாயம், burns, scalds.

**தீர்தல்,** see தீர்த்தல்.

**தீர்த்தமாடி,** செவ்வள்ளி, red sweet potato, red yam — Dioscorea purpurea.

**தீர்த்தம்,** பெண்குறி, gential of a female; 2. நீர், water; 3. பூசித்த நீர், holy water; 4. நெருப்பு, fire; 5. பெண்மூத்திரம், female urine.

**தீர்த்தல்,** செய்து முடித்தல், accomplishing; 2. சாரணைக்கொடுத்தல், animating as mercury pills.

**தீர்த்தவாகம்,** மயிர்ச்சுருள், hair curl.

**தீர்த்திடும்பதம்,** முதிர்ந்தபதம், ripe state, matured stage.

**தீர்ந்தமருந்து,** செய்து முடித்த மருந்து, prepared medicine.

**தீர்ந்தவைத்தியன்,** கைதேர்ந்த வைத்தியன், experienced and skilled physician — Veteran doctor.

**தீர்ந்துபோதல்,** இறத்தல், dying away.

**தீர்ப்பான்,** நோய் தீர்ப்போன்; வைத்தியன், one curing diseases doctor, Physician.

**தீர்வை,** கீரி, mungoose — Ichenumon.

**தீவகம்,** விளக்கு, lighted lamp; 2. கொழுந்து, flame.

**தீவதாட்சி,** கொடி முந்திரிகை, grape vine.

**தீவரந்தமூலி,** சிறியாணங்கை, small nagay — Polygala genus.

**தீவராட்சி,** see திராட்சை, grapes.

**தீவனம்,** see தீபனம்.

**தீவாட்சரம்,** பஞ்சாட்சரம், the five mystic letters ascribed to Shive.

**தீவாந்திரயிலை,** சிறுமுன்னை, curry moonay — Premna esculenta.

**தீவாந்திரவவரை,** காபூலவரை, Kabul country bean — Fabavulgaris alias Vicia faba.

**தீவாய்த்தானம்,** அடுப்பு, oven.

**தீவானந்தமன்மூலி,** சிவகரந்தை, Shiva's basil — Sphaeranthis ameranthoides.

**தீவான்,** கரையான், white ant.

**தீவி,** புலி, tigar; 2. தீக்குருவி, ostrich.

**தீவிதிராட்சம்,** கொடிமுந்திரிகை, grapes vine; 2. பவளமல்லிகை, coral jasmine — Nyctanthes arbortristis; 3. உலர்ந்த திராட்சை, dry grapes, see திவிதிராட்சை.

**தீவிரகதி**, அபாய நிலைமை, bad condition.

**தீவிரகந்தம்**, துளசி, holy basil — Ocimum sanctum; 2. சீரகம், cumin seed.

**தீவிரசுரம்**, அதிகமாகக் காயும் சுரம், a high degree of fever — Hyperpyrexia — Acute fever.

**தீவிரசூடு**, அதிகக் கொதிப்பை யுண்டாக்கி, சிறிது கெடுதியையும் செய்யும் சூடு, heat causing great heat and harm to the system.

**தீவிரநாடி**, அதிக வேகமாய் ஓடும் நாடி, rapid pulse.

**தீவிரநீர்**, வெடியுப்புத் திராவகம், nitric acid—Aqua fortis.

**தீவிரபுத்தி**, நுட்பமான அறிவு, keen or sharp intellect — ready wit.

**தீவிரபிரமேகம்**, அல்குலின் முன் பாகத்தில் தாபிதங்கண்டு அகத்திற்குப் பரவி, கருப்பைக்குள் சென்றும், புறத்தில் மேலேறி நீர்த் தாரைக்குச் சென்றும், அந்தர பாகங்களில் விக்கம், புண், கடுப்பு, ஒழுக்கு முதலிய குணங்களை யுண்டாக்கும் ஓர்வகை மேக நோய், a urinary disease in women characterised by swelling ulcers or sores, irritation of the urethera, vagina and other parts of the genitals attended with discharge due to inflammation on the vulva being spread inside the urethera and the vagina.

**தீவிரம்**, கடுமை, severity; 2. கொடுமை, virulence; 3. காரம், pungency.

**தீவிரவேதனை**, மிக்க உபாதை, agony; 2. மிக்கவலி, acute pain.

**தீவிளங்குவைரன்**, மீனம்பர், ambergiris.

**தீவிளி**, காய், immature fruit, see தீயளி.

**தீவுச்சரக்கு**, இறக்குமதிச் சரக்கு, imported drugs from foreign countries.

**தீவுதிராட்சை**, மலத்தைப் போக்கக்கூடிய குணம் வாய்ந்த ஓர்வகைத் திராட்சை, a kind of dried grapes with seeds imported from foreign countries which are laxative.

**தீவுத்திபத்திரம்**.

**தீழ்ப்பு**, தீட்டு, menses blood; 2. அசுத்தம், ceremonial uncleanliness.

**தீற்றக்கல்**, சிலாநாகம், which see probably green stone used by barbers to sharpen razors, see தீட்டக்கல்.

**தீற்றுதல்**, தீட்டுதல், cleaning the teeth.

**தீனி**, சாப்பாடு, a general name for any meal or food. The English have adopted this term for dinner.

**தீனிக்கரண்டி**, சாப்பிடுங்கரண்டி, table spoon.

**தீனிக்குடல்**, இரைக்குடல், intestines.

**தீனிப்பிலவு**, திணிப்பிலவு, which see.

**தீனிப்பை**, இரைப்பை, stomach, இதுவே ஒதப்பை.

**தீனிப்பைவலி**, இரைப்பை வலி, pain in the stomach; 2. வயிற்றுவலி, colic.

**தீனிறம்**, சிவப்பு நிறம், red colour; 2. மாந்தளிர்க்கல், red ochre.

**தீனீர்**, see தீநீர்.

**தீனீர்க்கோளம்**, பாசக நீர்ப்புளிப்புக்கோளம் one of the gastric glands which secrete the acid of the gastric juice.

**தீனீர்த்தன்மை**, திராவிகத் தன்மை, the nature of acid.

**தீனீர்ப்புளிப்பு**, வாலையிலிட் டிறக்கிய திராவத்தின் புளிப்பு, sourness of any distilled acid; 2. திராவகப் புளிப்பு, acidity.

**தீனீர்மூத்திரம்**, புளிப்பு மூத்திரம், acidity of the urine.

**தீனீர்வாங்குதல்**, திராவகம் வடித்தல், distilling acid; 2. நீர்த்தன்மையான எவ்வித சரக்கையும் வாலையிலிட்டிறக்கல்; distilling any liquid.

**தீன்**, உணவு, food.

**தீன்பண்டம்**, இரசவஸ்து, to appreciable portion of a substance; 2. உணவுப்பண்டம், food substance.

**தீன்பூ**, சங்கங்குப்பி, smooth volkameria — Cledendron incrme; 2. இது சிலையைக் கட்டும், consolidates red orpiment, 3. தேன்பூ, obtuse leaved iron weed—Vernonia travancorice, 4. தேவதாரு, which see.

**தீன்மறுத்தல்**. உணவு ஏற்றுக்கொள்ளாமை, aversion for food due to loos of appetite.

தூ



**தூ,** ஆகாரம், food; 2. புசித்தல், taking food or meals — Eating, 3. அநுபவித்தல் enjoying by senses as pleasure or pain.

**துகபிலங்கம்,** தேன், honey.

**துகரெட்டரணை,** பத்திராட்சி, 4'O clock plant — Mirabalis jalappa warmed leaves are applied for boils to make them ripe.

**துகலோத்திரம்.** வெள்ளி லோத்திரம், lodhra bark — Simplocos racemosa; 2. விளாம் பட்டை, bark of wood apple tree.

**துகவெரினமூலி,** வேகாதுப்பு செயநீர், a strong pungent and alkaline solution extracted from an unknown secret salt.

**துகளாவிடித்தல்,** தூளாக இடித்தல், pulverising; 2. பொடியாய்ச் செய்தல், triturating; 3. சூரணம் செய்தல் preparing a medicinal substance in the form of fine dust.

**துகளிதமாடல்,** தூளாக்கல், powdering.

**துகளிதம்,** தூள், powder, dust.

**துகள்,** பூந்தாது, pollen of flower; 2. பராகம், farina of flowers.

**துகிரிகை,** சந்தனக்குழம்பு, sandal paste.

**துகிர்,** பவளம், coral.

**துகிர்த்தாளி,** பவளமல்லிகை, coral jasmine.

**துகிலப்பிரதகம்,** பருத்திவிதை, cotton seed.

**துகிலி,** பருத்தியிலை, cotton leaf; 2. பீசம், testicle.

**துகில்பீசம்,** பருத்திவிதை, cotton seed.

**துகிற்சிதம்,** நறுவிழி.

**துகிற்பிரதம்,** See துகில்பீசம்.

**துகினம்,** பனி, dew; 2. உறைபனி, frost.

**துகைத்தல்,** நசுக்குதல், squeezing, pressing; 2. வருத்துதல், being vexed.

**துகையல்,** see துவையல்.

**துக்கசுரம்,** பிதற்றல், அழுதல் முதலிய குணங்களைக் காட்டும் ஓர்வகைக் காய்ச்சல், a kind of fever attended with the symptoms of raving, crying etc.

**துக்கசோகம்,** வலியுந் துக்கமுங் கொள்ளல், feeling pain and sorrow.

**துக்கச்சி,** See துக்கைச்சி.

**துக்கநாசற்றி,** கொக்கு, stork.

**துக்கபரிதாங்கம்,** வலி கொள்ளும் கை கால், limbs with pain.

**துக்கமரணம்,** வேதனையோடு கூடிய சாவு, painful death.

**துக்கமோசனி,** வன்னி, Indian mequit — Prosopis spicigera.

**துக்கம்,** நோய், disease; 2. துன்பம், pain, suffering.

**துக்கரஞ்சம்,** கடலை, Bengal gram.

**துக்கவர்த்தனம்,** காது குத்தும்போது கை வசதி அறிய அறியாமல் நரம்பின் மார்க்கத்தில் குத்துவதினால் வலியுண்டாகிப் பிறக்கும் ஓர் நோய்; a disease developing due to a mistaken perforation made in the ear not being aware of the course of the nerves and blood vessels passing through it. It may give rise to excessive pain and other complications.

**துக்கவுன்மத்தம்,** துக்கமே ஓர் நோயாகக் கொண்டது. இது ஓர் பைத்தியமாகக் காணப்படும், depression of spirits induced by grief. It takes the form of an insanity marked by abnormal inhibition of mental and bodily activity — Melancholia.

**துக்கழகம்,** காட்டெருமை, wild buffalo.

**துக்களம்,** குங்கிலியம், Indian dammer resin — Shoreaobusta.

**துக்காகிதம்,** வலியினின்று அகலல், freed from pain.

**துக்காசிப்பயிறு,** சிறுதுவரை, a small variety of dholl.

**துக்காதி,** ஓர் வகைப்பூநீறுசாதி, a kind of efflorescent salt found in the soil of fuller's earth.

**துக்காதிசாரம்,** துக்கம் முதலிய மனோவியாகுலம், பயம், மனதில் ஏக்கம், முதலியவைகளினால் ஏற்படும் வயிற்றுப்போக்கு, diarrhoea caused by grief fear and other mental disturbances. In this all the three humours are vitiated and so it is very difficult to cure unless the causes are removed. Stools are passed with blood.

**துக்குணி,** மிகவும் கொஞ்சம், very small.

**துக்குணிமருந்து,** மிக்க சிறுவளவாகக் கொடுக்கப்படும் பற்பம், செந்தூரம், சுண்ணம் முதலியன, medicinal preparations as metallic oxides red oxides and carbonates given in exceedingly small doses.

**துக்கை,** மகளிர் சூதகம், woman menstrual blood.

**துக்கைச்சி,** சூதகமுள்ள பெண், woman in her menses.

**துங்ககம்,** கமேலாமாவு, see துங்கம்.

**துங்கச்சூடு,** அதிகமாகக் கெடுதியை விளைவித்து அபாயத்திற் கேதுவாக்கும் சூடு, scadls and burns causing great injury and even danger at times to life.

**துங்கதி,** துங்கநதி, which see.

**துங்கநதி,** மூளைசலம், serum of the brain; 2. மூளை அல்லது கபாலநீர், water oozing out from the brain; 3. குழந்தைகளைத் தாக்குமோர் அசாத்திய நோய், water in the brain is a disease in the children developing after birth and terminating fatally; 4. சித்த நூற்படி 3 மாதத்திய பிண்டத்தினின்று இரகசியமாகத் தயாரிக்கு மோர்வகை ஊனீர், a kind of peculiar serum prepared as per secret process laid down in Siddhar's science from the foetus of 3 months old.

**துங்கநாசி,** நீண்டமூக்கு, long nose, prominent nose, erect nose.

**துங்கநாசிகி,** மூக்குநீண்ட பெண், long nosed woman.

**துங்கநாபம்,** விஷப்பூச்சி, a venomous insect.

**துங்கபத்திரா,** கிளிமுருக்கு, tho-ny coral tree, See கலியாண முருக்கு.

**துங்கமுகம்,** தாமரைத்தண்டு, lotus stamina; 2. இரசம், mercury.

**துங்கம்,** மஞ்சள், turmeric; 2. தேங்காய், cocoanut; 3 கமேலமாவு, kamela powder — Rottleria tinctoria.

**துங்கரிகம்,** காவிக்கல், red ochre, ruddle.

**துங்கரீமண்டம்,** சரக்கொன்றை, purging cassia — Cassia fistula.

**துங்கைதுடன்,** காட்டாமணக்கு, purging nut —Jatropha curcus alias Croton polyandrum.

**துங்கி,** ஓர் விஷப்பூச்சி, a venomous insect.

**துசகதாதிகம்,** குடை மல்லிகை, Arabian jasmine — Jasminum sambac.

**துசகமாதுளை,** See துசகம்.

**துசகம்,** கொம்மட்டி மாதுளை, melon lime — Citrus medica medica; 2. மாதுளை, pomegranate — Punica granatum.

**துசக்தி,** மூளித்தொடை, deformed thigh.

**துசக்காரமூலி,** சிறியாணங்கை, a kind of small mangay — Polygala glabra.

**துசங்கு,** see துக்களம்.

**துசபரிசம்,** சிறுகாஞ்சொறி, hemp leaved tragia — Tragia cannabina.

**துசமர்த்தம்,** சூல்கொள்கை, to be conceived.

**துசம்,** உமி, husk; 2. குங்கிலியம், see துக்களம்; 3. தவிடு, bran; 4. பல், tooth.

**துசவசம்,** குங்கிலியம், See துக்களம்.

**துசன்,** தகரம், tin.

**துசாகதம்,** குமட்டிக்காய், a kind of bryonia, water melon — Bryonia callosa.

**துசாகதீதம்,** மாதுளை, pome granate — Punica granatum.

**துசாநலம்,** உமித்தீ, husk fire.

**துசிநகாலா,** see துசிசாலம்.

**துசிசாலம்,** பிரண்டை, adamant creeper — Vitis quadrangularis.

**துச்சதாரு,** ஆமணக்கு, castor seed plant — Ricinus communis; 2. குறிஞ்சான், Indian ipecacuanha — Tylophora asthmatica.

**துச்சதானியம்,** பதர், husk.

**துச்சமி,** கொம்மட்டி, see துசாகதம்.

**துச்சம்,** கொம்மட்டி, water melon — Citrus genus; 2. பேய்க்கொம்மட்டி, bitter water melon — Cucumis colocynthis; 3. பதர், husk.

**துச்சாரச்சும்,** see துச்சாரம்.

**துச்சாரம்**, மூங்கிலரிசி, bamboo seed.

**துச்சி**, பூநீறு, an efflorescent salt found in the soil of the fuller's earth.

**துச்சிகிச்சை**, கஷ்டமான சிகிச்சை, difficult to be cured; 2. தப்பு சிகிச்சை, wrong treatment.

**துச்சிதம்**, ஆமணக்கு, see துச்சதாரு.

**துச்சிப்பொருப்பு**, சிலாவங்கக்கல், the principal ore of lead — Galena.

**துச்சிமம்**, மயிர்க்கொன்றை, peacock flower tree — Poinciana regia.

**துச்சிரம்**, நாயுருவி, Indian burr — Achyranthis aspera.

**துச்சில்**, உடம்பு, body as a lodging for the soul; 2. சூட்டு, crest of birds. (கொண்டை)

**துச்சேதம்**, தோற்காயம், skin wound.

**துச்சேதனம்**, தோல் துணித்தல், culling skin.

**துஞ்சல்**, இறத்தல், dying; 2. தூங்கல், sleeping; 3. உறங்கல், dosing drowsing.

**துஞ்சாதி திராவகம்**, சர்வ திராவகம்; அதாவது சகல சரக்குகளையும் கொல்லும் திராவகம், an acid capable of killing all drugs.

**துடகம்**, தகரை; ring worm plant — Cassia tora.

**துடக்கறுப்பான்**, பசுங்கொத்தான், air creeper — Cassytha filiformis, alias c. aphylla; 2. முடக்கொத்தான், palsy curet — Cardiospermum halicacabum.

**துடக்கு**, அசுசகம், uncleanliness; 2. மகளிர் சூதகம், menses in woman—Catamenia; 3. பிரசவத்தீட்டு, ceremonial impurity of child birth.

**துடங்கணம்**, வெண்காரம், borax — Biborate of soda.

**துடம்பகாரி**, சிறு துவரை, a small variety of dholl.

**துடரி**, தொடரி, prickly breckthorn — Scutia indica; 2. ஓர் முட்செடி அதாவது இண்டாஞ் செடி, a thorny shrub — Rhamnus circumsissus.

**துடரிக்கொழுந்து**, இண்டங் கொழுந்து tender leaves of.

**துடர்க்கம்**, நரிவழுக்கை, அல்லது பிரமி வழுக்கை, Indian bramy — Herpestis monniera.

**துடர்ச்சி**, சண்பகம், champauk tree — Michelia champaca.

**துடர்ந்திருபோது**, காலை மாலை, both morning and evening.

**துடவை**, மயில், peacock; 2. பூந்தோட்டம், flower garden.

**துடி**, அகில், eagle wood — Aquila — Excocaria agallocha; 2. உதடு, lip; 3. ஏலம் cardamon — Elleteria cardamomum; 4. காலவரை; duration; 5. கூதாளிச்செடி; Solanum genus — Strilobalum; 6. துடித்தல்; pulpitating; 7. இசங்கு, mistle toe berry thorn — Azina terta cantha; 8. பசியால் துடித்தல், intolerance of hunger; 9. துள்ளல், jumping; 10. வலியால் துள்ளல்; shocking at pain.

**துடிகம்**, தும்பை, leucas flower — Leucas genus — Pheomis indica.

**துடிகா**, see துடிகம்.

**துடிகாதீதம்**, குதிரை செவிக்கள்ளி, horse ear sparge.

**துடிச்சேவிகம்**, இசங்கு, see துடி.

**துடிச்சோபிதம்**, அகில், Agil wood.

**துடிதுடி**, see துடி துடித்தல்.

**துடிதுடித்தல்**, பதறுதல், இது தோள் புருவம் இவ்விடங்களிற் காணிற் சகுனமாகக்கொள்ளப்படும், throbbing or pulpitating which is reckened, if happened in a certain part of the body as shoulder,eyelids etc. to be a propitious omen; 2. வெகு தீவிரமும் ஆவலாயுமிருத்தல். being quick and eager to perform or accomplish a thing.

**துடிதுடிப்பு**, துடியென்னேவல், the act of throbbing.

**துடித்தல்**, திடீரெனத் குதித்தல், suddenly jumping; 2. வலி பொறுக்காது துள்ளல். passing over by a sudden leap as from unbearable pain; 3. பதைத்தல், restlessness in children due to unbearable pain; 4. அவயவம் நடுங்கல், trembling as of limbs; 5. பதறுதல், throbbing as of pulse.

**துடிநாடி**, வேகமாய்ப் பதைத்தோடும் நாடி, forcible beating of the pulse.

**துடிநூல்**, உடம்பில் பல பாகங்களில் வலம் அல்லது இடதுபக்கம் அங்கத்துடிப்பினால் ஏற்படும் நயம் அல்லது நஷ்டத்தைப்பற்றிக் கூறும் நூல், that branch of science relating to gain or loss in coming events to an individual by calculating on the quivering or vibrations and sometimes even throbbing of a particular organ on the right or the left side as the case may be.

**துடிநோய்**, இது 100 விதமாகக் கருதப்படும். துடிக்கச் செய்யுமோர் வாதநோய், a kind of paralysis marked by trembling of the limbs or tremore of the muscles — Shaking palsy; 2. உதட்டு நோய், disease of the lip; 3. திடீரெனத் துடிக்கச் செய்தலினாலேற்படும் நோய், இது காயம் அச்சம் முதலியவைகளினால் நரம்பிற்கு உண்டாகும் அதிர்ச்சி, sudden vital depression due to an injury of emotion which makes an untoward impression upon the nervous system — Shock; 4. துடித்தபடி கொள்ளும் நோய், shock causing death, as electric shock, shock from which man cannot revive fatal shock.

**துடிபித்தம்**, உடம்பு துடித்தல், சண்டையிடல், மாதர்மேலிச்சை கொள்ளல் முதலிய குணங்களை யுண்டாக்குமோர் வகைப் பித்தம், a kind of bilious nature in men causing mischievous propensitus as tremor, inducing a desire to quarrel with others or promoting a carnal desire etc.

**துடிபேதி**, கடும்பேதி, drastic purgative. See page 895.

**துடிப்பு**, பதைப்பு, a sudden disturbing emotion, a serious blow to the feelings; 2. தீவிரம், hastiness; 3 துள்ளுகை, palpitation of the heart.

**துடிமாலிகம்**, கொடியாவிரை, creeper senna.

**துடியடங்கல்**, ரூபம் மறைதல்.

**துடியடங்க வரைத்தல்**, ரூபம் மாறும்படி அரைக்குதல், grinding a thing so as to alter its shape or structure completely.

**துடியாஞ்சி**, இசங்கு, see துடி.

**துடியாஞ்சிகம்**, see துடியாஞ்சி.

**துடியாட்டம்**, கிறுகிறுப்பு, giddiness.

**துடியிகம்**, நவரை வாழை, a variety of plantain.

**துடியிடை**, பெண்ணிடை, woman's hip or waist.

**துடிவாதசன்னி**, உடம்பில் பலவிடங்களில் வாதம் ஒடித்துடித்து, பிறகு அடங்கி, உடம்பைப் பலவீனப் படுத்துமோர் வகைச் சன்னி, a kind of paralysis marked by jerking movements or tremor in several parts of the body due to vatha (humour) and causing general weakness or debility.

**துடிவாதம்**, நரம்புத் துவாரங்களில் கெட்ட நீர் தங்குவதால் உடம்பில் பலவிடங்களில் ஒடித்துடித்து அடங்கி, உடம்பில் அனல் பறந்து ஒடுங்கும் ஓர்வித வாதநோய், a kind of nervous disease more especially a functional disorder of the nervous system due to accumulation of morbid fluid in several parts of the body. It is marked by tremor or trembling due to wandering vatha through the several parts of the body. The patient is subsequently restored to a normal condition.

**துடிவாயு**, வாயு அடிக்கடி உடம்பில் பரந்தோடி, நாள்தோறும் அதிகரித்து, பலவிடங்களில் துடிப்புண்டாக்குமோர் வாயு, a form of nervous disease due to the deranged humour vayu prevailing on several parts of the body and getting accumulated there it gives rise to tremor or quivering in those parts.

**துஷியம்**, the tissues, the secretions and excretions.

**துடுப்பாற்றி**, ஓர்வகைக் கடல்மீன், a kind of sea fish.

**துடுப்பு**, கிண்டுவதற்காக உபயோகிக்கும் ஓர் மூங்கிற் கோல், a bamboo rod used for stirring anything boiling; 2. பற்றகற்றி, அதாவது தைல வண்டல் பாத்திரத்தினடியில் பிடிக்காதபடி துழாவ உபயோகிக்கும் மரத்தினால் பிறையைப்போற் செய்த ஓர் நீண்டகோல், a wooden ladle with a semicircular end used in the preparation of medicated oils so as not to allow sediments stick on to the bottom of the vessel while boiling — Saptula; 3. சக்கிலியர் உபயோகிக்கும் பிறையைப் போன்ற ஓர் ஆயுதம், a semicircular instrument used by cobblers.

**துடுப்புக்கீரை**, ஓர்வகைக் கீரை, a kind of vegetable green.

**துடுப்புள்ளான்**, ஓர்வகை உள்ளான், a kind of snipe.

**துடுவை**, நெய்த்துடுப்பு, wooden spoon for preparing ghee.

**துயிலிக்கீரை,** இது ஓர் தின் கீரை, துவர்ப்பும் சிறு புளிப்புமுள்ளது, இது வெப்பமுண்டாக்கி, தேகத்தில் சுறுசுறுப்பைக் கொடுக்கும். இதனால் நமிட்டுச் சிரங்கும், இரணமும் உண்டாகும், ஆயினும் பழைய மலச்சிக்கலும், பிரமேக வெள்ளையும் போம், இதன் கீரையை வேகவைத்து பிரட்டி உணவில் கொள்ள மேற்கண்ட நோய்கள் போம்; ஆனால் கபம் உண்டாகும், a vegetable green used in food—Achyranthus poly gonoides. It is a stimulant and laxative, having astrigent and sour taste. When internally taken promotes itches and other cutaneous eruptions followed by ulcers and sores, but it has a curative effect as it removes constipation and venereal diseases as genorrhoea and whites. When used as greens in food.

**துயிலுணர்தல்,** விழித்தல், waking from sleep

**துயிலுதல்,** நித்திரை கொள்ளல், தூங்கல், sleeping.

**துயிலெடுத்தல்,** துயிலெழுப்பல், which see.

**துயிலெடை,** see துயிலெடுத்தல்.

**துயிலெழுப்பல்,** விழிக்கச்செய்தல், causing to wake up.

**துயிலைக்கீரை,** see துயிலி.

**துயிலொழியுறக்கம்,** தூக்கத்தினின்று விழித்த பிறகு மறுபடி படுத்தபடியே மறுபடியும் கொள்ளும் உறக்கம், dozing or sleeping lightly even after waking up without an inclination to get up from bed.

**துயில்,** தூக்கம், sleep; 2. மரணம், death, ever lasting sleep; 3. பவளம், coral.

**துயில்காணு,** நெட்டி, pith, cork.

**துயில்கூரல்,** see துயில் கூர்தல்.

**துயில்கூர்தல்,** துயில்போதல், going to sleep; sleeping.

**துயில்வு,** நித்திரை, sleep.

**துயிறல்,** நித்திரை செய்தல், sleeping.

**துயிற்பெருக்கி,** தூக்கத்தை யுண்டாக்கும் பொருள்கள், மருந்துகள், drugs and medicines that induce sleep, see page 891.

**துயிற்றல்,** குழந்தை அல்லது நோயாளியைத் தூங்கச் செய்தல், putting or inducing to sleep as a child or patient.

**துயுலி,** தொயிலிக்கீரை, see துயிலி.

**துய்த்தல்,** புசித்தல், taking meal or eating; 2. ஐம்பொறி நுகர்வு, perception of or enjoying by the five senses.

**துய்,** உணவு, food

**துய்முஷ்டி,** கோதும்பை, wheat grain.

**துய்யக்கண்குருடு,** see தூயகண்குருடு.

**துய்யபால்,** நீர்கலக்காதபால், unadulterated milk or pure milk.

**துய்யனேரவியாக்கி,** பவளப்புற்றுப் பாஷாணம், a kind of prepared arsenic.

**துய்யன்,** பரிசுத்தமானவன், sacred person; 2. வெள்ளிமணல், silver ore sand containing silver.

**துய்யான்,** வெள்ளி, silver.

**துய்யான்குறுமணல்,** வெள்ளிமணல், silver ore.

**துய்யான்வகைவேதை,** வெள்ளியை வாத முறைப்படி உருக்கி அதற்கு தங்கச் செம்பு சேர்த்து முழுவதும் பொன்னாகச் செய்வது, the act of transmuting silver into gold by melting silver and adding to it consolidated copper freed from verdigris in due proportions as contemplated in the Siddha Alchemy and converting the whole silver into gold.

**துய்யை,** சீயக்காய், soap nut, true soap pod — Acacia concinna.

**துரகதப்பூரம்,** கற்பூர வெற்றிலை, campher scented betel leaf — Piper bettle genus.

**துரகதமூலம்,** நீர்முள்ளி, water thistle — Barleria longifolia alias Hygrophila spinosa.

**துரகதம்,** குதிரைப்பற் பாஷாணம், a kind of native arsenic one of the 32 kinds of native arsenic contemplated in Tamil Medicine; 2. குதிரை, horse.

**துரகம்,** துரகதம், which see.

**துரகரம்,** கஸ்தூரி, musk.

**துரகாநநனம்,** குதிரைமுக மீன், a sea fish with face resembling that of a horse.

**துரங்கப்பிரியம்,** கோதுமை, wheat.

**துரங்கப்பேராசி,** குதிரைவாலியரிசி, horse tail paddy; 2. குதிரைமாலிச்சாமை, horse tail millet — *Panicum verticillatum.*

**துரங்கமம்,** } குதிரை, horse.
**துரங்கம்,** }

**துரங்கம்,** குதிரைப்பற் பாஷாணம், a kind of native arsenic.

**துரங்காரி,** எருமை, buffalo.

**துரங்கியம்,** see துரங்கப்பிரியம்.

**துரசதமூலம்,** நீர்முள்ளி, see துரகதமூலம்.

**துரசுரம்,** see துரகரம்.

**துரஞ்சிபீன்,** மன்னுபிசின், அரபிமன்னு என்னும் முள் செடியின் அடிமரத்தினின்றும், வேரினின்றும் வேனிற் காலத்தில் பகற் பொழுதில் வடியும் ஓர் தித்திப்புள்ள பிசின், இது பர்ஷியா, கொராசான் முதலிய தேசங்களில் விசேஷம், இப்பிசின் உறைந்தவுடன் இதை எடுப்பார்கள், இது கொத்தமல்லி விதைகள் அளவாக வெளிப்பட்டுப் பிறகு ஒன்றுதிரண்டு சேரும், இதனுள் முட்களும் செடியின் காய்ந்த பழமும் புதைந்து கிடக்கும், இது தித்திப்பாயும் சிறிது விருவிருப்பாயுமிருக்கும், மருந்திற்குபயோகப் படும், குணத்தை நோக்கில் சிசிலிமன்னு அல்லது சாம்பல் மன்னுவைப் போன்றது, இதை இலகு பேதியாகக் கொள்ளப்படும், யுனானி வைத்தியர்கள் இதை மருந்தில் உபயோகிப்பார்கள், முக்கியமாய் இருமல், பித்தாதிக்கம், மார்புவலி, அரோசிகம், சுரம் இவைகளுக்கு கறந்த பசுவின் பாலிற் கொடுப்பதுண்டு, இப்பூவை எண்ணெயிலிட்டுக் காய்ச்சி, தலை முழுகிவர தலைப்பாரம் சீதளம், நீரேற்றம்போம், முலைப்பாலில் ஊறவைத்து கண்ணில் பிழிய சன்னிரோகம் போம், sacchrine exudation obtained from the plant named Persian manna or Camel thorn — *Alaghi maurorum.* It is generally found in Persis, Khorassan and other places. It hot season, during day time, a sweet gummy substance exudes from the leaves and stems and this hardens, when it is collected. It occurs in small round grains of the size of corriander seed of yellowish white colour, caking together and forming an opaque mass and in this are found portions of the thorns and fruits of the plant. It is inodorous and flower is sweetly saccharine, followed by slight acridity. It is found useful in medicine and its effects are similar to those of ash manna. It is used as a mild purgative by unani doctors. Mixed in fresh cow's milk, it is genarally prescribed in cases of bilious ness, chest pain, nausea fever etc. Mixing the flowers in generally oil and boiling it, forms an efficacious remedy when applied to the head in cases of heairness of the head due to cold chillness. After soaking the flowers in womans brast milk and used as eye drops allays typhoid fever.

NOTE :— Saccharine exudation is also obtained from several plants naturally and from others on the bark or epidermis being incised. It is sometimes eaten in its natural condition or prepared into a paste, mixed with other ingredients and made into sweet meats ( Halwa ). It is given as a purgative to children and to pregrant and delicate women. Ash manna which is devoid of odour is of sweet and mild taste, dissolves entirely in the mouth. It is a concrete saccharine exudation from the stem obtained by incisions c. f. தரஞ்சபீன்.

**துரட்டி,** துரட்டு, capper shrup — *Capparis divaricara.*

**துரட்டிச்செடி,** இது ஓர்வகை ஆதொண்டை, பாறைநிறைந்த பொட்டல் நிலங்களில் மிததியாகப் பார்க்கலாம், இது புலிநகத்தைப் போன்ற வளைந்த முள்ளுடையதால் இதற்கிப்பெயர், இதற்கு கொழும்பா தொண்டை என்றும் பெயர், இது தாவக்கூடிய செடி, அடித்தண்டு மஞ்சள் நிறமான முட்கள் வாய்ந்தது, பூக்கள் பெரியது, இதன்காய், ஊறுகாய் அல்லது வற்றலிடவுதவும், இதில் வெள்ளைத்துரட்டி என்று ஓர் இனம் உண்டு, a kind of capper — *Capparis zeylanica.* It is so called from its crooked and curved thorns resembling tiger's claws. It is also known as Coylon caper. It is a scrambling shrub, stem armed with yellow thorns. flowers large, commonly grown on dry rock ground. Green fruit is used as prickles and it is dried and fried in oil and eaten. There is also another variety of this plant known as white caper or raghota caper — Capparis grandis.

**துரட்டு,** துரட்டி, which see.

**துரட்டுமுள்,** ஓர் முட்செடி. west Indian cock's spur — *Pisonia aculeata;* 2. ஓர் வகை ஆடுதொண்டை, caper shrub—*Capparis grandi flora.* see தொரட்டிமுள்.

**துரணிமோசா,** இலவு, silk cotton tree — Bombax malabaricum.

**துரத்தி,** துரட்டிச் செடி, which see.

**துரத்தி,** see சுடுதுரத்தி.

**துரத்தூரம்,** ஊமத்தை, dhatura — Datura fastuosa.

**துரத்தூலம்,** see துரகதமூலம்.

**துரப்பு,** சந்து, திறந்த குழி, any opening or cavity especially within the body or in its organs.

**துரமி,** தூதுளை, three lobed night shade — Solanum trilobatum.

**துராி,** see king of herbs — Fumaria parviflora.

**துரவி,** செம்பை, sesban — Sesbania egyptiaca; 2. சேம்பு, Indian kales — Colacasia genus.

**துரா,** தரா, பூந்தொட்டியில் வைத்து விட்டில் பயிராக்கக்கூடிய மூலிகைக்கெல்லாம் அரசனைப்போல் மிக்க முக்கியமான செடி என அர்த்தங்கொள்ளும், இதை சாதாரணமாய் வயல்களில் காணலாம், இதன் இலை நீளம், வழவழப்பு, நான்கு இதழ்களுண்டு, காய் உருண்டையாயும் கூச்சாகவுமிருக்கும், பூக்கள் மிகச் சிறியவை, வெளிர் சிவப்பு நிறம், ஓரத்தில் ஊதா நிறம், இதன் வேர் தவிர மற்றப் பாகங்கள் எல்லாம் மருந்துக்கு உபயோகமானவை, இது உடம்பிற்கு பலத்தைக் கொடுத்து ஆரோக்கியத்தை உண்டுபண்ணுவதுடன், வியர்வை பிறப்பிக்கவும், காய்ச்சலைப் போக்குவதற்கும் மிக்க உபயோகமானது; இதில் ஓர்வித திராவகச் சத்து உண்டு, ஆகவே, இதுதான் உடம்பில் தொழிலியற்றும் தன்மையது, இதன் கஷாயம் மேகநோய், நீர் சுறுக்கு, அசீரணம், அரோசிகம் முதலியவைகளைப் போக்கும், நன்னாரியைவிடச் சிறந்ததாகச் சொல்லலாம், இது மலத்தை இளக்கி மூத்திரத்தை வடிக்கக் கூடியது, இரத்தத்தைச் சுத்தி செய்யும், பெண்களுக்குப் பாலுண்டாகும், வாதபித்தத்திலுண்டான கோளாறுகளை நீக்குவதுடன் முளைமூலம், நீரெரிச்சல், இவைகளைப் போக்கும், இதில் செந்துரா அல்லது சிவப்புத் துரா என்ற ஓர் இனமும் உண்டு, earth smoke — Fumaria parviflora. It is the most important of pot herbs in our houses and gardens, it is very common in paddy fields, leaves long smooth four at a rode, flowers vary small and pale rose coloured tipped with dark purple, fruit globose and slightly pointed. Except the root the whole plant is medicinally used. It is alterative, febrifuge, tonic and diaphoretic The plant contains fumaric acid and fumarine and its physiological action is due to the latter which is its active principle. Decoction of the plant is useful in venereal diseases, painful urination (dysurea) indigestion, anorexia (aversion to food) etc, and so it is held as even superior to sarsaparilla in its virtue. Moreover it is a laxative and diuretic purifies blood and promotes secretion of breast milk in woman. It is also said to remove the derangements of the humours. Vatha and bile in the system, internal piles dysurea, fever, loss of appetite. There is also a red variety of the plant known as செந்துரா — senthura.

Note:— For decoction of this plant take three ounces of the leaves and thin brances of twigs and 1½ of pints of water, and boil this in a very slow fire till the liquid is reduced to one pint and stain when cool. Dose 2 to 3 oz. three times a day. It is a substitute for Indian sarsaparilla, jamaica sarsaparilla, guaiacum wood, mezereon root and pulo. Jacobivera, see also தரா.

**துராங்கியம்,** நிலைப்பிசகு, malposition as of organs of the body

**துராசயம்,** சூட்சும சரீரம், subtle body which is not destroyed by death.

**துராச்சத்துமூலி,** விழுதி, which see.

**துராதாரம்,** கருக்கொள்ளல், to be conceived

**துராபனம்,** காட்டுப்புகையிலை, wild tobacco —Lobelia nicoti anafolicus.

**துராபோகம்,** பனைமரம், palmyra tree — Borassus flabellifer; 2. பேரீந்து, wild date tree — Phoenix sylvestris.

**துராப்பாசி,**

**துராப்பாசித்தைலம்,**

**துராப்பூடு,** see துரா.

**துராமுகம்,** குதிரைமுகம், horse face.

**துராயூகம்,** பச்சரிசி, raw rice.

**துராலகம்,** see சன்னிநாயகம்.

**துராலபம்,** சிறுகாஞ்சொறி, hemp leaved tragia — Tragia cannabina alias Alagi mouroran; 2. see துரஞ்சபீன்.

**துராலபை,** see துராலபம்.

**துராலப்பை,** ஓர் வகை நெரிஞ்சி, a kind of nernji — Hedysarum alegi; 2. கருங்காஞ்சொறி, black tragia — Tragia involucrata.

**துராலமாதி,** செந்தொட்டி, climbing nettle— Tragia involucrata.

துராலாபம் see துராலப்பை.

துராலோபம், see துராலபம்.

துரிசி, see துருசு.

துரிசிக்களங்கு, இரசத்தைக் கட்டும் களங்கு an alchemical compound from copper sulphate capabled of binding mercury.

துரிசிக்குரு, மயில் துத்தத்தைக்கொண்டு வாத முறைப்படி தயாரிக்கும் ஓர் மாற்று மருந்து, an alchemical preparation of quintessence salt derived from copper sulphate with other ingredients capable of transmuting metals into gold.

துரிசிக்குரு, கொழுஞ்சி மரத்தடியில் இருக்கும் எருக்கம் செடியில் சொறிபோன்ற கழுதை வண்டின் முதுகில் கண்ட அரிசி போல் முட்டை விழும், கைபடாமல் அதை எடுத்து 2 காசு எடை துருசுக்கு, வீரம், பூரம் கலந்து அப்பிட (குச்சியால் அப்பவும்) துரிசு நீறிக்குருவாகும், இதனால் சூதம், அண்டம் நீறும், தங்கம் நீறும், உப்புக்கட்டும். a beetle frequenting the mader plant at the foot of the orange tree bears an egg like substance on its back. Without touching with the hands it must be mixed with those of blue vitriol, mercury per chloride and mercury subscholoride. The blue vitriol becomes universal quintessence which will consolidate salt, and calcinise mercury, gold egg shell etc.

துரிசு, see துருசு; 2. குற்றம், fault, defect; 3. துன்பம், sorrow, distress.

துரிசுநீறு, துருசுச்சுண்ணம், which see; 2. துருசு பற்பம், an oxide calcined from blue vitriol, white calcined powder of copper sulphate.

துரிஞ்சல், ஒரு வகை வௌவால், a variety of bat.

துரிஞ்சி, ஊஞ்சல், Albizzia amara; 2. மலை நாரத்தை, mountain narathai; 3. கொடி நாரத்தை, creeper narathai.

துரிஞ்சி, கொடி மாதுளை அல்லது கொம்மட்டி மாதுளை, (இமயமலை அடிவாரத்தில் விசேஷம், தற்சமயம் மிகுதியாகப் பயிரிடுவதில்லை) இது ஓர் செடி, இளங்கிளைகள் மிகவும் கெட்டியாயிருக்கும், இலைகள் நான்கு கோணலாயும், கூராகவும் உள்ளன. இலைக் காம்பு சாதாரணமானது, பூக்கள் வெண்மை ஓரத்தில் சிவப்பு, வெயில்காலத்தில், பூக்கும் காய் பெரிது, மேல் தோல் சுருங்கியது, சாறுசிறிது புளிப்பு, இதன் மேல்தோல் உஷ்ணம் தரும், ஆனால் பலமுண்டாக்கும், உட்சதை குளிர்ச்சி, விதை இலை பூ இவைகளும் உஷ்ணத்தையும் வறட்சியையும் தரக்கூடியவை, இதன் சாறு துவர்ப்பு, உஷ்ணத்தைத் தணிக்கக் கூடியது. இதை சர்பத்தாகவும் கொள்ளலாம், இப்பழத்தை அபூர்வமாய் சாப்பிடுவார்கள். ஆனால் ஊறுகாய் போடவும், தாளிதம் செய்யவும் உதவும், இதன் தோல் வாசனையாயிருப்பதைப் பற்றி வாசனை எண்ணெய்க்கு இதைக்கலப்பார்கள், lime large melon, —Citron—Citrus medica. It is known by several names as creeper lime, giant lime. It is a shrub with young rigid branches, found wild along base of Himalayas, but at present day no where cultivated extensively as lemon and sour lime have generally taken its place leaves oblong and pointed, petioles simple, flowers white tinged with red, flowering in hot season, fruit great size and wrinkled with thick spongy rind, juice slightly acid. Citron rind is hot, dry and tonic, pulp cold and dry seeds, leaves and flowers are also hot and dry, juice refrigerent, and astringent and it is also used as sherbet (சர்பத்) The fruit by itself is seldom eaten, but made into confections and preserved, rind being very fragrant is used in aromatic oil.

துரிஞ்சித்தோல், துரிஞ்சிப்பழத்தோல், see துரிஞ்சி.

துரிஞ்சி நாரத்தை, ஓர் வகைப் புளிப்பான மலை நாரத்தை, as opposed to தித்திப்பு நாரத்தை அல்லது சாத்துக்குடி, satgar orange, Turuni, sour citron — Citrus medica limonum ( medicolimonum ).

துரிஞ்சிப்பீன், ஓர் முட்செடியின்மீது உறைந்திருக்கும் பனி, இது பேதியாகும், ஆனால் உடம்பிற்கு வெலிவு, இருமல், மார்புவலி, அதிபித்தம், ஒக்காளம், சுரம் இவைகள் போம், பாலில் கரைத்துக் குடிக்கத் தாதுவிருத்தியுண்டாம், c. f. கடலைப்புளிப்பு, solidified dew on a variety of a thorny shrub. It is a laxative but gives strength to the body. It acts as aphrodisiac when taken with milk. It allays cough, chest pain, biliousness, nausea and fever.

துரிஞ்சில், see துரிஞ்சி; 2. ஊஞ்சல்மரம், dark sirissa Albizzia amara alias Acacia amara; 3. கற்றுரிஞ்சில், stone sirissa — Albizzio stipulata alias Acacia stipulata; 4. உசிலமரம், a kind of ebony — Acacia penata; 5. சீக்கிரிமரம், washing tree Acrocarpus amara; 6. வௌவால், a variety of bat.

துரிட்டம், சூனியம் வைத்தல், performing a magic spell to injure another.

துரிதக்கலிதம், பெண்ணோடுசம் போகம் செய்யும் காலத்து நீடித்த நேரமில்லாமல் சீக்கிரமாக இந்திரியம் கழலுதல், இது மிக்க மோகத்தினாலும் பலவீனத்தாலும வெட்டை முதலிய நோயின் சம்பந்தத்தாலும் ஏற்படும், rapid discharge of semen during sexual intercourse. The defect in not having a sustained intercourse is said to be due to various causes as nervous excitement, weakness or debility, venereal diseases such as gonorrhoea syphilis etc.

**துரிதப்பிரசவம்,** தீவிரப்பிரசவம், அதாவது ஆத்திரத்தினால் பெண்கள் பிரசவத்தைத் துரிதப் படுத்தல், child birth which is accomplished with undue celerity — Precipitate labor.

**துரிதம்,** கலக்கம், agitation of mind, pertrubation; 2. துன்பம், affliction, sorrow.

**துரிதரோகம்,** சன்னி, பாரிசவாயு, காக்கை வலி முதலிய நோய்களினாலும், அச்சம், பயம் இவைகளினாலும் ஏற்படும் மனக் கலக்கம், agitation of mind through fear, excitement or disorder of mental faculties through diseases as delirium, paralysis . epilepsy etc.

**துரிதாதிதம்,** see துரியாதீதம்.

**துரியத்தானக்கொடி,** நாபிக்கொடி, navel cord.

**துரியத்தானம்,** பிராணவாயு விளங்கும் நாபிக்கமலம், the navel region where vital air operates.

**துரியத்தில் சொக்குதல்,** துரியாவஸ்தையில் மயங்கியிருத்தல் to enter into trance in the fourth state of the spirit, the fourth station of the soul.

**துரியத்தில் நடனம் புரிந்தசோதி,** மதியமிர்தம், which see.

**துரியநாகம்,** see துத்த நாகம்,

**துரியநிலை,** தூங்காமற் தூங்குவது, (lit) going to sleep without sleeping away; 2. ஆனந்தமயம், that state of insensibility in which the soul is manifested; 3. தன்னை மறத்தல், a state in which the soul seems to have passed out of the body or to be rapt in vision — Trance; 4. சுற்றத்தை மறத்தல், a state of insensibility to one's surroundings, the highest state in which an adept attains entire quiescence.

**துரியம்,** நித்திரை பூர்த்தியான காலத்து, பிராணவாயு, சித்தம் ஆகிய இரண்டு கருவிகளில் பிராணவாயு ஒன்று மாத்திரம் இருக்க ஆன்மாநாபிக் கமலத்தில் நின்று பாதுகாக்கும் நிலை, deep sleep in which the Chittu passes out of the body leaving the prana alone, when the soul is manifested in the naval region; 2. நான்காம் அவஸ்தை; the fourth state of the spirit, the fourth station of the soul; 3 மூலதாரம் சுவாதிஷ்டானம் இவ்விடங்களில் நின்று ஆன்மா சுகித்துக் கொண்டிருக்கும் நிலை, abstraction of mind in which the soul operates by remaining in the two psychic centres viz the genital and the navel regions, the state of pure impersonal spirit, subconscious state.

**துரியர்,** சுத்த நிலையில் நின்று சலனமற்றிருப்போர், Yogis or ascetics who attain entire quiescence.

**துரியாதீதத்தானம்,** மூலாதாரம், one of six psychic centres of the human body i.e. sacral region.

**துரியாதீதநிலை,** ஆன்மாவின் தூய்மை நிலை, the highest state of purity of the soul.

**துரியாதீதம்,** ஐந்தாமவஸ்தை, அதாவது ஆன்மாக்கள் உலக பாசத்தினின்று விடுபட்டு மிக்க தூய்மையாய் நிற்கும் நிலை, the fifth (5th) station of the soul i. e. that state of an adept in which the soul reaches the highest state, being freed completely from the corporeal entanglements.

**துரியோதனன் பூ,** நந்தியாவட்டப் பூ, East Indian rosebay — Tabernae montana coronaria alias Marium coronarium.

**துரீயபாகம்,** கால்பங்கு, one fourth portion.

**துரு,** களிம்பு, verdigris, green oxide copper; 2. இரும்புத்துரு, rust of iron; sub carbonate of iron; 3. பொன், gold.

**துருகம்,** ஓர் வகைக் கூவைக்கிழங்கு, a kind of arrow root — Koemfeira rotunda.

**துருகா,** ஆடு, sheep.

**துருக்கக்கற்றுழை** see துலுக்குக் கற்றுழை.

**துருக்கத்தாவம்,** நீர் முள்ளி, water thistle — Barleria longifolia alias B. longiflora.

**துருக்கநாட்டுமணி,** மரகதம், emerald, one of the nine gems.

**துருக்கப்பல்,** ஒழுக்கமில்லாது வெளி நீண்ட பல், an extremely large tooth projecting beyond the lips.

**துருக்கம்,** குந்துருக்கம், olibanum — Vateria indica; 2. கஸ்தூரி, musk; 3. கஸ்தூரி மிருகம், musk deer; 4. குங்குமப் பூ, English saffron flower — Crocus sativus; 5. மனக் கலக்கம், confusion of mind; 6. பாலைவனம் desert; 7. ஒடுக்க வழிமான், a kind of deer.

**துருக்கரம்,** கஸ்தூரி நாறிமரம், அதாவது கஸ்தூரிவேல், musk scented babool — Acacia farnesiana.

**துருக்கல்,** இரும்புக்கல், iron stone; 2. செம்புரைக்கல், a kind of red gravel stone.

**துருக்கவேம்பு,** ஒருவகைவேம்பு, giant neem — Melia composita alias M. dubia, see துலுக்கவேம்பு

**துருக்கற்றாழை,** ஓர் வகைச் சிவப்புக் கற்றாழை, இது கடற்கரை ஓரங்களில் விளையும், மேற்குக் கடற்கரையில் விசேஷம், இதில் சில வெளிர் சிவப்பாயும் இருக்கும், rusty coloured aloe — Sciaena belengeri. It is found grown in the sea coast but is very common in the Western coast.

**துருக்கனுதி,** வாலுளுவை, spindle tree; intellect tree — Celastrus paniculata.

**துருக்கியபினி,** துருக்கி தேசத்திலிருந்து வரும் ஓர் சிறந்த அபினி, a fine quality of opium from Turkey—Turkey opium, Yerli.

**துருசத்து,** வெங்கலமலை, mountain containing bronze or bellmetal ore.

**துருசி,** see துருசு.

**துருசிசுத்தி,** தயிரினாலரைத்து அடைதட்டி ஓடு காயவைத்து அதில் பிரட்டி எடுக்கவும், அல்லது தயிரில் ஒரு சாமம் ஊறவைத்தெடுக்கவும், purification of blue vitriol, triturate it with curd and make it into a thin disc. Heat a tile in the sun and put the disc of blue vitriol on it and turn it over and over so that it can become fried or heated uniformly. 2. soak the blue vitriol in the curd for three hours and take it.

**துருசு,** செம்பின் களிம்பு, இது சாதாரணமாகப் பூமியிலிருந்து வெட்டியெடுக்கப் படுவதாகத் தெரியவில்லை, ஆனால் வைப்புத் துருசு மிகுதியாக உண்டு, இதற்கு மயில் துத்தம் என்று ஒரு பெயரும் உண்டு, இதில் கெந்தகமும், செம்பும் சேர்ந்திருக்கும், சாதாரணமாய் எல்லா மருந்து கடைகளிலும் கிடைக்கும், கடையில் விற்கும் துருசு நீல இரத்தினக்கல் போலவே மிக்க நீலமாயும், கடினமான கட்டிகளாயும், துவர்ப்பும், வெகுட்டலுமுடையதாயுமிருக்கும், பொடி செய்ய பச்சை நிறமாகும், தண்ணீரில் கரைக்க நீலநிறமாயிருக்கும், மருந்துகளுக்கு வேண்டிய துருசு துப்புரவாயும், இருண்ட நீல நிறமாயும் பெருந்துண்டுகளாகவும் இருக்கும், ஆனால் அவற்றின் மேல் வெண் பச்சை அல்லது வெண்ணிறமான தூள் பற்றுமல் இருக்க வேண்டும், நமது நாட்டில் செம்பு மணற் கட்டிகளைப் பொடித்து தண்ணீர் நிறம்பிய மண் பாத்திரங்களில் போட்டு வடிகட்டிப் பிறகு திரண்ட கட்டிகளாகத் தயாரிக்கப்படும், துருசு கரைத்த நீரில் இரும்பு அல்லது துத்தநாகத்தைப் போட்டு வைக்க அதன் மேலே செம்பு படிந்து சிவப்பாயிருக்கும், துருசு பெருமளவில் மிக்க விஷத்தன்மையது, செம்பு பாத்திரங்களில் சமைத்தால் உணவுகளில் களிம்பேறி உடம்புக்கு விஷமேறும், மருந்து முறையில் போதுமான அளவு கொடுக்க வாந்தியை யுண்டு பண்ணும், மேற்பூச்சு மருந்தாக உபயோகித்தால் சதையை அரிக்கும், இதைத் தண்ணீரில் கரைத்துப் புண்கழுவு நீராகவும், கண்ணுக்குத் தீட்டவும் உபயோகிக்கலாம், இதைப் பன்றி நெய்யோடு கலந்து படர் தாமரைக்கும், சரும நோய்களுக்கும் மேலுக்குத் தடவலாம், இரத்த வொழுக்கை நிறுத்தும், அபினி, ஊமத்தை, எட்டிக்கொட்டை, நாபி, பாஷாணம் இவைகளின் விஷத்தை வெளிக்குக் கொண்டுவர இதன் தூளைக் கொடுப்பதுண்டு, அதன் பிறகு வாந்தியை நிறுத்த முட்டையின் வெண்கருவைக் கொடுக்கலாம்.

துருசினின்று நமது நாட்டுத் தமிழ் வைத்தியர்கள் தாமிரம் எடுத்துப் பற்பம் செய்வதுண்டு, ஆனால் அவர்கள் கையாண்டு வந்த துருசு தற்காலம் கடையில் விற்கும் துருசல்ல, சித்தர்கள் முறைப்படி செம்புத் தொட்டிகளில் புளித்த தயிர் அல்லது வேறு புளிக்க வைத்த சரக்குகளைப் போட்டு வைத்துப் பிறகு செம்பில் களிம்பேறியவுடன் அவைகளைக் கட்டிகளாக எடுத்துக் காய வைத்து உபயோகப்படுத்துவது, கடையில் விற்கும் துருசில் மேனாட்டு முறைப்படி கந்தகக் கலப்புண்டு, ஆனால் தமிழ் வைத்தியத்தில் சொல்லியிருக்கும் துருசுக்கு, கந்தகக் கலப்புக் கிடையாது, இதுதான் வித்தியாசம், ஆகவே தமிழ் மருந்து செய்யும் காலத்தில் தமிழ் வைப்பு முறையாகத் தயாரித்த துருசே உபயோகப்படுமே யொழிய கடைத் துருசு பயன் படாதென்பது தெளிவாக அறிய வேண்டும், ஆகவே பண்டைக் காலத்திற்கு பிறகு தமிழ் மருந்து செய்வதற்கு சீனத்துருசே உபயோகித்து வந்ததாகத் தெரிகிறது, ஏனெனில் சீனத்துருசு தமிழ் வைப்பு முறையைப் பற்றியதால் மருந்துகளிலெல்லாம் சீனச்சரக்கே மிகுதியாக உபயோகப்படுத்தி வந்ததை நூன் முறையாலறியலாம்.

இது ஒரு சூட்சமாகிய சரக்கு, வைத்தியத்தில் எப்பேர்ப்பட்ட வியாதிகளோடும் போர் செய்து வெல்லத்தக்க மகாயோகம் பொருந்தியதும், மிகச்சுத்தமும் வீரத்தன்மையும் பொருந்தியதும் நல்ல இயல்பினையும் உடையது.

சித்தர் முறைப்படி இத்துருசினின்றே துருசு செந்தூரம், துருசு சுண்ணம் செய்து

வந்ததாகத் தெரிகிறது, இதைச் சுண்ணம் பண்ணுவது மிக்க அரிது, ஏனெனில் " துருசு சுண்ணமானால் சோதிக்க எட்டரை மாற்று " என்ற பழமொழியும் உண்டு, ஆகவே இச் சுண்ணம்தான் வாதத்திற்கு மிக்க உபயோகமான சரக்கென்று ஆன்றோர் வாக்கு, இத்தகைய துருசுக்குத்தான் தற்காலம் வங்காளப் பச்சையென்று சொல்வதுண்டு, இத்துருசும் வைத்தியர்கள் உள்ளுக்குக் கொடுப்பதில்லை, ஆனால் புண் புரைகளுக்கு மேற்றூரவு மருந்தாக உபயோகிப்பார்கள், தற்காலம் நவச்சாரத்தோடு சேர்த்து இதைப் பச்சை சாயம் தயாரிக்கவும், உபயோகப்படுத்துவார்கள், சித்தர் நூல்களில் துருசுப்போக்கைப் பற்றி அனேகமாய்ச் சொல்லியுள்ளார்கள், துருசினால் சூதம் கட்டும், வாதத்திற்கு இதுவே சிவன், பாய்கிறதும், பறக்கிறதும் இதனால்தான், rust of copper, subacetate of copper, verdigris. It is not known to occur in nature, but it is largely made. The blue vitriol now procurable in all bazaars for sale is only copper sulphate, containing copper and sulphur, *it appears in crystalline masses of* an elegant sapphire blue colour, hard, compact and semi transparent, taste astringent but nausious, when powdered, it appears green, dissolved in water, it assumes a blue colour. The selected kinds used in medicine are big pieces of dark blue colour, *semi-transparent* but should be without any light green or whitish powder adherent on the surface. In S. india it is made from copper ore by pulverising the ore which is then tnrown into earthern vessel fille d with water and after filteration the crystals formed are collected. Iron or zinc piece introduced into its solution will be found with a coating of copper. In large doses it is an irritant poison, chronic poison may occur from the use of copper vessels in preparing food, in medicinal does sulphate of copper is astringent and in sufficient quantity emetic, externally it is escharotic and is also used in solution as a lotion or collyrium for the eyes mixed with lard it is found to be a useful application in ringworm and other cutaneous affections, stops bleeding, used as an emetic for eliminating poisons from the system due to the poisoning of opium, datura nuxvomica aconite, arsenic etc and vomitting so caused is then arrested by administering the albumen or white of an egg.

Tamil Vaidyans of S. India used to prepare calcined white powder from verdigris and it should be remembered that the one used by them is quite different from what is sold and procurable in bazaars. According to Siddhar's Science, it is prepared by filling sour curd or formented acid substance in copper tubs, when rust of copper of a beautiful bluish green colour is found to be formed after sometime, from the corrosion of copper by the acid of the fermented substances. It is then taken out, dried and kept for use and it is this acetate of copper that could be taken as true verdigris and not the one sold in bazaar which is only a copper sulphate prepared and imported from Europe. So, Tamil medicines prepared with the acetate of copper *alone* will be found useful but not the one containing sulphur. It will be invariably found that after Tamil Medicine had fallen into disuse for want of encourgement, the subsequent practitioners were fora long time using only Chinese drugs, the preparations of which *are considered akin to those of Siddha system.*

It is with the aid of this verdigris(acetate of copper) that Tamil practitioners were preparing oxides, red oxides, carbonates etc. according to the process contemplated *in Siddhar's Science. It is said that it is* almost an impossible task now a days to prepare especially carbonate from this verdigris for it goes to help greatly in transmulation of metals. There is also a proverb to say "If verdigiris is converted into a carbonate (சுண்ணம்) transmulation of gold will be of 8½ matru (refined gold) to test". So, this powder will be of great use in Alchemy.

Even verdigris or sub acetate of copper (வங்காளபச்சை) now procurable is never used internally by internally by Vaidyans, but as detergent and stimulating applications for ill conditioned ulcers. It is used in dyeing and like-wise in preparation of colours. Chiefly excellent blues with the assistance of sal ammoniac. Volumes are

written in Siddhar's science on the use this Turusa (verdigris).

NOTE:—Hindu practitioners place much reliance on some of their rudely prepared salts of copper which for the most part are obtained by the action of tamarind, lime or vegetable acid juice on metallic copper (Waring).

துருசு, கந்தகம் சேர்ந்த செம்புக் களிம்பு, இது தான் ஆங்கிலேய முறைப்படி கந்தகத் திராவகத்தையும், செம்பையும் சேர்த்து கொதிக்கவைப்பதினால் ஏற்பட்ட துத்தம். இதற்கும் மயில் துத்தம் என்று பெயர், இதுதான் கடைகளில் தற்காலத்தில் ஏராளமாய்க் கிடைக்கக்கூடியது; இதன் குணத்தைப் பற்றி தமிழ் வைத்தியத்தில் ஒன்றும் கூறப்பட வில்லை, ஆயினும் இங்கிலீஷ் வைத்தியப்படி இதுவும் அநேக நோய்களுக்கு உபயோகப்படுவதாகக் கூறப்பட்டுள்ளது.

இது வலியுறுத்தி துவர்ப்பு, வாந்தினி, பெருமளவில் விஷத்தன்மையது, இது சிறிது காரமுள்ளது, இரத்தப்போக்கை நிறுத்தக் கூடியது, தண்ணீரில் கரைந்தது சுறுசுறுப்பை புண்டாக்கும்; பக்குவமான புண்களுக்கு இதைத் தடவலாம், அன்றியும் இது கிராணி, அதிசாரம் இவைகளுக்கு மிகச் சிறந்தது, பேயாட்டம், காக்கை வலி சூதக சன்னி இவைகளைக் குணப்படுத்துவதற்கு உபயோகமானது, இதைத் தண்ணீரில் கரைத்து வெள்ளை, வெட்டையொழுக்கு கண் வலி, சரும நோய் முதலானவைகளுக்கு மேலுக்கு உபயோகப்படுத்தலாம், சொற்ப விரணங்கள், இரத்தப் போக்கு, குழந்தை வாய்ப்புண், வெந்த விரணங்கள், எழுச்சிப் புண், கண்ணெழுச்சி இவைகளுக்கும் மேற்பூச்சு மருந்தாகக் கொள்ளலாம், சுறுசுறுப்பைத்தரவும் வாந்தியை யுண்டாக்கவும் இதைத் தகுந்த அளவில் கொடுக்க வேண்டும், கண்ணுக்கிடவும் ஊசிக்குத்துவதிலும் அப்படியே, sulphate of copper Cu $So_4$ cupri sulphus. It is obtained by heating sulphuric acid and copper together and then dissolving the product in hot water and then evaporating until crystalization takes place.

Properties: Tonic, astringent, emetic, in large doses an irritant poison. Locally applied in substance to a denuded or granulating surface, mildly caustic, styplic and in solution stimulent.

Therapeutiuses: In chronic dysentery and diarrhoea it is a remedy of great value, in chorea, epilepsy and obstinate hysteria. it has been found useful. Locally it has been applied in solution in gonorrhoea, leucorrhoea, purulent opthalmia, chronic skin diseases, weak, irritable and indolent ulcerations, superficial hemorrhage and in substance to calcrum oris apathous, ulcerations, exuberant granulations and granular conjuntivities. In moderate does it is a tonic and astringent and an emetic. It is also used as a collyrium for the eyes and also in injection.

NOTE: According to Ayurveda native sulphide of iron (kasisa) is indigenous to India and has been used in medicine from a long time. It is said that it consists of two varieties—green and yellow—of which the latter is evidently sulphate of iron covered with the basic sulphate of the sesquioxide from absorbtion of oxygen. They did not know sulphate of iron as an iron compound. It is neither prescribed nor used in combination with iron like pyrites and iron rust. It is seldom used internally.

**துருசு,** நீல நிறம், blue colour; 2. செவ்வகத்தி, red species of sesban — Coronilla grandiflora.

**துருசுகாரம்,** பொரிகாரம், borax — Sodae biboras.

**துருசுக்கல்,** மயில் துத்தம், blue vitriol see துருசு.

**துருசுக்காதி,** தலைச்சன் குழந்தை மண்டையோட்டினின்று செய்யப்படும் ஓர் அண்டச் சுண்ணம், இது துருசு மருந்துக்கு உபயோகமாகும், a kind of carbonate prepared with the aid of the skull of the first born child. It is said to be useful for preparing salts from verdigris.

**துருசுக்குரு,** நவாச்சாரம், sal ammoniac, நீலிச் சத்து.

**துருசுக்குத் தாய்,** கெந்தகம், sulphur.

**துருசுக்குத்தேவி,** மருக்களஞ்செடி, common emelic nut — Randia dumetorum.

**துருசுக்குப்புருடன்,** அயம், iron a friendly drug to verdigris.

**துருசு சத்துரு,** துருசை மடிக்கும் அல்லது கொல்லும் சரக்குகள்.

**துருசு சுண்ணம்,** நிலாவிரை இலையை சிறு நீர் விட்டு துவைத்துப் பிசறி, பிறகு சாறு பிழிந்து வைத்துக்கொண்டு, அதன் பின் ஒரு பெருங்கட்டி துருசு எடுத்து அதற்கு சீனக்காரத்தை நீரில் அரைத்து, கவசம் செய்து ஒரு கோப்பையில் இட்டு துருசு கவசம் முழுதும்படி ஷெ சாற்றை விட்டு 7 நாள் வெயிலில்வைக்க நீர் சுண்டியபிறகு துருசை எடுத்து அதற்கு வெண்ணெயைக் கனமாய்ப் பூசி கோப்பையை நன்றாய்த் துடைத்து அதில் கட்டியை வைத்து 6 நாள் வெயிலில் வைக்க அந்த துருசு சுண்ணமாகும்.

இச் சுண்ணம் சாறு வராத்தழை, இலையில் இடசாறு வரும், உதாரணமாக சிறிது சுண்ணமெடுத்து சப்பாத்திப்பூவில் நரம்பை எடுத்துவிட்டு அதில் சுண்ணத்தை வைத்துப் பிழிய எளிதில் சாறுவரும், இது மாதிரியே விராலியிலை பீவைப்பிலை இவைகளிலும் வரும், மேலும் இச்சாற்றை 1 பலம் இலிங்கத் திற்குச் சுருக்குக் கொடுக்க லிங்கம் மணியாகக் கட்டும், இந்த லிங்கக்கட்டு சீதளம், சன்னி, சுரம் இவைகளுக்கு இழைத்துக் கொடுக்கலாம், இத் துருசு சுண்ணம் இறந்த பிணத்தையும் எழுப்பும் வல்லமை வாய்ந்தது, ஆகவே இது மிக்க வீரத் தன்மை பொருந்தியது.

**துருசுசெந்தூரம்,** துருசைக்கொண்டு செய்யும் செந்தூரம், calcined red oxide of verdigris.

**துருசுசெந்தூரி,** துருசைச் செந்தூரமாக்கும் சரக்குகள், drugs that will convert verdigris into red oxide. (See page 909.)

**துருசுச்செம்பு,** துருசினின்று எடுக்கும் செம்பு இது சுத்தமான செம்பு என்று கருதப்படும், copper derived from verdigris. It is said to be pure copper.

**துருசுத்தாம்பிரம்,** துருசுச்செம்பு, which see.

**துருசுத்திராவகம்,** துருசினின்று தயாரிக்கு மோர்வகைத் திராவகம், இது வாதமுறைக்குபயோகப்படும், an acid prepared from verdigris which is said to be useful in Alchemy.

**துருசுநீர்,** துருசுகரைந்தநீர், water in which verdigris is dissolved, solution of blue vitriol.

**துருசுநீறு,** துருசுபற்பம், calcined oxide of verdigris.

**துருசுபச்சைப்பாஷாணம்,** see துருசுபாஷாணம்.

**துருசு பாஷாணம்,** இலிங்கம், நாகம், ரசம், பச்சை, வெள்ளை, தாரம், வீரம், கெவுரி சமமாய்க் கூட்டிப் பொடி செய்து, செம்பு பாத்திரத்திலிட்டு, மணலிட்டு, 4 சாமம் எரிந்து ஆறவிட்டுப் பார்க்க வெண்மைக் கட்டியாயிருக்கும், இதுவே துருசு பாஷாணம், cinnabar, zinc, mercury, blue vitriol, white arsenic, orpiment per chloride of mercury, yellow oxide of arsenic all in equal parts must be powdered and put into a copper crucible, sealed or luted and burnt over a sand-bath for 12 hours. After cooling open it. White substance will be found. This is Thurusu pazhanam.

**துருசுமித்துரு,** துருசுக்கு மித்துரு சரக்குகள், friendly drugs of verdigris, eg. இரும்பு, iron.

**துருசுமெழுகு,** அண்டிமுடியோடு துருசையும் சேர்த்துக் கொண்டு தயாரிக்கப்பட்ட ஓர் வித மெழுகு, துருசுக்காதி, a wax like preparation made with verdigris and the human skull as chief ingredients. This is useful in Alchemy.

**துருசுமேற்குரு,** நவாச்சாரம், salammoniac, see துருசுக்குரு.

**துருசுவெண்மை,** துருசுபற்பம், an oxide or a white powder prepared from verdigris by process of calcination; 2. துருசுச் சுண்ணம், a carbonate of verdigris prepared by calcining it. The process is a secret one known to alchemists.

**துருசுவெள்ளை,** 4 விடை துருசை பேய்க் கொம்மட்டி காயில் வைத்து அந்த தோலினால் மூடிச்சீலை செய்து 1-நாழிகை எரிக்க வெள்ளையாகும், துருசு வெளுப்பி, put 4 Pw of verdigris in the fruit of bitter or devil collycinth, close it and lute it and expose it over the fire of a oven for 24 min. The verdigris will become white.

**துருஞ்சிபீன்,** see துரஞ்சிபீன்.

**துருஞ்சில்,** see துரிஞ்சில்.

**துருடம்,** திரிகடுகு, சுக்கு, மிளகு, திப்பிலி, the three stimulents viz. dried ginger, black pepper and long pepper.

**துருஷம்,** Cymanche tonsillaries.

**துருட்டி,** ஏலம், cardamon.

**துருணம்,** தேள், scorpion; 2. வண்டு, bettle.

**துருணி,** பெண்ணுமை, female turtle or tortoise; 2. தேள், scorpion.

**துருதத்துவம்,** உருக்குகை, melting.

**துருதி,** சிற்றேலம், small cardamon; 2. நீராசி கட்டுதல், any solid which dissolves and then crystalises; 3. see வைக்கிராந்தம்

**துருதிதம்,** வெட்டுண்ணல், being chopped or broken.

**துருதிபீசம்,** ஓர்வகைச் சேம்பு, a kind of Indian kales — Arum coloa casia.

**துருதுகம்,** வலியோடு கூடிய சூதகச்சிக்கல், difficult and painful menstruation — Dysmenorrhoea.

**துருத்தி,** காற்றுப்பை, pair of bellowes; 2. ஊதும் தோல்பை, bag pipe to sound with; 3. புட்டி, bottle; 4. உடம்பு, figuratively used for human body especially trunk.

**துருத்தியூதல்,** துருத்தியை அமுக்குதல், blowing the bellous.

**துருத்தூரம்,** ஊமத்தை, datura — Datura fastuosa.

**துருத்தூலம்,** see துருக்கத்தாவம்.

**துருநாதிதும்பை,** சிறுதும்பை, small leucas — Leucas genus.

**துருபவருணி,** காட்டாமணக்கு, purging nut — Jatropha curcus.

**துருபாதி,** பாதம் வெளிதிரும்பிய பெண், female with feet turned out wards — Splay footed woman.

**துருப்பிடித்தல்,** களிம்பு பிடித்தல், becoming or getting rusty being covered with rust.

**துருப்புவிதை.**

**துருமசிரேட்டம்,** பனைமரம், palmyra tree.

**துருமனகம்,** முள், thorn.

**துருமம்,** குங்கும மரம், English saffron; 2. மரப்பொது, tree in common.

**துருமம்,** பூண்டின் கடைப்பெயர், plants second term as:

1. கபித்துருமம், அரத்தை, Alpinia. galanga
2. பூதத்துருமம், பெரிய நறுவிலி, large sebeston — Cordia oblique.
3. வச்சிரத்துருமம், திருகு கள்ளி, twisted purge — Euphorbia tirucalli.
4. போதித்துருமம், அரசமரம், peepal tree — Ficus religiosa.
5. மாதவத்துருமம், மாங்காய், mango tree — Mangifera indica.
6. இமத்துருமம், மலைவேம்பு, hill neem— Melia azadirachta.
7. அப்பிரியத்துருமம், வறட்பூலா, white poolah — Securinesa bucopurus.

**துருமவருணி,** see துருபவருணி.

**துருமவியாதி,** கொம்பரக்கு, shellac — seed lac melted and formed into Thin cakes.

**துருமேகம்,** see துருமசிரேட்டம்.

**துருமேகம்போக்கி.**

**துருமேசுவர்,** see துருமசிரேட்டம்.

**துருமோத்பலம்,** குரா, common bottle flower tree — Webera corymbrsa; 2. வெண்ணுங்கு, maple leaved lance wood — Pterospermum accrifolium.

**துருமோற்பலம்,** காட்டிலவு, yellow silk cotton — Cochlospermum gossypium. It is also known as கோங்கு.

**துரும்பாய்ப்போதல்,** emaciated as in a disease.

**துரும்பிபிழிதல்,**

**துரும்பு,** கற்றாழை, aloe — Aloevera officinialis; 2. வெள்ளி, silver; 3. திரணம், straw.

**துரும்புநீர்,** கற்றாழைநீர், juice of aloes.

**துரும்பொன்,** இரும்பு, iron.

**துருவகலை,** சந்திர கலை, அதாவது இடது நாசியில் ஓடும் பிராண வாயு, the vital air 'prana' passing through the left nostil

**துருவசித்தி**, ஒருவர் மூலாமாய் நோய் குணப்படல், curing of a disease through some one.

**துருவடிப்புண்**, வாய்திறந்த விப்புருதிக் கட்டி, abscess which has burst.

**துருவணம்**
**துருவண்ணம்** } வெள்ளி, silver; 2. துரு நிறம், rusty colour.

**துருவதம்**, முனை சம்பந்தம், the act of giving polarity to a body polarisation.

**துருவத்தி**, fire work plant — Balanites Roxburghii.

**துருவத்துவம்**, முனையைக் காட்டுங்குணம் property of pointing towards the poles — Polarity.

**துருவம்**, அசையா நிலை, motionless state; 2. see திராய்; 3. துருவ நட்சத்திரம், the north pole star.

**துருவன்**, தகரம், tin.

**துருவா**, சிற்றேலம், small cardamon.

**துருவாடு**, மலையாடு, an animal of goat family found in the hills; 2. செம்மறியாடு, fleecy sheep — Ibex.

**துருவாடி**
**துருவாட்டி** } see துருவா.

**துருவாட்டேறு**, ஆண் செம்மறியாடு, ram.

**துருவாதி**, காட்டாமணக்கு, croton seed plant — Croton polyandrum.

**துருவாதினி**, சிமிக்கிமல்லிகை, blue passion flower — Passiflora buonapastee.

**துருவானை**, பூனை, cat.

**துருவுதல்**, சுரண்டுதல், grating; 2. திருகுதல், scaping as kernel of cocoanut.

**துருவேர்ப்பலம்**, கோங்கிலவு, see துருமோதற்பலம்.

**துருவை**, செம்மறியாடு, see துருவாடு.

**துருளக்கம்**, குந்திரிக்கம், olibanum — Vateria indica.

**துருனுதிதும்பை**, see துருநாதிதும்பை.

**துரூவம்**, ஆக்கினை, one of the six psychic centres of the body referring to cerebral region.

**துரேணம்**, காக்கை, crow.

**துரேந்திரியம்**, பலவீனமான புலன், weak or feeble organ or sense.

**துரைச்சி**, உலோக நிமிளை, iron pyrites; 2. காசிச்சாரம், a prepared salt as per process of Tamil medicine.

**துரைபூபதி**, மாணிக்கம், a valuable ruby.

**துரைமுகந்தம்**, சேரான் கொட்டை, dhoby's nut — Semecarpus anacardium.

**துரையாள்**, see துரிஞ்சில்.

**துரைவாழை**, ஒரு வகை வாழை, Dacca banna—Musa sapicutum (Dacco).

**துரோணகாகம்**, ஓர்வகை காகம், ravan.

**துரோணகை**, வெண்ணொச்சி, five leaved chaste tree — Vitex negundo.

**துரோணபுட்பி**, தும்பை, Leucas linifolia.

**துரோணபுட்பி**, காசித்தும்பை, flower toombay — Leucas linifolia alias Phlomis linifolia

**துரோணம்**, தும்பைச் செடி, leucas plant, 2. இரண்டு மரக்கால் அல்லது பதக்கு, two marakals — four madras measures; 3. நான்கு ஆடகங்கொண்ட 32 சேர் எடை, in the case of liquid 32 seers weight; 4. 16 சேர் அளவு, a measure of 16 seers; 5. எண் காற்பூச்சி, spider; 6. காக்கை, crow; 7. கவிழ்தும்பை, slooping leucas — Nopata indica alias Leucas procumbens.

**துரோணிகா**, கொட்டைமுத்து, small castor seed — Ricinus communis.

**துரோணிகை**, ஆவிரை, tanners senna — Cassia auriculata alias senna auriculata.

**துரோணிதம்**, தாழை, fragrant screw pine — Pandanas odortissimus.

**துரோணிதலம்**, see துரோணிதம்.

**துரோணிதவெலும்பு,** பழுவெலும்பு, collar bone — Clavicle.

**துரோணியாமயம்,** ஓர் நோய், a disease.

**துரோணிலவணம்,** துரோணியென்ற ஊரின் உப்பு, salt coming from Droni.

**துரோநாசம்,** நோயுண்டாக்கும் பேய், a devil that causes disease.

**துரோபதைக்கூந்தல்,** ஓர் பூடு, drowpaths hair — Porana racemosa alias Dinetus racemosus.

**துர்க்கந்தசுவேதம்,** கற்றுழை நாற்றம், acid fetid sweating.

**துர்க்கந்தம்,** கெட்ட நாற்றம், bad smell, stink, offensive stench; 2. அழுகிய நாற்றம், rotten smell; 3 வெங்காயம், onion; 4. நாற்றவுப்பு, sochal salt.

**துர்க்கிரகம்,** நோயையுண்டாக்கும் பேய், a demon causing illness; 2. வலிப்பு, spasm; 3. குரக்கை, cramps.

**துர்க்கிரேவல்சின்னி,** துர்க்கி தேசத்திலிருந்து வரும் ரேவல்சின்னி, rhubarb imported from Turkey —Rheum acuminatum alias R. emodi.

**துர்சசரம்,** செரியாமை, indigestion.

**துர்ச்சாதனை,** கெட்டபழக்கம், malpractice.

**துர்திருஷ்டி,** கெட்ட பார்வை, looking at with evil eyes.

**துர்துருமம்,** ஈரவெங்காயம், ( green ) onion,

**துர்த்தூரகிகம்,** ஊமத்தை, datura — Datura fastuosa.

**துர்த்தூரம்,** see துர்த்தூரகிகம்.

**துர்நரேந்திரன்,** சூனியக்காரன், a miserable sorcerer or conjurer.

**துர்நாமம்,** மூலரோகம், piles, hemorrhoids.

**துர்நாற்றம்,** கெட்ட நாற்றம், see துர்க்கந்தம்.

**துர்நீர்,** உடம்பின் கெட்டநீர், morbid water.

**துர்நீர்க்கட்டி,** துர்நீரால் ஏற்பட்ட சிலந்தி, an abscess caused by morbid water in the system.

**துர்ப்பரிசம்,** சிறுகாஞ்சொறி, small climbing nettle — Tragia canna bina.

**துர்ப்பலதேகி,** பலஹீனமான உடலையுடையவன், a person with weak body.

**துர்ப்பலம்,** பலவீனம், weakness; 2. நரம்புத் தளர்ச்சி, debility; 3. கிழந்தனத்தாலேற்படும் பலக்குறைவு, weakness of mind and body due to old age.

**துர்ப்பலம்,** மெலிவு, weakness; 2 இளைப்பு, emaciation; 3. மெலிவுற்றவன், weakling; 4. பேடி, eunuch, important man.

**துர்பலாக்கினி,** செரியாமை, having a weak digestion.

**துர்ப்பாங்கம்,** முறிந்தவுறுப்பு, broken or loosened organ.

**துர்மரணம்,** அபாயமரணம், accidental death; 2. அநியாய மரணம், suicidal or homicidal death; 3. கொடிய மரணம், violent death, unnatural death.

**துர்மலம்,** மும்மலம், ஆணவம், மாயை, காமியம், the three evil passions inherent in man — egoism, delusion and lust: 2. மலம், faeces.

**துர்மனது,** கெட்டமனது, pervercity of mind.

**துர்மாமிசம்,** நாற்றமடிக்கும் புலால், rotten flesh; 2. அதிமாமிசம், proud flesh in wounds and ulcers hypertrophy c. f. துன்மாமிசம்.

**துர்மோகம்,** சிறுகத்திரி, hedge caper shrub — Cupparis sepiaria.

**துர்லபம்,** கஸ்தூரி மஞ்சள், round zedoary — Curcuma zerum bet.

**துர்வர்ணகம்,** see துர்வர்ணம்.

**துர்வர்ணம்,** வெள்ளி, silver; 2. நோய்களின் கெட்ட குறிகளைக் காட்டும் பலவிதமான நிறங்கள், presentation of different colours in the body by the patient according to the nature of disease which is considered as a bad symptom.

**துர்வர்ணம்,** விளாம்பட்டை, fragrant bark of wood apple tree — Feronia elephantum

**துர்வாந்தி,** கெட்டவாந்தி, bad vomitting.

**துர்வாலம்,** வழுக்கைத்தலை, bald head.

**துர்விபாகம்,** பூர்வகருமம், an evil consequence or result especially of actions in former births matured by Karma.

**துலகம்,** உலோகத்திராவகம், acid acting on metals.

**துலக்கம்,** விளக்கம், clearness as கண் துலக்கம், clearness of vision; 2. பிரகாசம், brilliancy, radiation.

**துலக்கல்,** தேய்த்தல், rubbing; 2. சுத்தி செய்தல், cleansing as பல்துலக்கல், cleaning the teeth; 3. விளக்கல், causing to shine.

**துலக்கினி,** பிண்டவுப்பு செயநீர், an alkaline fluid prepared from the salt extracted from from a foetus by a secret process.

**துலத்தாது,** நிலப்பனை, ground palm — Curculigo orchioides; 2. கனமானதாது, any heavy mineral.

**துலபம்,** see துப்பிரசம்.

**துலம்,** கோரைப்புல், koray grass — sedge grass; 2. நீர் முள்ளி, water thistle—Astercantha longifolia, see துருத்தூலம், 3. பருத்தி, cotton — Gossypium herbaceum; 4. கனம், heaviness, 5. நிறை, weight.

**துலவம்,** பஞ்சுப்பொது, cotton in common.

**துலா,** பட்டுப்பூச்சிமரம், white mulberry — Morus indica.

**துலாகீதசெயநீர்,** வேகாதுப்பு செய நீர், see துலாக்கினி.

**துலாதடம்,** சவுளக மரம், see உரோம விருட்சம்.

**துலாநி,** see துலிநி.

**துலாந்தரம்,** (ஸ்தூல + அந்தரம்) பெரிய குடல், large intestine.

**துலாந்திரம்,** தாளகம, கெந்தி முதலியவை களை சட்டியிலிருக்கும் பொருளில் படாமல் தூக்கிக்கட்டி எரிப்பது, anything suspended over the contents of a pot while in heating or boiling. It is also termed தோளந்திரம், டோலாந்திரம்.

**துலாப்படிகம்,** பனிதாங்கி, an efflorescent salt deposited on fuller's earth. c.f பூனீறு.

**துலாம்,** நூறு பலம், அல்லது 80 — ரூபாய் எடை, weight of 100 palams (25 pounds avir).

**துலாம்,** ஓர் இராசி.

**துலாம்பரம்,** வெளிச்சம், light; 2. கண் விளக்கம், clearness of vision.

**துலாயந்திரம்,** துலாந்திரம்.

**துலி,** பெண்ணுமை, female turtle or tortoise.

**துலிநி,** இலவமரம், slik cotton tree—Bombax malabaricum.

**துலியாசனம்,** செம்முருங்கை, red Indian laburnum — Cassia marginata.

**துலுக்கக் கற்றாழை,** துருக்கி தேசத்திய கற்றாழை, Turkey aloe — Aloe socotrina alias A. perfoliata.

**துலுக்கப்பசளை,** துருக்கிய தேசத்துப் பசளை Turkish spinach — Spinacia genus; 2. கோழிக்கீரை, Indian purslane — Portulaca obracea.

**துலுக்கப்பயறு,** பிச்சிப்பயறு, இதை கஷாயமிட்டுக் கொடுக்க பித்த உபரி, வாதக்கம் போம், உடம்பில் வலிவேறி தாதுவிருத்தியுண்டாகும், wild pulse, saffron gram — Phaseolus aconitifolius, Turkish gram — Phaseolus trilobus. Asdecoction it removes beliousness and phlegmatic tendencies and excess and lends strength and promotes semen in the system.

**துலுக்கப் பூ,** துலுக்கமல்லிகை, இதன் பூ, மஞ்சள், சமூலம் கெட்ட நாற்றம் வீசும் ஆயினும் இரத்தத்தைச் சுத்தி செய்யும் குணம் வாய்ந்தது, கண்ணோய்க்கும் உபயோகப்படும், Turk jasmine, yellow jasmine — Tagetes genus. Its flower is yellow, the whole plant has fetid smell, medicinally the flowers purify the blood and are remedy for eye diseases.

**துலுக்கமல்லிகை**, see துலுக்கப் பூ.

**துலுக்கவரை**, ஒரு வகை அவரை, a kind of beans.

**துலுக்கவேம்பு**, see துருக்கவேம்பு.

**துலுக்கன்மொட்டை**, சதுரகிரிமலையின் மத்தியில் இராமதேவர் வசித்திருந்த பெருங்காடு, the dense forest in the centre of Saduragiri Hills where Yacob alias Ramadevar was living.

**துலுக்குக்கற்றாழை**, மக்கிக்கற்றாழை, scarlet flowered aloe — Aloe succotriana.

**துலுக்கு செவ்வந்தி**, துருக்கி தேசத்திய சாமந்தி, Turkish chamomile — Tagetes erecta.

**துலேயம்**, நீர்ச்சுண்டி, water soonday — Neptunia genus, water mimosa — Mimosa virgata.

**துலை**, நூறு பலம் கொண்டநிறை, 100 palams weight.

**துலைபடுதல்**, நோயினின்று நீங்குதல், being freed from a disease or an attack of disease.

**துலைமாந்தம்**, குழந்தைகள் அதிகமாக வாந்தி பண்ணுமோர் மாந்தநோய், a form of indigestion in children marked by excess of vomitting.

**துலையாமாந்தம்**, எளிதில் தீராத மாந்த நோய் a chronic indigestion in children not easily cured or recoverable.

**துலோபம்**, கருஞ்சுண்டி, black sensitive plant — Mimosa rubicaulis.

**துலகண்டகம்**, செவ்விறகு, red wood, red fuel.

**துல்லபச்சம்**, பிடங்குநாறி, புறங்கைநாறி, கிருஷ்ணபாலை, இதன் குடிநீரால், பிலீகம், சுரம் சாந்தியாம், போதகநாறி.

**துல்லி**, ஏலம், cardamom.

**துல்லிபம்**, see தும்லிமை.

**துல்லிமை**, மேன்மை, superiority.

**துல்லியபக்கம்**, ஒத்த பக்கம், one side corresponding to the other.

**துல்லியபலம்**, சரிபலம், ஒரு பலத்திற்குச் சேர்க்கும் மற்றொரு பலம், one palam added to another equal in weight.

**துல்லியபானம்**, பலர் ஒன்று சேர்ந்து குடித்தல், drinking all together.

**துல்லியம்**, அப்பிரகம், mica, talc; 2. சுத்தம், purity; 3. ஒருமிப்பு, likeness.

**துல்லியரூபம்**, ஒரேமாதிரி வடிவம், one having the likeness of the other.

**துவகசம்**, உடம்பின் மயிர், hair on the body

**துவகஸ்திபூதம்**, தோலும் எலும்பும் மாதல், becoming bone and skin.

**துவகங்குரம்**,

**துவகந்திரியம்**, பரிசம், tactile sense.

**துவகம்**, சத்துநீர், serous fluid.

**துவகேலம்**, கொன்றைப்பட்டை; cassia bark, 2. ஏலம், cardamom.

**துவகை**, ஆவிரை, tanner's cassia.

**துவக்கல்**, கட்டல், binding, tying; 2. ஆரம்பித்தில், begining; 3. புலனடக்கல், engrossing the senses.

**துவக்கவிவரம்**, செவ்வலரிசி, aed coarse rice.

**துவக்கு**, உடம்பு, body; 2 தோல், skin of the body; 3. சம்பந்தம், attachment mental or physical 4. பட்டை, bark; 5. இலவங்கப் பட்டை, cinnamomum bark.

**துவக்குசலம்**, வியர்வை, sweat.

**துவக்குசாரம்**, மூங்கில், bamboo; 2. see துவக்குபத்திரிகம்; 3. பாளைபுடைச்சி, Indian trumpet flower — Bignonia indica.

**துவக்குசுகந்தம்**, கிச்சிலி, orange; 2. விளாமரத்தின்பட்டை, bark of wood-apple tree.

**துவக்கு சூனியதம்**, தோல் மரத்தல், திமிர், want of sensation in the skin

**துவக்குநோய்**, சருமவியாதி, skin disease; cutaneous affection.

**துவக்குரம்**, சில்லிகாதபம், an inflammatory disease of the throat accompanied by the formation of a false membrane — Diphtheria.

**துவக்குதோஷம்,** சருமநோய், skin disease, 2. குட்டம், leprosy.

**துவக்குபத்திரி,** பெரிய லவங்கப்பட்டை, large or cassia cinnamon bark — Laurus cassia.

**துவக்குபத்திரிகம்,** பெரிய லவங்கப்பட்டை அல்லது இலை, the bark or leaf of Laurus cassia.

**துவக்குபரிபுடனம்,** உடம்பில் தோலுரிதல் shedding of the skin in scales or sheets — Desquamation.

**துவக்குபலிதம்,** குட்டம், leprosy.

**துவக்குபாசம்,** தோலழற்சி, skin inflammation; 2. ஓர் நோய், the name of disease.

**துவசங்கட்டல்,**

**துவசஸ்தோமம்,** கழலை, dermoid cyst.

**துவசபங்கம்,** பெண் கலவிக்கு உதவாமற் போதல், the state or quality of being destitute of the power of sexual intercourse; impotence, fall of the male organ.

**துவசம்,** பெண்கலவி, sexual intercourse; 2. கள், toddy; 3. தோல், skin; 4. இலவங்கப்பட்டை, cinnamon bark — Cinnamomum Zeylanicum

**துவசோமம்,** சர்ம கழலை, dermoid.

**துவச்சபலம்,** உதிரிமாரி, which see.

**துவச்சிசாரம்,** மூங்கில், bamboo.

**துவச்சீரம்,** மரப்பட்டையினின்று வடியும் பால், milky juice oozing from bark; 2. மூங்கிலுப்பு, bamboo salt.

**துவட்சி,** பலவீனம், weakness; 2. வறட்சி dryness.

**துவட்சிகை,** கடுக்காய்ப்பிஞ்சு, tender or unmatured gallnut, black gallnut.

**துவட்டல்,** துவட்டற்கறி, broiled curry: 2. துடைத்தல், brushing off, wiping off; 3. துவட்டுதல். தண்ணீர் அற்றுப்போகும்படி சமைக்கும் ஓர் பாகம்.

**துவட்டிப்பிழிதல்,** வாதத்தினால் உடம்பு வலிகண்டு, பொறுக்க முடியாது துன்புறுத்தி, களைப்பு சோர்வு இவைகளுண்டாகும்படி செய்யுமோர் நிலைமை, a nervous or muscular pain extending through out the body characterised by abnormal fatigue with depression or vital forces, such a condition is generally axperienced in certain kinds of fever rheumatism etc.

**துவட்டுதல்,** தண்ணீர் மிகுதியாக சேர்க்காமல் சமைத்தல், cooking without adding water so as to remove the moisture in the curry; 2. ஈரம் போக்குதல், mobbing of the moisture.

**துவதியை,** கோரோசனை, bezoar.

**துவந்தசம்,** see தொந்தசம்

**துவந்தசிகிச்சை,** தொந்தசிகிச்சை, relative or allied treatment.

**துவந்தசிலந்தி,** இரண்டு கட்டிகள், two abscesses.

**துவந்தோஷம்,** இரட்டித்த தோஷம், அதாவது ஒரு தோஷத்தோடு மற்றொரு தோஷம் தொந்தப்பட்டு நிற்றல், (உ-ம்) வாதபித்தம் பித்த சிலேட்டுமம், வாத சிலேட்டுமம், doubling or two fold actions of humours in the system as enumerated above, commixture of the three humours.

**துவந்தநாடி,** உடம்பில் மூன்று நாடிகளுள் ஒன்றை ஒன்று பற்றி நிற்றல், in terming ling or combination of any two pulses indicating the two respective humours — The over lapping or compounding of any two pulses; 2. இரட்டித்த நாடி, combined pulse of two.

NOTE :— This should not be confounded with the bigeminal pulse in which two beats follow each other in rapid succession and each group of two is separated from the following by a longer interval.

**துவந்தம்,** எதிரிடைச் சொற்கள், a pair of opposites as hot and cold joy and sorrow and wet and dry; 2. இரட்டை, pair, couple — male and female; 3. ஓர்வித நோய், a species of disease; 4. இரண்டு வித கோளாறுகள், a complication of two disorders; 5. உடம்பில் இருவகை தோஷக் கலப்பு, a compound affection of two humours in the system.

**துவத்தவம்,** தொந்தம், combination; 2. புணர்ச்சி, copulation; 3. ஒன்றோடொன்று சேர்ந்திருப்பது, union; 4. இரண்டு, pair, couple.

**துவம்,** அசையாநிலை, fixedness, motion less state or condition.

**துவம்மிலம்,** இரும்பிலி, corrmandal ebony — Ferriola buxifolia alias Maba buxifolia.

**துவயம்,** இரட்டைத் தன்மை, two fold nature.

**துவயாக்கினி,** சித்திர மூலம், Ceylon head wort — Plumbago zeylanica.

**துவரகம்,** இது இந்தியாவின் மேற்குக் கடற்கரையோரங்களில் முளைக்கும் பூண்டு, இது தென்னிந்தியாவில் மலையாளத்திலும் கிடைக்கும், இதன் விதை மழை காலத்தில் முதிர்ந்ததாய்ப் பார்த்து சேகரித்து வைத்துக் கொண்டு, பிறகு வேண்டும் போது வேர்க்கடலைப் பருப்பைப்போல் காய வைத்து; மேல்தோல் களைந்ததன்பின் ஆலையில் கொடுத்து இடித்து இதினின்று எண்ணெய் எடுக்கப்படும், பிறகு அவ்வெண்ணெயைக் காய்ச்சி அதிலிருக்கும் ஈரக்கசிவு போகும்படி கொதிக்க வைத்து தாளியில் வைத்து ஒரு மண்டலம் காய்ந்த விரட்டிக் குப்பலுக்குள் பொதிக்து வைத்து எடுத்துக் குப்பியில் அடக்கம் செய்து, வேண்டும் போது நோயாளிக்கு பேதிக்கு கொடுத்த இரண்டு வாரங்கழித்து இரண்டு தோலா எடை இவ்வெண்ணெயை நல்லநாள் பார்த்துக் கொடுக்க, குட்டம், நீரிழிவுபோம், இப்படி ஒருமாதம் வரை உள்ளுக்கு காசுக்கட்டி கஷாயத்தில் சாப்பிடலாம், அன்றியும் இதை வெண்ணெய் அல்லது தேனில் 2 வாரம் கொள்ள காயகற்பம் போல் பாலியத்தை உண்டாக்கி அனேக வருஷ காலம் நீடித்திருக்கச் செய்யுமெனக் கருதப்படுகிறது, இதை குட்டத்திற்குச் சாப்பிடும்போது சால்முகரா எண்ணெய்க்குண்டான குணங்களையே காட்டும், இதன் சத்திற்குண்டான குணமும் அத்தகையதாகவே இருக்கும், காசுக்கட்டி துவர்ப்பாகவின் அதையே மேற்படி எண்ணெய்க்கு அநுபானமாகக் கொள்வதே சிறந்ததெனக் கொள்ளப்படும், Tuvaraka — Hydnocarpus wightiana. It is usually found grown on the sand tracts adjoining the western sea coast of India. The seeds when found riped in the rainy season are collected and preserved like the ground nut seed after drying and decordicating. The oil is extracted from this in a mill just like other oils and further boiled to eliminate moisture supposed to contain in it. It is then bottled or preserved in a jar under the heap of dried cowdung cakes for one mandalam i. e. 45 days and then taken for use. It is prescribed for patients suffering from leprosy and diabetes and two tolas of oil should be taken in a decoction of catechu having an astringent property Care should be taken to prepare the patient by giving him a purgative a fortnight before the medicine is given internally. The medicine has to be continued for a month and is usually given to patients for the above said diseases on an auspices day. It may also be given for a fortnight i. e. two weaks in honey or butter as the case may be. It is said to rejuvenate the system and prolong life The catechu decoction is always preferable being an astringent. The active principle of this oil is the same as that of chaulmoogra oil which is also prescribed for leprosy. See நீரடிமுத்து.

NOTE :— Although medicinal property of this oil is quite different from that of chaulmoogra oil, in physical characters and chemical constitution, yet both the oils have the potent virtue in cases of leprosy. It is doubted very much if this could prove an all round remedy and a radical cure for leprosy or diabetes. Some medicinal preparations out of minerals may have a different effect and cure to a certain extent may be assured.

**துவரங்கறி,** பருப்பு சேர்ந்த கறிவகை, preparations of curry mixed with dholl.

**துவரங்காய்,** துவரைச்செடியின் காய், green red gram; 2. மலைத்துவரங் காய், green pod of hill of dholl — Cajanus indicus ( bicolor ).

**துவரஞ்செடிவண்டு,** குருவண்டு, a beetle of the dholl plant.

**துவரம்,** துவர்ப்பு, astringency.

**துவரம்பருப்பு,** துவரையின் பருப்பு the tentil or pea of the plant leytisus; Dholl.

**துவரம்பருப்பு,** துவரைச் செடியின் காய் அல்லது விதை, இதினின்று பருப்பு எடுக்க வேண்டியதிருந்தால் துவரையைச் செம்மண்ணில் பிரட்டி எடுத்து தண்ணீர் விட்டு முளைகட்டி, பிறகு இரண்டொருதினம் காய வைத்து திருகைக் கல்லினால் உடைத்து உமியைப் போக்க வேண்டும், இதுதான் பருப்பு, இது எளிதில் சீரணமாகக் கூடியது இதில் மாச்சத்து, எண்ணெய்ச்சத்து, திராவகச்சத்து முதலிய சத்து வகையெல்லாம் அடங்கியுள்ளன, பலவினர்களுக்கு நல்லது, red gram. Cajan pea — Cajanus indicus seeds of. The following is process adopted in Indian houses for the peas out of the seeds. The seeds are collected in the evening and steeped in water for some time

stirring every now and then. Those floating are removed, good ones remain at the botton and don't float. The good ones are collected and rolled over by mixing with a mixture of red earth and water to give them colour. They are heaped up and strewn with ashes. They begin to germinate after twelve hours when they germinate, they are removed from the heap and dried in the sun for a few days till they are quite dry. Whenever required, they are ground in a light grinding stone to remove the husk. The pea, so separated is called dholl. It is easily digestible and so suitable for invalids and children. It contains starch, oil phosphoric acid, albuminoides etc.

NOTE :— It is regarded as hot and dry as it produces costiveness. It is useful for those on diet. The cooked dholl mixed with cooked rice and cow's ghee is very nutritious. One morsel of such food causes to build one morsel of flesh so says the stanza above. It is largely used to prepare soup ( ரசம் ) which is widely appreciated.

'தண்ணைக் குறிஞ்சித் தலத்தாடகிப் பிளப்பை
வண்ணசசுடரறருள் வைத்தாக்கி புண்ணற்
கடிக்குப்பசுவினறு மாச்சியத் தொடுண்ணிற்
பிடிக்குப்பிடி சதையாம் பேசு'

**துவரலா**, நந்தியாவட்டம், Indian rose bay — Nerium coronarium.

**துவராதினி**, பேராமுட்டி, fragrant sticky mallow — Pavonia zeylanica alias P. odorata.

**துவரி**, கஷாயம், decoction; 2. see துவரை.

**துவரிதம்**, துவரை, which see.

**துவருப்பு**, பூநீறுப்பு, salt extracted from efflorescent salt collected on the soil of fuller's earth.

**துவரெண்ணெய்**, துவர்ப்புச் சரக்குகளினின்று வடித்த எண்ணெய், a medicinal oil extracted from astrengent drugs.

**துவரை**, துவரைச்செடி, இது இந்தியாவில் எங்கும் பயிராகக் கூடியது. ஆனால் வங்காளத்தில் விசேஷம், இதில் பலவகையுண்டெனினும் சிவப்புத் துவரைதான் சாப்பாட்டில் மிக்க உபயோகமாகும், இது செம்மண் தரைகளில் மிகுதியாகப் பயிரிடுவார்கள், இது தனியாகப் பயிரிடுகிற வழக்கமில்லை, சோளம், கம்பு, முதலியவைகளோடு சேர்த்துத்தான் பயிரிடப்படும், இச்செடி 3-6 அடி உயரம், நேராக வளரக்கூடியது, கிளைகள் மிருதுவானவை, இலைகள் மூன்று பிரிவினையுடையன, காம்புகள் இரட்டைப்பட ஒல்லியாயிருக்கும், பூக்கள் மஞ்சள் நிறம், காய்கள் 2-3 அங்குல நீளமாயும், ஒவ்வொன்றிலும் 3-5 விதைகள் வாய்ந்தனவாயுமிருக்கும், நன்றாய் வளர்ந்த செடி அடர்த்தியாயும் சிவப்புக்காய்கள் நிறைந்ததாயு மிருக்கும், இதன் தாழைகள் பச்சையாயும் காய்ந்ததும் ஆடு, மாடுகளுக்கு உணவாகும்.

இதன் விதையினின்று பருப்பெடுத்து உணவில் உபயோகப் படுத்தப்படும், இப்பருப்பு பத்தியமான வஸ்து, இலைகள் மிளகோடு சேர்த்துப் பல்லீறுகளைச் சுத்தப்படுத்தவும் பல்வலிக்கும் உபயோகமாகும், வாய்ப்புண்களுக்கு இவ்விலைகளை உபயோகப் படுத்துவார்கள், இவ்விலையை அரைத்து முலைக்குப்பூச பால் சுரப்பதை நிறுத்தும், துவரை அரைத்துக் கட்டுக்கட்ட வீக்கத்தைக் கரைக்கும், பச்சைக்காய்த் துவரையைக் கறியாகச் சமைப்பதுண்டு, இதில் அடியிற் கண்டபடி பலவகை உண்டு, common dholl plant, red gram — Cajanus indicus alias Cytisus cajan. It is extensively cultivated every where in India but grown in Bengal in abundance. Although there are several varieties the red coloured red gram and hill red gram only are used in food. This gram is cultivated mostly in red soil. It is seldom sown alone but mixed with millet, maize, ragi etc. It is an erect shrub 3-6 ft high with tender branches, leaves pinnately trifoliate, pedicles slender and in pairs, legumes 2-3 inches long with 3-5 seeds, flowers yellow, fully grown crop is bushy with red pods. Cattle eat the tander parts of the plant both green and dry. The tender leaves mixed with pepper are used in cases of apthae, tooth ache and for cleaning spongy gums, the leaves ground into a paste warmed and applied over the mamma. checks the secretion of milk. A poultice made with seeds has a tendency to reduce swelling. See துவரம் பருப்பு.

The following are the several varieties:

1. சிவப்புத் துவரை, red gram — Cajanus indicus (flavus).

2. வெள்ளைத் துவரை, southern ghauts ebony — Diospyros foliolos a wights mottled ebony — Diospyros ovixensis alias D. toposia.

3. மலைத்துவரை, hill red gram — Cajanus indicus (bicolor).

4. காலியாந் துவரை, Galle (point de-galle) dholl Rhynchosia genus.

5. காட்டுத்துவரை, jungle dholl — Aty losia caudolli alias Odonia trinervia (b) common satin ebony — Muba-buxifolia. See இரும்பிலி.

6. பால் வெள்ளைத்துவரை, ஒர் வங்காளத்துவரை — toposi ebony of Bengal — Diospyros toposia.

7. கருந்துவரை, toposy ebony of Bengal — Diospyros toposia; (a) plant *Hedysarum biflora; (b)* tree Dalbergia latifolia; (c) Bourdillous apple fruit ebony — Diospyros bourdilloni (d) panicled flowered ebony—Diospyros paniculata.

8. மாலிகைத்துவரை — small leaved ebony — Diospyros microphylla.

9. பொட்டுத் துவரை, Anamalai calaminder wood — Diospyros insignia.

10. சிறுதுவரை, small dholl (small sized) the same as No. I.

11. பெருந்துவரை, large dholl (big sized) the same as No. I.

12. சின்னத்துவரை, the same as No. 8.

13. மேயன் துவரை, or மதுரை மேயன் துவரை.

14. மிளகுத் துவரை, pepper dholl.

15. பேய்த் துவரை, bitter dholl or demon dholl.

16. சீமைத்துவரை, foreign dholl.

17. பனிவெள்ளைத்துவரை, same as No. I.

18. கலியாணத்துவரை, same as No. 4.

NOTE: I. Though the several names end with the same term துவரை it cannot be construed as a variety of the same genus and so excepting No. I, 3, 10 and 11 all the other varieties belong to different botanical groups and cannot be taken as grams, Although கருந்துவரை No. 7 and வெள்ளைத் துவரை No. 2 are termed as such they are of different groups.

2. Oil is extracted from the roots of the plants. சிவப்புத் துவரை, மலைத்துவரை and is applied for leucoderma.

**துவரைச் சேபிதம்,** கருந்துவரை, Indian *black wood — Dalbergia latifolia.*

**துவரைமரம்,** வெண்டுவரை மரம், mottled ebony — Diospyros orixensis alias D. montana.

**துவரைமல்லி,** நகைக்கு உபயோகப் படுத்துமோர் சிவப்புக்கல், இதைக் கொழும்பு வைரமெனச் சொல்வதுண்டு, a red mineral stone esteemed in Jewellery known as Ceylon diamond — Red bubellite.

**துவர்,** துவர்ப்பு, astringency; 2. பவளம், coral; 3. சிவப்பு, red; 4. விறகு, fire-wood; 5. துவர்ப்பு மருந்து, astrigents.

**துவர்,** துவர்ப்பு மூலிகைகள், இது தமிழ் வைத்தியத்தில் 10 வகையாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. (in Tamil medicine) the ten different productions of the vegetable kingdom which contain acerbity and they are:

1. நாவல், jaumoon — Calyptranthis caryophilli folia.
2. கடுக்காய், gall nut — Terminalia chebula.
3. நெல்லிக்காய், Indian goose berry — Phyllanthes emblica.
4. தான்றிக்காய், devilsabode — Terminalia belerica.
5. ஆல், banyan — Ficus bengalensis.
6. அரசு, peepul — Ficus religiosa.
7. அத்தி, Indian fig — Ficus racemosa.
8. இத்தி, stone fig — Ficus virens alias F. gibbosa.
9. முத்துக்காசு, Koray tuberous root — Cyperus juncifolius.
10. மாந்துளிர், bud and tender leaves of mango tree — Mengifera indica.

NOTE:—There are other kinds of astringents not included in the above category. They are— catechu, bael, areca, red cotton tree, palaus, divy divy, sappan, chowk wood, apple, mangoosteen, tellichery bark, wodier, vengay, redlac sumach, black murdah senna etc. etc.

**துவர்க்கட்டி,** காய்ச்சுக்கட்டி, catechu.

**துவர்க்கஷாயம்,** வாய் கொப்பளிப்பதற்காகவும், புண்களைக் கழுவுவதற்கும் உபயோகப்படும்படி துவர்ப்பானபட்டை, இலை, இவைகளைக்கொண்டு காய்ச்சும் கஷாயம், the decoction of bark leaves etc., of astringents prepared for using it as a gorgle or sometimes as a lotion for cleaning wounds and ulcers — Alnus.

**துவர்க்கண்டல்,** பூக்கண்டல், caudel mangrove — Kaudelia rhcedii; 2. செந்தாழை, red variety of fragrant screwpine growing on the side of a shore.

**துவர்க்காம்பு,** கத்தைக்காம்பு, black catechu — Catechu nigrum.

**துவர்க்காய்,** பாக்கு, areca nut — Areca catechu.

**துவர்ச்சிகை,** கடுக்காய்ப்பிஞ்சு, black gall nut (unripe); 2. கூவைகீறு flour of Malabar arrow root.

**துவர்ச்சிலைக்காரம்,** பூனீறு, efflorescent salt collected on the soil of fuller's earth.

**துவர்ச்சீலை,** துவர்ப்புச்சரக்குகளைக் கொண்டு தயாரித்த மருந்தை யூட்டிய சீலை, இரணங்களுக்குப் போடப்படும், a lint soaked in astringent preparations and applied for ulcers and wounds.

**துவர்ச்சீலை,** கருவேல், நாவல், இலந்தை, ஒதியன், அத்தி முதலிய மரப்பட்டைகளை இடித்து 2 நாள் ஊறவைத்து கஷாயமாக காய்ச்சி இறக்கி அத்துடன், மயில்துத்தம், பால்துத்தம், காசுக்கட்டி, கடுக்காய்த் தோல், வெள்ளைக் குங்கிலியம், படிகாரம் சம எடை கொண்டு இடித்துத் தூளாக்கி கஷாயத்திலிட்டு அதில் எலுமிச்சை ரசமும் சேர்த்து ஷெ கஷாயத்திலிட்டுக் குழம்பு பதமாய்க் காய்ச்சி சீலையிலூட்டி உலர்த்தியது, an astringent lint prepared as contemplated in Siddhar's science which is given above.

**துவர்தல்,** திமிர்தல், smearing.

**துவர்த்தல்,** துவர்ப்பாயிருத்தல், being astringent.

**துவர்நீர்,** துவர்ப்புநீர், astringent lotion.

**துவர்நெய்,** ஆற்றெண்ணெய், a medicated ghee prepared with astringents.

**துவர்ப்பட்டை,** ஆவாரம்பட்டை, tamer's bark — bark of Cassia auriculata.

**துவர்ப்பான பச்சைவர்ணி,** கற்கடகசிங்கி, crabis horn — Pistacia integerrima.

**துவர்ப்பினி,** துவர்க்கும் வஸ்து, இது குடலைச் சுருக்கி இரத்தப்பெருக்கையும் வயிற்றோட்டத்தையும் நிறுத்தும், astringent. These drugs will contract the bowels and stop diarrhoea.

**துவர்ப்பு,** துவர்த்தல், இது அறுசுவையிலொன்று, one of the six tastes—astringent taste. It will increase vatha humour; 2. துவர்ப்பு சரக்கு, astringents; 3. மனத்துவர்ப்பு; asterity; 4. ஆத்துமத்துவர்ப்பு, affections of the soul.

**துவர்ப்புநீரூறல்,** வாதாதிக்கத்தினால் வாயினின்று துவர்ப்பான நீர் ஊறுதல், secretion of saliva astringent in taste due to excess of vatha (wind) humour in the system.

**துவர்ப்பு மருந்து,** துவர்ப்பான சரக்குகளைக் கொண்டு தயாரித்த மருந்து, இது இரத்த பெருக்கை நிறுத்தும், astringent preparation having the quality of stopping bleeding or restraining haemorrhage — Styptic.

**துவர்மண்,** துவர்ப்பு மண், astringent earth; 2. அடைமண், alluvial soil.

**துவர்வலியுறுத்தி,** பலத்தைக் கொடுக்கும் துவர்ப்பு மருந்து மூலிகைகள், astringent herbaceous drugs promoting strength — Tonic. see ஔடத வகுப்பு.

**துவலம்,** பவளம், coral; 2. அவுபலபாஷாணம், one of the 32 kinds of native arsenic.

**துவளக்காய்ச்சிடல்,** குழம்புபோல் காய்ச்சுதல், boiling down to a thick consistency.

**துவளல்,** துவளுதல், fainting, drooping; 2. தளர்தல், being weakened, 3. துவண்டு போதல், loss of spirit, fall of tone; 4. சோர்வடைதல், fatigued, weariness; 5. பயனற்றுப்போதல், becoming withered as part or organ of the body; 6. திவளல், slackening; 7. நாணுதல், drooping, 8. அசைதல், shaking, being agitated.

**துவளவரைத்தல்,** நெகிழ வரைக்குதல், grinding till softened, grinding till it becomes pulpy or pasty.

**துவளை செய்தல்,** கண்ணிற்குத் தைலம் பூசுதல், smearing ointment or putting eye drops.

**துவளைபோடல்,** உடம்பின்மேல் சூடுண்டாகும்படி தேய்த்தல், rubbing so as to creat heat.

**துவளையிடல்,** see துவளைபோடல்.

**துவளையிட்டுப்பூசல்,** உடம்பில் சூடுண்டாகும்படி தேய்த்துப் பிறகு மருந்து பூசுதல், rubbing affcted part so as to increase heat and then applying oil and any unctuous substance, rubbing well before anointing.

**துவனம்,** நெருப்பு, fire.

**துவனுகம்,** வட்டத்திருப்பி, gravel root, Indian pareira — Cissampelos pareira.

**துவனி,** தொனி, ஒலி sound; 2. குரல்சத்தம், voice of the throat.

**துவனிக்கிரகம்,** காது, ear — the seat or organ of hearing.

**துவனிவிச்சின்னவாதம்,** தொண்டைக்கம்மல், hoarseness; 2. குரலடைக்கும் ஓர் வாத நோய், இது சத்தம் போட்டு பேசுவதினுலுண்டாகும், a disease of the throat due to or arising from straing the voice by too long or too frequent speaking.

**துவன்,** see துவனுகம்; 2. உடம்பின்மயிர் hairs of the body.

**துவன்றல்,** சாதல், dying; 2. நிறைதல், being full.

**துவாகிசுரம்,** இரண்டாமுறைக் காய்ச்சல், fever coming every alternate day.

**துவாசிப்பரீட்சை,** touch and palpation by which heat, could, size position, consistency of organs are ascertained by way of diagnosis. see நாடி பார்த்தல்.

**துவாங்கிஷி,** வெட்பூலா, white poolah, white gromchy — Phyllanthus leucopyrus.

**துவாதகபத்திரகம்,** 12 - எழுத்து மந்திர யோகம், a yoga in which 12 - syllables are uttered.

**துவாதசமூலிக் கஷாயம்,** பன்னிரண்டுவித மருந்துச் சரக்குகளைக் கொண்டு இறக்கும் கஷாயம், a decoction prepared with twelve different drugs.

**துவாதசம்,** ( துவா + தசம் ) ( 2 + 10 ) பன்னிரண்டு, twelve; 2 சீரணமான ஆகாரம் தங்குமிடம், seat of digested food — Duodenum.

**துவாதசலோக செந்தூரம்,** பன்னிரண்டு லோக வகைகள் சேர்ந்த செந்தூரம், அதாவது கௌரி, சங்கு, குதிரைப்பல் பாஷாணங்கள், சீனக்காரம், நவச்சாரம், வீரம், பூரம், வெண்காரம், பூநீறு, வெடியுப்பு, ரசம், கந்தகம், இதனால் பாண்டுசோகை இரத்தக் குறைவுபோம், calcined red oxide of twelve minerals — yellow arsenic, white arsenic, realgar, alum, salammoniac, per chloride and sub chloride of mercury, borax efflorescent salt taken from the soil of fuller's earth, mercury and sulphur useful for anaemia dropsy and allied diseases.

**துவாதசாந்தத்திற் புகுதல்,** see துவாதசாந்தம்.

**துவாதசாந்தம்,** பன்னிரண்டாம் அவஸ்தை, யோகாப் பியாசத்தில் பன்னிரண்டாவது அதாவது கடைசியாக சமாதி நிலை, இதனால் கடவுளையும் தன்னையும் சோதி மூலமாய் அறியலாம், ( in yoga Philosophy ) in yoga practice it is the twelfth or the last stage of Samadhi in which the motion less yogi attains a knowledge of sublimest description—as of deity or his own spiricual nature through super natural illumination without the aid of physical or mental organs.

**துவாதசாந்தலேகியம்,** வாதபித்த சிலேட்டுமங்களை மீறி நடவாதபடி சமநிலையில் நிறுத்தி உடம்பில் நோயணுகாமற்படி செய்யும் வல்லமையுள்ள ஓர்வகை கற்பலேகியம், a kind of electuary used in rejuvenation for purposes of regulating the three humours in the system so as to keep them in due proportions and there by preventing the attack of any disease.

**துவாதசாவத்தை,** துவாத சாந்த நிலை, see துவாதசாந்தம்; 2. உயிர் வேதனை பன்னிரண்டு, 12 - stations or states of the soul in the body.

**துவாதசான்மா,** சூரியன், twelve souled i. e, sun.

**துவாதசிபத்திரி,** செவ்வகத்தி, leaf used on the twelth day — துவாதசிநாள், Agustya plant — Sesbania grandi flora.

**துவாதேசிபத்திரி,** see துவாதசி பத்திரி.

**துவாந்தசாத்திரவம்,** Indian trumpet flower -- Bignonia indica.

**துவாரதாரு**, தேக்கு, teak wood — teetona grandis.

**துவாரம்**, வாயில், gateway as ஒன்பது வாயில், nine gateways of the body; 2. நவத்துவாரம், nine openings of the human body; 3. யோனித்துவாரம், vagina in the female.

**துவாரவிருத்தம்**, மிளகு, black pepper — Piper nigrum.

**துவாலை**, பிரசவ காலத்தில் காணும் இரத்தப் பெருக்கு, flow of blood in parturition; 2. மாதத்தீட்டு, menstrual discharge; 3 பூசு மருந்து, liniment for the whole body; 4 துவாலையிடுக்கை, the act of moistening or rubbing a diseased part with a piece of cloth steeped in some liquid medicine — Embrocation.

**துவாலைச்சிகிச்சை**, வாதபிடிப்பு, சூலை, உடம்பு வலி, வாயுக்கட்டி, வீக்கம் முதலிய நோய்களில் வலியுள்ள இடத்திலாவது உடம்பு முழுவதுமாவது நோய்க்குத் தக்கபடி மருந்திட்டு, சூடுபறக்கத் தேய்த்துக் குணப்படுத்துமோர் சிகிச்சை, a kind of treatment given by massaging or rubbing the entire body or the portion affected with medicine ointment, liniment etc especially when the person is suffering from rheumatism, gout, or other bodily pain, inflammation, swelling of the parts etc.

**துவாலைச்சிரங்கு**, napkin rash.

**துவாலைபோடல்**, துவாலையிடுகை, anointing.

**துவாளைமருந்து**, தேய்க்குமருந்து, ointment, embrocation or any unctuous substance used for rubbing a diseased part with.

**துவாலையிடல்**, மருந்திட்டுத் தேய்த்தல், See துவாலையிடுதல்,

**துவாலையிடுதல்**, மேற்பூசுதல், rubbing the whole body with a liniment; 2. மருந்தைத் திமிரித்துவாலை யிடல், making the ointment penetrate the skin by rubbing it well in the affected part c. f. திமிரித்திவாலை யிடல்.

**துவாலையிறைத்தல்**, மிதமீறி, அல்லது அளவு கடந்து மாதவிடாய் ஒழுகல், immoderate excessive flow of menstrual discharge — Menorrhagia; 2. பிரசவகாலத்தில் இரத்தப் பெருக்கு அதிகமாகக் காணல், abundant blood discharge during parturition — Haemorrhage.

**துவாரு**, 10: 1. சித்துவாரு 2. விகாரத் துவாரு; 3. அங்கத்துவாரு; 4. விசேட சாதிததுவாரு; 5. ஆசிரமத்துவாரு; 6. நாழுத்துவாரு; 7. சமஸ்காரத்துவாரு; 8. வேஷத்துவாரு; 9. கிரியையாதித்துவாரு;

**துவி**, இரண்டு, two, double, pair.

**துவி அணுகம்**, 2—அணுக்கள் சேர்ந்தது, combination of two atoms; 2. இரட்டை மெலிவு, twice as thin, a very thin body.

**துவிகண்டம்**, ஓர் வகை மனோசிலை, arsenic disulphide, realgar, see திவிகண்டம்.

**துவிகந்தகம்**, ஓர் வகைக் கந்தகக் கலப்பு, (in chemistry) a salt of sulphuric acid in which one half of the hydrogen of the acid is replaced by a metal — bisulphate.

**துவிகந்தகி**, கந்தகத் திராவகத்தின் உப்பு, a salt of sulphuric acid in which one half of the hydrogen of the acid is replaced by a metal — Bisulphide.

**துவிகந்தி**, பேய்ப்புல், இது தினையைப் போல் திரண்டு முடிச்சுகளாகச் சுணையோடு காணப்படுமோர் நச்சுப்புல், a species of poisonous grass resembling millet stalk with bristly hairs and little clots — Demongrass.

**துவிகபா**, see துவணுகம்.

**துவிகம்**, காக்கை, row.

**துவிகர்ண**, இரண்டு காதுகளுக்குச் சம்பந்தமான, pertaining to both ears — Binaural, Binotic.

**துவிகர்ப்பம்**, இரட்டை கருவுடைய கர்ப்பம், twin pregnancy.

**துவிகலவை**, இரட்டைச் சத்துக்களடங்கிய கலப்பு மருந்து, a compound made up of two elementary substances — Binary compound.

**துவிகாசிகம்**, சிற்றரத்தை, lesser galangal — Alpinia galanga (minor).

**துவிகாபா**, see துவிகபா.

**துவிகாயாசின்**, செம்முருங்கை, red Indian laburnam — Cassia marginata.

**துவிகிருத்தியை**, கர்ப்பிணி, சூல்பிர்க்காரி, a pregnant woman.

**துவிகுணம்**, இரட்டைத் தன்மை, double or two fold nature.

**துவிகுத்துரு,** தண்ணீர் மிட்டான், water root — Asparagus.

**துவிசஞ்சிகை,** ஓர் மருந்துப் பூடு, a medicinal herb.

**துவிசதம்,** அல்லி, Indian water lily—Nymphae genus.

**துவிசபதி,** சந்திரகாந்தி, moon flower.

**துவிசபம்,** கவைக்குளம்புள்ளது, cloven footed.

**துவிசம்,** பல், tooth; 2. முட்டையில் பிறப்பன, producing young from eggs which are excluded from the body — Oviparous; 3. இருதரம் முளைக்கும் பல், tooth as growing twice; 4. கொத்தமல்லி, coriander.

**துவிசவிரணம்,** பற்சொதி, a purulent inflammation of the dental periosteum — Pyorroea.

**துவிடநேயம்,** தூணியாங்கிஷம், which see.

**துவிஷம்,** ஏலம், cardamum.

**துவிட்டத்துரு,** see துவிகுத்துரு.

**துவிட்டம்,** பித்தளை, brass.

**துவிதகலசம்,** பெண் இருமுலை; the two breasts of a woman.

**துவிதத்தாரு,** தேவதாரு, deodar—Erythroxylon monogynum; 2. சரள தேவதாரி, சுருள் தேவதாரி, Engligh deodar — Pinus longifolia.

**துவிதத்துரு,** see துவிதத்தாரு.

**துவிதபாவனை,** இரண்டாகப் பாவித்தல் (in Mystic philoshopy) the two fold i.e. visions by making distinction between the work of the diety and the diety himself. 2 (in Meta physics) the dualistic doctrine of holding spirit and matter as two distinct entities.

**துவிதம்,** இரண்டு, two, pair; 2. இரண்டு பங்கு, two times.

**துவிதலம்,** கொக்கோக நூலின்படி சொல்லியுள்ள ஓர்வித லீலை, இதில் புருஷன் ஒரு சுவரின்பேரில் சாய்ந்து கொண்டு இரண்டு கையினாலும் பெண்ணின் முழங்கால்கள் இடுப்பைச் சுற்றிக் கொள்ளும்படி உயரத் தூக்கிப்பிடிக்க பெண் புருஷனை தழுவும்படி அவன் கழுத்தைக் கட்டிப்பிடித்துக் கொண்டு புணர்தல், a posture in the sexual science of Tamil Kokkogam in which the man leaning against a wall clutches the flexed knees of the woman and rises her in a way to encircle him by taking hold of his neck, when penetration takes place.

**துவிதாகதி,** நண்டு, crab

**துவிதாங்கம்,** see துவைதம், இரண்டுவித அங்கம், அதாவது, அதோங்கம் ஊர்த்துவாங்கம், the two parts of the body viz., the lower part and the upper part.

**துவிதாடிமக்கனி,** இரண்டுவிதமாதளை, அதாவது புளி மாதளை தித்திப்பு மாதளை, the two kinds of pomegranates viz., the sour and the sweet.

**துவிதாதகி,** முதலை, crocadile.

**துவிதாத்துமகம்,** சாதிக்காய், nut meg — Myristica fragrans alias M. laurifolia.

**துவிதாரகம்,** இரட்டைத்தாரகம், double base — Bibase.

**துவிதியை,** கோரோசினை, bezoar.

**துவிதிரி,** இரு மூன்று, two threes; six.

**துவிதீனம்,** பசோற்பவம், the first portion of the small intestines — Duodenum.

**துவிதோஷம்,** தொந்த தோஷம், a combination of any two of the three humours (doshas) see துவந்த தோஷம்.

**துவித்துவம்,** இரண்டாக்கொள்கை, a system founded on double basis — Duality.

**துவிநாடி,** இரட்டை நாடி, the condition of two pulse beats occuring in rapid succession — Bigeminal pulse. This should not be confused with துவந்தநாடி which see.

**துவிபத்திரகம்,** see திராய்கந்தம்.

**துவிபாகம்,** இரண்டு பிரிவினையுடையது, two divisions; 2. இரண்டுபாகமாகத் தரித்தது, a cutting into two parts.

**துவிபாதசெந்து,** இரண்டு பாதமுடைய பிராணி, an animal with two feet — Biped.

**துவிபாதம்,** இரண்டுகால்கள், two feet.

**துவிபுடம்,** கடலை, Bengalgram — Cicer aurictinum; 2. இரண்டுபுடம், double calcination.

**துவிபுத்துரு,** see துவிகுத்துரு.

**துவிமுகம்,** புற்றுக்காளான், fungus grown on ant hill, yellow mushroom.

**துவிமுகை,** இரண்டுமுக நீர்ச்சாடி, water jug having two openings.

**துவியாகிதசுரம்.**

**துவிரம்,** தேனீ, honey bee.

**துவிரேதசு,** double seeded indicating one whose seed consists of both blood and semen. It is used to signify a hermaphrodite who is neither a male nor a female but whose sex is purely neutral.

**துவிரோபாரி,** சண்பக மரம், champaka tree — Michela champauka.

**துவியாசிஞு,** see துவிகாயாசின்.

**துவிவருஷிகம்,** இரண்டு வருஷத்திற் கொரு முறை பூக்கும் அல்லது பலன் கொடுக்கும் பூடு, a plant yielding flowers and fruits once in two years — Biennial.

**துவீசம்,** see துவிசம்.

**துவீந்திரியம்,** இருபுலன், two organs of sense touch and taste.

**துவேசம்,** கொடுமை, vegence.

**துவேஷம்,** See துவேசம்.

**துவை,** see துவைத்தல்; 2. இறைச்சி, flesh, meat; 3 பிண்ணாக்கு, residuum of seeds — Oil cake; 4. புளிக்கறி, acid curry; 5. புளிங்கறி, sour preparations for food; 6. பருகுதற்குரியன, that which is potable, anything sipped or taken with a spoon, that which is fit to be drunk; 7. ஊற வைத்தல், soaking; 8. தயிர் துவைத்தல், curdling milk; 9. துளசி, holy basil — Ocimum sanctum; 10. ஒலி, sound.

**துவைசி,** துளசி, see துவை.

**துவைச்சல்,** எஃகை பதப்படக் காய்ச்சி அடித்தல், tempering or striking steel after it is made red hot.

**துவைதம்,** சீவாத்மாவையும், பரமாத்மாவை யும் வேறாக அல்லது வித்தியாசமாகக் கொள்ளுகை, the doctrine of two fold distinctions between the Creator and the Created i. e. Universal soul as distinguished from individual soul, dualism; 2. இரண் டாகக் காணல், ( in Vedanta Philosophy ) that view which seeks to explain the world, by the assumption of two radically indepen-dant and absolute elements; 3. மனதிற் கும் உடம்பிற்குமுள்ள பிரிவினை, ( in Meta physics ) the doctrine of entire separation of spirit and matter i. e. incorporeal state or existence as distinguished from corpo-real state or exsistence.

NOTE :— According to the system of Madh-wachary, the devine soul and human soul are two and distinct and this is opposed to that of Sankrachary who maintained Adwai-tam ( non dualism ) believing God and the Soul to be one. The Deveita Philosophy is not natural to the south.

*Vedauntam Philosophy offers many* parallels to the idealism of Plato as opposed to Nyanyam which resembles Aristotle. The object of the whole system is stated in one word 'Brahmam'. When the perso-nal soul is set free by a proper understand-ing of the truth all illusions vanishes and the identity of Jeewautma ( individual soul ) with the Paramauthma ( Universal soul ) or only one really exsisting spirit is reestab-lished.

**துவைத்தல்,** சாறுவர இடித்தல், bruishing or pounding to get juice; 2. நனைத்தல், moistening; 3. அமிழ்த்திடல், immersing, dipping; 4. துவைச்சல், tempering of steel; 5. ஒலித்தல், making sound; 6. தேய்த்தல், curdling as milk.

**துவைத்துப்பிழிதல்,** மூலிகைகளை இடித்துச் சாறு இறக்குதல், squeezing juice out of bruished herbs; 2 வாதத்தினால் உடம்பில் அடிபட்ட வலிபோற் காணும் ஓர் நிலைமை, a condition of the body with pain all over experienced by patients subjected to rheu-matic affections as if beaten with sticks, See துவட்டி பிழிதல்.

**துவையல்,** உணவிற்கு சுவை கொடுக்கும்படி தொட்டுக் கொள்வதற்கு தயாரிக்கும் ஓர் வகை சுண்டாங்கி, a kind of seasoning added to food to give relish or enhance pleasure, மசாலை வர்க்கத் துவையல், a condiment seasoning. c. f. சட்னி.

**துவ்வல்,** புசித்தல், eating taking meal or food.

**துவ்வு,** புசி, eat; 2. உணவு, food; 3. ஐம்பொறி நுகர்ச்சி, perception by or gra-tification of five senses of the human body.

**துழத்தல்,** குழைத்தல், mixing.

**துழாய்,** துளசி, holy basil — Ocimum sanc-tum.

**துழாவல்,** see துழாவுதல்.

**துழாவுதல்,** துடுப்பால் கலத்தல், stirring with a rod or mixing; 2. கலத்தல், mix-ing, mingling; 3. புணருதல், copulating, having sexual connection; 4. வெட்டுதல், cutting, hewing, 5.தேடுதல், searching.

**துளக்கம்,** அச்சம், fear; 2. நடுக்கம், tre-mor; 3. களை; splendour; 4, அசைவு, movement.

**துளக்காவணம்,** பூவந்தி, soap nut tree — Sapindas emarginatus.

**துளசி,** திருத்துழாய், இது ஓர் சிறிய பூண்டினம், 1—2 அடி உயரம். அடித்தண்டும் காம்புகளும் சிவப்பு நிறம், கிளைகள் அனேகம், இலைகள் நிறையவுண்டு, பூக்கள் சிறியன, வாசனை, ஊதா நிறம், இது சாதாரணமாய்த் தொட்டிகளில் வைத்து, வீடு, தோட்டம், கோயில், நாந்தவனம், இவ்விடங்களில் பயிராக்கப்படும், இது விஷ்ணுவுக்கு சிறந்ததாகையால் இது வைஷ்ணவர்களில் மிகவும் போற்றப்படுவதும் தவிர, பூசை நைவேத்தியம் முதலியவைகளிலும் உபயோகப்படும், இது நமது நாட்டில் எங்கும் விளையக்கூடியது, வீடுகள் தோறும் பார்க்கலாம், தினப்படி பூசை செய்வார்கள்.

இது காரமாயும் வாசனையாயிமிருக்கும், சீதளத்தைப் போக்கி, கபத்தை அறுத்து வியர்வையை உண்டாக்கும் குணமுண்டு, உள்ளழலையையாற்றும், கஷாயம் விஷ சுரத்தைக் கண்டிக்கும், இலைகளை உணர்த்திச் சூரணித்து மூக்குத் தூளைப் போல் உபயோகப்படுத்த பீனிசத்தைக் குணமாக்கிப் புழுக்களைக் கொல்லும், இதன் சாறு அஸ்தி சுரம், கபம், வயிற்றுளைவு, மாந்தம், அரோசிகம், இருமல் முதலான குழந்தை நோய்களைக் குணப்படுத்தும், இதை எலுமிச்சம் பழ சாற்றுடனரைத்துப்போட சருமநோய்கள் படைகள் நீங்கும், இதைக்கஷாயமிட்டுக் குழந்தைகள் சீரணக் கோளாறுக்கும் உபயோகப்படுத்துவதுண்டு, இது அடியிற் கண்டபடி பல வகைப்படும், இதன் இலைச்சாறு ¼—½ தேக்கரண்டியளவு குழந்தைகளுக்கும் 1—1½ அவுன்ஸ் வீதம் பெரியவர்களுக்கும் கொடுக்க இதயத்திற்கும் ஈரலுக்கும பலத்தையுண்டாக்கி பசி தீபனத்தைக்கொடுக்கும், தொண்டைக் கபத்தை அறுக்கும், மார்ச் சளியை ஒழிக்கும் பெண்களுக்கு பால் சுரக்கும், உதிரச் சிக்கலை நீக்கும், இலையை வாயிலிட்டு மெல்லுவதினுல் பல் கூச்சம், பல்வலி போம், இலைச்சாற்றை மேற்பூச்சு மருந்தாக உபயோகிக்க விக்கம் தணியும், நல்லெண்ணெயில் காய்ச்சிக் காதிலிட காதுவலி போம், வேரைக் கஷாயமிட்டுக் கொடுக்க சுரம் போம், இத்துடன் நொச்சி, முசுமுசுக்கையும் சேர்த்து பிட்டு போல் அவித்து பின் கசக்கி சாறு பிழிந்து குழந்தைகளுக்கு மேற்கண்ட அளவுப்படி கொடுக்க கணமாந்தம் தீரும்.

அடியிற்கண்ட பல வகைத் துளசிக்கெல்லாம் பொதுவாகவே சில குணங்களுண்டு, அவைகளுக்குத் தக்கபடி நோய்களைக் கண்டிக்கும்.

1. இலையைப் பாலிலிட்டும் காய்ச்சியுண்ண கபத்தைத் தடுக்கும், தாது புஷ்டியையுண்டாக்கும்

2. இலையை உணர்த்தி நசியமிட பீனிச புழுக்கள் வெளியாகும்.

3. அருச்சனை செய்த இலையை மென்று தின்பதினுல் முத்தோஷம்நீங்கி ஆயுள் நீடிக்கும்.

4. புட்டவியல் செய்த பின் பிழிந்து சாறெடுத்துக் கோரோசனைக் கூட்டி கைக் குழந்தைகளுக்குப் புகட்ட கபக்கட்டு வெளியாகி இருமல் மாந்தம் கணைச்சூடு தணியும்.

5. தண்ணீரிலிட்டுக் கொதிக்க வைத்து வேதுபிடிக்க அல்லது குளியலாட கபதோஷம் நீங்கும்.

6. இதன்விதையை நீரில்அரைத்துஉருட்டிக்கொள்ள பொடி இருமல், தேக உஷ்ணம், பிரமேகம், பிரசவ வேதனை இவைகள் குணமாகும், அன்றியும் நீரெரிச்சல் சீதபேதி இவைகட்கும் கொடுக்கலாம், holy basil, toolsy—Ocimum sanctum — It is a small plant 1—2 ft. high; stem and petioles dull red profusely branched with dense leaves, flowers small, fragrant, pale purple, the leaves are also fragrant with a peculiar small. It is cultivated in pots in houses, gardens, Vaishnava temple gardens, etc., It is sacred to Vishnu and so vaishnavites treat this with great reverance and use it in worship and other ablutions. Ladies worship this plant every day or at leaston fridays before they take their break fast, so it is generally kept in the middle of the open varanda of every Hindu house. It is abendantly cultivated and sold as small tender branches or garlands. It is offered to devotees in Vaishna temples along with holy water.

It is pungent to taste and fragrant to smell and removes cold and eliminates phlegm.

It is stimulent, expectorant and diaphoretic while its seeds are demulpcent. Infusion of the leaves is useful in malaria, dried leaves are powdered and employed as a snuff in ozema and in the endemic affections of the nasal cavities termed பீநிசம், catarrh of the nose and dislodges the maggots, juice of the leaves is used with great advantage in fever, phlegmatic tendencies, dysentary indigestion etc., attacking especially children. Juice is also used as vehicle for medicines, mixed with lime juice is applied in cutaneous affections and ring worm. Infusion of the leaves is administered as a stomachic in the gastric disorders of children and in hepatic affections It consists of different kinds as mentioned below. The ordinary toolsy and the black variety are important.

1. பெருந்துளசி, large basil — Ocimum gratissimum useful in phlegm and stomach disorders; கபதோஷம் வயிறுளைதல் போம்

2. கருந்துளசி, black basil — Ocimum sanctum (typica); தொண்டை கறு குறுப்பு, இருமலின் கேவல், மார்பு சலி, சன்னிபாதம் போம், useful in throat affections, whooping cough, phlegm in the chest and fevers.

3. இராமதுளசி, hero basil — Basilicum indicum.

4. வெண்துளசி, white basil — Ocimum album.

5. கிருஷ்ணதுளசி, black toolsy same as No. 2.

6. சிவதுளசி, Shiva's basil — Ocimum tenuiflorum, இதுவே கஞ்சாங் கோரை.

7. நாய்த்துளசி, dog basil — Ocimum canum, பொடி இருமல் போம், உடலைப் போஷிக்கும், cures dry cough.

8. காட்டுராம துளசி, wild Rama's basil.

9. எலுமிச்சந் துளசி, lemon basil — Ocimum fruit escens.

10. காட்டுத்துளசி, wild basil — Ocimum adscendens.

11. இலட்சுமித்துளசி, upland toolsy — Ocimum cristatum.

12. கற்பூரத்துளசி, camphor basil.

13. செந்துளசி, red basil, கபாதிக்கம், கீடவிஷம், திரிதோஷம் போம், cures poisons of insects phlegm, disorders of the three humours.

14. சிறுதுளசி, small basil — Ocimum indicum.

15. கல்துளசி, stone basil, பித்திரதிக் கட்டி, கபகாசம் போம், this cures bronchitis and abscess.

16. முள்துளசி, thorny basil — Ocimum pilosum, எலி விஷம், வெட்டுப் புண், சில்விஷம் போம், this cures poisons like rat bite and wounds

17. சுணைத்துளசி, rough basil — Ocimum villosum.

18. நிலத்துளசி, பூதுளசி, ground basil — Ocimum prostratum, முலைப்பால் மாந்தம், கணச்சூடு போம், congenita heat and indigestion of breast milk are cured by this drug.

19. கரியமால்துளசி, same as No 5.

20. நீர்த்துளசி, water basil.

21. விசுவதுளசி.

22. சிவப்புத்துளசி, same as No. 13.

23. திருத்துளசி, same as No. 14.

24. நற்றுளசி, same as No 1.

1. வழவழப்பு வாய்ந்த இதன் விதைக் கஷாயம் வெள்ளை வெட்டையைப் போக்கும், அன்றியும் நீர் எரிச்சல், சீதபேதி, உட்காங்கை போம், the seeds are demulscent and its decoction cures gonorrhoea internal heat. dysentery and burning while passing urine a decoction of the plant is an effectual remedy in the apthae of children. The use of aromatic baths prepared with it in cases of atrophy is also advised. In Mauritius or fumigations prepared with this plant are employed in the treatment of rheumstism and paralysis (Warings Pharma Copoeia of India).

2. குழந்தைகளுக்கு தொண்டையில் கபங்கட்டி இருமல், நெஞ்சுசளி, விஷசுரம், கோழையும் கண்டால் குளிய லாட்டியவுடன் இலைச்சாற்றைக் கொடுக்க குணமாகும், the juice of the leaves cures cough phlegm in the chest fever etc.

7. நாய்த்துளசி, இது பொடி இருமல், கபக்கட்டு, சன்னிபாதசுரம், காசம் மாந்தபேதி, கணச்சூடு, ஆசன கமைச்சல், சீதளத்தையும் போக்கும், It is said to cure simple cough phlegm, typhoid and render's the body worm.

13. வாத கபாதிக்கத்தினால் நுரையீரலைத் தாக்க ஏற்பட்ட பல கோளாறுகளைப் போக்கும், it is given in cases of excess of vatha and phlegm humours combination and lung affections.

15. கபவாத சுரம், இருமல், மார்ச்சளி, வித்திரதிக்கட்டி, விஷ கடி இவைகளைக் குணப்படுத்தும், கோழையை தள்ளும், கபகாசம் போம், it is good for pneumonia, phlegm in the chest, cough and insect bites.

16. விஷகடி, எலிக்கடி, இரணம், கொப்புளம் இவைகளுக்குக் கொடுக்கலாம், it is good for rat bite, insect bite ulcers and boils.

17. கணச்சூடு, வாதபித்த நோய், மாந்தம், மாந்தசுரம் முதலியவைகள் போம், It is a good remedy for congenital heat and digestive troubles due to vatha and pitha.

NOTE :— All the species of Ocimum are distributed all through out India, possess in common a fragrant camphoraceous odour and pungent aromatic taste. Ocimum sanctum is used as a protection against mosquitoes. It is a domestic remedy for croup, catarrh and bronchitis, it is a remedy for ear ache, juice of the leaves mixed with that of ginger is given for colic in children, mixed with black pepper is prescribed in the cold stages of inter mittent fever. It is also used as an antidode in snake poisoning. The wood or the stems of the plant are made into beads for rosaries by Vaishna vites for counting the recitations of their prayers. The rosaries are composed of 108 beads, oaths are made on leaves steeped in water and after the oath are swallowed. It is venerated by Hindus generally like the vervein by the Romans.

**துளசிச்சேவிதம்,** துளசிமூலம், root of holy basil.

**துளசிலேகியம்,** துளசியால் செய்யப்படும் லேகியம், an electuary prepared with the holy basil as chief ingrediant.

**துளசிவிரை,** துளசி செடியின் விதைகள், seeds of holy basil.

**துளந்து,** see துளபம்.

**துளபம்,** துளசி, holy basil.

**துளம்பி,** காத்தொட்டி, thorny caper — Capparis horrida.

**துளம்பிக்காய்,** ஆதொண்டைக் காய், see துளம்பி.

**துளம்பிக்கிரி,** see துளம்பிக்காய்; 2. நாவி, aconite; 3. திப்பிலி, long pepper, Piper longum.

**துளவம்,** } துளசி, holy basil.
**துளவு,** }

**துளவம்,** பருத்தி, herbaceous cotton — Gossypium herbaceum.

**துளவன்,** சோரபாஷாணம், a kind of prepared arsenic.

**துளவி,** } திப்பிலி, long pepper — Piper longum, see துளம்பக்கிரி.
**துளவிகம்,** }

**துளவிதாதிதம்,** சாம்பிராணி, malacca benzoin — Styrax benzoin.

**துளவை,** சிந்தில், moon creeper — Menispermum cordifolium; 2. மூங்கிற் பற்றை, bamboo splinter.

**துளாய்,** துளசி, holy basil.

**துளி,** ஆமை, turtle, tortoise; 2. பெண்ணாமை, female turtle or tortoise; 3. சொட்டு, drop; 4. மழைத்துளி, rain drop; 5. கதிரி, honey sweet tree — Meliosnia arnolliana.

**துளிகுத்தல்,** காது, மூக்கு, கண் இவ்விடங்களில் துளிதுளியாய் விடல், letting in by drops into the ears, nostrils or eyes.

**துளிகணக்கு,** காது, மூக்கு கண் இவற்றிற்கு ஊற்று மருந்து இவ்வளவு துளிதான் என்ற கணக்கு, அன்றியும் கள்ளிபால் சேர்ந்த பேதி எண்ணெய்களும் துளிக்கணக்காக கொடுக்கப் படுகின்றன, the calculation fixed for the number of drops of medicine to be let in the ears, nostrils and eyes. The purgative oils prepared with the milk of spurge are given in drop doses e.g. சித்தாதி எண்ணெய்.

**துளிச்சிப்பி,** கிளிஞ்சில், bivalve, shell, a small shell.

**துளித்தல்,** துளிதுளியாய் விழல், falling in drops, drippling; 2. மழைப்பெய்தல், droping as rain.

**துளிநெரிசல்,** வெள்விழியில் விந்துவினது துளியைப் போற் சதையை எழுப்புமோர் வகைக் கண்ணோய், a raised circular dot resembling semen in colour on the white sclerotic coat of the eye.

**துளிமருந்து,** துளிதுளியாய் கொடுக்கும் அல்லது விடுமருந்து, any medicine administered either externally or internally in drop doses.

**துளியிடாயோனிப்படலம்,** imperferation of hymen.

**துளிர்,** தளிர், buds and tender (young) leaves.

**துளிர்க் கெண்டை,** பாற்கொண்டை, milk fish — white mullet.

**துளிர்த்தல்,** தளிர்த்தல், sprouting, shooting out.

**துளிவிந்து,** முத்துச்சிப்பி, pear oyster.

**துளும்பல்,** பூசுதல், smearing, anointing; 2. அலைதலை, shaking.

**துளை,** மூங்கில், bomboo; 2. புண்ணின் துளை, recessor cavity of a sore, sinus; 3. துவாரம், hole; 4. யோனித் துவாரம், vagina of a female; 5. நவத்துவாரம், the nine orifices or openings or gateways of the human body.

**துளைக்கருவி,** எலும்புதுளைத் துளைக்க வுபயோகிக்குமாயுதம், an instrument for piercing the bones especially for perforating the foctal head, mastoid bone etc — Perforater.

**துளைக்கிட்டியகப்பை,** துளைகள் நிறைந்துள்ள இரண்டு இரும்புக் கிண்ணங்களைத் தலையிற் பதித்த கொல்லன்கை குறடுபோல விரிக்கவும், குவிக்கவும் வசதியமைக்கப் பெற்ற ஓர்வித அகப்பை, an instrument of metal with two perferated cup like blades and handles like large blacksmith longs with a movement adjustments for opening and closing intended for grasping and compressing the hot oil rasidue or decoction residue.

**துளைச்சிகிச்சை,** உடம்பின் நவத்துவாரங்களின் வழியாய் மருந்தைப் பலவிதமாகச் செலுத்திக் குணப்படுத்துமுறை, பண்டைய காலத்து வஸ்திக்கருமம், திரியிடல் முதலிய வைகளெல்லாம் இம்முறையைச் சேர்ந்தவைகளே, a treatment said to be of an inferior kind adopted in olden days by insertion of medicines in a liquid form in various ways into the nine openings of the human body when no other means are possible or could be had eg. enema, clyster, sternutatory drops etc.

**துளைச்சிலந்தி,** பாதம், வயிறு, குடல் முதலிய உறுப்புக்களை முழுவதும் துளைத்து ஊடுருவிப் பாயும் சிலந்தி, an ulcer which penetrates through the entire thickness of an organ as the foot, stomach intestines etc — Perforating ulcer.

**துளைச்செவி,** உட்காது, the inner ear.

**துளைத்தல்,** புழுதுளைத்தல், worm eaten.

**துளைத்தைலம்,** நவத்துவாரங்களின் வழியாக உடம்பினுள் புகட்டி நோய்களை கண்டிக்கவாவது, குணப்படுத்தவாவது பிரயோசனப்படும்படி உபயோகிக்கும் ஓர் மருந்து எண்ணெய், a liquid preparation for either checking or curing purposes introduced into any of the nine of openings of the body; 2. காது அல்லது கண்களுக்கிடும் எண்ணெய், any medicated oil dropped into the ears, eyes or nostrils — ear drops, eye drops and nasal drops; 3. புரையோடும் இரணங்களுக்கு விடும் மருந்தெண்ணெய், an oily antiseptic preparation dropped into or applied to sloughing ulcers to prevent decay or putrefaction.

**துளைநெய்,** துளைத்தைலம், which see.

**துளைநோய்,** பெண்ணின் சம்பந்தமாக ஏற்பட்ட நோய், வெள்ளை, கொறுக்கு, மேகம் முதலியன, venereal diseases acquired by sexual intercourse as gonorrhoea, syphilis etc.

**துளைபாய்தல்,** கண் வைத்தல், அதாவது புண்ணில் துவாரம் உண்டாதல், formation of sinus in an abscess or ulcer.

**துளைப்பிரியன்,** பெண் மோகங்கொண்டவன், one always hankering after women.

**துளைப்புண்,** துவாரமேற்பட்ட புண் அல்லது விரணம், a sore or ulcer, with sinus: 2. பெண்ணின் சம்போகத்தினாலேற்பட்ட மேகப்புண், venereal or syphilitic sore or ulcer.

**துளைப்பைத்தியம்,** பெண் சம்போகத்திலேயே ஆழ்ந்த சிந்தனை கொண்ட ஓர் வகை விரகம், an insane sexual desire in the female — Nymphe mania, madness for woman.

**துளையிடல்,** see துளைபோடல்.

**துளையிடாமுத்து,** நல்லமுத்து, solid pearl without perferation.

**துளையுள்ளது,** துவாரங்கள் உள்ளது — Crileriform

**துளையெண்ணெய்,** see துளைத் தைலம்.

**துளைவண்டு,** மரங்களைத் துளைக்கும் வண்டு a beetle that bores the trees—borer beetle carpenter bee xylotrechus quadrupes It is also called coffee fly for the reason that it bores a passage into the stem of coffee tree to deposit its eggs.

**துளைவிடல்,** துளையுண்டாதல், see துளை பாய்தல்.

**துளைவைத்தல்,** see துளைபாய்தல்.

**துள்ளல்,** ஆடு, sheep; 2. கொசுகு, mosquito; 3. வலிபொறுக்காது குதித்தல், jumping due to pain or sufferings.

**துள்ளி,** பெண்ணுமை, female tortoise, see துளி.

**துள்ளிமேகம்,** ஓர் வகை மேகரோகம், a kind of venereal disease.

**துள்ளியம்,** பெரியாணங்கை, large mangay; telegraph plant — Polygala telephioides alias P. serphillifolia.

**துள்ளுகெண்டை,** குதிக்குங் கெண்டை மீன், jumping carp of the Barbus genus See சபரி.

**துள்ளுசன்னிவாதம்,** சன்னிபாத சுரத்தினுற் பிறந்தவாதம், delirious fever followed by rheumatism.

**துள்ளுநாடி,** குதித்தோடும் நாடி, bounding pulse.

**துள்ளுப்பூச்சி,** அந்து, an insect that destroys stored cereals.

**துறட்டி,** ஓர் முட்செடி, a thorny shrub perhaps referring caper; 2. சூரை, jackal jujube — Zizypaus enoplia.

**துறட்டிரும்பு,** வளைந்த இரும்பு, crooked iron, hook.

**துறட்டு,** வள்ளைத் துறட்டு, raghota caper- — capparis grandis.

**துறட்டுமுள்ளு,** ஓர் முட்செடி, caper shrub; 2. காரிண்டு, West Indian cock's spur— Pisonia aculata

**துறவறம்,** அறம் பொருள் இன்பம் இவைகளை அநித்தியமென்றுணர்ந்து இல்லறவாழ்க்கையைவிட்டு நித்தியமாகிய வீட்டை அடையும்படி செய்யும் யோக முயற்சி, An ascetic or hermit who has renounced the world.

**துருட்சிங்கம்,** செந் நாய், a reddish species of wild dog.

**துறு,** இரும்பு, iron; 2. துறுகல், iron stone laterite.

**துறுகல்,** see துறு.

**துறுகாரம்,** கஸ்தூரி, musk — Abel moschus.

**துறுட்டி,** சிற்றேலம், small cardamum — Elleteria cardamomum.

**துறுத்தல்,** திணித்தல், stuffing as food into children's mouth; 2. பஞ்சுதிணித்தல், crowding into a bag as cotton; 3. திணித்தடைதல், plugging; 4. துறுக்குதல், penetrating by pressing (slang) shoving as as into another body.

**துறுபவம்,** நெருக்கம், closeness; 2. அடர்த்தி, thickness, dense.

**துறுப்பாவணி,** காட்டாமணக்கு, purging nut — Croton polyandrum

**துறுமல்,** திரட்சி, roundness, togather into one mass; 2. நெருங்கல், being thick, to come closure.

**துறுவல்,** புசித்தல், eating, taking meal or food.

**துறை,** அனுசரிக்கும் வழி, made of action adopted, path; 2. நூல் வழி, scientific way; 3. நூற்றுறை, extent of science.

**துறைதப்பிச்செய்தல்,** முறைபிசகிச் செய்தல், doing or performing a thing contrary to rules and practice.

**துற்கந்தசுவேதம்,** கற்றாழை நாற்றம், acid foetid sweating.

**துற்கந்தம்,** கெட்டநாற்றம், offensive smell.

**துற்கி,** அமுக்கிரா, winter cherry — Withania coagulens.

**துற்குறி,** அவக்குறி, bad symptoms as of diseases.

**தேகவியல்பு**, உடம்பின் சுபாவம், nature of the body.

**தேகவியோகம்**, உடம்பு பிரிதல், அதாவது ஆன்மா விட்டகலல், இறத்தல், soul separating from the body i. e. dying.

**தேகவிலக்கணம்**, உடம்பின்கூறு, nature of the body; 2. உடற்கூற்று நூல், that branch of science relating to physical structure of the body — Physiology.

**தேகவிளைப்பு**, உடம்பு மெலிதல், emaciation.

**தேகவிக்கம்**, உடம்பின் தடிப்பு, swelling of the body.

**தேகவீனம்**, பலக்குறைவு, weakness of the body.

**தேகவுளைச்சல்**, உடம்பின் வாதவலி, bodily pain especially rheumatic.

**தேகவூறல்**, உடம்பின் தோலில் ஏற்படும் *நமைச்சல்*, an itching sensation or teasing irritation of the skin — Pruritus.

**தேகவெதுப்பு**, உடம்பின் சூடு, heat of the body; 2. சூட்டினுல் நுரையாகக் கழியும் ஓர்நோய், frothy diarrhoea due to excess of heat in the body.

**தேகவெப்பம்**, உடம்பின் உஷ்ணம், heat of the body.

**தேகவெப்பம்**, } see தேகவெதுப்பு.
**தேகவெப்பு**, }

**தேகவெரிச்சல்**, உடலில் எரிச்சல் உண்டா தல், burning of the body. It is always caused by excited bile and by excessively increased blood. If buring is due to any wound on the head, chest or other vital parts, it is incurable, மதுமேகத்திலும் காணலாம். It appears in the last stages of dialetis.

**தேகவெளுப்பு**, இரத்தக் குறைவால் உடம் பிற்தக் காணும் வெண்ணிறம், paleness of the skin and mucous membrane due to anemic condition of the body.

**தேகவொடுக்கம்**, நல்லொழுக்கமுடைய பெண்கள் நாணம், மடம் முதலிய குணங்க ளால் உடம்பை ஒடுக்கி நடக்கும் ஓர் கிரமம், a peculiar gait put on by a woman through shyness, modesty etc., or by being restrained by a sense of proprity.

2. நோய், மனக்கவலை முதலியவைகளா லும் கிழத்தனத்தாலும் உடம்பு நாளுக்கு நாள் குறைவு படுதல், gradual reduction of the body in bulk through diseases, care, anxiety *or from old age.*

3. மரணகாலத்தில் உடம்பின் செயல் கள் படிப்படியாய் ஒழுக்கமடைதல், the gradual decrease of the functions activities of the several organs of the body, just as the soul is sinking through its different stages at death.

4. உடம்பின் அடக்கம், self restraint as practised by a modest or chaste woman or a devoted yogi.

5. பெண்குறி நெருக்கம், narrowness or *closeness as of vagina of a female.*

6. யாதொரு காரணமுமில்லாமலே குழந் தைகள் நாளுக்கு நாள் இளைத்து உடம்பு ஒடுங்கல் அல்லது குறுகுதல், progressive wasting and emaciation especially in young children when there is no obvious or ascertainable cause — Marasmus infantilis or M. lactantium.

**தேகனி**, மஞ்சள், turmeric.

**தேகாக்கினி**, கடல்நுரை, sea froth, cuttle fish bone.

**தேகாண்டகாரி**, பெருவழுதலை, large brinjal — Solanum melongena.

**தேகாதாரம்**, உணவு, food; 2. எலும்பு, bone.

**தேகாதிபாதம்**, உடம்பின் சிரசுமுதல் பாதம் வரை, from head to foot.

**தேகாத்துமவுணர்வு**, materialism.

**தேகாந்தம்**, உடம்பின் முடிவு, அதாவது மர ணம், ultimate end or final condition of the body i. e. death.

**தேகாப்பியாசம்**, உடம்பின் பயிற்சி, bodily or physical exercise; 2. அடயோகத்திற்த உடம்பின் உழைப்பு, bodily exercise indispensible for Hutha yoga.

**தேகாரம்,** குப்பைமேனி, rublish plant — Acalypha indica.

**தேகாரோக்கியம்,** உடம்பின் சுகநிலைமை, healthy condition of the body.

**தேகி,** உடம்பை உடையவன், any person embodied; 2. புல்லுரி, parasitic plant; 3. சீவாத்துமா, individual soul or life.

**தேகிகச்சுழற்சி,** உடம்பு முழுவதும் பரவிய இரத்த ஓட்டம், systemic circulation.

**தேகிகம்,** see தேகி,

**தேகிகை,** உடம்பிலுள்ள ஓர் புழு, a worm in the body.

**தேக்கரண்டி,** தேயிலைக்கரண்டி, teaspoon.

**தேக்கல்,** செம்பாறை, gravel rock, gravel stone.

**தேக்கிடுதல்,** தெவிட்டல், being satiated; 2. நிறைதல், being full — eating belly full.

**தேக்கிவருவி,** நட்டம், leprosy.

**தேக்கிவி,** மொசுசிமரம், mootchy tree — Erythrina indica.

**தேக்கு,** தேக்குமரம், இது பிரமாண்டமரம், இது சாதாரணமாய் மலையாளம், கன்னடம், திருவனந்தபுரம் முதலிய காடுகளிலும் இரங்கூனிலும் மிகுதியாய் உள்ளதாகும், இது தானுகவே வளரக் கூடியது, நேராக வளரும், மலைச்சாரல்களில் விளையும் தேக்குதான் மிகச்சிறந்ததெனக் கொள்ளப்படும், பூவெள்ளை பக்குவ மடைவடைவதற்கு 80 வருஷம் சென்றாலும உபயோகப் படுத்தும் பக்குவ நிலைக்குவர 25 வருஷம் போதும், இதினின்று வரும் பிசின் குங்கிலியத்தைப் போன்றது, இதன் விதைகள் எள்ளைப் போவிருக்கும், எண்ணெய்ப் பசை அதிகம், ஆனால் கொட்டையினின்று விதை எடுப்பது மிகவும் கஷ்டம், இதற்கு பிரத்தியோகமான வாசனையிராது, இம்மரம் மணற் சத்துள்ள மணற்கல், கருங்கல் தரைகளில் தான் மிகுதியாக வளரும் ஆகவே இம்மணற் சத்தினுல்தான் இது மிகவும் அழுத்தமும் நாட்பட உழைக்கும் குணமுடையதாகும், இம்மரத்தின் மருந்துக் குணம் பலவிதமாகச் சொல்லப்படும், இம்மரத்தின் தூளைப் பசையாகக் காய்ச்சி, பித்தத்தலைவலி வீக்கத்தைக்கரைப்பதற்கு, பித்தாதிக்கத்தினுலேற்பட்ட வயிற்றின் எரிச்சலுக்கும், வயிற்றுப் பூச்சிகளைக் கொல்வதற்கும் உபயோகப்படும், இம்மரத்தின் தூளை எரித்துக் கரியாக்கி, அத்துடன் கசகசாவின் பாலோடு குழப்பி, கண்ணிரப்பையின் வீக்கத்திற்குத் தடவலாம், மேலும் கண்பார்வையைத் துலக்கம் படுத்த இதை உபயோகிக்கலாம்.

பட்டை மிகத் துவர்ப்பானது, இதன் கொட்டையினின்று எடுக்கும் எண்ணெய் நறுமணமாகவே இருக்கும், இதை மயிர் வளர்ப்பதற்கும், உடம்பின் நமைச்சலுக்கும் தடவலாம், பூக்கள் நீரை வடிக்கும், விதைகளுக்கும் அதே குணமுண்டு, இம்மரத்தின் துண்டினின்று தயாரித்த கரி எண்ணெய் (தார்) ஆடுமாடுகளுக்கு வரும் புண்களுக்கு, புழுவு ஏற்படாதபடிக்கு இதைப் பூசலாம், சேரான் கொட்டை, முந்திரிக்கொட்டை இவைகளின் பாலிலுண்டான ரணங்களுக்குப் பூச குணப்படும்; இம்மரத்தின் காயைத் தூளாக இடித்து பெண்களின் நிதம்பத்திற் கட்டுக் கட்ட மூத்திரத்தை வெளிப் படுத்தும், மரக்கட்டையை நீர்விட்டு இடித்து மேற்கண்ட இரணங்களுக்குப் பூசலாம், teak wood tree, Indian oak — Tectona grandis alias T. theca. It is a very large tree principally found in the forests of Malabar, Kanara, Travancore and Rangoon. The teak which grows on the sides and tops of mountains is far superior to that grown in the soil of low ground. It grows straight, ash coloured trunk, and scally bark. Although it takes 80 years to arrive at maturity, it is considered seviceable as timber even after 25 years, it yields a kind of resin resembling that of black dammer — Cannarium strictum. seeds are of the size and shape of sesamum seeds and they are very oily, but the difficulty of extracting them from the nuts makes the oil expensive. It is a bland, flatty oil free from any peculiar odour, sand stone and granite soils are the favourite places for the teak. The teak takes up from the soil a quantity of silica and to this large secrection of silica is attributed the strength and durability of the timber. The medicinal virtues of this tree are numerous. Plaster of the powdered wood is used in bilious head aches and for the dispersion of inflammatory swellings it is also beneficial in dyspeppsia with

burning pain in the stomach arising from an overflow of bile and also as a vermifuge charred wood in poppy juice and reduced to a smooth paste is applied to swellings of the eyelids, and to strengthen the sight. The bark is astringent, and the oil of the nuts which is thick and having an agreeable odour is used for making hair grow and removing the itchiness of the skin, flowers are diuretic, seeds have similar property, the tar extracted from the wood is used as an application to the sores of cattle to prevent breeding of maggots. The wood rubbed down on a stone with a little water to the consistence of a thin paste proves a useful local application in inflammations arising from the action of the dhoby's nut — Semicarpus anacordium and cashew nut — Anacardium occidentalis. A marked diuresis follows the application of an epithem of the brusied fruit to the pubes. There are several kinds of teak and they are:—

**தேக்குவகை :—**

1. பெருந்தேக்கு, a large variety of teak tree — Tectona grandis.
2. வெண்தேக்கு, white teak — Lager storemia lanceolata.
3. குமிழ்த்தேக்கு, Cashmere tree — Gmelina arboria.
4. கற்றேக்கு, Patana oak — Careya arborea 2. Fish bone tree—Dillenia bractata.
5. சிறு தேக்கு, Cleodendron serratum.
6. பூந்தேக்கு, flower teak — Kleinhovea thospita.
7. சொறி தேக்கு,
8. மெழுகுத்தேக்கு,
9. சோலை வெண்தேக்கு, looking glass plant of Southern ghats — Heriteire papilio.
10. கொழுக்கட்டை தேக்கு, இதுவே கொள்ளிக்கட்டை தேக்கு, firebrand teak — Premna tomentosa.
11. நாய்தேக்கு, dog teak — Dillenia pentagyna.
12. பலந்தேக்கு, Godaveri sebestan — Cordia Macleodis.
13. பூனைத் தேக்கு, rosy flowered Batavian teak — Kleinhovia hospita.
14. உமித்தேக்கு, same as No. 3.
15. உவாத்தேக்கு, sand paper tree — Dillenia indica.
16. வத் தேக்கு, strong teak — Caesalpinia sappan.
17. மஞ்சள் தேக்கு, saffron teak — Adina cordifolia see மஞ்சள் கடம்பு.

**தேக்கு,** *கமுகு,* areca nut — Areca catechu; 2. *சண்பகம்,* champauk tree — Michelia champaca; 3. *தித்திப்பு,* sweetness.

**தேக்குதல்,** *தெவிட்டல்;* being satiated by eating glutted.

**தேக்கெறிதல்,** see *தேக்குதல்;* 2. *ஏப்பமிடல்,* belching.

**தேக்கோமகம்,** *பொற்றலைக்கையாந்தகரை,* see *தேகத்தி.*

**தேங்காயெண்ணெய்,** தேங்காயின் எண்ணெய், *சாதாரணமாக* இவ்வெண்ணெய் கொப்பரையினின்று ஆட்டியெடுக்கப்படும்; இது மஞ்சள் நிறமாயும், வாசனையாயும், நெய்யைப் போலுமிருக்கும், நாட்படவிருந்தால் கெட்டுப்போகும், இதை மருந்து தைலங்களிற் கலந்து இரணங்களுக்குப் போடவுதவும், தலை மயிரை வளர்க்கும்; ஆகவே தலைமயிர் குறைவாயிருந்தாலும், சுரத்திற்குப் பிறகு தலை மயிர் கொட்டுண்டு போனாலும், வழுக்கையானாலும், இதைப் பூசுவதுண்டு, உடம்பு துர்ப்பலமடைந்த காலத்தில் இதை உபயோகப்படுத்துவதால் சதை பிடிப்புண்டாகும், சில சமயங்களில் வயிற்றுக்கு ஒத்துக்காமல் கழிச்சலையுண்டாக்கும், புதிதாக ஆட்டிய எண்ணெய் மீன் எண்ணெய்க்குப்பதிலாக உபயோகிக்கலாம்; தேங்காய்பாலைக் காய்ச்சி அதினின்று எடுத்த எண்ணெய், தலை வழுக்கைக்கும் தீச்சுட்ட புண்ணிற்கும் பூச மிக்க குணத்தைக் காட்டும், இவ்வெண்ணெயை சில விடங்களில் குழந்தைகள் இளைத்துப் போகும் நோய்களுக்காக உபயோகப்படுத்துவார்கள், Cocoanut oil. It is obtained by expression from the nucleus or the dried kernel of the fruit. When freshly prepared, it is of a pale yellow colour, with a peculiar odour, very much resembling ghee; but after a few days it acquires a peculiar rancid odour and taste It is mixed with medicated oils and also used a vehicle for linements and other external applications. It is considered to have special properties in strengthening the hair and contributing much towards its growth, hence it is much in use as a local application in

alopecia and in loss of hair after fever and debilitating diseases. It exercises a marked influence in increasing the weight of the body it is apt to induce disturbance of the digestive organs and cause diarrhoea. The fresh oil prepared from fresh pulp is a good substitute for codliveroil and is used in some places for wasting diseases of children.

NOTE:—The freshly prepared oil is nearly as fluid as water, but consolidates in cold weather. Many attempts have been made to *divest the oil of its rancid smell but only* with partial success. The oil becomes turbid and solid at low temperature the best oil is exported from Cochin and the neighbouring ports. The oil is used for culinary purposes in Malabar and Travancore. It is largely exported for manufacturing soaps and candles. In Southern India the oil is made into soap (சவுக்காரகட்டி) by boiling the proper proportion of dhoby's earth, salt saltpetre, quick lime and water.

The oil is also prepared by boiling the milky juice of the kernel. It is of good smell and taste.

**தேங்காயெண்ணெய்ச்சவ்வு,** சவுக்காரக் கட்டி, soap.

**தேங்காயோடு,** கொட்டாங்கச்சி, cocoanut, shell.

**தேங்காய்,** தென்னை மரத்தின் காய், இது சாதாரணமாய்க் குழந்தையின் தலை பருமனிருக்கும், மேற்பக்கம் ஓடால் மூடப்பட்டும், உள் பக்கம் வெண்ணிறமான சதையும் அதனுள் தண்ணீரும் இருக்கும்; முற்றின தேங்காயில் தண்ணீர் குறைந்தும் இளந்தேங்காயில் சதைப்பற்று குறைவாயும், தண்ணீர் அதிகமாயும் இருக்கும், தேங்காய் உணவு உணவுபதார்த்தங்களில் மிகுதியாகச் சேர்ப்பதுமன்றி, இத்தேங்காயைக் காயவைத்தது தான் கொப்பரை, இது பலகாரம் செய்யவுதவும், தின்பதற்கும் ருசியாயிருக்கும், இதினின்றுதான் எண்ணெய் எடுக்கப்படும், இதை மென்று வாயிலடக்க வாய்ப்புண்ணை ஆற்றும், fruit of cocoanut tree cocos nucifera. The fibreous pericarp covers the nut which is removed and the nut is sold in the market. The nut is generally about the size of the head of a new born infant. In side the hard shell is the white kernel and a milky sweet water. The kernel is attached to inside of the shell. As the nut advances to its full maturity the fluid gets less and less In its young state it is full of the fluid. When the fruit is fully riped and dry the *kernel gets free from the shell and is called* copparay. The kernal gratings or scrapings are mixed with curries and eaten. The copparai gratings are used along with areca nut powder and for preparing some sweets. It is also used as a masticating for ulcers in the mouth. It is only from the dried kernel oil is extracted by pressing in the mill.

**தேங்காய்வகை:—**

1. குருவித்தேங்காய், இதுவே நெல்லி.
2. குறுந்தேங்காய், இதுவே சமுத்திராப் பழம்.
3. கொட்டைத் தேங்காய், matured cocoanut.
4. கொப்பரைத்தேங்காய், dried cocoanut.
5. சிறுதேங்காய், fully riped though small.
6. இளநீர்த்தேங்காய், tender cocoanut.
7. தேளித் தேங்காய், a kind of red cocoanut.

**தேங்காய்க்கண் திறத்தல்,** தேங்காய்க்குள் மருந்தைப் புகட்டுவதற்காக அதன் கண்ணைத்துளைத்தல், making a hole through one of three eyelets on the top of the shell in order to insert medicine or other drugs into it after clearing the water contained in it.

**தேங்காய்க்கயில்,** தேங்காய்ப்பாதி, half of a cocoanut.

**தேங்காய்க்கீரை,** ஓர் வகைக் கீரை, a kind of greens.

**தேங்காய்க்கீற்று,** தேங்காய்ப்பத்தை, cocoanut kernel sliced into several pieces.

**தேங்காய்க்குடுக்கை,** தேங்காய்யோட்டினாற் செய்த குப்பி, a round empty shell of cocoanut made to serve as a bottle to preserve anything.

**தேங்காய்க்குரும்பை,** பலன்படாத தேங்காய், immature cocoanut - perhaps not fertilised.

**தேங்காய்க்கொப்பரை,** உலர்ந்த தேங்காய், dried kernal of cocoanut.

**தேங்காய்ச்சதை,** தேங்காயினுட் சதைப் பற்று, kernel of cocoanut.

**தேங்காய்த் தண்ணீர்,** இளநீர், the sweet astringent fluid of tender cocoanut; 2. முற்றிய தேங்காயின் தண்ணீர், sweet water of the riped cocoanut; 3 செவ்விள நீர், இது நீரெரிச்சல், நீர்கடுப்பு, மேகச்சூடு முதலிய நோய்களைப் போக்கி உடம்பிற்குக் குளிர்ச்சியை உண்டாக்கும், water of red tender cocoanut It is whole some to the body as it is said to be useful in dysurea, buring urine venereal heat etc., and cools the system.

**தேங்காய்த்தலையன்.** தேங்காயைப்போன்ற தலையுடையோன், one having a big head like cocoanut as opposed to மாங்காய் தலையன், one having a small head like mango.

**தேங்காய்த்திருகல்,** see தேங்காய்த் துருவல்.

**தேங்காய்த்துருவல்,** தேங்காய்ப்பூ, scrap ings or gratings of riped kernal of cocoanut used in curries and cakes.

**தேங்காய் நெய்,** see தேங்கயெண்ணெய், Cocoanut oil; 2. உறைந்த தேங்காயெண்ணெய், solidified cocoanut oil.

**தேங்காய் நெற்று,** முதிர்ந்த தேங்காய், matured and dried cocoanut useful for rising seedlings.

**தேங்காய்ப்பருப்பு,** தேங்காயின் உட்சதைப் பற்று, அல்லது பாகம், cocoanut kernel.

**தேங்காய்ப்பால்,** முற்றிய தேங்காயினின்று பிழிந்தெடுத்த பால், இது கறிக்கும், பலகாரத்திற்குதவும், இதினின்று கஞ்சியும் தயாரிக்கலாம், சர்க்கரையிட்டு அரிசியுடன் வேகவைத்துப் பாயசமாகவும் கொள்ளலாம், இதைக் கூந்தலிலும் உடம்பிலும் ஊற்றித் தேய்க்க மயிர் மிருதுவாகி, உடம்பும் பளபளப்பாயிருக்கும், இப்பாலை நாம்புகேட்டிறு லேற்பட்ட பலவீனம், ஆரம்பச்சயம், சௌக்கியக்குறைவு இவைகளுக்குக் கொடுக்க குணப்படும், அன்றியும் வயிற்றுப் புண், மேக உஷ்ணம், கரப்பான் இவைகளைப் போக்கும், மேலுக்குத்தடவ சொறி, சிரங்கு, படர்தாமரை, நமைச்சல் இவைகள் நீங்கும், இதை சோற்றிலும், காப்பி, தேயிலை இவைகளிலும் சேர்த்துச் சாப்பிடுவதுண்டு, இது சமயத்துக்குத் தக்கபடி அதிகமாகவும், இலகுவாகவும் பேதியை யுண்டாக்கும், இது உடம்பின் தழும்பைப் போக்க மிகச் சிறந்தது, மேலும் இப்பால் உடம்பிற்கு குளிர்ச்சியை யுண்டாக்கும், நீரை வடிக்கும், ஊட்டத்தைக் கொடுக்கும், இது அதிக வளவில் பித்தத்தை அதிகப்படுத்தி மயக்கத்தை யுண்டாக்குமென வைத்தியரால் கருதப்படும், cocoanut milk is extracted by pressure from the gratings or scapings of fresh kernel of a well matured cocoanut. It is used in preparing certain curries or Sauce and confection. It is sweetend with sugar used as an adjuont to rice cakes (ஆப்பம்- இடியாப்பம்), conjee (gruel) is also prepared with this milk, rice boiled with it forms good pudding when sugar is added to it. After hair has been cleaned by soap or other detergent material the milk is rubbed well into the hair and scalp some smear even the body with it and then washed off with water, this application leaves the hair soft and silky and renders the body glossy. It is employed with great advantage in cases debility, incipient phthisis and cachexia. Moreover, it is a good remedy for inflammation of the stomach, veneral heat and children's carpamy and an excellent application for itch ring worm pruritus and other cutaneous affections. It is added to food coffee and tea in place of milk. In large doses it proves apevient and in some cases actively purgative. It is one of the best recipes for freckles. It is cooling, diuretic and also nourishing. Vaidyans consider it as promoting secretion of bile and causing giddiness when taken in excess.

**தேங்காய்ப்பாறை,** கடல் பாறை மீனின் ஓர் இனம், a kind of serfish of the caranx genus.

**தேங்காய்ப் பிண்ணாக்கு,** தேங்காயினின்று எண்ணெய் எடுத்த பிறகு எஞ்சிய சக்கை, இது வீட்டுப்பறவைகளாகிய கோழி, புரு இவைகளுக்கும், பன்றிக்கும் கொழுத்த வுணவாகும், தென்னங்கன்றுக்கு எருவாகவுதவும், the resdue or refuse or oil cake left after extracting the oil from the kernel by a mill. It is considered and an excellent food for pigs and poultry, the best manure to young cocoanut tree.

**தேங்காய்ப்பூ,** தேங்காய்முளை, the white solid albumin sprouting inside the cocoanut — Cotyledon; 2. see தேங்காய்த் துருவல்.

**தேங்காய்ப்பூக்கீரை,** தேங்காய்ப்பூ நாறி, an unknown plant probably smelling like cocoanut scrapings.

**தேங்காய்ப்பூடு,** அரிசிப்பூடு, a plant.

**தேங்காய்ப்பூநாறி,** பீளைநாறி, a plant.

**தேங்காய்மட்டை,** கதம்பை, அதாவது தேங்காயின் மேலிருக்கும் நார்பாகம், cocoanut fibre husk. This should not be confounded with தென்னைமட்டை which is the leaf stalk.

**தேங்காய்மரம்,** see தென்காய்மரம்.

**தேங்காய்முளை,** தேங்காய்க்குள்ளே வாதுமைப் பருப்பைபோல் முளைத்திருக்கும் வஸ்து, இது தேங்காய் முற்ற உட்பக்கம் முழுமையும் கவர்ந்துகொள்ளும், the almond-like substance, albumen which is the germinating organ filling the hollow of the kernel when the nut advances to its full maturity the round ball or germ in a ripe cocoanut — Cotyledon.

**தேங்காய்முடி,** அரைத்தேங்காய், half of a cocoanut.

**தேங்காய்வகிர்,** see தேங்காய்க் கீற்று.

**தேங்காய்வழுக்கை,** இளந்தேங்காய், the tender pulp or kernel of young cocoanut which can be easily removed by a spoon.

**தேங்காலிகம்,** சருக்கரை கொழுமிச்சை, sweet orange — Citrus aurantium nobilis.

**தேங்கிட்டி,** தேள் கொடுக்கி, see தேகடை.

**தேங்குதண்ணீர்,** தேஙகாய்த் தண்ணீர். sweet cocoanut water; 2. தேங்கிநிற்கும் தண்ணீர், stagnant water.

**தேங்கைச் சுட்டுப் புகைத்துவிடல்,** தேங்காயைச்சுட்டு புகைகாட்டுதல், exposing to the fumes of burnt cocoanut.

**தேசகாலம்,** காலத்தின் நீடிப்பு, duration or length of time.

**தேசகால வொற்றுமை,** சீதோஷ்ணநிலைக்கு உடம்பு ஒற்றுமைபடல், agreeableness or suitability to climatic condition said of body.

**தேசகி,** மூங்கில், bamboo — Bambusa arrmdinacea.

**தேசசு,** ஒளி, splendour brilliance; 2. கண் விளக்கம், clearness of the eyes; 3. உடம்பின் வெப்பு, the heating and strengthening faculty of the human frame seated in the bile; 4 விந்து, semen virile; 5. பிராண வலிவு, vital power.

**தேசஸ்ரஜஸ்,** ஆன்மா அல்லது மாந்திரிக வலிவு, spiritual or mrgical power.

**தேஜசம்,** பளபளப்பான உலோகம், any shining metal or substance; 2. பாசகநீர், the gastric juice as coloured by digested food; 3. ஆனைத்திப்பிலி, see தேசவம்.

**தேஜசு,** உடம்பினொளி, lustre of the body; 2. தேகவுறுப்பின் ஒளிவு, the fiery or glaring principles of the organism of the human body.

**தேசபத்திரம்,** இலவங்கப்பட்டை, cassia cinumon — Laurus cassia.

**தேசபேதசலபானம்,** பலவூர் தண்ணீர் குடித்தல், drinking of water of several places or countries.

**தேசலம்,** தேமா, sweet mango — Mungifera indica.

**தேசவதி,** வாலுளுவை, spindle tree — Celastrus paniculata.

**தேசவம்,** ஆனைத்திப்பிலி, elephant long pepper — Scindapsis officinalis.

**தேசவாகு,** ஊரின் இலக்கணம், அதாவது மேட்டூர் அல்லது மேட்டுப்பூமி, பள்ளபூமி, சமபூமி, இவைத அனுசரித்துத்தான் மனிதர்களுக்கு நோயும் ஏற்படும், geographical position, situation, nature of a particular country. They are of three fold divisions as shown below :

1. மேட்டு பூமியாகிய குறிஞ்சி நிலம், இதில் வசிப்பவர் வாதநோயால் பீடிக்கப்படுவர். High level countries ( mountainous ) the disease to which the people living in this place are prone or subjected are chiefly nervous diseases ( vatha ).

2. தாழ்ந்த பூமி, இம்மனிதருக்கு நீர் வடிதல், பீனசம், மூலம், வயிற்றுக் கோளாறு, வாதக்கால், சனி, கோழை முதலிய நோயுண்டாம், Low level countries — The inhabitants here prone to catarrhal and hemorrhoidal disorders to obstructions of the abdomen and to swollen legs. The phlegm disorders generally prevail here. The plants growing here yield plentiful juices but mostly sweet.

3. சமபூமி, இதில் இருப்பவர்களுக்கு மேற்கண்ட நோய்களில் சமயப்படி ஏதாவது ஒன்றால் பீடிக்கப்படுவார்கள், இவ்வூர்களின் மூலிகைகள்தான் மருந்திற்கு முக்கியமானவை, Flat countries — people of this place are attacked of diseases mentioned in either of the above two divisions according to circumstances The best medicines may be procured here provided attention is paid to the weather and season of the year.

**தேசவாளம்**, சுக்கு, dried ginger.

**தேசறம்**, see தேசகி.

**தேசனம்**, மருள், hyacinth aloe — Sansveira rox burghiana.

**தேசனி**, மஞ்சள், turmeric — Curcuma longa.

**தேசாச்சாரம்**, மயிர், hair; 2. ஊரின் ஒழுக்க பழக்க வழக்கங்கள், இது மதத்தைத் தழுவியும் வரும், proprity practice custom usage etc., of a particular country. It may also depend upon the rules and distinct observances of their religion etc.

**தேசாத்தம்**, விடத்தேர், ashy babool, sore eye plant — Dichrostactys cinerea

**தேசாந்திரி**, உடைந்த ஓடு, a broken pot used as a begging bowl.

**தேசாம்புரம்**, திப்பிலிமூலம், root of long pepper — Piper trichotomum.

**தேசாவரம்**, மலைகளில் வைத்துப் பயிராக்கும் கண்ட திப்பிலி, see தேசாம்புரம்.

**தேசாவளம்**, see தேசவாளம்.

**தேசானுபாதிஸி**, அவன் வசிக்கும் தேசத்தின் மக்கள் கலாச்சாரத்தைப் பின்பற்றுபவன், one who follows the habitate of the people of the country in which he resides.

**தேசி**, எலுமிச்சை, lime — Citrus medica — acida; 2. பெருங்குதிரை, a large horse; 3. நாதம், woman's ovarian secretion; 4. நெருப்பு, fire; 5. பிண்டம், foetus; 6. கழுதை, ass.

**தேசிகபாலம்**, கழுதை அல்லது குதிரை மண்டை ஓடு, skull of an ass or a horse.

**தேசிகம்**, பொன், gold; 2. அழகு, beauty; 3. நாதம், see தேசி ஓர் நாசிநோய், a disease of the nose.

**தேசிகன்**, கழுதை, ass.

**தேசிக்காய்**, எலுமிச்சங்காய், lime fruit.

**தேசிதேவதாரு**, ஓர்வகைத் தேவதாரு, a varity of Pinus deodara.

**தேசிநிலை**.

**தேசிநீர்**, எலுமிச்சம்பழச்சாறு, juice of lime fruit; 2. கழுதை அல்லது குதிரை மூத்திரம், urine of an ass or a horse.

**தேசிப்பல்**, குதிரைப்பல், tooth of a horse.

**தேசிப்பழச்சாறு**, எலுமிச்சம் பழச்சாறு, juice of lime fruit.

**தேசிப்பழம்**, எலுமிச்சம் பழம், lime fruit ( roped ).

**தேசிப்பால்**, கழுதைப்பால், milk of an ass; 2. see தேசிநீர்.

**தேசிபுதினா**, யூனானி மருந்திலுபயோகப் படும் ஓர்வகைப் புதினா, Indian pepper mint — Mentha sativa.

**தேசிமாதவம்**, கழுதை, ass.

**தேசியமுரி**, see தேசிமூத்திரம்.

**தேசியம்**, பொன், gold.

**தேசியாம்கரியுப்பு**.

**தேசியுப்பு**, கழுதை மூத்திரத்திலுப்பு, salt extracted from the urine of an ass.

**தேசியெரு**, வைத்தியமுப்பு, quintessence salt useful for preparing medicine; 2. கழுதைவிட்டை, excreta of an ass.

**தேசிவித்தை**, எலுமிச்சம் பழத்தைக்கொண்டு செய்யும் ஓர் மாந்திரீக வித்தை, a jugglery in respect of a lime, 2. கழுதைத் தலை மண்டை யோட்டினின்று மைதிரட்டி உபயோகப்படுத்தும் ஓர் சாலவித்தை, a magic performance held with the aid of black paint collected from the skull of an ass.

(பிரமமுனி சூத்திரம் — 360).

**தேசு**, மூளை, brain; 2. விந்து, semen, 3. உரப்பு, பலம், strength; 4. பொன், gold; 5. ஒளி, lustre; 6. அழகு, beauty.

**தேசுதரல்,** உடம்பு அல்லது முகத்தில் அழகுண்டாக்கல், making the face or body look beautiful.

**தேசோமந்தரம்,** நெல்லி, Indian goose berry — Embilica officinalis; 2. முன்னை, Indian headache tree — Premna spinosa.

**தேசோமரம்,** see தேசோமந்தரம்.

**தேஜோவதி,** ஓர் மூலிகை, a plant.

**தேசாவம்,** முடக்கத்தான், palsy curer — Cardiospermum halicacabum.

**தேட்கடை,** see தேட்கொடுக்கி, scorpion sting plant.

**தேட்கடைப்பூண்,** see தேட்கொடுக்கி.

**தேட்குடிச்சி,** கதண்டு, bettle; 2 ஓர் பச்சிலை, a green herbacious drug (unknown).

**தேட்கெண்டை,** ஓர் வகைக் கெண்டைமீன், scorpion gobi — Gobicus nuna.

**தேட்கொடுக்கி,** ஆண்டைச் செடி, இதற்கு நக்கிப்பூ, ஊத்திரம் என்றும் பெயர், இது சிறு தேட்கொடுக்கி, பெருந் தேட்கொடுக்கி என இருவகைத்து, இது ஈர நிலங்களில் விளையும், இது வருஷத்திற் கொருமுறை வளரும், 1 அடி உயரம், அடித்தண்டு முசுமுசுப்பாயிருக்கும், இலைகள் ஓரத்தில் வளைந்திருக்கும், காம்புகள் இலையைவிட நீளம், பூக்கள் சிறியவை, நீல நிறம், இது குப்பை மேட்டில் முளைத்திருக்கும், பூடு சீமை ஊமத்தையைப்போல் கெட்ட நாற்றம் வீசும், சமூலம் சிறுகசப்பும் துவர்ப்புமுடையது, மருந்திற்குதவும், இலைச்சாறு பல்வீறு கட்டிக்கும் முகப்பரு கண்ணோய் இவைகளுக்கும் உதவும், மேலும் விரணப்புண், கட்டி, தேள்கடி; பூச்சிக்கடி இவைகளுக்குப் பூசலாம்; இலையையும் பூவையும் குடிநீராகச் செய்து வாய் கொப்பளிக்க தொண்டைப் புண், தொண்டைவலி முதலியவைகள் போம் இதை கஷாயமாகச் செய்து உள்ளுக்குக் கொள்ள சருமநோய்கள் விலகும், இலைச் சாற்றைக் காதில் பிழிய சீழ் வடிதலும், கண்ணிலிட கண்சிவப்பும் மாறும், காயைக் கஷாயமிட்டுக் கொடுக்க மேல் மூச்சு குட்டம் தணியும், நாட்பட்ட புண் கரப்பன் நாசமாம், Scorpion plant, scorpion tail, scorpion sting — Heliotropium indicum alias Heliophytum indicum alias Triaridium indicum. It is also known as Indian heliotrope, Indian turnsole, crocodile's foe etc. It is an annual plant found grown in damp soil and is about 1 foot high, stem hairy, leaves curled at the margin, flowers small lilac bluish. It is a common weed usually among rubbish, the plant has a foetidodour like stramonium (Europe datura) taste a little bitter, whole plant is medicinely an astringent, juice of the leaves is applied to gum boils and pimples on the face and in ophthalmia but chiefly to wounds, sores, boils, stings of scorpion and insects.

**தேட்டுக்கனிகம்,** see தேசாவரம்.

**தேட்டை,** தெளிந்த நீர், clear water; 2. தெளிந்த மோர், clear butter milk which is cooling to drink especially in summer.

**தேட்படை,** கொம்பரக்கு, croton lac tree — Croton aromaticus.

**தேணுச்சம்,** குருந்தொட்டி, commonbala — Sida rhombifolia.

**தேலசிறம்,** மாந்தளிர்க்கல், இதுவே கற்காவி red ochre.

**தேண்மண்டலி,** see தேள் மண்டலி.

**தேதனி,** உறைந்த இரத்தம், clotted blood.

**தேத்தான்,** see தேத்தான் கொட்டை, clearing nut; 2. கழற்சிக்காய், bonduc nut — Caesalpania bonducella.

**தேத்தான் கொட்டை,** தேற்றுமரத்தின் கொட்டை, கொட்டைக்குள் ஒரே விதை, இவ்விதையை அரைத்து அல்லது நசுக்கித் தண்ணீரில் கரைக்க, தண்ணீர் தெளிவுபடும், இதைச் சிறிது தண்ணீரில் கரைக்க நீர் வழவழப்பாயும் கனதியாயுமிருக்கும், இதைக் கொதிக்க வைக்கக் கூடாதும், இவ்விதையைத் தேனிற் கலந்து கட்டிகள் பழுக்கவும், பாலிற் கலந்து கண்ணோய்க்குப் பூசுவதுண்டு, இவ்விதைகள் நீரிழிவுக்கும் வெள்ளைக்கும் கொடுக்கலாம், இம்மாவைக் களியாகக் கிண்டி வயிற்றுக்குப் போட வயிற்று வலியைப் போக்கும், காய்க்குள் இவ்விதையைச் சுற்றிலுமுள்ள சதைப் பற்றும், காய்த்தோலும் வாந்தியை யுண்டாக்கக் கூடியவை, தண்ணீர் தெளிய வைப்பதற்காக முற்றிய தேற்றும் விதையைக் கடையில் விற்பார்கள், ஒரு கொட்டையைத் தண்ணீர்ப் பானையின் உட்பக்கம் தேய்க்க கலங்கலெல்லாம் தெளிந்து சுத்த சலமாகும், ஆனால் ருசியாயிராது, அரைப் பாகத்தினின்று முழுக்கொட்டை வரை சமயம்போல வரைத்து மோரிற் கலக்கி ஒரு வாரம் கொடுக்க நாட்பட்ட கிராணிக் கழிச்சல் நீங்கும், இதை இழைத்துப் பாறை

யுப்பைக் கூட்டிக் கலக்கிக் கண்ணிற்குப் பூச கண்ணிரப்பையின் வீக்கத்தை வாங் கும், தேனில் இழைத்துக் கற்பூரம் சேர்த்து கண்ணிற்பூச நீர் வடிதலை நிறுத்தும், இதன் பழத்தின் உட்சதையை குறிஞ்சாவுக்குப் பதிலாக சீதபேதிக்கும் தொண்டைப் புண் சிகிச்சைக்கும் உபயோகிக்கலாம், தேகச்சூடு, நீர்ச்சுருக்கு இவைகளுக்கும் பேதி மருந்துக் கும் உபயோகப்படும், water clearing tree — Strychnos potatorum. The one seed in the fruit is the clearing nut. The seeds are rubbed or pulverised and mixed in muddy water to make it clear. Seeds pulverised and digested in water yield a thick mucilaginous liquid, which when boiled yields a Coagulam or albumen, they are even pulverised and mixed with honey and applied to hasten suppuration and with milk to sore eyes, they serve as a remedy in diabetes and gonorrhoea, they are sometimes applied over the abdomen in the form of a paste to relieve colic, mucous or thin pulp round the seed and the pericarp of the fruit are emetic. Ripe seeds are dried and sold in the bazaars to clear muddy water and render it pottable. One seed is enough to rub inside of an earthern vessel into which the water is poured and allowed to settle, in a short time the impurities subside leaving the water perfectly clear and tasteless.

Medicinally half to one seed, as circumstances would permit, rubbed into a fine paste with some buttermilk and given internally for one week is an effectual remedy in the treatment of long standing and chronic diarrhoea. Rubbed with water and rock salt they are applied to chemosis in the conjunctiva, and rubbed up with honey and a little camphor they are applied to the eyes in lachrymation or copious discharge from the eyes. The pulp is a good substitute for ipicacuanha in the treatment of dysentery and bronchitis. It forms a good purgative and a remedy for cooling the system and for curing the difficulty of passing urine.

NOTE :— The tree is very common in mountainous districts, it bears many small greenish — yellow, fragrant flowers, berry shining black, when ripe, one seeded. Properly of clearing water depends on the albumen and casin which seeds contain, seeds are substituted for British ipecacuanha, flower religious. The powder of the seed is given internally with milk in irritation of the urinary organs. The nut and kernal are separately sold in bazaars.

**தேத்தி,** தேத்தான் கொட்டை, which see.

**தேத்தியன்,** see தேத்தான்.

**தேநவர்,** சுசுருதரோடு ஆயுள் வேதங் கற்ற வர், the one who had studied Ayurveda with Sushruta.

**தேநு,** பசு, cow in common; 2. காராம்பசு, a sacred cow with black nipples.

**தேப்புல்,** தேயிலைப்புல், அல்லது சுன்னரிப் புல்.

**தேமகுகரணம்,** திரிதோஷம், அதாவது வாத பித்த சிலேட்டுமச் செயல்களைப் பற்றிக் கூறும் நூல், that branch in Medicine which dealt with obsolete doctrine that all diseases arise from some charge of the three humours vatha ( wind ) bile and phlegm due to their abnormal conditions in the system — Humoural pathology.

**தேமம்,** ஈரம், dampness.

**தேமல்,** கபபித்தம் அதிகரிக்கும் போது உடம் பில் வளையாகாரமாய் தடிப்பின்றி வேறு நிறத்தையும் சிலசமயம் நமைச்சலையும் உண் டாக்கும் தோலைப் பற்றிய ஓர் வகைத் தழும்பு, இது சாதாரணமாய்ச் சிறிது மஞ் சள் நிறமாயும் புள்ளி புள்ளியாயும் அல்லது தழும்புகளாயும் தோன்றும், பெண்களுக்கு இது அழகைக் கொடுக்குமெனக் கருதப் படும், இதனால் உடம்பிற்கு அதிக தொந்தி ரவு ஏற்படாது, இது அடிக்கடி மாறும், அமுக்கார லேகியம் நன்மை பயக்கும், a kind of mild affection generally of round discoloured spots not elevated above the surface. It is said to be due to aggravated condition of phlegm and bile in the system and is marked at times by itching sensation. It may generally occur either in spots or in patches of slight yellow colour in females in different parts of the body when it is considered as adding beauty to the skin, a kind of freckle or macula but properly

vitiligo occuring in youth and adult life. It is neither harmful no injurious. It may disappear and reappear.

Aswagandhi legium is effective in these cases by c. d.

1. அழுக்குத்தேமல், dark discolouration patches with foliation.
2. அழகுதேமல், yellow freckles.
3. பொங்குதேமல், yellow spots indicating good circumstances in life.
4. மங்குதேமல், spots indicative of disease evil or death.
5. உத்கோடரோகம், அதாவது எச்சிற்றழும்பு, a kind of ring worm;
6. கிலாசம், a discolouretl spot on the skin without any sccretion.

NOTE :— In Tamil medicine it is not considered as a disease of the skin, although it is sometimes marked by exfoliation of the epidermis, itching sensation and discoloursation. It is of different kinds affecting mostly the face and the trunk of the fair people in yöuth and adult life. The exact synonyms in English cannot be traced.

**தேமல்படர்தல்,** உடம்பில் தேமலுண்டாதல், spreading of the yellow spots on the body.

**தேமல்முகம்,** தேமல் படர்ந்த முகம், freckle face.

**தேமனம்,** புளிப்பு, sourness.

**தேமா,** தித்திப்பு மாங்காய், sweet mango as as apposed to sour mango. (புளிமா).

**தேமேகவிடயம்,** வெள்ளுள்ளி, garlic; 2. வெள்ளரி, cucumber.

**தேம்,** கள், toddy; 2. தேன், honey; 3. வாசனை, fragrance; 4. தித்திப்பு, sweetness.

**தேம்பல்,** களைத்தல், fainting; 2. பழம்பூ, faded flower; 3. இளைத்தல்; emaciating growing thin; 4. வாடல், fading, withering; 5. அழுதல், weeping

**தேம்பாகம்,** தேன்தொடைமரம்.

**தேம்பாரை,** சேரான்கொட்டை, marking nut — Semi carpus anacardium.

**தேம்பியழல்,** தேம்புதல், sobbing.

**தேம்புரம்,** வெட்டத் தாமரை, Indian lotus croton — Macaranga indica.

**தேம்புறல்,** see தேம்பல்.

**தேயக்கல்,** கருடப்பட்சிக்கல், a stone supposed to be in the head of Brahminy kite used as an antidote for snake bite; 2. கருடக்கல், a mineral stone used as a charm.

**தேயசு,** விந்து, seminal fluid; 2. அழகு, beauty; see தேசு, 3. ஒளி, brilliance; 4. தேஜசு, light; lustre.

**தேயம்,** உடல், body; 2. இடம், place, location.

**தேயாமணி,** வைரம், diamond so called from its notability for hardness.

**தேயிமயம்,** தழுதாழை, wind killer, Cleodendron phlomoides.

**தேயிலை,** பச்சைத் தேயிலைச் செடி, இது பூர்வத்தில் சீனதேசத்தில் உற்பத்தியாகி, பிறகு இந்தியாவிற்குக் கொண்டுவரப்பட்டு ஆசாமில் முதலில் பயிராக்கப்பட்டது, அதற்குப் பிறகுதான் தென்னிந்தியாவிலும் மற்ற இடங்களிலும் பயிரிடப்பட்டது, தற்காலம் இவ்விடங்களில் நீலகிரி, சேர்வராயமலை, பழனி, ஆனைமலை, வைனாடு, குடகு, இலங்கை இவ்விடங்களில் சாதாரணமாய்ப் பயிராகும், ஆயினும், சீனம், ஆசாம், இலங்கை இவ்விடங்களில்தான் விசேஷமாகப் பயிராகிஐரோப்பாவிற்கு ஏற்றுமதியாகிறது. இயற்கையாகவே இதில் பேதங்களில்லாவிடினும் பதப்படுத்துவதில் தான் பேதங்களுண்டாம், இதில் பச்சைத் தேயிலை கருப்புத் தேயிலை என இரண்டுவகைதான் முக்கியமானவை, இது மலைச்சரிவுகளில் தான் நன்ருய் வளரும், அதிக வெயில் உதவாது, இது வைத்த 3 வருஷத்திற்குப்பிறகு தான் பலன் கொடுக்கும், 7-8 வருஷம் வரையில் வருஷத்திறகு 3 முறை பலன் கொடுத்தப்பிறகு பட்டுப்போகும்.

இது சாதாரணமாய் 7—8 அடி தான் இருக்கும், அதிகமாக வளர விடுவதில்லை, அதிகப்பட வளர்ந்தால் இலை பறிக்க கஷ்டம், ஆகவே 4—5 அடிக்குமேல் வளர விடுவதில்லை, இலைகள் மெல்லியதாகவும், காம்புகள் குட்டையாயும் ஓரங்களில் வாளைப்போல் கூறிய முனைகளும் மிகவும் பச்சை நிறமும் பளபளப்புள்ளதாயுமிருக்கும், பயிரிடுவதில் பெரிய செடியைக் காட்டிலும் சிறிய செடிகள்தான் சிறந்தவை.

இத்தேயிலை வயித்தியத்தில் அதிகமாக உபயோகப் படுவதில்லை, நூல்களிலும் இதைப்பற்றி ஒன்றும் கிடைக்கவில்லை.

ஆகவே தற்கால அனுபவத்தின்படிதான் இதன் குணங்களைப்பற்றிக் கூறவேண்டியிருக்கிறது, இதன் கஷாயம் சுறுசுறுப்பைத் தரும், துவர்ப்பாகையால், வாய் கொப்பளிக்க உபயோகப்படும், சாதாரண வளவில் கஷாயத்தைப் பானமாக உட்கொள்ளுவதால் மூளைக்கு ஓர்வித உற்சாகத்தையும் மனோவிளக்கத்தையும் தரும்; ஆயினும் தூக்கத்தைக் கெடுத்து மூளைக்குக் கடுப்பை யுண்டாக்கும், இதை பெரும்பாலும் பானமாகவே உபயோகிப்பதால் சீரண சக்திக்கு கெடுதியை விளைவித்து மயக்கத்தையும் தரும், அதிகவளவில் உபயோகித்தால் பைத்தியமும் உண்டாகும், இதில் ஒரு விதமான சுண்ணவிஷம் இருப்பதால் இதன் நன்மையைவிட உடம்பிற்கு விளையும் தீமை அதிகம் என்பதில் ஐயமில்லை, சிலருக்குத்தான் இது சிறுசுறுப்பையும் மனக் கிளர்ச்சியையும் தரும், பெரும்பாலும் கெடுதியே, ஆகையால் அதிகப்படால் மிதமாகவே உபயோகப் படுத்திவரில் உடல்பில் சுறுசுறுப்பையும் மூளைக்குக் கிளர்ச்சியையும் உண்டாக்கும், அதிக உறைப்புள்ள பானம், கெடுதிவிளைப்பதே, தினப்படி காலை மாலை இரண்டு தடவைக்கு மேல் குடிக்காமலிருப்பதே குணம், Green tea, China tea, char — Camellia theifera alias C. viridis. This plant is a native of China and was brought to India and cultivated at first in Assam and then in several parts of S. India as Nilgris, Shervaroy hills, Palni and Anamalai hills, Wynad, Coorg, Ceylon and other places. In China and Assam especially it is grown in abundance and exported to Europian Countries. Natura ly there does not seem to be any difference in the plants but the varieties come in only when they are classified according to the process by which they are differently cultivated and prepared for use. The chief varieties are only two the green tea and the black tea. The plant thrives in great abundance only in the loamy soil on the sides of hills and does not require much of sun's heat. It takes three years before it is found fit for use and is continued for 7 or 8 years by pruning thrice every year.

It is generally allowed to grow only 7—8 ft. for it will be a difficult task for prunning it allowed to grow to agreater height. In cultivating small plants are preferable to large or taller plants and so, they are sometimes not allowed to grow even more than 4—5 ft. The leaves are of a deep shining green colour short stalked with saw edged margin Tea is seldom used in medicinally and nothing is said about it or its uses in medicinal books. It is only from its modern use that its properties are ascertained, it is a stimulant in strong infusion and as an astringent lotion is found useful in gargling. It is largely consumed in the forms of drinks, in moderate quantities it stimulates the mental faculties, clears the mind and facilitates its working, its baneful effect lies in preventing sleep and occasioning mental irritability, it even affects the digestion and produces giddiness and at times the disorder of the mental faculties leading almost to insanity. As it is said to contain some calcium poisons and to have narcotic effects on man, it has to be taken with due caution. The baneful effects from its immoderate abuse are considered to be more then the good results said to be caused by its moderate use. In some it is highly stimulating and expilarating, but in others it is injurious and its effects are depression and lowness of spirits. So, the prudence in using it lies only in the moderate use of it. Very strong tea is mischievous for the reason that it has a powerful action on the *nervous system*. The use of it twice a day, morning and evening and that in limited quantities is most advisable.

NOTE : An infusion of tea seeds was once used as a remedy for insect blights. The alkaloids of tea called theine is identical with that of coffee or Caffcine and so the effects of the use of both are the same. When contrasted with China teas, Madras teas have grater strength and stronger aroma. The two classes green and black are both the products of the same plant but differently prepared for use. The adulteration of tea leaves lies in the substitution of leaves of other plants and the introduction of exhausted tea leaves, re-rolled and dried. The oil from seeds resembles that of olive.

**தேயிலைக்கரண்டி,** 60 துளி கொண்ட ஓர் *சிறு கரண்டி,* a small teaspoon holding 60 drops of liquid.

**தேயிலைத்தண்ணீர்**, தேயிலையைத் தண்ணீரி லிட்டுக் காய்ச்சி வடித்த நீர்க்கஷாயம், decoction extracted by boiling the tea and fitering it. see தேயிலை.

**தேயு**, நெருப்பு, உடம்பில் நெருப்பின் 5 செயல் கள், fire, the five actions of fire in the human system; 1. பசி, hunger; 2. சோர்வு, faintness; 3. பயம், fear; 4. நித்திரை, sleep; 5. கேள்வி, hearing.

**தேயுக்கூறு**, உடம்பின் பஞ்ச பூதங்களி லொன்ருகிய நெருப்பின் பகுதி, one of the *five divisions of elements in the human* body i. e. fire.

**தேயுசாரம்**, see தேசாவரம்

**தேயுடலி**, see தேவாங்கு, sloth; 2. மெலிந்த வுடம்பையுடைய குழந்தை, an emaciated child.

**தேயுடலி**, see தேவ ாங்கு.

**தேயவுப்பு**, பஞ்சபூதவுப்பில் தேயுக்கூருகிய கம்பியுப்பு, அதாவது ஆருங்காய்ச்சல் வெடி யுப்பு, இதனுல் வயது சென்ற பெண்ணும் கருப்பமடைவாள், See கம்பியுப்பு. This is the salt of fire element. It is sixtimes purified potassium nitrate. It will make even an elderly woman to conceive.

**தேயுறை**, தேய்க்த மருந்து, a medicine applied by rubbing — Anatriptic.

**தேய் கடைப்பிள்ளை**, வளர்த்தி யில்லாத குழந்தை, a child of stunted growth or dwarfish in size; 2. மெலிவடைந்த குழந்தை an emaciated child.

**தேய்க்கல்**, see தேக்கல்; 2. தேய்க்குதல், rubbing.

**தேய்தல்**, குறைதல், decreasing; 2. மெலி தல், emaciating.

**தேய்தவளை**, see தேரை.

**தேய்த்தல்**, உடம்பு துலக்கல், rubbing as of body.

**தேய்த்துக்குளித்தல்**, உடம்பு தேய்த்துக் குளித்தல், bathing with rubbing of body.

**தேய்த்துக்கொள்ளல்**, எண்ணெய் தேய்த் துக் கொள்ளுதல், rubbing or smearing of oil on the body; 2. பெண்கள் ஒருவரோடொ ருவர் ஏற்படுத்திக் கொள்ளும் கலவி, an unnatural or immoral practice between women consisting in mutwal friction of their genitals — Tribadism.

**தேய்ந்தபல்**, குறைந்த பல், worn - out tooth.

**தேய்வாங்கு**, see தேவாங்கு.

**தேய்வாங்கு பிள்ளை**, மிகவும் மெலிந்த குழந்தை, an emaciated or ill favoured child.

**தேய்வு**, குறைவு, deficiency; 2. குறை பாடு, wearing away; 3. மெலிவு, emaciation; 4. அழிவு, deterioration; 5. பல் தேய்வு, erosion of tooth.

**தேரகத்தி**, தரகதிமரம், large brahma's baniyan rough leaf ug—Ficuscuma alias F. conglomerata.

**தேரகம்**, செவ்வத்தி, red fig—Ficus heterophylla.

**தேரணை**, இன்புறத்தான், black honey thorn — Canthium didymum.

**தேரல்**, தேன், honey; 2. தேருதல், recovery from illness.

**தேரனுர்**, see தேரையர்.

**தேரன்**, see தேரையர்.

**தேராத்தாழை**, கூத்தன் குதம்பை, a kind of screw pine.

**தேரிலைச்சி**, சத்திசாரணை, diffuse hoyweed—Boerhaavia rependa.

**தேருமச்சி**, நத்தை, snail, wekle; 2. ஊமச்சி, winding shell trochus.

**தேரூர்ந்த சித்தியரன்**, சவர்க்காரம், fuller's earth; 2. சவுக்காரக்கட்டி, soap prepared from fuller's earth mixed with other ingredients.

**தேரை**, தவளையின் ஓர் பேதம்— இது கல் அல்லது பாறைக்குள் வசிக்கும், தலை எலும் பெழும்பிய வரிகளையும், கால்கள் பாதிவரை ஒட்டியதாயும் கருப்பாயுமிருக்கும்; இது கீச் சுச்சத்தமிடும், இது குழந்தைகள் பேரில் பட்டால் தோஷம் தாங்கி இளைத்துபோவர்க ளென நம்பப்படும், Indian toad — Bufo melanotictus alias bengalensis head with more or less bony ridges, toes half webbed upper surfaces with spring warts. It makes a chirping sound. It is said to find its above in stones and rocks; it is also believed that by its coming in contact with children by accident, the latter owing to the morbid affection caused there by is found emaciated gradually,

**தேரைக்கணம்,** குழந்தைகளுக்கு வாதநாடி மற்ற நாடிகளோடு பின்னிக்கொண்டு, அதனால் உட்காய்ச்சல் அன்னத் துவேஷம் வறட்சி முதலிய குணங்கள் காணும், ஓர் வகைக் கணநோய், a congenital disease in children said to be due to the interturining of Vatha pulse with other pulsations of the remaining two humours which bring about complications and affect the health of children. It is marked by internal fever, loss of appetite and consequent aversion to food thirst etc.

**தேரைக்கால்கை,** நோய் அல்லது தோஷத்தினால் குச்சியைப்போல் இளைத்துப்போன குழந்தைகளின் கால்களும் கைகளும், legs and arms (limbs) of children emaciated through disease or morbid affections.

**தேரைக்குண்டி,** நோய் அல்லது தேரை தோஷத்தினால் இளைத்த பிட்டம், buttocks losing its roundity due to emaciation arising from disease or toad affections; 2. சூத்தொட்டி, flat buttocks.

**தேரைச்சூரணம்,** தேரையை ஆடி மாதத்தில் பிடித்துவந்து தலையை அறுத்து, குடல் நீக்கி நிழலிலுலர்த்தி மைபோல இடித்துத் தயாரிக்கும் பொடி, இதில் 6 குண்டுமணி எடை சர்க்கரையுடன் சமமாகச் சேர்த்துக் கொடுக்க நீர்க்கோவை, பாண்டு இவைகள் போம். a fine powder prepared from the Indian toad by drying it in the sun and pulverising it after removing its head and the intestine and other viscera 6 grams of this powder mixed with an equal quantity of sugar and taken internally is considered to be a good remedy in cases of accumulation of morbid fluid in the system such as dropsy etc.

**தேரை தோஷம்,** உடம்புலர்ந்து வற்றி வெளுத்து, கண் பொடித்து கை கால் வற்றி மேல் மூச்சு வாங்கி நெரிகுரல்பட்டு, தேரையைப்போல் சுருங்கி குழந்தைகளைக்கொள்ளும் ஓர் நோய். இது குழந்தைகளின் மேல் தேரை விழுந்து பீச்சுவதனால் ஏற்படுவதாகச் சொல்லும் ஓர் வகைத்தோஷமெனக் கருதப்படும், a fatal disease in children said to be due to transmission of infection caused by the Indian toad falling and secreting its urine on them. It is marked by emaciation pale skin, affection of the eye, withering of limbs, hard breathing affections of larynx and fading warning like toad by its malign and baleful influence.

**தேரைநடத்திய வாசகன்,** காய்ச்சுவழலை.

**தேரைபாய்தல்,** தேரை தோஷத்தினால் உடம் பிளைத்தல் emaciation of the body especially in children arising from the malign and baleful influence of Indian toad.

**தேரைமுகந்தகாய்,** பயனற்ற தேங்காய், blighted or withered cocoanut — cocoanut with no kernal inside.

**தேரையர்,** அகஸ்தியரிடத்தில் தமிழ் வைத்தியங்கற்றுக்கொண்ட மாணாக்கருள் ஒருவர் இவர் ஓர் தெய்வ வைத்தியர், இந்திரன் தீராத்தலைவலியால் பீடிக்கப்பட்ட பொழுது இவர் அதன் காரணத்தை ஒருவாறு கண்டு தேர்ந்து, கபால வோட்டைத் தறித்து உள்ளே தேரையைக் கண்டு ஒரு பாத்திரத்தில் தண்ணீரைக் கொண்டு அருகிற் காட்ட, தேரை அதில் துள்ளி விழ, மறுபடியும் கபாலத்தை மூடி நோயைத் தீர்த்ததினால் இவருக்கு தேரையரென இக்காரணப் பெயர் அமைந்ததென்றும் சொல்வதுண்டு, இவர் தமிழில் அனேக வைத்திய நூல்களை எழுதியுள்ளார்; ஆயுள் வேதத்திலும் தேர்ச்சியடைந்தவர்.

இவரைப்பற்றி வேறுவிதமான ஒரு கதையுண்டு; அகத்தியர் தமக்குத்தெரிந்த ஞானோபதேசங்களைத் நக்க சீஷன் ஒருவனுக்கு உபதேசிக்க எண்ணங்கொண்டு, அதற்கு ஊமைப்பிள்ளையாயிருந்தால் நலமெனத் தெளிந்து, பொதிகையைச் சார்ந்த ஊருக்குள் வருகிற செய்தி ஔவையார் அறிந்து முற்பிறப்பில் இராமதேவர் அல்லது யாகோப்பு எனப் பெயர் வகித்தவரை அழைத்து அவரிடம் அகத்தியர் கொண்ட கருத்தைச் சொல்லி, தம்முடைய மந்திரசக்தியினால் அவரை ஊமையாக்குவித்து அகத்தியரிடம் பொன் பெற்றுக்கொண்டு செல்ல இவர் அகத்தியரிடம் தொண்டு செய்து வந்தார், அப்போது மதுரைச் சங்கப் புலவர்களில் நக்கீரருக்குப் பல ஆண்டுகளாக தலைவலி ஏற்பட அகத்தியர் தம் சீடரோடு சென்று ஷெயாருக்கத் தலையைக் கீறி மூளையைப் பற்றிக்கொண்டிருக்கும் தேரையைச் சிமிட்டா கொண்டு எடுக்கப்போகையில் இராமதேவர் தடுத்து ஒரு தாம்பாளத்தில் தண்ணீர் கொண்டுவரச் சொல்லி, பக்குவமாகத் தாம்பாளத்தைக் காண்பிக்க, தேரை மூளைவிட்டுத் தண்ணீரில் குதித்து வெளி வந்தது, இவ்வறிவுக்கு அகத்தியர் வியந்து இவருக்கு தேரை வைத்தியம் செய்ததால் தேரையர் எனக் காரணப்பெயரிட்டார். பிறகு இவர் இறுமாப்படைந்து ஞானோபதேசம் பெற்று மலையில் தங்கியிருக்கும்போது அநேக மலைகளை பொன் வெள்ளியாக்க, பல சித்தர்களும் ரிஷிகளும் அகஸ்தியரிடம் முறையிட அவர் கோபங்கொண்டு இவரை இரண்டாகக் கிழித்தெறிந்தார்.

தேரையர் முன்னதாகவே தெரிந்து தன் சீடரிடம் தமக்கு நேரிடப்போகும் கதியைத் தெரிவித்து, அதற்குப் பிழைப்பிக்க மூலிகை களையும் சொல்லி வைத்திருந்தார், இவர் கிழிக்கப்பட்டவுடன் ஷெ சீடர்கள் அவரை மூலிகைகளால் உயிர்ப்பித்தார்கள், அதற் குப்பின் தேரையர் அநேக அற்புதங்கள் செய்திருந்தார், one of the several scholars who studied Tamil Medicine under Agastya. He is the celestial physician. There is also an allusion about his skill in treating diseases. When Indira of the celestial world was attacked of incurable head ache, he diagonised the disease and opened skull. and finding a toad lodged inside, he exposed near it a vessel containing water, when the toad on seeing the water jumped into it. He then closed the skull, and thus he cured the case. There is another version referring to the same case.

**தேரைவிழுந்த பிள்ளை,** தேரை தோஷத்தால் பீடிக்கப்பட்டு இளைத்த குழந்தை, an emaciated child which is affected by the baleful influence of the Indian toad.

**தேர்க்கள்ளி,** ஓர் சீமைக் கள்ளி, இதன் பூ தாமரையைப் போலிருக்கும், a kind of foreign spurge known as Madagascar spurge — Euphorbia bojeri. It flower very much resembles lotus.

**தேர்க்கடம்பு,** கொழுஞ்சிமரம், common country orange — Citrus aurantium.

**தேர்ப்பூடு,** பூநீறு, efflorescent salt of fuller's soil.

**தேர்வாசம்,** அரசு, peepu tree — Ficus religiosa.

**தேலம்,** தைலம், medicated oil — Oleum.

**தேலிகோகனம்,** நரிக்கொன்னை, red Indian laburnum — Cassia marginata.

**தேலுமணிச்செடி,**

**தேவகந்தம்,** நெய்ச்சிட்டிப்பூடு, round leaved tadda—Gravia orbiculata; 2. குங்கிலியம், Indian daumer — Shorea robusta; 3. சாம் பிராணி, bezoin — Styrax benzoin.

**தேவகந்தர்,** சிதேவியார் செங்கழுநீர், a kind of red water lily—Nyphaea odorata.

**தேவகந்துலி,** see தேவகந்தர்.

**தேவகன்னி,** வாழை, plantain tree — Musa paradisiaca; 2. மதகிரி வேம்பு, Indian mahogany — Chukrassia tabularis.

**தேவகாஞ்சனம்,** தேவதாரு, deccany deodar Indian cedar tree — Erythroxylon curreolatum.

**தேவகாஷ்டம்,** see தேவகாஞ்சனம்; see தேவ தாரி; தேவகார மஞ்சள்.

**தேவகாளுதி,** ஆலமரம், banyan tree — Ficus bengalensis.

**தேவகெந்தம்,** குங்கிலியம்; see தேவகந்தம்.

**தேவகெந்திதம்,** see தேவகெந்தி.

**தேவக்கிரகம்,** சாந்த பைத்தியத்தை உண் டாக்கும் பேய், a class of demon causing harmless madness.

**தேவசகா,** see தேவகந்தா.

**தேவசிகிச்சை,** தாதுபொருள்களைக் கொண்டு செய்யப்படும் பரிகாரம், treatment with mineral preparations.

**தேவசித்தன்,** கமலமுனி, name of a sage Kamalamuni.

**தேவசிருட்டை,** மதுபானம், any sweet drink; beverage.

**தேவசுமம்,** கிராம்பு, clove — Engenia caryophyllata.

**தேவசேகரம்,** தவனம், maid's love — Artemesia abrotanum (typica).

**தேவதத்தன்,** தசவாயுவிலொன்று, இது ஓட் டம், இளைப்பு, வியர்வை, கொட்டாவி இவை களுக்குக் காரணமாகவும், பிண்ட முதிர்ந்த பின் பிரசவமாகவும், பிராணன் பிரிந்தபின் உடம்பு வீங்கி வெடிக்கவும் செய்யும், one of ten vital airs in the human body. It is responsible for different actions or changes in the system — ruming fatigue, perspiration, yawning and also for child birth on the completion of full term and for bloating and bursting of the dead body.

**தேவதந்தம்,** சிவனார் வேம்பு, Shiva's neem — Indigofera asphala thoides.

**தேவதந்தோபலம்**, see தேவகந்தர்.

**தேவதரு**, தேவ்தாரு; 2. கற்பகத்தரு, one of the five miraculous trees of swarga (Heaven) yielding what ever is desired; 3. செம்புளிச்சை, red hemp bendy — Hibiscus gossypifolius; 4. மந்தாரம், mountain ebony — Bauhinia acuninata. See தேவதாரி.

**தேவதா, தீன்பூ**, which see.

**தேவதாபுட்பம்**,

**தேவதாடம்**, ஓர்வகைப் புல், a kind of grass— Andropogon serratus

**தேவாமணி**, மணிக்குடல், mesentry, small intestines.

**தேவதாமிகம்**, செம்புளிச்சை; see தேவதரு.

**தேவதாமுகி**, சருக்கரைவள்ளி, sweet potato.

**தேவதாரம்**, செம்மணத்தி; இது ஓர் சிறு மரம்; இது மலையாளத்தில் விளையும், பூக்கள் சிறியவை; பச்சை நிறம், வருஷம் முழுவதும் பூக்கும், வனந்திரங்களில் காணலாம்; இதன் கொழுந்து துளிர் மருந்திற்குதவும், உடம்பிற்கு குளிர்ச்சியைத் தரும்; இதை நசுக்கி நல்லெண்ணெயிற் கலந்து தலைக்குத் தேய்த்துக்கொள்ளலாம்; பட்டையைக் கஷாயமிறக்கி உடம்பு பலவீனத்திற்குக் கொடுக்கலாம்; இதன் கட்டையைப் பொடித்துச் சந்தனத்திற்குப் பதிலாக உபயோகிக்கலாம்; பஞ்சகாலத்தில் ஏழை சனங்கள் இவ்விலையைத்தின்பார்கள்; இதன் கட்டையினின்று மரவெண்ணெய் இறக்கலாம், decanny deodar, Malabar cedar — Erythrooxylon monogynum It is a small tree found in Malabar; flowers small gree.nish; flowering nearly all the year, grows in dry jungles, young leaves and tender shoots are medicinally refrigent; bruisid and mixed with gingelly oil are applied as liniment to head; bark occasionlly administered in the form of infusion as tonic; wood is powdered and used for sandal wood. In famine time leaves are eaten by staring poor. Wood - tar of a reddish brown colour is procured from the wood.

**தேவதாரம்**, சம்பு தேவதாரி, jambool deodar polyalthia longifolia; 2. மதகிரிவேம்பு, common bastard cedar — Cedrella toona; 3. தேவதாரி, which see.

**தேவதாரன்**, தேவதாரம், which see.

**தேவதாரி**, இது ஓர் பெரிய மரம், இம் மரம் இமயமலைச் சாரலில் விசேஷம், இது உயரமாகவும் பார்ப்பதற்கு அழகாகவுமிருப்பதால் வேறு இடங்களில் இதை அழகாக வைத்துப் பயிராக்குவார்கள், இதற்குப் பெருங்கிளைகள் உண்டு, கீழ்க்கிளைகள் தொங்கியும் மேற்கிளைகள் விலாசமாகப் பரவியும் இருக்கும், இலைகள் பரவியும், உச்சியில் கொத்தாகவும் காணப்படும், இதினின்று கற்பூரத்தைலத்தைப்போல் சாரம், வடியும், இது நாற்றப் புண்களுக்கும், சரும நோய்களுக்கும், உபயோகப்படும், குட்டத்திற்கும் பூசலாம், இதன் சாம்பல் சாயமேற்றுவதற்கு காரமாகவுபயோகப்படும், இதன் பட்டை மிகத்துவர்ப்பு, ஆகவே தினசுரம், முறைசுரம், அசீரணபேதி, சீதபேதி இவைகளுக்கு உபயோகப்படும், இப்பட்டையின் தூள் விரணங்களுக்குத் தூவலாம், இதன் கஷாயம் முக்கியமாக சீதபேதி பித்தசுரத்திற்கும், தீராத கழிச்சலுக்கும் கொடுப்பதுண்டு, இலைகளுக்கும் கற்பூர தைலச்சத்துண்டு, இதன் மரத்தூள் வயிற்றின் வாயுவைப் போக்கிச் சீரணசக்தியை உண்டாக்கும், இம்மரத்திற்குப் பொதுவாகவே துவர்ப்பும் வெப்பத்தைத் தணித்து வாயுவை அகற்றும், குணமும் உண்டு, ஆகவே பீனசம், பழயசுரம், நீரேற்றம், உடம்பு உஷ்ணம் இவைகளை குணமாக்கும், மரக்கட்டையின் கருப்பு நிறமான தைலத்தை விரணம், சரும நோய், குட்டம் முதலியவைகளுக்கு பூசலாம் கட்டையின் இழைத்த சந்தனத்தோடு பொட்டிலுப்பு சேர்த்து வீக்கங்களுக்குப் போடலாம், இதன் வகைகளாவன.

1. தட்சண தேவதாரி, deccany deodar see தேவதாரம்.
2. இமாலய தேவதாரி, Himalayan cedar see தேவதாரி.
3. சம்பு தேவதாரி, jambool deodar — Polyalthia longifolia. see நெட்டிலிங்கு.
4. நாட்டு தேவதாரி, country deodar — Erythroxylon indicum.
5. சீமைத் தேவதாரி, English deodar — Pinus longifolia.
6. சுருள் அல்லது சரள தேவதாரி, same as No. 5. Pinus longifolia.
7. சுனை தேவதாரி,
8. அசோக தேவதாரி, same as No. 3. (நெட்டிலிங்கு)

Indian cedar. Himalayan cedar — Cedrus deodara alias Pinus deodara. It is the great cedar of the Himalayas; a large tree with large branches, the lower ones some what hanging down, upper ones spreading, leaves also spreading or pendulous at the top. It yields a coarse fluid kind of turpentine called 'kelonkatel' used as a stimulent to foul ulcers and skin diseases, it is also

applied in leprosy and its ashes as mordant. Being a large and graceful, tree, it is largely cultivated in India as an ornamental tree.

The tree as a whole is an astringant, febrifuge and carminative. So, it proves useful in cases of nasal catarrh, chronic fever, swelling, bodily warmth or heat. The oily black substance extracted from the food forms an embroation in cases of wounds and injuries, skin diseases and leprosy. The paste obtained by rubbing the wood mixed with sandal wood paste and nitre is applied for swelling.

The bark is powerfully astringent and so forms a good remedy in remittent and inter mittened fevers, diarrhoea and dysentery. Its powder exerts great influence in the treatment of ulcers and so employed with much benefit. It is considered especially useful in belious fevers and inveterate diarrhoea and dysentery arising from atony of the muscular fibre. Leaves are also considered as having properties of turpentine. The wood is carminative.

NOTE: Although the bark is not bitter, it is a fair substitute for Peruvian bark particularly when mixed with powdered bonduc nut. The oleoresin and a dark coloured oil or tar obtained from the wood resembling crude turpentine; obtained by destructive distillation. They form a very useful application manage in horses and sore foot of cattle.

**தேவதாரு,** see தேவதாரம்.

**தேவதாருகோளம்,** முகளத்தின் மேற்பக்கத்தில் விளைந்திருக்கும் வெள்ளை நார்க் கயிற்றின் பின்பிறப்பரப்பிலும், சதுர்த்த மேட்டிற்கு மேற்புரமாகவும், வெளவாலெலும்புகளின் மேல் ஒட்டியிருக்கும், சாம்பல் நிறமான மூளைக்கோளம், சித்தர்கள் இதையே மேருமலையுச்சியெனச் சொல்வார்கள், an outer growth from the inter brain resting upon the midbrain (mesoce phalus) in the interval between the masses of gray matter (thalami) at the base of the brain Pincal gland. It is a rudimentary glandular struchire said to produce an internal secretion. It is figuratively termid by the Siddhar's as the top of Mount Meru.

**தேவதாலிகம்,** பூசினி, pumpkin.

**தேவதாவி,** சாதிக்காய், nutmeg — Myristica fragranis.

**தேவதாவிருட்சம்,** கற்பத்துக்காகவும் ஓர் மரம், இது மேருமலையிலிருப்பதாகவும்; இதன் தழையைத் தின்றால் கற்பதேகமாகுமென்றும் சொல்லப்படும்; an unknown tree said to be useful for rejuvenation. It is believed to be on the top of Meruhills (the supposed high land of Tar Tary immediately to the north of the Himalya mountains.)

**தேவதாளி,** ஓர் வகை தாளி, இதனால் மூலம் குட்டம் போம், எலி விஷத்தைப் போக்கும், a kind of tanly plant (kitchen herb of convol vulus genus. It is a remedy for piles and leprosy; 2. ஊமத்தை; datura. 3. பூசனி pumpkin.

**தேவதாளி,** பேய்ப்பீர்க்கு, இதன் அடித் தண்டு மருந்திற் குதவும், கொடியாகப் படரும், ஐங்கோணமுள்ளது. சிறிது முசுமுசுப்பாயிருக்கும், இலைகள் ஐந்து பிரிவினையுடையன, முசுமுசுப்பு, ஓரங்களில் வட்டமான அரும்புகளுடையன, இலையின் காம்புகள் இலை நீளமிருக்கும், வரி பிளந்துள்ளது, காய் கோழிமுட்டை வடிவம், சாதிக்காய் பருமன், இதில் மயிரைப்போல் மெதுவான கூரிய முனைகளுண்டு, காய்க்குள் விதைகள் 18 உண்டு, தட்டையாயும் கருப்பாயுமிருக்கும் சதைப் பற்று வெண்மை, விதைகளைக் கவர்ந்திருக்கும் நார்பாகம் மிகக் கசப்பு.

இக்காயின் சதைப்பாகத்தை மற்ற சுரக் குகளோடு கூட்டிக் கஷாயமாக இறக்கிப் பித்த சுரத்திற்குக் கொடுக்கலாம், இக்காய் கர்ப்பத்தைக் கரைக்கக் கூடியது, பாம்பு கடிக்கும் கொடுக்கலாம், தமிழ் வைத்தியத்தில் இதன் உபயோகம் விரிவாய் எழுதப் பட்டுள்ளது, இத் தேவதாளியில் கற்பமூலி ஒன்றுண்டு, ஆயினும் இது அதுதானு வென்பது சந்தேகந்தான் இதை அரைத்து உள்ளடியில் பூசிநடக்க தம்பனமாகும், சமூ

லத்தைக் கொண்டு வந்து அரைத்து உடம் புமுழுவதும் பூச வெட்டு, குத்துஅருது, இதன் இலைச்சாற்றைக் குடிக்க உடம்பு வேறு நிறமாக மாறும், அழகியனுவான், இதன் சமூலப்பொடி செய்து அத்துடன் கற்கண்டும் சர்க்கரையும் எண்ணெயிற் குழைத்து விழுங்க மூலரோகம் தீரும், முளை யெழாத மூலத்திற்கு 40 - நாளைக்கு இப்பச் சிலையைத் தின்னவும், பிறகு முளையெழும் பும், நல்ல கருப்பங்கட்டி (வெல்லம்) யில் குழைத்து விழுங்க குஷ்டம் தீரும்.

இதைப்பொடி செய்து காசளவு சாப்பிட கல்லெரிப்புத்தீரும், நெய்யில் குழைத்து விழுங்க காசம் தீரும், இவ்விலையைச் சிறு நீரில் அரைத்து நசியம் பண்ண விஷம் தீரும், இச் சூரணத்தைப் பசுவின் பாலிற் கொள்ள 18-நஞ்சும் தீரும் இதை எண்ணெ யிற் குழைத்துண்ண பல் விஷம் தீரும், நெய்யில் குழப்பி செவியிலிட பல்குத்து செவி நோக்காடு தீரும், கோரோசினையி லரைத்துத் திலதமிட வசியமாம், snake Luffa — Luffa echinata. Stem is herbaceous scandent, five sided, and slightly hairy, leaves generally five-lobed, some what hairy margins scallop toothed, petioles as long as the leaves, rubbed, fruit oval, about the size of a nutmeg armed with numerous long, rather soft, diverging britsles, seeds about eighteen, compressed and black, kernel white, the fibrous subtance in which the seeds are enclosed is intensely bitter, Pulp of fruit is a frequent ingredient in the compound decoction which are prescribed for bilious fevers and give in snake bite. Fruit is an abortifacient.

There seems to be a variety, which according to Tamil Medicine is used in rejuvenation, but it is very doubtful if this is the variety or not for the properties ascribed to it are marvellous. Grinding the plant and applied to the sore of the foot, walking becomes immpossible. When smeared on the whole body, no injuries of wounds can be inflicted on the body, the juice of the leaves taken internally lends colour to the body tones the system and beautifies the skin. The entire plant dried and pulverised and mixed with sugar candy and steeped in gingelly oil and then swallowed forms a good remedy in piles but in cases where the enlarged vein is not ripe, the leaves it eaten for 40 -days will have a salutory effect, when taken in jaggery it cures leprosy. A pice weight of the powder of this plant proves very useful in cases of stone in the bladder, if taken with ghee cures asthma and bronchitis, when ground with urine and sniffed poisonous effects are said to diappear, if taken mixed with cows' milk is said to remedy the 18 - kinds of poisons, if taken with gingelly oil cures poisonous bites, if mixed with ghee and dropped into the ears cures the tooth ache and, ear diseases, and if mixed with bezoar and put as a paint on the forehead between the eye brows acts as a fascinating philter.

NOTE :— There is a plant called நுரைப் பீர்க்கு (bitter luffa) — Luffa egyptiaca and தேவதாளி is also known as நுரைப் பீர்க்கு and பேய்ப்பீர்க்கு and so it very doubtfull if any of these two plants could be the identical rejuvenating variety described in the Siddhar's science or it is altogether quite a different plant. Research alone can establish the identity.

**தேவதாளிதைலம்**, இலிங்கம் கட்டும், சூதம் பற்பமாகும், the oil or devathali — snake luffa — Consolidates cinnbar, calcifies mercury.

**தேவதாளிசம்**, பேய்ப்பீர்க்கு, அல்லது நுரைப்பீர்க்கு, இது பாம்புகடிக்குக் கொடுப் பதுண்டு, snake luffa — Luffa echinata. It is an antitode for snake poisons and is also an emetic purgative.

**தேவதானியம்**, சிறுங்கு அல்லது தித்திப்புச் சோளம், sweet cholum — Soreghum saccharratum.

**தேவதிட்டரா**, தேள் கொடுக்கி, See தேட் கொடுக்கி.

**தேவதீபம்**, கண், eye; 2. சோதி, divine light.

**தேவதூபம்,** வெள்ளைக் குங்கிலியம், white frankinceuse — Boswellia serrata; 2. வெள்ளைக் கிந்துருக்கம், white dammer vateria indica; 3. சாம்பிராணி, Malacca benzoin — Styrax benzoin; 4. குங்கிலியம், resin of Indian dammer — Shorea robusta (resin of).

**தேவதைகுற்றம்,** கிராம தேவதைகளின் கோபத்தாலேற்படும் கோளாறுகள் அவை யாவன; பெருவாரி, ஊர்வாரி, துன்மரணம் முதலியன, diseases due to malignant influences of demons and monsters such as epidemics, endemics and even sporadic and accidental deaths.

**தேவநாளமூலம்.**

**தேவநிணல்,** நாவல், jamboo tree — Eugenia jambolina alias E. jambos.

**தேவநிறம்,** சிந்தில், moon creeper — Menispermum cordifoluim; 2. பொன்னிறம், gold colour.

**தேவபட்சி,** ஆள்காட்டிப்பறவை, red wattled lapwing sand piper — Lobivanclens goensis.

**தேவபவனம்,** அரசமரம், peepul tree — Ficus religiosa.

**தேவபுத்திரா,** வெந்தயம், fenugreek, maitee — Trigon ella corniculata.

**தேவபூசைப்பூ,** செங்கழுநீர்ப்பூ, red Indian water lily — Nymphaea lotus.

**தேவபூதம்,** கருவண்டு, block beetle.

**தேவபூதி,** தில்லைமரம், tigers spurge — Excoccaria agallocha.

**தேவப்பிறங்கி,** நாகமல்லி, snake jasmine — Rhina canthis communis.

**தேவமரம்,** மாமரம், mango tree; 2. அனிச்சை, See தேவப்பிறங்கி.

**தேவமருத்துவன்,** தன்வந்திரி பகவான், See தேவவைத்தியன்.

**தேவமாசம்,** கருதரித்த எட்டாம் மாதம், the eighth month of pregnancy.

**தேவமாதி,** நாகப்படகற்றாழை, a kind of aloe perhaps the one resembling snake's hood.

**தேவமாமரம்,** see தேவமரம்; 2. குளிர்நாவல், superior jamoon tree.

**தேவமுத்திரை,** காஸ்மீர படிகம், Cushmere crystal or Cashmere stone.

**தேவம்,** மாமரம், mango tree; 2. அனிச்சை, see தேவப்பிறங்கி; 3. குழிநாவல், small jamoon.

**தேவயானம்,** மூக்கின் வழியாய் வலது பக்கத்தில் ஓடும் மூச்சு, அதாவது பிங்கலை, air passing through the right nostril.

**தேவராயகற்பூரம்.**

**தேவருணவு,** அமிர்தம், nectar, ambrosial fluid.

**தேவருணன்,** துரிஞ்சில், see துரிஞ்சி, bat.

**தேவரூர்,** பொன்னுங்கண்ணி, sessile plant — Illecebrum sessile.

**தேவரொட்டாதி,** எட்டிமரம், nuxvomica tree — Strychnos nuxvomica.

**தேவர்கடன்,** see தெய்வவேள்வி.

**தேவர்கோன்,** குளிர்நாவல், see தேவமாமரம்.

**தேவர்ணன்,** தேன் நிறத்தை யொத்த மூத்திரம் அல்லது மேகநோய் 18 வகையுலொன்று, honey coloured urine, one of the 18 varieties of venereal diseuses.

**தேவர்வாசம்,** அரசு, இதில் தேவர்கள் வசிப்பதாகச் சொல்வதாலிப் பெயர், peepul tree — Ficus religiosa so called from the belief that Devas reside in this tree.

**தேவலதை,** அடுக்குமல்லிகை, multi flowered Arabian jasmine — Jasminum sambac (flore manorae).

**தேவலி,** புன்னை, common poon — Calophyllum inphyllum.

**தேவவரசு,** கொடியரசு, wild peepul tree — Ficus aruottiana.

**தேவவல்லபம்,** சுரபுன்னை, soora poon — Ochrocarpus longifolius.

**தேவவிருட்சம்,** கடம்பு, divine tree — Barring tonia racemosa.

**தேவ வைத்தியம்,** இரசகந்தபாஷாண முறையில் செய்யும் சித்த வைத்திய சிகிச்சை; the superior method of treating diseases with the aid of compounds of mercury, sulphur, and arsenic according to the principles laid down in Tamil Siddha System. It is opposed to அசுர வைத்தியம், the one consisting chiefly of operations, which is considered as inferior method of treatment. It is opposed to (manida) மானிட சிகிச்சை treatment with vegetable and animal drugs — medicines prepared only with herbs. This treatment is considered to far inferior to the treatment with medicines prepared with the mineral drugs.

**தேவவைத்தியர்,** தெய்வலோகத்து வைத்தியர், அசுவினி தேவர் முதலியவர்கள், physicians of the celeatial worlds — Asuvini kumars, Danvanthri baghavan etc.

**தேவவைத்தியன்,** திருப்பாற்கடல் கடையும் போதுண்டான தன்வந்திரி பகவான், the physician of the celestial world said to have been born, when the ocean of milk churned by Raktshas and Devas; 2. இரசகந்த பாஷாணங்களைக்கொண்டு செய்யப்படும் பற்பம், செந்தூரம், சுண்ணம் முதலிய அருமையான மருந்துகளினால் நோய்களைச் சிகிச்சை செய்யக்கூடிய சித்தவைத்தியன், Siddha physician who introduces oxider. red oxides, carbonates prepared from mercury, sulphur, and arsenic in the treatment of diseases.

**தேவனம்,** தாமரை, lotus — Nelumbium speciosum; 2. அழகு, beauty; 3. பொழுது போக்கு, pastime.

**தேவனாதி,** வெள்ளெருக்கு, white madar— Calotropis gigantia (albiflora); 2. திப்பிலி long pepper — Piper longus.

**தேவனாதி விருட்சம்,** தாளிப்பனை, talipot tree — Corypha umbraculifera.

**தேவனாம்பட்டை,**

**தேவா,** பெருங்குரும்பை, lowstring hemp— Sauseveira Roxburghiana.

**தேவாங்கம்,** see தேவாங்கு.

**தேவாங்கு,** தேய்வாங்கம் (தேய்வு+அங்கம்) இளைத்த உடம்பு, இது உடம்பிளைத்த ஓர் பிராணி, குரங்கைப்போலில்லாவிடினும் குரங்கினமாகவே கருதப்படும்; (தெய்வ+அங்கம்) அல்லது தெய்வாங்கம் எனப் பொருட்படுத்தி முனியே இம் மிருகமாக அவதரித்ததாகச் சொல்வதற்குத் தக்கபடி பெயர் கொள்ளினும் பொருந்தும்; இது காடுகளில் மரக்கிளைகளில் வசிக்கும், பூமியில் மெதுவாக உலாவும், இது மிகச்சிறிதாயிருந்தாலும் இராத்திரி காலத்தில் மாத்திரம் வெளிப்படுவதாலும் இதைப் பார்ப்பது மிகவும் அரிதாயிருக்கும், இதன் உடம்பிலுள்ள மயிர் மிருதுவாயும்அடர்த்தியாயும், முசுமுசுப்பாயுமிருக்கும், மூக்கின் துவாரம் வளைந்திருக்கும், வால் பிடிக்த அகப்படாது, வாயும் நாசியும், சிறிது நீண்டிருப்பதால் முகம் நரியைப்போலிருக்கும், மாந்திரீக நூலின்படி இதைத் தெய்வப் பிறப்பாக கருதி குழந்தை தோஷங்களை நீக்கக் கூடிய தென நூல் போடுவதுண்டு, இதன் ஒவ்வொரு அங்கமும் வைத்தியத்திலும் மாந்திரீகத் தொழிலிலும் உபயோகப்படும், (1) நாக்கு திலதமிட வழக்கு வெல்லும்; (2) செவி மனிதன் பின் தொடர்வான்; (3) முதுகெலும்பு தலையில் தடவி நெருப்புசட்டி எடுக்கலாம்; உடலில் தடவ வசியம்; (4) முதுகின் தோல் கையில் தடவி மழுவேந்தலாம்; (5) வலது கண் திலதமிட பிறர் தன்னைக்காணார்; (6) விரல் கண்ணாிலிட பகலில் நட்சத்திரம் தெரியும்; (7) இடது கன் பொடிசெய்து போட தான் இருக்கும் இடம் தேடி வருவான். தலை எலும்பு உரைத்து புணரில் தம்பனம், வலது கண் திலதமிட கண்ணாடியில் முகம் தெரியாது, இடது கால் தின்ன ஈளை இருமல் போம், வலது கால் தின்ன குட்டம்போம், பித்து, நாக்கு காணுதலைதக்காண லாம், வைத்தியர்கள் இதன் கண் கண்ணோய்களுக்கு நல்லதெனக் கருதி மருந்து தயாரிப்பார்கள், இம்மருந்திற்காக மிதை உபயோகிப்பார்கள், மனிதர் இளைத்துப்போனால் அவர்களை தேவாங்கு எனக் கூப்பிடுவார்கள், இதில் அனேக விதங்களுண்டு, அவைகள் நம் நாட்டில் அகப்படமாட்டா, இலங்கை, மடகாஸ்கர் தீவு, அமெரிக்கா இவ்விடங்களில் பார்க்கலாம், Indian sloth — Loris gracilis alias Stenops gracilis. It is also known as lemur or slender loris. The correct term is Theivu+Angam which means emaciation body. It is a slender animal. Although it differs from monkey class in many respects, still it is taken as one belonging to that family. It may also be taken to mean ( Daiva+Angam ) or Divine body as it is said to be an embodiment of a sage. It lives on branches of trees in forests and moves very slowly on the ground. It is very difficult to observe it owing to its small size and nocturnal habits. The fur of this animal is soft, dense and woolly, the

nostrils have curved opening and the tail is never prehensible; the form of the face is some what fox like in the prolongation of the muzzle. Mantric science speaks highly of its virtues and holds that it is capable of curing morbid diathesis of children and so magic thread is tied to it and tranferred to children on the advice of Tamil physicians. Every part of its body is said to be useful in both Magic and Medicine. Vaidyans used to prepare medicine and prescribe it as external application to diseases of the eyes, it is also used as love potions. A thin and emaciated person is metaphorically called by this name. There are many varieties of this animal and they will be found in Ceylon, Madagascar, America, and other places but not this country (India).

NOTE :— The light coloured variety of the loris in Ceylon has a spot on its forehead some what resembling naumam (நாமம்) worn by Vaishnavites and so it is called Nauma devangu. There is also another variety called slowpaced lemur which is not found in India — Nycticebus turdigradus. The twotoed sloth is the third variety (Bradypus didacty lus) of South American mammel, also living in trees and moving with great slowness on the ground.

Lemurs are also natives of Madagascar. They have given their to Lemuria, the submerged continent, which once lay between Madagascar and South India. From the slowness of its movements the Lemur is also called the Indian sloth, it is also found in Ceylon.

**தேவாங்குபிள்ளை,** நோய், பலவீனம், பிறப்பு முதலிய காரணங்களினால் இளைத்து உருமாறிய குழந்தை, an ill shaped and emaciated child due to disease weakness or other congenital causes.

**தேவாங்கோலம்,** நாறுக்கரந்தை அல்லது சிவகரந்தை, Ceylon basil — Sphoeranthus amaranthoides. It is opposed to நாறு கரந்தை, அதாவது கொட்டைக் கரந்தை, seed toolsy — Sphoeranthus indicus.

**தேவாத்துமா,** அரசமரம், peepul tree — Ficus religiosa.

**தேவாப்பீட்டை,** வெற்றிலை, betel leaf — Piper betel.

**தேவாப்பேட்சை,** see தேவாப்பீட்சை.

**தேவாமிர்தம்,** தேவருணவாகிய அமுதம், ambrosin, the food of celes tials — Devas; 2. சுழுமுனையமுதம், the ambrosia—like the fluid secuted by pineal gland and Pituitary body in the cerelval region.

**தேவாலைபதி,** சோசியன், an astrologer.

**தேவாலைமாதர்,** துரிஞ்சல், bat.

**தேவாவதீதமூலி,** ஆலமரம், banyan tree — Ficus bengalensis.

**தேவாவாசம்,** தேவர்வாசம், the place where devas roam about.

**தேவி,** வாலை, சத்தியின் சிறு பெண் உருவம், one of the forms of Parvathi i. e a young girl; 2. பத்தினிப்பெண், the first of the four classes of woman divided according to lust; 3. சீதேவியார் செங்கழுநீர், a species of red Indian waterlily — Nymphcee adorata; 4. கற்பூரவல்லி, thick leaved lavender — Anisochilus curnosus; 5. தேவதாரு, which see; 6. குண்டலினி, serpeut's power in the sacral region of the human body; 7. ஓர்வகைப்புல், a kind of cyprus grass; 8. ஓர்வகைக் கடுக்காய், a kind of gall nut.

**தேவிகந்தம்,** கந்தகம், sulphur.

**தேவிகந்தா,** கோடரசூரி, coromandal gendarussa; 2. ஓர்வகைப் பிறவிப்பாஷாணம், a kind of native arsenic.

**தேவிகம்,** பூம்பாதிரி, yellow flowered fragrant trumpet flower — Stercospermum chelonoides.

**தேவிகல்பம்,** சிவபெருமானால் சொல்லக் கேட்டு பார்வதியினாலருளிய ஓர் ஆயுள்வேத நூல், a discourse on Ayurvedic science as delivered by God Siva to his concert Parvathi which she has gifted.

**தேவிகை,** ஊமத்தை, datura fustuosa.

**தேவிக்குமுத்திரை,** see தேவிமுத்திரை.

**தேவிசாரணை,** சத்திசாரணை, spreading hoy-weed — Boerhaavia repens.

**தேவித்திரவியரத்னுகரம்,** பார்வதியால் அருளிச் செய்யப்பட்டதாகச் சொல்லும் ஓர் ஆயுள்வேத நூல், இதைத்தான் தமிழில் அற்புத சிந்தாமணி என்று வழங்கப் படுவதாகச் சொல்லப்படுகிறது, an Ayurvedic treatise containing instructions of Parvathy and it is said that this is known in Tamil as Arputha Chinthamany.

**தேவிநாதம்,** காந்தத்தினின்று எடுக்கும் ஈயம், lead extract from magnet alchemically; 2. அரிதாரம், orpiment; 3. கிருஷ்ண அப்பிரகம், blackmica.

**தேவிநீர்.**

**தேவிபாகவத புராணம்,** It is a Puranic Science containing the full account of six chakras, the rousing of kundalini the dissolution of the gross Tatwas into subtle Tatwas.

**தேவிபீசம்,** வங்கமலை, mountain containing lead ore.

**தேவிமுத்திரை,** காஸ்மீரபடிகம், crystal stone of Cashmere a mineral.

**தேவிமூலம்,** சிறுபீளை, which see.

**தேவியச்சம்,** கௌரியச்சம்.

**தேவியார்,** சீதேவியார் செங்கழுநீர், see தேவி.

**தேவியுப்பு,** சத்தியுப்பு, which see; 2. மூன்று மாதத்திய தலைச்சன் பிள்ளையினின்று தயாரிக்கும் ஓர் வகையுப்பு, a kind of salt prepared from first foetus of three months old obtained by abortion.

**தேவியுரம்,** கந்தகம், sulphur.

**தேவிவிந்து,** கெந்தகம், sulphur.

**தேவுறை,** தேவர்கள் மருந்து, இவை 12 அவையாவன: Medicine used by Devas of celestial world. They are: 1. பற்பம், metallic oxide; 2. செந்தூரம், red oxide; 3. சுண்ணம், carbonate; 4. பதங்கம், sublimate; 5. களங்கு, mercury pill; 6. சுடர், light; 7. புகை, fume; 8. மின்சாரம், electric therapy; 9. செயநீர், alkaline liquid; 10. திராவகம், acid; 11. கட்டு, consolidate; 12. சத்து, essence.

**தேவேந்திரன் தங்கம்,** தேவேந்திரனின் பீடத்திலமையப்பெற்ற 1008 - மாற்றுப் பொன், refined gold of 1008 - matru or equivalent 2304 caracts of pure gold.

**தேவைக்குத்தக்க,** வேண்டியவளவு, as much as is required; 2. போதுமானபடி, as occasion requires prorenata.

**தேளி,** திரளிமீன், a short flat headed eel — Saccobranchus fossilis, it is so called from its having something like a scorpions nippers; 2. கிழாத்தி, a freshwater shark of cal fish family of Siluridal — Silurus biserratus; 3. தேட்கெண்டை, Scorpion gobi — Gobius nuna; 4. தேள், scorpion; 5. தேளித்தேங்காய், a kind of red cocoanut.

**தேளிலை,** காஞ்சொறி, scorpion leaf — Tragia convolucrata.

**தேளீ,** (தேள்+ஈ) எரிவண்டு, blistering fly. It is so called because it yields a burning sensation like a scorpion sting on application.

**தேளுக்கொட்டி,** see தேட்கொடுக்கி, scorpion sting.

**தேள்,** விருச்சிக ராசி, வாற்புறம் கொடுக்கையுடைய ஓர் விஷசந்து, இது பாம்புகள் செத்து அழிந்த இடத்திலும், சாணம், கோணிப்பை முதலியவைகள் மட்கினவிடத்திலும், சுடுகாட்டுச் சாம்பலிலும் உற்பத்தியாகும், இது மனிதர்களைக் கொட்டினுல் மிகக் கடுக்கும், சாதாரணமாயக் கற்களின் அடியில் பதுங்கியிருக்கும், வெயிற்காலத் பகலில் வெளிவராது, இதற்குத் தலைப்பாகம் உடம்பினுள்ளமுந்தியிருக்கும், வால் நீளமாயும் ஐந்து கணுக்கள் பொருந்தியதாயும் நுனியில் விஷக்கொடுக்குள்ளதாயுமிருக்கும் முன்பக்கம் குறட்டைப் போல் கைகளுண்டு, இதன் நுனியில் ஒவ்வொன்றிலும் இரண்டு நகங்கள் பொருந்தியிருக்கும்; இதில் நிறம் பருமன் இவைகளைக் கருதி பலவிதங்களுண்டு, அவையான: Scorpion. It is an animal with a poisonous sling, it generally originates from the decayed matter of putrefied snakes cowdung buried under the earth, gunny bags decayed and corpses ashes in the cremation ground. When stung it is poisonous giving an unbearable pain and burning sensation in the stung part. It is generally found hidden under stone, bricks etc and never comes out in the day during summer, the head portion is driven into the thorax. It belongs to the class of Archnida (spider etc) and is several inches long with a jointed tail in five parts terminating with a venemous sting; in the front

portion will be found two arms like curved pincers each provided with two curved claws or nails. It consists of different kinds considering its colour and size viz:

1. கருந்தேள், black scorpion — Scorpio caesar.
2. செந்தேள், red scorpion.
3. பார்ப்பாரத்தேள், white scorpion— Buthus occitanus.
4. சிறுதேள், small scorpion.
5. இராசாத்தேள், king of scorpion, scorpion mounting on another scorpion.
6. உச்சிலிங்கத்தேள், winged red scorpion the sting of which is fatal.
7. வாதத்தேள்.
8. பித்தத்தேள்.
9. சிலேட்டுமத் தேள்.
10. மண்டலித்தேள்.

**தேள்கடி,** தேள் கொட்டு, இக்கடியில் மூன்று விதமுண்டு, அவையாவன, இலகு, கொடுமை, மிகக்கொடுமை, குப்பை மேட்டில் உற்பத்தியாகும் தேளானது கல், செங்கல் அடியில் உற்பத்தியாகும் தேளைப்போல் அவ்வளவு விஷத்தன்மையதல்ல, பாம்பு முதலிய விஷப்பிராணிகள் அழுகி, அதில் உண்டாகும் தேள்கள் மிகவும் கொடியன; ஏனெனில் இக்கடி பாம்பு கடிக்குச்சமமாகவே சொல்லலாம், அற்ப விஷம் வலிமையையும் வீக்கத்தையுமுண்டாக்கி அத்துடன் நடுக்கலையும் சுரத்தையுமுண்டாக்கும், கொடிய விஷமோ வியர்வையும், உடம்பு விறைப்பும் மிக்கவலியையுமுண்டாக்கும், அத்துடன் நாக்கும் வீங்கி விழுங்கமுடியாது களைப்பையுந்தரும். The sting of scorpion. There are three varieties of this sting according as they are mild, strong and very strong. Those generated in the cowdung hills are not so poisonous as those generated in stones, bricks and dry places; those generated in the putrid carcases of serpents and other venomous creatures have the most violent poisons.

The symptoms of the stings of these resemble those produced by the bites of the snakes. The weak kinds produce pain and swelling followed by shivering and fever, the other kind produces swelling of the tongue so as to prevent swallowing, fainting and much pain with perspiration and stiffness of the body.

**தேள்கடித்தல்,** see தேள்கொட்டல்.

**தேள்கடிவிஷம்,** தேள் கொட்டுவதனாலேற்பட்ட விஷம், poisoning due to scorpion sting.

**தேள்கடை.**

**தேள்கல்,** ஓர் விஷக்கல், scorpion stone or mineral bezoar. It is a natural produce of India, Persia, Tartary, chemically, a silicate of magnesia and iron. It is frequently resorted to by Vaidyans and hakeems. It is a variety of steatite or soap stone which is ganerally ground with water on a stone and given in cases of cholera.

**தேள்குடிச்சி,** கதண்டு, a wild black beetle.

**தேள்கெண்டை,** ஓர்வகைக் கெண்டை, இது 5 அங்குல நீளம், *scorpion goby — Gobius noona alias G. viridipunutatus.* It is five inches in length, common at Madras.

**தேள்கொடுக்கி,** தேள்கொடுக்கிப் பச்சிலை, devil's claw, tiger's claw, scorpion sting — Martynia diandra. It is a bush 3-4 ft. high with large coarse leaves of ram pant growth, flowers two inches, white pale rose coloured stained with orange below in the inside and stained on the limb above with 5 central dark purple spots, odour rather disagreeable, seed pods are of the size of an almond black with 2 long horns proceeding form one end c. f. தேட்கொடுக்கி.

**தேள்கொடுக்கு,** தேள்முள், sting of a scorpion at the end of its tail; 2. தேளுக்கு வாலின் முனையிலுள்ள முள்ளைப் போன்ற கூர்மையான பாகமும், அதனடியில் விஷந்தாங்கிய உருண்டையான மணிபாகமும் சேர்ந்தது, the end of tail portion consisting of a thorn like tip at the end and a bead like organism containing poison behind or below it.

**தேள்கொட்டல்,** தேள் கடித்தல், the stinging of a scorpion.

**தேள்பச்சை.**

**தேள்மண்டலி,** மிக்க விஷமுள்ள தேள், a scorpion with a very poisonous sting.

**தேள்விஷம்,** see தேள்கடிவிஷம்; 2. தேளின் கொடுக்கிலுள்ள விஷம், poison cantaining in the bead like organism at the end of the tail.

**தேறகம்,** See தேறை.

**தேறல்,** தெளிதல், recovering from illness; 2. சாறு, juice; 3. தேன், honey; 4. கள், toddy.

**தேறினகாய்,** சிறிது பழுத்தகாய், nearly ripe fruit.

**தேறு,** தேற்றுமரம், which see; 2. சுத்தம், cleanliness; 3 துண்டு, piece, bit as சுக்குத் தேறு, மஞ்சள், வசம்புத்தேறு, pieces of dried ginger, turmeric, sweet flag sold in bazaar.

**தேறுகால்,** see தேள்.

**தேறுதல்,** தெளிதல்; see தேறல்.

**தேறுதி,** தேற்றுமரம், which see.

**தேறுவம்,** பூனைக்காலி, cowitch plant — Mucana pruricus.

**தேறுவான்,** சித்தரில் தேறியவன், an expert scholar or chief amongst the Siddhars.

**தேறே,** ஓர்மீன், a kind of fish.

**தேற்காலி,** see தேறுவம்.

**தேற்றரவாளன்,** திடமான மனதுடையோன், a man of firm or determined—Mind.

**தேற்றல்,** நோயினின்று தெளிவடைய அதாவது குணப்படும்படி செய்தல், effecting a cure in ones ailment. 2. மெலிவடைந்த உடம்பைத் தெளியும்படி செய்தல், feeding or supplying with nutriment to promote growth especially in an emaciated patient, nourishing the patient.

**தேற்று,** தேற்றுமரம். அதாவது தேத்தான் கொட்டைமரம், இதற்கு இல்லம், தேறு, சில்லம், கதகம் என்று வேறு பெயர்களுமுண்டு, இம்மரம் பர்மா, வங்காளம், தென்னிந்திய இவ்விடங்களில் மலைப்பிரதேசங்களில் சாதாரணமாய்க் காணலாம், இது சிறிய பச்சையும் மஞ்சளுங்கலந்த நிறமான வாசனையுள்ள பூக்கள் இருக்கும், தண்ணீரை தெளியவைக்கும், பூ, பூசைக்குரியது; வாந்தியையுண்டாக்கி சீதபேதியைப் போக்கும், கொட்டை விதை, பிரமேகம், வெட்டை, மூத்திரக் கிரிச்சரம், எரிச்சல் மூத்திரம், வயிற்றுக்கடுப்பு, சடராக்கினி, உட்சூடு, இவைகள் போம், பழத்தின் ஓட்டை சூரணம் அல்லது கசாயம் செய்து சீதபேதி இருமல்; மதுமேகத்திற்குக் கொடுக்கலாம், இவ்விதையுடன் கற்பூரம் சேர்த்து தேன் விட்டரைத்து மெழுகு பதமாக்கிக் கண்ணிலிட பீளை தள்ளும், நீர்வடிதல் போம், இந்துப்பை தேன் விட்டரைத்து கண்ணிலிட கண் சிவப்பு மாறும், இதன் சூரணத்தைத் தேனில் அரைத்துக் கட்டிகளுக்குப் பூச சீக்கிரம் பழுத்துடையும், சூரணத்தை நீரிற் கலந்துட்கொள்ள (தினம் இருவேளை) மார்பு சளி, கோழைக் கட்டுபோம். இச் சூரணத்துடன் திரிபலை, திரிகடுகு, சீரகம், சிற்றரத்தை வகைக்கு ½ பலம் பத்துக்கு ஒன்றாய் கலந்து ஆவின் நெய்விட்டு இலேகியமாகக் கிளறிக் காலை மாலை இருவேளையும் நாகபற்பத்திற் கொள்ள, அஸ்தி சுரம், வாதாதிக்கம், சயம், மூலம் முதலியவைகள் குணமாகும், சுத்திசெய்த விதையைத் தண்ணீர் விட்டரைத்து, பசுமோரில் கலக்கிக்கொடுக்க நீர் சம்பந்தமான நோய்களும் வெள்ளையும் போம், இப்பழத்தின் சாற்றை குழந்தைகளுக்கு உள்ளுக்குப் புகட்ட கோழைக் கட்டுகள் வெளியாகும். இப்பழச்சாற்றை சீலையிலூட்டிக் காய வைத்துக்கொண்டால் பழமகப்படாதகாலத்தில் இச்சீலையையே தண்ணீர்விட்டுக் கசக்கிறல் அத்தண்ணீரே சிறந்த மருந்தாகும். Clearing nut tree — Strychnos potatorum. *This in known in Tamil by several names.* It grows naturally in the hilly and mountainous tracts of Burma, Bengal and South India. It bears small fragrant flowers of greenish yellow hue. They are used for *religious purposes and cures dysentery.* Its fruit turns black when ripe, and possesses only one seed which is very hard. The seed quickly clears the water from its sediment and hence the name clearing nut. The *pulp of the fruit is used either as a decoction* or powder. It is useful in dysentery cough and diabetis. The seed is ground with camphor and honey into a way substance and used as collyrium. It cures lacri*mation. If similarly used along with rock salt* and honey redness of the eye disappears. Its powder mixed with honey can be applied to abscess to hasten its ripening. If the powder is taken twice daily with water relieves phlegm from the chest. Can be used both for adults and children with adjustment of doses. Powders of gall nut, Indian goose berry, beleric fruit dry ginger, black pepper, long pepper, cumin and galanga minor along with equal quantity of the powder of this seed are made into an electuary and used as a vehicle of calcined oxide of zinc This is very useful in piles, consumption rickettic fever and increase of wind humour. The seed ground in water and taken with butter milk relieves chronic diarrhoea. The same when taken with cow's milk cures urinary affections and gonorrhoea. *Pieces of clean* white cloth are steeped in the juice of the fruit and dried and kept for use when the fruit is not available. Whenever required sufficient piece of cloth can be soaked in *water and squeezed and used in place of* decoction of powder of the pulp.

**தேற்று,** தேத்தான் கொட்டை, see note under தேத்தான் கொட்டை.

**தேற்றுமரம்,** தேத்தான் கொட்டை மரம், see தேத்தான் கொட்டை.

**தேற்றும்பழம்,** தேற்றுமரத்தின் பழம்; the fruit of clearing nut tree.

**தேற்றும் பூ,** தேத்தான்கொட்டை மரத்தின்பூ, flower of clearing nut tree.

**தேற்றுன்,** see தேத்தான் கொட்டை.

**தேற்ருன்விதை,** தேத்தான்கொட்டை, which see.

**தேற்று,** see தேத்தான் கொட்டை; 2. தேற்றுதல், See தேற்றல்; 3. இலவமரம், silk cotton tree — Bombax malabaricum.

**தேற்றுகம்,** இலவு, see தேற்று.

**தேற்ருன்கொட்டை,** see தேத்தான் கொட்டை

**தேற்றுதல்,** பலப்படுத்தல், in vigorating; 2. குணப்படுத்தல், curing one from disease; 3. உடம்பு தேறும்படிச் செய்தல், improving one's health with proper nowishment.

**தேற்றுமருந்து,** உடம்பைப் பலபடுத்து மருந்து, any in vigorating specific — Tonic.

**தேனகக்குடிச்சி,** கதண்டுக்கல், புதையலைக் கண்டுபிடிக்க இதை மாந்திரீகத்தில் உபயோகிப்பார்கள், stone in the head of wild beetle. It is used in Magic for discovering hidden treasure.

**தேனகம்,** மராமரம், common saul — Shorea robusta; 2. வெண்கடம்பு, white Indian oak — Eugenia racemosa alias Barringtonia racemosa.

**தேனத்தி,** சீமையத்தி, Hebrew teenah—Ficus carica ( Lit ) honey fig tree so called from, honey like fluid exuding from the fruit.

**தேனப்பிரகம்,** தேன் நிறம் போன்ற ஓர்வகை அப்பிரகம், a mica of honey colour.

**தேனழித்தல்,** தேனெடுத்தல், taking or gathering honey by destroying the bee hive.

**தேனி,** கடுகுரோகணி, black hellebore — Helleborus niger; 2. கொத்தமல்லி, coriander.

**தேனிகா,** கடுகுரோகணி, See தேனி.

**தேனிகை,** கொத்தமல்லி விதை, coriander seed.

**தேனிட்டகலவை,** பலமருந்துகள் சேர்ந்த கலப்பு மருந்தை சுயத்தேனில் கூட்டி வைத்தல், mixtures of different medicines with purified honey — Mella.

**தேனிரும்பு,** மெதுவான இரும்பு, soft iron.

**தேனிலிட்ட மருந்து,** தேனிலிட்டு வைத்த இஞ்சி முதலியன, இதை முராபா ( மூஞ்ஞி ) எனச் சொல்வதுண்டு, medicines or any drug preserved in honey as greenginger ( syrup ginger ).

**தேனிலுண்ணல்,** சுயத்தேனில் மருந்தைக் குழைத்து உட்கொள்ளுதல், taking medicine steeped in purified honey in the proportion of 1:8.

**தேனீலையான்,** தேனீ, honey bee.

**தேனிவாதுமை,** தித்திப்பு வாதுமை, sweet almond.

**தேனிறக்கல்,** See தேனழித்தல்.

**தேனிறம்,** மாந்துளிர்க்கல், இதுவே கற்காவி, red ochre.

**தேனிருட்டு,** see தேனிருல்.

**தேனிருல்,** தேன்கூடு, bee hive.

**தேனீ,** தேன்கட்டும் ஈ, இது தேளைப்போல் கொட்டக்கூடிய தன்மையிலிருந்தாலும் கொட்டினுல் அவ்வளவு கடுப்பிராது, ஆனுல் மலைத்தேனீக்கு விஷம் அதிகம், அபாயமானது, இது மரம், மலை, வீடு, பெருங்கூட்டம் இவ்விடங்களில் கூடுகட்டும், ஆகவே, இடங்களைக்கருதி இதைப் பலவகையாகச் சொல்வதுண்டு, honey bee. It is an insect or beetle collecting honey from the flowers of various plants and trees. It builds its nest in houses, trees, public buildings and rocks. It is not built by one single bee but by many. There are numerous varieties which take their names of the places where they build their hives viz:

1. வீட்டுத்தேனீ, domestic bee — Apis melli fica.
2. சிறுதேனீ, flower bee — Apis floralis.
3. மலைத்தேனீ, hill bee — Apis dorsata.
4. கொசுத்தேனீ, musquito bee — Apis nigrocinta.
5. கொம்புத்தேனீ, tree bee — Apis indica.

**தேனீ,** தேன்கூட்டும் வண்டு, honey bee.

**தேனீக்கூடு,** தேன்வண்டுக்கூடு, சில தேனீக்கள் மரத்திலும் வீட்டுக்கதவு, சன்னல் இவ்விடங்களிலும் வேறு சில மலைகளிலும் கூடு கட்டும், இக் கூடுகளை வீட்டில் கட்டினுலும் புறக்கடை மரங்களிற் கட்டினுலும் அவசகுணமாகக் கருதி வீட்டைவிட்டு மாற்றி விடுவார்கள், இக்கூட்டிலுள்ள தேனை ஈக்கள் கொட்டாமற்படி வெகு தந்திரமாக எடுக்க வேண்டும், மலையர்கள் உடம்பில் எதையோ பூசிக்கொண்டுதான் தேனெடுக்க முயலுவார்கள், honey bag, bee hive. It is a case or bag intended as a habitation for bees and in which they store honey. Some honey bees construct their nests in trees, rocks and one kind often takes up its abode about the doors and windows of houses and public buildings. When a swarm of bees build it nest on a building, Hindus have a belief that it is a badomen and so in mates immediately change their residence. One should be very careful in collecting honey lest he will be attacked by the swarm of bees which may sting him severely, Hill or jungle

tribes do this very cunningly and with great tact, they smear their bodies with a substance which prevents the bees from stinging them.

**தேனீயிரைப்பை**, see தேனீக்கூடு.

**தேனு**, பசு, cow; 2. எருமை, buffalo; 3. குதிரை, horse 4. கறவைப்பசு, milch cow.

**தேனுகம்**, மிளகுநங்கை, pepper mangay — Poly gala chinensis alias P. arvensis; 2 அறுக்க விட்டுவிட்டு இரத்தம் பீறிடும் நாளம், a vein which when cut bleeds at intervals; 3. கொத்தமல்லி, coriander.

**தேனுக·துத்தம்**, பசும்பால், cow's milk.

**தேனுண்ணலி**, தேனைக்குடிக்கும் பறவை, honey eater.

**தேனுப்பு**,

**தேனுரிஞ்சி**, தேனையுரிஞ்சும் ஓர் பறவை, honey sucker.

**தேனெறும்பு**, பெரியவெறும்பு, large ant.

**தேன்**, கோசலம், cow's urine.

**தேன்**, பூந்தேன், அல்லது வண்டுத் தேன், இது தாவர வர்க்கங்களின் பூவினின்று தேனீக்களால் சேர்க்கப்பட்ட வஸ்து, இப் பூந்தேனை வண்டு அல்லது தேனீக்கள் சேக ரித்துக் கூட்டுக்குக் கொண்டுவந்து தன் கூட்டம் அருந்துவதற்காக சேர்க்கும்,சாதா ரணமாய்க் காடுகளிலிருந்து வனசக்கள் கொண்டுவந்து சேர்ப்பதுதான், இது மலை, மரப்பொந்து, கோயில், கோபுரம், கிளை களின் உச்சி, வீட்டின்கதவு, சன்னல், கட் டிடங்கள் இவைகளில் கட்டும், தேன் கூண் டுகளிலிருந்து எடுக்கப்படும், இதைக் கடை களில் சர்க்கரைப் பாகுடன் கலந்து மோசடி யாக விற்பார்கள், இதை பற்பம், செந்தூ ரம், சுண்ணம், முதலியவைகளோடு சேர்த் துக் குழைத்துகொடுக்க ருசியாயிருக்கும்படி உபயோகிப்பதுண்டு, இதை கைமுறையாக ஓட்டைச் சுட்டுப்போட்டுத் தேனை முறிப்ப துண்டு, சூட்டுடம்புகாரர்களுக்கும், மூலத் திற்கும் தேன் உதவாது, இத்தேனின்குணம் எந்தச் செடியிலிருந்து கொண்டுவந்ததோ அதைப் பொறுத்தது, பலவூர்களில் பல வர்ணமாகவும் வாசனையாகவும் இருக்கும், சாதாரணமாய் மஞ்சள் கலந்த வெண்சிவப்பு நிறம் அதிக இனிப்பு, ஆனல், கருப்பு தேன் உடம்புக்குதவாது, கொம்புத் தேன் சிறந் தது, குறிஞ்சி, நாகசம்பங்கி இவைகளின் தேன் மிகச் சிறந்தது, சப்பாத்திப் பூவி னின்று எடுக்கும் தேன் உடம்பிற்கு உஷ் ணத்தைத்தரும், பொதுவாகத் தேன் உடம் பிழைற்சியைப் போக்கி மலத்தை இளக்கும், வாய் கொப்பளிக்கவும் உதவும், நாட்டு வைத்தியர்கள் சுத்தி முறை, அனுபானம், இலேகியம், முதலியவைகளுக்கு உபயோ கிப்பார்கள்.

இது உடம்பின் மாசுகளை நரம்பின் வழி யாக இழுத்துச் சுத்திசெய்யும், தாதுவிருத்தி பசி தீபனமுண்டாம், சூதகபந்தம், வீக்கம், காமாலை, கல்லடைப்பு, நீரடைப்பு, பக்க வாதம் இவைகளுக்குதவுயோகமாகும், தண் ணீரோடு சேர்த்துச் சாப்பிட மூத்திரத்தைப் போக்கும், நீர்த்தாரைப் புண்களை ஆற்றுந் தன்மையது, வயிற்றுக் கடுப்பு குணமாகும், இது ஈளை, விகம் உன்மாந்தை முதலியவை களைப் போக்கும், சாதாரணமாய் இது மலத் தைக் கட்டும்.

இது உடம்பை வளர்த்துக் கொழுப்பை அதிகமாக்கி நரம்புகளைக் குளிரப்பண்ணும் குணத்தையுடையது, மருந்துகளில் அனு பானமாகக் கொள்ளப்படும், இது தான் இயற்கையான சர்க்கரை, நீரிழிவு ரோகி களுக்குப் பத்தியவுணவுடன் தேனைக் கலந்துகொடுக்க மதுமேகம் அதிகரிக்காது, தேனுடன் எலுமிச்சம் பழரசத்தையும் கலந்து கொடுக்க குழந்தையின் இருமலைப் போக்கும், இதை மெழுகுடன் சேர்த்துக் களிம்பு செய்து இரணங்களுக்குப்போட லாம், இதைத் தேயிலைபானத்தில் கொஞ் சம் கலந்து சாப்பாட்டுக்குமுன் உட்கொள்ள அசீரணம் நிவர்த்தியாகும், சுடரெண்ணெய் நீராவி, நெருப்பு இவைகள்பட்ட புண் கொப் புளம் எழும்பாதபடி தேனைத் தடவுவது வழக்கம்; இடத்தைக் கருதியும், பூக்களைக் கருதியும், இத்தேனில் அனேக விதங் களுண்டு.

Flower honey, beetle honey — Mel of chemists. It is a vegetable product and it occurs chiefly in the nectaries of various flowers The bee collects it and brings it to the hive to store it up for the food of the community. Honey is here nearly always. the produce of wild bees, brought from the jungles. Its quality depends on the nature of the plants from which the bees collect it. It differs much in colour and flavour in different tracts of the country. It is usually found collected in hills or mountains, branches of or holes in trees, temples, towers, doors and windows of houses, public buildings etc., from the beehive the honey is taken out. In bazaars it is found adulterated with sugar syrup and sold as pure honey. It is used mostly as a vehicle in the administration of medicines such as metallic oxides, red oxides, carbonates sulphates etc., to renderit rather palatable to taste and perhaps to aid easy absorbtion. It is sometimes purified throwing a red hot piece of pot into it. The use of honey is not advisable to persons of extreme heat in the system and to those suffering from piles. Ordinary honey is a mixture of yellow and whitish red coloured honey and is extremely sweet. The black honey is not considered whole some to the

body, honey gathered from the species of *Strobilanthus* and Mesua ferrea (serpent champauk) is specially good, honey from the flowers of the prickly pear is hot. Medicinally honey emmollient and slighly laxative, used in gargles Vaidyans use it as detergent and nutritive and as a vehicle for adminstering medicines, it forms as an ingredient in the preparation of electuaries and a few collyriums. It is capable of absorbing waste matters from the system through nerves and eliminate it through the usual channel, it promotes hunger and secretion of semen. It is also prescribed for menstrual disorders, swelling, dropsy; stone in the bladder. stricture of urine, paralysis etc. It has a diuretic quality when taken mixed with water, and is a useful remedy in inflammation of the urethra and dysentery, reduces obesity and constipates the bowels.

It has also the virtue of promoting health, making the body fat and cooling the system, if taken with milk. Honey is considered as a natural sugar. Mixed with the diet of patients and given to them it arresh the severity in diabetis ( mellitus ) mixed with lime juice and given to children it cures cough, mixed with wax it forms a useful application to ulcers. A few drops mixed with hot tea and taken before meals cures indigestion and increases the appetite. It consists of different kinds according to its situation and the nature of plant.

1. கொம்புத்தேன், honey collected on branches or top of trees.
2. கொசுத்தேன், honey collected by small bees.
3. பாகுத்தேன், honey adultered with sugar syrap.
4. கதண்டுத்தேன், honey collected by big beetles.
5. மலைத்தேன், honey gathered on rocks, on the tops of mountains.
6. மரப்பொந்துத்தேன், honey found in the hole of trees.
7. புற்றுத்தேன், honey collected in the ant hills
8. மனைத்தேன், honey found in houses building and temples.
9. இருல்தேன், honey taken diretly from honey comb.
10. குறிஞ்சித்தேன், honey found collected in hilly tract.
11. சிறுதேன், same as No. 2.
12. பெருந்தேன், good honey collected by large bees.

புதியதேன் உடம்பிற்கு நல்லது, பழந்தேன் வாதரோகம் வயிற்றெரிவு, வாதமூல ரோகம் உண்டாகும், new is good and old one causes vatha diseases.

NOTE :—1. Honey is a sacchrine vegetable juice and leaves an astringent after taste. It is parchifying, cold, stomachic, nutritive, tonic and demulcent. It is a very useful laxative especially for children who take it cheerfully and readily. It is used as a flavouring and sweetening agent in mixtures and as basis for confections. It acts as a purifying and healing agent in respect of ulcers and eye diseases. It is antifat and pacifies the deranged humours bile and phlegm, prooves a curative in hiccough, thirst and cutaneous affections. It is antitoxic and heat making in its potency. It becomes injurious when boiled or heated. When mixed with vinegar it forms oxymel and proves useful in some forms of catarrh and cough.

NOTE:— 2. In Ayurveda honey consists of 8 kinds, most of which are from small and large bees and some from wasps and beetles. The one used in medicine is collected from the common bee. New honey is considered demulcent and laxative and one of 100 years old is said to be astringent and demulcent. This is prefered to the new one. It is much used in the preparations of electuaries and as an adjunct to decoction, pills and powders.

தேன்கட்டை, யானை நெரிஞ்சில், elephant caltrope — Pedilium murex.

தேன்கதலி, ஓர்வகை இனிப்பு மலைவாழை, a kind of sweet mountain plantain.

தேன்கல், கோமேதகம், cinnamon stone — Onyx so called from its colour resembling that of honey.

தேன்களிம்பு, உருக்கிய மஞ்சள் மெழுகும் 4 பாகம் தேனும் சேர்த்துக் கொதிக்க வைத்து வடித்த களிம்பு, இது இரணங்களுக்குப் பூச வுதவும், an ointment prepared by melting bee's wax with four parts of honey this is useful for external application for ulcers — Ceraunel.

தேன்கற்கண்டு, தேன் உலர்ந்து கற்கண்டைப்போல் திரண்ட வஸ்து, இது உண்டில் நாட்பட உபயோகிக்கப் படாது, தங்கி நின்றால் இம்மாதிரியாகும், a kind of honey dried candies in crystals. These are formed when honey is allowed to remain for a long time without being used or taken out.

தேன்கற்பம், தேனைப் பூமியில் புதைத்து வைத்து, கட்டிப்போனவுடன் எடுத்து முறைப்படி கொள்ளும் காயமருந்து, honey crystallised by keeping it buried under the earth and then taken out for use in rejuvenating medicines.

**தேன்காய்,** ருத்திராட்ச மரம், see தேன் பச்சை; 2. தேன்பூச்சி மரத்துக்காய், which see.

**தேன்குழல்,** உளுத்தமா, அரிசிமாவினுல் முறுக்குப் போல் செய்யப்படும் ஒரு பணியாரம், இதனுல் பசிமந்தம், தாகம் உண்டாம், a preparation made out of the flours of black gram and rice in the propotion of 1:4 and ghee. It will cause thirst and loss of appetite.

**தேன்குழாய்,** see தேன்குழல்.

**தேன்கூடு,** தேனீ கட்டும் மெழுகினுல் செய்த கூண்டு, bee hive made of wax.

**தேன்சிட்டு,** தேன் நிறத்தைப் போன்ற சிட்டுக்குருவி, a sparrow of the colour of honey.

**தேன்சுவை மருந்து,** தேனைப்போல் ருசிக்கு மருந்து, any medicine which has the consistence and sweetness of honey — Melligo.

**தேன்சேரான்,** பெரியசேரான், glabrous marking nut—Semicarpus travan corica.

**தேன்தொடை,** see தேன்தோடம்பழம்

**தேன்தோடம்பழம்,** தித்திப்புக்கிச்சிலி, sweet orange.

**தேன்பச்சை,** ருத்திராட்சமரம், honey fruit tree — Guazuma tomentosa.

**தேன்பதமாய்க் காய்ச்சல்,** தேனைப் போல் சிவந்த பாகுபதமாய்க் காய்ச்சுதல், boiling a liquid till it attains the colour ( red ) and the consistency of honey.

**தேன்பருந்து,** தேனைக் குடிக்கும் ஓர் பருந்து, இது தேனைக் காட்டில் குடித்துத் தேனீக்களைத் தின்னும், crested honey buzzard— Pernis cristuta. It is found in forests feeding on honey and honey bees.

**தேன்பலா,** தேனொழுகும் பலாப்பழம், honey dripping common jack fruit.

**தேன்பாகு,** தேனைப்போன்ற சர்க்கரை அல்லது வெல்லப்பாகு, அதாவது வைப்புத் தேன், an artificial honey like syrup prepared from sugar or jaggery.

**தேன்பாசி,** கடற்பாசி, sea weed

**தேன் பிராக்கு,** சேரான்கொட்டை, marking nut — Semicarpus ana cardium.

**தேன் பூ,** தீன் பூ, which see.

**தேன்பூச்சிக்காய்,** தூண் மரத்தின் காய், fruit of white cedar tree — Cedrela toona.

**தேன்பூச்சிமரப்பட்டை,** தூண் மரப்பட்டை இதைக் கஷாயமிட்டு குழந்தைகட்குக் காணும் நாட்பட்ட சீதபேதி, சுரம் இவைகளுக்குக் கொடுக்கலாம், சூரணித்து இரணங்களின் மேல் தூவிச் சீழை வறளச்செய்யவும் உபயோகப்படும், white cedar bark. Its decoction is said to cure chronic dysentery, and fever in children, its powder when dusted heals suppurated ulcers.

**தேன் பூச்சிமரம்,** ஓர் மரம், honey bee tree— Holoptela integrifolia alias Guazuma tomentosa; 2. தூண்மரம், white cedar — Cedrela toona; 3. தேனீ, honey bee.

**தேன்மண்டலம்,** கொண்டலாந்தி மரம், a tree.

**தேன்மரம்,** இலுப்பைமரம், mohwah tree; 2. see தேன்பூச்சி மரம்.

**தேன்மிருதிகம்,** சாராயம், honey coloured liquor or spirit — Brandy.

**தேன் மெழுகு,** தேனீக்களினின்று வெளிப்படும் ஓர் வஸ்து, இதைக்கொண்டு தேன் கூடு கட்டப்படும், இது கனதியாயும் மஞ்சள் நிறமாயுமிருக்கும், வெளிச்சம்பட வெண்மையாக மாறும், வாசனைத் தேன் வாசனையைப் போலவே யிருக்கும், இம்மெழுகை யெடுத்துச் சுத்திசெய்தால்தான் வெள்ளை மெழுகு கிடைக்கும், இது கொழுப்பைவிடச் சிறந்தது, இது அழற்சியைப் போக்கும், தோலை மெது வாக்கும், இதைக் களிம்பாகச் செய்து, ஒட்டுச் சீலை, திரிச்சீலை இவைகளிலூட்டி, புண் புரைகளுக்கு உபயோகப் படுத்தலாம், மைணத்தைலம் இதனுல் செய்யப்படுகிறது; இதை நாட்சென்ற சீதபேதி, இருமல், பாரிச வாயு இவைகளுக்கும் உபயோகப்படுத்தலாம், Cera flava wax. It is a substance secreted by the bee and used in the construction of the comb. It is heavy and of yellow colour, in odour it resembles honey, by action of sunlight it turns white. It is from this white wax, cera alba is prepared by purification. It is more valuable than grease. Medicinally wax is emollient and demulcent. It is an ingredient in ointments, plasters and suppositories and is also used as a remedy in chronic diarrhoea, dysentery, cough and paralysis. Mynathailam (wax oil) is prepared out of it.

**தேன்வதை,** see தேனிறால்.

**தேன்வர்னன்,** see தேவர்ணன்.

**தேன்வளையல்,** பூநீறு, efflorescent salt found in the soil of fuller's earth.

**தேனூடைப்பழம்,** see நாகரப் பழம், பித்தம் போம்.

# தை



**தை,** தைவேளை, five leaved cleome — Cleome pentaphylla; 2 see தைலபீதம்; 3. வாதப்பிடிப்பு, rheumatism; 4. பொன்னுங்கண்ணி, sessile plant — Illecebrum sessile; 5. தயிர், curd; 6. பொருத்தம், fitting

**தைசசம்,** உலோகம், metal; 2. நெய், ghee; 3. பலம், strength, power.

**தைசசாவர்த்தினி,** மூசை அதாவது உலோக முருக்கும் குகை, melting pot for metal s— — Crucible.

**தைசதம்,** நெருப்பின் சம்பந்தம், relating to fire; 2. மூன்று வித அகங்காரங்களி லொன்று, one of the three evil passions or inherent principles of the soul.

**தைதம்,** விரல் நுனி, tip of the fingers.

**தைதிலம்,** காண்டா மிருகம், rhinoceros.

**தைத்தல்,** முள் தைத்தல், running of thorn, 2. தையல் போடல், suturing.

**தைத்தியமதனம்,** கரணைச் செடி, elephant foot yam — Dracontium polyphyllum.

**தைத்தியமேகம்,** மூத்திரமானது இறைச்சி கழுவிய நீரைப்போல் நீர்த்தாரையில் தங்கி, பிறகு முறிந்து வெண்மையாய் ஒரு வேளைக்கு மூன்று நாழியளவு இறங்குமோர் மேக நோய், reddish urine which remains in the urethra is being converted assuming a milky condition. It is a urinary disease in which the quantity of urine discharged is about a measure for every four hours — Chylurea.

**தைத்தியம்,** சாராயம், spirituous liquor.

**தைத்தியன்,** உடம்பு அல்லது அவயவம் பருத்தவன், man with a body of great size — Giant.

**தைத்தியாகிகம்,** சிற்றாமணக்கு, castor seed plant with small seeds — Ricinus communis.

**தைத்தியாதி,** ஆடுதின்னாப்பாளை, worm killer — Aristolochia bracteata.

**தைத்திரம்,** கிச்சிலிக்குருவி, a kind of king fisher — Halcyon. It has a splendid flumage.

**தைத்திரீயசம்மிதை,** தைத்திரேய ரிஷியால் செய்யப்பட்ட ஓர் ஆயுள்வேத நூல், an Ayurvedic science compiled by Thithreya sage.

**தைத்திலமூலி,** அந்திமல்லிகை, false jalab — Mirabilis jalappa alias M. dichotoma.

**தைத்திலமேதகி,** சாயப்பாக்கு, dyed areca nut.

**தைத்திலியம்,** பங்கம்பாளை, see தைத்தியாதி.

**தைநயம்,** நின்றிடாந்தியஞ்சான், an unknown fire plant.

**தைபாகிகம்,** முள்முருங்கை, East Indian coral tree — Erythrina indica

**தைப்பூ,** உவர்ப்பூ, the efflorescent salt found on the fuller's soil.

**தையல்,** தைக்குகை, seam, suture; 2. அழகு, beauty; 3. பெண், woman.

**தையல்போடல்,** தைத்தல், suturing.

**தையிர்,** see தயிர், curd

**தைய்,** தைவேளை, see தை.

**தைரியம்,** பலம், strength; 2. மனத்துணிவு, bravery.

**தைல,** தைலக்குணமுள்ள, having the quality of oil; 2. தைலச்சத்துள்ள, oily, unctuous, oleosus.

**தைலக்கசடு,** எண்ணெயின் அடியில் தங்கும் வஸ்து, sediment that settles at the bottom of the oil.

**தைலகம்,** ஓர் விஷக்கிழங்கு, poisonous root.

**தைலக்கடம்,** எண்ணெய்ச்சாடி, oil jar.

**தைலக்காப்பு,** எண்ணெய்க்காப்பு, anointing with oil.

**தைலக்காரன்,** தைலஞ்செய்து விற்போன், one who prepares medicated oils and sells them — Apothicary.

**தைலக்கிட்டம்,** அடிவண்டல் எண்ணெய், oil sediment, see எண்ணெய்க் குடுகு.

**தைலங்குத்தல்,** தைலங்கூட்டல், distilling essential oil from compound substances.

**தைலசாதனம்,** நாவி, aconite; 2. நெய், clarified butter; 3. மருந்துநெய், medicated ghee or oil.

**தைலசௌரிகை,** வௌவால், bat.

**தைலச்சாம்பிராணி,** தைலச்சத்து மிகுதியாகவுள்ள ஓர்வகைக் கருப்புச் சாம்பிராணி, a kind of black benzoin with more of oily essence, olibunum; 2. கருப்புடாமர், black dammer.

**தைலச்சிகிச்சை,** உடம்பில் தைலம் பூசித் தேய்த்து நோயைக் குணப்படுத்தும் ஓர்வித வைத்தியம், a kind of treatment consisting in massaging the body with medicated oil.

**தைலதாரை,** தைலம் ஒழுகுவதைப் போல், மனம் சிதறாமல் ஒருவழிப்படல், தைல தாரைத் தியானம், ( in Philosophy ) causing the mind to move to a common centre or only one direction without giving room to diversion.

**தைலபர்ணி,** கற்பூரம், camphor; 2. சந்தனம், sandal; 3. கற்பூரத்தைலம், turpentine.

**தைலபர்ணிகம்,** வெண்சந்தனம், white sandal wood; 2 ஓர் வாசனைப் புல், a fragrant grass.

**தைலபலம்,** எள்ளு, sesamum seeds; 2. நாட்டுவாதுமை, country almond; 3. தான்றி, devil's abode — Terminalia belerica.

**தைலபாகம்,** தைலம் காய்ச்சும் போது அத்தைலத்திற்கு ஏற்படும் மூன்றுவித மாறுபாட்டுக் கிரமங்கள், மிருதுபாகம், சிக்கு பாகம், கரகரப்புப் பாகம், the three stages in the preparation of medicated oils. 1. soft fluid; 2. viscous; 3 crude states, they are good repectively for diseases due to 1. vatham ( wind humour ), 2. pitham ( bile humour ), 3. kapham ( phlegm humour ).

**தைலபாணி,** நேயமரம், an unknown tree.

**தைலபாணிதம்,** ஆச்சா, Ceylon ebony — Diospyros ebenaster.

**தைலபாத்திரம்,** See தைலக்கடம்.

**தைலபிபீலிகை,** see தைலபீலிகை.

**தைலபிப்பிலிகம்,** ஓர் சிறிய சிவப்பு எறும்பு, a small red ant.

**தைலபீதம்,** அத்திப்பிசின், gum of fig tree.

**தைலபீலிகை,** செவ்வெறும்பு, red ant probably refers to that which bites severely.

**தைலப் பக்குவம்,** see தைலபாகம்.

**தைலப்பசை,** தைலப்பிசின், எண்ணெய்ப் பசையுள்ள பிசின், any natural combination of a resin and oil (volatile) such as occuring in plants and trees.

**தைலப்பதம்,** see தைலபாகம்.

**தைலப்பத்தியம்,** தைலம் தேய்த்து முழுகும் போது அநுசரிக்கவேண்டிய பத்திய முறை, the dietic rules to be observed by a patient when having a medicated oil bath for the prevention or cure of disease.

**தைலப்பாண்டம்,** see தைலப்பானை.

**தைலப்பானை,** நீரிலும், நெருப்பிலும் நிரம்பக் கையாண்டதும் பழைய பாண்டமாகவுள்ளதும், வாய்சிறுத்து, வயிறு பெருத்து, கழுத்து நீண்ட பதப்படுத்தித் தயாராக வைத்திருக்கும் பாண்டம், இது தைலத்தை உண்டுவிடாமல் தரக்கூடிய பழைய கையாண்ட பாத்திரமாயிருக்க வேண்டும், இதற்கு அடியில் 5 தமர் செய்யவேண்டும். an earthern pot prepared as said above is used for extracting oil from drugs by distructive distillation

**தைலப்பிறப்பு,** தைலம் உண்டாதல், தேரையர் நூலில் இது 12 விதமாகச் சொல்லப்படும், the origin or formation of oil. It consists of 12 kinds as enumerated in Theraiyar's thaila churnkam. see தைலவகை.

**தைலப்புகை,** வாத சூலை, வாதப்பிடிப்பு, தலைவலி, மண்டைக் குத்து, பீனசம் முதலிய ரணங்களுக்கும் சிகிச்சை செய்யும்பொருட்டு உபயோகிக்கும் தைலத்தின் புகை, applying smoke or exposing to smoke or vapour of medicated oils as a treatment for curing diseases such as gout, rheumatism, head ache, migrane catarrh of the nose (nasal catarrh) etc. and sores, ulcers, wounds etc. as piles, fistula, for purifying from infection.

**தைலப்புகை,** தைலம் காய்ச்சும் போது அதில் எழும்பும் புகை, இப்புகையை உட்கொள்ளுவதால் வாத நோய் தீரும், fumes from medicated oils when in preparation which is capable of curing rheumatic, complaints.

**தைலப்புல்,** கற்பூரப்புல், அல்லது சுக்கு நாறிப்புல், fragrant grass — Andropogan schoenanthus.

**தைலப்பூச்சு,** உடம்பில் நோயுள்ள பாகத்திலாவது உடம்பு முழுமையுமாவது தைலத்தைத் தேய்க்குதல், rubbing of medicated oil or ointment on the affected parts or the whole body — Unction.

**தைலப்போக்கு,** தைலத்தின் குணுகுணம், the curative power or otherwise of medicated oils.

**தைலமாடல்,** தைலம் தேய்த்துத் தலைமுழுகல், அல்லது உடம்பு குளித்தல், having a bath by anointing the head and body — Oil bath.

**தைலமிடுதல்,** மருந்தெண்ணெய் பூசுதல், anointing with medicated oil or ointment, applying a liniment to the affected part.

**தைலமிறக்குதல்,** மருந்தெண்ணெய் காய்ச்சி வடித்தல், preparing medicated oils or ointments.

**தைலமுழுக்கு,** see தைலமாடல்.

**தைலமூட்டல்,** துணியைத் தைலத்தில் தோய்த்தல், soaking a lint in a medicated oil or steeping a lint in an ointment.

**தைலம்,** பொதுவாக மருந்துச் சரக்குகளை எண்ணெயிலிட்டுக் கைபாகம் செய்பாக முறைப்படி காய்ச்சி எடுத்து வடிக்கும் எண்ணெய், any medicated oil prepared from experience or as laid down in science by throwing the drugs required to prepare the oil into the oil, and boiling it down sufficiently, and finally filtering and bottleing it.

2. மரங்களினின்று வடியும் எண்ணெய்ச் சத்து, an oily substance exuding from trees—Essential oil as கற்பூரத் தைலம் — Turpentine.

3. மரங்களினின்று ஒழுகும் வாசனைத் தைலம், an aromatic semisolid exudation from tree — Balsam.

4. தாவரங்களின் விதையினின்று ஆட்டிய எண்ணெய், இதற்கு மருந்துக் குணமுண்டு, an oil with medicinal virtue obtained from the seeds of plants and vegetables — fixed oil as நல்லெண்ணெய், gingelly oil கடலெண்ணெய், ground nut oil.

5. செடியின் பால், juice of plants or trees as நெரியரிசிப்பால் — True balsam.

6. தைலப்பிசின், அதாவது பிசினும் எண்ணெயும் சேர்ந்த சத்து, resin combined with volatile oil — Oleo resin;

7. தாதுவகை எண்ணெய், மண்தைலம், mineral oil obtained from rocks.

8. ஆயுள் வேதத்திற் சொல்லியுள்ள வாசனை யெண்ணெய், according to Ayurveda linement which is prepared usually by mixing with one part of oil 4 parts of cow's milk, whey.cow's urine, then boiled, certain fragrant drugs are also added and then strained through cloth.

9. பொதுவாக நல்லெண்ணெய், generally a term referring to gingelly oil.

NOTE: Oleo resin which is a sub division of resin, is only resin combined with volatile oil. The Tamilians include also balsams under தைலம். Rock oil is a liquid exuding spontaneous by from the rocks involcanic regions and is found collecting in surface of certain lakes

**தைலம்,** தமிழ் வைத்தியத்தின்படி, பச்சை மூலிகைகளினின்று இடித்துச் சாறெடுத்தும், கடைச் சரக்குகளாகிய உலர்ந்த மூலிகைகளினின்று கஷாயமிறக்கியும் சில சரக்குகளைப் பொடித்தும் அல்லது அரைத்தும் நல்லெண்ணெயில் மேற்கண்டவைகளை யெல்லாம் ஒன்று சேர்த்துக் காய்ச்சியபின் இறக்கி அத்துடன் வாசனைத் திரவியங்களையும் புட்பவகைகளையும் சேர்த்து ஆறியபின் வடித்து எடுத்த மருந்துத் தைலம், இது அடியிற் கண்டபடி ஐந்து வகைப்படும், (In Tamil medicine) a medicated oil prepared as per method described below — green herbs are well pounded and the juice is pressed out either separately or conjointly as occasion requires. the dried drugs sold in the bazaars are cleaned, boiled in water as per rules and the decoction derived there form is separately kept the juices and the decoction above mentioned are mixed with the gingelly oil which is generally one fourth of their total quantily. Some times drugs are ground with the decoction and added to the above mixture and boiled. When it is sufficintly boiled and comes to

the stage required, it is decanted to another vessel where very soft auromatic substances like saffron, sivet, flowers of frogrant screw pine are Kept. The sediment also is fitered, and squeezed out while it is hot. After the whole things cools down once again it is fitered and bottled. According to its use it is divided into five kinds. They are :

1. முடித்தைலம், oil used for bathing or applied to the head to hasten the growth of the hair and turn it black.

2. குடித்தைலம், உள்ளுக்குக் குடிக்குந் தைலம் oil that is taken internally.

3. பிடித்தைலம், உடம்பின் தோலுக்குப் பூசுந் தைலம், oil that is applied internally and massaged or fomented.

4. துளைத்தைலம், நவத்துவாரங்களிற் செலுத்துந் தைலம், oil that can be used to be put into any of nine openings in the body eg. oil used for Vasti (enema), eardrops eyedrops, gorgling etc.

5. சீலைத்தைலம், புண்களுக்கிடும் தைலம் oil steeped in lint or piece of cloth and used for ulcers and wounds.

**தைலம்தேய்த்தல்,** உடம்பில் தைலம் பூசித் தேய்க்குதல், rubbing with an ointment or embrocation on the surface of the body Perfrication.

**தைலம்பூசுதல்,** தைலம் உடம்பில் தடவல், anointing.

**தைலவகை,** தமிழ் வைத்தியப்படி 12 விதமாகத் தயாரிக்கப்பட்டத் தைலங்கள், according to their origin and birth the oil are divided into 12 varietes and according to their usuage into 5. see தைலம்.

1. கொதித் தைலம், oil extracted by boiling in water—eg. castoroil.
2. உருக்குத்தைலம், oil got by melting—eg ghee, egg oil.
3. புடத்தைலம், oil obtained by destrutive distillation—eg cocoanut shell oil.
4. தீநீர்த்தைலம், oil produced by distilation—eg. sandal wood oil.
5. ஆதவத்தைலம், oil got by exposing to sun's rays—eg almond oil, some collyrium s.
6. விருக்கத்தைலம், oil abtained from trees—eg. turpentine.
7. சிலைத்தைலம், those that ooz out from rocks—eg. கல்மதம்.
8. நீர்தைலம், oil extracted by soaking in water—eg. civet oil.
9. ஆவித்தைலம், oil obtained by cooling the fumes or vapour—eg oleum benzoin.
10. சுடர்த்தைலம், oil prepared by burning the wick smeared with medicine—eg. sulphur sudar thilam.
11. இயந்திரத் தைலம், oil obtained by pressing in the oil machine—eg gingelly oil.
12. மணத்தைலம், oil springing from earth—eg. kerosine, crudeoil.

**தைலவண்டல்,** எண்ணெயின் அடியில் தங்கும் கசடு, sediment at the bottom of the oil.

**தைலவர்க்கச்சுருக்கம்,** தைல வகையிற்கண்ட ஐந்துவிதத் தைலங்களையும் தயாரிக்கு முறையைச் சுருக்கமாகக்கூறும் தேரையர் செய்த ஓர் தமிழ் வைத்திய நூல், a scientific treatise in which the processes of preparing the five kinds of medicated oils, their uses, dietic, rules and their vertues (மகிமை) are given. It is compiled in Tamil by the reputed physician Theraiyar.

**தைலவிதி,** தைலங்காய்ச்சி முடிப்பதற்குமுன் அநுசரிக்க வேண்டிய விதிகள், அவை யாவன ; twenty two rules or points to be observed in the preparation of medicated oils, they are :

1. சரக்குகளை பார்வையிடல், examination and selection of drugs.
2. சுத்திசெய்தல், cleaning or purifying them.
3. பச்சையாக இடித்தல், pounding green drugs either in stone or iron mortars as required.
4. வறுத்து இடித்தல், heating or frying and then pounding.
5. உலர்த்தி இடித்தல், drying and pounding.
6. தூளாக்கல், readucing to powder or pulverising.
7. மதித்தல், estimating, and seeing that all the apparatus required are at hand.
8. அளவுகாண்டல், (குடிநீர்) preparing the decoction according to the measure.
9. அளவுகாண்டல், (நெய்) adding oil according to the measure.
10. அளவுகாண்டல், (சுரசம்) preparing the juice and adding them according to the measure.

11. அளவுகாண்டல், (ஆற்றுநீர்) adding pure water according to the measure.
12. மருந்துத் தொகையறிதல், finding the proportion.
13. நிறுத்துப்பார்த்தல், weighing.
14. கலந்தரைத்தல், mixing and grinding.
15. தண்ணீரிற்கரைத்தல், dissolving in water or decoction.
16. அடுப்பில் வைத்தல், preparing the suitable oven and keeping the vessel on it.
17. எரித்தல், burning as required.
18. துழாவுதல், stirring the oil while in preparation.
19. பக்குவங்காணல், finding the stage of the preparation.
20. வடித்தல், decanting and fiteration.
21. தானியப்புடமிடல், burrying under heap of paddy purification.
22. கருமசாந்தி செய்தல், performing ceremony to God to give satisfaction.

**தைலாங்குருவி,** see தகைவிலான் குருவி.

**தைலாதி,** தைலம் காய்க்சுவதற்காக வேண்டிய சரக்குகள், the necessary ingredients required for preparing medicated oils.

**தைலாபிஷேகம்,** எண்ணெய்க்காப்பு, anointing medicated oil; consecrating the idol with unctuous substance.

**தைலாம்புகை,** see துரிஞ்சில்.

**தைலோமாதுர்யாமிலதம்,** சவர்க்காரமாக மாறக்கூடிய உடம்பிலுள்ள கொழுப்புச் சதைகளில் அணுவாயுள்ள சிறிய பைகளிலிருக்கும் ஓர் திரவ வஸ்து, the more fluid part, one of the proximate principles of saponifiable fat existing in the form of an atom in a small sac in the fat of animal bodies—Elain.

**தைவசம்,** கொடிநெல்லி, Indian goose berry creeper — Emblica genus.

**தைவதீபம்,** கண், eye.

**தைவயலி,** நாய்வேளை, dog vailay — Cleome viscosa.

**தைவரல்,** கை கால்களை வருடல், shampooing; softly pressing and stroking the limbs with the hands.

**தைவராலி,** விராலியிலை.

**தைவிளை,** see தைவேளை.

**தைவேளை,** வேளைச் செடி; இதற்கு வேளை, நல்லவேளை என்றும் பெயர்களுண்டு; இது சாதாரணமாய்த் தோட்டம், வயற்காடு இவ்விடங்களில் அதிகமாய்க் காணலாம்; இது சுமார் 1 அடி உயரம்; அடிக்காம்பு சிறிது முசுமுசுப்பாயிருக்கும்; பூக்கள் வெண்மை; வருஷம் முழுவதும் பூக்கும்; இதன் சமூலம் வழவழுப்பாயும் முசுமுசுப்பாயுமிருக்கும்; ஓர் வித வாசனையும் சில சமயம் பெருங்காய நாற்றமாயுமிருக்கும்; இதை நசுக்க ஓர்வித எண்ணெய்ப் பசையிருக்கும்; விதை கருப்பு நிறம் வாய்ந்தது. இதன் இலையைப் பிழிந்து காது நோய்க்கு ஊற்றுவார்கள்; இதன்வேர் கஷாயத்திற்குதவும்; இலையை கீரையாகச் சமைக்கலாம்; இச்செடியில் மஞ்சட் பூ பூக்கும் இனம் ஒன்று உண்டு; இது மிகமிக அற்புதமான கற்ப மூலிகை; சதுரகிரியில் விளைவதாகச் சொல்லப்படும்; ஆகவே இது சாதாரணமாய் தைவேளைச் செடியைப்போல் தான் இருக்கும்; இம்மூலிகையை சமூலமும் பிடுங்கிவந்து சாறு எடுத்து சூதத்திற்கு சுருக்கு கொடுக்க கட்டும்; கட்டிய அதை செந்தூரமாக்கி வெள்ளியில் 100 - 1 கொடுக்கப் பழுக்கும்; பழுத்த அதைப் பற்பம் செய்து சாப்பிட தேகம் சித்தியாகும், five leaved cleome — Cleome penta phylla alias Gynandropsis pentaphylla. It is very common in gardens, and fields 1-2 ft. high stem covered with hairs; flowers white, flowering nearly all the year. The whole plant is viscid and covered with hairs; it has a peculiar smell like asafoetida. When crushed the plant gives an oil; seeds are black. The juice of leaves are droped into the ear for the diseases of ear; the root is employed in decoction, and to prepare red oxide of Cinnbar.

2. There is another variety with five lobed leaves which bears yellow flowers. It is a rare rejuvenating drug. Mercury treated with the juice of the whole plant, consolidates. This consolidated mercury is calcined into red oxide If it is added to the melted silver in the proportion of 1 : 100 it turns into golden colour. If this is calcined and taken as medicine the bady attains perfection and eternal bliss.

**தைஞு,** நல்லரளி, olender—Nerium odorum.

**தைனியம்,** மனம் உடைந்த நிலை, mental dep-pression.

**தொகல்,** மாந்தப்புல், citronella — Andropogon citratis.

**தொகுரு,** துவர்ப்பு, astringence.

**தொகைக்குடிநீர்,** பஞ்சமூலக் கஷாயத்தைப் போல் சரக்குகளின் தொகையைக்கொண்டு பெயரிடப்பட்ட கஷாய வர்க்கம், a name given to decoction according to the precribed number of drugs going in as ingredients

**தொக்கசிவரி,** வலது கால், right leg.

**தொக்கடத் தைலம்,** ஐங்தெண்ணெயோடு தில்லைப்பால், முருங்கைப்பட்டை, காட்டு வாகைப் பட்டை, மாவிலிங்கம் பட்டை, பெருங்காயம், இந்துப்பு, வெள்ளைப்பூண்டு, வசம்பு ஆக 8-சரக்குகளையும் பொடித்துப் போட்டுக் காய்ச்சும் தைலம்; இது வாத நோய்களுக்குபயோகப்படுவதால் இதற்கிப் பெயர்; (அகஸ்—குறு—திரட்டு) a name for the medicated oil prepared by boiling the mixture of the five oils viz. Indian beech, castor, gingelly. .margosa, and poon (see ஐங்கூட்டெண்ணெய்) with the following eight drugs — the tiger's milk, powders of the barks of moringa or drum stick tree, common sirissa and lingam tree, and the past of asafoetida, rock salt, garlic and sweet flag It is used for massaging in rheumatic affections and pain and hence the name.

**தொக்கடம்,** வாதநோய் கொண்டவர்களுக்கு உடம்பில் தைலத்தைப் பூசிக் கையால் அழுத்தியும், மேலேறி மிதித்தும் இதத்தை யுண்டாக்குமோர் வகைச் சிகிச்சை, treatment by massage chiefly consisting in rubbing with medicated oil all over the body or the affected part of a person attacked with rheumatism, neuralgia or other nervous affections; then pressing and treading with the hands. See உழுச்சல்.

**தொக்கணம்,** கையினால் குத்தி உடம்பைப் பிடிப்பது; இதமாகச் சிரசைத் தாங்குவது; இதனால் தேக புஷ்டியும் நித்திரை சரும தாதுக்களுக்கு வலிமையுமுண்டாகும், a process consisting in striking with fist and then pressing the body or its part of a person suffering from some oilment — Massage. On account of this treatment the body grows strong, the skin gets lustre, the person gets sound sleep.

**தொக்கம்,** வயிற்றுச் சிக்கல், any hindrance to the passage of the contents of the stomach; 2. குழந்தைகளுக்கு சாதாரணமாய் மண், சாம்பல் முதலிய கண்டவைகளைப் பொறுக்கித் தின்பதினாலுண்டாகும் குடற் சிக்கல், வயிற்றுப்பிசம், வயிற்றுப்போக்கு முதலிய குணங்களையுண்டாக்குமோர் நோய், a disease in children marked by distension of stomach (tynpanites) diarrhoea etc., due to the hindrance to the passage of the intestinal contents and by their swallowing or eating whatever they come across with as mud, ash etc.

**தொக்கி,** சமுத்திரப்பச்சை, sea green, yellow mangosteen — Garcinia xanthochymus.

**தொக்கிடம்,** தைலம் தேய்த்து உடம்பை அமுக்குதல், pressing the body after anointing the body with medicated oil. see தொக்கடம்.

**தொக்கு,** உடம்பு, body; 2. தோல், skin; 3. மரப்பட்டை, bark of tree; 4. பஞ்சேந்திரியங்களிலொன்று அதாவது மெய் அல்லது துவக்கு, one of the five sense organs-skin.

**தொக்குசை,** கல்லுபயிற்றங்கொடி, creeper of stone pulse.

**தொக்குதகம்,** நிணநீர், lymph.

**தொங்கட்டம்,** உடம்பினோர் உறுப்பில் தொங்கும்பாகம், நஞ்சுக்கொடி முதலியன that which is attached to or hanging in an organ as umbilical cord etc; 2. குடற்றொங்கட்டம், mesentary.

**தொங்கல்,** மயிர், hair; 2. மயிற்றோகை, peacock tail: 3. ஆண் மயிர், man's hair; 4. குடுமி, tuft.

**தொங்கல் கழிச்சல்,** குழந்தைகளுக்குண்டாகும் ஓர் வகைப்பேதி; a kind of diarrhoea in children.

**தொங்கல்விழுதல்,** தளர்ந்து கீழ் நோக்கல், கருப்பை, பிடுக்கு, பெண்முலை முதலியன getting loose and hanging down wards as womb, scrotum. female breast etc.

**தொங்கி,** தொங்குங்கல், அதாவது ஆட்டுக்கல் a kind of stone pestle.

**தொங்கிப் பூ**, கொடிச் சண்பகம், cowslip creeper so called from its drooping flowers — Pergularia minor.

**தொங்கீன்**, சீனமல்லிகை. see மதனகாமப்பூ, China jasmine—Jasminum genus.

**தொங்குகாது**, தளர்ந்து தொங்கும்காதினடி, hanging to be of the ear.

**தொங்குகிழவன்**, கூன் கிழவன், old man stooped by age.

**தொங்குகுடல்**,

**தொங்குநார்**, எலும்பின் பாகத்தைக் கவர்ந்துள்ள சவ்வு மடிப்பு, any peritoneal or *other fold that serves to hold any small* bone — Suspensory ligament; 2. கண்ணின் பாவை மேற் கவர்ந்துள்ள மடிப்பு, the suspensory ligament of the eye lens — Zone of zinn.

**தொங்குமல்லி**, see தொங்கீன்.

**தொங்குமார்**, தளர்ந்து கீழ் நோக்குமுலை, sagging bust.

**தொங்குமுலை**, கீழ் நோக்கிய தளர்ந்த முலை, loose pendulous breast.

**தொடக்கிழுப்பு**, see தொடக்கு வலிப்பு.

**தொடக்கினி**, கருவு, foetus in the womb; embryo.

**தொடக்கு**, தீட்டு, menstrual blood, see துடக்கு.

**தொடக்குபடுதல்**, தீட்டுபடல், being unclean through menses; 2. சாவு, பிரசவம் முதலிய காரியங்களினால் ஏற்படும் தீட்டு; ceremonial uncleanliness through death, child birth etc.

**தொடக்குப்பைத்தியம்**, சூதகக் கோளாறினால் பெண்களுக்கு ஏற்படும் ஓர்வித பைத்தியம், a variety of insanity or mania as one of the concomitants of a hysteric condition — Hysteric mania.

**தொடரி**, தொடரிமுள், இதுவே கொக்கிமுள்ளு, small jujube tree Scutia indica, See கண்ணிமயக்கி; 2. தொடரிப்பூடு, a thorny shrub whose fruit is edible — Rhamuns *circumcissus*; 3. காட்டு இலந்தை, wild jujube — Zizypus rugosa.

**தொடரொழுக்கு**, தடையில்லா ஒழுக்கு, uninterrupted or free flow of anything.

**தொடர்**, பிசின், gum; 2. மிருகம், animal; 3. நாய், dog; 4. கோவை, Indian caper — Bryonia grandis; 5. குடற்றொடர், that portion of the alimentary canal either above or below the region of intestines.

**தொடர்கண்ணளி**, see தொழுகண்ணி.

**தொடர்குரு**, குருக்கள் நெருங்கத் தோன்றும் ஓர் அம்மை, confluent variola.

**தொடர்சிரங்கு**, ஒன்றன்பின் ஒன்றாகக் கிளைக்கும் சிரங்கு, itch rising one after the other — Confluent itch.

**தொடர்ந்தேற்றியாய் அரைத்தல்**, See கையோயாமல் அரைத்தல்.

**தொடர்பு**, தேகசம்பந்தம், *carnal intercourse*; 2. உறவு, chemical affinity.

**தொடர்புநோய்**, பிறப்பிலேயே வாய்ந்த நோய், *hereditary disease* — *Congenital* disease.

**தொடர்முருந்து**, மெதுவெலும்பு, loose cartilage.

**தொடலவம்**, நெட்டி, pith.

**தொடாப்பூ**, விரிந்தப்பூ, blosomed flower; 2. பெண்குறிமலர்; கன்னிப்பூ, an organ of the female genital — perhape hymen.

**தொடி**, ஒருபலம், one palam weight.

**தொடு**, பழுவெலும்பு, collar bone; 2. தொடுதல், *touching*.

**தொடுகுறி**,

**தொடுகை**, தொடுதல், touching; 2. பிடித்தல், taking hold of.

**தொடுக்கம்**, பொன், gold.

**தொடுசுவை**, உணவுக்குக் கொள்ளும் ஊறுகாய், துவையல் முதலியன, a relish to food condiment

**தொடுபதம்**, வேகும் பொழுது தொட்டுப் பார்க்கும் பதம், a stage at which the rice that is being cooked is examined to see if it is properly cooked; 2. சோறு, cooked rice.

**தொடுப்பு,** பொருத்து, joint.

**தொடுப்பு,** சம்பந்தம், sexual relation, intergue; 2. சோரபுருஷன், paramour.

**தொடுப்புக்காரி,** வைப்பு, concubine.

**தொடுப்புரசம்,** கொங்கணவர் வாத காவியத்தில் சொல்லியுள்ள 10 வகை இரசச் சத்துக்களில் ஒன்று, வேதையில் இதனால் மாற்றுயரும், one of the ten kinds of mercury preparations contemplated in Konganavar's work in Alchemy. This is capable of increasing the fineness of gold in transmutation of metals.

**தொடுப்பெலும்பு,** பொருத்தெலும்பு, bones of a joint.

**தொடுவிண்டு,** see தொடரி.

**தொடுவை,** ஒன்றின் சேர்க்கை, anything or part appended, something subsidiary hang ing or attached — Appandage, Con comitent.

**தொடை,** துடை, thigh; 2. பூங்கொத்து, bunch of flowers.

**தொடைக்கவுட்டி,** See தொடைச்சந்து.

**தொடைச்சந்து,** கவுட்டி, that part in the fold between the thigh and the scrotum; 2. துடைச்சந்து, the lowest part of the abdominal wall near its junction with the thigh — Groin; 3. See தொடைநடு.

**தொடைச்சந்துப்பொருத்து,** இதுவேஇடுப்புப் பொருத்து. இப்பொருத்து சஞ்சர சந்திகளிலொன்று, தொடை என்பின் பந்து வடிவமான மேல் அந்தத்திலுள்ள குமிழ் அனுமிகை யென்னும் முக்கூட்டு என்பின் கம்சக்குழிக்குள் பதிவதினால் இது உண்டாகிறது. இதன் முகப்புகள் முருந்தினால் மூடப்பட்டு வைவிசி, கவைவிசி, பாலிக தொடைவிசி, கம்சவிசி, குறுக்குவிசி ஆகியவைகளால் இணைக்கப்படுகிறது, Hip joint, it is ball and socket joint between the head of the femur and the rounded cavity — Acetabulum of the innominate bone and covered by articular cartilage and bound by ligaments.

**தொடைச்சந்துரோகம்,** கவுட்டிநோய், disease of the groin.

**தொடைநடு,** துடைச்சந்து, the space between the thighs — Inter femur.

**தொடைநரம்பு,** தொடையின் பின்புறமுள்ள ஒரு பெரிய நரம்பு, a big nerve that passes down the back of the thigh — Sciatic nerve.

**தொடைநரம்புவாதம்,** எப்பொழுதும் நடையின்றியிருத்தல், சீதள பண்டத்தை அதிகமாகச் சாப்பிடுதல், முதலிய குற்றங்களில் உண்டாகி தொடைப்பின் நரம்புகளை அநுசரித்துக் குத்தல், தீராதவலி, சில சமயங்களில் தொடைமுழுவதும் இடுப்பு முதுகு வலி கண்டு துன்புறுத்துமோர் வாதநோய், a painful affection of the large nerve passing down the back of the thigh due to consuming cooling substances, sedantary habits etc. It is marked by painful inflammation of the sciatic nerve, constant pain sometimes affecting the adjoining muscles causing rheumatism and even extending the whole of the back part of the limb from the buttock to the ham — Sciatica. see கிருத்திரசிவாதம்.

Note; The hips are fisrt affected, then the waist than the back, thigh, the knee, calf muscles sankle and foot. All those parts become stiff followed by piercing pain and parasthesia of the thigh. It is due to the painfull inflammation of the siatic nerve usually a neuritis. It is attended with tenderness along the course of the nerve and sometimes the wasting of the calf muscles. The pain is constant but subject to exacerbations. It usually attacks persons of middle age.

**தொடைநேர்ப்பேசி,** நீளப் போக்குள்ள தொடைச்சதை, straight muscle of the thigh — Rectus femoris muscle.

**தொடையகற்றும்பேசி,** தொடையைக்கவர்ந்துள்ள நார்ப்பாகத்தை இறுகச் செய்யும் பேசி, the muscle that tightens the fibrous sheath of the thigh — Tens or vaginae formis.

**தொடையெலும்பு,** தொடையின் நடுவெலும்பு, thigh bone — Femur.

**தொடையெலும்புக் கவை,** see தொடைச்சந்துப்பொருத்து.

**தொடைவாதம்,** தொடையில் ஏற்படும்வாத நோய், painful affection of the muscles of the thigh — Rheumatismof the thigh; 2. வயது தளர்ச்சியால் தொடை நரம்பில் ஏற்படும் வாதம், இதற்கு மல்லிகை யிலையை விளக்கெண்ணெயில் வதக்கிக்கட்டபோம், inflammation of the nerve of the thigh through old age — Senile neuritis. It is curedby a poultice consisting of heated jasmine leaves mixed with castor oil.

**தொடைவாழை,** தொடையின் உட்பக்கம் காணும் ஓர்வித சிலந்தி, ஆரம்பத்தில் அடி வயிறு; முதுகு, இடுப்பு இவ்விடங்களில் வேதனையுண்டாகி, தொடை வீங்கி, பிறகு வாகி வெளுத்து, பளபளப்பாயிருக்கும், கட்டி பிறகு பழுத்து சீழ் கொள்ளும், இது கெண்டைச் சதையிற் புறப்பட்டு மேலுக்கும் ஏறுவதுண்டு, இதனால் சிரசு நோய், குளிர் சுரம் முதலியன வுண்டாகி, தொடையின் சந்திலிருந்து கெட்ட நீர் ஆரம்பித்து சில்சமயங்களில் கீழுக்கும் இறங்கும், this is deep abscess of the thigh characterised by swelling of the thigh which becomes hard and pale with a smooth and shining surface marked by pain fever and loss of function of the limb. *The pain is felt sometimes in* abdomen, back and hip also. It then gets ripened and gives rise to suppuration.

**தொட்ட பூடு,** ஆனை நெருஞ்சில், elephant caltrops — Pedalium murex.

**தொட்டல்,** பெருங்குறிஞ்சி, medium white silky backed cone head—strobilanthes consanguinues; 2. தீண்டல், coming in contact with being touched.

**தொட்டவிடம்,** வர்சி, as opposed to விட்ட விடம் ஆகாயவெளி.

**தொட்டவிரல் தறித்தான்,** பெருங்குறிஞ்சா, scammony swallow wort — Secamone emetica.

**தோட்டாக்கால்வாடி,** see தொட்டாற்சுருங்கி.

**தொட்டால்வயிரி,** see தொட்டால்சுருங்கி.

**தொட்டால்வாடி,** தொட்டாற் சுருங்கி, prostate sensitive plant — Mimosapudica.

**தொட்டால் வேசி,** *சிமிட்டி, which see.*

**தொட்டாற்சிணுங்கி,** seeதொட்டாற்சுருங்கி.

**தொட்டாற்சுருங்கி,** சுண்டி, இது ஓர் செடி, முட்கள் வாய்ந்தது, இலைகள் சிறியன, தொட்டவுடன் சுருங்குந் தன்மையது, பிறகு சமயப்படி விரியும், இதன் வேர்க் கஷாயம் கல்லடைப்பை நீக்கும், உடலில் ஓடி கட்டு கின்ற வாதத்தடிப்பை நீக்கும், இலைகள், வேர்கள் மூலம் பௌத்திரம் இவைகட்கு தவும், இதன் வேரில் கடுக்காய்ச் சத்திருப்ப தால் மைகூட்டவுதவும், இச் சமூலத்தின் சாற்றைப் பௌத்திரம் புண்ணுக்குப் பூச லாம், இலைகளை யரைத்து ஓதப் பிடுக்கிற்குக் கட்டலாம், இதன் சாற்றோடு சமபாகங் குதிரை மூத்திரங்கலந்து கண்ணிற்குகலிக்கமிட கருவிழி வளர்த்தி அழற்சியால் நிறுத்தும், புண்புரைகளுக்கு பஞ்சில் இச்சாற்றை நனைத்துக் கட்டலாம், இது உடம்பைத் தேற்றி பலப்படுத்திக் காமத்தை யுண்டு பண்ணும், உடலில் ஓடிக்கட்டுகின்ற வாதத் தடிப்பை கரைக்கும், மேக முத்திரத்தை நீக்கும், வசியம் பண்ணவுதவும், வாதத்தடிப்பைக் கரைக்கும், இதன் வேரைக்காய வைத்து அரைத்துப் பாலில் கொடுக்க மூல நோய் போம், வேர்க்கஷாயம் மூத்திர நோய் களைக் கண்டிக்கும், இலையை மெழுகு போலரைத்துத் தடவிக் கட்ட விரைவாதம் கைகால் மூட்டு வீக்கம் போம், sensitive plant, humble plant — Mimosapudica alias M. sensitiva. It is mostly an under shrub, prickly, leaves are sensitive as it closes downwards or fold themselves at the slightest touch, and recover their position after *sometime. Decoction of root is useful* in calcareous deposits and in other gravellish complaints. leaves and roots are useful in piles and fistula. roots contain tanin and so they are useful for making good black ink with salts of iron, the juice of the plant is applied externally to fistulous sores leaves *ground into a paste* applied with benefits to hydrocele. Juice of the leaves with an equal quantity of horse's urine forms a pungent eye salve for removing films of cornea by setting up inflammation, it is also soaked in cotton and used in dressing sinus of wounds.

NOTE :— This plant is a native of Brazil and is said to have been naturalised in India long ago. It is also called Touch me not and is considered as resolvent and alterative and is useful in diseases arising from impure blood and bile. It is largely used in *Magic and forms an ingredient in love* philter and its many psychic virtues are not uncommon. It is said that if notice were to be given for its removal one cannot do it without some difficulty or obstruction.

**தொட்டாற்சுருங்கி,** தொட்டவுடன் கூச்ச முண்டாக்கும் உடம்பினோர் பாகம் அல்லது இடம், region of the surface of the body marked by abnormal sensibility — Hyperesthetic zone

**தொட்டாற்சொறியன்,** காஞ்சொறி, scorpion leaf — Tragia involucrata. It is so called because when it comes in contact with the body, it gives rise to itching sensation.

**தொட்டாற் சொறியன்,** see தொட்டால் சொறியன்.

**தொட்டி,** see தொட்டாற் சொறியன்; 2. குறுந்தொட்டி, rose coloured sticky mallow — Pavonia zeylanica; 3. தொட்டிப் பாஷாணம், which see; 4. ஓர் அகண்ட பாத்திரம், இது அடியிற் கண்டபடி பல வகைப்படும், a broad sized open vessel resembling a tub for holding water or any liquid. It consists of different kinds viz:

1. அயத்தொட்டி, iron trough.
2. செப்புத்தொட்டி, copper trough.
3. கற்றொட்டி, stone trough.
4. மரத்தொட்டி, wooden trough.

**தொட்டிக்கால்,** உள் வளைந்தகால், படப்புக் கால், bandy legged; 2. முட்டிக்கால்தட்டி, knock knee — Genu vulgam, it is opposed to புறவளைந்தகால் out knee — Genu varum.

**தொட்டிசுத்தி,** முலைப்பால், வெள்ளாட்டுப் பால் தனித்தனி 10 நாழிகை ஊறவைத்து எடுத்துக் கொள்ளுதல், the process of purifying of thoti pazhanam. Soak the pazhanam for 10 × 24 min in breast milk and then in goat's milk similarly.

**தொட்டிச்செம்பு,** தொட்டிப் பாஷாணத்தி லிருந்து எடுத்தச் செம்பு, copper extracted from thoti pazhanam.

**தொட்டிதனைப் பற்பமாக்கி,** சுண்டைக்காய், unarmed night shade — Solanum pubescens.

**தொட்டித்தொகை,** அயத்தொட்டி, செம்புத் தொட்டி பாஷாணங்கள், the two kinds of prepared arsenics containing iron and copper respectively as ingredients.

**தொட்டிப்பனை,** மலைப்பனை, hill palmyra — Borassus flabellifer so called probably of its trunk being used as a tub.

**தொட்டிப்பாகிதம்,** சிவப்பு நெல்லி, a red variety of Indian goose berry.

**தொட்டிப்பாஷாணசுத்தி,** துண்டுதுண்டாய் நறுக்கி, கிளிகட்டி நெல்லில் அவித்து எடுத்துக் கொள்ளுதல், cut the thoti pazhanam into small pieces; and bundle them in a piece of white cloth and keep it in the middle of paddy contained in an earthern pot which is then boiled. Take it out as soon as the husk of the paddy brakes.

**தொட்டிப் பாஷாணம்,** ரசமும் கெந்தகமும் கூட்டிப் பாண்டத்தில் சமைத்தது, a kind of arsenic prepared by mixing mercury and sulphur to form a chemical compound by a process mentioned in Tamil Medicine: 2. see அயத்தொட்டி பாஷாணம்; 3. see செம்புத்தொட்டி பாஷாணம்.

**தொட்டிமயமூலி,** நோம்புவாலி, an unknown plant.

**தொட்டியக்கரு,** தொட்டிவித்தையிற் சொல்லிய நகம், மயிர், பிண்டம், தலை மண்டையோடு முதலியகரு, the essential parts or material parts mutilated from the human body such as nails, hair, foetus or embryo, skull etc , required in the performance of magic by a class of people known as Tottyas. ( கம்பளத்தார் )

**தொட்டியச்செம்பு,** see தொட்டிச்செம்பு.

**தொட்டியம்,** பில்லி, சூனியம், வசியம், குறி முதலிய வித்தைகளைக் கற்றுப் பழகிய கம்பளத்தான், இவர்களைக் கண்டால் சனங்களுக்குப் பயம், இவர்கள் பாம்பு கடிக்கும் மந்திரிப்பார்கள், தொட்டிய வித்தையைக் கற்றதனால் இச்சாதியாருக்கு இப்பெயர் அமைந்தது போலும், a treatise on Mantric Science or Magic containing the art of witch craft, sorcery, necromancy, love philter etc., supposed to have been compiled in Tamil by the great sage Agastiya.

**தொட்டியவித்தை,** தொட்டியசாதியார் செயயும் பில்லி, சூனியம், கருவேலை முதலிய வித்தைகள், the various performances in sorcery witch craft, etc., done by the class of people known as Tottyas.

**தொட்டிவயிறு,** பெருவயிறு, bigbelly; gorbelly 2. விலாப்புடைத்த வயிறு, belly like that of animals — Paunch belly.

**தொட்டு,** பூண்டு, plant.

**தொட்டுத் தெளித்தல்,** கையாற்றொட்டுத் தெளிக்குதல், dipping and sprinkling.

**தொட்டுப்பார்த்தல்,** கையாற்தொடல், feeling by touch as in fever.

**தொட்டுப்போடல்,** மருந்தெண்ணெய் அல்லது தைலம் இரணம், புண், காயம் முதலிய வைகளுக்கிடல், besmearing or applying medicated oils or ointments to wounds, sores etc.

**தொண்டகை,** ஆதொண்டை, thorny or Ceylon caper — Capparis horrida.

**தொண்டத்தி**, பத்மினிசாதிப்பெண், one of the four classes of women classified according to lust.

**தொண்டி**, கள், toddy; 2. கலப்பைக் கிழங்கு, plough root Gloriosa superba; 3. கீழ்த்தோண்டி, bloody drop ordure tree -- Sterculia guttata; 4. மதகிரிவேம்பு, Java red cedar — Bischofia javanica.

**தொண்டிப்பூடு**, நத்தைச் சூரிச்சக்களத்தி, a plant akin to bristly button weed — Spermacoce hispida.

**தொண்டு**, ஓர்பூண்டு, an unknown plant; 2. பனி, dew; 3. கோழியுள்ளான், jack snipe — Scolopox gannago.

**தொண்டை**, நாசி, வாய், குரல்வளை இம்மூன்றுக்கும் பின்னுகவும், கழுத்தின் முன்னுகவு முள்ள சீரணபாதையின் ஓர் பகுதி; இது 4½ அங்குல நீளமும், மேற் பக்கம் அகன்றும் கீழ்ப்பக்கம் ஒடுங்கியும் நீண்ட பேசிச் சவ்வினுலுண்டாகிய குழாய், the anterior part of the neck opening downwards at the back of the mouth the nose and the larynx and forming a part of the alimentary canal. It is about 4½ inches in length with upper end wide open and the lower part narrow lined with mucous membrane; 2. see தொண்டகை; 3. கோவை, Indian caper — Broynia grandis; 4. பெருங்குரல், figuratively indicating loud voice; 5. துதிக்கை, elephant's trunk.

**தொண்டைக்கட்டு**, தொண்டை யழற்சியால் மூச்சுவிட முடியாது கட்டிக் கொள்கை, severe sore throat attended with threatened suffocation due to constriction — Cynanche.

**தொண்டைக்கபம்**, சிலேட்டுமம். phlegm.

**தொண்டைக் கம்மல்**, தொண்டையழற்சி, inflammation of the throat, a simple sore throat — Angina simplex; 2. குரலடைப்பு, hoarseness; 3. குரல் கம்மல், inflammation of the larynx a condition attended with dryness and soreness of the throat, hoareness cough etc — Laryngitis. இதற்கு துத்தியிலை வெள்ளாட்டுப்பால் ஆவியை வாயால் இழுக்கப்போம்.

Laryngitis will get better if the vapours from the boiling goat's milk mixed with the paste of the leaves of country mallow — Abutilon indicum are passed through it.

NOTE :— It ( Laryngitis ) may be brought on by cold or by too great exertion of the voice, or it may be connected with consumption or be consequence of venereal disease or cancer. It may produce only hoarseness or it may go on to total loss of voice, ultimately causing suffocation. It may be terminating often fatally, in children in a few hours or it may be chronic lasting weeks or months. If the discharge is acute and severe, it is a dangerous disease There will be fever, pain and tightness about the throat, croaking voice cough of croupy character. The throat may be seen red and swollen within or epiglottis may be seen erect and inflamed. This should not be confounded with croupor diptheria.

**தொண்டைக்கரகரப்பு**, தொண்டையறுப்பு, irritation of throat.

**தொண்டைக்கழலை**, தொண்டைக்குள்ளாக விருக்கும் கேடய கோளம் பருத்து அதனுல் கழுத்தின் முன்பக்கம் கழலைக் கட்டியைப் போற் காணப்படும் வீக்கம், enlargement of thyroid body causing a swelling in the front part of the neck — Goitre.

**தொண்டைக்களகளப்பு**, See தொண்டைக் குள்ளிரைச்சல்.

**தொண்டைகனப்பு**, see தொண்டைக் கம்மல்.

**தொண்டைக் கனைப்பு**, கனைத்தல், braying like horse.

**தொண்டைக்காறல்**, சளியை வெளிப்படுத்த கனைத்தல், making harsh cry or sound to bring out phlegm, forcible expectoration.

**தொண்டைக்குத்தல்**, See தொண்டைக் குத்து.

**தொண்டைக்குத்து**, உண்ணுக்கு வளர்த்தி, elongation of the uvula touching the throat; 2. தொண்டைவலி, shooting pain of the throat.

**தொண்டைக்குழி**, தொண்டையின் அடிக் குழி, a depression at the base of the neck just above the sternum — Fonticulous gutturis.

**தொண்டைக்குள் ளிரைச்சல்**, குரட்டை விடுவதாலும், இருமலாலும் தொண்டைக் குள் ஏற்படும் ஒலி.

**தொண்டைக்குறுகுறுப்பு**, தொண்டைக் குள்ளிரைச்சல்.

**தொண்டைக்கோளம்,** வாயின் அடிப்பாகத்தில் உக்கிர தொண்டையில் இரு பக்கத்திலும் வாதுமைக் கொட்டையைப் போல் தடித்த சதைப்பற்று, இதினின்றுண்டாகும் நீர்வாய்க் குட்புதம், விஷப்பூச்சிகளைக் கொல்லுந் தன்மையது, சிலசமயங்களில் இதற்கு சைத்தியம் முதலியவைகளால் அழற்சியேற்படும், a small almond shaped mass of flesh between the pillars of the fauces on either side in the region of the pharynx. They are believed to act as sources for the supply of some fluid to the mouth and pharyanx to destroy the noxiots micro organisms or bacteria entering the mouth Tonsils; 2. தொண்டை அல்லது கழுத்திலிருக்கும் கோளங்கள், glands in general of the throat or the neck; 3. கழுத்தின் நிணநீர்க் கோளம், lymph glands of the neck — Cervical gland; 4. கேடய கோளம் thyroid gland.

**தொண்டைச்சங்கு,** குரல்வளை முருந்து, shield shaped cartilage of the larynx.

**தொண்டைச் சங்கு,** அமுத குழை—கேடய கோளம், thyroid gland.

**தொண்டைச்சளி,** see தொண்டைக் கபம்.

**தொண்டைச் செவிடு,** தொண்டையடைப்பினாலேற்படும் செவிடு, deafness due to obstruction in the throat arising from enlargement of some glands.

**தொண்டைத்தாபம்,** தொண்டையழற்சி, inflamamtion of the throat and is its adjacent parts — Quinsy; 2. தொண்டைக் கோள ழற்சி, inflammation of tonsils — Tansilitis.

**தொண்டைத்திறத்தல்,** மிடறடைப்பு நீக்கல், relief from the obstruction in the passage of the throat.

**தொண்டைத் தூறு,** தொண்டையிலேற்படும் சதை வளர்ச்சி முத்தோஷம் தனித்தோ அல்லது பிணைப்பட்டோ, இரத்தத்தோடு கூடியோ அதிகப்படுவதால் தொண்டையின் சளி சவ்வைத் தாக்குவதினால், தூறு முளைத்து தொண்டையை அடைத்து மூச்சி விடக் கூடாதபடி கொல்லுந் தன்மையது, a disease of the throat giving rise to vegetation or fleshy growth of papillae or false membrane. It is due to the aggravated condition of the three humours in the system either severelly or in combination or mixed with blood affecting the mucous membrane of throat. The growth caused, gradually obstructs the channel of the throat and brings about death —Diphtheria

**தொண்டை நீர்கட்டு,**

**தொண்டை நெரித்தல்,** மூச்சுவிடாதபடி தொண்டையை அமுக்குதல், compressing the throat so as to choke — Throt tling; 2. தொண்டை நெரியச் செய்தல் (lit) crushing the throat causing fracture.

**தொண்டைநோய்,** தொண்டை சம்பந்தமான குரல்வளை, காற்றுக்குழாய் முதலிய உறுப்புகளில் ஏற்படும் நோய்கள், diseases in general of the throat organs such as larynx, trachea, gullet etc.

**தொண்டைப்புகைச்சல்,** see தொண்டை கரகரப்பு.

**தொண்டைப்புண்,** தொண்டையுள்ளுறுப்புகளுக்கேற்படும் வேக்காடு, புண், விரணம். முதலியவை, disease of the throat such as inflammation, soreness ulceration etc of the internal parts as tonsils, larynx, pharynx, oesophagus etc known as tonsilitis, laryngitis pharyngitis etc.

**தொண்டைப்புற்று,** தொண்டைக்குள் புறப்படும் சிலந்தி, விரணம், cancer of the throat 2. புற்றைப்போல் தொண்டைக்குள்ளேற்படும் சீழ் கூடிய சந்த வளர்த்தி, growth of flesh inside the throat — Suppurative tensilitis.

**தொண்டைமுடிச்சு,** குரல்வளை வெளியிற் காணப்படும் முருந்தினாலாக்கப்பட்ட பிதுக்கம், the prominence in front of the neck caused by the cartilages which enclose the larynx — Adam's apple.

**தொண்டையடைத்தல்,** எவ்வித காரணத்தினாலாவது தொண்டையில் பொதுப்படவுண்டாகும் அடைப்பு, obstruction in general in the passage of the throat due to any cause; 2. தொண்டைச் சுருக்கத்தினால் மூச்சிவிட முடியாமலேற்படும் அடைப்பு, a disease or symptom characterised by spasmodic suffocative attacks — Angina.

**தொண்டையடைப்பான்,** தொண்டை முழுவதும் வீங்கி விழுங்கமுடியாமலும், உதான வாயு சம்பந்தத்தால் வாய்குரல்வளை முதலிய விடங்களில் அழற்சி கண்டு மூச்சுவிட முடியாமலும் அதிக சுரங்காய்ந்து கபக் கோளாறினால் ஏற்படும ஓர்வித அடைப்பான் நோய் a disease in which large swelling occurs along the whole throat so as to obstruct completely the passage of food solid or liquid. It is marked by suffocation and high fever as a result deranged phlegm in the system; 2. ஆடு மாடுகளுக் குண்டாகும் அடைப்பன் நோய், inflammation of the throat in cattle; see அடைப்பன்; 3. குரலடைக்கும் ஓர் நோய், malignant sore throat.

**தொண்டையடைப்பு,** see தொண்டையடைத்தல்.

**தொண்டையில் தூறுமுளைத்தல்,** see தொண்டைத்தூறு.

**தொண்டைவரட்சி,** தொண்டையில்ஈரமின்றி வரண்டு காய்ந்து இருத்தல், இது சீமையத் திப்பழம் சாப்பிட போம், dryness of the throat. This is cured by eating foreign fig.

**தொண்டைவலி,** தொண்டை நோவு pain in the throat.

**தொண்டை வலிப்பு,** தொண்டைக்குள் ஏற்படும் நரம்புச் சுருக்கம், spasmodic contraction of the muscles of the throat especially in a disease of the pharnyx.

**தொண்டைவளர்ச்சி,** தொண்டையினுட்சவ்வு பருத்து தொண்டையை அடைத்தல். growth of false membranes obstructing the throat as in diphtheria.

**தொண்டைவிரணம்,** தொண்டைவேக்காடு, inflammation of the throat; 2. சன்னி பாதசுரம் முதலிய நோய்களால் தொண்டையிற்காணும் விரணம், ulceration of uvula and other parts of the throat seen in typhoid fever etc.

**தொண்டைவீக்கம்,** பொதுவாக தொண்டையிற் காணும் வீக்கம், swelling in general of the throat.

**தொதி,** பப்பரப்புளி, monkey bread tree — Alansonia digitala; 2. ஓதியமரம், elephant webera, Indian ash tree — Wodina wodier.

**தொதிப்பரி,** பேராமுட்டி, fragrant sticky mallow — Pavonia odorata.

**தொத்தல்,** இளைத்து எலும்புந் தோலுமாய் உள்ள மனிதன், a man with skin and bone said of a person who is much emaciated. It is a contemptuous term; 2. ஏறுதல், climbing; 3. தாவுதல், (in botany) creeping and rising on some support; 4. பாய்தல், passing over form one side to the other as a monkey.

**தொத்தி,** கொடி, creeper; 2. ஓர்மரம், an unknown tree.

**தொத்திலாக்காய்.**

**தொத்து,** ஒட்டுவாரொட்டி, contagion; 2. ஒட்டுதல், அதாவது ஒருவரிடமிருந்து மற்றொருவருக்கு கோயணுகல், அல்லது ஒட்டுதல், the carrying of disease germs from one infected person to a well person; 3. பழமை, oldness; 4. பூங்கொத்து, bunch of flowers.

**தொத்துகாமாலை,** ஒட்டு காமாலை, infectious jaundice.

**தொத்துக்கிரந்தி,** ஒட்டியபுண், infectious venereal ulceration.

**தொத்துச்செடி,** பூமியிற்படாமல் வெளியிற் காற்றுப்பட்டுக் கொண்டிருக்கும்படி தாங்கி நிற்கும் வேர்களுள்ள செடி, plants the roots of which do not enter into the ground but hang in the air as air creeper (கொத்தான்) air plant (Situs thread) plants with adventitious roots given off by climbing or erect stems as in pepper, banyan and screw pine; 2. பிறிதொரு ஊட்டமில்லாமலே ஒரு செடியின்மேல் வளரும் மற்றொரு செடி, a plant growing on another plant but not deriving its nourishment from it — Epiphyte; 3. புல்லுருவி, a plant which grows upon another plant and also feeds upon its juice — Parasite.

**தொத்துநோய்,** நேராக ஒருவரைத் தொடுவதினாலும் கெட்ட நாற்றத்தை உட்கொள்ளுவதாலும் ஒருவரிடமிருந்து மற்றொருவரைத் தாக்கும் ஒட்டுநோய், disease communicated by mediate or immediate contact or by effluvia from one person to another person — Contagious disease; 2. கெட்டபூச்சி அல்லது புழுக்களினுலுண்டாகி ஒருவரிடமிருந்து மற்றொருவரைத் தாக்கும் வாந்தி, அம்மை முதலிய நோய்கள், an infections disease caused by parasites liable to be communicated from one person to another. It may or may not be contagious as cholera, small pox etc; 3 பழயநோய், an old disease; 4. குட்டம், leprosy.

**தொத்துப்பல்,** அதிகப்படி பல் முளைத்தல், an extra tooth springing from the root of another tooth with some pain. If it is fully developed, the pain causes.

**தொந்தகாசம்,** ஈளையிருமல், chronic asthma characterised by spitting of copious phlegm and profuse expectoration; 2. கர்பத்திலேற்பட்ட காசம், asthma acquired by hereditary causes; 3. கண்களிலும் பார்வையிலும் வாதபித்த காசத்தை யுண்டாக்கும் ஓர்வகைக் கண்ணோய், a congenital cataract due to disorder of vatha and pitha humours — wind and bile prevailing in the black of the eye.

**தொந்தகாமாலை,** கருபத்திருலேற்பட்ட காமாலை, congenital form of jaundice "Congenital family icterus or familiar acholuric jaundice".

2. நாட்பட்ட அசாத்தியக் காமாலை, haemolytic jaundice of a chronic nature.

3. செயற்கையா லுண்டான காமாலை, the acquired form of jaundice known as acquired hemolytic jaundice.

**தொந்தசம்,** முத்தோஷத்தில் ஏதாவது இரண்டு தோஷம் சேர்ந்ததினுலேற்பட்டது, that which is produced from the morbid affection of any two of the three humours in the human system.

**தொந்தசலம்,** வாதபித்த சிலேட்டும தோஷத்தால் உடம்பிலுண்டாகும் கெட்டநீர், morbid fluid in the system collected through the derangement of the three humours.

**தொந்தசன்னி,** அசுத்தவுணவாலும், கெட்ட நீரைக் குடிப்பதாலும் உடம்பினில் தொந்தம் ஏற்பட்டு அதனுலுண்டாகும் சன்னிபாத சுரம், typhoid fever due to some contagious principle introduced into the body through contaminated food and drink which deranges the humours and causes them to combine with one another; 2. உடம்பினிலுள்ள அவயவங்களின் கேட்டினுலும், இரணம், காயம் இவைகளிலுண்டாகும் விஷத் தன்மையாலும், விஷப்பண்டம் அல்லது மருந்துகளை உட்கொள்ளுவதாலும் தொந்தம் ஏற்பட்டு அதனுலுண்டாகும் நரம்பைப் பற்றிய சன்னி, tetanus caused by a toxin due to various causes such as putrid matter in the organs of the body. Contaminated injury scratch which becomes in habited by the bacillus, consumption of poisonous substances or over dose of poisonous substances.

**தொந்தசுரம்,** உடம்பில் நாட்பட்டுத் தங்கிய சுரம், fever continuing from a longtime, lingering or chronic fever, long continued fever.

**தொந்ததேகி,** வாத பித்த சிலேட்டுமக் கோளாறுகளின் தொந்தத்தையுடைய உடம்பை வாய்க்தவன் a man with a constitution predisposed to the derangements of the three humours; 2. பிறப்பிலேயே நோய்வாய் பிணிபட்டு உழலும் உடம்பை யுடையோன், a man frequently being attacked of congenital diseases; 3. நாட்பட்ட நோயால் பிடிக்கப்பட்டவன், one suffering from long continued a chronic disease.

**தொந்தநாடி,** see துவந்தநாடி.

**தொந்தநோய்,** பழமையான நோய்; 2. நாட்பட்ட நோய், old disease, long continued or chronic disease, 3. பிறப்பிலேயே வாய்ந்த நோய், hereditary disease; 4. சேர்க்கையாலுண்டாகிய, வெள்ளை, வெட்டை, கிரந்தி, பிரமேகம் முதலிய நோய்கள், venereal syphilitic or other urinary diseases acquired by sexual union.

**தொந்தபுாலை,** see தொந்தம்பாலை.

**தொந்தப்பிரமேகம்,** விரண மேகமுள்ள பெண்களிடம் சம்போகிப்பதினுல் அவர்களுடம்பின் உஷ்ணமும், விஷநீரும், ஆண்குறியின் துவாரத்தினுட் சென்று அகத்திலும் புறத்திலும் விரணத்தை யுண்டாக்கித் துன்புறுத்தும் ஓர் வகை மேகநோய், a contagious venereal disease mainly propagated by impure coitus with women suffering from venereal diseases such as gonorrhea, chancroid, syphilis, gleet etc, in which it is said that the venereal heat or the morbid fluid emanating from the women is transmitted through the opening of the male organ giving rise to venereal sores internal or external as the case may be.

2. கற்பத்திலூறிய பிரமேகம் a venereal or syphlitic disease propagated by inheritence. It is a disease existing at birth, whether derived from the male, reproductive element or due to infection from the mother, and such children of diseased parents are often born diseased, but even if they escape maladies in infancy, it is more likely to become consumptive a scrofulous.

3. அடிவயிறு சுரந்து உடம்பில் நமைச்சலுடன் அடிக்கடி கடுத்து மிக்க பிரயாசையுடன் நீரிறங்கும் ஓர் மேகநோய், a urinary disease marked by distension of abdomen due to retention of urine in the bladder, itching sensation in the body, frequent irritating pain and increasing difficulty in making water. It may be due to stricture or some ulcer in the urinary passage or other existing causes.

**தொந்தமயினம்,** பச்சைக்கடலை, green Bengal gram.

**நரம்புவாதம்**, நரம்பிற் கேற்படும் வாதவலி, இது நரம்பிலும் அல்லது நரம்போடும் மார்க்கத்திலும் காணும், நோயிலும் இவ்வலி காணும், இவ்வலி மிகக்கொடுமை வாய்ந்ததும், விண்விண்ணென்று தெறிக்கக் கூடியது மாயிருக்கும், இது உடம்பில் அனேக விடங்களிற்காணும், இடத்தையும் காரணத்தையும் கருதி இது பலவகைப்படும், (உ-ம்) மார்பு, முகம், சிரசு இவைகளும், விஷம், நீரிழிவு, சூலை முதலியவைகளும் காரணங்களாம், இதைக் கீல் வாதமெனக் கருதுவது தவறு, ஏனெனில், நரம்புவாதம் ஓரேயிடத்தில் நிலைத்து நிற்கும், ஆனால் கீல் வாதமோ பல மூட்டுக்களிற் காணுவதுமன்றி ஓடித் திரியும் சுபாவமுடையது, pain in a nerve or in nerves or the pain radiating along the course of a nerve — Neuralgia. It is also a name applied to pain due to diseases or other morbid conditions. The pain is of a severe darting or throbbing character attended by sensitiveness of the skin. It occurs in several parts of the body and is distinguished according to the part affected or to the cause as bronchial, malarial, *diabetic, gouty, facial, occipital* etc.

This should not be confounded with the rheumatic or arthritic pain as the former is confined to one particular part and the latter attacks several joints and is of wandering nature.

**நரம்புவாயு**, நரம்பிற்ந்க் காணும் அழற்சி, அல்லது வீக்கம், inflammation or swelling; of a nerve; 2. நரம்புத்தடிப்பு, thickening of a nerve or vessel; 3. விதைவாயு, inflammation of testis marked by pain and swelling of the spermatic cord—Orchitis See ஆனந்த வாயு.

**நரம்புவிசை**, நரம்பின் வேகம், agility or brishness of a nerve; 2. நரம்புபலம், strength of a nerve.

**நரம்புவிறைப்பு**, நட்டுக்கும்படி செய்யும் நரம்பு, nerve that causes erection.

**நரம்புவீச்சு**, நரம்பிழுப்பினால் ஏற்படும் வலி, pain due to stretching of the nerves.

**நரம்புவீழ்ச்சி**, உடம்பின் நரம்புகள் செயலற்று, சோர்வடைந்து அதனால் ஏற்படும் களைப்பு, extrenic exhaustion or powerlessness, a nervous disorder marked by nervous prostration — Neurasthenia.

**நரம்புவெறி**, நரம்புநோயில் ஏற்படும் சித்தப்பிரமை, nervous disease complicated with mental disorder — Neuropsychosis.

**நரம்புவேதனை**, நரம்பு வலி, pain in a nerve.

**நரம்புவேர்**, நரம்புமொத்தை, a mass of nerve matter — Ganglion.

**நரம்புறுதி**, see நரம்புவலிமை.

**நரம்பெழுச்சி**, நரம்பு எழும்பிக்காணல், dilated or enlarged condition of a nerve or vein above the surface of the skin; 2. நரம்பு விறைத் தெழும்புதல், erectile power of the nerve.

**நரம்போட்டம்**, நரம்பு உடம்பில் பலவிடங்களிலும் ஓடிப்பிரிந்து நிற்றல், running or spreading of nerves in different parts of the body.

**நரம்போய்ச்சல்**, நரம்பு தளர்ச்சியினால் ஏற்படும் சோர்வு, exhaustion of nervous energy — Neurolysis.

**நரல்**, செத்தை, dried or dead leaves.

**நரல்வு**, உள்ளோசை, murmur.

**நரவதி**, மஞ்சள், turmeric.

**நரவம்**, அனிச்சை மரம், a kind of flowering plant or herb whose flowers so very sensitive that they droop when smelt or when the weather is cloudy pimpernel — Anagallis arvensis.

**நரவானமண்டலம்**, மருக்காரை, common emelic nut—Randia dumetorum.

**நரவானரம்**, வாலில்லாக் குரங்கு, a tailess monkey, more like a man—Ape; 2. பெரிய மனிதக் குரங்கு, one of the largest man like ape (a native of Sumatra) — Orang outang.

**நரளி**, கடலை, bengal gram; 2. வேர்க்கடலை, ground nut.

**நரனை**, see நறனை; 2. காட்டுப்பிரண்டை, iguana's foot vine — Vitis pedata.

**நரனையிலை**, see புளிநறனையிலை.

**நரன்**, மனிதன், man.

**நரன்னுதி**, கடுகுரோகணி, black hellibore—Helliborus niger.

**நரா**, கன்றிப்போதல், becoming contused.

**நராங்கம்**, நாரத்தை, bitter orange — Citrus aurautium alias Aurautium bigaradia; 2. (நர+அங்கம்) ஆண்குறி, pensis; 3. முகத்தில் எழும்பும் குரு, eruptions on the face pimples.

**நராந்தகம்**, இறப்பு, death.

**நராந்தம்**, காக்கை, crow.

**நரி**, சம்புகம், jackal — Lupus aurcus alias Oxigolis indicus.

Their nasal bones are enclosed in amulets and used as a talisman, their teeth are also used in magic.

நரிவகை: varieties, 1.குட்டி நரி, young jackal, 2. குள்ளநரி, fox; 3. பெருநரி, chitta; 4. நுழைநரி, fox; 5. குழிநரி; 6. வளைநரி, fox.

**நரிக்கடி**, நரியினாலுண்டான விஷக்கடி, poisonous bite of a fox.

**நரிக்கண்டல்**, விஷ்ணுகண்டல், goat's horn, mangrove — Aegiceras majus.

**நரிக்களா**, சிறுகளா, downy Bengal currant — Carissa spinarum ( hirsuta ).

**நரிக்காரம்**, பொரிகாரம் அல்லது வெங்காரம், borax; 2 புலி, tiger; 3. கோணாய், jackal.

**நரிக்காய்ச்சி**, ஓர்வகைப்பனை, இது சிறிய காய்களைப் பெறுதலாலிப் பெயர், a kind of palmyra tree yielding small fruits.

**நரிக்கிண்டிவேர்**, கண் புகைச்சல் போம்.

**நரிக்குழி**, நரிதங்கும் குழி, fox's hole, dwelling place of fox.

**நரிக்கொம்பு**, நரித்தலை மண்டையோட்டின் மேல் காணப்படும் இரண்டு குமிழ், the two nodes or knotty protuberances on the top of the skull of a fox.

**நரிக்கொன்றை**, மைக்கொன்றை, யானைச் சொறியைப் போக்கும் ஓர் வகைக் கொன்றை, Rox burgh's cassia — Cassia javanica alias caesalpinia pulcherima. It is said to cure eczema; 2. செங்கொன்றை, red cassia, see மைக்கொன்றை.

**நரிச்சல்**, ஓர்வகை வெளவால், a kind of bat.

**நரிச்சின்னி**, See சிறுசின்னி.

**நரிச்சீரகம்**, சிறுசீரகம், common cumin seed — Cuminum Cyminum.

**நரிஞ்சி**, ஓர் காட்டு அவுரி, hill forest indigo — Indigofera pule hella.

**நரித்தலை**, முழங்கால் முட்டு, knee cap.

**நரித்தலைவாதம்**, முழங்காலுக் குள்ளிருக்கும் சவ்வுக்கு தாபிதங்கண்டு, உளைச்சலுண்டாகி, நீர் சேர்ந்து எலும்பு வளர்ந்து நரித்தலையைப்போல் எலும்புகள் மொத்துகட்டி வீக்கத்தையு முண்டாக்கி நடக்க முடியாமற் செய்யுமோர் வாதநோய், இந்நோயில் முழங்கால் பருத்துக் காணுவதுமன்றி காலை நீட்டவும் முடக்கவும் முடியாது, a disease of the knee joint with a marked tendency to chronicity characterised by inflammation and swelling of the joint, accumulation of morbid fluid which are followed by over growth of articular cartilages and synovial membrane with destruction of those parts of the cartilages subjected to intra articular pressure and progressive deformity by assuming the shape of a jackal's head and there by rendering the patient unable to walk or move about. The knee becomes unusually large and makes him difficult to fold or stretch his leg. This is caused by excited vayu uniting with the vitiated blood produces the inflammation of knee joint — Rheumatoid artheritis — Synovitis of the knee.

NOTE :— It is marked by pain, heat and read ness of the part affected due to villous out growth from the synovial membrane, which cause impairment of function and crepitation. It is the atrophic and hypertropic changes in the bones that lead to marked joint deformity. It is often believed that the disease is rheumatismal or gouty in nature.

**நரித்தலைவாய்வு**, வெகுசீதள காலத்தில், வாயு, கப பண்டங்களை மிகுதியாகவுண்பதாலும், மிகு சையோகத்தினாலும் முழங்கால், கீல், பாதம் இவ்விடங்களில் வீக்கத்தையும் வலியையு முண்டாக்கும் ஓர்வித வாய்வு, இது மேகசூலை, வாதம், மேகவெட்டை முதலிய நோயின் காரணமாக வேற்படும், acute arthritis marked by inflammation of joints especially in knee and ankle, pain, heat, red-

ness and swelling due to gout, rheumatism gonorrhoea etc. It is said to be caused by errors in diet as by taking windy and phlegmatic substances, eating food in excess, indulging too much or too frequently in sexual intercourse.

**நரித்தல்,** நொறுக்குதல், crushing.

**நரித்தோல்,** நாவற்பட்டை, the bark of jaumoon tree — Eugenia jamboolana; 2. நரியின் தோல், the outer skin of fox or jackal.

**நரிநவ்வல்,** சிறுநாவல், small jaumoon — Eugenia jambos.

**நரிநறளை,** சிறு நறளைக்கொடி.

**நரிநாமம்,** ஐகாரம், the mystic mantric letter 'ai'

**நரிநாவல்,** see நரிநவ்வல்.

**நரிநிறம்,** பலநிறக் கலப்பு, a mixture of varied colours.

**நரிப்பயம்,** புலிப்பயம், fear of big fox or cheetah.

**நரிப்பயறு,** மின்னிப்பயறு அல்லது பனிப் பயறு, fox gram — Phaseolus trilobatus; 2. நரிப்பச்சைப்பயறு, jackal green gram — Rothia trifoliata; 3. வயற்பயறு, field grain.

**நரிப்பயற்றங்கீரை,** நரிப்பயற்றுச் செடியின் கீரை, இது உணவோடு உண்பதற் குதவும், the green leaves of fox gram used as edible greens in food.

**நரிபயற்றங்கொடி,** சிறுபயறு, பித்தம், மேக வெட்டை, பித்த வெட்டை போம், green gram; it alleviates bile, gleet etc.

**நரிப்பல்,** நரியின்பல், உது ஓர் கழுத்தணியுகு குழைந்தை தோஷங்களுக்காகக் குளிசமாட வுதவும், fox tooth used as an amulet in children's morbid affections.

**நரிப்பாகல்,** காட்டுப்பாகல், bristly balsam apple — Momordiea hispida alias M. tuberosa; 2. சிறுபாகல், small spiked bitter cucumber Momordica humilis alias M. muricata.

**நரிப்பாலை,** சிறுபாலை, obtuse leaved ape flower — Mimusops roxburghiana.

**நரிப்பித்தம்,** நரியின் ஈரல் பித்தம், the bile or gall of the fox — Vulpis fel.

**நரிப்புடல்,** சிறுபுடல், அல்லது கொம்புப் புடல், short snake gourd — Trichosanthes nerviholia; 2. புடற்கொடி. common snake gourd — Trichosanthes anguina.

**நரிப்புத்து,** முட்சுண்டை, prickly shoonday —Solanum trilobatum.

**நரிப்புள்ளடி,** சிறுபுள்ளடி, (lit) small bird's foot, unifoliate tick trefoil — Hedysarum genus alias Desmodium latifolium.

**நரிப்பூடு,** கோவை, Indian caper — Bryonia grandis alias Cephalandra indica.

**நரிப்பூலா,** see சிறுபூலா.

**நரிப்பொடுதலை,** சிறு பொடுதலை, a small variety of creeping vervain — Verbena capitata.

**நரிமகம்,** சிறுகோவை, small leaved Indian caper coccinea indica. It is opposed பெரிய கோவை larged flowered bryony.

**நரிமகாகுரும்பை,** சிறு குரும்பை, young immature cocoanut or palmyra fruit — Young fruit bud.

**நரிமண்டையோடு,** நரியின் மண்டையோடு. இது மாந்திரீகத்திற் குதவும். fox's skull, useful in magic.

**நரிமருட்டி,** கிலுகிலுப்பை, fox frightener— Crotolaria laburni folia; 2. குழந்தை களுக்குக் காணும் முகச் சுளுக்கு முதலிய குறிகள், facial spasm and other symptoms in children, see நரிமிரட்டி.

**நரிமணையிலை,** நக்கபீடாகு (in Telugu).

**நரிமாமிசம்,** சிறு தும்பை, small leucas flower — Leuca genus.

**நரிமிரட்டி,** பேய்மருட்டி அல்லது பேய் விரட்டி, இதுவே கருந்தும்பை, devil frightener, black tumbay or malabar catmint — Anisomeles malabarice; 2. வட்டக்கிலு கிலுப்பை, crotolaria verrucosa.

**நரிமுடுக்கி,**

**நரிமுருக்கு,** பேய் முருக்கு, devil coral tree — Erythrina ovalifolia.

**நரிமுருங்கை,** தவசுமுருங்கை, tranquebar gendarussa — Justicia tranquebarensis. see நறுமுருங்கை.

**நரியக்காளான்,** சிறுகாளான், small fungus growth.

**நரியண்டம்,** நரியின் மண்டையோடு, இது மாந்திரீகத்தில் பயன்படும், the skull of a fox. It is useful in Magic.

**நரியரிசி,**

**நரியன்,** குள்ளன், a dwarf.

**நரியாணங்கை,** see சிறியாணங்கை.

**நரியன்கடம்பு,** சிறுகடம்பு, a kind of cadamba —Justicia acaulis.

**நரியிலந்தை,** சிற்றிலந்தை, இது ஓர் முட்செடி, பூக்கள் சிறியன, மஞ்சள் நிறம், வேலிகளில் முளைக்கும், பட்டையும்வேரும் மருந்திற் குபயோகப்படும் காய் தின்னலாம், jackal bair, jackal jujube—Zizyphus albans alias Z. nummularia. It is a climbing thorny shrub flowers small, yellow, common hedge plant, bark and root used medicinally fruit eaten.

**நரியிலவு,** இலவமரம், silk cotton tree—Bambax malabaricum.

**நரியீஞ்சு,** சிற்றீஞ்சு, dwarf date — Phoenix farinifera.

**நரியீராகி,** சிறுபூனைக்காலி, whitish passion flower, fetid passion flower — Passiflora foetida.

**நரியுடை,** முசுமுசுக்கை, bristly bryony—Bryonia scabrella.

**நரியுணரி,** see நரியுண்ணரி.

**நரியுண்ணரி,** நண்டு, crab.

**நரியுப்பு,** கறியுப்பு, common salt.

**நரியுமரிக்கீரை,** உப்புக்கீரை, common Indian salt wort — Suaeda nudiflora.

**நரியுருகா,**

**நரியூளை,** நரிகத்தல், long doleful cry of fox —howl.

**நரிவரி,** நாய்நறுவிலி, scabrid leaved sebesten — Cordia monoica.

**நரிவழுக்கை,** பிரமிப்பூடு, brany, diabetes plant—Gratiola monnieria alias Herpestes monnieria.

**நரிவாதம்,** நரித்தலைவாதம், which see.

**நரிவாழை,** ஓர் வாழை, long flowered glory tree — Clerodendron syphonanthus.

**நரிவாமியம்,**

**நரிவாலலரி,** ஆற்றலரி, common tamarisk — Tamarix galliea.

**நரிவாற்புல்,** தரகம்புல், koen, jackal tail grass — Ductylis spicata.

**நரிவிட்டையிலை,** நரிவிட்டைப் பூண்டின் இலை, இதில் இரசம் கட்டும், an unknown plant said to possess the virtue of consolidating mercury.

**நரிவிரியன்,** ஓர் நறுவிலி, narrow leaved sebesten — Cordia rothii.

**நரிவிளா,** குற்றிவிளா அல்லது குட்டி விளா, a species of wood apple tree — Feronia elephantum; 2. நிலவிளா, which see.

**நரிவிளா,** குட்டி விளா, இதன் இலையைக் கஷாயமிட்டுக் கொள்ள சுரம், பித்தம், அதிதாகம், கணச்சுரம், இரணச்சுரம் இவைகள் தணப்படும்.

**நரிவிளி,** வீழிச்செடி, which see.

**நரிவிளிகா,** சிறுதும்பை, small leucas flower.

**நரிவிளிநாயகம்,** சுளுக்குநாயகம், which see.

**நரிவிழி,** உத்தாலமரம், which see.

**நரிவெங்காயம்,** see நரிவெண்காயம்.

**நரிவெண்காயம்,** காட்டு வெண்காயம், இதற்கு காட்டுள்ளி, காட்டீருள்ளி என்றும் பெயர், இது வெளிர்கபில அல்லது மஞ்சள் நிறமாயிருக்கும், சிறிய கிச்சிலிப் பழம் அளவுள்ளது, சிலசமயங்களில் மாதுளை பெரிதும் கிடைக்கும், ஒரே புடைப்புள்ளதாயுமிருக்கும், இதன் சூரணத்தினால் இருமல், மகோதரம், சுவாசம் இவைகள் போம். see காட்டு வெள்வெங்காயம், இதை இருமல், கோழை, விஷக்கடி இவைகளுக்கு மிளகுடன் சேர்த்துக் கொடுக்கலாம், இதில் சிறு நரி வெண்காயம் என்றும் ஓர் இனம் உண்டு, இதற்கு சாதாரண வெண்காயத்தைப் போல் உச்சியில் தாள்கள் உண்டு, ஆனால் மற்றொன்றுக்கு அபூர்வம், இதைத் தோண்டி எடுக்க தனித்தனியாய் அகப்

படும், ஆனால் மற்றொன்று கொத்தாக இருக்கும், இச்சிறு நரிவெண்காயம் வெளிர் கபில நிறம், வழவழப்புள்ளது, சாதிக்காய் பருமன் உள்ளது, பூண்டைப்போல் அவ்வளவு பல்லுகள் இல்லாவிடினும் 2-3 பல்லுகளுண்டு, இவை சருகுகளினால் மூடப்பட்டிருக்கும், மிகவும் கசப்பும் விருவிருப்பு முள்ளது.

சீமை நரி வெண்காயம் என்றும் ஓர் சாதியுண்டு, இதற்குச் சீமைப்பேயுள்ளி என்றும் பெயர், சீமைக் காட்டுள்ளி, இது வெகு நாட்பட்ட மார்ச்சளியினால் வருந்தும், வயது முதிர்ந்தவர்கள் உபயோகித்தால் மிக்க குணத்தைத் தரும், இது தென்ஐரோப்பிய கடற்கரை யோரங்களில் விளையும், இது உருண்டையாயும், வெங்காயத்தைப் போல் புரைபுரையாக தோலின் அடுக்குகள் உடையதாயு மிருக்கும், வாசனை யற்றது, கபத்தை அறுக்குந் தன்மையது, fox onion or squill — Scilla indica alias Urginia indica alias Ledebouria hyacinthoides alias Erythronium indicum. It is expectorant and diuretic and so used medicinally.

**நரிவெந்தயம்,** சிறு வெந்தயம், ferugreek — Trigonella foenum graecum.

**நரிவெருட்டி,** see நரிமருட்டி.

**நரிவெள்ளரி,** கக்கரி, fox cucumber.

**நரிவேங்கை,** ஓர் வேங்கை மரம், Punjab kino — Ougeinia dabbergioides.

**நருக்கரிசியன்னம்,** அரிசிக்கஞ்சி, rice conjee; 2. பாதிவெந்த சோறு, half cooked rice. இதனால் அலசரோகம் உண்டாகும், it creates loss of appetite.

**நருக்கரிசிச்சாதம்,** பாதி வெந்த சாதம், இதனால் அலசரோகம் உண்டாகும், see நருக்கரிசியன்னம்.

**நடுக்கல்,** ஓர்வித வயிற்றுவலி, a sort of stomach ache; 2. குத்தல்வலி, boring pain; 3. வேகாதசோறு, not well cooked rice — Half cooked rice.

**நருக்காணி,** பழுக்காதகாய், unripe fruit; 2. கறளைக்காய், immature fruit.

**நருக்கித்துவட்டியதுபோல்,** நருக்கிப் பிழிந்தது போல், a term indicating or signifying the extreme pain of the body as if it is crushed and tursted or squeezed.

**நருக்குண்டல்,** துண்டு துண்டாகச் செய்தல், to cut into pieces.

**நருக்குதல்,** துண்டாகச் செய்தல், நொருக்குதல், cut into pieces; 2. நசுக்குதல், crushing.

**நருக்குப்புடம்,** குறைந்தபுடம், calcination with small fire.

**நருக்குமூலம்,** see நறுக்குமூலம்.

**நருங்கல்,** வளர்ச்சிக்குறைவு, stunted growth.

**நருஞ்சோந்தி,** ஓர் வகைப் பூமரம், இது சணத்திலே கல்லுப்பைக்கட்டி வைரமாக்கும், an unknown plant capable of consolidating stone salt instantaneusly and making it as hard as a diamond.

**நருநருத்தகாய்ச்சல்,**

**நருநரெனல்,** பல்லை நெறுநெறுத்தல், gnashing teeth.

**நருமுதல்,** பல்லை நரநரவென்று கடித்தல், stricking or gnashing the teeth together with force.

**நரும்புதல்,** See நருமுதல்.

**நருவிஞ்சி,** புருடர்வேட்டி, men's cloth.

**நருவியுப்பு,** நாயுருவியுப்பு, salt obtained from the ashes got by burning the plant Indian burr.

**நருளிகை,** சத்திசாரம், இது சித்தி முறைப்படி தயாரித்தவுப்பு; இது ஓர் பெண்சரக்கு, a kind of salt prepared as per process laid down in Siddhar's science. It is an acid salt and is opposed to சிவசாரம், an alkaline salt also prepared.

**நருளிச்சாரம்,** See நருளிகை.

**நருள்,** See நகரை.

**நருள்குன்றி,** ஓர் வகை விரணநோய், a kind of ulcer.

**நரேந்திர போக்கியம்,** சந்தனமரம், sandal wood tree — Pterocarpus santalinus.

**நரை,** வெள்ளைமயிர், grey hair; 2. வெண்மை whiteness; 3. எருது, bull; 4. நரைத்தல், growing or getting grey; 5. சாம்பல் நிறம், ash colour; 6. நாரை, heron; 7. தெங்கு, cocoanut plam; 8. கருமை கலந்த வெண்மை mixture of white and black; 9. வெள்ளைக் குதிரை, white horse; 10. கவரிமான், yac.

**நரைகொம்பு,** எலும்பு, bone.

**நரைகொள்ளல்,** மயிர் நரைத்தல் அல்லது வெளுத்தல், getting grey.

**நரைக்கொள்ளு,** சீர்க்கோழிப்பூடு, grey gram — Dolichos genus.

**நரைங்கிப்போதல்,** See நரைதல்.

**நரைதல்,** மெலிவுறல், emaciated being reduced.

**நரைதிரை,** வயது முதிர்ச்சியால் மயிர்கள் நரைத்து உடம்பின் சதை தளர்ந்து சுருக்கங் கொள்ளல், hairsturning grey body becoming relaxed and the skin forming into wrinkles due to old or advanced age. 2. கிழத்தன்மை, old age.

**நரைதிரைபோக்கி,** சிவனூர் வேம்புத் தைலம், இது நரைதிரை போக்கக்கூடியதாதலின் இதற்கிப் பெயர், a medicated oil prepared as per Siddha process from Shiva's neem plant. It is capable of removing grey hair and wrinkles of the skin ; and hence considered a rejuvenating drug.

**நரைதிரை மாறப்பண்ணி,** கானல்மா, a wild tree — Bachnania latifolia; 2. காட்டுமா. wild or jungle mango—Spondias mangifera. It is said to be a rejuvenating drug.

**நரைதிரைமூப்பு,** கிழவயதின் அடையாளங்கள், symptoms of or attributes to old age viz greyness wrinkles and hoary age.

**நரைதிரையில்லான்,** கரிசலாங்கண்ணி, eclipse plant — Eclypta prostata; 2 காக்கை, crow.

**நரைத்தலை,** மயிர் வெளுத்தல், hoary head.

**நரைத்தல்,** மயிர் வெளுத்தல், hair turning into grey.

**நரைத்தல்,** மயிர்வெளுத்தல், hairs growing or turning grey.

**நரைத்துப்பழுத்தல்,** முதலில் மயிர்வெளுத்து பிறகு மஞ்சள் நிறமாக மாறல், hair first becoming grey or white and later after some time turning yellow.

**நரைநாசினி,** விழுதி, a medicinal plant — Cadaba indica.

**நரைப்பூதம்,** நாணற்றட்டை, reed stem.

**நரைமயிர்,** வெளுத்தமயிர், grey hair.

**நரைமாறிச்சி,** கருநெல்லி, black gooseberry.

**நரைமீறி,** கொடுக்காய்ப்புள்ளி, sweet tamarind—Pithecolobium dulce.

**நரைமை,** மூப்பு, advanced age; 2. வெண்மை, whiteness.

**நரையல்லி,** வெள்ளாம்பல், white Indian lily — Nymphae lotus.

**நரையன்,** பருந்து, kite; 2. நரைத்தவன் one with grey hairs; 3. பருவமின்றி நரைத்தவன், one prematurely grey; 4. சாம்பல் நிறமிருகம், grey coloured animal.

**நரையுரன்.** காகம், crow; 2. மீன் குத்தி நாரை, a heron preying on fish; 3. செங்காலுரை, a species of crane with red legs; 4. தேய்ந்த குழந்தை, emaciated child; 5. நாரை, stork; 6. நாகப்பாம்பு, cobra.

**நரையுகம்,** முள்ளந்தண்டெலும்புகளை ஒன்றோடொன்றாய் இணைக்கும் மூட்டு.

**நரையேடு,** இரத்த நீரின் மேற்புறம்படிந்த ஏடு, the pale buff coloured stratum on the surface of a blood clot which remains when coagulation is completed — Buffy coat.

**நர்க்குடகம்,** மூக்கு, nose.

**நர்த்தகம்,** ஆண் யானை, male elephant.

**நர்த்தகி,** பெண் யானை, female elephant.

**நர்த்தனப்பிரியம்,** மயில், இது ஆடுவதில் பிரியமுள்ளதாலிப் பெயர் அமைந்தது போலும், peacock so called because of its desire to dance.

**நர்மடம்,** சாதகப் புள், the common lark that signs as it flies — sky lark; 2. முலைக் கண், nipple pores.

**நர்மாணி,** முன்னை, Indian headahe tree — Premna integrifolia.

**நர்மாமடிப்பட்டை,**

**நலகண்ணணி,** see அழுகண்ணி, (Drosera Indica Lin) See நற்கள்ளி.

**நலகீலம்,** முழந்தாள், knee.

**நலங்கம்,** சாலாங்கபாஷாணம், a kind of native arsenic.

**நலங்கிடல்,** உடம்பினில் அரைத்த குழம்பு மருந்தைப் பூசுதல், anointing the body with liquid medicine.

நலங்கு, அரைத்த குழம்பு see நலங்குச் சாந்து; 2. அம்மைக்கு பூசுமருந்து, an unctuous substance used for smearing the body in small pox consisting by margosa leaves and turmeric external application for small pax; 3. நறுங்கூட்டு, a mixture of perfumes.

நலங்குச்சாந்து, குழம்பாக அரைத்த மேற் பூச்சு மருந்து, a semi solid preparation of triturated medicine intended for external application.

நலங்குமா, குளிக்கும்போது உடம்பில் தேய்த்துக்கொள்வதற்காக வாசனைத் திரவியங்களைக் கொண்டு தயாரித்தமா அல்லது பொடி, a perfumed powder used instead of soap while bathing or washing the face.

நலங்குலைத்தல், கெடுத்தல், defiling or polluting; 2. கற்பழித்தல், bringing to a surrender. of chastity seducing.

நலங்குலைவு, கற்பழிவு, the carnal knowledge of a woman forcibly and against her will — Seduction, rape.

நலச்சம், விலாமிச்சை வேர், khuskhus root — Andropogon muricatus.

நலச்சி, வெட்சாரம், salt nitrate of potash

நலச்சூடு, சூட்டின் கடுப்பு, irritation or inflammation.

நலச்செப்பி, செந்திராய், red Indian chick weed—Mollugo.

நலதம், வெள்ளை வெட்டிவேர், white cuscus root. see நலச்சம்

நலதம்பு, வேம்பு, neem or margosa tree — Azadirachta indica

நலதை, சடாமாஞ்சில், fragrant cyprus — Nardostachya jatamansi.

நலத்தம், see நலதை.

நலநாறி, சிவகரந்தை, ceylon toolsy — Sphaeranthus Zeylanicus.

நலநிலம், துருசு, blue vitriol — Subacetate of copper.

நலந்தட்டுதல், விதை வாங்கல் castrating.

நலப்பாணி, see நலநிலம்.

நலப்பிரதி, பொட்டிலுப்பு. nitre — Potassium nitrate.

நலப்பேதிமூலி, விடத்தாரி, ashy babool— Dichrostachy.

நலமழிதல், அழகு குன்றல், becoming lessened in beauty.

நலமாலை, அத்திப்பிசின், the gum of fig tree.

நலம், சுக்கு, dried ginger; 2. அழகு, beauty; 3. மிருகத்தின் விதை, testicles of beasts especially bull; 4. செந்நிறம், redness.

நலம்நசுக்குதல், see நலந்தட்டுதல்.

நலம்பலம், இலந்தை, common jujube, Indian plum—Zizypnus jujuba.

நலம்பிசிந்துகூடும்புணர்ச்சி, தொழுகண்ணி, telegraph plant — Hedysarum gyrans.

நலம்புரிதம், வருடம், one year.

நலம்பெருசித்தன், காந்தம், magnet; 2. காந்தக்கல், load stone.

நலனி, தாமரைக் கிழங்கு, lotus root.

நலி, நோய், disease, illness; 2. நலிதல், suffering from disease; 3. மெலிதல், pining away — emaciating; 4. நோவு, pain.

நலிகம், சுருள்பட்டை, a red bark used in colouring or scenting medicinal oils.

நலிதம், தாமரை, lotus; 2. வெண்ணுரை, white stork; 3. நீர், water.

நலிதல், மெலிதல், see நலி.

நலிநீருகம், தாமரைத்தண்டு, lotus stalk.

நலிந்தோர், நோயால் பீடிக்கப்பட்டோர், one suffering from a disease - patient.

நலிப்பளம், கொசுத்திராவகம், which see.

நலிவித்தல், மெலியச்செய்தல், making thin — reducing the obesity.

நலிவு, அழிவு, the state of being emaciated, suffering.

நலினம், தாமரை நீர், lotus water; 2. வெண்ணுரை, white crane, white ibis — Ibis macei.

நல்கதி, காட்டாமணக்கு, which see.

நல்குந்தம், சரகண்ட பாஷாணம், a kind of arsenic.

நல்சித்நன், இராசவர்த்தக்கல், one of the two inferior varieties of diamonds with yellow specks — Lapezluzulis.

நல்துளசி, நல்லதுளசி, Ocimum sanctum.

நல்தேசி, see நற்றேசி.

நல்நாரி, சிவகரந்தை, see நலநாறி.

நல்நெருஞ்சி, நல்லநெருஞ்சி, see நெருஞ்சில்.

நல்மதியோன், குரங்கு, monkey.

நல்மருது, மருதமரம், murdah tree — Terminalia alata.

நல்மலையாதி, தாமரைக்கிழங்கு, lotus root.

நல்மிளகு, கருமிளகு, black pepper — Piper nigrum.

நல்முருங்கை, முருங்கை, drumstick tree — Hyperinthera moringa.

நல்முகிசம், சுக்குநாறி மரம், which see.

நல்லகாரை, செங்காரை, common honey-thorn — Canthium parviflorum.

நல்லகோவை, same as கோவை which see

நல்லகெந்தன், மேகநோய் பதினெண் வகைகளிலொன்று, one of the eighteen mega diseases.

நல்லங்கச்சுழி, சாமுத்திரிகா லெட்சணத்தின் படி உடம்பில் பல அங்கங்களில் ஏற்பட்ட சுழிகள், இது அதிர்ஷ்டம், துர்அதிர்ஷ்டம் முதலியவைகளைக் குறிக்கும், according to science of the body curls or other symptoms on the skin of the several parts of the body some fore boding luck and some ill luck in one's life.

NOTE :— Cattles bear these curls also. Good ones bring luck to the owner of the cattle, bad ones cause ill luck to the owner.

நல்லங்கோலம், see அழிஞ்சில்.

நல்லசங்கு, சங்கஞ்செடி, which see.

நல்லசந்தனம், செஞ்சந்தனம், red sandal — Ptero carpus santalinus ( rubra ).

நல்லசாமம், நடுச்சாமம், midnight.

நல்லசாரம், அத்திப்பிசின், gum of fig tree.

நல்லசாவு, நோயற்றசாவு, death without suffering from any ailment, pain less natural death.

நல்லசீயக்காய், சீயக்காய், true soap pod — Acacia concinna.

நல்லசீரகம், கறிச்சீரகம், cummin seed — Cnminum cyminum.

நல்லதக்காளி, பெரியதக்காளி, Indian winter cherry — Physalisperuviana alias P. esculenta.

நல்லதண்ணீர், குடிக்குந்தண்ணீர், drinking water, fresh water as opposed to உப்புத் தண்ணீர், brackish water.

நல்லதண்ணுளுவை, ஆற்றுளுவை, river goby — koke — Gobius gluris.

நல்லதாமரை, பொற்றாமரை, red lotus, see தாமரை.

நல்லதாளி, See நறுந்தாளி.

நல்லதுத்தி, பெருந்துத்தி, cake mallow — Abutilon indicum.

நல்லதும்பை, வெண்தும்பை, leucas flower — Leucas aspera.

நல்லதுரவம், கடுகு, mustard.

நல்லதுளசி, துளசி, holy basil — Ocimum sanctum.

நல்லதுறட்டை, ஓர் கடல்மீன், a sea fish.

நல்லத்தி, ses அத்தி.

நல்லநீர், நல்லதண்ணீர், fresh uncontaminated water; 2. மழைத்தண்ணீர், rain water; 3. வாலையில் வடித்தநீர், distilled water; 4. சிறுநீர், urine.

நல்லநெருஞ்சில், சிறுநெருஞ்சில், small caltrope — Tribulus tprrestris.

நல்லபசி, உணவு வேண்டுமென்கிற தீவிர உணர்ச்சி, good appetite.

**நல்லபலசு,** நீரல்லி, black honey thorn—Canthium didynum.

**நல்லபாம்பு,** நாகப்பாம்பு, இது மற்ற பாம்புகளை விட மிகக்கொடிய விஷமுள்ளது, இதற்குப் படமுண்டு, இதன் உடம்பும் வாலும் சமநீளம், வயிறு தட்டை, தலை குட்டை, உயர்ந்து கழுத்தோடு, சமமாக வித்தியாசமின்றி சேர்ந்திருக்கும், நாசித் துவாரம் விசாலம், கண்ணில் வட்டக் கண்மணிமேற் சிதல்கள் மிருது, படத்தைச் சுற்றிச் சிதல்கள் நெருங்க விருக்கும், விஷப் பல் நடுவில் பள்ளமாயிருக்கும் ஒன்று அல்லது இரண்டு சாதாரணப் பற்கள், அதற்குப் பின்புறம் முளைத்திருக்கும், கழுத்தை விரித்தால் சிதல்கள் அகன்றும், நிறமாறியும் காணப்படும், இது சாதாரணமாய் 3—4 அடிக்குமேலிராது, கனதி சுமார் 1¼ அங்குலம், இது படம் எடுக்காமல் எதிர்க்காது, தொந்திரவு ஏற்பட்டாலொழிய ஒருவரையும் எதிர்க்காது, அதனிடத்தில் சேட்டை செய்தால் சீறும், முட்டையிடக் கூடியது, முட்டைகள் 18—25 வரையிடும், தண்ணீரில் நீந்தும், மரங்களின் மேலும் ஏறும், இதை குடிசையின் கூரை சுவற்றின் பொந்து, கோழியிருக்குமிடம், பழங்கட்டடம், மரங்களின் அடி, செங்கள் காளவாய், கல், செங்கல்மண் கட்டடத்திலும் காணலாம், பாம்பாட்டிகள் இதை குழலூதி ஆட்டுவதுண்டு, அவர்கள் இதன் விஷப்பல்லைக் குட்டியாயிருக்கும்போதே பிடுங்கிவிட்டு உபயோகத்திற்கு வைத்துக்கொள்வார்கள், இதற்கும் கீரிக்கும்பகை, கீரிபாம்பைக் கொன்றுவிடும் பாம்பின் விஷம் மரணத்தை உண்டுபண்ணும், ஏனெனில் இதன் விஷம் உடம்பின் நரம்பு பாகங்களிற் பரவி அவற்றின் செயலறச் செய்வது மல்லாமல், நாளங்களின் இரத்தமும் விஷத்தன்மை யடைந்து உடம்பிற் பரவும், இதன் விஷத்தைத் தமிழ் வைத்தியத்தாலும் மாந்திரிகத்தாலும் குணப்படுத்துவார்கள், ஆனால் ஆங்கிலேய வைத்தியத்தில் இது அசாத்தியமெனக் கருதப்படும்; இதில் அடியிற் கண்டபடி பலவகையுண்டு, cobra — Cobra decapello. It is considered as the most venomous of all kinds of snakes. It has a hood, body and tail of moderate length. belly flat. head rather high and stout, not very distinct from neck, nosarils wide. eye of moderate size with round pupil, scales smooth, in numerous series round the hood. There are two fangs above — one on each side. The fang is grooved with a foramen at its extremity; one or two small ordinary teeth at a short distance behind it. The neck is marked and distinctly seen when the cervical disk is expanded, the scales then are distinct from one another and symmetrically arranged in rows. It seldom exceeds 3 or 4 ft. in length and is about an inch and quarter thick. Cobras never attack without distending the hood. They are not aggressive unless interfered with or irritated, but the moment they are disturbed they assume the menacing attitude. Cobra is oviparous the eggs which are hatched are from 18—25 in number, it can swim in water, and even climb trees in search of food. Cobras are not unfrequently found in the roofs of huts, holes in walls, fowl houses, old ruins, under logs of wood, old brick kilns, masonry of stone, brick work or mud. they are the favourites of the snake charmers. Who make then dance before a pipe which is played in front of them. They are rendered harmless by extraction of their fangs when young, their chief enemy is mungoose which can easily kill them. Snake poisoning is fatal for the reason that it paralyses the nerve centres and death occurs with great rapidity, especially when the poison enters the vein and is mingled in the circulation. Snake poison can be cured according to Tamil Medical and Mantric sciences, but this is considered impossible by the English.

The following are the several varieties recognised by the Tamilians.

1. கருநாகம், black cobra.
2. கரும்பட நாகம், black hooded cobra.
3. *பார்ப்பார நாகம், brahmin cobra.*
4. செட்டி நாகம், merchant cobra so called from its habit of looking about *on all sides when lifting up its* head.
5. நண்டுதின்னிநாகம், crab cobra because of its living on crabs.
6. பூ நாகம், flower cobra, the smallest kind found amongest flowers eg. pandanas being extremely venomous.
7. தாழை நாகம், found among leaves.
8. மலைநாகம், hill cobra.
9. செந்நாகம், red cobra.
10. இருதலை நாகம், two headed cobra.

11. முத்தலை நாகம், three headed cobra.
12. ஐந்தலைநாகம், five headed cobra.
13. தாழைநாகம், screw pine cobra which frequients caldera bush.
14. கோதுமை நாகம், wheat coloured cobra with a short thin body.
15. பாறைநாகம், same as No. 1.

NOTE :— Cobras feed on small animals birds, eggs, frogs, fish and insects, they rob hen roosts and swallow the eggs whole. None of the reputed antidotes will cure the bite of the cobra if the snake is full grown and if its poison fang is full. The most probable remedy in English Medicine in all cases of snake bite is the injection of ammonia.

**நல்லபாம்புச்சட்டை**, நாகப்பாம்பின் மேற்றோல், the outer skin of the cobra which it casts off.

**நல்லபாலை**, கொடிப்பாலை, green wax flower — Dragia volubitis.

**நல்லபிரண்டை**, சதுரப்பிரண்டை, square stalked wild grape — Vitex quadrangularis.

**நல்லபுத்தி**, சற்புத்தி, good sense.

**நல்லபூசனி**,! சர்க்கரைப்பூசனி, red pumpkin — Cucurbita pepo.

**நல்லபூலாத்தி**, ஓர்வகைப் பூலாத்தி, long sepalled feather boil — Phyllanthus longiflorus.

**நல்லமஞ்சள்**, கஸ்தூரி மஞ்சள், musk turmeric, round zedoary—Curcuma aromatica.

**நல்லமணி**, பட்டாணி, peas – pulse — Pisum sativum.

**நல்லமந்தனம்**, நல்லுவகை, elliptic obtuse leaved honey thorn — Canthium umbellatum.

**நல்லமாதுளை**, இனிப்புமாதுளை, sweet pomegranate.

**நல்லமிளகு**, கருப்பு கெட்டி மிளகு, black solid papper. Piper nigrum, it is opposed to வெள்ளைமிளகு, white pepper — special preparation of black peper.

**நல்லமுத்து**, கெட்டிமுத்து, solid superior pearl.

**நல்லமுருங்கை**, முருங்கை, sweet drum stick tree.

**நல்லமெழுகு**, தேன்மெழுகு, pure yellow wax.

**நல்லமோர்**, பசுமோர், cow's butter milk.

**நல்லம்**, கறுப்பு, blackness; 2. கரி, charcoal; 3. இஞ்சி, ginger.

**நல்லம்மான்பச்சரிசி**, ஓர்வகை அம்மான் பச்சரிசி, a kind of raw rice plant — Euphorbia indica.

**நல்லரிசி**, பச்சரிசி, raw rice; 2. see நல்லம்மான் பச்சரிசி; 3. கருப்புப்புட்டரிசி, black singapore rice.

**நல்லவர்ணக்காரி**, சவுரிக்காய், palmated gourd — Trichosanthes palmata.

**நல்லவாகை**, வெள்வாகை, sirissa — Albizza procera.

**நல்லவாந்தம்**, வெண்காரவுள்ளி, pungent white onion.

**நல்லவுப்பு**, சவுட்டுப்பு, impure carbonate of soda.

**நல்லவெயில்**, கொடியவெயில், powerful heat occasioned by the sun.

**நல்லவெல்லம்**, கருப்பட்டி, jaggery — Saccharam officinarum, see வெல்லம்.

**நல்லவேதைக்கனி**, நாய்வேளை, dog mustard — Cleome viscosa alias C. dodecandia.

**நல்லவேல்**, பச்சைவேல், green babool — Parkinsomia aculeata; 2. சீமைவேல்.

**நல்லவேளை**, நைவேளை, five leaved celome — Cleome pentaphylla alias Gynandropis pentaphylla; 2. நல்லகாலம், good time, see வேளை.

**நல்லா**, காராம்பசு, a sacred cow with black and nipples.

**நல்லாசனம்**, ஓர்யோக வித்தை, a posture in yoga.

**நல்லாட்டிக்கட்டி**, கருப்புக்காசுக்கட்டி, black catachu — Catchu nigrum.

**நல்லாதிமண்**, சவுட்டுமண், fuller's earth; 2. பிண்டமாவு, the white matter deposited on the foetus or on the body of new born child, an unctuous substance which covers the skin of the foetus — Vernix caseosa.

**நல்லாரை**, ஆரைக்கீரை, edible auray greens — Marsilea qudrifolia.

**நல்லாள்**, பெண், girl, woman; 2. கற்புள்ள பெண், chaste woman.

**நல்லி**, ஆட்டுக்கால் எலும்பு, the leg bone of sheep; 2. முதுகெலும்பு, back bone.

**நல்லிசம்**, கொள்ளுக்காய் வேளை, கொழுஞ்சி, zanzibar indigo — Tephrosia purpurea.

**நல்லிடதம்**, உலோகத் திராவகம், mineral acid.

**நல்லிடாமாசி**, பத்மினி சாதிப்பெண், one of the four classes of women diveded according to lust.

**நல்லிடையாள்**, உடும்பு, guana—Saccrta equana.

**நல்லிரத்தக்குறைவு**, உடம்பில் சுத்தரத்தக் குறைவு, deficiency of arterial blood in the body.

**நல்லிருக்கை**, நல்லிருப்பு, சுகமாயிருந்தல், healthy state.

**நல்லிருப்பு**, நல்லிருக்கை.

**நல்லீரல்**, ஆட்டு ஈரல் முதலியன, the liver of sheep etc.

**நல்லீரல்**, கல்லீரல், the liver; 2. மண்ணீரல், spleen.

**நல்லுப்பு**, கல்லுப்பு, stone salt, sea salt; 2. வழலையின் பெயர் see நல்லூரசரம்.

**நல்லுவகை**, see நல்லமந்தனம்.

**நல்லுவை**, see நல்லுவகை.

**நல்லூரசரம்**, வழலையின் பெயர், efflorescence salt on the soil of fuller's earth.

**நல்லெண்ணெய்**, எள்ளெண்ணெய், இது கண்ணைக் குளிர்ச்செய்யும், கண்ணோய் களைத் தீர்க்கும், கண்ணுக்குக் கட்டிக் கொள்ள சூட்டை அறுக்கும், தலை, காது, பாதம் இவ்வுறுப்புகளுக்குத் தேய்த்துக் குளிப்பதால் குளிர்ச்சியைத் தரும்; இதை முழுகிவருவதால் மலபந்தம், சுக்கிலமேகம் முதலிய மூத்திர நோய்கள் போம், gingelly oil — Sesamum oil In sierra cone this is called Bennie oil. It is cooling to the eyes. It is used for oil bath. It decreases the heat in the body removes constipation. It is recommended in cases of cut, punctured, lacerated, blistered and all other kinds of wounds. ulcers. burns, scalds, as well as bites of wild beasts and birds, ungents and lubricants are prepared with this oil. It is edible and most commandable of all oils.

**நல்லெருமை**, தொட்டிபாஷாணம், red arsenic.

**நல்லேகவம்**, சரக்கொன்றை, cassia fistula.

**நல்லேலம்**, சிற்றேலம், small cardomom — Ellcteria cardamomum.

**நல்லேறு**, ஆண் எருமை, male buffalo.

**நல்லோகம்**, திரா, a kind of metal.

**நல்வங்கம்**, மிருதாரசிங்கி, litharge, impure oxide of lead.

**நல்வசம்பு**, புறணி நீக்கிய வசம்பு, sweetflag purified.

**நல்வசனை**, see நற்பசனை.

**நல்வாசி**, வால்மிளகு, a fragrant drug chewed with betel, tail pepper — Piper cubeba.

**நல்விளாஞ்சு**, see நல்வெள்ளாஞ்சு.

**நல்வெள்ளாஞ்சு**, காட்டுப்பச்சிலை, bastard rose wood — Dalbergia lanceolaria.

**நல்லவெள்ளைச்சாறு**.

**நல்வேளை**, see நல்லவேளை.

**நவகசக்தி**, நற்சீரகம், common cumin seed.

**நவகசாரம்**, சாரணைக்கொடி, one styled trisnthema — Trianthema monogyna.

**நவகஷாயக்குக்குலு**, விசர்ப்பம், கொப்புளம் இவைகளுக்குக் கொடுக்கும் ஆயுள் வேத மருந்து, an Ayurvedic medicine given for skin diseases such as itch, boil etc.

நவகதிரை,

நவகம், ஒன்பது, nine.

நவக்கிரகம், தாளகம், orpiment.

நவக்கிரக சம்பந்தமான பதார்த்தங்களும் அதன் குறிகளும்:

1. சனி — நீறுபூத்தல், சாம்பல் நிறம், கருமை, காறல், முள், வெகுட்டல். துர்க்கந்தம் இவைகளை யுடையதும் கடின பூமியில் உண்டாகிற பதார்த் தங்களுமாம், பிலியத்தி ரோகத்தை தீர்க்கும்.

The plants that belong to Saturn have the following characters— surface of the fruits or leaves are coated with white powder, ash or black coloured acrid in taste, nausiating, prickly or thorny, foul smelling, grow in hard soil.

They cure diseases of the spleen and bone Black lead is related to Saturn.

2. குரு — கசிவு, நன்மணம், நற்சுவை, சிவந்த அல்லது ஆகாய நிறமான பூ, கொழுமையான நல்ல பூமியில் உண் டாகும் பதார்த்தம்; இவை ஈரலைப் பற்றிய நோய்களை நீக்கும், இரசத் தைச்சுத்திரி செய்யும், காயம், புண் இவைகளை மாற்றும்.

The plants that belong to Jupiter are marked by the following characters—oozing of fluid, good odour, and taste, red or sky coloured flowers grow only on rich, fertile soils.

They cure wounds and purify mercury. Tin is related to this planet.

3. செவ்வாய் — கடினம், செந்நிறம், முள் வேகச் செய்த இவைகளை உடைய தாயும் வரண்ட பூமியில் உண்டாகும் பதார்த்தங்கள் பித்த ரோகத்தை நிவர்த்திக்கும்.

The plants that are related to Mars possess the following qualities — hard, red coloured, thorny or prickly grow on dry soil.

They are capable of curing diseases caused by bile humour. Iron is related to this planet.

4. சூரியன் — அதிக வாசனை, அதிக சுவை, சிவந்த பூ, சிவந்த இலை இவை களை உடையதாயும் மைதானங் களில் விளைவனவும் மறைவில்லாத வெளிகளில் உண்டாகும் பதார்த்தங் கள், இவை ஜீவசக்தியை வளர்க்கும் நேத்திர வியாதியை மாற்றும்.

The plants that belong to the Sun have the following characters — fragrant, very tasteful, red flowered, red leaved and generally grow in open fields.

They give life energy and are capable of curing eye diseases Gold belong to this planet.

5. சுக்கிரன் — இனிப்பு, நன்மணம், மிருது வானபூ, இலை, இவைகளை உடையதா யும் நல்ல பூமியில் விளையும் பதார்த் தம், சீரணசக்தியை விர்த்தி செய்யும்) பௌசகள் ரோகம், கர்ப்பாசயம், ஆண் குறி, பெண்குறி, குளிர்ச்சி, கொழுமை இவைகளைப் பற்றிய ரோகங்களை நிவர்த்தி செய்யும், சுக்கி லம், நிணம், தசை இவைகளைப் போஷிப்பிக்கும்.

The plants of Venous group have the following features — sweet and of agreeable smell, soft flowers and leaves grow on good ordinary soil.

They are capable of increasing the digestive power and increase the semen, fat and muscle by feeding them and cures the diseases of venereal origin, of the uterus ( womb ), of male and female genitals and of Phlegm humour. Copper is related to this planet.

6. சந்திரன் — தடித்த இலை, வெண்மை, சுவையற்றது, மிருது, வழவழப்பு, சாறுள்ள தன்மை, இவைகளை உடை யதாயும் ஈரபூமியிலும், சலத்திலும் உண்டாக்கும் பதார்த்தம், இவை பிடரி, கண், கை முதலிய அவைய வங்களின் பிணியைப் போக்கும்.

The plants that belong to Moon have the following features— thick leaved, white in colour, tasteless, soft, viscid and slimy, juicy and grow in water or in damp soils.

They are capable of curing the diseases of nape of the neck, eyes and arms. Silver represents this planet.

7. புதன் — இலேசத்தும், அறுத்துவம், கலந்த சுவை, கலந்த நிறம், கருமை கலந்த மஞ்சள், புகைநிறம் இவை களை யுடையதாயும் மணல் பூமியில் விளையும் பதார்த்தம், நாக்கு, கன், மூக்கு ரோகங்களை ஒழிக்கும், நரம்

புக்கு வலிவைக் கொடுக்கும், ஆகிய சப்தபதார்த்தங்களின் குணம்.

The plants related to Mercury posses, the following characters — light, atomics several tastes and colours, bluish yellow or smoke coloured and grow in sandy soils.

They are capable of strengthening the nerves and cure the diseases of tongue eye and nose. See 'கிரகம்'.

NOTE:—1. The seven planetary regions viz. Moon, Mars, Mercury, Jupiter, Venus, Saturn and the Sun.

1. The region of the Moon. It is a dead world with no air. water or vegetation. Frost between lunar midday and mid night. The lunar surface is composed of lava and ash which are the products of volcanic activity.
2. Mars—region is very cold, no air, no vegetation. and no life. Atmosphere is filed with fog and cloud.
3. Mercury— smallest plant and nearest to the sun. very hot.
4. Jupiter— no life is possible, atmosphere consists of only solid or liquid particles of water but no free air like earth.
5. Venus — though as big as earth, the atmosphere if different. It looks all over surrounded by clouds but no air. The height of the atmosphere will be about 6 ft. where as the earths atmosphere is more than a mile in thickness.
6. Saturn — the same as Jupiter.
7. Sun —It is the centre of the Solar system. It is the source of energy

NOTE:—2. The region of Uranus is the most distant of all the planets and the Neptune which is a planet beyond the orbit of Uranus and is remotest from the sun. These regions are very cold and no life is possible. Pluto, the region of volcanic fire is colder than Neptune and no life Therefore it is clear that earth alone is inhabited and other planets are dead worlds. Siddhars who visited all the planets must have known more about those planetary regions. Moreover, the spirituality of man is represented by the Sun, while materialisation by the Saturn which is contrary to Sun being the concret planet. The Sun is the giver of life ruler of the System and the controller of blood and brain. He has a sway on the moral side of man and it is he that confers magnetic personality and a disposition which is all courageous, firm, high spirited, generous, courteous and austre.

நவகிரகக்கிஷம், ஒன்பது கிரகங்களைப் பற்றிய ஓர் மாந்திரீக நூல், ( in Magic science ) a book on the nine planets.

நவக்கிரகத்தும்பை, தன்னுடைய உருவை அடிக்கடி மாற்றக்கூடிய தும்பை, a kind of leucas plant capable of changing its form frequently.

நவக்கிரகதோஷம், குழந்தைகளுக்கு நவக்கிரக கோளாறினு லேற்படும் ஒன்பதுவித நோய்கள், the nine kinds of diseases of infant's life which are attributed to the influences of the nine malignant stars or demons; 2. ஒன்பது கிரகம் அதாவது சூரியன், சந்திரன், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி, இராகு, கேது, the nine planets viz , Sun, Moon, Mars, Mercury, Jupiter, Venus, Satum, Rahu ( the Moon's ascending node ) and Kethu ( the moon's descending node ). The rule over the destinies of man, nation and the world itself.

நவகெந்தி, கெந்திக்கல், brim stone.

நவகோசாதிபதி, ஆக்கினை, one of the six mystic centres in the cerebral region.

நவசக்தி, ஒன்பதுவித சத்திகள், the personified female energies or faculties :

1. பிராமணி, eneray of Brahma.
2. கார்த்திகை, eneray of Subramania.
3. இந்திராணி, eneray of Indira.
4. மகேஸ்வரி, eneray of Shiva, the great Lord.
5. நரசிம்மி, eneray of Vishnu in man lion farm.
6. பிரதானி, eneray of the first originent.
7. ரௌத்திரி, eneray of Rudra.
8. வராகி, eneray of Vishnu in the form of boar.
9. வைஷ்ணவி, eneray of Vishu.

**நவசாரகம்,** see நவச்சாரம்.

**நவசாரணை,** 9 தரம் சாரணை தீர்த்தல், animated nine times.

**நவசாரத்தான்,** பொன் மணல், gold ore.

**நவச்சாரமெழுகு,** மெழுகான நவச்சாரம், salamnoniac turned into wax or prepared to form like wax.

**நவசாரம்,** ஒன்பது நீரின் சாரம், a mixture of nine kinds of salt essences; 2. see நவ சாரம்.

**நவசாரி,** see நவச்சாரம்.

**நவசி,** பாக்குமரம், areca nut tree; 2. தென்னை மரம், cocoanut tree.

**நவசித்தசாரம்,** see நவச்சாரம்.

**நவசித்தர்,** காயசித்தியடைந்த ஒன்பது சித்தர்கள், the nine famous 'Siddhars' exempted form infirmities of old age see நவ நாத சித்தர்.

**நவசிந்தாமணிலேகியம்,** தாம்பூர செந்தூரத்துடன் அனுபானமாகக்கொள்ளும் அகஸ்தியர் 300-ல் சொல்லியுள்ள ஓர் வகை லேகியம், a kind of electuary taken as a vehicle along with calcined red oxide of copper as contemplated in Agathiyas work 300.

**நவசுரேபாங்குசரசம்,** சபித்தைப் போக்கி வியர்வையை யுண்டாக்கும் ஓர் ஆயுள்வேத மருந்து, an Ayurvedic medicine which causes more sweating and curas fever.

**நவசூதிகை,** இளம்பிள்ளைக்காரி, a woman who has recently given birth to an infant.

**நவச்சங்கு,** முட்சங்கு, a kind of conch with thorn like elevations on its surface.

**நவச்சாரச் சுண்ணம்,** ஆங்கிலேய முறைப்படி தயாரித்த ஓர்வகை நவச்சாரவுப்பு. இது ஆவியாய்ப் போகக் கூடியதும், காரமுடையதுமாகும், பதங்க முறையில் தயாரிக்கப்பட்டது, இது நெஞ்செரிச்சல், வயிற்று வலியைத் தணிக்கும், குருக்களை யெழுப்பும் சுரம், அம்மைத் தடிப்பு சுரம், அக்கினி விசர்ப்பி, தடிப்புத்தினவு, சொறி, குட்டம் முதலிய சருமநோய் ஆகிய விந்நோய்களில் மிக்க குணத்தைத்தரும், அன்றியும் நெஞ்சுக் கபக்கட்டு, சூதகப் பைத்தியம், பாரிசவாயு, அசுவரோகம் அறைவிட்டு சுரம், காசம், நீரிழிவு முதலிய நோய்களுக்கும் உபயோகப்படும், மேலும் மிக்க சலதோஷம் வாதபிடிப்பு இவைகளுக்கு உபயோகப்படுத்தும், வெந்நீர் குளியலில் இதைச் சேர்க்கலாம், இதன் ஆவியை மூச்சுத்திணறலுக்கும், மூர்ச்சைக்கும் பிரயோகிக்கலாம், carbonate of ammonia ( $2NH_4 - OZCO_2$ ). It is a volatile and pungent ammoniacat salt derived by process of sublimation. It often affords speedy relief in cardialgia and gastrodynia. In scarlatina, rubeola. erysipalas, urticaria and some skin diseases especially lepra and psoriasis, it is a remedy of great value. In chronic and subacute pulmonary affections it proves serviceable as a stimulant expectorant. It is used with much advantage in cases of *hysteria, epilepsy, puerperal insanity,* paralysis, glanders, phlegmasia dolens and asthma. it is also prescribed as a remedy in diabetes and it forms a very useful addition to a warm bath in cases of violent cold and rheumatism. The vapour is often effectual in syncope and asphyxia.

**நவச்சாரத்தண்ணீர்,** நவசாரங் கரைத்த தண்ணீர், water of Ammonia — Aqua ammoniac.

**நவச்சாரப்பதங்கம்,** ஓர் வகை நவச்சாரப் புளிப்பு, Salamnonac turned into a sublimate.

**நவச்சாரம்,** see நவாச்சாரம்.

**நவச்சாரவாயு,** பிராணிகள் அழுகுவதினாலும், நீலச்சாலையிலும், தோல் பதப்படுத்து மிடத்திலும் உண்டாகிற வாயு, a product of the putrifaction of animal matter or the gas evolved in indigo factories and tanneries — Ammonia gas.

**நவச்சி,** எவட்சாரம், nitre — Nitrate of Potash.

**நயச்சென்னை,** செந்தினை, red millet.

**நவஞ்சம்,** ஓமம், bishop's weed — Omum — Sison ammi; 2. அசமதாகம், ajmood ajwaun — Pimpa - nella in volucrata.

**நவச்சாரஆக்கிராணம்,** மூக்கினால் முகரும் காரவுப்பு, smelling salt of volatile.

**நவதளம்,** தாமரைத்தளிர், tender leaves of lotus.

**நவதாரணை,** ஒன்பதுதாரணை, see தாரணை.

**நவதாளகம்,** சர்க்கரைப்புளி, sweet tamarind.

**நவதானியம்,** நவக்கிரக சாந்திக்காக ஓமம், மந்திரம் இவைகளில் உபயோகிக்கும் ஒன்பது வகைத் தானியங்கள், அடியிற்கண்டபடி ஒவ்வொரு தானியமும் ஒவ்வொரு கிரகத்தைக் குறிக்கும், nine grains proper presented with burnt offerings and oblations to nine planets, one to each planet as mentioned below;

1. கோதுமை, சூரியனுக்கு, wheat offered to sun.
2. நெல், சந்திரனுக்கு, paddy offered to Moon.
3. துவரை, செவ்வாய்க்கு, dholl offered to Mars.
4. பாசிப்பயறு, புதனுக்கு, green gram offered to Mercury.
5. கடலை, வியாழனுக்கு, bengal gram offered to Jupiter.
6. அவரை (கருமொச்சை) சுக்கிரனுக்கு' black bean offered to Vvenus.
7. எள், சனிக்கு, gingelly seed offered to Saturu.
8. உளுந்து, இராகுவுக்கு, black gram offered to Raghu.
9. கொள்ளு, கேதுவுக்கு, horse gram offered to Kethu.

**நவதி,** பொடுதலை, creeping vervain — Lippia nodiflora alias Verbina nodiflora.

**நவத்தம்,** சடாமாஞ்சில், Indian spikenard — Cyprus stoloniferus.

**நவத்தாழை,** நத்தைக்கூடு, snail shell.

**நவத்துவாரம்,** உடம்பிலுள்ள ஒன்பது துவாரங்கள், அவையாவன, 2 நாசி, 2 கண், 2 காது, 1 வாய், 1 குதம்; 1. மூத்திரத்துவாரம், இவை ஆண்களுக்குள்ளன, பெண்களுக்கோ இவற்றின் மேல் 3 துவாரம், அவை, 1 யோனி, முலைக்கண்கள் இரண்டு, the nine gates or natural passages or apertures in the body of a male viz. the two nostrils, two ears, two eyes, one mouth, one anus, ( one meatus urinarius ) uretheral orifice where as the female has three more openings — the two nipples ( lactiferous ducts ) and the orifice of the vagina — via nrturales.

**நவநாகம்,** அசமதாகம், see நவஞ்சம்.

**நவநாதசித்தத் தைலம்,** கையாந்தகரை, ஆடாதோடை, நொச்சி, ஊமத்தை, சதுரக்கள்ளி, கண்டங்கத்திரி, ஆமணக்கு, தழுதாழை, எருக்கு ஆக ஒன்பது சரக்குகளைக் கொண்டு சமஎடை கொண்டு மற்றும் சில கடைச் சரக்குகளையும், சேர்த்து நல்லெண்ணெய், விளக்கெண்ணெய், வேப்பெண்ணெயும் கூட்டிக் காய்ச்சிய தைலம், இதை தலை முழுகவும், வாத வலிக்குத் தேய்க்கவும் உதவும். A bathing and smearing oil for vadha diseases prepared with the juices of nine herbs, and three oils as mentioned above along with some bazaar drugs.

**நவநாதசித்தர்,** மூலவர்க்க சித்தர்களுக்கு முன்பாக இருந்த நவநாத சித்தர்கள், இவர்களுக்குத் தலைவர் சிவன் என்று சொல்லப்படும், the nine original lord Siddhar's prior to the school of Moolavarge Siddhars consisting eighteen Siddhars. They are சத்திய நாதர், Satya nathar, சதோகநாதர், Sathoga nathar, ஆதிநாதர் Adinathar, அநாதி நாதர் Anadhinathar, வகுளிதநாதர், Vagulithanathar, மதங்கநாதர், Mathanganathar, மச்சேந்திர நாதர், Machendiranathar, கடேந்திர நாதர், Cadenthira nathar and கோரக்க நாதர், Korrakarnathar, God Shiva is said to be their head or chief.

**நவநாதரசம்,** எலும்பைப்பற்றிய சுரங்களுக்குக் கொடுக்கப்படும் ஓர் ஆயுள் வேத மருந்து, an Ayurvedic medicine given for fevers affecting the bones.

**நவநீதகம்,** நெய், ghee, melted butter. 2. ஓர் வித கந்தகம், sulphur of a particular kind

**நவநீதசெயநீர்,** தலைப்பிண்ட செயநீர், a strong pungent liquid extracted from the first born foetus.

**நவநீதநதி,** மூளை சலம், cerebral fluid, oily substance from the brain — Cerebrol.

**நவநீதநீர்,** சுத்த சலம், nutritional fluid, see நவநீதநீர்.

**நவநீதபாகு,** மூளையின் பாகைப் போன்ற நீர், a syrup like liquid derived from the brain.

**நவநீதபாணி,** தலைச்சுருளி.

**நவநீதப்பூடு,** மூளையின் மாங்கிஷம், brain tissue — Cerebrin.

**நவநீத மருவிப் பாய்தல்,** வெண்ணெயைப் போலாதல், becoming an oily mass like butter — Emulsion.

**நவநீதம்,** புதுவெண்ணெய், fresh butter; 2. பசுவின் வெண்ணெய், butter collected from cow's milk; 3. புத்துருக்கு நெய், freshly melted ghee; 4. அசமதாகம், see *கவஞ்சகம்*; 5. *நாகசிங்கி,* which see; 6. தண்ணீரின் அடியில் நிற்கும் வண்டல், fine sediment at the bottom of water.

**நவநீதம் பண்ணல்,** வெண்ணெயைப் போல் செய்தல், making as fine as butter, making an emulsion.

**நவநீதரசம்,** இரசத்தோடு சாரம், வீரம், சிப்பி நீர், சேங்கொட்டை இட்டு உருக்க இரச வெண்ணெய், a glutinous mercury; 2. *சுத்தரசத்தினின்று தயாரிக்கும் 10 வகை ரசச சத்துக்களிலொன்று,* இதனால் உப ரசம் பொன்னாகும், one of the 10 kinds of mercury preparations as contemplated in Siddha medicine. It is capable of transmating inferior metals into gold and rejuvenating the human body.

**நவநீதி,** வெண்ணெய், butter.

**நவநீதிச்சாரம்,** see *நவாச்சாரம்.*

**நவபந்தனம்,** உடம்பிலுள்ள ஒன்பது வாயில் களையும் அடக்குதல், (in Yoga Philosophy) suppressing the action of the nine appertures in the body

**நவபல்லவம்,** தளிர், tender leaf; 2. இலை யாமணக்கு, a kind of castor plant.

**நவபாஷாணம்,** சாதாரணமாகக் கடையில் விற்கப்படும் ஒன்பது வகைப் பாஷாணங் கள், அவையாவன: the nine kinds of poisons generally sold in bazaars viz:—

1. வீரம், corrosive sublimate, per chloride of mercury — Hydrargiri perchloridum.
2. பூரம், subchloride of mercury — Mercurous chloride.
3. இலிங்கம், red sulphuret of mercury- *vermilion-cinnabar red mercuric* sulphide.
4. மனோசிலை, realgar, red orpiment — Arsenicum rubrum.
5. தாளகம், yellow orpiment — Arsenicum flavum.
6. கௌரி, golden coloured arsenic.
7. வெள்ளை, white arsenic, arsenious acid.
8. எலிப்பாஷாணம், rat's bane.
9. *கார்முகில்.*

மற்றொரு வகை: another variety:

1. வெள்ளை; 2. சங்கு; 3 செப்பு தொட்டி; 4. கௌரி; 5. தீமுருகல்; 6. இரத்தபாஷாணம்; 7. கார்முகில்; 8. குதிரைப்பல், 9, வீரம்.

**நவபாண்டம்,** புதுப்பானை, new pot.

**நவப்பிரத்தி,** see *நவப்பிரீதி.*

**நவப்பிரீதி,** பொட்டிலுப்பு, nitre — Nitrate of potash.

**நவபேதி,** see *நவலோகபேதி.*

**நவப்பிரமவுயிர்,** சுத்தசலம், amniotic fluid — Liquoramni.

**நவமணி,** *ஒன்பதுவகை இரத்தினம்,* the nine kinds of gems.

1. பவளம், coral.
2. வயிரம், diamond.
3. மரகதம் அல்லது பச்சை, emerald.
4. கோமேதகம், cinnamon stone.
5. வைடூரியம், cat's eye, lapis lazuli.
6. முத்து, pearl.
7. கெம்பு, அல்லது மாணிக்கம், ruby.
8. புட்பராகம், topaz.
9. நீலம், sapphire.

நவமணிகள் நவகிரகங்களுக்கு ஒப்பிடப் பட்டுள்ளன; மாணிக்கம் சூரியனுக்கும், முத்து சந்திரனுக்கும், வைடூரியம் கேதுவுக் கும், வைரம் வெள்ளி அல்லது சுக்கிரனுக் கும், மரகதம் (நற்பச்சை) புதனுக்கும் கோமேதகம் ராகுவுக்கும், பவளம் செவ் வாய்க்கும், நீலம் சனிக்கும், புட்பராகம் குரு (வியாழன்) வுக்குமாம். நவகிரகங்களைப் பூஜிப்பதுப் போல இந்த குற்றமில்லாத நவ மணிகளையும் அதற்கு உரிய இடத்தில் வைத்து முறைபடி பூஜித்துவந்தால் நன்மை யுண்டாகும். (See திருவிளையாடல் புராணம் மாணிக்கம் விற்ற படலம் 51-ம் செய்யுள்).

நடுவில் மாணிக்கத்தை வைத்து கிழக்கு திசையில் முத்தும், தென்கிழக்கு திசையில் வைடூரியமும், தெற்கில் வைரமும் (கமல மும்), தென்மேற்கில் மரகதமும், மேற்கில் கோமேதகத்தையும், வடமேற்கில் பவழமும், வடக்கில் நீலமும், வடகிழக்கில் புட்பராக மும் வைத்து வணங்க வேண்டும். See திருவிளையாடல் புராணம், மாணிக்கம் விற்ற

படலம் 35 ம் செய்யுள் ) மணிகளில் குற்ற மிருந்தால் அவற்றை வைத்திருப்பவர் களுக்கு குற்றத்திற்கு ஏற்ப இன்னல்கள் தோன்றும்.

கோயில்களில் ராகு, சனி, கேது, இம் மூன்று கிரகங்களும் முறையே தென்மேற்கு, மேற்கு, வடமேற்கு திக்குகளிலுள்ளன. இம் மூன்றும் ஓரவரிசையில் மேற்கில் இருக்கின் றன. நவமணி அமைப்பில் இந்த கிரகங் களுக்கு ஒப்பிடப்பட்ட மணிகள் அங்ஙனம் அமையவில்லை. வடக்கிருந்து தெற்கு நோக் கினும் மேற்கிருந்து கிழக்கு நோக்கினும் ஒவ் வொரு வரிசையில் ஒவ்வொன்றுதான் இருக் கின்றது. ஆனால் அதததற்கு எதிரிலுள்ள கிரகங்கள் ஒன்றேயாகும். அதாவது ராகு வுக்கு ( கோமேதகத்திற்கு ) எதிரில் சந்திர னும் ( முத்தும் ), சனிக்கு ( நீலத்திற்கு ) எதிரில் சுக்கிரனும் ( வைரமும் ), கேதுவுக்கு ( வைடூரியத்திற்கு ) எதிரில் புதனு ( மரக தமு ) மாம். இந்த வேற்றுமை ஒற்றுமை களைக் கவனிக்கவும்.

The nine gems are compared to the nine planets. Ruby to Sun, Pearl to Moon, Cat's eye ( lapis lazuli ) to Kethu, Diamond to Venus, Emerald to Mercury, Cinnamon stone to Raghu, Coral to Mars, Sapphire to Saturn and Topaz to Jupiter. Ruby the sun is placed in the centre, Pearl the Moon in the east, cats eye the Kethu in South east, diamond the Venus in the South, emerald the Mercury in South west, Cinnamon stone the Raghu in the west, Coral the Mars in the north west, sapphire the Saturn in the north and topaz the Jupiter in the north east and daily worshipped as per rules, will be beneficial. Each gem must be flawless. ( See Thiruvilayadal puranam — Manikkam vitra padalam stanza 51. )

In the temples the nine planets are arranged in a different way. Raghu, Saturn and Kethu are on the western side but the same planets are placed in the correspond- ing opposite side i. e. Mercury is placed against Raghu, Venus against Saturn and Moon against Kethu.

When selecting gems either for worship or adornment one must carefully examine them and chose one that has no flaw of any kind. According to the nature of the flaw, evil will happen.

**நவமணிச்சிந்தூரம்**, வீரம், பூரம், இலிங்கம், கந்தகம், படிகாரம், வெண்காரம், நவாச்சா ரம், வெடியுப்பு, அயம் ஆகிய இவ்வொன் பது சரக்குகளைப் புடமிட்ட சிந்தூரம், red oxide obtained by calcining the following nine drugs — Corrosive sublimate, sub- chloride of mercury, vermilion, sulphur, alum, borax, salammoniac, *nitre* and *iron*.

**நவமல்லி**, சித்தினிசாதிப் பெண், one of the four classes of women divided according to lust.

**நவமாதம்**, ஒன்பதாமாதம், ninth month; **2.** ஒன்பது மாதம், nine month.

**நவமாலி**, மனோசிலை, red orpiment.

**நவமாலிகம்**, இரட்டை மல்லிகை, Jasminum sambac ( double flowered ).

**நவமூர்த்திமெழுகு**, நவாச்சாரம், வீரம், பூரம், கௌரி, தாரம், இலிங்கம், வெள்ளை, வெடி யுப்பு, கறியுப்பு ஆகிய இவ்வொன்பதையும் ஒவ்வொன்றாக நாதத்தினால் 9 நாள் மெழு கைப்போல் அரைத்துத் திரட்டி வைத்துக் கொள்ளும் ஓர்வகை மருந்து, a wax like preparation or medicine obtained by grind- ing for nine days the following nine drugs first separately and then all together with Natham a prepared fluid — salammoniac, corrosive sublimate, subchloride of mercury golden *arsenic, yellow orpiment vermilion*, white arsenic, nitre, common salt. They must be grinded till they obtain the wax *like consistency*.

**நவமூலம்**, மூளை மூலம், இரத்த மூலம், சீழ் மூலம், உள்மூலம் முதலிய ஒன்பதுவகை மூலநோய்கள், the nine varieties of piles.

**நவம்**, ஒன்பது, nine; **2.** பாம்பு, snake; **3.** *சாரணை*, one styled trianthema — Trian- thema monogyna; **4.** மாரிகாலம், rainy season; *5.* புதுமை, novelty.

**நவரக்கனி**, see நௌரக்களி.

**நவரசமெழுகு**, இராசபிளவை போம், a waxy medicine that cures diabetic carbuncle.

**நவரசம்**, ஒன்பது வகைரசம், the nine kinds of juices or essences; **2.** வாலைமுப்பு, quintessence of salt.

**நவரத்தினசத்து**, நவரத்தினங்களின் சத்து, essence extracted from nine gems.

**நவரத்தினம்**, see நவமணி.

**நவரத்தின வைப்பு,** ஒன்பது வகை இரத்தினங்களைச் செய்யும் வைப்பு முறையைப் பற்றிச் சொல்லும், சட்டைமுனி செய்த ஓர் வைத்தியநூல், a treatise on medicine compiled by Siddha named Sattaimuni dealing with the artificial process of making the nine gems synthetically together with their qualities and uses in medicine.

**நவரம்பழம்,** see *நவரவாழை.*

**நவரை,** (கடல் மீன்) 1. கல் நவரை; 2. பேய் நவரை; 3. செங்நவரை; 4. பரு நவரை; என நான்கு வகை நவரை, a sea fish of four varieties.

**நவரை,** 90 நாளில் பயிராகும் நெல், paddy maturing in 90 days: 2. கருத்த நவரை அல்லது கருங்குருவை, black paddy possessing medicinal virtues; useful to prepare kadi; 3 see *நவரை வாழை.*

**நவரை வாழை,** மகரவாழை, a species of plantain.

**நவரோதயம்,** சீனிக் கற்கண்டு, white sugar candy.

**நவலோகக் களங்கு,** நவலோகங்களையும் இரசத்தையும் சேர்த்துச்செய்யும்உருண்டை, alloy prepared with nine metals along with mercury

**நவலோகக் களிம்பு போக்கி,** தேவதாளி அல்லது பேய்ப்பீர்க்கு, snake luffa — Luffa echinata.

**நவலோகச் சத்து,** ஒன்பது லோக வகைகளைச் சேர்த்துப் புடமிட்டு எடுத்த சத்து, the essence derived by subjecting the nine metals to violent heat or calcination — calx of nine metals.

**நவலோகத்தகடு,** ஒன்பது லோகங்களையும் ஒன்று சேர்த்து உருக்கித் திரட்டித் தட்டிய தகடு, the foil or plate of an alloy of nine metals.

**நவலோகத் தங்கம்,**

**நவலோகத் துரட்டி,** see நவலோகாங்கம்.

**நவலோக பூபதி மாத்திரை,** ஒன்பதுலோகங்களையும் சேர்த்துத் தயாரித்து சுரம், சன்னி முதலிய நோய்களுக்குக் கொடுக்கும் பூபதி என்னும் கூட்டு மருந்துக் குளிகை, a reputed pill prepared as per process of Tamil medicine from a mixture of nine metals.

**நவலோகபேதி,** கெந்தி பாஷாணம், a poisonous compound of sulphur in its native state, a mineral poison; 2. ஒன்பது லோகங்களையும் பேதிக்கச் செய்யும் மருந்து, (in Alchemy) any substance capable of acting *chemically on nine metals.*

**நவலோக மரணன்,** see *சோரபாஷாணம்.*

**நவலோகமாரணி,** see **தாம்பூரச்சிகை.**

**நவலோகமேமாக்கி,** இலவண பாஷாணம், a kind of prepared arsenic; 2. குங்கும பாஷாணம், one of the 32 kinds of prepared arsenic

**நவலோகம்,** ஒன்பது வகை உலோகங்கள்; அவையாவன: பொன், வெள்ளி, செம்பு இரும்பு, ஈயம், வங்கம், நாகம், குருத்துவும், குடவன் or பித்தளை, gold, silver, copper; iron, tin, lead, zinc, platinum and brass.

NOTE: சில நூல்கள் வேறுவகையாக கூறுகின்றன அவை: தங்கம், வெள்ளி செம்பு, அயம், வெள்வங்கம், காரீயம், நாகம், வெண்கலம், குடவன் என்பன. some books treat some other nine metals as Navalogam, they are: gold, silver, copper, iron, tin, lead, zinc, bell metal and brass.

**நவலோக வக்கினி குமாரன்,** உடம்பினிலுள்ள நோய்களை நெருப்பைப் போல் தகிக்கக் கூடிய ஒன்பது லோகங்களைக் கொண்டு தயாரிக்கப்பட்டவோர் மருந்து, a reputed or well known remedy for curing or reducing to nothing like fire, all ailments in the system radically, prepared with the aid of nine metals.

**நவலோகவங்குசம்,** காந்தம், load stone, magnet.

**நவலோகவேதிச்சி,** கருநெல்லி, black Indian gooseberry — Phyllanthus emblica (nigrum)

**நவலோகாங்கம்,** காந்தம், load stone, magnet.

**நவவடிபிறந்தோன்,** விந்து, நாதம், fecundating fluid of either male or female; seminal secretion of a male or ovarian secretion of a female.

**நவவாயில்,** நவத்து வாரம், the nine gates or openings in the human system.

**நவளுகம்,** see நவளுகம்.

**நவற்குப்பு,** வெடியுப்பு, nitre.

**நவஞகம்,** ஓமம், bishop's weed — Carum ajwaun; sison — Sison ammi.

**நவாசாரகம்,** see நவாச்சாரம்.

**நவாச்சாரக்காரம்,** நவாச்சாரநீர், strong solution of ammonia — Liquor ammoniac; 2. நவாச்சாரவுப்பு, carbonate of ammonia — Ammoniac carbonas; 3 நவாச்சார செயநீர், a liquid with a very pungent odour and strong alkaline reaction obtained by exposing salammoniac with other ingredients in the night's dew.

**நவாச்சாரக்கட்டு,** நெருப்புக்கு ஓடாதபடி கட்டிய நவாச்சாரம், consolidated salt ammoniac which resists fire.

**நவாச்சாரக்கிராணம்,** நவாச்சாரத்தோடுகூட இரண்டு பங்கு சீமைச்சுண்ணும்பும் நன்ருகக் காயவைத்துக் கலந்து பதங்கமாக வெரித்த ஓர் வகை ஓடுஞ்சரக்கு, இது உள்ளுக்கு கொடுக்க உதவாது, ஆனுல் வலிப்பு இழுப்பு, மூர்ச்சை, சூதக சன்னி ஆகிய இந்நோய்களில் மூக்கில் முகருவதற்காக உபயோகப்படுத்தப்படும்,smelling salt volatile salt of ammoniac. It is generally prepared by vaidyans by mixing sal ammoniac with a double quantity of a chalk, then drying them carefully and sublimating with strong heat. The sublimate is a volatile salt and is used as a local stimulant to nose in fainting, fits, langours and hysteria.

**நவாச்சாரம்,** வாசனையற்ற, பளபளப்பான, நாரிழை போன்ற ஓர் வெண்மையான வஸ்து, இது சாதாரணமாய் இந்தியாவில் எல்லாக் கடைகளிலும் விற்கப்படும், இது செங்கற் சூளையில் வேகாத பக்கங்களினின்று சேகரிக்கப்படும், ஒட்டகம் முதலிய மிருகங்களின் எருவைப் போட்டு எரிக்கப்படும், சூளைகளில் மிகுதியாகக் கிடைக்கும், ஆனுல் இவ்விதமாகச் சேகரிக்கப்பட்டதை, சுத்தமானதென்று கருதப்படாது, ஏனெனில் மருந்துக்காக வுபயோகிக்க வேண்டிய இதைக் கொதிக்கும் தண்ணீரிலிட்டுக் கரைத்து இரட்டைத் துணியால் வடிகட்டிப் பிறகு காற்றில் ஆறவைத்துக் கட்டிகளாக எடுப்பார்கள், இக்கட்டிகள் கனதியாகவும், கசப்பும் விருவிருப்போடும் கூடியதாகவுமிருக்கும், இது மிக்க கடினமானதால் பொடி செய்வதற்கு கஷ்டமாயிருக்கும், இது தண்ணீரிலும், சாராயத்திலும் கரையக் கூடியது, சிறிய அளவில் உடம்பின் கோளாறுகளைப் போக்கக் கூடியதும், பெருமளவில் கோளங்களுக்கு சுறு சுறுப்பைத் தரக் கூடியதுமான குணம் வாய்ந்தது, இது வைத்தியத்தில் மிக உபயோகமாகும், நுரையீரல், கல்லீரல், மண்ணீரல் இவைகளின் கோளாறுகளுக்கும், ஈரல் கருப்பை நோய்களின் சம்பந்தமான பாண்டுரோகம், முக வாதத்திஞலேற்படும் இரத்தப் பெருக்கு இவைகளுக்கும் நரம்புகோளாறினுலேற்படும் தலைவலி, சூதகசிக்கல், கக்குவான் முறை அல்லது தொந்த சுரங்களுக்கும், உள்ளுக்குக் கொடுக்க குணமாகும், மேலும் இதைத் தண்ணீரில் கரைத்து சாராயத்துடன் கலந்து கழலைக்கட்டி, கோளவீக்கம், முலைக் கட்டிகள், முலைக்காம்பு ரோகம், ஒதம், வழுவுண்ட காயம், சுளுக்கு, சில சருமநோய்கள் முதலியவைகளுக்குப் பூசவுதவும், கன்ஞர் உலோக பாத்திரங்களுக்கு ஈயம் பூசுவதற்கும் இந்த நவாச்சாரத்தை உபயோகிப்பார்கள், இதை நெருப்பிற் கோடாதபடி கட்டிஞல் வாத வேலைக்குபயோகப்படும்; ஆனுல் கட்டுவது அசாத்தியமான காரியம், கசப்பும், புளிப்பும், வெதுட்டலுமுள்ளதாயுமிருக்கும்; மருந்துக்கு இதை சுத்தி செய்து உபயோகிப்பார்கள், இது உஷ்ணத்தைக் கொடுக்கும், கபத்தை அறுக்கும், வியர்வையை உண்டாக்கும், மூத்திரத்தை வடிக்கும், உடம்பில் புண்களைத் தாக்கும், வாத நோய், இடுப்புவலி, முகவாதம் இவைகளுக்கு விடாமல் கொடுத்து வரலாம், நன்ஞரி வேர்க் கஷாயத்தில் கொடுக்க முடக்கு வாதம், கீல்வாயு, சூலைச்கட்டுபோம், கற்பூர செயநீருடன் கலந்து கொடுக்க கருப்பையின்வலி, கருப்பவாயு இவைகள் போம், சூரணித்துத் தேனில் கொடுக்க மஞ்சட் காமாலை, பக்கசூலை, சீதபேதி இவைகள் குணமாகும், முருங்கைவேர்க் கஷாயம் அல்லது முள்ளிக் கஷாயத்தில் சூரணித்துக் கொடுக்க ஈரல்நோய், மகோதரம் போம், இதஞல் வயிற்றுவலி, குடல் குத்தல், பெருவயிறு அசுமரி போம், a colourless, inodorous and translucent fibrous mass known as salammoniac — Ammonii chloridum — Murias ammonia. It is generally procurable in almost all the bazaars in India. It is obtained from the unburnt extremity of brick kilns in which the manure of animals especially that of camel is used as fuel. It is always more or less impure. When it is intended for medicinal purpose, it requires to be dissolved in boiling water, strained through a double thick cloth and the solution evaporated to crystallisation. It is a thick heavy substance, it so hard that it cannot be easily powdered and is of a

bitter acrid taste. It is soluble in water and rectified spirit. It is an alterative in small and continued doses, but in large doses, it is a stimulant its action being chiefly directed on glandular structures. It forms a useful drug in medicine. In chronic affections of the lungs, the liver and the spleen, in dropsy connected with hepatic and ovarian diseases, in passive haemorrhage especially hemoptysis, in neuralgic and rheumatic affections of the face, in certain forms of nervous head aches, in amenorrhoea, hooping cough and in inter millent and continued fevers, it has been employed internally with advantage. Locally or externally, it is applied in solution to indolent tumours enlarged glands, incipient mammary abscesses, hydrocele, bruises, sprains and certain chronic skin diseases. Metal workers or solderers use it for cleaning surfaces of metals and tinmen for facilitating union between tin, iron or copper. When heated it volatilizes easily, but when consolidated it becomes useful in Alchemy but it is an impossible task ordinarily. If given in sarsaparilla decoction it cures rheumatism, in the decoction of the root of drumstick tree it cures ascites and diseases of liver and in honey it cures jaundice, dysentery and piueracy.

NOTE :— It is a compound formed by acids in union with alkalies and metallic oxides. It is not the sal ammoniac of ancients which is considered as impure common salt or perhaps rock salt. It has a nauscous taste and is generally covered by the addition of Indian liquorice.

**நவாச்சார வாயு,** நவாச் சாரத்தினின்று கிளம்பும் விஷக்காற்று, இது தனித்தும் கலந்தும் தாவரங்களிலும், தாது வகைகளிலும் பரவி இருக்கும், இது சிறிய வளவில் வாயு மண்டலத்திலும் பரவியுள்ளது, மனிதரின் மூத்திரத்திலும் காணலாம், அழுகி நாற்றமுள்ள சீவராசிகளிலும் பொருந்தியுள்ளது, இவ்வாயு நிறமற்றதாயும், ஒளிபாயுந் தன்மையதாயுமுள்ளது, எறிப்பு நாற்றமும், விருவிருப்பான ருசியுமுள்ளது, gas ammonia ($NH_3$). It is a poisonous gas found in Sal ammoniac. It is found widely diffused either in a free or combined state extensively in the organic and in organic kingdoms of nature. It exists in minute quantities in atmospheric air and is one of the constituents of urine in man; it is also a product of putrefaction in animal matters. It is a colourless transparent gas with a powerful pungent odour and acrid alkaline taste.

**நவாச்சாரவாயு செயநீர்,** இதனால் தாம்பூர பற்பம், செந்தூரத்திலுள்ள தோஷங்கள் போம், solution of Ammonia. It is capable of removing the defects in calcined oxides of copper either red or white.

**நவாத்து,** மணற் சர்க்கரை, aska sugar.

**நவான்னபானம்,** புது அரிசியைச் சமைத்த சோறு. புது மதுபானம். cooked new rice, and new wines. (old rice and old wines are always beneficial)

**நாவான்னம்,** வெஞ்சோறு, சுடுசோறு, hot cooked rice.

**நவித்தல்,** அவித்தல், baking.

**நவிரம்,** உச்சி, crown of head; 2. தலை, head; 3. மயில், peacock; 4. மலை, mountain.

**நவிரெழுசங்கு,** முட்சங்கு, four spined monetia — Monetia tetra cantha alias Azima tetra cantha

**நவிர்,** ஆண் மயிர், male hair, 2. முள் முருக்கு, Indian coral tree — Erythrina suberosa.

**நவீன,** புதிய, modern; 2. தற்காலத்திய pertaining to the present time; 3. அதிசயமான, novel.

**நவீன நூலாராய்ச்சி,** புதிய நூற்பரிசோதனை, modern scientific research.

**நவு,** கொத்துமல்லி, coriander.

**நவுகா,** see நவுகு.

**நவுகு,** கருமுருகி, அதாவது கையாந்தகரை, eclipre plant — Eclypta prostrata.

**நவூரியம்,** சிவப்பு சிற்றகத்தி, red variety of sesban — Sesbania acgyptiaca.

**நவோத்திருதம்**, வெண்ணெய், butter.

**நவ்வங்கம்**, வெள்வங்கம், white lead, tin.

**நவ்வல்**, தித்திப்பு நாவல், sweet jaumoon—Eugenia jambolina.

**நவ்வல்பிசின்**, நாவல் மரத்துப் பிசின், gum of jaumoon tree.

**நவ்வி**, மான், deer; 2 அழகு, beauty; 3. இளமை, tender age; 4. பெண்மான் female deer.

**நவ்வு**, ஆடு, sheep.

**நவ்வூகிதம்**, வரிக்கற்றாழை, striped aloe —Aloe genus.

**நழுகிய பீலிகம்**, தன் இடத்தைவிட்டு நழுவிய இடப்பாட்டால், displaced spleen.

**நழுக்குதல்**, சிறிது சிறிதாக மலம் போதல், frequency of stools little by little.

**நழுவமிழ்து**, கூழ், pudding.

**நழுவல்**, இடம் விட்டுப் பெயரல், displacement.

**நழுவுசாதம்**, see நழுவமிழ்து; கூழ்.

**நழுவுதல்**, see நழுவல்; 2. கைநழுவவிடல் slipping out of the hand, 3. சப்பை நழுவுதல், dislocation of blade as of thigh or shoulder.

**நழுவை வாதம்**, சாப்பிட்டணவு தங்காமல் வெளிவந்து வயிற்றினுள்ளே பிண்டத்தைப் போற் பிரண்டுகாட்டி மேலாக குலையிலேறி உளைந்து காணுமோர் நோய், an abdominal enlargement of moving swelling between the regions of the heart and abdomen due to indigestion or dyspepsia.

**நளகம்**, காலின் உட்புறத்திலுள்ள எலும்பு காலின் பேரெலும்பு, the large bone of the lower leg situated on the medial side — Tibia; 2. முன்கால் எலும்பு, the skin bone; 3. குழாவைப் போன்ற உறுப்பு, a tubular organ of the body; 4. நீண்ட எலும்பு, any long bone of the body.

**நளகி**, தாமரை, lotus flower --- Nelumbium speciosum.

**நளகுகா**, சீனிக்கொத்தவரை, a kind of cluster beans — Cyamopsis psorulioides.

**நளசிசுமஞ்சரி**, துளசி, holy basil — Ocimum sanctum.

**நளத்தம்**, சடாமாஞ்சில், Indian spikenard — Cyperus stoloniferus.

**நளபன்**, சணல், hemp — Crotolaria juncea.

**நளபாகம்**, நன்ருய்ச் சமைத்தது, dish well cooked.

**நளப்பன்**, வெட்பாலை, dyer's oleander, blue dying rose bay — Wrightia tinctoria alias W. tomentosa.

**நளமீன்**, ஓர்வகை மீன், a kind of fish.

**நளம்**, தாமரை, lotus, see நளகி; 2. ஓர் பூடு, கிரந்தியம் — Phragmites harka alias Arundo Karka.

**நளல்**, நண்டு, crab.

**நளன்**, ஓர்வகைக் குரங்கு, a kind of monkey;

**நளி**, குளிர்ச்சி, chillness; 2. தேள், scorpion 3. வெண்சாரணை, a species of trianthema — Trianthema monogyna; 4. செறிவு, closeness as leaves.

**நளிகை**, ஓர்வகைக்குழல், a kind of syringe; 2. மூங்கிற்குழாய், bamboo pipe.

**நளிர்**, குளிர், cold; 2. நண்டு, lobster.

**நளிர்காய்ச்சல்**, குளிர்காய்ச்சல், shivering fever; ague.

**நளிர்குளிர்**, நடுங்கும் குளிர், shivering cold.

**நளிர்சுரம்**, குளிர்காய்ச்சல், see நளிர் காய்ச்சல்.

**நளிர்தல்**, குளிர்தல், feeling chill; 2. நடுங்குதல், shivering.

**நளிர்மண்**, செம்மண், red ochre.

**நளிவிடம்**, தேள்விஷம், poison from scorpion sting.

**நளினகங்கை**, சித்தினி சாதிப்பெண், one of the four classes of women divided accurding to lust.

**நளினநாபி**, தாமரையைப் போன்ற கொப்பூழ், lotus shaped navel — Lotus navel.

**நளினமாகுதல்**, குளிர் நடுக்கம் காணுதல், getting shiver with cold, trembling with cold.

**நளினமாதா**, சடாமாஞ்சில், a medicinal grass known as Indian spikenard — Cyperus stoloniferus.

**நளினம்**, நாபியின் கீழ், குடலிருக்கும் வலது பாகத்தில் தொங்கிக் கொண்டிருக்கும் 5 அங்குலமுள்ள பை, a wormlike diverticulum or pouch of the cecum about 5 inches in length just below the navel region; 2. தாமரை, lotus of 1000 petals; 3. நீர், water; 4. பாசி, moss.

**நளினவிருட்சம்**, முண்டினி விருட்சம், an unknown tree.

**நளினவேதி**, செம்மரம், red wood.

**நளினி**, பாற்சோற்றி, Indian gutta percha — Dichopsis elliptica; 2. ஓர் வாசனைப் பண்டம், a fragrant substance; 3. தேங்காய்ப் பாலினின்று தயாரிக்கும் ஓர் வகைப் போதை வஸ்து, a fermented and intoxicating substance prepared from the milk extracted from the cocoanut kernal; 4. தாமரை, lotus; 5. பத்மினி சாதிப்பெண், first of the four classes of women divided according to lust.

**நளினீசம்**, தாமரைமணி, lotus bead.

**நளினிருகம்**, தாமரைத்தண்டு, lotus stalk.

**நளு**, அட்டை, centripede.

**நளுங்கு**, அளுங்கு, a large lizard, Manis brachyara; 2. ஓர் கிளிஞ்சல், bivalve.

**நளை**, ஏலத்தோல், the husk of cardamon.

**நள்**, உச்சிப்பொழுது, noon; 2. நள்ளிருள், midnight.

**நள்ளி**, நண்டு, crab, lobster.

**நள்ளிருவாறி**, இருவாட்சி, a variety of jasmin — Jasminum sampuc.

**நள்ளிருள்**, நடு இராத்திரி, midnight.

**நறதியா**, வட்டதுத்தி, Rox burghs lotus croton — Macaranga Rox burghii; 2. பூசினி, pumpkin.

**நறநறவெனல்**, நறநறவென்ற சப்தமுண்டாகப் பல்லைக் கடித்தல், ( imitative ) sounding as by gnashing and grinding the teeth.

**நறப்பிரியம்**, பற்பாடகம், fever plant — Mollugo cerviana.

**நறம்பருப்பு**, இஞ்சி, green ginger.

**நறவம்**, அனிச்சை, snake jasmine — Rhinacanthus communis; 2. குங்குமமரம், scarlet croton — Mallotus philippinensis; 3. ஞாழல், which see; 4. தேன், honey; 5. வாசனை, fragrance, perfume; 6. ஓர்கொடி, a creeper; 7. கள், toddy; 8. ஓர் சிறிய மரம், caesalpinia.

**நறவிகா**, see நறவம்.

**நறவு**, see நறவம்.

**நறவுசாரம்**, குங்குமம், saffron powder of a fine crimson colour worn by a woman on the fore head; 2. குங்குமப்பூமரம், a fragrant tree — Crocus sativus; 3. வாசனை, odour; 4. தேன், honey; 5. சாப்பிரா, monkey turmeric — Bixa orellana; 6. see நறவம்.

**நறளை**, காட்டு பிரண்டை, நறளைப் பூடு, இதன் காய் மேற்பக்கம் தட்டையாயும், அடி நான்கு பிரிவினையுடையதாயு மிருக்கும் இதனுள் விதை நான்கு, பூக்கள் பச்சை சிறியன, மழை காலத்தில் பூக்கும், இது அடியிற்கண்டபடி பலவகைப்படும், iguanas foot vine — Vitis pedata alias Cissus pedatus, medicinal plant used for purifying copper. It takes off the vardigris of copper especially the root. Fruit flattened at the top usually four to bed and four seeded. Flowers green and small, flowering in the rainy season. It consists of different kinds as mentioned below.

1. புளிநறளை, sore creeper — for grape — Vitis carnosa alias V. muricata, arid roots used in medicine.
2. பெருநறளை, heart leaved vine — Vitis lanata alias Vitis cordifolia.
3. பெறும் புளிநறளை, large acid naralay — Vitis muricata alias Cissus muricata.
4. சிறு புளிநறளை, small acid naralay — Vitis gmelina alias V. linnae.
5. சிறுநறளை, large wooly — lobed vine — Vitis tomentosa.

**நறு**, கள், toody; 2. வாசனை, fragrance; 3. தேன், honey.

**நறுவி**, பத்மினிசாதிப்பெண், see நளினி.

**நறிவிரை**, see நரிவிளா.

**நறிவெங்காயம்**, see நரிவெண்காயம்.

**நறு**, அகல், coromandel ailanto — Ailanto excelsa.

**நறுக்கரிசி**, பாதிவெந்தசோறு, half cooked rice.

**நறுக்குக் கொடிச்சி,** தொழுகண்ணி, telegraph plant — Hedysarum gyrans.

**நறுக்குத்திப்பிலி,** கண்டத்திப்பிலி, root of long pepper அல்லது தேசாவரம்.

**நறுக்குவெட்டி,** வெட்டி நெட்டி, the stalathe — Aeschynomene aspera.

**நறுக்குமூலம்,** திப்பிலிவேர், see திப்பிலி மூலம்; 2. வெட்டிவேர், khus khus root; 3. நன்னாரிவேர், sarsaparilla

**நறுங்கரந்தை,** நாறுகரந்தை, sweet basil — *Ocimum basilicum;* 2. *சிவகரந்தை, shivas* basil — Ceylon tools of Sphaeranthus zeylanicus.

**நறுங்கற்றாழை,** see கற்றாழை, aloe.

**நறுங்குறிஞ்சி,** நல்ல குறிஞ்சி, cone head — Strobilanthes genus; 2. சிறுகுறிஞ்சி, medium dense acriminate leaved cone head — Strobilanthes cuspidatus, china mindie — Lawsonia spinosa.

**நறுஞ்சுதை,** நல்ல பசும்பால், pure cow's milk.

**நறுஞ்சோதி,** ஒரு வாசனைப்பூ, a fragrant flower.

**நறுதாளி,** see நறுந்தாளி.

**நறுநகை,** see நறுந்தாளி.

**நறுநன்றி,** see நறுநிண்டி.

**நறுநாற்றம்,** சுகந்தம், fine smell.

**நறுநிண்டி,** நன்னாரி, India sar■aparilla — Hemiduscus indicus ( typica ).

**நறுநெய்,** பசுநெய், cow's ghee.

**நறுந்தக்காளி,** தக்காளி, Indian winter cherry — Physalis peruviana; 2. உபரசத்தின் தோஷத்தைப் போக்கு மோர்வகைத் தக்காளி, a kind of winter cherry capable of removing the impurities and purifying the *natural substances contemplated in the* Tamil Siddha Medicine.

**நறுந்தாது,** வாசனைச்சரக்கு, perfumes.

**நறுந்தாளி,** ஓர் வகை வாசனைத்தாளி, இதன் இலையைக் கீரையாக உபயோகிக்க உள்ளுறுப்பின் எல்லாவித அழலை, விரணம் முதலியவைகளைப் போக்குவதுடன் தேக உஷ்ணம், பிரமேகம் போம், சுக்கிலவிருத்தியாகும், தொண்டை, மார்பு ரணம் போம், இதுவே நல்லதாளி, a kind of fragrant tauli deer's foot — Convoluvlus arvensis alias C. gemellus; 2 நஞ்சுக்கொடி, the navel cord of a new born child.

**நறுந்திகா,** சுக்கு நாறிப்புல், ginger grass — Panicum repens.

**நறுந்தேன்,** கொம்புத்தேன், honey collected on branches of trees.

**நறுந்தைலம்,** வாசனைத் தைலம், an odoriferous oil, balsam.

**நறுமரம்,** பெருமரம், பீநாறிமரம், foetid smelling tree.

**நறுமருப்பு** see நறும்பருப்பு.

**நறுமகாசீரம்,** நற்சீரகம், cumin seed — Cuminum cyminum.

**நறுமணம்,** நல்லவாசனை, fragrance, good smell.

**நறுமணத்தக்காளி,** மணித்தக்காளி, Indian hounds berry Solanum nigrum; 2. சிவப்பு மணித்தக்காளி, red Indian hounds berry — Solanum rubrum.

**நறுமலர்,** வாசனைப் பூ, fragrant flower.

**நறுமாதுளம்,** தித்திப்பு மாதுளை, sweet pomegranate — Punicum granatum.

**நறுமுதல்,** பல்லைக் கடித்தல், grinding the teeth in children this *is a symptom of* worms in the intestines, 2. *பல்லாற் கடித்தல்* biting.

**நறுமுதிரம்,** வனமிரட்டி.

**நறுமுருக்கை,** see நறுமுருங்கை.

**நறுமுருங்கை,** முருங்கை, drum stick — Hyperanthera moringa.

**நறுமுலிகா.** சுரபுன்னை, soora poon fragrant poon — Ochro carpus longifolia.

**நறுமுறுக்கை,** see நறுமுருங்கை.

**நறுமுன்னை** — முன்னை அல்லது பசுமுன்னை, Indian head ache tree. It is so called from the plant having an agreeable aromatic odour—Premna integrifolia.

**நறுமை,** சுகந்தவர்க்கம், வாசனைவர்க்கம், aromatic ingredients. a class or group of fragrant drugs; 2. வாசனை, perfume, scent.

**நறும்பருப்பு** இஞ்சி, green ginger; 2. சுக்கு dry ginger; 3. கழற்சி, bonduc nut — Caesalpinin bonduc.

**நறும்பலா,** ஈரப்பலா, bread fruit tree — Artocarpus incisa alias A. pubescens.

**நறும்பிசின்,** சாதிசம் என்னும் ஓர் வகைப் பிசின், a kind of fragrant resin known as sadisam; 2. பறங்கிச் சாம்பிராணி, true olibanum frankincense ; 3. சூரியபோளம். socotrine aloe -- Aloe succotrina. black myrrh; 4. ஏலம், cardamum; 5. குந்திரிக்கம், which see.

**நறும்பிலி,** ஓர் வகைத்தாலி, South Indian pine — Podocarpus latifolia.

**நறும்புகை,** சாம்பிராணிப்புகை, fumes of frankincense; 2. வாசனைப்புகை fragrant smoke.

**நறும்புல்,** வாசனைப்புல், fragrant grass— Andropogon muricatus.

**நறுவல்லி,** பிண்ணாக்குச் செடி, which see

**நறுவிலி,** வருச மரம், இதுவே பெரிய நறுவிலி, ஓர் வாசனை மரம், இதன் பழம் தின்பதற்கு உருசியாயிருந்ததால் இப்பெயர் வாய்ந்தது போலும், இது செடியாகவும், அல்லது மரமாகவும் இருக்கும், இலைகள் மாறிமாறியும், பூக்கள் கொத்தாகவும், காய்கள் அண்டவடிவாயும், உட்பக்கம் நான்கு பிரிவுகளாயும் பிரிவு ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு விதையும் உண்டு, பூக்கள் அனேக வித நிறங்களாயிருக்கும், தோட்டங்களிலும், மைதானங்களிலும் வைத்து வளர்க்கப்படும், இதன் கொட்டை களியைப் போன்ற சதைப்பற்றுள்ளது, இதன் மரப்பட்டை துவர்ப்பாகலின் கஷாயமிட்டு வாய் கொப்பளிப்பதாகவும், இதன் பழம் தின்னலாம், இதனின்று பிசின் எடுக்கலாம், உட்பட்டையினின்று கயிறு திரிக்கலாம், மரவண்டிகள் செய்யவுதவும், இதன் வேர் எலும்புருக்கியைத் தீர்க்கும் (2) இம்மரம் விலாசமாயும், இலைகள் அடர்ந்துமுள்ளது, பட்டை சாம்பல் நிறம், அனேக வெடிப்புகளுள்ளது, காய்கள் குலைகுலையாயிருக்கும், பழத்தின் சுலை மெதுவாயும், வழவழப்பாயுமிருக்கும், இப்பழம் அதிக இருமலைத் தணிக்கும், எரிச்சல், வறட்சி இவைகளைப் போக்கும், ஆகவே வாயில் அடக்கிக்கொள்வதுண்டு, அன்றியும் இரத்தபித்தம் பிரமேகம் போம், (3) இதன் கொட்டையை இடித்துச் சூரணித்து எண்ணெயிற் குழைத்துப் படைகளுக்குப் போடலாம், இலைக்கு மூலரத்தமும், வேருக்கு அஸ்திசிராவமும் குணமாகும், (4) முகத்திற் காணும் கொப்புளங்கள் பருக்களுக்கு இதன் இலையைப் பிழிந்து தடவுவதுண்டு; பட்டையை இடித்துக் காய்ச்சி கஷாயமிட்டு வாய்ப்புண், பல்லின் இரத்தம், பல்லாட்டம் இவைகளுக்குக் கொப்புளிக்கு நீராக உபயோகிக்கலாம், பட்டையின் சாற்றைத் தேங்காயெண்ணெயிற் கலந்து உட்கொள்ள வயிற்று நோய் குணமாகும், இதில் அடியிற் கண்டபடி பலவிதமுண்டு.

Sebesten — Cordifolique alias C. rothi C.Myxa. Itliterally means a fragrant tree and is so called from its fruit being pleasant to taste. *It is also known as lobesten.* It may befound as a tree or shrub. Leaves are alternate or nearly opposite; flowers in clusters, fruit is oval with one to four cells each with a seed, flowers of various colours according to kinds found grown in gardens and in plains, nut surrounded with mucilaginous pulp. *Dection of the bark* astringent and used as gorgle, pulp of fruit eaten given a gum, inner bark is made into rope; its root is a useful remedy in tuberculosis of the bones; wood is used in carriage works and for furmiture. The following are the different kinds.

1. பெரிய நறுவிலி, common large sebesten, broad leaved sebesten — Cordia oblique.
2. பொன்னறுவிலி, golden sebesten cuba sebesten alias Cordia sebestina.
3. சிறுநறுவிலி, small sebesten, phlem killer — Cordia myxa alias C. africana.
4. நாய்நறுவிலி, smaller disc leaved sebesten — Cordia monoica.
5. அச்சிநறுவிலி, rough leaved sebesten — Cordia sebestena typica.

**நறுவிலியிலைத்தசைமடிப்பு,** mystile shaped fleshy bodies — Carunculae myrti formis.

**நறுவிலிப்பழம்,** நறுவிலிச் செடியின் தித்திப்பும், பிசுபிசுப்புமுள்ள பழம், the sweet mucilaginous fruit of sebesten.

**நறுவிலியிலைச்சவ்வு,** யோனித் துவாரத்திற் குள்ளிருக்கும் 4 மடிப்புகளுள்ள சுருங்கிய தசை, சிலர் பிறைச்சவ்வு கிழிந்து இவ்வாறு காணப்படுமெனத் தப்பு அபிப்பிராயம் கொள்வர், 4 rings or folds of the membrane in the vagina, resembling myrtle leaves — Carunenlae myrtiformis. They are not the remains of the ruptured hymen as is mistakenly construed.

**நறுவிளம்பிஞ்சு,** வாசனையுள்ள இளங்காய், fragrant tender fruit; 2. நறுவிலிச் செடியின் இளங்காய், the young fruits of sebesten.

**நறுள்,** see நகரை.

**நறை,** கள், toddy; 2. புளித்தமது, fermented liquor; 3. தேன், honey; 4. சந்தனம், sandal paste; 5. நறும்புகை, incense fumes aromatic fumes; 6. வாசனை, perfumes; 7. வாசனைக்கொடி, fragrant creeper.

**நறைக்காய்,** சாதிக்காய், இது பஞ்சவாசத் தொன்று, nutmeg. It is one of the five aromatics or spices.

**நறைசகி,** கடுக்காய், gallnut — Terminalia chebula.

**நறைபடுபுகை,** கொழும்புகை, incense.

**நறையால்,** பகன்றைக் கொடி.

**நற்கந்தம்,** நல்ல வாசனை, fragrant smell opposite of துர்கந்தம், stink.

**நற்கரணுதியெலும்பு,** மாரெலும்பு, breast — bone, chest bone — Sternum.

**நற்கருணை,** காராக்கருணை, elephant foot yam having no acrid taste — Typhonium orixense; 2. இராப்போசனம், supper.

**நற்கல்,** ஆட்டுக்கல், granite stone mortar and pestle for grinding wet materials.

**நற்கள்ளி,** அழுகண்ணி, Indian weeping plant. இதில் மூன்றுவகைகள் உண்டு,

1. பெரும் அழுகண்ணி, Drosera peltata.
2. சிறு அழுகண்ணி, Drosera burmanni Vhl.
3. நாட்டு அழுகண்ணி, Drosera indica Lin.

NOTE :— Recent research by R. Kumarasamy M. A. it is identified as a carnivorus herb not tree.

**நற்கனிச்சாறு,** இனிப்பு பழத்தைப் பிழிந்த சாறு, juice of sweet fruit.

**நற்காந்த பற்பமாக்கி,** இடுகொள், four leaved cassia — Cassia absus. It is capable of calcining load stone.

**நற்காமம்,** ஒத்தகாமம், equal pleasure, equal lust.

**நற்காரம்,** வழலை, efflorescent salt found on the soil of fuller's earth.

**நற்குணி,** நல்ல குணமுடைய பொருள், drug with good properties.

**நற்குலமேரு,** செம்புமலை, mountain of copper ore.

**நற்கேசி,** see நற்கோலி.

**நற்கையான்,** கரிசலாங் கண்ணி, eclipse plant — Eclipta prostrata.

**நற்கொம்மட்டி,** கொம்மட்டி மாதுளை, which see.

**நற்கோலி,** தக்கோலம், which see.

**நற்கோவை,** தித்திப்புக் கோவை, sweet caper — Lehneria umbellata; 2. see நல்ல கோவை.

**நற்சகுனம்,** நல்ல சகுனம் அல்லது குறி, happy angury.

**நற்சங்கு,** சங்கஞ்செடி, four spined monetia — Azima tetracantha.

**நற்சத்தி,** நவாச்சாரம், which see.

**நற்சந்தனம்,** சாதிச்சந்தனமரம், இக்கட்டையால் சீழ்ப் பிரமியம் போம், அறிவும், காம விச்சையு முண்டாம், good sandal wood. It cures gonorrhoea; increases sexual passion; 2. இழைத்த சந்தனம், Sandal paste.

**நற்சரக்கு,** உயர்ந்த அல்லது மேலான சரக்கு, superior material; 2. கலப்பில்லாச் சரக்கு, unadultered drug.

**நற்சர்ப்பம்,** நல்லபாம்பு, cobra.

**நற்சா,** happy death; 2. பிணிபடாச் சாவு, death without sufferings from disease.

**நற்சாங்கம்**, தாலம்ப பாஷாணம், a kind of native arsenic.

**நற்சாந்தம்**, நச்சுப்புல், red poisonous grass.

**நற்சாந்து**, சுண்ணச்சாந்து, slaked lime paste with sand; 2. சந்தனக் குழம்பு, sandal paste.

**நற்சாளை**, ஓர்வகைச் சாளைமீன், fringed labeo — Labeo fimbriatus.

**நற்சாறி**, see நவாச்சாரம்.

**நற்சித்தன்**, இராசவர்த்தக்கல், which see.

**நற்சித்தி**, கருநொச்சி, an unknown black variety of chaste tree — Vitex genus; 2. விழுதி, which see.

**நற்சிலை**, கருங்கல், granite stone.

**நற்சிறிது**, நிலவேம்பு, French chiretta — Andrographis paniculata alias Justicia paniculata.

**நற்சீந்தில்**, சீந்தில், moon creeper — Menis permum cordifolium, c. f. பொற்சீந்தில், which is a sweet kind growing in hilly places, yellow within when broken.

**நற்சீரகம்**, கறிச்சீரகம், cumin used in cooking.

**நற்சீர்**, நற்சீரகம், which see.

**நற்சீனப்பால்**, see பரங்கிப்பட்டை, China root.

**நற்செங்கல்**, மஞ்சள் காவிக்கல், yellow ochre; 2. காவிக்கல், red ochre.

**நற்சேவகன்**, கோடங்கிழங்கு, கார்த்திகைக் கிழங்கு, root of Malabar glory — Gloriosa superba.

**நற்பசளை**, See பசளை.

**நற்பச்சை**, துரிசு, blue vitriol — Subascetate of copper.

**நற்படிரம்**, சந்தனம், sandal wood paste.

**நற்பரகுன்றி**, சிந்துலவணம், Sindh salt; 2. கடலுப்பு, sea salt.

**நற்பலம்**, வெட்பாலை, blue dying rose bay — Wrightia tinctoria alias Nerium anti dysentericum.

**நற்பலா**, வேர்ப்பலா, trunk jack fruit — Artocarpus in tegrifolia.

**நற்பவளம்**, நல்லபவழம், good coral.

**நற்பனை**, பெண்பனை, female palmyra tree.

**நற்பன்னகம்**, பாம்புவிஷம், snake poison.

**நற்பாசகெந்தி**, சுத்த கெந்தகம், pure sulphur.

**நற்பாம்பு**, நல்லபாம்பு, cobra.

**நற்பாலை**, பாற்சோற்றிப்பாலை, milk tree — Malabar paulay —Dichopsis elliptica.

**நற்பீடகம்**, வாதுமைக் கொட்டை, almond.

**நற்பீர்க்கு**, கறிப்பீர்க்கு, common luffa — Luffa acutangula.

**நற்பிரியம்**, பற்பாடகம், fever plant — Mollugo cerviana.

**நற்போசனம்**, நல்ல சாப்பாடு, rich meals, dainty dish.; 2. சைவசாப்பாடு, vegetable food.

**நற்றலைதேவி**, பொற்றலைக் கையாந்தகரை, மஞ்சள் கரிசலாங்கண்ணி, See கரிசலை.

**நற்றாய்**, பெற்றதாய், own mother as opposed to செவிலித்தாய், foster mother.

**நற்றாளி**, தாளிக்கொடி, hedge bind weed — Ipomea sepiaria; 2. சிறுதாளி, common creamy white bindweed — Ipomea obscura ( gemella ).

**நற்றும்பை**, தும்பை, leucas flower — Leucas aspera.

**நற்றுடி**, நாவல்மரம், jambu tree — Syzigium jambolanum alias Eugenia jambolana; 2. வேர், root.

**நற்றுளசி**, நல்லதுளசி, holy basil — Ocimum sanctum.

**நற்றுளி**, அத்திப்பிசின், gum of fig tree; 2. அத்திமரம், fig tree — Ficus glomereta alias F. racemosa.

**நற்றூக்கம்**, அயர்ந்த தூக்கம், deep sleep.

**நற்றூபம்**, சாம்பிராணி, frankincense, benzoin; 2. வாசனைத்தூபம், fragrant fume.

**நற்றேசி**, கழுதை, ass.

**நனந்தம்**, புன்கு, poon tree — Calophyllum tomentosum alias Dalbergia saborea; 2. சணல், hemp.

**நனந்தலை**, உச்சி, crown of the head; 2. நடு, middle.

**நனவு**, விழிப்பு, wake fulness as opposed to கனவு, dream; 2. மயக்கம் நீங்கல், being free from drowsiness,

**நனை**, கள், toddy; 2. தேன், honey; 3. பூ மொக்கு, flower bud; 4. நனைத்தல், soaking; 5. எறும்பு, ant; 6. கச்சோலம், an aromatic drug; 7. பூவரும்பு, flower not yet blosomed.

**நனைதல்**, ஈரமாதல், becoming wet.

**நனைத்தல்**, ஈரமாக்கல், wetting, soaking.

**நனைந்தவம்**, சிறு கட்டுக்கொடி, which see

**நனையாவரட்டி**, ஆகாசத் தாமரை, sky lotus — Distia stralioles alias Pistia stratiotes.

**நனையாவிருட்டி**, கொட்டைக் கரந்தை fish eye plant—Sphaeranthus indicus.

**நனைவிற்காட**, ஈரமில்லாப்பூமி, dry place.

**நனைவு**, ஈரம், dampness, moisture.

**நன்காடு**, சுடுகாடு, cremation ground.

**நன்பகல்**, நடுப்பகல், midday — noon.

**நன்பஞு**, சணல், hemp — Crotolarea juncea.

**நன்பன்**, see நன்பஞு.

**நன்பெருமாள் வித்து**, இரசம், mercury.

**நன்மஞ்சள்**, பூசுமஞ்சள், raw turmeric used for smearing the face.

**நன்மரம்**, காய்க்குமரம், fruitful tree.

**நன்முத்து**, கெட்டிமுத்து, solid natural pearl. — Superior pearl.

**நன்முருங்கை**, நல்லமுருங்கை, drumstick.

**நன்மை**, ருது, puberty.

**நன்ருச்சி**, கௌரி பாஷாணம், a kind of prepared arsenic yellow oxide of arsenic.

**நன்ருய்த் தாளித்தல்**, சுவைப்படுத்தல், seasoning highly; 2. நன்ருய் வேக வைத்தல். slaking as lime (slacked lime).

**நன்று**, வாழ்வு, welfare.

**நன்றுசமைதல்**, பெண் ருது, girl's puberty.

**நன்னருக்கல்**, சொற்பநோய், slight disease indisposition; 2. வயிற்றில் வலித்தல், stomach pain; 3. பிரசவ இடுப்புவலி, labour pain.

**நன்னலம்**, அழகு, beauty.

**நன்னல்**, மதகிரிவேம்பு, Indian Mahogany — Cedrela toona.

**நன்னூரி**, பாற்கொடி, வாசனைக்கொடி, இது கோடைகாலத்தில் உபயோகிக்க உடம்பின் உஷ்ணத்தைப் போக்கிக் குளிர்ச்சியைத் தரும், இதற்குக் கிருட்டினவல்லி என்றும் பெயர், இது முறுக்கிக் கொண்டிருக்கும், கொடியின் அடிபாகம் வழவழப்பாயும், இலைகள் இருபக்கமும் வளைந்து முனையில் கூராகவும் காம்புகளுடையனவாயும், பூக்கள் வெளிப்பக்கம், வெளிர்ப்பச்சையாகவும் உட்பக்கம் கருஞ்சிவப்பாகவுமிருக்கும், மழை காலத்தில் பூக்கும், சாதாரணமாய் இழிந்த நிலங்களில் விளையும், கடைகளில் இதன் நீளமான வேர்களை நன்ருய்த் திரட்டிக்கட்டி கட்டுகளாக விற்பார்கள், வேர்ப்பட்டை வெடித்துச் சுரசுரப்பாயிருக்கும், புதிகாகக் காயப்போட்டவேர் வாசனையுள்ளது, சிறிது இனிப்பாகவும், சுவைக்க விருவிருப்பாகவுமிருக்கும், இக்கொடி வட இந்தியா, வங்காளம், திருவனந்தபுரம், (கோடிக்கரைக் காடு), இலங்கை இவ்விடங்களில் விசேஷமாய்க் கிடைக்கும்.

இதன் காய்ந்த வேர் உடம்புக்கு ஆரோக்கியத்தையும், பல விருத்தியையும் உண்டாக்குவதுமன்றி, நீர் அதாவது மூத்திரத்தையும் வடிக்கும், அன்றியும் வியர்வையையும் உண்டாக்கும், இதை கஷாயமாக வைத்து

அத்துடன் பசும்பாலையும் சேர்த்து, கல்லடைப்பு, நீர்ச் சுருக்கு முதலிய நோய்களுக்குக் கொடுக்கலாம், நமது நாட்டு வைத்தியங்கள் செரியாமை, குன்மம், பசியின்மை, சுரம், சரும நோய்கள், விரணம், மேக நோயினுலேற்பட்ட கிரந்திப்புண், வாதப்பிடிப்பு, பெண்களுக்குக் காணும் வெள்ளை முதலிய நோய்களுக்கும் இதை உபயோகிப்பார்கள், மேலும் இது இரத்தத்தைச் சுத்தம் செய்து, பித்தத்திலுண்டான வாய்க் கசப்பையும் போக்குவதற்கு இக்கஷாயத்தைச் சீரகத்தோடு சேர்த்துக் கொடுப்பதுண்டு, இதன் வேர் கஷாயத்தோடு பால், சர்க்கரை சேர்த்துக் குழந்தைகளுக்குக் காணும் இருமல், அசீரணபேதி முதலிய நோய்களுக்குக் கொடுக்கக் குணமாகும், வைத்திய பாகத்தில் இவ்வேர் அனேக மருந்துகளுடன் சேரும், வேர்க் கஷாயத்தோடு வால் மிளகு, குக்குலு, கொம்மட்டிவேர், இவைகளைச் சேர்த்து ஆயுள்வேத வைத்தியர்கள் கிரந்தி, ஆனைக் கால், பாரிச வாயு, திமிர் வாயு முதலிய நோய்களுக்குக் கொடுப்பார்கள், யூனானி வைத்தியர்களும் இதனின்று ஷர்பத் தயா தயாரித்து பல விருத்தி மருந்தாக உபயோகிப்பார்கள், 1 நாட்டு நன்னாரி, 2 சீமை நன்னாரி, 3. பெருநன்னாரி, 4. சிறு நன்னாரி; country Sarsaparilla, fragrant root — Hermidesmus indicus alias Periploca indicus. It is also called black creeper. It is a turning creeper, stem glabrous leaves cuspidatus sometimes peduncled, flowers on the outside, pale green and dark blood coloured on the inside, flowering in the rainy season common in waste ground.

The drug—dried roots is sold in bazaars in the form of small bundles, the bark in cracked and fissured longitudinally. The fresh dried root has a peculiar fragrant smell and is sweet but slightly acrid in taste. The plant is found in abundance in Northern India, Bengal, Travancore and Ceylon.

Dried root is an alterative, a divertic and a diaphoretic, decoction of this root mixed with cow's milk is given in cases of gravel and stranguary Vaidyans prescribe it for indigestion, dyspepsia, loss of appetite, fever skin diseases and ulcerations of syphilitic origin, chronic rheumatism and leucorrhoea. It is also used to purify the blood and corecrt the acrimony of the bile. Decoction or infusion of this root mixed with cumin seeds is also given with advantage in urinary complaints. Infusion of root bark mixed with milk and sugar is a good alterative tonic especially for children in cases of chronic cough and diarrhoea. The root is very commonly used as one of the ingredients in medicinal preparations. A decoction of this root with that of colocynth mixed with long pepper twice daily has been held in esteem in chronic skin diseases, syphilis, elephantiasis, hemiplegia and loss of sensation. It is used by unani doctors in the form syrup as a tonic. There are two varieties.

1. நாட்டுநன்னாரி, country sarsaparilla.
2. சீமைநன்னாரி, jamica sarsaparilla.

நாட்டு நன்னாரியில் இருவகையுண்டு. அவை,

1. பெருநன்னாரி அல்லது மாகாளிக் கிழங்கு.
2. சிறுநன்னாரி, country sarsaparilla is of two kinds large known as Magalli Kizhangu and small.

**நன்னாரியுபயம்**, இரு நன்னாரி, அதாவது சிறு நன்னாரி, பெருநன்னாரி, the two kinds of Indian sarsaparilla viz. small leaved and large leaved — Hermidesmus indicus.

**நன்னாறி**, பன்னீர், rose water.

**நன்னிக்கல்**, கலுவக்கல் செய்யவுதவும் கடினமானகல், hard stone used for making mortar which is used for grinding medicines.

**நன்னி**, பருத்தி, cotton; 2. சிறு. small.

**நன்னிப்பயறு**, துலுக்கப்பயறு, a variety of green gram — Phaseolus aconite folius.

**நன்னிறம்**, வெண்மை, whiteness, white colour.

**நன்னீர்**, மென்னீர், soft water; 2. பனிநீர், dew water.

**நன்னு**, பெண், girl.

**நன்னுதல்**, நல்ல நெற்றியையுடைய பெண், a damsel with a beautiful fore head.

**நன்னெறிஞ்சில்**, சிறுநெருஞ்சில், small caltrops — Tribulous terrestris.

**நா**, நாக்கு, tongue; 2. நடு, middle, centre.

**நாககம்**, நாகசம்பங்கி, which see.

**நாககர்ணம்**, செவ்வாமணக்கு, a red variety of castor seed plant.

**நாககள்ளி**, நாகதாளிக்கள்ளி, snake hood fig — Opuntiadillenii.

**நாகக்கற்பம்**, சிவப்பு ஈயம், red lead — Lead tetroxide $Pb_3O_4$.

NOTE :— Red lead is formed by heating lead monoxide of lead in air between 470° — 480° F. It is a scarlet powder used in the manufacture of flint glass and glazes for pottery, paints & matches.

**நாககாலன்**, கருடன், brahmini kite.

**நாககெத்தி**, நேர்வாளம், croton oil plant — Croton tigilium; 2. வஞ்சிக் கொடி, a creeper — Calamus rotang.

**நாககேசம்**, சிறுநாகப்பூ, serpent champak, iron wood of ceylon — Mesua ferrea, see நாகசம்பங்கி.

**நாககேசரம்**, see நாககேசம்.

**நாககேளி**, பெருமருந்து, அல்லது ஈஸ்வர மூலி, indian birth wort — Aristolochia indica.

**நாகக்கசடு**, நாகமலையை உருக்கும் போது தங்கும் கசடு, a soft bluish metal obtained in the smelting of zinc ores. It is found deposited in the zinc furnace — Cadmium.

**நாகக்கட்டு**, வாதமுறையில் கட்டிய நாகம், consolidated zinc by process of Alchemy.

**நாகக்கல்**, சிலாநாகம், red zinc ore zno; 2. see கருடக்கல்.

**நாகக்கள்ளி**, see நாகதாளி.

**நாகக்கறுப்பு**.

**நாகக்கிண்ணி**, நாகத்தினாற் செய்த பாத்திரம், basin or broad vessel made of zinc.

**நாகக்குந்தளமாக்கி**, நாகபாஷாணம், zinc poison used in Tamil medicine and alchemy.

**நாகக்குமரி**, சொர்ணபேதி, a mineral dissolving gold, a mineral solvent.

**நாகக்குவடு**, செம்புமலை, mountain containing copper ore.

**நாகக்கொல்லி**, சர்க்கரை வேம்பு, a sweet variety of margosa tree — Azadirachta indica.

**நாகங்கட்டி**, கருங்காளான், black mushroom; 2. இம்பிலிவேர்ச்சாறு, juice of the root of common satin ebony — Maba buxi folia, capable of consolidating zinc.

**நாகசம்**, சிந்தூரம், red oxide; 2. ஈயம், lead; 3. வங்கம், white lead.

**நாகசண்பகம்**, சொர்ணப் பட்டி, common yellow trumpet flower tree — Tecoma stans.

**நாகசப்பூ**, see நாகப்பூ.

**நாகசகம்**, ஓர்விதலீலை, சர்ப்பத்தைப் போல் பிணையுதல், a kind coitus like that of snakes.

**நாகசம்பங்கி**, வெண்சம்பங்கி, இதன் வாசனையால் நாகம் வசித்தலால் இப்பெயர், white champak — Tecoma undulata Title from resort of serpents under this tree due to odour of its flowers; 2. சிறுநாகப்பூ, see நாககேசரம்.

**நாகசம்பவம்**, செவ்வீயம், red lead, see நாககற்பம்.

**நாகசர்ப்பம்**, நாகப்பாம்பு, cobra snake.

**நாகசாகம்**, பேரிலாமும்.

**நாகசாபூ**, see நாகசம்பங்கி.

**நாகசிகு**, சிவப்பு பாஷாணம், அதாவது மனோசிலை, red arsenic.

**நாகசிங்கி**, குளம், தடாகம் முதலிய நீர்நிலைகளில் முளைக்கும் ஓர் வகைப்பூடு, இதை பொழுதுக்கு முன் பிடுங்க தும்மலையுண்டாக்கும், a rare plant, generally found grown in tanks, pools and other places where water is stagnant. It is known to cause sneezing - which is a peculiar characteristic of this plant when it is plucked before the dusk.

**நாகசிங்கு,** கலப்புகுவன்னி, இது நவலோ கத்தையும் பாஷாணத்தையும் பேதிக்கு மூலிகை, an unknown drug probably of வன்னி (Mesquit) variety capable of acting on nine metals and arsenical poisons chemically. It is supposed to be useful in Alchemy; 2. பொடுதலை, creeping vervain — Lippia nodiflora alias verbena nodiflora.

**நாகசிந்தூரம்,** see நாகசெந்தூரம்.

**நாகசிலை,** see நாகசிலைக்கல்,

**நாகசிலைக்கல்,** சிலா நாகம், இது உபரச வகைகளிலொன்று. red zinc ore — zno; a kind of mineral stone containing zinc. It is one of the 120 kinds of natural substances contemplated in Tamil medicine.

**நாகசீவனம்,** துத்தநாகம், common zinc of commerce.

**நாகசுரம்,** see நாகேசுரம்.

**நாகசுவத்தை,** கிரிப்பூண்டு, which see.

**நாகசெண்பகம்,** see நாகசண்பகம்

**நாகசெந்தூரி,** நாகத்தை செந்தூரிக்கும் மூலிகை அதாவது மாகாளி, சுரபுன்னை, drug capable of turning zinc into red oxide by process of calcination viz big sarsaparilla and soora poon — Ochrocarpus longifolius.

**நாக செந்தூரிச்சி,** மாஞ்சரோகினி, ஓர் காய சித்தி மூலிகை, an unknown rejuvenating zinc into red oxide, a plant much used in clearing dimness of eyes.

**நாகசத்துமூலி,** பிரமி, which sec.

**நாகச்சாரம்,** ஏமமணல், sand mixed with gold dust — Gold ore.

**நாகச்சுண்ணம்,** முப்பு, a mystic salt prepared from zinc as one of the ingrediants.

**நாகஞ்சம்,** விஷ்ணு காந்தி.

**நாகஞ்செம்பாக்கி,** செம்மரம், red wood capable of turning zinc into copper.

**நாகஞ்சேர்வை,** நாகஞ் சேர்ந்தது, an alloy of zinc or any compound of zinc.

**நாகஞ்சேர்வை செந்தூரம்,** மற்றச் சரக்கு களுடன் நாகத்தைச் சேர்த்துப்புடமிட்ட செந்தூரம், a red oxide of zinc prepared with other drugs by process of calcination.

**நாகணத்தி,** காக்கட்டான், crow creeper — clitoria ternatea.

**நாகணப்பேரி,** சுடலையாவரை, tanners cassia found grown in burial ground — Cassia auriculata.

**நாகணம்** நேர்வாளம், croton oil plant — Croton tigilium; 2. நகம் என்னும் ஓர் வாசனைச் சரக்கு, இதனால் மலடு, கண்ணோய் பெருவயிறு போம், a perfumed or aromatic drug which is useful in sterility, eye disease and ascites; 3. நாகணவாய்ப்புள், which see; 4. சங்கு, conch.

**நாகணவாய்,** see நாகணவாய்ப்புள்.

**நாகணவாய்ப்புள்,** மைனுக்குருவி, the mina bird—Mainate.

**நாகணி,** புன்கு, malabar poon—Calophyllum tomentosum.

**நாகநண்டிகை,** see நாகதந்தம்.

**நாகதந்தம்,** யானைத் தந்தம், ivory; 2. பாம் பின்பல், snake fang.

**நாகதந்தி,** ஓர் மரம், Heliotropeum indicum: 2. பேய்த்தும்மட்டி, bitter apple, Cucumis colocynthus; 3. முள்ளங்கி, garden radish.

**நாகதந்தி,** நேர்வாளம், croton, see நாகணம்.

**நாகதமனம்,** தண்ணீர் விட்டான், common asparagus—Asparagus officinalis.

**நாகதமனி,** மாசிபத்திரி, Indian worm wood Artemesia vulgaris alias Centipeda vulgaris.

**நாகதமனியம்,** பழுபாகல். prickly carolah—Momordica hispida; 2. காய்ப்பாகல், buffalo carolah — Momordica tuberosa; 3. தலைச்சூடுவள்ளி, Indian birth wort — Aristolochia indica.

**நாகதமாலம்,** புங்கமரம், Indian beech — Pongamia glabra.

**நாகதவனம்,** விஷமூங்கில், poison bamboo — Crinum asiaticum.

**நாகதாளி**, ஓர் வகைத் தாளி, இதற்கு நாகத்தேமனி, ஈசேகுகாரி என்றும் பெயர், இதன் இலைக் குங்குமப் பூவின் வாசனை, இலை வெற்றிலையைப்போலிருக்கும், இதன் சூரணத்தைப் பொடித்து வெருகடி ஒரு மண்டலம் தேனிற்கொள்ள நோய்கள் தீரும். நரைதிரை மாறும், இதை 3 மாதம் தின்ன பாதாளம் தெரியும், பாம்பு விஷங்களைப் போக்கும், 1. கருநாகதாளி; 2. செந்நாகதாளி; 3. அடுக்கு நாகதாளி; 4. மஞ்சள் நாகதாளி என நான்கு வகை, a kind of தாளி, Ipomea plant. Its leaves smell like European saffron and the resemble betel leaves. Powdered dry leaves when taken in honey for 40 days cures all kinds of diseases, turn gray hairs black, remove wrinkles in the skin of the body. When taken for 3 month, burried substances will be visible. It is an antitode for snake poisoning.

NOTE :— This is an unknown plant contemplated in Tamil Medicine. It is quite different from the one which is commonly called as நாகதாளி, prickly pear — cactus — Opuntia nigricans given else where.

**நாகதாளி**, சதுரகிரி மலையிலுள்ள மூலிகை, இதன் இலை சிறிய வெற்றிலையைப் போலவும், மஞ்சள் நிறமுடையதாகவும் இருக்கும், இதற்கு நாகமணி இலை என்றும் ஈசுவர மூலிகை என்றும் பெயர், இந்த இலையை அரைத்துத் துணியிற் பொட்டளங் கட்டி முடிந்து வைத்துக் கொண்டு, ஒரு சட்டியில் சூதமும் அதன் அளவு நல்லெண்ணெயும் விட்டு ஒரு சாதிவிறகு கொண்டு தீயெரித்து எண்ணெய் காய்ந்தவுடன் அந்த நாகதாளி இலைப் பொட்டணத்தை எடுத்துச் சாறு பிழிந்தால் சூதம் கட்டிப்போகும், அதை செந்தூரமாக்கி ஆவின் நெய்யில் ஒருவாரம் சாப்பிட்டுவர தேக சித்தியாகும்.

**நாகதாளி**, சப்பாத்திச்செடி, இதற்கு சப்பாத்திக் கள்ளி, சப்பாத்து முள், மஞ்சள் நாகதாளி, நாகக்கள்ளி, பலகைக் கள்ளி எனப் பல பெயர்களுண்டு, இது சாதாரணமாய் இந்தியாவில் எங்கும் கிடைக்கக் கூடியதாயிருந்தாலும், அமெரிக்காவிலிருந்து கொண்டுவந்து பயிராக்கப்பட்டது என்றும் சொல்வதுண்டு, இதன் பூ பெரியது, மஞ்சள் நிறம், 2 அங்குல குறுக்களவு, அடித்தண்டு சப்பை, சதைப்பற்றுள்ளது, நாளாகக் கெட்டியாயும், கிளைகள் பிரிந்தும், பாத்திரம் போல் உருண்டையாயும் இருக்கும், இதன் பழம் மஞ்சள், பச்சை அல்லது சிவப்பாயிருக்கும், பட்சிகள் இப்பழங்களைத் தின்னும், இது மைதானங்களில் முளைத்துச் சீக்கிரம் பரவும், முள்ளுகள் அடர்ந்திருக்கும், இதை அழித்தாலும் சீக்கிரத்தில் துளிர்த்து வளரும், இதைக் கொளுத்திச் சாம்பல் எடுப்பதுண்டு, இதினின்று உப்பு தயாரிக்கப்படும், இதன் பழம் கக்குவான் இரைப்பிருமல் முதலிய நோய்களுக்குதவும், இதனுள் ஓர் மிருதுவான சதைப்பற்றைச் சாப்பிட உடம்புக்கு ஆரோக்கியத்தையும் குளிர்ச்சியையும் தரும், slipper milk hedge — Opuntia spinoussimy. It is known by different names as shoe milk hedge, oblong indian fig snake hood fig, plate leaf milk hedge etc. Although it is found grown and easily procurable almost every where in India it is said to be a plant of S. America naturalised here. It bears large bright, yellow flowers two inches in diameter, stems when young fleshy and nearly flat but in age become hard, cylinderical and branched. Fruits are green, yellow or red, birds live on them. It is found grown in waste arid soils and plains and is covered with prickly thorns. Its growth is rapid and as such is very difficult to erradicate Potash may be prepared from the ashes of the burnt plant. The fruit is esteemed as a remedy for whooping cough and asthma. A jelly like pulp found in it is cool and refreshing.

**நாகதாளி**, அநோ அல்லது அர்வதா இதற்கு வடமொழியில் சோமலதை எனப்பெயர், இது பாம்புகடிக்கு உபயோகப்படும், ஆகவே பாம்பாட்டிகள் இவ்வேரைக் காட்ட பாம்பு தலையை வாங்கிக்கொள்ளும், எடுக்க மறுபடி தலையை நீட்டும், snake poison plant — Cucumis anguinus. In Sanskrit it is known as moon creeper. It is a medicinal plant used as antidotes by snake charmers. The root is said to have a peculiar effect on snakes which draw their heads and retire when the root is shown to them and resume in its absence.

**நாகதாளி**, பேய்ப்பீர்க்கு, bitter luffa or wild luffa — Luffa acutangula.

**நாகதாளிக்கள்ளி**, இது மலையில் விளையும் ஓர் இனம், விஷதாளிக் கள்ளி, இச்செடி ஆசாம் தேசத்திலும், கொரநாடு, மலையாளம், நேபாளம் இவ்விடங்களிலும் விசேஷம், இலைகள் விஷகடிக்கு நல்லது, இவ்விலையைக் கசக்கி உடம்பு முழுமையும் தடவ நல்லபாம்பு விஷம் தீரும், கொழுந்து காரமுடையது, வியர்வையை யுண்டாக்கும், மேகநோய்க்கும் கொடுக்கலாம்; இதிலிருந்து வரும் பாலை 10 துளியளவு சர்க்கரையிற் கலந்து கொடுக்க பேதியாகும், முட்களை கழித்துவிட்டு, கட்டிகளுக்கு வைத்துக் கட்ட அழுந்து விடும், பழம் குளிர்ச்சியைத் தரும், பழச்சாற்றில் சர்க்கரைகூட்டி சர்பத்தாக கரண்டியளவு சாப்பிட்டுவர சங்கம விஷம், தாவரவிஷம், மகாவாத ரோகம், இருமல் முதலிய நோய்கள் போம், many spined prickly pear — Opuntia dillennic alias O. nigricaus. This is another variety found grown in hills and as such is very common in Assam, Coromandel coast. Malabar, Nepal and other places. Leaves are used as an antidote to snake bites and other poisons, tender leaf little acrid and

diaphoretic. It is prescribed for venereal complaints, 10 drops of the milky juice of this plant mixed with sugar is a good purgative. The leaf when got rid of prickles may be applied locally to suppress boils and abscesses. Fruit juice mixed with sugar is a refreshing sharbat and cures cough etc. It is an antitode to vegetable and animal poisons and cures rheumatism.

**நாகதூமம்,** சீமையாதளை, common quince — Cydonia vulgaris.

**நாகதெந்தி,** நேர்வாளம், croton seed plant — Croton tigilium.

**நாகதெய்வம்,** இந்துப்பு, rock salt.

**நாகதேமணி,** மணித்தக்காளி, black berried solanum — Solanum nigrum.

**நாகதேவதாளி,** நாகதாளி + தேவதாளி, ஆக இரண்டு மூலிகைகள், இது இரசத்தைக் கட்டும், துரிசை வெளுப்பாக்கும், Snake hood fig — Opuntia nigricans + snake luffa — Luffa echanata. They are used for Consolidating mercury and turning copper acetate to white colour and as such they are useful in Alchemy.

**நாகதேனி,** பெருமருந்து, see ஈசுரமூலி.

**நாகதோரணி,** சிவப்புஎலிச் செவிக்கீரை, a red variety of rat's ear plant — Ipomea rheniformis.

**நாகத்தி,** மையிலை, small elliptia, leaved wild tea — Goldonia obtusa.

**நாகத்தினுயிர் பெந்தத்தி,** வெள்ளைக் கிலு கிலுப்பை, white flowered rattle wort — Crotolaria pulchenima.

**நகத்தின்சத்துரு,** சிறுபூனைக்காலி, passion flower — Passiflora leschenaultic alias P. foetida.

**நாகத்தின் பாம்பு,** பூநாகம், small snake found in flowers. It is smallest kind of cobra extremely venomous.

**நாகத்துரு,** நாகமரத்தின்வேர், root of Jammoon tree.

**நாகத்துக்குருவாணி,** பழுபாகல், see நாக தமனியம்

**நாகத்தேமணி,** நாகதாளி, which see.

**நாகத்தைச்சூரணமாக்கி,** வெற்றிலை, betal leaf capable of reducing zinc into powder.

**நாகத்தைச்செந்தூரம்பண்ணணி,** அழுகண்ணி, see நலகண்ணி.

**நாகத்தைச் செந்தூரியாக்கி,** கருமத்தை, black dhatura; 2. கசம்புப்பசளை, bitter portulaca or spinach.

**நாகத்தைச் சொர்ணமாக்கி,** அஸ்திபேதி, a solvent capable of converting zinc into gold.

**நாகத்தை நாசமாக்கி,** முருங்கை, moringa.

**நாகத்தைப்பற்பமாக்கி,** மான் செவிக்கள்ளி, spiral leafy milk hedge — Euphorbia nivulia capable of calining zinc into a white powder.

**நாகத்தைப்பேதமாக்கி,** செப்பு சதுரக்கள்ளி a red variety of milk spurge capable of transmuting zine into gold.

**நாகத்தொட்டி,** நாகம் சேர்ந்த ஓர்வகைத் தொட்டிபாஷாணம், a kind of prepared arsenic compound.

**நாகநந்தி,** ஓர்மரம், a tree.

**நாகந்தி,** நேர்வாளம், நாகணம், which see.

**நாகநாகிக்கிழங்கு,** ஓர்வகைகிழங்கு, a kind of tuberous root.

**நாகந்தகன்,** கருடன், brahmini kite.

**நாகபடம்,** முள்ளில்லாக் கற்றுழை, இது ஓர் கற்பமூலிகை, thorn less aloe. It is a rejuvenating drug.

**நாகபடலம்,** கடைக்கண்ணில் சதை படரும் ஓர் கண்ணோய், an eye disease in which a film is formed over the pupil of the eye, see நாகப்படலம்.

**நாகப்படிக்கற்றுழை,** see நாகபடம்.

**நாகபந்தனி,** நாகத்தைக்கட்டும் மூலிகைகள், அதாவது:

1. ஆடுதின்னுப்பாளை, worm killer — Aristolochia bracteata.
2. பொன்னுவரை, fetid cassia — Cassia sophera.
3. பாலிருள், a white species of iron wood — Mesua.

**நாகபந்து,** அரசமரம், peepul tree — Ficus religiosa.

**நாகபரணி,** சப்பாத்திச்செடி, prickly pear — Opuntia nigricans.

**நாகபலம்**, ஒருபூடு, Sida spinosa alias S. alba.

**நாகபலா**, நாகமல்லி, yellow jasmine, tree jasmine — Jasminum arborescens; 2. காரை, இது பலவிருத்தி மூலிகை, elephant tonic —Canthium parviflora.

**நாகபலி**, சுக்கு, dried ginger — zingiber officinale.

**நாகபலிகை**, திரண்டபெண், a woman who has recently matured.

**நாகபலை**, நாகமல்லி, which see.

**நாகபற்பம்**, நாகத்தைப் புடமிட்ட பஸ்பம், இது வாந்திபேதி, காக்கை வலிப்புக்கும் உபயோகப்படும், calcined oxide of zinc It is used for cholera and epilepsy.

**நாகபற்பம்**, நாகத்தை இலுப்பை நெய்யில் 20 தரம் உருக்கிச் சாய்த்து பிறகு சுத்தியானவுடன், நாகத்தை உருக்கிக் கள்விட்டாடுகையில் இலைக்கள்ளியை அதிலிட்டு இரும்புக் கரண்டியால் துழாவிக் கொண்டேயிருக்க அது புகைந்து சாம்பலாய்ப் போகும், இதை நெருப்பில் வறுத்துக் கொண்டேயிருக்கப் பொருமி நீறிப்போகும், இதையெடுத்து மெல்லிய துணியினால் வடிகட்டி அடியில் நிற்பதை எடுத்துக் கொள்ளவும், இதுவே பற்பமாகும், இதை வைத்தியர்கள் இரத்தப் பிரமியம், வெள்ளை, வெட்டை முதலிய நோய்களுக்கு உபயோகிப்பார்கள், தமிழ் வைத்தியத்தில் அநேக வகையாக சித்தர்கள் முறையாகத் தயாரிப்பதுண்டு, வியாதிக்குத் தக்கபடி அனுபானத்தில் கொடுப்பதுண்டு, calcined (white) powder of zinc — Lana philo sophica The preparations of Native Doctors are as follows : *Zinc is taken in sufficient quantity* and is cleaned first by melting and pouring it in Mahua oil and this process is repeated twenty times when the zinc is considered to be purified. The zinc so obtained is then melted in an earthern pot when green leaves of leafy milky hedge ( Euphorbia nercifolia ) are thrown into the melted mass, which is constantly stirred with an *iron spoon*. It then inflames in the usual manner with a yellow smoke leaving only ashes which are continued to be kept till they acquire a fine white colour. The finest parts are separated from the rest by sifting through a piece of fine muslin and preserved for use Vaidyans employ this powder for gonorrhoea gleet etc.

There are several ways by which this powder is prepared by Vaidyans as per processes adopted by several Siddhars and is prescribed for several diseases, through several mediums or vehicles.

NOTE:—Calcined powders are prepared *from zinc with other substances instead of* the leaves of leafy milky hedge. They are 1: leaves of Abutillon and stirring it with the root of Abutillon. 2. Eclipse plant; 3. Plant — Tephrosia purpurea and used for bleeding piles, chronic diarrhoea, dysentry etc. It is also prepared along with mercury sulphur etc, by alchemical process, contemplated in Siddha medicine and used for *transmutation to obtain gold*. The method is no doubt secret, complicated and incomprehensible to a lay man attempting at this art and this cannot be arrived at successfully without the aid of a spiritual Guru — teacher.

**நாகப்பச்சை**, ஆற்றுப்பச்சை ஓர் பச்சைக்கல் இது உபரசங்களில் ஒன்று, an inferior green stone contemplated as one of the 120 kinds of natural substances mentioned in Tamil medicine.

**நாகபாஷாணம்**, சூதம், இலிங்கம், கருவங்கம், பச்சை, பொன்னிரிதாரம், காரம் இவைகளை பொடித்துக் குகையில் வைத்து மேல்மூடிச் சீலைமண் செய்து கஜப்புடத்தில் போட்டு மூசிர அனல் மூட்டிப்பிறகு ஆறியபின் உடைத்துப்பார்க்க மருந்து உருகி ஈயம் போல் வலிந்து இறுகிக்கட்டியாயிருக்கும், இதுவே நாக பாஷாணம், உலோகத்தில் *பழுத்திடும்*, a *kind of prepared arsenic an* alchemical compound of zinc. It is prepared as follows. Mercury, vermilion, black-*lead, vitriol yellow orpiment, borax, are all* powdered and the mixture is then secured in a crucible which is covered and luted air tight and placed in a conflagration. It is then taken out and cooled and when the crucible is broken the product left will be found to be a melted rigid mass resembling tin. 2. நாகம் சேர்ந்த பாஷாணம், zinc poison.

**நாகபாணி**, தில்லைமரம், tigers milk spurge — Excoecaria crenulata.

**நாகபாலி,** சிறுகிழங்கு, small yam — Goa potato — Dioscorea aculeata.

**நாகபித்து,** நாகபாம்பின் பித்தம், bile of cobra. see பேரிலாழம்.

**நாகபுட்பம்,** சண்பகம், chambak — Rottleria tinctoria; 2. சிறுநாகப்பூ, iorn wood of Ceylon — Mesua ferrea.

**நாகபேதி,** இந்திர கோபப்பூச்சி, lady's fly — Mutella occidentalis. It is so called from its probability of acting upon zinc alchemically.

**நாகப்பகை,** நாகப்பாம்பிற்குச் சத்துருவான கருடன், brahminikite so called from its being inimical to cobra.

**நாகப்படக்கற்ருழை,** சப்பாத்திச்செடி, இது சதுர கிரிமலையில் விளைவதாகச் சொல்லப்படும் ஓர் மூலிகை, இது பாம்புபடம் எடுப்பது போலும் வரிவரியாய் நீர்வடிந்து கொண்டும் இருக்கும் இந்தக்கற்ருழையைச் சமூலமும் பிடுங்கி வந்து பால் விட்டு அரைத்து பாலோடு சேர்த்துக் கலக்கிச் சாப்பிட ஒரு முகூர்த்த நேரம் மூர்ச்சையாகும், அப்போது அடிக்கடி ஒரு கரண்டி விதம் பால் கொடுத்து வரமூர்ச்சை தெளியும், காயசித்தியாகும், pink coloured prickly pear — Opuntia nigricans. It is so called from the resemblance of its leaf to snake hood. It is said to grow in Sathuragiri hills The whole plant ground with cow's milk and taken with the milk causes unconciousness and fainting for about one and half hours. During this period the person must be fed with teaspoonful of milk every now and then. After some time conciousness will be regained, and the body will be rejuvenated.

**நாகப்படலம்,** இருகண்களிலும் சிவந்து, அழுத்தமான தடித்த சதை வளர்ந்து வெள்விழி முழுதும் கடந்து கருவிழியிலும் படர்ந்து நடுவிலிருக்கும் பாவையையும் நாளாவட்டத்தில் மறைந்து, கண்ணீர் வடிந்து அரிப்புண்டாக்கும் ஓர் வகைக் கண்ணோய், an eye disease characterised by inflammation of both eyes choroid coating or film spreading over the pupil and thus affecting the eye sight by covering the cornea. It is marked by discharge of water from the eyes followed by itching.

**நாகப்பழக்காடி,** நாகப்பழத்திற்குத் தண்ணீர் சேர்க்காமலே பிசைந்து பிழிந்தெடுத்த சுய ரசத்தைப் புளிக்க வைத்தகாடி, a fermented essence obtained by pressing and squeezing out the juice of jaumoon fruit without adding water to it.

**நாகப்பழம்,** நாவல் பழம், jaumoon fruit, fruit of Eugenia jambolina.

**நாகப்பழம்,** நாவல் மரத்தின் பழம், the fruit of jamboo tree.

**நாகப்பற்று,** துத்தநாகப்பிடிப்பு, a disease due to exposure to zinc fumes.

**நாகப்பாம்பு,** see நல்லபாம்பு and also நாகம்; 2. வயிற்றுப்பூச்சி, round worm a parasite in the intestines — Ascaris.

**நாகப்பாம்பு விஷம்,** நாகங்கடித்த விஷம், poison from snake bite — Cobra venom.

**நாகப்பாலை,** கொடிப்பாலை, cotton milk plant — Dregea volubilis (typica).

**நாகப்பத்திரி,** பெருவாகை, parrot tree — Albizzia lebbck.

**நாகப்பிரண்டை,** படப்பிரண்டை, a kind of adament creeper—vitex species.

**நாகப்பிராசிகம்,** சிமைப்பிச்சி, chinese jasmine — Trachelospermum jasminoides.

**நாகப்புல்லுருவி,** நாகமரத்தில் வளரும் புல்லுருவி, a parasite growing on jamboo tree.

**நாகப்புல்வரி,** நாகப்புல்லுருவி, which see.

**நாகப்பூ,** நாவல்மரத்தின் பூ, flower of jamboo tree; 2 சிறுநாகப் பூ: Ceylon iron wood — Mesua ferrea; 3. ஓர் சிவப்புப் பூ, scarlet flower plant—Pentapetes phoenicea; 4. பெருநாகப்பூ, இதுவே, தக்கோலம், a species of iron wood — Calyprtranthes jambolana.

**நாகப்பூ,** ஓர் மருந்து, a kind of prepared medicine; 2. பூப்போன்ற துத்தநாகம், flower of zinc.

**நாகப்பூச்சி,** நாக்குளிப் பூச்சி, an intestinal round worm—Ascaris; 2. பூநாகம், an earth worm.

**நாகமணல்,** துத்தநாகம் சேர்ந்த மணல், இது உபரசவகைகளில் ஒன்று, zincore. It forms one of the 120 kinds of natural substances according to Tamil Medicine.

**நாகமணி,** நாகரத்தினம், gem (ruby) supposed to be on the head of a species of *cobra* — *Carbuncle.*

**நாகமண்,** செம்மண், red earth, red ochre.

**நாகமதி**, துளசி, holy basil — Ocimum sanctum.

**நாகமதுசெம்பாக்கி**, செவ்வலரி, oleander rosebay — Nerium odorum (roseum).

**நாகமதுநித்தார்நயனம்**, உத்திராட்சம், which see.

**நாகமம்**, சுக்கு, dried ginger—zingibar offinale.

**நாகமரம்**, see நாவல்மரம்; 2. வெள்ளைநாகமரம் அல்லது வெக்காலி, chirimaun — Anogassus latifolia.

**நாகமலை**, துத்தநாக மெடுக்கும் மலை, mountain containing zinc ore.

**நாகமல்லி**, அனிச்சைச் செடி, இதற்கு ஊரசு மல்லி, விஷமல்லிகை என்றும் பெயர், 4—5 அடி உயரம், பூவின் காம்பு குட்டை, பூ சிறியது, வெண்மை, இது திருவாங்கூர், மாவலிபுரம் முதலிய விடங்களில் அதிகம், இதற்கு நாகமுட்டி யென்றும் பெயர், இதன் பச்சைவேரையும் இலையையும் இடித்து எலுமிச்சம் பழச்சாற்றில் குழைத்துத் தடவ, வண்டுகடி, படை, சொறி சிரங்கு முதலிய சரும நோய்களைப்போக்கும், இதைப் பாலிற் போட்டுக் காய்ச்சி உட்கொள்ள காமத்தை அதிகரிக்கும், இவ்வேர் பாம்பு கடிக்கு உதவும், இது உஷ்ணத்தைத் தரக்கூடியதால் பழய நோய்களைப் படிப்படியாய்ப் போக்கும் குணமுடையதாகும், இலையைக் கசக்க வெகுட்டலாயிருக்கும், இதன் இலையையாவது வேரையாவது மென்று தின்னப் பாம்பு விஷம் நீங்கும், ring worm root, white flowered justicia — Rhina canthus communis alias Justicia nasuta. It is a shrub of 4—5 ft. short petioled flowers small and white It is found grown in Travancore and Mahablishwar. The fresh root and leaves bruised and mixed with lime fruit juice are reckoned as a useful remedy in ring-worm, itch, scabbies, and other cutaneous affections. Milk boiled with this root is considered as an aphrodisiac. The root mixed with lime fruit juice and pepper or boiled in milk is an useful remedy in snake bites. As it lends heat to the body, it is a useful alternative. Leaves when bruished give a disagreeable odour. The leaves or root when chewed and taken in is considered as an antidote to snake poison.

**நாகமல்லி**, பெருமல்லி அல்லது காட்டுமல்லிகை, jungle jasmine — Jasminum latifolium.

**நாகமல்லிகை**, see நாகமல்லி.

**நாகமல்லிகை**, Downy jasmine — Jasminum arborescens.

**நாகமாணிக்கம்**, நாகத்தின் தலை மேலிருக்கும் ஓர் உயர்ந்த இரத்தினம். see நாகமணி.

**நாகமாதா**, துளசி, holy basil — Ocimum sanctum.

**நாகமாதிகம்**, see நாகமாதா.

**நாகமாரண்**, இதிர்க்கிழங்கு, wild elephant yam — Dracontium polyphyllum.

**நாகமுட்டி**, விஷமுட்டி, முறுக்கிக்கொண்டிருக்கும் ஓர் கொடி, இலைகள் அண்டவடிவு, கூர்மையான முனை, இலைக் காம்பு இலையின் பாதி நீளம், சிறிய பூக்கள், வாசனையாயும், வெண்மையாயும், சாதாரணமாக வேலிகளில் முளைக்கும்; இரண்டு கற்களைக் கொண்டு, நசுக்கித் தண்ணீரில் குழைத்துக் கொடுக்க சகல பாம்பு விஷம் நீங்கும், யானைகாலுக்கும் இது உபயோகமாகும், இலைக் கஷாயம் இரணப் புண்களுக்கு உதவும், creeper mushty, frog creeper — Tiliacora racemosa alias Coccuslus acuminatus. It is a twining shrub, leaves ovate, acuminated, pedicles usually about half the length of the leaf, one flowered, flowers small cream coloured and fragrant. It is used as an antidode to snake bites being rubbed between two stones and given internally mixed with water and is also applied to elephantiasis (cohinleg). decoction of leaves is applied externally in ulcers.

**நாகமுட்டி**, எட்டிமரம், nuxvomica tree — Strychnos colubrina; 2. நாகமல்லிகை, which see.

**நாகமுத்தக்காசு**, நீண்டகோரை, இதற்கு வடமொழியில் பத்திரமுஸ்தை என்றும் பெயர், straight sedge — Cyperus pertinuis.

**நாகமுல்லை**, ஊரகமல்லி, see நாகமல்லி.

**நாகமுழுணரிவேர்**, நாகதாளிவேர், இதைப் பாம்பு விஷத்திற்கு கொடுப்பதுண்டு, root of நாகதாளி, which see It is an antidote to snake poison

**நாகமுள்ளு,** சப்பாத்திச்செடி, prickly pear cactus indus alias Opuntia nigricans.

**நாகமூக்கத்தி,** see நாகமூக்கொற்றி.

**நாகமூக்கொற்றி,** விஷமூக்கொற்றி, ஓர் மருந்துச் செடி, இலை பெரிது, மிருதுவானது, இலைக்காம்பு நீளம், 1-5 பூக்கள் பூக்கும், பூக்கள் மிகப்பெரிது, சுத்த வெண்மை சூரியன் மறைந்த பிறகு பூக்கும், காலையில் சுருக்கமடையும், மழைகாலத்தில் பூக்கும், இதன் வேர் நெய்ச்சத்துள்ளதாயும், உப்புச்சரக்கு வாய்ந்ததாயுமிருக்கும், வேர்ப்பட்டை பேதியாகும் தன்மையது, முத்ராத விதைகளைத் தின்னலாம், இதில் சீமைநாக மூக்கொற்றி என்று ஓர் இனம் உண்டு, இக்கொடியின் பூ வெண்மையாயிருக்கும், இதன் இலைக்கும் வேருக்கும் பாம்புகடி விஷத்தைக் குணப்படுத்தும் தன்மையுண்டென்று கருதப்படும், இதன் விதைகளையும் தின்னலாம், Indian moon flower, Moon creeper — Ipomaea glaberrima alias I. bona-nox alias convolvulus muricatus. It is a herb leaves large, very smooth and pointed, peduncles very long, I—5 flowered, flowers very large, pure white, opening at sun set, fading next morning, flowering in rainy season. The root contains a sort of resin, fatty matter, volatile oil, albumen starch, malic acid and various salts. Bark of root is used as a purgative, seeds eaten when young.

The well known foreign variety is American moon flower — Ipomaea bonanax having the same characteristics as above, leaves and roots are supposed to have virtues in snake bites, seeds are eaten when young.

**நாகமூசிகை,** குங்குமமரம், saffron tree monkey turmeric — Bixa orellana; 2 கபிலப் பொடி, Kamela dye.

**நாகமோதோவாக்கி,** காட்டுக்கொள், wild gram — Rynchosia genus.

**நாகம்,** நல்லபாம்பு, cobra; 2. துத்தநாகம், zinc; 3. பூண்டின் முதற்பெயர், (உ-ம்.) நாகமல்லி, நாகதாளி, நாகமுள்ளு, நாகவல்லி முதலியவை, plants first term as naga malli etc; 4. இருசாதியைக் காட்டும் மொழி, term joining two genera as மலைநாகம், பூநாகம்; 5. அம்மணம், நிர்வாணம், nakedness; 6. நாவல்மரம், which see; 7. ஓர்வகை அப்பிரகம், one of (நாகம், பேகம், பிநாகம், வச்சிரம்) the four kinds of mica; 8. வெற்றிலை, betel leaf; 9. சிறுநாவல், small jaumoon; 10. see நாகசம்பங்கி; 11. காரீயம், black lead; 12. ஆகாயம், sky; 13 ஒலி, sound; 14. கருங்குரங்கு, black monkey; 15. குரங்கு, monkey; 16. ஞாழல், fragrant herb; 17. புன்னாகம், (புன்னை மரம்) Alexandrian laurel; 18. மலை, mountain; 19. நாகபாஷாணம், which see, 20. நாகப்பச்சை, which see; 21. ஓர் பஞ்சலோகம், an alloy of five metals, see பஞ்சலோகம்; 22. கஞ்சாங்கோரை, white basil, — Ocimum album; 23. விலாமிச்சவேர் a fragrant root — Andropogon muricatus; 24 கண்டத்திப்பிலி, root of long pepper — Piper longum root of (in Philosophy) deep sleep trance; 25. துத்தநாக வகை, அதாவது சிறுகண்ணுகம், பெருகண்ணுகம், உக்காநாகம், term referring to different kinds of zinc as mentioned above; 27. கந்தகம், sulphur; 28 கரபுன்னை, which see.

**நாகப்பாம்பு,** 5 விதம், 1. கருநாகம், 2. பரநாகம், 3 கல்நெஞ்ச நாகம், 4. ஊமை நாகம், 5. கண்ணெரியநுகம், In Indian Mythology there are snake Gods and these have human heads and bodies of serpent. They are supposed to in habit the (நாகலோகம்) under world.

**நாகப்பூ,** ஓர்மருந்து, a kind of prepared medicine; 2. பூப்போன்ற துத்தநாகம், flower of zinc.

**நாகம்போல்படமமுக்கி,** அமுகண்ணி, which see also see நற்கள்ளி.

**நாகரகம்,** see நாகரங்கம்.

**நாகரங்கம்,** கமலா, கிச்சிலி, sweet orange — Citrus a urantum; 2. நாரத்தை, bitter orange; 3. தேன்ரூடை (கிச்சிலி), a kind of orange.

**நாகரங்கம்,** தேன்ரூடை, a kind of sweet orange.

**நாகரசகந்தகம்,** see நாகரசச் செந்தூரம்.

**நாகரசச்செந்தூரம்.** நாகம், இரசம் இவ்விரண்டையும் முதன்மையாகக் கொண்டு, கந்தகம் முதலிய மற்ற சரக்குகளையும் சேர்த்துச் சேர்த்துச் செய்யும், ஓர் புடமிட்ட செந்தூரம், இது வாத முறைக்கும், காயகற்பத்துக்கும் உதவும், an alchemical preparation consisting of zinc, mercury as chief ingredients mixed with sulphur and other drugs by process of calcination.

**நாகரசவிந்து,**

**நாகரசவூஞ்சல்,** நாகரசத்தை அண்டத்தில் வார்த்துப்பிறகு, புடத்துக்குமேல் ஊஞ்சவிட்டு எரித்தெடுத்த மருந்து, an alchemical preparation consisting of zinc and mercury which are secured in a fowl's egg and then placed in a vessel suspended over the fire and burnt till the required medicine is obtained.

**நாகரஜஸ்,** சமீபத்தில் ருதுவான பெண், a girl recently menstruated or attained maturity.

**நாகரத்தம்,** கபிலப்பொடி, karmela dye — Mallotus philippinensis.

**நாகரமத்நகம்,**

**நாகரம்,** சுக்கு, dried ginger—Zingiber officinale; 2. நாகரவண்டு, which see; 3. அறுபத்து நான்கு விலைகளிலொன்று, one of the 64 kinds of coitus or sexual embrace; 4. ஓர்விதக்கிச்சிலி, a kind of sweet orange; 5. ஆத்மஞானம் அடையும் விருப்பம், a desire for final beatitude; 6. கோரை, straight sedge — Cyperus pertinuis; 7. இளைப்பு, emaciation; 8. தேன்றோடை, a kind of sweet orange.

**நாகரம்,** ஓர் காமவிலை, இதில் மல்லாந்து படுத்துக் கொண்டிருக்கும் பெண் இருதுடைகளாலும் புருஷன் துடைகளை நெருக்கிப் பிடிப்பது இவ்விதமாகவே புருஷனும் மாறித் தன் துடைகளால் பெண்ணின் துடைகளை புணர்ச்சியில் நெருக்கிப் பிடிக்கும் ஓர் நிலைமை, a posture of consisting of two attitudes in which one of the couple lying on the back grapples with the thighs, the thighs of the other in the course of coitus It is known as urban attitude intended for equal fit unions.

**நாகரவண்டு,** பெண்வண்டு இது ஓர் உபரசச் சரக்கு, gold coloured beetle — Cantharides. One of the natural substances according to Tamil Medicine; 2. ஓர் வகை நத்தை, a kind of snail; 3. சிறு குழந்தை, baby.

**நாகரவண்டுத்தூள்,** பாம்புப் புத்துகளில் சிதைந்து கிடைக்கும் வண்டுகளின் உடம்பிலுள்ள தோல், the wings of insects usually found on the ant hills.

**நாகரவிந்தாதி லேகியம்,** உண்டவுணவு கிரமம்படி சீரணித்து உடம்பிலுள்ள அவயவங்களுக்குப் பூரணசக்தியை உண்டாக்கும் ஓர் லேகியம், இதனால் இந்திரியம் கெட்டிப்படும், an electuary which causes good appetite and digestion, and gives energy and strength to the body and binds the semen.

**நாகராதி,** சுக்கு நாகரம், which see.

**நாகராதித் தைலம்,** சுக்குத்தைலம், அதாவது சுக்குடன் மற்றக் கடைச் சரக்குகளும் சேர்த்துக் காய்ச்சிய தைலம், oil prepared with dry ginger as chief ingredient.

**நாகரி,** குருக்கத்தி, Hiptage madablota; 2. தவசி முருங்கை, see நாகரிசம்.

**நாகரிசம்,** தவசிமுருங்கை, Tranquebar gendarussu — Justicia tranquebarensis.

**நாகரிபு,** கருடன், brahmini kite.

**நாகரீகசெம்பு,** தண்டு, ஆண்குறி, penis — Membrum virile.

**நாகருகம்,** தேன்றோடை, a kind of sweet orange.

**நாகருடப்பூடு,** கீரிப்பூண்டு, mungoose plant — Ophiorrhiza mungoos.

**நாகரேணு,** செவ்வியம், root of black pepper plant 2. மிளகு, black pepper — Pipper nigrum.

**நாகரேணுவம்,** See நாகரேணு.

**நாகரை,** கறிப்புடோல், அதாவது புடலங்காய் snake gourd — Trichosanthus anquina 2. நாகரவண்டு, which see.

**நாகரொட்டியெலும்பு,** மார்பெலும்பு, chest-bone —Starnum.

**நாகலதை,** ஆண்குறி, male genital — Penis.

**நாகலிங்கம்,** ஆவுடையார் மரம், இது ஓர் உயர்ந்த மரம், சிவப்பு வாசனையுள்ள பூ, இப்பூவின் மத்தியில் இலிங்கத்தைப் போன்ற முளையும், நாகப்படத்தைப் போல் இதழுமுள்ளது, இது ஆவுடையாரைப் போலிருப்பதாலிப் பெயர், இது சூரியன் சாயுங் காலத்து இலிங்கத்தைச் சுற்றியுள்ள பாகம் நாகப்படத்தை ஒத்த மேலிதழோடு பிரிந்து விழுந்துவிடும், canon ball tree — Couroupita ginanensis. It is a tall big tree, flowers dark red and fragrant. In the centre of this flower will be found a protruberance just like the shape of 'Avudaiyar' — the phallic emblem of Siva representing the male and the female organ. After sun set this portion will be found separated from the rest of the flower portion and dropped on the ground.

**நாகல்,** நாவல், which see.

**நாகவங்கம்,** நாகவங்கமணல், an ore consisting of lead and zinc or more correctly zinc blende and galena; 2. வங்கமணல், sand mixed with lead graphite.

**நாகவம்,** திருகுகள்ளி, tursted spurge — Euphorbia tortilis; 2. பாம்புகரணம், union of two snakes.

**நாகவல்லரி,** வெற்றிலை, betel leaf.

**நாகவல்லி,** வெற்றிலைக் கொடி, betel vine; 2. நாகவல்லியிலை, betel leaf; 3. ஒரிதழ்த் தாமரை, one petal lotus; 4. பாம்புக்கொடி, snake creeper — Bacchinia anguina; 5. கீரிபுரண்டான், mungoose plant — Ophiorrhizo mungos.

**நாகவல்லித்தழை,** நாகவல்லிச்செடியின் இலைகள், leaves of நாகவல்லி, which see.

**நாகவள்ளி,** ஓர்வகை வள்ளிக்கிழங்கு, a kind of sweet potato.

**நாகவள்ளித்தளம்,** வெற்றிலை, betel leaf.

**நாகவாடை,** துத்தநாகப் பிடிப்பு, a disease due to exposure to zinc fumes; 2. செம்பூறல், verdigris.

**நாகவாதி,** நாகத்தைக் கட்டியாடும் வாதி, an alchemist handling consolidated zinc; 2. பாம்பு பிடாரன், snake charmer.

**நாகவாரிகம்,** மயில், peacock; 2. கருடன், brahminikite.

**நாகவாயு,** நாகன், தசவாயுக்களி லொன்று, one of the ten vital airs in the human body supposed to assist in extending and contracting the body and in speaking.

**நாகவாலெலும்பு,** மார்பு எலும்பு, breast bone — Sternum. Title probably from its resemblance to cobra tail.

**நாகவி,** வெட்டிவேர், Khuskhus root — Andropogn muricatus.

**நாகவிஷபாகம்,** துத்தநாகத்தினுல் ஏற்பட்ட விஷம், zinc poisoning.

**நாகவிஷம்,** துத்தநாகக் களிம்பு, verdigris of zinc; 2. நாகப்பாம்பின் விஷம, cobra poisoning; 3. துத்தநாகம் சேர்ந்த மருந்தினுலேற்பட்ட விஷபாக நோய், chronic zinc poisoning due to medicines consisting of zinc compounds as ingriedients — Zincalism

**நாகவுப்பு,** துத்தநாகவுப்பு, zinc salt.

**நாகவெள்ளி,** வாதத்திலும் சிவபூசையிலும் உபயோகிக்கும் ஓர்வித வெள்ளி, an alloy of zinc and copper used in alchemy and the worship of Siva.

**நாகவெள்ளை,** நாகபற்பம், an Indian preparation of zinc oxide prescribed for gonorrhoea, see நாகபற்பம்.

**நாகவேதம்,** மருது, winged myrobalan — Termenalia tomentosa.

**நாகனழைத்தான்வேர்.**

**நாகனவல்லி,** வெற்றிலை, betel leaf.

**நாகனுதி,** தேட்கொடுக்கி, scorpion sting plant — Heliotropium indicum.

**நாகனுய்,** இலைக்கள்ளி, leaf spurge — leafy milk hedge — Euphorbia nerifolia.

**நாகனி,** திருகுகள்ளி, tursted milk hedge — Euphorbia tortilis

**நாகன்,** நாகவாயு, கொட்டாவி, விக்கல், வாந்தி முதலிய குணங்களையும் இலிங்கத்தின் எழுச்சியையு முண்டாக்கும். See நாகவாயு, one of the ten vital airs in the human system which is said to be responsible to cause yawning, hiccups, vomitting and erection of penis.

**நாகன்சண்பகம்,** நாகேசுரம், which see.

**நாகாகுயம்,** சிறுநாகப்பூ, Ceylon iron wood — Mesua ferrea.

**நாகாங்கம்,** ஆடாதோடை, Malabar winter cherry — Adadhota vesica.

**நாகாசம்,** அசோகு, asoka tree — Uvaria longifolia.

**நாகாசனன்,** கருடன், brahmini kite; 2. கருடன் கிழங்கு, sky root — Bryonia epigaea.

**நாகாசி,** காய்ப்பாகல், spiked bitter cucumber — Momordica charantia.

**நாகாஞ்சனம்,** துத்தம், white vitriol.

**நாகாதோரம்,** கருப்பத்தி லேற்படும் பிண்ட அழிவு, a kind of decay of the foetus in the womb, See நாகோதர கர்ப்பம்.

**நாகாந்தகன்,** see நாகாராதி.

**நாகாமஸ்தா,** ஓர்வகைக் கோரை, a species of cyperus grass.

**நாகாராதி,**
**நாகாரி,** } கருடன், brahmini kite.

**நாகிதசரம்,**
**நாகிதம்,** }

**நாகியந்தம்,** பால், milk.

**நாகினி,** வஞ்சிக்கொடி, common rattan of S. India — Calamus rotang; 2. வெற்றிலை betel leaf.

**நாகினிப்பாலை,** வெட்பாலை, oleander rose-bay — Wrightia tinctoria.

**நாகு,** இளமரம், tender tree; 2. சங்கு, conch; 3. நத்தை snail; 4 பசி, hunger; 5. மீன், fish; 6. பெண் எருமை, she buffalo; 7. சங்கஞ்செடி, smooth volkameria — Cleodendron incrame; 8. பெண் மீன், female fish; 9. கடல்நத்தை, sea snail.

**நாகுதாளிலை,** See நாகுதாளிலை.

**நாகுராசிகம்,** சீயக்காய், soap pod — Acacia concianna.

**நாகுருவேர்,** உஷாமூலம், dhobies earth soil.

**நாகுலி,** அரத்தை, galangal — Alpinia galanga; 2. கீரிபுரண்டான், mungoose snake root — Ophiorrhiza mungoos; 3. செவ்வியம், root of black — pepper creeper — Piper nigrum; 4. பேரரத்தை, greater galangal.

**நாகுலி,** ஒருவகை அரத்தை, said to be a a variety of galangal or Rasna — Vanda Roxburghii which is substituted for it.

**நாகுலிகம்,** சுக்கு, dried ginger — Zingiber officinali.

**நாகுளறல்,** பேச்சுத்தடுமாறல் stammering.

**நாகூர்ச்சல்லி,** செம்பைப் பற்பமாகச் செய்ய வேண்டியதற்கு இச்சல்லி உபயோகப்படும், இது பழைய செம்பு நாணயம், ஆதலால் கூடிய வரையில் சுத்த செம்பு என்று கருதப்படும், an old copper coin made of pure copper; so fit for making medicine.

**நாகூலகி,** சிறுகாஞ்சொறி, climbing nettle — Tragia involucrata alias T. cannabina.

**நாகேசரம்,** See நாகேசுரப்பூ.

**நாகேசர்,** யூனானி வைத்தியத்தில் நீரடைப்பு, மலச்சிக்கல் இவைகளைப் போக்க உபயோகப்படும் மருந்துப்பூடு. (In Unani medicine) a drug used for curing stranguary constipation etc; 2. சிறுநாகப்பூ, see நாகேசுரப்பூ; 3. சுரபுன்னை, soorapoon — Ochrocarpus longifolius.

**நாகேசுரப்பூ,** சிறு நாகப்பூ, இதற்கு நாகாசிப்பூ அல்லது நாகப்பூ என்றும் பெயர், இது மலையாளம், தென்கன்னடம் முதலிய மேல் சமுத்திரக் கரையோரங்களிலும் உற்பத்தியாகும், இம்மரம் 40 உயரம், பூக்கள் பெரியன, வெண்ணிறம், வாசனையுள்ளது, பழம் கிச்சிலிஅளவிருக்கும், இதன் வாசனைக்காகவே வீடுகளில் இதைப் பயிரிவார்கள், உலர்ந்த பூவை சந்தன முதலிய வாசனைச் சாமான்களுடன் சேர்ப்பதுண்டு, காய்சிவப்பு பழுத்தால் சுருக்க மடையும், உலர்ந்த பூவை, வாசனையைக் கருதிக் கடைகளில் விற்பார்கள், இதன் வேருடன் இஞ்சியை அரைத்து உள்ளுக்குக் கொடுக்க வியர்வை உண்டாகும், இது உஷ்ணத்தையும் பசியையும் கொடுக்கக் கூடியது, இதைக் கஷாயமிட்டுச் செரியாமை, மூலரோகம், பலக்குறைவு, பசியின்மை முதலிய நோய்களுக் கொடுக்கக் குணமாகும், இதைச்சாறு பிழிந்து கருப்பிணிகளுக் குண்டாகும் நீர்க்கட்டுக்கு உபயோகிப்பதுண்டு, ஆண் தறியில் விழும் வெள்ளை, காசரோகம் இவை விலகும், இதன் தனிச் சூரணத்தில் தேன் அல்லது சர்க்கரை கலந்து குழைத்துக் கொடுக்க வயிற்றுவாயு, நீரடைப்பு, பெண்கள் உதிரச் சிக்கல் போம், சதாப்பிலையுடன் கலந்து அரைத்துக் கொடுக்க முறை சுரம் போம், தனிச் சூரணத்தை வெண்ணெய் அல்லது சர்க்கரையில் கொடுக்க சீதரத்தபேதி; இரத்தமூலம், பெரும்பாடு, பெண்களுக்குக் காணும் வெள்ளை இவைகள் குணமாகும், இதன் இலைகளைப் பாலில் கொதிக்க வைத்து நீர்த் தோஷத்திற்காகத் தலையில் வைத்துக் கட்டலாம், இலைகளைக் கஷாயமிட்டு உள்ளுக்குக் கொடுக்க கோழை, இருமல் நீங்கும், காய்பிஞ்சிலிருந்து எண்ணெய் எடுத்து மேலுக்குப் பூச, கைகால் குடைச்சல், வாதப்பிடிப்பு இவைகள் குணமாகும், இதன் பட்டைவேர் இவைகளைக் கஷாய மிட்டுக் கொடுக்க பலவிருத்தி யுண்டாகும், serpent Champak — Mesua ferrea. It is also known as iron wood of Ceylon and cobra flower. It mostly cultivated in Malabar, South Canara and along the west coast. In the east along

Coromandal coast. The tree is 40 ft high, flowers large, white and fragrant fruit about the size of a small orange. It is mostly cultivated in houses and temples owing to its sweet fragrance. Dried flowers are mixed with other aromatics such as sandal etc and used as a perfume. The fruit is red and wrinkled when ripe, dried flowers are sold in bazaars being much esteemed for their fragrance. The root rubbed up with fresh ginger is given internally as a sodorific and also both internally and externally in snake bites. It is a stimulant and stomachic. Decoction of flowers is prescribed for indigestion, piles debility loss of appetite, suppression of urine occuring in pregnant woman and also for gonorrhoea and asthma in males. Powdered flowers mixed with honey or sugar from an excellant remedy in cases of wind in the stomach, stranguary and dysmenorrhoea; mixed with the pulverised leaves of Ruta graveolens is given for inter mittent fever, mixed with butter or sugar it is given with advantage for dysentery, hemorroides, menorrhagaea and leucorrhoea. Apoultice is made from the leaves boiled in milk and in applied the catarrh, a decoction of them is given in cases of phlegm and cough. An oil extracted from the young fruits is applied externally for rheumatism and pain in the limbs Decoction of root and bark is a good remedy as a tonic.

**நாகேசுரம்,** see நாகேசுரப் பூ.

**நாகேசுவரம்,** நாகபற்பம், இளங்கம், மனோசிலை, கந்தகம் ஆகிய இவைகளை ஒன்றாய்ச் சேர்த்து பழச்சாற்றால் அரைத்து ஆயுள் வேத முறைப்படி புடமிட்டெடுத்தஓர்வகைப் பற்பம், இதை தாதுவிருத்திக்காக உபயோகப் படுத்துவதுண்டு, a calcined powder prepared as per process of Ayurveda grinding flower zinc, vermilion, red arsenic or realgar, and sulphur with the juice of lime fruit. It is given for increasing the vitality.

**நாகேசுவரரசம்,** சுத்தி செய்த ரசபற்பம், நாகபஸ்பம் இவைகளோடு தாம்பிர பஸ்பம் சங்கு பஸ்பத்தைச் சேர்த்து எருக்கின் இலைச் சாற்றாலரைத்து ஆயுள் வேத முறைப்படி புடமிட்டெடுத்து சயம், சோகை, மூலம், கிராணி சுரம், குன்மம் முதலியவைகளுக்கு கொடுக்கு மருந்து, an Ayurvedic preparation given for curing consumption, anaemia, piles, diarrhoea fever etc. It is prepared according to the text by grinding and calcining the calcined powders of mercury zinc, copper, and conch with the juice of the leaves of madar.

**நாகேந்திரன்,** சார்வலை, shaurvalai Trianthema decandra.

**நாகை,** வெற்றிலைக்கொடி, betel vine; 2. ஓர் வகை நாவல், tail leaved black plum—Eugenia rostrata; 3. நாவல் common black plum — Eugenia Jambolina, 4. சிறுநாவல் small jaumoon — Eugenia arnottima; 5, வெள்ளை நாகை — Anogeissus latifolia.

**நாகைமேல்,** வெண்கலம், bronze an alloy of zinc copper and tin.

**நாகோதரகருப்பம்,** (நாக+உதர+கருப்பம்) சையோகத்தினால் உண்டான சுக்கில சுரோணிதம் பெண்கள் கருப்பையில் விழ, கருப்பை வாயுவினால் சரிவர கரு முதிராமல் பெண் சிலநாள் கருப்பிணியாயிருந்து பிறகு அல்குலின் வழியாய் ஓயாமல் இரத்தம் வடிந்து கடைசியாக மறைந்துவிடும் ஓர் வகைத் தோஷநோய், இத்தகைய நூலுக்குக் காரணமான வஸ்துக்கள் கருப்பையில் தங்கிநிற்கும் பொய்க் கற்பத்திற்கே நாகோதரம் என்று பெயர், இதை சிலர் அறியாமல் கிரகசேட்டை என்று சொல்வதுண்டு, false or ampullar pregnancy. A combination of ovum and semen arising from sexual intercourse may not give rise to a successful fecundation due to deranged vayu in the womb, but leads to the distension of the abdomen as in pregnancy which again at any time may disappear of itself Such impregnated matter sometimes lying concealed in the uterus is known as Nagodara. This ascribed by the ignorant to the influence of malignant spirits or stars.

NOTE :— by C. D. This, in my opinion, is tubal pregnancy i. e. pregnancy development of the ovum in the fallopian or uterine tubes giving rise to the commonest variety of ectopic gestation. In such cases though amnion and chorion are formed true decidua is never present, the gestation usually ends by extrusion of the ovum through the obdominal opening. It is not uncommon for the tube to rupture into the peritoneal cavity, giving rise to severe haemorrhage and necessitating surgical interference.

**நாகோதரம்**, கருப்பையில் உண்டாகும் கருவின் கேடு, tubal abortion occuring in the oviduct; 2. கருப்பம் விருத்தியடையாது மெலிந்து நடமாட்டமின்றி வயிற்றில் தங்கி விடுதல், abortion of the ovum in the tubal pregnancy into the abdomen where it gets absorbed slowly; 3. *பாம்புவயிறு*, belly not bulging out - Flat belly.

**நாக்கசப்பு**, பித்தாதிக்கத்தினால் ஏற்படும் வாய்கசப்பு, bitterness of taste experienced when the bile is excited.

**நாக்கடு**, நாக்கின் பின்புறத்தின்மேற் காணப்படும் முள் போன்ற சிறுசிறு முளை, small elevations found on the back (upper) surface of the tongue — Fusiform papilla.

**நாக்கடுகு**, see நாய்க்கடுகு.

**நாக்கடைப்புரட்டி**, see நாகபாஷாணம்.

**நாகட்சரம்**, நாக்கில் காணும் சிறுசிறு கொப்புளங்கள், ulceration of the tongue — Ulcerative stomatitis.

**நாக்கப்பாம்பு**, நாக்குப்பூச்சி, round worms in the intestines —Ascaris; 2. மண்புழு earth worm.

**நாக்கப்பூச்சி**, நாக்கப்பாம்பு, which see.

**நாக்கரளை**, நாவில் கரளையைப்போற் காணுமோர் நோய் an epithelial tumour of the tongue — Perhaps pappilloma.

**நாக்கரிக்கிரந்தி**, கிரந்தியினால் நாக்கிலெழும்பும் சிறுசிறு கொப்புளங்கள் நாளாவட்டத்தில் நாக்கை அரிக்கும். ulceration of the tongue due to syphilitic causes. It is followed by cutaneous lesions and necrosis.

**நாக்கரிப்பு**, (நாக்கு+அரிப்பு) நாக்கு அரித்தல், see நாக்கரிக்கிரந்தி; 2. (நா+கரிப்பு) வாதாதிக்கத்தினால் நாக்கில் உப்புக்கரித்தல் saline taste in the mouth when the wind is excited in the system.

**நாக்கழற்சி**, நாக்கு வெந்துகாணல், inflammation of the tongue — Glossitis.

**நாக்காளப்பூச்சி**, see நாகப்பூச்சி.

**நாக்களின்கற்பம்**, காக்கை, கரிச்சான், செந்தலைக்கருடன், கழுகு ஆகிய இவைகளின் நாக்குகளை வாங்கி எடுத்துலர்த்தி வஸ்திரகாயம் செய்து ஒரு மாவிடை மண்டலம் தேனிற் கொள்ள உடம்பை வச்சிரகாயத்தைப் போற் செய்யும், இது சித்தருண்ணும் கற்பவகைகள் 108 ல் ஒன்று, a rejuvenating powder prepared by drying and then pounding the tongues of crow, black bird, red brahmini kite and vulture. The fine powder is obtain by sifting it through fine muslin 1/20 Pw of this is taken with honey for 40 days the body will become very strong. This is one of the 108 kinds used by the Siddhars for rejuvenating the body.

**நாக்கறுத்தல்**, நாக்கை கத்தியாலறுத்தல், incision or excision of the tongue — Glossotomy.

**நாக்கறுத்தான்**, தர்ப்பைப்புல், இதன் இலை கூர்மையாக விருக்கும், ஆகவே இதின் மேலிருக்கும் தேனைப் பாம்புகள் ஆவலோடு கொள்வதற்காக வந்து நக்கும்போது நாக்கு அறுப்புண்டு போவதா லிப்பெயர் உண்டாயிற்றென கதையாகச் சொல்வதுண்டு, sacrificial grass or kusa grass — Erogrostis cynosurioides. The blades of this grass are generally sharp. It alludes to a legend that serpents which greedily lick the honey or amrita fallen on this grass get their tongue forked. Hence the name.

**நாக்கறுப்பு**, (நாக்கு + அறுப்பு) நாக்கையறுத்தல், cutting or incision of the tongue; 2. (நா + கறுப்பு) நாக்கில் உண்டாகும் கறுப்பு நிறம், இது சாதாரணமாக நாக்கில் ஏற்படும், கண்ணுக்கெட்டாப் பூச்சிகளினால் உண்டாகுமெனக் கருதப்படும், the dark colour of the tongue. It is a condition in which the dorsum (upper surface) of the tongue has a blackish discolouration due to the presence of microphites — black tongue — Glossophytia.

**நாக்கனிடும்கூர்மை**, கெந்தியுப்பு, அதாவது கெந்தியுடன் மற்றசரக்குகளைச் சேர்த்துச் செய்யும் ஓர் உப்பு, a prepared salt from sulphur mixed with other ingredients.

**நாக்காம்பூச்சி**, See நாக்குப்பூச்சி.

**நாக்கி**, அலம்புசா என்னும் ஓர்வகை நாடி, இதுவே அலம்புடை, இது தசநாடிகளிலொன்று, இது ஆசனவாய் தொட்டுக் காதுவரை பரவி நிற்கும், one of the ten tuberous vessels of the human body extending from the anal region to the level of the ears.

**நாக்கியாக்கிரம்**, கருஞ்சுண்டி என்னும் ஓர் முள் செடி, bipinnate sensitive tree — Mimosa rubicaulis.

**நாக்கிரந்தி**, நாக்கிலுண்டாகும் கிரந்திப்புண், இது நோய்கொண்ட பெண்களைப் புணருவதாலுண்டாகும், syphilitic ulcers formed on the surface of the tongue. It is chiefly due to veneral causes.

**நாக்கிலாம்பூச்சி**, see நாக்களாப்பூச்சி.

**நாக்கிழுப்பு**, நாக்குத் தடிப்பினால் ஏற்படும் நோய். இதற்கு கடுகு கஷாயத்தில் காடி அல்லது தேன் சேர்த்து வாய்க் கொப்புளிக்கப் போம், a disease of the tongue marked by the thickness of the tongue. By gorgling the decoction of mustard (black) mixed either with honey or vinegar, the disease will disappear.

**நாக்கு**, இது உடம்பில் ஓர் சிறந்த உறுப்பு. ஏனெனில் இது நமது உடம்பின் பாதுகாப்பிற்கும், போஷணைக்கும் இன்றியமையாதது. உணவுப் பொருள்களின் சுவையை அறிந்து உடம்பிற்குள் செலுத்துவதுமன்றி மனத்திற்கு களிப்பையும் உண்டாக்கும், உடம்பிற்கு உதவாத உணவுப்பொருள்களை விலக்கவும், எச்சுவையையும் நாக்கின் எப்பாகமும் உணரும்படி அதன் மேற்புறம் அமைக்கப் படவில்லை, ஆனால் நாக்கின் மேலுள்ள மூன்று தானங்கள் மட்டும்தான் சுவையை அறியக்கூடிய சக்தியுடையவை, ஒவ்வொன்று அதற்குரிய சக்தியினால் ஒவ்வொரு சுவையையும் அறியக்கூடும், நுனி பாகம் இனிப்பு, பின்புறம் கசப்பு சுவையை அறியலாம், நாக்கின் இருபுறமும் புளிப்பு சுவைகளை அறியும் சக்தியுண்டு, இனிப்பு, புளிப்பு சுவையறியும் பாகங்களுக்கு நடுவில் உப்பு சுவையறியும் பாகமுள்ளது, நாக்கின் கீழ்ப்பாகம் வெண்ணெய் கொழுப்புப் பண்டங்களின் சுவையையும், பொதுவாக நாக்கின்மேற் பரடை அடைந்தால் தான் ருசி ஏற்படும், tongue is a muscular organ of speech and taste. It is an important organ of the body for the reason that it acts as an agent subserving the special sense of taste and assisting to thrust the food down below into the gullet and as such it plays an important role in the protection and upkeep of the body.

The tongue is made up of three elements — epithelium, muscles and glands. Two types of special structures — Papillae and taste buds are seen on it. Taste buds are the end organs of taste. Sweet taste is felt at the tip, salt on the dorsum arteriorly, sour at the sides and bitter at the back of the tongue. Mid — dorsum has got no taste sensation. One of the eight special examinations (அஷ்டஸ்தான பரிசை்ஷ) tongue is one. The eight are நாடி, நா, நிறம், சப்தம், பரிசம், கண், மலம், மூத்திரம், (by C. D.)

**நாக்குக்கறுத்தல்**, see நாக்கறுத்தல்.

**நாக்குக்குளறல்**, பேச்சுத்தடுமாறல், faltering; 2. நாவுக்குளறல், having tongue unable to move freely — tongue tacked or tongue tied.

**நாக்குச்சப்பல்**, நாக்கைச் சப்புக்கொட்டல், making a sharp noise with the tongue as is done by a child when sucking.

**நாக்குச்சாதல்**, நாக்கின் சுவை யுணர்ச்சி யறல், loss of sensation of taste in the tongue.

**நாக்குச்சூலை**, நாக்கில் உண்டாகும் ஓர் குத்தல் நோய், pricking or gouty pain of the tongue — Glossagra.

**நாக்குச்சொறசொறப்பு**, நாக்குமுள் பாய்தல், rough ness of the surface of the tongue, furrowed tongue.

**நாக்குட்டிநகசம்வேர்**, probably நாய்க்குட்டி மரம். which see.

**நாக்குண்ணரி**, நாக்கை தின்று கொண்டே போகும் ஓர்வித ரணநோய், cancer of the tongue.

**நாக்குத்தட்டல்**, நாக்கினால் ஒலியுண்டாக்கல், making a sharp sound with the tongue when tasting.

**நாக்குத்தம்பனம்**, நாக்கெழாமல் செய்தல், (In sorcery) arresting of the movements of the tongue and there by rendering one unable to talk; 2. நாக்கின்பலவீனம், pull of the tongue.

**நாக்குத்தடிப்பு**, நாக்குப் பருமன், இதற்கு மருதம்பட்டைக் கஷாயம், வாய் கொப்புளிக்கத்தீரும், tongue getting thick. This is cured by gorgling the decoction of the bark of Terminalia arjuna.

**நாக்குத்தவறு**, தவறிப் பேசுதல், slip of the tongue — Lapsus linquae.

**நாக்குத்தள்ளல்**, நோய் அல்லது வேறு காரணங்களைக் கொண்டு நாக்கு வெளியே தள்ளல், protrusion of the tongue from disease or other extraneous causes — Glossocele.

**நாக்குத்திமிர்**, நாக்கின் உணர்ச்சியறல், 'loss of sensation of the tongue — Glossoplegia.

**நாக்குத்துடிப்பு**

**நாக்குத்தேய்த்தல்**, நாக்குவழித்தல், cleaning of the tongue.

**நாக்குத்தொங்கல்,** நாக்கு வெளிக்காணும்படி கீழ்தள்ளல், paralytic protrusion of the tongue — Glossoptosis.

**நாக்குநீளம்,** உணவின் மேல் விருப்பம், craving for food.

**நாக்குநோய்,** இது 6 வகை, disease of the tongue. It is of six varieties.

**நாக்குப்பிடிப்பு,** நாக்கின் அடிப்புறம் ஏற்படும் சதைப்பிடிப்பு, a defect at the inferior surface of the tongue — Tongue tied.

**நாக்குப்பிரளாமை,** நாக்கைப் புரட்ட முடியாமை, limitation of the movement of tongue — Tongue tie.

**நாக்குப்பிளவை,** நாக்கில் தோன்றும் கட்டி, carbuncle of the tongue — Glossanthrox.

**நாக்குப்புண்,** நாக்கில் உண்டாகும் விரணம், ulceration of the tongue, application of borax with honey is beneficial.

**நாக்குப்புற்று,** நாக்கில் கொப்புளங்களால் ஏற்படும் விரணம், sore characterised by fungoid granulations on the surface of the tongue.

**நாக்குப்பூச்சி,** நாக்கில் ஏற்படும் பூச்சிகள், micro organisms found on the surface of the tongue — Tongue worm — Linguatula; 2. குடற்புழு, இதில் 4 பேதங்களுண்டு, அவற்றுள் மூன்று குடலிற் காணப்படும், இது உடம்பின் சத்தினுல் உயிர் பிழைக்கும், ஆகவே, மனிதருக்கு வயிற்றுவலி, இழுப்பு, சோகை முதலிய நோய்களுக்கு இதுவே காரணமாகும், round worm in the intestines. There are four varieties and of these three are found in the intestines. They are parasitic in man and as such will produce several diseases as colic, anemia, convulsions etc. 3. மிருகங்களின் உறுப்புகளில் காணப்படும் பூச்சி, a genus of worm found in the organs of animals as monkeys, lions etc—Porocephalus. 4. see நாகப்பூச்சி.

**நாக்குப்பூர்த்தல்,** See நாக்குமா.

**நாக்குமம்,** சுக்கு, dry ginger.

**நாக்குமறுத்தல்,** நாக்கில் உணர்ச்சியில்லாமை, See நாக்குத்திமிர்.

**நாக்குமா,** நாக்கில் படரும் ஊத்தை, white layer on the surface of the tongue.

**நாக்குமாபடிதல்,** நாக்கின் மேல் மாவைப் போல் வெண்மையாகப் படரும் ஊத்தை, tongue covered with a whitish layer — Coated tongue.

NOTE :— Coated tongue indicates disease whether in adult or child.

**நாக்குமீன்,** எருமை நாக்குமீன் அல்லது கடல்நாக்கு மீன், இது பார்வைக்கு நாவைப் போல் மெல்லியதாகவும், தட்டையாகவு மிருந்ததால் இப்பெயர், India sole flat fish — Pleuronictus solea. It is a sea fish and is so called from its resemblance to the tongue which is flat and soft.

**நாக்குமுடிச்சு,** நாக்குப் பிடிப்பு, tongue tie — Ankyloglossia.

**நாக்குமுள்,** நோயினுல் நாக்கில் காணப்படும் முள்ளைப்போன்ற எழுச்சி, roughness of the tongue due to some diseases — Furred tongue, See களசுண்டி.

**நாக்குமூக்கு,** மூக்கிரட்டை, spreading hog weed — Bochaevia repens alias B. procumbens.

**நாக்குமூக்குசாதல்,** நோயினுல் நாக்கிலும், மூக்கிலும் உணர்ச்சியற்றுப் போதல், loss of sensation of taste and smell of the tongue and nose due to sickness.

**நாக்குமூக்குச்சுடல்,** சூட்டுக்கோலினுல் நாக்கையும் மூக்கையும் சுடுதல், இப்படிச் செய்வதினுல் உடம்பு சுத்தியாகும் என்ற பூர்வீகக் கொள்கை, இதற்குப் பிராய்ச் சித்தம் என்று சொல்வதுண்டு, branding the tongue and the nose which is considered by the ancients as a purification of the contaminated body of an out caste.

**நாக்குமூக்குநடுவெறுத்தான்,** மூக்கிரட்டை, see நாக்குமூக்கு.

**நாக்குரோதம்,** காட்டாமணக்கு, bronze leaved physic nut — Jatropha gossypifolia.

**நாக்குவரி,** நாக்குவெடிப்பு; caracked tongue, fissure of the tongue.

**நாக்குவலி,** நாக்கில் ஏற்படும் வலி, pain in the tongue — Glossalgia.

**நாக்குவழு,** நாக்கின் மேற்காணும் வளவளப்பு, white or yellow slimy matter deposited on the surface of the tongue.

**நாக்குலரல்,** நாக்குப்பசையறல், parchedness of the tongue.

**நாக்குவாங்கல்,** நாக்கையிழுத்து நீட்டல், stretching the tongue; 2. நாக்கையிழுத்தல், paralysis of the tongue.

**நாக்குவாதம்,** வாயுவினால் நாக்கெழாது பேச முடியாமை, when the excited vayu affects the nerves supplying the voice box and tongue paralysis of the tongue may occur rendering the patient unable to eat, drink or speak — Paralysis of tongue.

**நாக்குவிப்புருதி,** நாக்குண்ணி, cancer of the tongue; 2. நாக்கில் எழும்பும் கட்டி, abscess of the tongue.

**நாக்குவிரணம்,** நாக்கழற்சியாற் காணும் விரணம், inflammation of the tongue; 2. நாக்குப்புண், ulceration of the tongue; 3. நாக்கில்வரும் சிவப்புத் தழும்புகள், red patches on the tongue — Psoriasis linguae.

**நாக்குவிழல்,** நாக்குச்சோர்வடைதல், paralysis of the tongue—Glossolysis.

**நாக்குவீக்கம்,** நாக்கிலுண்டாகும் வீக்கம், swelling of the tongue — Glossoncus.

**நாக்குவெடிப்பு,** நாக்கின் சளி சவ்வுக்கு அழற்சி கண்டு வெடித்தல், see நாக்குவரி, fissure in the mucous membrane marked by white thickened patches — Leukoplakia.

**நாக்குழறல்,** நாக்குக் குழறுதல், aphasia with utterance of meaningless phrases.

**நாக்குழிஞ்சான்,** ஓர் செடி, a plant — Capparis maxima.

**நாக்குளிப்பாம்பு,** பூநாகம், இது பாம்பைப் போல் நீளமாய் இருக்கும், earth worm resembling a small snake; 2. குடற்புழு, long intestinal worm — Teresworm; 3. நாக்குள்ளிருக்கும் கண்ணுக் கெட்டாப் பூச்சி, micro organism of the tongue.

**நாக்குளிப்பூச்சி,** see நாக்குளிப்பாம்பு.

**நாக்குள்ளிழுத்தல்,** நாக்கு உள்ளுக்கு வாங்கல், retraction of the tongue — Glossocoma.

**நாக்கூறல்,** நாவில் தண்ணீர் கசிதல், salivation.

**நாக்கெடுத்தல்,** நாக்கை அறுத்து எடுத்து விடல், removing of the tongue — linguation.

**நாக்கெரிச்சல்,** குன்மநோயினால் நாக்கிற் காணும் எரிச்சல், burning sensation of the tongue as in cases of dyspepsia — Glossopyrosis.

**நாக்கேஸரி,** பொ.மருந்துப்பூடு, Indian birthwort — Aristolochia indica.

**நாக்கை,** see நாக்குளிப்பூச்சி.

**நாக்கைப் பிடுங்கல்,** சாதல், dying.

**நாக்கைப்புரட்டல்,** அடிநாக்கை அண்ணக் கிற்படும்படி மேலெழச் செய்தல், இது யோகாப்பியாசப் பழக்கம், turning the tongue upwards to reach the palate. This is one of the several postures adopted in yoga practice.

**நாக்கொட்டி,** நாக்கு எழாமல் அடிப்பக்கம் ஒட்டிக்கொள்ளல், adhesion on the tongue at the bottom — Ankylo glossia.

**நாக்கொட்டுதல்,** (நாக்கு+ஒட்டுதல்) நாக்கு வறளுகை. dryness or parchedness of the tongue.

**நாக்கொட்டுதல்,** (நா+கொட்டுதல்) உருசி மிகுதியால் நாக்கைத் தட்டுதல், sounding with the tongue from excessive taste.

**நாக்கொப்புளம்,** நாக்கில் புறப்படும் கொப்பளங்கள் இதற்கு மருதம்பட்டை வெள்ளைக் காசுக்கட்டி இரண்டையும் தூள் செய்து நாவில் கொஞ்சமாய்த் தெளித்து விட தீரும், ulceration of the tongue. Dusting of the mixture of powders of the bark of Terminalia arjuna and white catechu.

**நாங்கல்,** நாகசம்பங்கியின் ஓர் இனம், இதில் இரண்டுவிதம் உண்டு, 1. மண்ணை நாங்கல், 2. நீர் நாங்கள், a species of white champak. It consists of two kinds viz land borne and water borne plants — Mesua genus.

**நங்கில்மரம்,** சிறுநாங்கில், பெருநாங்கில் see நாங்கு.

**நாங்கு,** Ceylon ironwood — Mesua ferrea.

1. கருநாங்கு long pointed broad leaved ceylon iron wood — Mesua ferrea (typica).
2. தாடி நாங்கு the same as No. I.
3. மலை நாங்கு, large flowered Ceylon iron wood — Mesua ferrea (speciosa)
4. நீர்நாங்கு, same as No 3.
5. மண்ணை நாங்கு, narrow leaved Ceylon iron wood—Mesua ferrea coromandelina.

**நாங்குழு**, see நாங்கூழ்.

**நாங்கூழ்**, see நாக்குளிப்பாம்பு, 2. பெருங் குடலின் துவக்கத்தில் வெளிப்படத்தொங் கும் நாகப்புழுப் போன்ற சவ்வு, a worm shaped process of the coccum — Vermiform appendix.

**நாங்கூழ்கோளாறு**, நாங்கூழின் நோய், disease of the Vermiform appendix.

**நாசகாரி**, நோய்களைக் கண்டிக்கு மருந்து, an infalliable remedy.

**நாசகாரி வாயு**, nitrogen.

**நாசகேரளம்**, சிவதைவேர், India rhubarb; Indian jalap — Ipomaea turpethum.

**நாசப்பழக்கம்**, கெட்ட பழக்கம், pernicious habits.

**நாசம்**, அழிவு, destruction; 2. சாவு, death.

**நாசவக்கணை**, காகதும்புரு, kanjilals' mottled ebony — Diospyros kanjlali.

**நாசவாயு**, see நாசகாரி வாயு.

**நாசனம்**, see நாசம்.

**நாசனி**, அழிக்கக் கூடியது, anything capable of destructing.

**நாசாகிராவம்**, மூக்கிலொழுகும் இரத்த வொழுக்கு, bleeding from the nose — Epistaxic.

**நாசாக்கிரம்**, மூக்கு நுனி, tip of the nose.

**நாசாதக்கணம்**, வலது நாசி, right nostril.

**நாசாபாக்கரோகம்**, ஓர் மூக்கு நோய், a noss disease.

**நாசாபுடம்**, மூக்குத் துவாரம், nostril.

**நாசாரிசம்**, மூக்கில் வளரும் மாமிசம், polypus of the nose.

**நாசாவாமம்**, இடது மூக்கு; 2. மூக்கு, nose.

**நாசி**, மூக்கு, nose, 2. வஞ்சி, rattan of S. India — Calamus rotang; 3. மூக்குத் துவாரம், nostril.

**நாசிஉக்கிரமம்** மூக்கு நோய், disease of the nose.

**நாசி உதிரம்**, மூக்கில் இரத்தம் வடிதல், bleeding from the nose — Epistaxis.

**நாசி உயிர்**, சுக்கிலம், யோகாப்பியாசத் திற்கு இது முக்கியமான தாலிப் பெயர், இது வன்றி மூச்சடக்கமுடியாது, semen which is considered important for suppressing the breath in the yoga practice and hence the name.

**நாசிக சுரோத்தம்**, நாசித்துவாரம், nostril.

**நாசிகதமம்**, மூக்குச் சிந்தல், blowing the nose.

**நாசிகமலம்**, மூக்குப் பீ, nose dirt; 2. மூக்குச்சளி, mucous from the nose, snot.

**நாசிகாக்கிரம்**, see நாசாக்கிரம்.

**நாசிகாசர்ப்பம்**, பசுவின் மூக்கினின்று உற் பத்தியாகி வெளிவரும் எனச் சொல்லும் ஓர் வகைப்பாம்பு, a kind of snake said to take its birth in the cow, and came out from its nose.

**நாசிகாசிராவம்**, மூக்கினின்று அதிகமாய் நீர் வடியும் ஓர் வகைப் பீனசம், catarrh of the nose.

**நாசிகா சூரணம்**, நாசிவழியாக ஏற்றும் அல் லது இழுக்கும் மருந்துப் பொடி, a medicinal powder sniffed; 2. மூக்குத்தூள், snuff.

**நாசிகாபீடம்**, மூக்கிற்தள் சதை வளரும் நோய், polypus of the nose.

**நாசிகாபீடை**, மூக்கழுக்கு, rheum; 2. மூக்குச் சளி, mucous from the nose snot.

**நாசிகாமலம்**, see நாசிகமலம்.

**நாசிகாரோகம்**, பொதுவாக மூக்கில் வரும் நோய்கள், diseases in general of the nose.

**நாசிக்கனப்பு**, மூக்கில் வீக்கம், swelling of the nose.

**நாசிக்கிரந்தி**, மூக்கையரிக்கும் கிரந்தி, a kind of syphilitic ulcer eating away or otherwise affecting the nose.

**நாசிம்சவேதனை**, பாகல், bitter cucumber — Momordica charantia.

**நாசி சிந்தல்**, மூக்குச்சிந்தல், blowing the nose.

**நாசிச்சளி**, மூக்குச்சளி, mucous from the nose

**நாய்விட்டைக்கல்,** ஓர்வகை சுண்ணும்புக் கல், a kind of lime ston.

**நாய்விருட்சம்,** see சுணங்கன் விருட்சம்.

**நாய்விஷம்,** நாய்க்கடி விஷம், dog poison from bites of dog believed to be due to a micro organism which is as yet undiscovered.

**நாய்விஷக்கடி,** வெறிநாய்க்கடி, இது கடிப் பதிளுல் மனிதருக்குண்டாரும் சன்னிநோய், a disease communicated to man by bite of a mad dog, followed by catching of breath, tetanic spasms etc — Hydrophobia.

**நாய்விளா,** குட்டிவிளா, dog wood apple — Limonia acidi.

**நாய்விளாஞ்சு,** Dulbergia paniculata.

**நாய்வெள்ளை,** நாய்த்தைவேளை, See நாய் வேளை.

**நாய்வேம்பு,** சிறுவேம்பு, black neem, viscid wild indigo plant Indigofera viscosa.

**நாய்வேளை,** see நாய்வேம்பு.

**நாய்வேளை,** நாய்க்கடுகுச்செடி, இதற்குப் பெருவேளை என்றும் பெயர், செடி 2-3 அடி, பூக்கள் சிறியன, மஞ்சள் நிறம், வருஷந் தோறும் பூக்கும், காய் 2-3 அங்குல நீளம், இதற்குள் கருப்பு விதைகளுண்டு, இதுவே காய்க்கடுகு, இலைகள் காரவாசனை, இதன் வாசனை பெருங்காயத்தைப் போலிருக்கும், இதன் இலையை நசுக்கி வைத்துக்கட்ட கொப்புளம் உண்டாகும், இலைச்சாறு தலை வலி, சீதளசன்னி இவைகளுக்கு மேலுக்குப் பூசலாம், இலைகளை காடி எலுமிச்சைச் சாறு அல்லது வெந்நீரிட்டு அரைத்து வைத்துக் கட்டவுதவும், இலைச்சாறு காதில் பிழிய வுதவும், இதைக் கீரையாகச் சாப்பிடலாம், இதில் ஊதா நாய்வேளை என்றும் ஓர் இன முண்டு, இதன் விதையைப்பற்றி நாய்க் கடுகின்கீழ்ப் பார்க்கவும், dog mustard plant — Cleome viscosa. It is also known as large mustard or forest mustard. Small plant 2-3 ft high, flowers small, yellow, flowering nearly all the year, the plant has a powerful odour like black currents. Capsules 2 3 inches long contains dark brown or black seeds which are known as dog mustard. They taste like mustared. The plant smells like asafoetida, leaves have pungent odour, when palverised and applied to the surface of the body is found to blister the portion. Their juice is applied to head ache and apoplexy from cold. They are used externally as a poultice by bruising them with vinegar, or lime fruit juice or hot water, pure juice is used as ear drops. Fresh leaves are eaten as greens. There is another variety purple dog vailay or blue — Cleome chelidonii. For details of seeds, see நாய்க்கடுகு.

NOTE :— There are also other varieties I. Limonia acidissim ( Atlas ).

**நாரகம்,** கிச்சிலி, sweet orange — Aurantium nobilis; 2. காட்டுக்கொழுஞ்சி, wild lime — Atlantia racemosa.

**நாரக்கரந்தை,** நாட்டு முள்ளங்கி, பழைசுவ ரின் சந்துகளிலும் சுடுகாட்டிலும் விளையும், இதுவே சுவர் முள்ளங்கி, wall radish — Bluemia amrita, See சுவற்று முள்ளங்கி.

**நாரங்கசீகம்,** சித்தாமுட்டி, yellow stick mallow — Pavonia Zeylanica alias P. glechomifolia.

**நாரங்கபத்திரகம்,** மஞ்சள் காட்டுக் கிழங்கு Indian wild carrot, yellow carrot — Asparagus ascendens.

**நாரங்கம்,** கடாரநாரத்தை, bigaradi orange— Aurantium bigaradia; 2. கிச்சிலி, orange tree — Aurantium nobilis; 3. கொழுஞ்சி தேன் தொடை, country orange — Citrus aurantium (nobilis); 4. மிளகு பூண்டின் சாறு, the juice of pepper plant; 5. காட்டுக் கிழங்கு, carrot.

**நாரங்கி,** ஓர் வகைக் கிச்சிலி, mandarian orange; 2. சடைச்சி, which see.

**நாரங்குத்துவம்,** see நாரத்தை.

**நாரசிம்மரசம்,** சரகரால் சொல்லப்பட்ட புரான சுரத்தை ஓட்டும் ஓர் ஆயுள்வேத மருந்து, an Ayurvedic preparation prescribed for chronic fever named Narasunha rasam.

**நாரஞ்சி,** see நாரங்கி.

**நாரணவன்,** மாட்டு நோயில் ஒன்று, one of the cattle diseases.

**நாரணன் செடி,** விஷ்ணுகரந்தை, Vishnu's basil — Sphoeranthus hirtus.

**நாரணு,** நெட்டி, solah pith plant — Aeschynomene aspera.

**நாரத்தங்கச்சல்,** இளநாரத்தை, unriped bitter orange; 2. நாரத்தக்கச்சல் ஊறு காய், dried bitter orange pickle, see போசன கஸ்தூரி, இதனால் சீதளம், அரோசகம், வயிற்றுப்பொருமல் போம்; சுரநோயாளிக்கு ஊறுகாய்போட்டு உணவில் சேர்த்து புசிக்க உதவும், it is useful to remove the gas from the abdomen, nausea etc.

**நாரத்தந்தகரை,** பேயாவரை, wild cassia—Cassia occidentalis.

**நாரத்தந்தோல்,** நாரத்தம் பழத்தோல், peel of bitter orange — Aurantic cortex.

**நாரத்தம்,** see நாரத்தை; 2. சடாமாஞ்சில் Indian spikenard valerian root — Cyperus st-loniferus; 3. வசம்பு, sweet flag — Acorus calamus.

**நாரத்தம்பழம்,** நாரத்தையின்பழம், ripe fruit of bitter orange — Aurantium bigardia.

**நாரத்தம்புல்,** ஓர் வாசனைப்புல், a kind of scented grass, orange grass.

**நாரத்த வச்சிரவாணி,** முடிமாமிசம், the fleshy portion of a foetus head.

**நாரத்தை,** ஓர் கசப்பு நாரத்தை, இதன்தோல் பழம், விதை யெல்லாம் கசப்பாயிருக்கும்; இதில் அனேக சாதிகள் உண்டு, சில மருந்துக்கு மிகவும் உபயோகமானவை, இது சீதளத்தை உண்டுபண்ணும் குணமுடையது, வீடுகள் தோறும் ஊறுகாய் போட்டு சாப்பிடுவார்கள், பழத்தின் இரசத்தைச் சர்க்கரையில் சேர்த்து சர்பத் மாதிரி செய்து கொள்ள காய்ச்சல், பித்தாதிக்கம், தாகம், வாந்தி முதலிய நோய்கள் போம்; மேற்படி இரசத்தை தண்ணீரில் கலந்துசாப்பிட எரிச்சல்போம், இரைப்பைக்கு பலத்தைக்கொடுக்கும் சிறு நீரைத் தாராளமாக இறங்கச் செய்யும், சாராயத்தின் வெறியை முறிக்கும், இரத்தத்தின் கொதிப்பை அகற்றும், இதன் கொட்டையின் பருப்பைத் தின்ன பாம்பு விஷம் இறங்கும், 1. கடார நாரத்தை. 2. கொடி நாரத்தை, 3. காட்டு நாரத்தை, 4. மலை நாரத்தை, 5. நெத்து நாரத்தை, 6. கருநாரத்தை, 7. சாதி நாரத்தை, 8. கொழுஞ்சி நாரத்தை, 9. கிச்சிலி நாரத்தை 10. சர்க்கரை நாரத்தை, 11. கசப்பு நாரத்தை, Mandarin orange, bitter orange, Aurantium bigardia, the fruit, the seed taste bitter. There are different varieties and some of them are much useful in medicine. It is cooling to the system. It is mostly used as pickles. The juice of the ripe fruit mixed with sugar and used as (sherbat) syrup, it proves efficacious in fevers, biliousness, thirst, vomitting, mixed with simple water removes the burning sensation in the stomache. It is also stomachic and diuretic. It removes intoxication from liquor, allays heat in the circulatory system. The kernel of the seeds is said to have to some effect on snake bite and to decrease the man power.

**நாரப்புண்,** நாற்றப்புண், foul sore or ulcer. 2. நரம்புப்பல், swelling of the nerves.

**நாரப்பூண்டு,**

**நாரம்,** see நாரத்தை; 2. பாசி, moss; நீர்வாழ்புள், water bird; 4. பசுங்கன்று, cow calf, 5. ஆன்மா, the soul.

**நாரயணம்,** அரத்தை, galangal — Alpinia galanga.

**நாரல்,** cherry black plum — Eugenia opereulata

**நாரவசி,** மனோசிலை, red arsenic — Arsenicum rubrum.

**நாரகுண்டம்,** பால், milk.

**நாராசகர்,** ஓர் விஷப்பிசின், a poisonous gum.

**நாராசம்,** ஓர்வித மருந்து, a particular medicament; 2. சலாகை, probe.

**நாராயணக்கீரை,** செம்புளிச்சைக் கீரை, red sorrel — Hibiscus gossypi folius.

**நாராயணதைலம்,** ஆயுள்வேத முறைப்படி தயாரித்த தைலம், an oil prepared as per process mentioned in Ayurveda.

**நாராயணமண்டூரம்**, ஆயுள்வேத முறைப்படி இரும்புக் கிட்டத்தினின்று தயாரித்த ஓர் வகை செந்தூரம், a calcined red oxide of iron dross prepared according to the process in Ayurveda.

**நாராயணம்**, அரசமரம், peepul tree — Ficus religiosa; 2. மீன், fish; 3. ஓர் உபநிஷதம், one of the 32 kinds of upanishads; 4. அனேக மூலிகைகளைக் கொண்டு தயாரித்த தைலம், a medicinal oil prepared by utilising many herbs.

**நாராயணரசம்**, சன்னிபாதமுதல் எல்லாவித சுரத்திற்காக அசுவினி தேவர்களால் கூறப்பட்டுள்ள ஓர் ஆயுள்வேத மருந்துக் குளிகை, an Ayurvedic preparation given for all fevers. It is said that the prescription was given by Aswini devars.

**நாராயணன்**, ஓர்வகை நாரை, a kind of stork.

**நாராயணன்சூலி**, மஞ்சட் செம்முள்ளி, lesser yellow naildye — Barleria cuspida.

**நாராயணன்பூடு**, சவரிக் கொடி, palmated gourd—Trichosanthes palmata.

**நாராயணி**, தண்ணீர் விட்டான் கிழங்கு, water root — Asparagus racemosus alias A. sarmentosus; 2. அரசமரம், peepul tree — Ficus religiosa.

**நாராயணிச்சதம்**, நாரை, crane.

**நாராயணிதம்**, கௌரிபாஷாணம், a kind of prepared arsenic.

**நாராயணீயம்**, கருவங்கம், black lead, graphite.

**நாரி**, நங்கை, a young woman; 2. தேன், honey; 3. வீாசனை, fragrance; 4. கள், toddy; 5. நன்னாரி, Indian sarsaparilla; 6. பன்னாடை, the web or net work of fibres about the bottom of a palmyra or cocoanut tree; 7. தாளகம், orpiment; 8. இடுப்பு, hip.

**நாரிகாமணக்கு**, சிற்றாமணக்கு, small seeded castor plant — Ricinus communis.

**நாரிகேரம்**, see நாரிகேளம்.

**நாரிகேளம்**, தென்னைமரம், cocoanut tree — Cocos nucifera; 2. ஓர் ஆயுள்வேத மருந்து, a particular medicament in Ayurveda; 3. இளநீர், tender cocoanut water; 4. பாலினின்று இறக்கிய ஓர் புளித்தகாடி, a fermented liquor made from the milk.

**நாரிகேளாஞ்சனம்**, தேங்காயினின்று தயாரிக்கும் ஓர் ஆயுள்வேத மருந்து, மரமஞ்சள் கடுக்காய், தான்றி, நெல்லி வற்றல், அதிமதுரம் சமன் சேர்த்து படிதேங்காய்த் தண்ணீரிலிட்டு எட்டிலொன்றாய்க் காய்ச்சி, மறுபடியும் சிறுதீயில் ஆழாக்காகும்படி காய்ச்சி அதில் பச்சைக் கற்பூரம், இந்துப்பு, தேன் விட்டரைத்துப் போடுங் கலிக்கம், இதனால் சகல கண்ரோகம் போம், an Ayurvedi collyrium prepared with many ingredients and cocoanut water and used for all eye diseases.

**நாரிகேளி**, தென்னை, see நாரிகேளம்.

**நாரிக்கரு**, பெண்களின் சினைப்பை, இதனால் தான் கருப்பம் ஏற்படும், the female reproductive cell which develops after impregnation — Ovum; 2. முப்பு, mystic salt ( in Alchemy ).

**நாரிக்குத்து**, இடுப்புவலி, இது பிரசவ காலத்திலேற்படும், hip pain which induces or facilitates child birth, labour pain.

**நாரிசண்டன்**, பெண்ணலி, fememale hermaphrodite c. f. நரசண்டன்.

**நாரிசி**, பேய்த்துவரை, a kind of bitter dholl.

**நாரிசுரம்**, மாதவிடாய்ப் பெண்களோடு சம்போகிப்பதனா லேற்படும் ஓர்வகைச் சுரம், இதற்கு சுகசன்னி யென்னும் பெயர், a kind of fever with characteristic features of an apoplexy due to sexual intercourse with a woman during her menstrual period.

**நாரிசுக்கிலம்**, புணருங் காலத்துப் பெண்களுக்கு யோனி வழியாய் வழியும் நாதம், ovarian discharge in female during sexual intercourse.

**நாரிச்சுண்ணம்**, முப்பு, see நாரிக்கரு,

**நாரிட்டம்**, சடராக்கினி, fire of digestion, gastric fire; 2. சுவாசக் காற்று, the wind of birth; 3. மல்லிகை, Arabian jasmine.

**நாரிண்டு**, நுரையிண்டு, அதாவது ஓர்வகை இண்டஞ்செடி, a kind of plant of the mimosa genus.

**நாரிப்பால்**, முலைப்பால், woman's breast milk,

**நாரிப்பிடிப்பு,** இடுப்புப் பிடிப்பு, catch in the hip.

**நாரிமருந்து,** see நாரிசுக்கிலம்,

**நாமின்னுள்கரு,** see நாரிக்கரு.

**நாரிமூலம்,** நன்னாரிவேர், root of Indian sarsaparilla.

**நாரியங்கம்,** பெண்ணின் உடம்பு, female body, 2. பெண்குறி, the genital of a female; 3. தேன்னேடை, which see.

**நாரியதாபம்,** பருந்து, kite.

**நாரியர்பால்,** see நாரிபால்.

**நாரிரோகம்,** பொதுவாக பெண்களுக்கு ஏற்படும் நோய்கள், diseases in common of a female, diseases peculiar to women.

**நாரிவலி,** see நாரிக்குத்து.

**நாரிவல்லபம்,** ஞாழல், which see.

**நாரிவிரசு,** see நாய் நறுவிலி,

**நாரிவெருட்டி,** புலிநகக்கொன்றை, a species of cassia tree with branches and petioles, armed with recurved prickles like tiger's claws — Caesalpinia ligulata; 2. நன்னாரி வேர், root of Indian sarsaparilla.

**நாரிவேர்,** சென்னநாரி, which see.

**நாரீசம்,** பிண்ணாக்குச் செடி, pat fibre —Cor chorus capsularis.

**நாருடும்பை,** ஓர் வகை உடும்பைமரம், sage leaved Indian linden tree—Gravia salvifolia

**நாருபுன்னம்,** சொற்பனம், dream.

**நாரை,** கொக்கைப் போன்ற ஓர் நீர்வாழ் பறவை, இது மீன்களைத் தின்று வளரும், இப்பட்சியைச் சுட்டுத் தின்பதுண்டு, இது அடியிற்கண்டபடி பலவகைப்படும், crane, heron, It is classified under ibis genus. It lives on fish and serves as human food. There are several varieties viz:—

1. கரு நாரை, black heron or ibis — Germticus papullasis.
2. பெரு நாரை, large heron or ibis — Gragulus carbo.
3. செங்கால் நாரை, felicon ibis — Tantalus gangeticus.
4. வெள்ளை நாரை, white heron or ibis — Ibis macci.
5. நத்தைகுத்தி நாரை, Shell ibis — Anastomas osciteus.
6. நெடலை நாரை,
7. சாம்பான் நாரை, pariah heron — Herodias alba.
8. அகத்திப்பூ நாரை, crested heron.
9. கொய்யடி நாரை,
10. குருட்டு நாரை, blind heron — Ardeola leucopetra.
11. கரண்டி மூக்கு நாரை, spoon bill ibis — Platalea leucorodia.
12. கருமூக்கு நாரை, black bill heron— Herodias garzetta.
13. சிறு நாரை, small cormorant — Graculus javanica.

**நாரை,** நாரைப்புள் பொது, stork, crane in common — Ardea niveda; 2. ஓர் விதப் பசு, a kind of cow.

**நாரைப்பசு,** ஓர் பசு, a kind of cow.

**நாரைப்பசும்பால்,** நாரை என்னும் ஓர்வகைச் சாதி பசுவின் பால், the milk of a species of cow known as ' Narai '.

**நாரைப்பதி,**

**நாரைமூலி,** see நற்கள்ளி and அழுகண்ணி, இது ஒரு பூடு.

NOTE: due to research by R. Kumarasami M. A. it is identified as a carnivoras plant— Drosera peltata.

**நாரொடுப்பை,** நார்+ஒடுப்பை, ஒடுப்பை= ஒடுவை.

**நார்,** நாரிழை, fibres of any sort; 2. கல் நார், Indian asbestos; 3. நாற்றம், stink offensive smell; 4. மேற்றோல், rind; 5. அழுகல், decay, rotteness; 6. தூக்கம், (பரிபாஷை) sleep; 7. நார்க்கயறு, string, rope.

**நார்,** சாதாரணமாய் தாவரம், தாது முதலிய வஸ்துக்களினின்று மயிரிழையைப்போலும் நூலைப்போலும், பிரித்தெடுக்கும் வஸ்து, ஆகவே இது அடியிற்கண்டபடி பலவகைப்

படும்; பலவகையாகவும் உபயோகப்படும், a fine slender substance which is separated or extracted from the constituent part of plants, animals minerals etc., resembling any fine hair or slender thread. Fibre, filament. It consists of various kinds as mentioned and their uses are many vegetable fibres:

1. சணல் நார், hemp fibres from which fine ropes and strings are made.
2. பூண்டு நார், plant fibres.
3. காய்கறி நார், vegetable fibres used for making fine flexible strings etc.
4. பட்டை நார், bark fibres.
5. தேங்காய் நார், cocoanut fibre used for mattres, and used to get materials for cordage etc.
6. வித்து நார், seed fibres.
7. கற்றாழை நார், aloe fibres for manufacturing threads.
8. முள்ளி நார், nettle fibres.
9. பருத்தி நார், cotton fibres for making cloths—Yarn.
10. வாழை நார், plantain fibres used to plait flowers.
11. எருக்கு நார், madar fibres to make waist thread for infants.
12. செம்புளிச்சை நார், fibre of red sorrel — Hibiscus subdariffa.
13. வக்கை நார்,

**நார்வகை,** ( in Physiology ) Fibre is an elongated thread like structure of organic tissue animal fibres.

1. நரம்பு நார், nerve fibre.
2. உப நார், accessory fibre.
3. தசை அல்லது நரம்பிணைக்கும் நார், anastomatic fibre.
4. மூளை இடை நார், commisural fibres.
5. மயிர் நார், hair fibres.
6. பாவை நார், lens fibre.
7. பாசி நார், moss fibre.
8. தசை நார், muscle fibre.

NOTE :— The above are the principal fibres obtained from the indigenous plants of S. India. Besides there are many miscellancious substances from which fibres are extracted by different methods from barks, stems, leaves, stalks, seeds etc.

**நார்வகை சம்பந்தத் தசை,** சம்பந்தத்தசையின் நார். connective tissue fibre.

**நார்ச்சிலந்தி,** ஓர்வகைப் புழு, a worm; 2. நரம்பு நார்சிலந்தி ஓர் விரணநோய், a disease.

**நார்த்தங்குருவி,** ஓர் வகைக் குருவி, a kind of sparrow.

**நார்த்தந்தகரை,** பேயாவாரை, occidental cassia — Cassia occidentalis.

**நார்ப்பூடு,** நன்னாரி, which see.

**நார்மூலம்,** நார் உற்பத்திக்கு காரணமாயிருப்பது, the elementary substance forming the basis of the structure of a fibre.

**நார்வகை,** நார்த்தொகுதியின் கிரமம், fibre system; 2. நார்களின் பேதங்கள், the differences in their structure.

**நார்வெண்டி,** ஓர் வெண்டி, kydia calycina.

**நார்வேர்,** நெல், கம்பு, சோளம், பயிர்களின் வேர், the root of the green crops as poddy millet etc; 2. நாரோடு கூடிய வேர், fibrous roots of plants.

**நாலம்,** தாமரை முதலிய பூவின் காம்பு, pedicles of flowers like lotus.

**நாலறிவுயிர்,** நண்டு, வண்டு முதலியன, animals with four senses.

**நாலாங்காண்டம்,** கொடி மாதுளை, lemon citron — Citrus medica ( limoni —medica ).

**நாலாங்காய்ச்சலுப்பு,** நான்குதரம் காய்ச்சித் தெளிவிறுத்த வெடியுப்பு, nitre boiled and filtered four times i. e. four times purified nitre; 2. நான்குமாத கருப்பிண்டத்தை பனிக்குடத்து நீர்விட்டு நான்குதரம் எரித்து வடிகட்டி தெளிவிறுத்த ஓர்வகைப் பிண்டவுப்பு, a salt prepared from four months foetus by boiling it with amiotic fluid four times and filtering the same.

**நாலாங்காய்ச்சல்,** நாண்குதரம் காய்ச்சி எடுத்தது, that which is boiled and filtered four times; 2. வெடியுப்பு, nitre.

**நாலாட்டுயா படிலம்,** ஏலரிசி, cardamon seeds.

**நாலாதிசீலம்,** மேல் பூமிசலம், water from the hills and mountains above the sea level.

**நாலாமாறல்,** நான்காமுறைக்காய்ச்சல், a form of malarial fever which causes the paroxysm to recur every third day — Quartan fever. It is infitrated into bones and as such is considered very dangerous as it often terminates fatally.

**நாலாமுறைக் காய்ச்சல்,** see நாலாமாறல்.

**நாலாவிதட்டசணி,** தலைச்சுருளி, flame flower — Gloriosa superba.

**நாலி,** கார்த்திகைக் கிழங்கு அல்லது பூ; root or floor of November flower plant— Gloriosa superba 2. முத்து, pearl; 3 தகரை. ring worm plant — Cassia tora.

**நாலிகம்,** எருமை, buffalo; 2. தாமரை, lotus; 3. காக்கை, crow.

**நாலிகாடி,** காட்டாமணக்கு, purging nut, physic nut — Jatropha curcus.

**நாலிகை,** மூங்கில், bamboo.

**நாலிக்கம்,** தராபித்தளைதகடு, alloy of copper and spelter.

**நாலிலைப்புன்னை,** நான்கு இதழ்களுடைய புன்னை, four leaved poon, rhomb leaved poon — *Calophyllum trapezifolium.*

**நாலிலைப்பைரவி,** சதையொட்டி, a plant consisting of four leaves said to have the virtue of uniting the fleshy portions in the human system.

**நாலிலொன்ருய்க் காய்ச்சல்,** கஷாயங்களை நாலில் ஒரு பங்காகும்படி சுண்டக்காய்ச்சல், boiling down any decoction to one fourth of its original quantity.

**நாலிவாடி,** கருங்குளவி, black beetle or wasp.

**நாலுகண்சட்டி,** அடியில் நான்கு துவாரமிட்ட மண்சட்டி, an earthern ware or pot with four holes underneath.

**நாலுகண்மீன்,** சாதாரணமாக இரண்டு கண்ணும், வாலுக்கு முன்பக்கத்தில் பக்கமொன்றுக்கு ஒவ்வொரு பெரிய கண்ணைப் போன்ற புள்ளிகளும் அமையப்பெற்ற ஓர் வகை காக்கைசேல் மீன், a kind of sea fish of carp family with two dark eye marks on the lateral line of the tail and along with the two natural eyes — Crow carp — Chaetodon meaulatus.

**நாலுகாற்பாய்ச்சல்,** இரண்டு காலினலும், இரண்டு கையினலும் தவழ்ந்து செல்லுதல், man walking like a quadruped with his two hands on the ground.

**நாலுகாற்பிராணி,** நான்கு கால்களையுடைய மிருகம், four footed animal — Qudruped.

**நாலுகாற் புணர்ச்சி,** மிருகங்களைப் போற் பெண்களுடன் சம்போகித்தல், இது 64 விலைகளிலொன்று, having sexual union with females like qudripeds. It is one of the 64 postures described in the Erotic Science of Kokkogamuni — See பசுகரணம்.

**நாலுசாதிப்பூ,** See நால்வகைப் பூ. (கோட்டுப் பூ, கொடிப் பூ, நீர்ப் பூ, நிலப் பூ), four varieties of flowers.

**நாலுசாதிப் பெண்,** கொக்கோகத்திற் சொல்லியுள்ள நான்குவகைச் சாதிப்பெண்கள், அதாவது பத்மினி, சங்கினி, சித்தினி, அத்தினி, four kinds of woman classified according to their lust and described in the Erotic Science by Kokkogamuni.

**நாலுசீலைமண் செய்தல்,** மருந்துப் பாண்டங்களைப் புடமிடுவதற்குமுன் 4 தரம் சீலையால் சுற்றி மண் பூசுதல், luting the medicinal pots four times with clay and piece of cloth before subjecting it to calcination.

**நாலுதல்,** கழுத்தில் சுருக்கிட்டுத் தொங்கல், suicidal hanging.

**நாலுதலையிலை,** see நாலிலைப்புன்னை.

**நாலுநாள்வட்டம்,** நாலுநாள் சுற்று, a cycle of four days.

**நாலுவித்தை,** தமிழ் சித்தர் நூலிற் சொல்லியுள்ள வாதம், வைத்தியம், யோகம், ஞானம் அல்லது 1. வாதம், 2. வசியம், 3. மாற்றம், 4. அஞ்சனம், the four kinds of arts or magic such as Alchemy, Medicine, Yoga and wisdom or Alchemy, magical enchantment, transformation and crystal gazing.

**நாலைங்கள்ளி,** இலைக்கள்ளி, leafy spurge — *Euphorbia neirii folia.*

**நாலொன்ருக்கல்,** see நாலொன்ருய்க் காய்ச்சல்.

**நாலொன்ருய்க் காய்ச்சல்,** நான்கு பங்கை ஒரு பங்காகும்படி காய்ச்சுதல், boiling down to ¼ of the original quantity.

**நாலோடகம்,** ஆடாதோடை, Malabar winter cherry — Adhatoda vesica.

**நால்,** பிரம்பு, cane.

**நால்கண்ணடி,** கோரோசனை, cow's bezoar.

**நால்சாதிக்கரு,** See நால்சாதி விஷக்கல்.

**நால்சாதிப்பூ,** See நாலுவகைப்பூ.

**நால்சாதிவிஷக்கல்,** நான்குவகைச் சாதிப் பெண்களின் கருப்பிண்டம், the foetuses of four kinds of women divided according to their lust as referred to in the Tamil Erotic Science.

**நால்தலையன்,** கரிக்குருவி, black bird.

**நால்மித்திரம்,** நான்குமித்துருச் சரக்குகள், அவையாவன, சாரம், வெண்ணெய், இந்துப்பு, மெழுகு, ( in Alchemy ) four friendly drugs viz—Salammoniac, butter, rock salt and wax.

**நால்வகைப்பூ,** கொடிப்பூ, கோட்டுப்பூ, நீர்ப்பூ, புதற்பூ ( நிலப்பூ ) என நான்குவகைப் பூக்கள், the four kinds of flowers viz—flowers of creepers, 2. those of branches, 3. water flowers, 4. flowers of bushes and thicket.

**நால்வகைப்பொன்,** ஆடகம், கிளிச்சிறை, சாதரூபம், சாம்பூநாதம், the four varieties of gold, 1 Adagam. 2. Kilichirai, 3. Satharuppam, 4. Sambunatham.

**நால்வகைமருந்து,** 1. சல்லியகரணி, 2. சந்தானக்கரணி, 3. சமனியகரணி, 4. மிருதசஞ்சீவினி, four varieties of medicine.

**நால்வகையுணவு,** the four kinds of food; 1. உண்பன, that which is eaten; 2. தின்பன, which is nipped with teeth and masticated; 3 நக்குவன, which is licked; 4. பருகுவன, which is drunk.

**நால்வகையோனி,** நான்குவித யோனிகள், the four varieties of vagina.

**நால்வலங்கம்** · seeநால்வெள்ளங்கு,

**நால்வரோதயம்,** மணித்தக்காளி, black berried solanum — Solanum nigrum

**நால்வாய்,** யானை, elephant.

**நால்வாசகி,** சிறுவிழுதி, chilli fruit caper — Cadaba Indica.

**நால்வெள்ளங்கு,** கல்வெள்ளங்கு, bastard rosewood — Dabergia lanceolaria, See நல் வெள்ளங்கு.

**நால்வேதியன்,** கல்லாரை, an unidentified creeper of the Marselia *genus found grown* at the foot of the hills. It is said to be a rejuvenating plant used by Siddhars.

**நாவகம்,** பாம்புக் கரலைம், copulation of snakes.

**நாவக்கலப்பூர்வசத்து,** பலகல்லின் சத்து, essence of several kinds of stones.

**நாவசிகரம்,** வில்வம், Indian bael — Aegle marmelos.

**நாவச்சென்னை,** செந்திணை, red italian millet.

**நாவடக்கம்,** மருக்காரை, common emetic nut — Randia dumetorum; 2. மௌனம் சாதித்தல், pursuing silence; 3. நாக்கு ருசியை அடக்கல், suppressing the sense of taste; 4. நாவெழாமற் பண்ணுதல், rendering one incapable of moving the tongue through sorcery.

**நாவடங்கணம்,** தேத்தான் கொட்டை, water clearing nut — Strychnos potatorum.

**நாவடமஞ்சள்,** திணைகப்பூச்சி, a hypnotic insect inducing in men when treaded upon, perplexity of mind.

**நாவடிக்கோளம்,** நாக்கின் அடிபாகத்திலுள்ள சிலேட்டும கோளங்கள், the smallest of the salivary glands placed beneath the tongue on either side — Sublingual gland.

**நாவடைசலம்,** மேல்பூமி தண்ணீர், water of an elevated place as hill, mountain, plateau etc., which are above the sea level.

**நாவடிவீக்கம்,** நாக்கினடி வீங்குதல், swelling below the tongue — Glossitis. If this assumes an intense form the tongue which swells and suppurates becomes paralysed.

**நாவடைத்தல்,** பேசக்கூடாமை, being unable to speak.

**நாவட்சரம்,** நாக்கில் சிறுசிறு கொப்புளங்கள் காணும் ஓர் நோய், a form of stomatitis characterised by shallow ulcers on the tongue — Ulcerative stomatitis.

**நாவணம்**, உண்ணாக்கு, the pendulam of the palate — Uvula.

**நாவதாரு**, வீரம், corrosive sublimate or mercuric chloride.

**நாவறட்சி**, நாக்கு வறளல், parched ness of the tongue; 2. தாகவிடாய், thirst for water.

**நாவரணை**, நாக்குப்புற்று, cancer of the tongue.

**நாவரனை**, see நாவரணை.

**நாவறட்சிக்கஷாயம்**, வட்டத்திருப்பி, ஓமம், கருஞ்சீரகம், மிளகு, நிலப்பூச்சி, வசம்பு, நிலவேம்பு, இவைகளைச் சட்டியிலிட்டுக் கருக்கிக் காய்ச்சும், கஷாயம், இதனால் காய்ச்சலில் கண்டதாகம் தீரும், the above drugs are slightly fried, and a decoction is prepared as per rules. This is given to arrest thirst in fever.

**நாவறட்சிக் காய்ச்சல்**, நாக்கை வறளச் செய்யுமோர் வகைக் காய்ச்சல், a kind of malarial fever marked by dryness of the tongue.

**நாவலர்க்காந்தம்**, சந்திகாந்தம், moon flower see நாகமுக்கொற்றி.

**நாவல்**, நாவல்பழமரம், இதுவே நாகப்பழம், இம்மரம் விலாசமாக அநேக விடங்களிற் காணலாம்; மைதானம், தோப்பு வழிப் பாதை, இவ்விடங்களிற் சாதாரணமாய் விளையக்கூடியது, இம் மரம் 70 - 80 அடி உயரம், இலைகள் 3, 6 அங்குல நீளம், அண்டவடிவு, பூக்கள் சிறியன வெண்மை நிறம், மாசி பங்குனியில் பூக்கும்; 40 வருஷத்தில் பூரணமாய் விளையும்; பழம் சிறியது, ஊதா நிறம், துவர்ப்பு, பட்டைக்கும் இதே குணம், பழம் மிருதுவாயும் பளபளப்பாயுமிருக்கும்; இதை நசுக்க கற்பூரவாசனை வரும்; இதைவாலையிலிறக்க பச்சை நிறமான எண்ணெ யெடுக்கலாம்; இதன் பழத்தினின்று இறக்கிய காடி குடற் கோளாறைப் போக்கி, சீரணசக்தியை யுண்டாக்கும், நீரைவடிக்குங்குண முண்டு, இதன் சாற்றை வாலுகையில் வைத்துச் சாம்புவம், இறக்குவதுண்டு, இப்பட்டையைத் தனியாகவாவது மற்றச் சரக்குகளோடு சேர்த்தாவது துவர்ப்புக் கஷாய மிறக்கி வாய்ப் புண்களை ஆற்றுவதற்கு, கொப்பளிக்கவும் கழுவு நீராகவும் உபயோகிப்பதுண்டு, இதன் பட்டைச் சாற்றை வெள்ளாட்டுப் பாலிற் கலந்து, குழந்தைகளின் அதிசார பேதிக்குக் கொடுக்கலாம், பழத்தைத் தின்னலாம், பஞ்சகாலத்தில் கொட்டையையும் தின்பதுண்டு, இப்பழத்தை உப்பிலிட்டு ஒருமணி நேரம் வைத்திருந்து பிறகு குலுக்கிச் சாப்பிட அதிக ருசியாயிருக்கும் மரத்தினின்று பிசின் எடுக்கலாம், அன்றியும் இப்பட்டையின் சாறு பாஷாணத்திற்கு சுருக்கி கொடுக்கவுதவும்.

மரம் முழுவதுக்குமே துவர்ப்புக்குணமுண்டு, இலையும், பட்டையும் வைத்தியத் திற்குதவும்; பட்டையைக் கஷாயமிட்டு அல்லது சூரணித்து, சீதபேதிக்கு கொடுப்பதுண்டு, பழக்கொட்டையைச் சூரணித்து நீரிழிவுக்குக் கொடுக்கலாம், கொட்டையை கஷாயமாக வைத்துக் காப்பியைப் போல் மது மூத்திர ரோகத்திற்கும், சூதகப்பெருக்கிற்கும் கொடுப்பதுண்டு, பழத்தினின்று சர்பத் செய்து குடிக்க பசியையுண்டாக்கும்; அசீரண முதலிய வயிற்றுப் போக்குகளையும் நீக்கும்; இதன் புல்லுருவி இந்திரியத்தைக் கட்டும், பட்டையை நிழலிலுலர்த்திச் சூரணித்து வயிற்றுளைச்சல், கிராணி, மூலம், கடும்பித்தம், முதலிய நோய்களுக்கு வெள்ளாட்டுப் பாலில் வெருகடிப்பிரமாணம் கொடுக்கலாம்; இச் சூரணத்தை இரத்தம் சொரிகின்ற புண்ணின் மேல் தூவ இரத்தம் நின்று ஆறச் செய்யும்; அன்றியும் இச் சூரணத்தைக் கருங்குருவை அரிசி மாவுடன் சேர்த்து பிட்டவியலாக வேகவைத்து சர்க்கரை சேர்த்துச் சாப்பிடப் பெரும்பாடு இரத்தக்கழிச்சல் முதலியவைகள் போம், மேலும் வாயில் பிறக்கும் நோய்கள், இருமல், ஈளை பிள்ளைகளின் கிரக தோஷங்கள், வியங்கம், இலாஞ்சனம் என்னும் மச்சபேதங்கள் முதலியவைகள் தீரும், இதன் வேரால் கரப்பான் புண், மச்சை மேகம் இவைகள் விலகும், பழம் தொண்டையைக் கட்டும்; கருப்பிணிகளுக்குதவாது, இதன் கொட்டையை ஆடுதின்னும்பாளை விட்டு அரைத்து மாத்திரைகளாகச் செய்து சாப்பிட மதுமேகம் சாந்தமடையும், common jaumoon — Eugenia jambolina. This tree is found almost every where in abundance. It is grown in plains topes, avenues. The tree is 70, 80 ft. high, leaves 3-6 inches long oval shaped flowers small, white, flowering in March; it attains its full size in 40 years, fruits round and small, purple and astringent, kernel and bark are also astringent, fruits smooth and shining, when crushed it has a

camphor odour and on distillation yields a bright green oil. A vinegar prepared from the juice of the ripe fruits is an agreeable stomachic, carminative, and diuretic, a sort of spirituous liquor called 'jambuva' is prepared by distillation from the juice, the bark is astringent and is used alone or in combination with other drugs of its class in the preparation of astringent decoction for gorgles and washes, the fresh juice of the bark is given with goats milk in diarrhoea of children; the expressed juice of the leaves is used alone or in combination with other astringents in dysentery. Fruit is eaten, in times of famine the kernels are also eaten, fruits well mixed with a small quantity of common salt and kept for an hour will be found much improved in taste, and prevents the increase of phlegm humour and cold which the fruit is liable to cause. The bark yields a good gum.

The whole tree has astringent properties; leaves and bark are used in Indian Medicine. The bark as a decoction or powder is used as an efficient astringent in dysentery. The kernel or stone of the fruit is used as a remedy in diabetes; it is also powdered and used as a coffee for diabetes and menorrhaegia; the syrup prepared from the juice of the fruit is an effective remedy for promoting appetite, arresting motions from disorder of stomach The parasite of the plant is said to arrest easy discharge of semen, the bark dried in the shade and powdered and mixed in goats milk is prescribed for diarrhoea, chronic dysentery, hemorrhoids etc; the powder when dusted over bleeding wounds arrests the bleeding and heals the wound; more over the said powder mixed with the flour of red rice (*காரரிசி*) and backed and eaten with brown sugar is found to be of great advantage in cases of menorrhaegia, hemorrhoides, aphthous diseases, cough asthma etc. It is also recommended in children's diseases due to planetary influences and diseases of the skin marked by discoloured protuberances such as warts, moles etc; in the human body. The root of this tree is found to be useful in scabbies, eczema, diseases of the morrow of the bones etc. The stone in the fruit ground with the juice of the leaves of the ulcer plant (Aristolochia bracteata) and made into small pills is prescribed for diabetes mellitus.

The following are the different varieties:

**நாவல்வகை:**

1. *சிறு நாவல்*, small jaumoon—Eugenia aruttiana alias E. rubicunla.
2. *பெரு நாவல்*, large fruited jaumoon—E. jambos.
3. *சம்பு நாவல்*, Malacca jaumoon — Eugenia malaccensis.
4. *வெண்ணாவல்*, white jaumoon — Eugenia zeylanica alias E. hamisphericus.
5. *கொட்டை நாவல்*, seed jaumoon — Eugenia jambolana.
6. *நாட்டுசம்பு நாவல்*, country or malabar jaumoon — Eugenia malabarica.
7. *நீர் நாவல்*, water jaumoon gardners black plum — Eugenia gardneri alias E. munronii.
8. *சிவப்பு நாவல்*, red jaumoon — Eugenia aquea alias Jambosa aquea.
9. *காட்டு நாவல்*, wild jaumoon — same as No. 8.
10. *மலைநாவல்*, clove like black plum — Eugenia caryophyllae.
11. *கொர நாட்டு நாவல்*, coromandal jaumoon Eugenia bracteata.
12. *ஜாவா நாவல்*, Java jaumoon — Eugenia javanica (*இதுவே குலாப்ஜாமு*).
13. *குழி நாவல்*, common myrtle —Myrtus communis.
14. *நிழல் நாவல்*, *கருநாவல்*, same as No. 16.
15. *திப்பிலி நாவல்*, Indian mulberry — Morcas indica.
16. *கரு நாவல்*, cherry jaumoon; cherry black plum — Eugenia opurculata.
17. *கொடி நாவல்*,
18. *புளி நாவல்*,
19. *நரி நாவல்*,
20. *வெள்ளை நாவல்*, rose apple — Eugengia hemiospheric.
21. *மலாக்கா நாவல்*
22. *கரும்பு நாவல்*, black plum — Eugenia Rostrata.
23. *ஈழத்து நாவல்*, Ceylon jaumoon — Eugenia zeylanica.
24. *பூ நாவல்*, (*பூநாகை*) Nilgiri black plum — Eugenia montana.
25. *பூமிஜம்பு நாவல்*, lowly jaumoon — See *சிறுதேக்கு*.

26. ஓரநாவல், alternate leaved black plum — Eugenia alternifolia.

NOTE: 13, 15 and 25 come under different botanical group and as such they are of the species of நாவல், although they end with the same termination

**நாவல்நீர்,** நாவல் மரத்து வேருறியநீர், இதனால் கழிச்சல் நீரிழிவு நீங்கும்; ஐயம், சுரம், மந்தம் இவைப் பெருகும்; உடற்குக் குளிர்ச்சியையும் ஆண்மையையும் தரும், water where in the root of the jaumoon tree is soaked. This cures diarrhoea and diabetes but causes fever, loss of appetite, and phlegm. It cools the body and gives manliness.

**நாவழற்சி,** see நாக்கழற்சி.

**நாவழி,** நாக்குவழிக்குங் கருவி, a blade for cleaning the tongue.

**நாவழித்தல்,** நாக்கு வழித்தல், cleaning the tongue by scraping.

**நாவழுக்கல்,** நாக்கில் மாசு படருதல், tongue being covered with a coat of pale matter; 2. நாக்குத் தவறல், slip of the tongue.

**நாவழுக்கு,** நாக்கின் மேலுண்டாகும் அல்லது படரும், வெள்ளை அல்லது மஞ்சள் நிறமானமாசைப் போன்ற அழுக்கு, the whitish or yellowish layer or coating on the surface of the tongue consisting of recently deposited matter or desquamated epithelium etc.

**நாவழுவழுத்தல்,** நாக்கு வழவழப்பாயிருத்தல், a feeling of the tongue from mucous or slimy secretion in the mouth owing to the irregular action of the liver.

**நாவளநோக்கு,** மட்சம், mole.

**நாவளம்,** see தீவதாட்சி.

**நாவறட்சி,** நாக்குலர்வு, parched ness of the tongue; dryness of the mouth from lack of the normal secretion — Xerostomia; 2. தாகம், thirst.

**நாவறட்சிக் காய்ச்சல்,** see நாவரட்சிக் காய்ச்சல்,

**நாவறளுதல்,** நீர் விடாய்த்தல், feeling thirsty from dryness of the tongue.

**நாவறளை,** see நாப்புற்று.

**நாவற்கோவை.**

**நாவாசீகம்,** சிற்றெருவை, an unknown tree.

**நாவாஞ்சகம்,** சிறுகாடை, common quail.

**நாவாயெலும்பு,** கைக்குழைச்சின்மேல் வரிசையெலும்புகளில் ஒன்று, one of the bones in the proximal (upper) row of wrist — Scaphoid bone — the title due to its shape — boat shape (by C. D.)

**நாவாய்க்குழி,** யோனியின் உதடுகள் விரிகிற உட்புறத்தே அடிப்பக்கமாக விருக்கும் குழி, a groove or furrow seen on separating the labia between their inferior extremities, a boat shaped hollow or cavity behind the vaginal aperture — Fossa navicularis.

**நாவி,** ஓர் விஷவேர், aconite root, Aconitum ferox; 2. ஊமத்தை, dhatura plant — Datura stramonium alias D. fastuosa; 3. கஸ்தூரி மிருகம், musk deer; 4. புனுகு பூனை, civet cat; 5. பச்சைக் கருப்பூரம், crude camphor; 6. கருநாபி, black aconite; 7. சவ்வாது, zibet.

**நாவி,** இதற்கே வடமொழியில் வசநாபியென்று பெயர், தமிழில் பச்சை நாவியென்றும் சொல்வதுண்டு, இது பச்சையாய் அகப்படுவது மிகவும் கஷ்டமும், அபூர்வமுமாகும், ஏனெனில் இது சாதாரணமாய் இமாலயத்திலும் அதன் சுற்றிலுமுள்ள விடங்களில் தானகப்படும்; இது ஓர் செடி, மேலதண்டு 2-3 அடி உயரம, நேராகவுள்ளது, வேர்கிழங்கு 4 அங்குல நீளம், வெளிப்புறம் சிறிது கருப்பாகவும், உட்புறம் வெண்மையாயுமிருக்கும், கிளைகள் மொசுமொசப்பு, இலைகள் ஐந்து பிரிவினையுடையன, பூக்கள் பெரியவை; நீலநிறம், வெண்மையோடு கூடிய சாம்பல் நிறம், இதழ்கள் சிறிது உள் வளைந்திருக்கும், பூமிக்கடியிலுள்ள சொர சொரப்பான வேர்க்கிழங்கு 3-4 அங்குல நீளம், ½ to 2 அங்குல பருமன், கருப்பும், கபில நிறமும் கலப்பு, ஒடிக்கக் கூடியது, எளிதில் சூரணமாக்கலாம், இது வாசனையற்றதாயும், சிறிது கசப்பாயும், நாக்கில் விருவிருப் புண்டாகி, சுவர்வையற்று, பார்வைக்கு வசம்மைப் போலிருக்கும், இதைப் பூச்சி அரிக்காதபடி பசுவின் மூத்திரத்தில் ஊறப்போட்டு எடுப்பதுண்டு, இக்கிழங்கை அரைத்துப் பூசவுதவும், விடாச் சுரங்களுக்கு இதை உள்ளுக்குக் கொடுக்கலாம், தேள்கடி, பாம்புக்கடி இவை கட்கு, பிராந்தி, சாராயம் முதலியவைகளில் இழைத்துத் தடவலாம், இது தாதுக்களின் கொதிப்பைத் தணிக்கும், அன்றியும் நோயைத் தணித்து, தீட்சண வியாதிகளைச் சமனப் படுத்துந் தன்மையது, நமது நாட்டு வைத்தியர்கள் குட்டநோய்க்கும் உபயோகப் படுத்துவார்கள், இது சீமை நாபியை விட சக்தி வாய்ந்தது; மலை நாட்டார்கள் அம்பின் நுனியில் தடவவும், குளம், கேணி முதலியவைகளில் விஷம் கலக்கவும் உபயோகிப்பார்கள்; இவ்வேர்க் கிழங்கு அதிக விஷத்தன்மை பொருந்தியதால்,

உள்ளுக்குக் கொண்டாலும் அல்லது இரணங்களுக்குப் பூசினாலும் மரணத்திற்கு ஏதுவாக்கும், தீராத வாத நோய்க்கும் இது உபயோகப்படும், இதை 10 வருஷத்திற்கு வைத்திருந்தாலும் இதன் விஷத்தன்மைமாறாது: இதைத் தனிப்பட உபயோகிக்கவே கூடாது; யூனானி வைத்தியர்கள் மற்றசரக்குகளுடன் சேர்த்து வாந்தி, பேதி, முறை சுரம், பல்வலி, பாம்புகடி இவைகளுக்கு உபயோகிப்பார்கள், இதைக் கடையில் விற்பார்கள், நாட்டு வைத்தியர்கள் இதை சுத்தி செய்தே மருந்தில் சாக்கிரதையாக உபயோகிப்பார்கள், சன்னிபாதசுரம், பாண்டு, மகோதரம், வயிற்றுவலி, அஸ்தி சூடு, தலைநோய், பாம்புகடி இவைகளுக் தக் கொடுப்பதுண்டு இதை பூசுந்தைலமாக நரம்புவலி, வாதப் பிடிப்பு, இவைகளுக்குபயோகிக்கக் குணத்தைத்தரும், இதைப் பாரிசவாயுவுக்கும் நரம்பு பல விருத்திக்கும் கொடுக்கலாம். ஆயுர்வேத வைத்தியர்கள் இத்துடன் மற்ற கடைச் சரக்குகளும் சேர்த்து மருந்துகள், தயாரித்து, சுரத்தினால் மூளையைப் பற்றிய கோளாறுகளுக்கும், அசீரணம், பசியின்மை, தொண்டைக்கட்டு, இருமல், ஈளை, சரும வியாதிகளுக்கும் உபயோகிப்பார்கள்; இது அடியிற் கண்டபடி பல வகைப்படும், Indian aconite, Monk's hood, wolf's bane — Aconitum ferox. In Sanskrit it is known as poison root, and in Tamil green poison root. Green root can be found very rarely and with much difficulty for the reason, it grows only in the Himalayan regions. It is a plant, the stem of which is only 2-3 feet high, erect. The tuberous root 3, 4 inches blackish outside and white inside, branches villus, leaves deeply five parted; flower large deep blue, hoary, petals slightly incurved. Simple tuberous roots 3, 4 inches long and ½—2 inches in diameter; blackish brown, brittle readily reduced to a coarse powder, and in this state destitute of odour, slightly bitter to the taste, the tongue being subsequently benumbed where ever touched on, some what resembles the roots of sweet flag, it is steeped in cow's urine to preserve them from being eaten away by insects (the root is purified by steeping it in cows urine for three days. (by C. D.) Roots much used medicinally as external application, being reduced to a paste and spread upon the skin (must be used only after purification). Internally is chiefly used for chronic intermittent fevers, used in large doses along with stimulants as brandy arrack in snake bites and scorpion stings. It is sedative, anodyne and antiphlogistic. Native doctors employ it in leprosy. This root is more powerful and potent than that of Europe, used in hilly districts for poisoning arrows and to poison tanks and wells. The root is highly poisonus and equally fatal whether taken internally or applied to wounds, it is used by Indian practitioners in cases of chronic rheumatism; by Unani doctors it is mixed with several other drugs and given for cholera, intermittent fevers, tooth ache, snake bites. The root maintains its effect even after ten years, it is never to be used singly (Alagalavisha thailam is prepared only with aconite and castor oil and used externally for convulsions (by C. D.). It is commonly sold in bazaars. Native doctors are careful enough to use it only after cleaning it sufficiently and then prescribing it along with other drugs in cases of typhoid, dropsy, colic, diseases of bones, head ache snake bites etc. As a linement, it is used for neuolgia. rheumatic affections, and paralysis. Ayurvedic doctors mixing it with other drugs use with great advantage in cases of fevers, complicated with cerebral symptoms, dyspepsia, with loss of appetite sore throat cough, asthma, and skin dissases.

It consists of several varieties as mentioned below.

நாவி வகை:—

1. வெண்ணாவி, white bachnang — Aconitum ferox.
2. கரு நாவி, black aconite root — Aconitum ferox.
3. சீமை நாவி, Europe aconite — Aconitum napellus (of Europe).
4. அந்தண நாவி, அல்லது பிரம நாபி, same as No. 1.
5. சத்திரிய நாபி, அல்லது செந்நாபி red aconite — Aconitum palmatum.
6. வைசிய நாபி, blue aconite — Aconitum luridum.
7. சூத்திர நாபி, the same as No. 2.
8. அரச நாபி, nepaul aconite — Aconitum napellus of Himalayas.
9. பச்சை நாபி, green aconite

NOTE: *The root is so very poisonous that it is even considered that its effluvia will poison the air where the plant grows.* The active principle of the root is Aconitia. It is rarely used as tincture. The alkoloid aconitia is a white uncrystallizable solid. When an individual is fully under its influence, the pulsations of the heart are diminished in number, as likewise the frequency of respiration. Aconite is said to cause contraction of the pupil, on account of its diuretic properties it is used with great advantage in dropsy. In hypertrophy and other diseases of the heart, it is prescribed to allay palpitation. It is stated to have marked antiphlogistic powers. In different forms *neuralgia, its internal adminis*tration is often attended with marked relief, the same happens in sciatica, chronic rheumatism, muscular rheumatism as lumbago. After all, it is at best a dangerous remedy to make use of internally. Now, it is rarely used but onl y by a very limited practitioners. The root is generally mistaken for by horse radish and thus led to several cases of poisoning. In taste they differ — this one produces tingling and numbing sensation while the other is sweet and pungent, in shape this is conical and the other is cylinderical.

Symptoms of poisioning. Burning and dryness in the throat, numbness of the tongue and the mouth, nausea, vomitting, pain in the epigastrium staggering while walking loss of power in the limbs, pupils dilated pulse irregular and gradually beoming imperceptible, skin cold and clammy. Delirium is present is some cases. Heart action is lowered.

**நாவிகாக்கிழங்கு,** கலப்பைக்கிழங்கு, plough root — Methonica superba.

**நாவிகாக்குவளை,** செங்குவளை, red nelumbo, red waterlily — Pontederia genus.

**நாவிகாசங்கு,** பீச்சங்கு, fetid smooth volkameria — Cleodendron inerme.

**நாவிக்கிழங்கு,** See நாவி.

**நாவிகீ,** *கஸ்தூரி நாறிப்புல்,* musk grass — Andropogan genus.

**நாவிக்குழம்பு,** புனுகு, civet.

**நாவிச்சட்டம்,** கஸ்தூரி, musk — Moschus moschiferus; 2. புனுகு, civet — Viverra civettina (product of); 3. சவ்வாது, zibet.

**நாவிச்சூரை,** see நாவிச்சூலை.

**நாவிச்சூலை,** வசநாவியினுல் ஏற்படும் சூலை நோய், *a kind of severe colicky pain in the* abdomen arising from taking aconite internally. This is a disease due to the complications attributed chiefly to over doses of the drug or by using the medicine where in this drug is added without proper purification.

**நாவிடம்,** உடம்பின் நரம்பு, nerves in the body; 2. நாக்கின் விடம், the evil nature of the tongue noted in speech; 3. சாபம், curse, utterance or speech devoted to destruction, pronounced curse — Anathema.

**நாவித்தண்டை,** ஒரு முட்டைப்பீநாறி, stinking plant — Ballota disticha.

**நாவிநெய்,** மயிர்ச்சாந்து, a perfumed ungent or compound or composition used for dressing the hair — Pomatum; 2. நாவிக் கிழங்கினின்று வடிக்கும் ஓர் பச்சை நிற மான எண்ணெய், a bright green oil extracted from aconite root; 3. புனுகு, civet.

**நாவிப்பிள்ளை,** புனுகுபூனை, civet cat — Viverra civettina; 2. சவ்வாதுபூனை, zibet cat.

**நாவிப்புருதி,** see நாக்குவிப்புருதி.

**நாவிப்புழுகு,** புனுகு, civet; 2. மான்மதம், musk of deer.

**நாவிப்பூனை,** See நாவிப்பிள்ளை.

**நாவிமிருகம்,** கஸ்தூரிமான், musk deer; 2. புனுகுபூனை, civet cat; 3. சவ்வாது பூனை, zibet cat.

**நாவியப்பூ,** கார்த்திகைப்பூ, november flower, superb lily — Methonica superba.

**நாவியம்,** see நாவியப் பூ.

**நாவிரணம்,** see நாக்குவிரணம்.

**நாவிலட்சரம்**, see நாவட்சரம்.

**நாவிலரணை**, see நாவரணை.

**நாவிலை**, வெற்றிலை, betel leaf.

**நாவில்லாவலரி**, குப்பி அலரி, pagoda tree — Plumeria acutifolia.

**நாவில்லான்**, நாக்கு இல்லாதவன், a person without a tongue — Aglossus; 2. ஊமை, the dumb.

**நாவிழுதல்**, see நாக்குவிழல்.

**நாவிழுப்பு**, நாக்கு உள்ளே இழுத்துக் கொள்ளுதல், இதனால் பேசமுடியாது, இது பாரிச வாயு, இழுப்பு முதலிய நோய்களினு லேற்படும். with drawal of the tongue there by rendering in capable of utterance. This occurs in some diseases as paralysis, convulsions etc.

**நாவிற்கிதம்**, நாவிற்கு ருசி, pleasing to taste.

**நாவிற்பசைத்தல்**, நாக்கில் ஈரமுண்டாக்கல், to make the tongue wet.

**நாவின்கற்பம்**, நாக்களின் கற்பம்.

**நாவின்மா**, நாக்கில் படரும் மாப்போன்ற பசை, see நாவழுக்கு.

**நாவின்முடிச்சி**, நாக்கு எழாதபடிக்கு நாக்கின் அடியிற்காணும் முடிச்சி, tongue tie.

**நாவீங்கித்தொங்கல்**, நாக்குவீங்கித் தொங்கல், swelling and protrusion of the tongue.

**நாவு**, நாக்கு, tongue.

**நாவுக்கிதம்**, நாவுக்கினிமை, உருசியாயிருக்கை, sweet and tasteful to the tongue.

**நாவுப்புற்று**, நாக்கிலேற்படும் புற்று, cancer of the tongue.

**நாவுரி**, ஒன்றரைப்படி, one and half measures or 6 ollocks.

**நாவுலர்ச்சி**, see நாவறட்சி.

**நாவுழலை**, see நாக்குளறல்

**நாவுவிழுத்தல்**,

**நாவுழற்றல்**, see நாவறட்சி; 2. தாகமெடுத்தல், feeling thirsty.

**நாவுழற்றுதல்**, நாவறண்டு காந்துதல், tongue getting parched and dry.

**நாவுப்புளித்தல்**, see நாப்புளித்தல்.

**நாவுளறல்**, நாக்குளறல், indistinct utterance of the tongue; 2. பேச்சுத் தடுமாறல், faltering in speech.

**நாவூறுபடுத்தல்**, நாவாற் சுடல், blight of the tongue.

**நாவெலும்பு**, ஓர் காலெலும்பு.

**நாவெழுச்சி**, tongue assuming elevated position accompanied by burning and itching sensation mucous discharge and salivery secretions, Ranula.

**நாவேர்ப்பட்டை**, ஓர் காட்டு மரத்தின் பட்டை, bark of a forest tree.

**நாவேறு**, நாக்குவிஷம், blight from the tongue supposed to produce evil; 2. சபித்ததினுலேற்படும் தோஷம், affection through curse.

**நாவெடிப்பு**, நாக்கு வெடிப்பு, fissures of the tongue.

**நாவெழாமை**, நாக்கிலேற்படும் பிடிப்பினுல் பேசமுடியாமை, a peculiar form of aphasia due to spasm of the muscles of the tongue — Aphthongia; 2. நாக்குவாதம், which see.

**நாவொட்டிக்காய்ச்சல்**, ஓர்வகைக் காய்ச்சல், இதனுல் சுரம் தோன்றி எலும்பில் தாக்கி, நுரையீரல் வெந்து கரைந்து, நாக்கிலும் வெந்து காணும், a kind of fever marked by fever, affection of the bones, inflammation and wasting away of the lungs.

**நாழல்**, cassia occident alis; 2. caesalpinia pulcherima; 3. மல்லிகை, Jasminum; 4. குமரிநாழல், which see.

**நாழி**, ஒருபடி, a measure; 2. 16 பலம் கொண்ட நிறை, 16 palams weight or about 560 gms; 3. இரண்டுரி கொண்ட அளவு, a measure consisting of two oories; 4. நாழிகை, அல்லது கடிகை, an Indian hour equivalent to 24 English minutes.

NOTE:—by C.D. நாழி என்றால் ஒருபடிஎன்று பொருள் கூறப்பட்டுள்ளது. இது எத்தனை

ஆழாக்கு கொண்டபடி என்பது விளக்கப் படவில்லை.

இப்போதுகூட வியாபாரிகள் கிராமங் களில் பொருள்களை ஒருதூக்கு என்கிற ஐம் பது பலம் எடை அளவாக வாங்கி, நாற்பது பலம் கொண்ட வீசையளவாக விற்று நான் கில் ஒருபங்கு லாபம் அடைவதைக் காண லாம். அதுபோலவே முற்காலத்தில் ஐந்தா ழாக்குக் கொண்ட படியளவாக வாங்கி நான்கு ஆழாக்கு கொண்ட படியளவாக விற்று நான்கில் ஒருபங்கு லாபம் அடைந் தனர். இந்த ஐந்தாழாக்குக் கொண்ட படி யைத்தான் நாழி என்றனர். அதில் பாதி உரியாகும். நான்கு ஆழாக்கு கொண்டபடி சிறியபடி அல்லது பழைய படியாகும் உழக்கு அதில் பாதியாகும். பட்டணம்படி பெரியபடி, இது எட்டாழாக்குக் கொண் டது.

'உண்பது நாழி உடுப்பது நான்கு முழம்' இந்த பழமொழியில் குறிப்பிட்டுள்ள 'நாழி' ஐந்தாழாக்கு கொண்ட படியேயாகும். ஒரு வர் ஒரு தினத்திற்கு உண்ண வேண்டியது நாழியில் பாதி அரிசியும், மற்றபாதி பருப்பு வகை, மந்தம், வாதம் செய்யும் பொருள்களா கிய கிழங்கு, முதிர்ந்த காய்வகைகள், கீரை வகைகள், இளங்காய் வகைகள் என நான்குமாகும்.

It is given here that Nazhi is a measure. Its exact volume is not mentioned. There is one Madras measure of eight ollocks and an old measure of four ollocks and a new measure litre.

Till recently in the rural parts merchants purchased articles by weight called Thuku ( தூக்கு ) which is equivalent to 50 palams and sold the same by weight called viss which is equivalent to 40 palams and thus had ¼ or 25% gain. Similarly, in the olden days certain articles were purchased in measure — Nazhi and sold in the old measure of 4 ollocks making ¼ or 25% gain. So, Nazhi is equivalent to five ollocks nearly equivalent to one kilo.

There is a proverb 'உண்பது நாழி' which means that "one must eat one nazhi a day. Half of it being rice and the other half is made up of the following 1. pulses, 2. greens, 3. tender fruits, 4. root tubers and half riped fruits. Root tubers and riped fruits are clubed together because of their similar qualities of being slightly hard to digest and of rising the wind humour. ( vatham ) in the system.

*நாழிகை*, see *நாழி*.

*நாழிகைக்குள் காயசித்தி*, கருநெல்லி, a black variety of Indian gooseberry said to rejuvenate the system in one Naligay i.e. within a brief time of 24 minutes. This is unknown in the present day and so it should not be confused with black berried featherfoil or black honey shrub—Phyllanthus reticulatus which is quite different from that contemplated in Tamil Siddhar's Science.

*நாழிகைவட்டில்*, பூர்வகாலத்தில் தென் னிந்தியாவிலுள்ள தமிழர்கள் கால அளவை நிர்ணயிக்கும் பொருட்டு ஒரு குறித்த பாத்தி ரத்தின் அடியில் துளையிட்டு, தண்ணீரின் மேல் அப்பாத்திரத்தை மிதக்கவிட துவாரத் தின் வழியாய் தண்ணீர் உட்புகுந்து, சில நேரத்திற்குப் பிறகு தண்ணீரில் மூழ்கி விடும், இதுவே நாழிகை கொண்ட கால அளவு. இது தற்காலத்திய இங்கிலீஷ் மணிப்படி 24 நிமிஷம் கொண்டது, ஆகவே இத்துளையிட்ட பாத்திரத்திற்குத்தான் நாழிகை வட்டில் என்று பெயர். a contrivance used in olden days by the Tamilians of South India by which time (Naligay) was determind. It consists of an empty vessel of the shape of a plate of certain size made to float on water. There is a small hole at the bottom through which water enters. The size of both the vessel and the hole is so proportioned that if care be taken, the vessel sinks at the termination of every Naliga (24 English minutes).

*நாழியுரி*, ஒன்றரைப்படி, a measured and a half.

*நாழில்*, கொடிக்கொத்தான், moss creeper, air creeper — Cassytha filiformis.

*நாளகம்*, இலாமிச்சு. fragrant grass — Andropogon muricatus.

*நாளகி*, சூழ்ந்து, torch tree — Ixora parviflora.

*நாளசம்பந்தம்*, நாளத்திற்குரிய, relating to veins, venous.

*நாளஞ்சுருக்கி*, இரத்த நாளத்தைச் சுருங்கச் செய்யு மருந்து, drug which contracts veins as alum.

*நாளதபம்*, நாளத்திற்கு ஏற்படும் அழற்சி, inflammation of a vein — Phlebitis; 2. கருப் பையிலுள்ள நாளத்திற்குண்டாகும் அழற்சி inflammation of uterine veins following child birth — Puerperal Phlebitis.

**நிமிஷம்,** 60 விநாடி கொண்டகாலம், a period of 60 minutes i. e. a minute; 2. சிமிட்டுக் கண், contimous winking — Blepharism.

**நிமிண்டி,** ஓர்வகை எலும்பு, a species of ant.

**நிமிதகம்,** கொக்கோக நூலின்படி ஓர்வகை முத்தமிடல், ( In sexual science ) a mode of kissing, limited or normal kiss in which the girl merely touches the lips of her lover with her own but not operate or take any other active part.

**நிமித்தகாரணம்,** மூலகாரணம், primary cause.

**நிமித்தசுரம்,** வேண்டுமென்று உண்டாக்கிய சுரம், fever that is wantenly brought about —induced fever.

**நிமித்தம்,** பெண்கள் ஆண்கோசத்தை நாக்கு, வாய், உதடு இவைகளினால் பற்றுதல், woman licking the glans of the penis with her tongue or sucking it with her lips and mouth.

**நிமிர்ச்சுவாசம்,** நிமிர்ந்தபடி இருந்தாலொழிய மூச்சுவிட முடியாமை, inability to breathe except in an upright position — Orthopnea.

**நிமிர்தல்,** உடலை நேராக்கல், keeping the body straight or erect.

**நிமிர்ந்து படுத்தல்,** சாய்ந்தபடி படுத்தல், recumbent or leaning posture.

**நிமிளை,** இது ஓர்வகைத்தாது, தமிழ் வைத்திய நூலில் இதை ஒரு உபரசச்சரக்காக எடுக்கப்பட்டுள்ளது, இது இந்தியாவில் அபூர்வமாயிருந்தாலும், இங்கிலாந்து, ஆஸ்திரியா, ஜர்மனி, அமெரிக்கா சிலபாகங்களில் விசேஷமாக அகப்படும், இது கந்தகமிருக்கும் இடங்களிலிருந்துதான் வெட்டியெடுக்கப்படும், இது சுத்த உலோகமாகவே அகப்படும், கந்தகம் பிராணவாயுவுடன் சம்பந்தப்பட்டு கலப்பாயகப்படுவது வெகு அபூர்வம், இக்கலப்பு மஞ்சள் அல்லது வெளிர் சிவப்பு நிறமாயும், வாசனை, ருசியில்லாததாயு மிருக்கும், இது உருகக் கூடியதும், தீப்பற்றி எரியக்கூடியதுமான வஸ்து, எரியும்போது சுய நீலநிறமாகக் காணப்படும், இத்துடன் சாம்பலுப்புச்சத்து சேர்த்து உருக்கிப் பிறகு அதினின்று உப்பையும், வெடியுப்பையும் பிரித்தெடுக்க சுயமான நிமிளை உண்டாகும், ஆங்கிலேயர் இதினின்று பஸ்பம் செய்வார்கள், இப்பஸ்பம் திராவகத்தைச் சேர்த்துச் செய்வதனால் நிறம் வேறுபடினும் குணம் ஒன்றுதான், இப்பஸ்பத்தில் வெடியுப்புச்சத்து சேர்ந்திருப்பது ஓர் இனம், இதைப் பொதுவாக குன்மம், வயிற்றுவலி, நெஞ்செரிவு, எதிர்க்களிப்பினால் தொண்டை, வயிறு இவைகளின் எரிச்சல், வயிறு விரணம், கழிச்சல், அதிதசிதபேதி, கிராணி, வாந்தி முதலிய நோய்களில் மெத்த உபயோகமாகும், இதைப் பன்றி நெய்யில் குழப்பி உதடு வெடிப்பு, ஆசனவெடிப்பு, முலைக்காம்பு வெடிப்பு முதலிய ரணங்களுக்கும் களிம்பாக உபயோகிக்கலாம், பெண்களுக்குக் காணும் வெள்ளை, தந்திமேகம் முதலிய நோய்களுக்கும் பயன்படும், இதற்குத் துவர்ப்பு குணமுள்ளதால் சருமத்தில் தாக்கி சொறிசிரங்கு, இரணம் முதலிய தோலைப் பற்றிய நோய்களைக் குணப்படுத்தும், இது குடலிற்குள் கரைவதில்லை, ஆகவே, பேதியைக் கட்ட உபயோகமாகும், குடலின் சவ்விலும் வேலை செய்யும், இது இரத்தத்தில் சேராது; அப்படிச் சேரினும் மிகச் சொற்பாமே, சாதாரணமாய் மூத்திரத்தின் வழியாய் வெளிவரக்கூடியது, அன்றியும் இதை காக்கா வலிப்பு முதலிய நரம்புநோய்களுக்கும் கொடுக்கலாம், bismuth —Bismuthum. It is a kind of metal and as such forms one of the 120 kinds of natural substance classified in Tamil Medical Science. It is rare in India but common in England, Austria, Germany, and in some parts of the United States. It occurs in a combined state in place where sulphur is dug out. It exists generally in the metallic state, nearly pure but more rarely in combination with sulphur and with oxygen. In a combined state it is found to be of yellow or reddish white colour without taste or smell, it is both fusible and combustible. It burns with a blue flame. When melted with nitrate of potash, the nitre and salt are then separated purified bismuth is obtained (Bismuthum purificatum). Oxide of bismuth prepared by the British is of a different colour but still is the same in quality as that prepared by Tamilians by action of acid. Subnitrate of bismuth which is a white powder is another variety and this generally used in atonic dyspepsia, gastralgia gastrodynia pyrosis marked by heartburn, burning sensation in the esophagus and stomach with sour eructations due to acide dyspepsia ulceration of the stomach, atonic diarrhoea and advanced stages of dysentery in which it is found greately serviceable. By thoroughly mixing it withs hag's fat, it forms an useful application in

fissures of lips, the anus, nipples etc. Its use is found with some success in cases of leucorrhoea and gleet. As it is an astringent, sedative and alternative it is often found to be of great service in scabbies wounds, and injuries and in other chronic cutaneous affections. It is not soluble in the fluid in the intestines and so it is used with occasional success in arresting motions. It can act on the lining membrane of the intestines. It does not mingle with blood and even if it does so, it will only be in a very minute quantity. It also finds its way out in the secretion of urine. It is also given, in some nerve diseases as epilepsy and is said to be occasionally of service.

NOTE: Bismuth is found generally in a fairly pure condition in a free state. It also occurs combined with sulphur as bismuth glance ($Bi_2 S_3$) and with oxygen as bismuth ochre. The native bismuth is a greyish white solid resembling antimony; but it has also a faint reddish tinge. In bismuth, the metalilc qualities preponderate, while in antimony and arsenic, the non - metallic properties predominate. Antimony is intermediate between bismuth and arsenic.

Some of the early writers confused bismuth with antimony Metallic bismuth was originally called marcasite a term formerly employed somewhat vaguely for any ore with a metallic appearance and especially to ores now classed as pyrites. The term is now confined to a special variety of iron pyrites. See மாட்சிகம்.

**நிமிளை,** இது பஞ்சலோகத் தொன்று; இது பொன் நிமிளை, வெள்ளி நிமிளை, வெண்கல நிமிளை, செம்பு நிமிளை எனநான்கு வகையாக தமிழ் வைத்தியத்தில் சொல்லப்படும்; இது விந்துவை வளர்க்கும், bismuth which is considered to be one of the five metals and according to Tamil medicine it consists of 4 varieties called pyrites as gold pyrites, silver pyrites, bronze pyrites and copper pyrites. It has a peculiar property of promoting the secretion of semen.

2. அம்பர், amber.

3. உபரசச் சரக்கிலொன்று, one of the 120 kinds of natural substances as per Tamil Medicine.

4. பொன் மணலில் இரசம் விட்டு உருக்கின சரடு, a crude product obtained by melting a gold ore mixed with mercury.

**நிமிளைச்சத்து,** பொன்னி மிளையோடு அரிதாரம், வங்கம், பூநாகம் முதலியவைச் சேர்த்து நூலிற் சொல்லியபடி தயாரிக்கப் படும் ஓர் வைப்புச் சரக்கு, a prepared compound of bismuth obtained from a mixture of gold pyrites, orpiment lead and earthworm as laid down in Tamil Medical Science.

**நிமிளைச் சத்து மூலி,** வில்வம், bael tree—Crataeva marmelos; 2. புளியாரை, sour-sorrel — Oxalis corniculata.

**நிமிளைபற்பம்,** சுத்தி செய்த நிமிளையோடு வெடியுப்பையும் மற்ற சரக்குகளையும் சேர்த்து அரைத்து புடமிட்ட பற்பம், white bismuth or subnitrate of bismuth—Bismuth subnitrus. It is a white powder obtained by calcining the product of purified bismuth which is ground well with nitre mixed with other drugs as laid down in Tamil Medicine

NOTE. It should not be confounded with oxide of bismuth which is dull lemen yellow powder, the therapeutic properties of which are similar to the carbanate of bismuth which acts also in the same manner as the subnitrate.

**நிமிளை புஷ்பம்,** see நிமிளை பற்பம்.

**நிமிளைவகை,** தமிழ் வைத்திய நூலின்படி இது அடியிற்கண்ட வாறு பலவகைப்படும், according to Tamil Medical science bismuth consists of the following varieties; 1. பொன்னிமிளை, (எமி நிமிளை) gold pyrites; 2. வெள்ளி நிமிளை, (இரசித or சுவேத நிமிளை) silver pyrites; 3. செம்பு நிமிளை, copper pyrites; 4. ஈய நிமிளை, tin pyrites; 5. வெண்கல நிமிளை, bronze pyrites; 6. உலோக நிமிளை, ron pyrites ; 7. சத்தி நாத லோக நிமிளை; 8. துரைச்சி நிமிளை.

**நிமிலனம்,** கண்ணிமைப்பு, twinkling of the eye; 2. மரணம், death.

**நிமேசகம்,** மின்மினிப்பூச்சி, firefly, glow-worm.

**நிமேஷவர்த்தமம்,** கண்ணின் இமைச்சந்தில் வாயு நிற்கும்போது, ஓயாது இமைகளைக் கொட்டி, ஒரு வேளை மூடவும், திறக்கவும் செய்யுமோர் வகைக் கண்ணோய், an eye disease characterised by constent winking of the eyelids owing to the incarceration of the deranged vayu within the nerves or veins controlling their winking.

நிமேஷா, அடிக்கடி கண் சிமிட்டல். winking very often.

நிமை, கண்ணிமை, twinkling of the eye; 2. இமைப்பொழுது, as much time as taken for twinkling of an eye - moment; 3. கண் இரப்பை, eye lid.

நிமைக்கழலை, கண் இரப்பையில் வரும் கட்டிகள், a tumour in the eyelid — Blepharoneus.

நிமைக்கொட்டல், கண் இரப்பையை மாறி மாறி வேகமாக மூடவும் திறக்கவும் செய்தல், closing and opening the eye lids alternatively and also rapidly—nictating; 2. சாடை காட்டல், giving a hint or intimation by the motion of eyelids.

நிமைதுனம், புணர்ச்சியினின்று விலகி நிற்றல், abstaining or refraining from copulation.

நிமைத்தடிப்பு. இமைத் தடிப்பு, the morbid thickening of an eyelid — Blepharopachynsis.

நிமைத்தொங்கல். கண் இரப்பை வாயுவால் செயலற்றுத் தொங்கல், drooping of the upper eyelid from paralysis.

நிமைமூடல், கண் இரப்பை மூடல், shutting or closing of the eyelids.

நிமையழற்சி, கண் இரப்பைக்குக் காணும் அழற்சி, inflammation of the eyelids — Blepharitis.

நிமையாட்டம், கண் இரப்பையின் ஆட்டம், constant movement of the muscles of the eyelid.

நிமையொட்டல், கண் இரப்பைகளைச் சேரத் தைத்தல், to stitch the upper and lower lids together — the plastic surgery of the eye lids — Blepharoplasty.

நிமைவீழ்ச்சி, கண் இரப்பை செயலறல், paralysis of an eyelid — Blepharoplegia.

நிம்தேசன், கொத்தான், air creeper — Cassytha filiformis.

நிம்பகம், வேம்பு, margosa tree — Azadiracta indica.

நிம்பக்காய், வேப்பங்காய், margosa fruit; 2. எலுமிச்சங்காய், lime fruit.

நிம்பங்காய், வேப்பங்காய், margosa fruit.

நிம்பசேதம், முடக்கொத்தான், palsy curer— Cardio spermum halicacabum.

நிம்பச்சளி, வேப்பம் பிசின், resin of gum of margosa tree.

நிம்பச்சாறு, எலுமிச்சம்பழச்சாறு, juice of lime fruit or margosa fruit.

நிம்பதரு, வேப்பமரம், margosa tree; see நிம்பகம்; 2. எலுமிச்சை மரம், lime tree— Citrus medica (acida).

நிம்பதேசி, முடக்கொத்தான், see நிம்ப தேசம்.

நிம்பதைலம், வேப்பெண்ணெய், margosa oil; 2 வேப்பெண்ணெய்த் தைலம், a medicated oil prepared with the margosa oil as the chief ingredient along with other drugs.

நிம்பத்தோல், வேப்பம்பட்டை, bark of margosa tree.

நிம்பநெய், வேப்பெண்ணெய், margosa oil; 2. வேப்பெண்ணெயினின்று கசப்பெடுத்த நெய், ghee extracted from the margosa oil by getting rid of its bitterness—Margo ghee.

நிம்பபஞ்சகம், வேப்பமரத்தின் ஐந்து பாகங்கள் அதாவது இலை, பட்டை, பூ, காய் அல்லது பழம், வேர், the five products or parts of the tree — root; bark, leaf, flower and fruit.

நிம்பபத்திரி, வேப்பிலை, margosa leaf.

நிம்பப்பழம், வேப்பம்பழம், margosa ripe fruit; 2. எலுமிச்சம்பழம், lime fruit.

நிம்பப்பாசி, வேப்பம்பாசி, an acquatic plant — Moschara corallina.

நிம்பப்பாசிகம், எலுமிச்சம் பழச்சாறு, juice of lime fruit.

நிம்பப்பூ, வேப்பம் பூ, margosa flower.

நிம்பமரம், வேப்பமரம், margosa tree, see நிம்பதரு.

நிம்பமேற்புல்லுருவி, வேம்பின் புல்லுருவி, a parasitic plant growing on margosa tree— Margosa parasite.

**நிம்பமோலி,** வேப்பம்பட்டை, bark of margosa tree.

**நிம்பம்,** வேம்பு, margosa tree; 2. எலுமிச்சை, lime tree.

**நிம்பயிலே,** வேப்பிலே, margosa leaf; 2. கறிவேப்பிலே, curry leaf used in preparation of food — Murraya koenigii.

**நிம்பயீர்க்கு,** வேப்பிலே யீர்க்கு, the leaf stock of margosa tree.

**நிம்பவித்து,** வேப்பங்கொட்டை, margosa seed.

**நிம்பழச்சாறு,** எலுமிச்சம்பழச்சாறு, juice of margosa fruit or lime fruit.

**நிம்பாதிச்சூரணம்,** நிலவேம்பு ஆதியாக மற்ற கடைச் சரக்குகளுடன் சேர்த்து விஷசுரத்துக்குக் கொடுக்கும் (ஆ. வே.) சூரணம், an Ayurvedic powder preparation containing the powder of ground neem as chief ingredient useful for fevers.

**நிம்பிச்சி,** சர்க்கரை வேம்பு, sweet margosa so called from its bark being sweet after some years.

**நிம்பியம்,** வாழை, plantain tree — Musa paradisiaca.

**நிம்புகம்,** எலுமிச்சை, lime — Citrus medica.

**நிம்பெண்ணெய்,** வேப்பெண்ணெய், margosa oil obtained from the seeds of the tree.

**நியக்கி,** மான், deer, 2. நியக்கு, which see.

**நியக்கியம்,** நரிமுருங்கை, tranquebar genderussa—Justicia tranque barensis.

**நியக்கு,** நாளம், elder wood tree vine — Leea sambucena.

**நியக்குரோதம்,** ஆலமரம், banyan tree— Ficus bengalensis.

**நியங்கு,** பொன், gold.

**நியதி,** கிரமம், fixed order of things; 2. ஊழ், destiny, fate; 3. செய்கடன், religious or moral duty; 4. தத்துவம், one of the thirty six principles in mystic philosophy.

**நியதீசம்,** சுனைப்புன்கு, rusty soap nut— Erioglossum adule.

**நியதேந்திரியன்,** இந்திரியங்களை அடக்குபவன், one who suppresses the five senses, one restraining his passions.

**நியமம்,** நீர் முள்ளி, water thistle — Barleria longifolia; 2. இடம், place, location, 3. ஒவ்வொருவரும் அனுசரிக்கவேண்டிய கடமைகள், certain minor duties to be observed by every man; 4. செய்கடன், moral obligation or duty; 5. முறைமை, established course rite or ceremony; 6. அஷ்டயோகத் தொன்று, (in philosophy) one of the eight stages of yoga. i.e. the second stage of yoga; 7. மதக்கொள்கை, religious observances, a rule or precept laying down or specifying something otherwise optional; 8. மனவடக்கம், restraint of the mind; 9. யோகாப்பியாசத்தில் இயமம் என்பதைத் தவிர்த்து மற்ற முறைகளை அனுசரிப்பது, any act of voluntary penance or meritorious piety in yoga practice other than yamam; restraint of appetite especially a lesser vow or minor dependant on external condition, not so obligatory as இயமம்; 10. உலோகங்களில் அவைகளில் முக்கியமாக இரச முறையில் அனுசரிக்க வேண்டிய கோட்பாடு, a process applied to minerals especially to quick silver.

**நியமனம்,** வேம்பு, margosa.

**நியமித்தல்,** பிறப்பித்தல், causing to originate, bringing into being.

**நியரசம்,** see நியரதம்.

**நியரதம்,** வேம்பு, margosa tree.

**நியா,** சிவதுளசி, Shiva's basil — Basilicum alba.

**நியாக்கியம்,** பொரியரிசி, fried rice.

**நியாக்குரோதம்,** see நியக்குரோதம்.

**நியாசதி,** அனிச்சை, snake jasmine — Rhinacanthus communis.

**நியாசம்,** முணுமுணுத்தல், uttering words with a low voice and compressed lips — muttering; 2. அங்கநியாசம், கரநியாசம்,

இது அனுஷ்டான முறைகளைச் சேர்ந்தது, appropriation or the assignment or various parts of the body to tutelary divinities, while repeating incantations in the daily worship; 3. வேம்பு, margosa tree; 4. துறவு; renouncement.

**நியாசிசம்**, a painless circular eruption of dark colour — Chloasma.

**நியாதம்**, வேம்பு, margosa tree.

**நியாயம்**, தர்க்கம், logical conclusion; 2. நையாயிகம், Nyaya philosophy — one of the six schools of philosophy; 3. தரிசனம் அதாவது ஆத்மத்தின் தெய்வத் தன்மையையும், மூலகாரணத்தையும், உலக விஷயத்தில் மாயையின் சம்பந்தமும் அதன் கோட்பாடுகளும், கடைசியாக அதினின்று விலகி பரமாத்மாவில் ஐக்கிய படுமென்பதையும் உணர்த்தும் தத்துவம், the study of philosophy which teaches man the devine nature and origin of his immaterial part with unreality of corporeal enjoyments or worldly forms and which separating him during life from terrestrial objects secures him after death a final emancipation from existense and reunion with the universal spirit.

**நியானம்**, பொதுவாக ஞானம், knowledge in general; 2. தத்துவஞானம், knowledge of a specific and religious kind derived from meditation and study of philosophy; 3. ஆண் அல்லது பெண்ணின் பெயர், name of male or female especially among christians.

**நியுத்தன்**, பொருளில் இச்சையுள்ளவன், materialist; 2. பொருளாசையில் மனங் கவிந்தவன், one engrossed in matter or material.

**நியுப்பிசம்**, நோய், disease; 2. உப்பிசமில்லாமை, not shout but thin and slender; 3. வீக்கமின்மை, absence of swelling.

**நியோதுாற்றி**, கடம்பு, cadamba tree — Nanclea cadamba alias N purpurea.

**நிரகுள்ளி**, நொச்சி, five leaved chaste tree — Vitex negundo.

**நிரசசாஸ்திரம்**, விளைதாதுவைப் பற்றிக் கூறும் நூல், the science which treats of the properties of mineral substances and *their classifications — Mineralogy.*

**நிரசநூல்**, see நிரசசாஸ்திரம்.

**நிரசபாஷாணம்**, விளைதாதுவினால் ஏற்பட்ட விஷம், minoral poison.

**நிரசம்**, ரசமற்றது, சாரமற்றது, juiceless, inorganic.

**நிரசவஸ்து**, தாதுப்பொருள், mineral substance.

**நிரசவர்க்கம்**, தாதுவர்க்கம், mineral kingdom.

**நிரசவிஷம்**, see நிரசபாஷாணம்.

**நிரசவுப்பு**, தாதுவுப்பு, mineral salt.

**நிரசனம்**, வாந்தியெடுத்தல், vomiting.

**நிரசன்னி**,

**நிரஞ்சத்திமூலி**, நிலத்துளசி, ground basil — Ocimum prostatum.

**நிரஞ்சனம்**, இரசகற்பூரம், Subchloride of mercury — Hydrargiri Subchloridum; 2. ஞானக்கண், eye of wisdom; 3. உணவு கொள்ளாமை, abstaing from food.

**நிரட்டிகா**, கண்டங்கத்திரி, yellow berried night shade — Solanum jacquini.

**நிரந்த**, நிரமற்ற, exsanguini, colourless.

**நிரந்தரம்**, குரங்கு, monkey; 2. சமம், equality; 3. நெருக்கம், closeness.

**நிரத்திரியம்**, பேடித்தனம், impotency; 2. ஆண்மையில்லாமை, destitute of manly power.

**நிரபம்**, நீரற்றது, sapless ness; 2. சாறற்றது, devoid of juice.

**நிரபி**, மரமஞ்சள், tree turmeric — Coscinium fenestrutum.

**நிரப்பலா**, ஆசினிப்பலா, the bread fruit tree — Artocarpus incisa.

**நிரம்பியபுட்பம்**, வாழைப்பூ, plantain flower.

**நிரம்பியமரம்**, வாழைமரம், plantain tree — Musa paradisiaca; 2. தென்னைமரம், cocoanut tree — Cocos nucifera; 3. ஆலமரம், *banyan tree — Ficus bengalensis.*

**நிரயாசிப்பால்**, see நிரியாசப்பால்.

**நிரா**, தென்னங்கள்ளினின்று உண்டாகும் ஓர் தித்திப்பான மது, a sweet drink extracted from the cocoanut toddy — Cocoanut wine.

**நிராகம்**, உடலின்மை, not having a material body — Incorporeality.

**நிராகாரநிலை**, உண்ணுமலை நிற்கும் யோக நிலை, a stage of yoga in which the practising yogi remains abstaining from food and drink.

**நிராகாரம்**, உணவின்மை, want of food; 2. உணவு வேண்டாமை, no appetite for food.

**நிராசிராவம்**, மாதவிடாய் இரத்தம் படாமை; absence of discharge of blood.

**நிராடகோலம்**, வேங்கைப்புலி, man - eater.

**நிராடபதி**, உடும்பின் கொழுப்பு, fat of guana.

**நிராதாரம்**, சுவாதிட்டானம், which see. One of the six regions of the body situated in genitals. c. f. ஆருதாரம்.

**நிராதேவி**, வட்டத்திருப்பி, sickle leaf — Sida acuta.

**நிராபாதை**, துன்பம் அல்லது வலியற்றது, not causing any injury or pain — Painlessness.

**நிராமச்சுரம்**, (நிர் + ஆமச்சுரம்) ஆமாசயக் கெடுதியால் புசிக்கும் அன்னம் சிரணியாமல் அதிசுபேதி, தாகம், நாவறட்சி முதலிய குணங்களைக் காட்டும் ஓர்வகைக் காய்ச்சல், இது 7 நாளைக்கு மேற்பட்ட சுரம், a kind of fever arising from gastric disorders in the stomach. It is marked by indigestion, violent diarrhoea, thirst, dryness of the tongue etc. It continues for over seven days.

**நிராமயசெயநீர்**, அண்டச் செயநீர், a pan gent liquid extracted from a fowl's egg or from the foetus.

**நிராமயதி**, கலவியின் பந்தருகை, giving pleasure by sexual union.

**நிராமயம்**, நோயின்மை, absenee of illness; 2. சௌக்கியம், healthy; 3. பன்றி, hog.

**நிராமயன்**, நோயற்றவன், one who is free from illness, healthy man; 2. கும்பிப்பவன், one who suppresses respiration; 3. யோகி, a yogi.

**நிராமலம்**, விளா, wood appie tree — Feronium elephantum.

**நிராமாதிசாரம்**, உஷ்ண பேதி, diarrhoea from excessive heat of the body; 2. சீதபேதி, dysentery.

**நிராமாலு**, விளாமரம், see நிராமலம்.

**நிராமிலம்**, திராவகச்சத்தற்ற, non acid.

**நிராலம்பம்**, that which has no support i. e. by which the mind's connection with the world has been removed and realisation of the infinite established.

**நிரிகதபம்**, இருருயத்தின் உட்புறத்து சவ்விற்குக் காணும் அழற்சி, இது வாதசூலை, அதிதசுரம் முதலிய நோய்களிற் காணும், inflammation of the epithelial lining of the heart (endocardium) — Endocarditis. It is generally associated with acute rheumatism and febrile diseases.

**நிரிகதாபனரோகம்**, முட்டையின் வெள்ளை அம்புலியைப் போன்ற திரவம் யோனியிலிருந்து வெளிப்படுமோர் நோய், a whitish viscid discharge like the white of an egg from the vagina and uterine cavity — Leucorrhoea.

**நிரிகம்**, தாமரைக் காயின் அல்லது இருதயத்தின் உட்புறத்து சவ்வு, the membrane lining the interior of the heart — Endocardium.

**நிரியசம்**, வேம்பு, margosa or neem tree — Azadirachta indica.

**நிரியம்**, தினை, Italian millet — Panicum italicum.

**நிரியாசப்பால்**, எரிகாசு, java storax — Althingia excelsa, See நெரியாசிப்பால்.

**நிரியாசம்**, மராமரம், Indian dammar, black dammar — Shorea robusta; 2. ஓர் பிசின், gum or resin of Engenia racemosa; 3. மரத்தின்பால், Exudation from tree as சால நிரியாசம், அசுவகரண நிரியாசம், which means shorea resin; 4. பூண்டின்பால் அல்லது ரசம், juice of plants resin, milk any thick fluid substance from plants, see நெரியாசிப் பால்.

**நிரியானக்குறி,** மரணக்குறி, symptoms of death.

**நிரியாணதிசை,** சாவுங்காலம், period of death.

**நிரியாணம்,** மரணம், death; 2. பிறவி நீங்கல், freedom from birth.

**நிரீட்சணம்,** பார்வையின்மை, blindness; loss of sight.

**நிருகம்,** மானிடருக்கடுத்த வியாதி, diseases peculiar to human beings — Endemic.

**நிருக்கிட்டுக்கொடுத்தல்,** மருந்தை அளவிட்டுக் கொடுத்தல், giving medicine in proportionate doses.

**நிருக்கிரம்,** (நிர் + உக்கிரம்) கொடுமையின்மை, absence of violence, non - violent; 3. உக்கிரமற்றது, non — malignant as in fever, tumour etc

**நிருச்சுவாசம்,** மூச்சின்மை, absence of breath; 2. மூச்சடக்கம், suppression of breath; 3. மூச்சொடுக்கம், suspension of breath.

**நிருதிதா,** கோடாசூரி, a virulent mineral poison.

**நிருதிரம்,** குரத்தம், அதாவது இரத்தமின்மை, (நிர் + உதிரம்), bloodless ness — Anemia.

**நிருத்தகண்டம்,** மூச்சுவிட முடியாமை, having the breath obstructed; suffocated; 2. தொண்டை அடைப்பு; obstruction in the throat.

**நிருத்தகுதம்,** ஆசனச் சுருக்கம், constriction of the anus stricture of the rectum; contraction or obstruction the anus. In this cathetars should be used or inserted in the same way as in case of urethra.

**நிருத்தப்பிரகாசம்,** வாயுவினால் இலிங்க மணிக்கு மேலாக இழுத்த முன் தோல் அம்மலரில் பிதுவாக பிடித்து அதனால் கீழுக்குத் தள்ள முடியாமலும், மூத்திரத்தாரையை நீர் வெளிவராது அழுத்தியும் வலியை யுண்டாக்கி துன்பத்தைக் கொடுக்கும் ஓர் நோய் the prepuce affected by deranged vayu when once drawn quite behind the glans penis cannot be drawn down to its original position owing to its contraction by which the passage of the urethra is obstructed and the emission of urine is completely stopped — Paraphimosis, see நிருதி மொய்த்தல்; 2. மேக சம்பந்தத்தினால் மூத்திரத்தாரை அடைப்பட்டு, அதனால் சிறுநீர் வெளிவராது வருத்தத்தையும் வலியையும் உண்டாக்குமோர் நோய் obstruction to the free passage of urine due to the abnormal narrowing of the urethra either from contraction or from deposit of abnormal tissue. This condition is attributed to venereal or syphilitic causes.

**நிருத்தப்பிரசவம்,** பெண்ணின் யோனித் தாரையில், கழலையாவது தடுத்தும் அல்லது மேற்படி தாரைச் சுருக்கம் அடைந்தும் இருப்பதால் கருப்பிண்டம் வெளிவர முடியாது கஷ்டப்படும் பிரசவம். child birth which is attended by some mechanical hindrance as from a tumour or a contracted parturient cannal — Obstructed labour.

**நிருத்தமணி** வாயுவினால் ஆண்குறி முனைத் தோல் சுருக்கமடைந்து அதனால் மேலுக்குப் போகாமல் துன்பத்தையும், வலியையுமுண்டாக்குமோர் நோய், இதனால் மூத்திரம் சன்னமாக விறங்கும், a disease in which the foreskin of the penis becomes contracted and consequently it cannot be drawn backwards without much pain and difficulty. In Sanskrit it is called பரிவர்த்திகம் — Phimosis. see நிகுதிமுருத்தல் நோய்.

NOTE: Even if it is drawn behind the head of the penis it takes the form of a knotly growth hanging down wards.

**நிருத்தமண்டலம்,** iris.

**நிருத்தம்,** எந்த தாது பற்பமாக செய்யப்படுகிறதோ அந்தத் தாதுவை எவ்வித உபாயத்தினாலும் அப்பற்பத்தினின்று பிரித்தெடுக்கக் கூடாமை, the impossibility of eliminating by any contrivance or means. the element from the calcined compound of which it formed a component part.

**நிருபாதி,** வருத்தம் அல்லது வலியின்மை absence of pain or suffering.

**நிருபாதிகம்,** உபாதியில்லாமை, freedom from secularities.

**நிருமலம்,** பால் துத்தம், white vitriol — Sulphate of zinc.

**நிருமாலியம்,** கூவிளம், garlic pear — Crataeva religiosa (nurvala).

**நிருமிதி,** நிருவாணம், nakedness.

**நிருமூலி,** நிர்மூலி, see நீர்மூலி,

**நிரும்போன்,** இரும்பு, iron — Ferrum.

**நிருவாகசக்தி,** power of retension.

**நிருவாகம்,** complete realisation.

**நிருவாணதீட்சை,** சிவ தீட்சை மூன்றில் ஒன்று, the last of the three introductory rites & ceremony of intiation by a spiritual Guru according to Saiva system

**நிருவாணம்,** 1. அம்மணம், nakedness, quite naked — Inpuris naturalibus.

2. அமைதி, absolute repose; freedom from disturbance or agitation

3. மௌன நிலை, quietude of an ascetic.

4. அபேத நிலை, indifference to pain or pleasure insensibility to bodily or mental pain — Stoicism.

5. ஆத்ம விமோசனம், (in Philosophy) emancipation of the soul.

6. ஆத்ம லாபத்தைப்பற்றிய புத்தமதக் கொள்கை, (In Budha Philosophy) a term used for final emancipation from matter and reunion with the deity.

7. நிவிருத்தியாலும் உண்மையறிவை அடைவதினுலு முண்டாகும் ஆத்ம விமோசனம், the final emancipation conferred upon the soul by the right apprehenson of truth.

8. விதேகமுத்தியைப் பற்றிய ஜைன்ய அல்லது சமண மதக் கொள்கை, (In Jain Philosophy) the highest state of bliss to which a man is exalted by meditation and renunciation

9. நீதிமுறை பிசகாது தியாகத்தை மேற் கொண்டு நடத்தலினுல் ஏற்படும் ஆத்ம விமோசனம், (in Moral Philosophy) the transcendant perfections of conduct and self mortification leading one to the spiritual goal.

**நிருவாணி,** சக்தி, the Universal energy represented in the form of a naked woman; 2. தோஷிதச வித்தைகளிலொன்று, one of the ten active powers of the female energy or deity.

**நிருவாணி பூண்டகிண்ணி,** அப்பிரகத்தில் சத்தெடுத்து அதை உருக்கிச் சாய்த்து வார்த்த கிண்ணி, அப்பிரகக்கிண்ணி, mica dish, which is made from the essence of mica by melting it and casting in a mould.

**நிருவாலி,** காட்டுப்பூவரசு, false fern tree — Folicium decipiens.

**நிருவிகற்பசமாதி,** சவிகற்பசமாதி முற்றி அருளம்மையால் அறிவிக்கப்பட்ட அருளாளன் ஆகிய அப்பனை அறிந்த ஞான்றே சிவ தத்துவங்களும் அவற்றின் செயற்கைகளும் நன்கு விளங்கப்பெற்று, அந்தப் பரம் பொருளைக் கூடிநின்று விட்டுப் பிரியாது மகிழுவதாம், a state of ecstacy in which one obtains wisdom by the grace of the diety and enjoys the bliss by the union with the almighty.

**நிருவிகற்பசமாதி,** தன்னை மறந்து தூக்க முறும், மயக்கம்போல பிறர்சத்தம் காதிற் கேளாது ஐம்புலனும் ஒடுங்கி, சித்தமானது பூரணத்தில் இலயித்திருக்கும் ஓர் யோக நிலை, விவகாரத்தாலே உலகமே பொய்யென் றுணர்ந்து உலக பாசத்தைத் தள்ளி நிற்பதி னுல் அடையும் சைதன்யநிலை, that state of perfect and spiritual ecstacy experienced by a sitting yogi, in which he remains in audible to the surrounding disturbances being absorbed in eternal bliss. Saitanyam (சைதன்யம்) is a stage where nothing exists but the transformation of mental consciousness in the form of Atman (Soul). It is an abstract meditation

**நிருவிகற்பதோஷம்.**

**நிருவிகற்பமாதல்,** விவகாரத்தாலே உலகமே பொய்யென்று தனக்குள் நினைத்து உலக பாசத்தைத்தள்ளி சைதன்யநிலையை அடைதல், that state of insensibility to one's own surroundings, arrived at by a practising yogi by renunciation being appraised of the supreme knowledge that the material world is false. This stage can only be acquired by those who altain super natural illumination without the aid of physical or mental organs.

**நிருவிகற்பவாழ்க்கை,** மவுனம் சாதித்தல், to remain silent.

**நிருவிஷப்பாம்பு,** நஞ்சு இல்லாத பாம்பு, serpent with poison.

**நிருவிஷம்,** விஷமற்ற ஓர்வகை நாபிக்கிழங்கு, இதற்கு வடமொழியில் நிர்பிஸி என்றும், அரபிபாஷையில் ஜாத்வார் என்றும் சொல்வதுண்டு, இது ஓர் கடைச்சரக்கு, வடசீனத்தி லிருந்தும், இமயகிரிக்கு அப்பாலிருந்தும் ஏற்றுமதியாகும், இதற்கு சீமை சாத்துவார் என்றும் பெயர்; இது ஓர் புல்செடி, இது முளைத்திருக்கும் இடத்தில் நாபி முதலிய விஷப்பூண்டு முளைத்தால் இதன் சக்தியால் விஷத்தன்மை மாறிப்போம், இது ஐதராபாத் பம்பாயில் விலை சரசமாயும், சென்னை பட்டணத்தில் ஏற்றமாயுமிருக்கும், ரூபா

எடை 1 — 10 ரூபாய், போலி சரக்கும் விற்பார்கள், இது உளுக்குந் தன்மையது, சரியான கசப்பாயிருந்தால் உளுக்காது. இது நரம்பாதிகளை முறுக்கேற்றி பலப்படுத்தும்; ஆண் சக்தியை உண்டாக்கும்; இது 5 - 7 வகையெனினும் மூன்றுவகைதான் பிரதானம், அதிலும் ஒன்றுதான் சிறந்தது. இது $\frac{1}{2}$ - 1 அங்குல நீளம், கோரைக் கிழங்கைப் போல் உள்ளே துளையுள்ளது, தாமரை முகிழ் போல் கூம்பினதாய் இருக்கும், சுருங்கித் திரைந்து மடிப்புள்ளதாயும், கரடு முரடுள்ளதாயு மிருக்கும், கத்தியால் இலேசாய்த் தறிக்க முடியாது, உள்ளும் புறமும் கருப்பு அல்லது ஊதா நிறம் பெற்றதாயிருக்கும், கலப்பற்ற சிறு கசப்பும் விருவிருப்பும் கரகரப்புமுள்ளது, உளுக்க மாட்டாது, மற்றொரு இனம் முதல் தரத்தைப் போலிருந்தாலும் கரடுமுரடு இல்லாதது, உட்பக்கம் இருண்ட ஊதாவும், வெளிப் பக்கம் சுத்த ஊதாவர்ணமும் பொருந்தியது, சிறு கசப்பு உருவத்தில் நாபியைப்போலவிருக்கும், ஆகையால் இதை நீக்குவதே உத்தமம், மூன்றாவது இனம் $1\frac{1}{4} \times 1 \times 1\frac{1}{2}$ அங்குலம் திரண்ட வடிவு, தாமரை முகிழ் போலும் சல்லிவேர்க் கணுக்கள் கரடுமுரடாயுமிருக்கும், வெகு லேசாய்க் கத்தியால் தறிக்களாம், ஆனால் முதலில் சொன்ன இனந்தான் மருந்திற் குபயோகமாகும்; இது வியாதபேதகாரி, காமவிர்த்தினி, சடராக்கின வர்த்தனி, பலகாரி, விஷநாசகாரி இக் குணங்கள் பொருந்தியது, இது பார்வைக்குக் கரு நாபியைப் போலவிருக்கும், இதன் வேரைச் சிறிது வாயிலிட்டு மெல்லப் பல்வலி நீங்கும், அன்றியும், வாதக் குடைச்சல், சுரம், வாதப்பிடிப்பு, பாம்பின் விஷம் இவைகள் நீங்கும், இதன் சன்னவேரைக் கஷாயமாகவும், சூரணித்து தேனிலும் உட்கொள்ள சுரம், அதனாலுண்டான நரம்பிசிவு, கைகால் குடைச்சல் மேகம் இவைகள் போம்,

இதைச் சூரணித்து அம்பர், குங்குமப்பூ இவைகளுடன் சேர்த்து மாத்திரையாகச் செய்து கொடுக்க இந்திரிய உடைச்சலையும், ஆண்குறித் தளர்ச்சியையும் குணப்படுத்துவதல்லாமல் இருதயம், மூளையைப் பற்றிய நோய்களுக்கும் கொடுக்கலாம்.

சாதாரணமாக மருந்துக் கடைகளில் ஆகாசக் கருடன் கிழங்கின் வற்றலை நிர்விஷம் என மோசடியாய்க் கொடுப்பது வழக்கம், ஆனால் இங்கு கூறப்பட்ட சரக்கு வேறு இனம், non — poisonous aconite root — Delphinium denudatum. In Sanskrit it is known as Nirvishi, in Arabic 'Jadwaur', it is a bazaar drug. It is exported from North China and far regions of Himalayas. It is also called foreign Jadwaur. It is a grassy plant and in places where it is found grown, the other poisonous plants lose their efficacies and are reudered inoperative. It is sold cheaply in Hydrabad and Bombay, but is very dear in Madras for the reason that one rupee weight of this drug is sold for 1.7 Re, sometimes substitutes are also sold It is worm eaten and as such is unfit for use, if bitter, it will not be affected by worms. It tones the nervous system and promotes verile power. Although the drug consists of 5 or 7 varieties only three of them are generally spoken of and out of them only one is selected for use in medicine.

*This variety is $\frac{1}{2}$ to 1 inch in length* resembling the tuberous korray root (cyperus pertenuis) with a cone shaped like lotus bud, slightly wrinkled longitudinally, marked with rough surface, difficult for cutting into slices, purple or dark purple in and out, slightly bitter and acrid, not worm eaten.

The second variety though resembling the first is devoid of rough surface, internally dark purple and purple out side, slightly bitter, appearance like aconite, found unfit for use. Where as the third variety $\frac{1}{4} \times 1 \times 1\frac{1}{2}$ cinches cylinderical in shape, tapering towards a point like lotus bud, surface rough with root let scars, easily sliced.

The first variety is the one useful in medicine. It is altrative, aphrodisiac and stomachic, a tonic and also an antidote. It resembles black aconite in appearance the root when chewed removes the tooth ache. It acts successfully in rheumatic pains, fever, gout, snake poison etc. The tender roots as decoction or as powder mixed with honey are found useful in nervous pain, rheumatic pains of the limbs veneral complaints etc. Powdered drug mixed with amber and European saffron is made into pills and prescribed for seminal disorders,

impotancy and also in cardiac and cerebral complaints. The dried sky root is substituated and sold in bazaars. The root here dealt with is quite a different drug.

NOTE :— This should not be confounded with கஸ்தூரி மஞ்சள், round zedoary — *Curcuma zedraria also called* Nirvisham and Jadwaur referring to non poisonous aconite litle has no connection with zedoary. The Singalese name Nirvisha is often applied to *the root of வசநாபி* ( Aconitum ferox ) but it is not restricted to that drug.

**நிரூகணம்,** வஸ்திப் பிரயோகத்தினுல் மலங் கழுயும்படி செய்தல், causing to purge with the aid of a clyster.

**நிரூகம்,** மலங்கழிவதற்காக ஆசனத்திற்குள் புகட்டும் யந்திரம், a purging clyster, an enema not of an oil kind.

**நிரூகவஸ்தி,** கஷாயம் முதலியவைகளை ஆசன வழியாய் உள்ளுக்கு செலுத்திக் குடலைக் கழுவல், a liquid form of medicine as decoction etc., thrown into the rectum by a clyster.

**நிரூபணம்,** மெய்ப்பித்தல், to prove.

**நிரூபம்,** உருவில்லாமை, shapeless ness.

**நிரை,** பசு, cow; 2. பசுக்கூட்டம், herd of cows.

**நிரைகர்ப்பம்,** பூரணகர்ப்பம், full term pregnancy.

**நிரைகிளம்பி,** சூலாடு, a pregnant sheep.

**நிரைசன்னி,** சுரம் அதிகரிப்பதால் தொண்டைத் துடிப்பு முதலிய குறிகளையுண்டாக்கும் ஓர்வகைச் சன்னி, paroxysm attended with affection of throat in febrile delirium.

**நிரைபாரமாய்ப்பூட்டல்,** அம்மை நெருங்கக் காணல், confluent small pox; confluent variola.

**நிரைபூத்தி,** கோடகசாலை, coromandal genderussa — Justicia procumbens alias J. ascendens, very common in pasture ground in coromandal coast. Juice of the leaves is squeezed into the eyes in ophthalmia.

**நிரைமணி,** அவுரி, indigo plant — Indigofera tinctoria.

**நிரைமதி,** பௌர்ணமி, full moon.

**நிரைமாதம்,** பூரணகர்ப்பம், full term pragnancy.

**நிரோகி,** நோயில்லாதவன், one free from disease, healthy man.

**நிரோதகரணி,** மின்சார சக்தியைத் தடுக்கும் வஸ்து, a substance which does not transmit electricity — Non-conductor.

**நிரோதம்,** தடை, obstruction; 2. சுருக்கம், stricture.

**நிர்க்கிரந்தம்,** தங்குதடையில்லாமை, free from all ties and hindrances; 2. உலகத்தை வெறுத்து துறவறம்பூண்டு நிர்வாணமாய்த் திரியும் சன்னியாசி, a saint who has with drawn from the world, living as a hermit or religious mendicant and wandering about naked.

**நிர்க்குணம்,** without attributes.

**நிர்க்குண்டி,** வெண்ணொச்சி, white notchi — Vitex negundo; 2. தாமரைக் கிழங்கு, lotus root; 3. கருநொச்சி, black variety of five leaved chaste tree — Vitex negundo — (nigrum).

**நிர்கூடம்,** மரப்பொந்து, hollow of a tree.

**நிர்ச்சலதேசம்,** நீர்வறட்சியுள்ள நாடு dry or barren country.

**நிர்த்தகனம்,** சேரான்கொட்டை, marking nut — Semi carpas anacardium alias Sansviera roxburghiana; 2. புதைத்தல், burying not burning.

**நிர்த்தித்தம்,** கண்டங்கத்திரி, yellow berried night shade — Solanum xanthocarpum.

**நிர்த்துகம்,** கஷாயம், decoction.

**நிர்ப்பத்தியம்,** பத்தியமின்மை, no restriction in diet; non-diet.

**நிர்மலத்துவம்,** நிர்மலமாயிருத்தல், the state of being pure.

**நிர்மலம்,** அழுக்கின்மை, free from dirt; freedom from impurity; 2. சுத்தம்; pure; 3. ஓர்பூடு horse shoe fenugreek — Trigonella corniculata.

**நிர்மலிபாவனம்,** தேத்தான் கொட்டை, water clearing nut — Strychnos potatorum.

**நிர்மாலியம்,** நிர்மலம், which see.

**நிர்மாலினியும்,** கண்சுத்தம் அல்லது துலக்கம், clear eyes.

**நிர்மூலி,** ஒரு பூடு, Aglaia minutiflora.

**நிர்லோகம்,** வெள்ளைப்போளம், myrrh — Balsmodendran myrrha.

**நிர்வமிசியம்,** வீணுத் தண்டின்மை, absence of spine, absence of back bone or veretral column; having a body consisting of single cavity enclosing all their vital organs as sponges, corals, starfish, worm, centipede spider insect etc. It is opposed to வமிசியம்.

**நிர்வாகம்,** புணர்ச்சியில் ஏற்படும் நீண்ட போகம், prolonged inter course.

**நிர்வாணி,** ஆடை யில்லாது அம்மணமாயிருப்பவள், a naked woman; 2. சக்தி; Godess of power energy.

**நிர்வபனம்,** சம னப்படுத்தல், soothing.

**நிர்விஷக்கிழங்கு,** சதாவேரிக் கிழங்கு, water root — Asparagus racemosus.

**நிர்விஷம்,** விஷமில்லாதது, non - poisonous; non - venomous; 2. விஷமில்லாத பாம்பு, non - venomous snake; 3. கஸ்தூரி மஞ்சள், round zodoary — Curcuma zedoaria; 4. ஜாத்துவார், non - poisonous aconite root— Delphinium denudatum. See நிருவிஷம்.

**நிர்விஷம்,** bite or mark without inflammation or changes of blood.

**நிர்விஷம்சுத்தி;** நிர்விஷத்தைத் துண்டுதுண்டாக நறுக்கி எருமைச்சாணியும், எருமை மூத்திரமும் கலந்து அதிலிட்டு எரித்துக் கழுவி உலர்த்தி யெடுப்பது ஓர் சுத்திமுறை, cleaning process of non poisonous aconite root. In this the root drug is sliced and soaked in buffalo dung and urine mixture and boiled. The product is then taken out, washed and dried.

**நிர்விவரம்,** நெருங்கவிருத்தல், (உ-ம்) பெண் முலை, contiguousness as of female breasts.

**நிர்வீரியம்,** ஆண் தன்மையில்லாமை, impotency; 2. சோர்வு, exhaustion.

**நில,** நிலத்தைச் சேர்ந்த, pertaining to land as distinguished from water; 2. பூண்டின் முதற் பெயர், plant first term as referring to lowly habit, often joining the two genera.

**நிலஅவுரி,** பேராவுரி, a large variety of indigo plant—Indigofera tinctoria.

**நிலஆவரை,** நிலாவாரை, senna leaf — Cassia angustifolia alias C. senna; see நிலாவாரை.

**நிலஇலந்தை,** See நிலவிலந்தை.

**நிலகடகம்,** சிவதுளசி, Shiva's basil — Basilicum alba.

**நிலகந்திகம்,** நொச்சி, notchy — Vitex negundo.

**நிலகாருடம்,** கரு நாய், black dog.

**நிலகி,** கள்ளிக் கொடி, creeping milk hedge — Sarcostemma intermedium.

**நிலகிக்கொத்தவரை;** சீனிக் கொத்தவரை sweet cluster bean — Cyamopsis psora lioides.

**நிலக்கடம்பு,** சீமை நிலக்கடம்பு; இது ஐரோப்பியா, அமெரிக்கா, இந்தியா இவ்விடங்களில் உண்டாகும்; இதன்சமூலம் வாசனையாயிருக்கும்; இலைகள் அகலம்; மேற்பக்கம் சிறுபச்சை; உட்பக்கம் நீலம்; மஞ்சள் கலப்பு, பூ இந்திர நீலநிறம், காரம், விருவிருப்பும் வாசனையும் பொருந்தியது; இதைக் கஷாயமிட்டுக் கொடுக்க வாந்தியையும் பேதியை யுமுண்டாக்குவதுடன் வாயுவைக் கண்டித்து, நீரை வடித்து ஈரல், மண்ணீரல், இரைக்குடல் இவற்றிலுண்டாகிய அழுக்குகளை அகற்றும்; இதன் சமூலத்தைச் சூரணித்துத் தினம் கொள்ள கீல்வாயு, காமாலை, கபம், கல்லடைப்பு, உதிரச்சிக்கல் இவைகள் போம், இச்சாற்றைக் கண்ணைச் சுற்றிப் பற்றுப்போட கண்வலி நீங்கும், இதை நல்லெண்ணெயுடன் சேர்த்துத் தைலமாகக் காய்ச்சி மூழ்கிவர பைத்தியம், சித்தபிரமை முதலிய நோய்கள் குணமாகும், இதன் இலையைச் சூரணித்து நசியமிட மூக்கின் சளியறும், foreign kadamba; asara baeca — Asarum Europaeum. This is not a native of India but a foreign plant and it is generally found in Europe, America and some parts of India where it is naturalised. The plant is aromatic, leaves broad,

greenish out ward and blue inside with a yellowish linge; flowers blue like saphire pungent and acrid to taste with a fragrant smell. It is diuretic and antispasmodic. The leaves as a docoction cause violent purging and vomiting and as such curing liver and spleenic disorders. The powdered dried plant is given internally with great success in rheumatic artheritis, jaundice, phlegm, stranguary, menstrual disorders etc. The juice of the leaves applied externally round the eyes in ophthalmia; medicated oil prepared by mixing the juice with gingelly oil etc., is applied to the head in bath in cases of insansity and other cerebral disorders. The leaves are also used as an errhine.

**நிலக்கடம்பு,** நீபமரம், which see; 2. சிறு கடம்பு, small Kadamba — Justicia acaulis; 3. குதிரைக்குளம்பு, horse hoof plant.

**நிலக்கடலை,** வேர்க்கடலை, இதற்கு மணிலா கொட்டை எனவும், கடலைக்காய் எனவும் பெயர் வழங்கும்; இது தென் இந்தியாவி லும்; பம்பாய், வங்காளத்தில் சிலபாகங் களிலும், மணிலா தீவிலும் விசேஷமாய் விளை யும், மற்றும் தென் அமெரிக்கா, மேற்கு அமெரிக்காவிலும் உற்பத்தியாகும். இது ஓர் படர்கொடி; பூமிக்குள் விதையுண்டாகும், இது வருஷத்திற் கொருமுறை பயிராகி அழிந்துவிடும்; மணற்பாங்கு நிலங்களிற் செழிப்பாய் வளரும், இலைகள் இரண்டு ஜதை, கொடிகள் நீளம், பூக்கள் மஞ்சள், காய்கள் நீளம், விதைகள் அடுக்காயும் ஓரே கூட்டில் 2 - 3 விதைகள் இருக்கும், ஆனி மாதத்தில் பூக்கும், இதன் விதையினின்று எண்ணெய் எடுக்கலாமெனக் கருதி நமது நாட்டில் மிகுதியாகப் பயிரிடுவார்கள், அமெ ரிக்காவில் இதன் வறுத்த பருப்பை சாக் லெட்டுக்குப் பதிலாக உபயோகிப்பார்கள், ஏழை சனங்கள் இதன் பருப்பைத் தின்ப துண்டு, எண்ணெயை விளக்கெரிக்கவும், பதார்த்தங்களுக்கு சமையல் பாகத்திலும் உபயோகிப்பார்கள், இதன் கொட்டை பூமிக்குள்ளிருந்து பிடுங்கி எடுக்கப்படும், இலைகள் ஆடு மாடுகளுக்குணவாகும், இக் கடலை வெளியூர்களுக்கு விசேஷமாய் ஏற்று மதியாகும், இது இரண்டு விதமாயிருக்கும், இதற்கு நாட்டுக்கடலை, மணிலா அல்லது சீமைக்கடலை என்று பெயர், நிறமும் கபில நிறம், வெள்ளை நிறம் என இருவகையா யிருக்கும்.

நிலக்கடலை

வைத்தியத்தில் இவ்வெண்ணெயை ஆலிவ் எண்ணெய், பாதாம் எண்ணெய் இவைகளுக்குப் பதிலாக உபயோகிப்பார் கள், இதற்கு மலத்தை இளகச்செய்யும் குணமுண்டு, இதை உணவாகவும் கொள்ள லாம், இதன் பிண்ணாக்கு நிலங்களுக்கு எரு வாக வுபயோகப்படும், இது மற்றஎண்ணெ யைப்போல் சீக்கிரம் கெடாது, ஆகவே வீடு களில் மிகுதியாக உபயோகமாகும், Manilla nut. It is also called by other names as pea nut, earth nut etc — Arachis hypogaea alias A. americana alias A. africana. It is commonly cultivated in South India and is also grown in Bombay and some parts of Bengal. It is also cultivated in South America, West Africa, Manilla island and other parts of the globe. It is a creeper and the seeds are dug out from the earth. an annual plant, common in sandy places, diffuse stem hardy, leaf lets 2 pair, creepers long, flowers yellow, legumes long stalked; seeds found in layers, 2-3 seeded flowering in June.

It is chiefly cultivated for the sake of the oil yielded by the seeds. The seeds are roasted in America and are substituated for choclate. Oil expressed from them is much used in India for lamps and also in curry preparations. Dehydrated oil is much freely used in preparations of sweet etc. The people boil or roast the fruits and eat the nuts. The leaf affords excellent food for cattle. The cake after extracting the oil from the seeds is also a good food for cattle and is also used as manure. The seeds are largely exported to foreign countries. It consists of two kinds country and foreign nut, the one is brown and the other white. It forms a substitute for almond and olive oils. It is a laxative and an emollient. It is advantageously used as food for the reason that the ground nut meal is superior to any other vegetable product of a similar nature. It does not become rancid so quickly as other oils, as such is much esteemed for domestic purposes.

NOTE:—1. The plant வேர்க்கடலை is so called from the pods burying them selves in the earth where they ripen. After they ripen they are dug out.

NOTE:—2. (by C. D.) There is another variety of short duration which is not a creeper but an erect plant, its nut is called pea nut. Its fruit is also found under the ground. It is only two seeded. It is harvested by pulling out the plant.

**நிலக்கடை,** See நிலக்கடலை.

**நிலக்கடற்செடி,** கடலாரை, sea sorrel — Marsiles genus.

**நிலகஸ்தூரி,** கருமத்தை, black datura.

**நிலக்கரி,** விளைகரி, இது பூமிக்குள் அகப்படும் கரி, சாதாரணமாகப் பூமியில் அனேக காலமாகப் புதைந்து கிடக்கும் மரம், கட்டை முதலிய எரியும் வஸ்துக்கள் பூமியின் உஷ்ணத்தால் தீய்ந்து மாறும் வஸ்து, மற்ற உலோகவஸ்து, வாயு சம்பந்தத்தைவிட கரி அதிகமாகக் கொண்ட வஸ்து, இது கரியினின்று வாலை ரூபமாக இறக்கும் எண்ணெய்ச் சத்துக்குத்தான் தார் என்று பெயர் சொல்வது, இதினின்று மருந்து தயாரிக்கப் படும், நிலக்கரியில் அனேக விதங்களுண்டு, Coal. It is a black solid inflammable substance dug out of the earth and used as fuel. It is formed from vast masses of vegetable matter deposited under the earth partially burned. It is a general term for various substances, characterised especially by the presence of carbon in excess among smaller quantities of other matters gaseous and mineral. The dark semiliquid product extracted from coal by distillation is called coal tar from which many medicines are derived.

1. ஈரக்கரி, Ligniteore brown coal; 2. சமைந்தகரி, Pitch or just coal; 3. கல்கரி, Anthracite coal; 4. பொய்க்கரி, Fossil coal; 5. விறகுக்கரி, Peat coal; 6. நைப்புக்கறி, Bituminous coal; 7. சிடுசிடுப்புக்கறி, cannel coal.

NOTE: It is the result of mineralization of vegetable remains. That is to say vegetable tissues converted into a substance proportionately poorer in water and volatile ingredients but richer in carbon. The different varieties of coal are only transformations in the stages of metamorphosis due to pressure of the deposits of sand mud etc., extending over long periods of time.

**நிலக்கரிவாயு,** நிலக்கரிப்புகை, coal gas.

**நிலக்கருணை,**

**நிலக்கருவேல்,** see கொடிக்கருவேல்.

**நிலக்கறையான்,** புற்றுக் கட்டும் கறையான். white ant that builts anthill on the ground which serves as a hole for snakes to rest.

**நிலக்கலி,** பெருங்கட்டுக்கொடி, big broom creeper — Cocculous villosus.

**நிலக்கலியானபூசனி,** see நிலப்பூசினி,

**நிலக்கன்று,** இளம்பயிர், tender plant; 2. சிறுபயிர், small plant.

**நிலக்காரை,** முட்காரை, thorny webra — Webra tetranda.

**நிலக்காடை,**

**நிலக்காலி,** அவுரி, indigo plant — Indigofera tinctoria.

**நிலக்காளான்,** குப்பையில் முளைக்குங் காளான், furgus growing on rubbish — Toad stool.

**நிலக்காற்று,** பூமியினின்று வீசுங் காற்று, land breeze.

**நிலக்கிழங்கு,** see நிலப்பனங் கிழங்கு, 2. பிண்டம், foetus.

**நிலக்கிழவி,** மூவிலைக் குருந்து, thin leaved wild lime — Trichilia spinosa.

**நிலக்கீல்,** கீல், bitumen, as phalt.

**நிலக்குன்டி,** குன்றிமணி, jeweller's bead.

**நிலக்குதம்,** சேனைக்கிழங்கு, elephant ham — Typhonium trilobatum alias Dracontium maxima.

**நிலக்குமிழ்,** இதுவே நீலக்குமிழ், இது ஓ செடி, இலைகள் நேர் நேராகவும் காம்புகளுடையதாகவுமிருக்கும், முட்கள் வாய்ந்தது, கிளைகளின் முனையில் பூக்கும், பூக்கள் பெரியவை, மஞ்சள் நிறம், வருஷ முழுவதும் பூக்கும், இது பித்தகாரி, காமவிர்த்தினி, இது சல மந்தபேதி, வாதக் கடுப்பு, வெட்டைச்சூடு, வாதப்பிடிப்பு, மந்தம் இவைகள் போம், இதன் இலையைக் கத்தையாகக் கட்டி, தண்ணீரில் சிறிது பொழுது வரை அலசிவர நீர் குழம்பாகத் தடிப்பேறும், இதை உட்கொள்ள, பிரமேகம், மேக வெட்டை, நீர் எரிச்சல் இவைகள் குணமாகும், இதன் வேரை அரைத்து காலையில் நீராகாரத் தண்ணீரில் கலந்து கொடுக்க

உட்சூடு போம்; இதை கண் எண்ணெயில் சேர்த்து குழந்தைகளுக்கு கொடுக்க கணச் சூடு, இரத்தக் கழிச்சல் முதலியவை போம், small Cashmere shrub — Gomelina asiatica. Leaves opposite, petioled. spines axillary flowers from the end of the tender twigs on peduncles, flowers large and sulphur coloured, flowering all the year. It is demulcent and aphrodisiac.

Leaves lied in lumps and tossed about in water renders the water musilaginous, which taken internally proves a useful remedy in gonorrhoea and other venereal affections. It is also employed for the cure of the scalding of urine in gonorrhoea. The root ground into a paste and taken in the morning, mixed with cold rice water tends to remove the internal heat in the system. It also forms one of the ingredients in the preparation of medicated oil prescribed for tabes mesentrica in children.

**நிலக்குமிழ்**, சிறுகுமிழ், இது கர்ப்பத்தை வெளிப்படுத்தும், a shrub of the Gmelina genus — Gmelina asiotica. It is said to be capable of causing miscarriage. It is an abortive drug.

**நிலக்குரா**, நிலக்குரோசினை, இது பித்தளை யின் களிம்பை அகற்றும் வெடியுப்பைச் செந்தூரம் செய்யும், an unknown drug capable of removing verdigris from brass and converting nitre into a red calcined powder.

**நிலக்குரோசினை**, நிலக்குரா, which see.

**நிலக்குழி**, பூமியில் தோண்டும் குழி, a pit dug out in the ground.

**நிலக்குழியிலிடல்**, பூமிக்குள் புதைத்தல், burying under-neath the earth.

**நிலக்கூந்தல்**, see எலிச்செவிப்பூடு, rat's ear — Evolvulus emarginatus.

**நிலக்கொடிவேலி**, See நீலக்கொடிவேலி.

**நிலக்கொட்டு**, ஓர்வகைக்காளான், a kind of fungus.

**நிலக்கொட்டை**, see நிலக்கடலை; 2. ஓர் செடி, a plant — Tragia chamaelia.

**நிலசம்**, துருசு, blue vitriol — Copper acetate.

**நிலசம்பங்கி**, flowering plant — Polyanthus tuberosa alias Koemp feria rotunda.

**நிலச்சருக்கரை**, பூமிசருக்கரைக் கிழங்கு, wild ground potato — Merma arenaria.

**நிலச்சாதிரசம்**, நிலத்திலூறும் தண்ணீர், well water.

**நிலச்சுருங்கி**, தொட்டாற் சுருங்கி, sensitive plant — Mimosa pudica alias Oxalis sensitive.

**நிலச்சேறு**.

**நிலஞ்சோதி**, see நீலஞ்சோதி.

**நிலஞ்சோதி**, சோதிவிருட்சம், tree luminous in the dark burning tree.

**நிலத்தண்டு**, வேர்த்தண்டு, a stem resembling a root — Rhizome; 2. கீரைத்தண்டு, garden green — Amaranthus blitum.

**நிலத்தாமரை**, முட்செவ்வந்தி, rose flower — Rosa damascena; 2. அடுக்கு ரோசா, cabbage rose — Rosa centifolia.

**நிலத்தாமை**, பூமியில் வாழும் ஆமை, இதன் தலை, கால், வால் முதலியவைகளும் ஓட்டிற் குள் அடக்கி வைத்திருக்கும், நீரில்வாழும் ஆமைவேறு, அது மெதுவாக ஊரும், இது கொரநாட்டுக் கடலோரங்களிலும் புதர்களி லும் உஷ்ணவேளையில் மறைந்து கிடக்கும், land tortoise — Testudinidae. The starred tortoise. It has the head, feet and tail concealed or retracted completely within the shell. It is opposed to sea — tortoise, movements very slow. It is found in coromandal coast and low jungles of the Carnatic remains in concealment beneath shrubs or tufts of grass during the heat of the day.

**நிலத்திநாகம்**, பூநாகம், earth worm.

**நிலத்துத்தி**, அரிவாள்மணைப்பூண்டு, இது ஓர் செடி, பூக்கள் நடுத்தரம், மஞ்சள், இதில் வரும் சளிபோன்ற சாற்றில் அன்னத்தைக் கலந்து கொடுக்க சீதபேதி, சுரம் குணமா கும், விதைகளை வயிற்றுவலி, முக்கல், வெள்ளை முதலிய நோய்களைக் கேட்கும், அன்றியும் ஆரம்ப மூலரோகத்தையும், வித் திரதிக் கட்டிகளையும் போக்கும், கருவங்கத் தைப் பற்பமாக்கும், வேருடன் சுக்கு சேர்த் துக் கஷாயமிட்டுக் கொடுக்க முறைசுரம் போம், வேர்ப்பட்டைத் தூளுடன் பாலும் சர்க்கரையும் சேர்த்துக் கொடுக்க அடிக்கடி உண்டாகும் நீர்ப்போக்கு, பெண்களுக்குக் காணும் வெள்ளை முதலியவை நீங்கும், shrubly balah, ground mallow — Sida cordi-

folia. A shrubby plant, flowers middle sized, yellow its mucilege mixed with rice is given in dysentery and fevers, its seeds in colic, tenesmus and gonorrhoea and also early piles and abscess. Decoction of the root with dry ginger cures intermittent fever, powder of the root bark is given with milk and sugar for frequent micturition and leucorrhoea. it calcifies black lead.

**நிலத்தும்பை,** தும்பை, leucas flower — Leucas genus.

**நிலத்துழாய்,** see நிலத்துளசி.

**நிலத்துளசி,** தரையோடு தாழ்ந்து முளைத்திருக்கும் துளசி, holy basil grown lowly on land — Geniospermum prostratum.

**நிலநாவல்,** Premna herbacia.

**நிலநீர்முள்ளி.**

**நிலநெல்லி,** நிலக்கடம்பை, இது ஓர் தாழ்ந்த மரம், நேராகவும், குறுகலாகவும் இருக்கும், விசாலமான கிளைகள், பூ, காம்பு இவைகள் சிறியவை, காயின் விதைகள் பளபளப்பாயிருக்கும், சாம்பல் நிறம், இதைத் தண்ணீரிவிட்டு ஊறவைக்க தண்ணீர் சளியைப் போல் வழவழப்பாயிருக்கும், இக்குணத்தைக்கருதி மருந்திற் குபயோகிப்பதுண்டு, இதன் பருப்பிலிருந்து எண்ணெய் எடுப்பதுண்டு; இது கொட்டையைப்போல் ருசிக்கும், Madras phyllanthus—Phyllanthus madras-patensis. It is a lownelly tree, very variable in habit, erect or decumbent below, stem low with spreading branches flowers, petioles, leaves small, the seeds are polished, grey colour, soaked in water, they become thickly coated mucilage on account of which they are used in Medicine. Kernel is oily and the nut has a sweet nutty taste.

**நிலப்பயிர்,** நிலத்தில் விளையும் பயிர், land crops; 2. பெண், girl.

**நிலப்பரணி,** சிற்றீஞ்சு, small date fruit — Phoenix farinifera.

**நிலப்பலா,** வேர்ப்பலா, trunk fruit — Artocarpus integrifolia.

**நிலப்பனங்கிழங்கு,** நிலப்பனை, which see.

**நிலப்பனை,** இது ஓர் செடி, ஆகவே அடிமரமற்றது, இதன் வேர் துவாரமுள்ளது, பல இழைகளுள்ளது, இலைகள் குறுகியவை, பூக்கள் மஞ்சள் நிறம், வருஷமுதுவதும் பூக்கும், இலைகள் முனை பூமியில்பட அனேக முளைப்பூண்டுகளுண்டாகும், ஈரம் வாய்ந்த காடுகளில் முளைக்கும், இதன் வேர்க்கிழங்கு சுருங்கி துளை வாய்ந்தது, 4 அங்குல நீளம், ருசிக்க வழவழப்பாயும், சிறிது கசப்பாயுமிருக்கும், இக்கிழங்கு பல விருத்தியுண்டாக்குந் தன்மையது, இதைச் சூரணித்து சாப்பிட வெண்குட்டம், பெரும்பாடு, மேகவொழுக்கு, விலாக்குத்து இவைகள் நீங்குவதுடன் தாது விர்த்தியும், காம இச்சையும் உண்டாகும், இதை லேகியத்தில் சேர்த்துக் கொடுக்க மூத்திரநோய், வெள்ளை, உடம்பு உஷ்ணம் போம், இதை சிறு துண்டுகளாக நறுக்கி, பாலில் இட்டு அவித்து வர்த்தி சூரணம் செய்து உட்கொள்ள, இடுப்புவலி, மாரடைப்பு, மூலரோகம், சொறி சிரங்கு, மேகவூறல் இவைகள் மாறும், அன்றியும் பால் சருக்கரையுடன் இச்சூரணத்தைக் கலந்து கொடுக்க பலவீனம், ஆண்தன்மைக் குறைவு, காசம், காமாலை, கழிச்சல், வயிற்றுவலி முதலியவைகள் போம், இச்சூரணத்தை பாலிலிட்டுச் சர்க்கரை கலந்து சாப்பிட, பெண்களுக்குண்டாகும் வெள்ளை, உதிரச்சிக்கல் போம், இதைத் தண்ணீர் விட்டான் கிழங்கு முதலிய மற்ற சரக்குகளோடு கலந்து சூரணித்து தேன் அல்லது வெண்ணெயில் குழைத்துச் சாப்பிட, கிழத்தனத்தினுலேற்பட்ட பலவீனம் போம், ground palm — Curculigo orchioides. It is a stemless plant, root tuberous with many fine tissue fibres, leaves narrow, slender, flowers yellow flowering nearly all year, a pices of the leaves are viviparous and will produce young plants if allowed to rest on ground, grows in moist forests, roots 4 inches long, wrinkled, slightly bitter and mucilaginous to the taste. The root has tonic qualities, it is considered demulcent, diuretic and restorative. Powdered root is said to be a useful remedy in cases of white leprosy, menorrhagia and gonorrhoea, side pain, it is an aphrodisiac and as such promotes lasciviousness. It is prescribed in the form an electuary for urinary

diseases, gonorrhoea and bodily heat. The root when sliced, soaked in milk and then dried and pulverised forms an useful remedy in cases of lambago angina pectoris, piles, scabbies, pruritis from venereal causes etc. The said powder mixed in milk and sugar is given for debility, impotence asthma, jaundice, diarrhoea and colic. The tubers mixed with other drugs such as asparagus etc., and taken internally forms an efficacious remedy in the debility of old age.

**நிலப்பாகல்,** தரையோடு படர்ந்த பாகற்கொடி, a lowly creeper of bitter gourd, ground pagal, lowly pagal — Mimordica humitis.

**நிலப்பாகை,** see நிலப்பாகல், Mimordica humilis.

**நிலப்பாசம்,** நாகப்பாம்பு, cobra.

**நிலப்பாலை,** see நிலம்பாலை; 2. ஒழுகு, ground paulay, round leaved discous feather foil — Cleistanthus collinus alias Amanoa collina; 3. அம்மான் பச்சரிசி, which see.

**நிலப்பாலை,** see பாலை.

**நிலப்பாளை,** பங்கம்பாளை, Indian worm killer — Aristolochia bracteata.

**நிலப்பாறைச்சத்து,** பலகல்லின்சத்து, rock which had undergone fusion, igneous rock.

**நிலப்பிப்பிலி,** ஒருபூடு, Lippia nodiflora.

**நிலப்பிரண்டை,** ஓரிலைத்தாமரை, one leaf lotus — Ionidium suffruticosum.

**நிலப்பீர்க்கு,** நிலத்தில் படரும் பீர்க்கு, ridged gourd that spreads on the ground.

**நிலப்புரண்டி,** இது ஓர் மாந்திரீக மூலிகை, இது பூமியின் மேல் மற்ற செடிகளைப்போல் தழைத்து வளர்ந்திருப்பினும், மனிதர் வாடை பட்டமாத்திரத்தில் பூமியைச் சீய்த்துக்கொண்டு மண்ணிற்குள் எிறங்கி மறைந்துவிடுந் தன்மையது, இதைக் கண்டு பிடிக்க வேண்டின் இரண்டொரு தேத்தான் கொட்டையைக் கையில் வைத்துக் கொண்டுபோக அச்செடியுள்ள விடத்தில் அக்கொட்டை தானாய் வெடிக்கும், அப்பொழுது அம்மூலிகை கண்களுக்குத் தெரியும், பிறகு பூமியில் இறங்காது, இதனால் புதையல் இருக்குமிடம் அறியக்கூடும், இதை அரைத்து ஒரு செம்பு கலத்தில் பூமியில் தெளித்து மறுநாள் காலையில் நோக்க வெடித்துக் காணும், இதனால் அற்பவிஷ ரோகங்கள் நீங்கும், புருஷவிசியம் உண்டாம்.

இப்பூண்டை அரைத்துக் கொட்டைப் பாக்களவு தினம் இருவேளை 3 நாள் கொடுக்க அற்ப விஷங்களினால் ஏற்பட்ட ஊறல், தடிப்பு இவைகள் போம், இதை வசியத்திற்காக ஞாயிற்றுக் கிழமை காப்புக் கட்டி பிடுங்கி குளிசமாவதுண்டு, தேள் விஷத்திற்கும் கொடுக்கலாம், an unknown psychic with magical virtues. Though it is found grown luxuriently on the ground like other plants, it has the peculiarity of disappearing from men's sight on their approach by burying itself under the earth. For discovering this plant it is said that a man taking with him two water clearing nuts will find the nuts crack on his approach near the plant and the plant will then be visible without concealing itself under the earth as before. Therefore with the aid of this plant buried or hidden treasure can be discovered. The plant is well ground and macerated in a vessel with water and then sprinkled on the ground which will be found in next morning leaving cracks. The well ground plant is made into small balls of areca-nut size and are given both morning and evening for three days for small poisonous bites marked by severe itching and raised patches or swelling. It is used for enchanting men and the ceremony performed in this case is to root out the plant after tying it with a yollow thread ceremoniously on one sunday selected for the purpose. The root is then taken and enclosed in a talisman and then worn by woman to fascinate men. The plant is also used as an antidote for scorpion sting. c. f. நின்றுட்சுருங்கி having similar properties and magical virtues.

**நிலப்புழு**, தரைப்புழு, earth worm in common; 2. பூமிநாகம், worm dug out from red soil; 3. ஓர் பூண்டு, an unknown plant.

**நிலப்பூ**, தாளி, convolvulus genus; 2. நால் வகைப் பூவிலொன்று, one of the four kinds of flowers. see நாற் பூ.

**நிலப்பூசினி**, நிலப்பூசினிக் கிழங்குச் செடி; இதற்குப் பால்மோடிக்கம் என்றும் பெயர்; இதற்கு வடமொழியில் பூமிக்கூழ் மாண்டம் எனச் சொல்வதுண்டு; இதன் அடித்தண்டு முருக்கேரியது; கனதியாயும் வழவழப் பாயுமிருக்கும்; இலைகள் பெரியவை; விரல் கள் விரித்த கையைப் போன்றது; 5-7 பிரி வுகள் உள்ளது. வழவழப்பும் காம்புகளும் பொருந்தியது; பூக்காம்பு இலைக்காம்பைவிட நீளம்: அனேகம் பூக்கள் உடையது; உச்சி முதல் அடிவரையில் இரட்டைப் பூக்களாகப் பிரிந்துள்ளது; பூவின் உள்ளிதழ் ஊதா நிறம்; அடிப்பக்கம் குறுகியது; மழை காலத்தில் பூக்கும்; விதைகள் நீளமாயும் மொசமொசப்பாயுமிருக்கும்; பூக்கள் பெரி யவை, ரோஜாவைப்போல் சிவந்த நிறம்; கறுப்பும் ஊதாவும் கலந்த புள்ளியுடையது; கிழங்கு தனியாயும் கிளைகள் கூடியது மானது; இது 40 - 50 பவுன் கனமுள்ளது; வெளிப்பக்கம் கபில நிறமாயும் முடிச்சிகள் பொருந்தியதாகவு மிருக்கும்; குறுக்காக அரிந்தால் உட்புறம் சிறிது வெண்ணிறமா யிருக்கும்; இதினின்று பிசுபிசுப்பான பால் கசியும்; துவர்ப்பும் விறுவிறுப்புமுள்ளது; பால்வடியும் கண்கள் அனேகமாயிருக்கும்; இக்கிழங்கை எடுத்து வெயிலில் காய வைத்து மேற்றோலை நீக்கி தூள் செய்து பால் சர்க்கரை சேர்த்துக் கொதிக்கவைத்து மருந்தாக உபயோகப்படுத்தப்படும்; இது பலவிருத்தி, காம விருத்தி, அழற்சி நிவர்த்தி பால்விருத்தி இலதுமலகாரி, பால்காரி முத லிய குணங்கள் வாய்ந்தது.

இக்கிழங்கினால் தளர்ந்த தேகம் இறுகும்; இளைத்த சப்த தாதுக்களுக்குச் செழுமையும் சரும தாதுவிற்கு ஒளியும் நுட்பமான அறி வும்உண்டாகும்; மலமந்தம் நீங்கும்; இளைத்த தேகம் புஷ்டியாகும்; சய நோயாளிக்குக் கொடுத்துவர உடம்பை இளைக்கவிடாது; பிரசவித்த பெண்களுக்கு பால் அதிகமாகச் சுரக்கும்; மூத்திரத்திலுள்ள அழுக்குகளை போக்கி உடம்பின் சூட்டை அடியோடு களை யும்படி செய்யும்; இச்சூரணத்துடன் கோதுமை மாவு, அல்லது பார்லி அரிசி மாவைக் கூட்டி அடையாகச் சுட்டு, குழந் தைகளுக்குக் கொடுக்க உடம்பு புஷ்டியாகும்; அடிவேர்த்தண்டைச் சூரணித்து, சாராயத் தில் குழப்பிக் குழந்தைகளுக்குக் கொடுக்க உடம்பிளைப்பு, பலவீனம், செரியாமை இவை களைப்போக்கும்; கிழங்கின் சூரணத்தை நெய் யோடு கலந்து வேகவைத்து, பெண்களுக் குக் கொடுக்க உடம்பு தடித்து மாதருது போக்கைச் சாந்தப்படுத்தும்; கிழங்கின் சூரணம் பேதியை உண்டாக்கிப் பித்தத்தை அகற்றும், giant potato; earth pumpkin—Ipomaea digitata. It is also called in Tamil Palmodikka (milk plant) and in Sanskirt Bhumi kushmandam (ground pumpkin) stem twining, glabrous thick; leaves large palmate 5-7 cleft, glabrous, petioled; peduncles much exceeding the petioles; many flowered dichotomous; corolla purple, narrowed at the base; seeds long hairy; flowering in the rainy season; flower large rose coloured with a dark purple eye. The root is simple or branched tuber sometimes weighing 40-50 lbs; externally it is of a brown colour and some what warty and scabrous; when a transverse section is made, the cut surface is of a dirty white colour and from the laticiferous vessels a viscid milky fluid exudes. The taste is astringent and some what acrid.

Root dried in sun reduced to powder and boiled with sugar and butter is medicinally a tonic, alterative, aphrodisiac demulcent, lactogogue. It is also laxative. It strengthens the broken down body by old age; fertilises the seven constituent parts of the humen body; lends vitality to the subcutaneous tissues and promotes lustre to the body; restores keen intellect. It also removes constipation and tones the emaciated body. It also protects asthmatic patients by preventing them from emaciation increases secretion of milk in women after child birth. It forms an useful remedy in eleminating the impurities from the

urine and allaying or soothing out the bodily heat. The powdered root mixed with wheat or barley flour and made into round cakes and baked is prescribed for children who are weak and emaciated. Powdered root stalk mixed in wine serves as a useful remedy especially to children in cases of emaciation, debility, indigestion and also in spleen complaints. Powdered sun dried root boiled in sugar and butter when taken internally has the effect of promoting obesity and moderating menstrual discharge. The powdered root also acts as a purgative and chologogue and is useful in liver complaints.

NOTE: This plant is indigenous to the hotter parts of India and largely cultivated as an ornamental plant. The roots of a smaller variety are known in Bombay as asgand and used for the same purposes as the above.

There is also another variety Hill giant potato — Ipomaea pentaphylla.

**நிலப்பூசினிக்கிழங்குக்கட்டி,** பிதாரிகை என்னும் ஓர்வகைக் கட்டி, இது நிலப்பூசினிக் கிழங்கைப்போல் பருத்து வட்டமாயிருப்ப தாலிப்பெயர், a hard round abscess as large as a full grown earth pumpkin.

**நிலப்பூசுணை,** நிலப்பூசினி, which see.

**நிலப்புச்சி,** தரையில் வசிக்கும் பூச்சி, ground insects. see நிலப்புழு.

**நிலப்பொட்டு,** ஓர்வகைக்காளான், a kind of fungus.

**நிலமகள்,** சீதா செங்கழுநீர், which see.

**நிலமல்லி.**

**நிலமாதுளை.**

**நிலமுள்ளங்கத்திரி.**

**நிலம்,** பூமி, earth; 2. கள்ளி, milk spurge — Euphorbia genus; 3. தாளி, a running plant of the convolvulus genus; 4. நீரிழிவு, diabetes; 5. ஐவகை நிலம், குறிஞ்சி, மருதம், முல்லை, நெய்தல், பாலை என்பவை, the five kinds of tracts viz. Hilly, agricultural sylvan, maritime and arid or desert tracts.

**நிலம்பாலை,** கும்பம் பாலை, blue dyeing rose bery — Wrightia tinctoria.

**நிலம்புரண்டி,** கார்த்திகை முதலிய மழை காலங்களில் புல்லில் நுரைபோல் தோன்றி அதற்குள்ளிருக்கும் பச்சைப்பூச்சி, a green insect found in the middle of frothy substance that appears on grass during rainy seasons.

**நிலம்பூ,** see நிலப்பூ; 2. கள்ளி, milk spurge — Ephorbia genus; 3. கொசு, musquito; 4. சீதா, custard apple — Anona squamosa; 5. தாளி, a running plant of convolvulous genus.

**நிலலோகபற்பாந்தம்,** நறும்பிசின், a fragrant resin or gum; 2. see குந்திரிக்கம்.

**நிலவடலி,** சிறுபனை, small palm — Borrasus genus.

**நிலவம்,** சோதிவிருட்சம், see நிலம்சோதி.

**நிலவறுகு,**

**நிலவாகு,** நிலத்தின் தன்மை, nature of the soil c.f. தேசவாகு; 2. நிலச்செழுப்பின் வேறுபாடு, difference in the fertility of the soil.

**நிலவாகை,** நிலாவிரை, East Indian senna — Cassia angustifolia; see நிலாவாரை.

**நிலவாகைச்சூரணம்,** நிலஆவாரையைச் சூரணித்து பேதிக்காகக் கொடுக்கும் மருந்து, senna powder given as a purgative.

**நிலவாமியம்,** சீதா செங்கழுநீர், purple Indian water lily — Nymphae odorata.

**நிலவாவிரை,** See நிலாவாரை.

**நிலவாழை,** கல்வாழை, rock plantain Indian shot — Canna indica.

**நிலவிந்தை,**

**நிலவிப்பனை,** நிலப்பனை, which see.

**நிலவிலந்தை,** இலந்தைமரம், கொடியிலந்தையென்னும் வகையினின்று வேறுபடுத்திக்காட்ட நில என்னும் அடைமொழியைக் கட்டப்பட்டது, Common jujuba tree. The term நில is prefixed to distinguish it from jujuba creeper.

**நிலவிழுது,** see நிலப்பனை.

**நில்விளா,** குற்றிவிளா அல்லது, குட்டிவிளா monkey fruit; 2. *சிறுவிளா,* a smaller variety of wood apple tree — Feronia elephantum.

**நிலவிளாத்தி,** see நிலவிளா.

**நிலவீரியம்,** see *நிலவீரம்.*

**நிலவீரம்,** பூநீறு, soda earth; fuller's earth; 2. நிலத்தின் கொடுமை, the virulity of the soil; 3. குட்டிவேர், side roots under the earth.

**நிலவுகாய்,** எருக்கங்காய், fruit of sun plant — Caltropis gigantia; 2. உகாய்மரம், Mahomadon tooth brush tree—Salvadora persica.

**நிலவுப்பு,** நிலத்திலிருந்து வெட்டி யெடுக்கப்படும் உப்பு, இதனுல் பொரிகாரம் சாகும, இத்துடன் ரெங்கு சேர்ந்தால் கைக்கு கங்கணமாகும், இது சலத்தில் கரையாது, இதனுல் பழந்துணி வெளுக்கப் பார்க்கும், any salt dug out from the earth. It is opposed to நீருப்பு salt prepared from sea water or salt dug out from the rocks at the bottom of the sea; 2. *வீரம்,* per chloride of mercury.

**நிலவுமரி,** உமரிக்கீரை, sea side indian salt wort — Suacda maritima; a species of salsola.

**நிலவூமத்தை,** நீல ஊமத்தை, blue flower datura.

**நிலவேம்பு,** சிரட்குச்சி, இது ஒருவருஷத்திற்குள் அடிக்கடி பயிராகும் பூண்டு, இதன் அடிமரம் ½ அடி நீளமாயும், நாலுமூலையாகவும் வழவழப்பாயும், சிறிது கருப்பாயும், இலைகள் இருபக்கங்களிலும் நேர் நேராகவும் நுனியில் கூராகவும், பூக்கள் தூரமாக மாறிமாறி ரோசாப்பூ நிறத்தில் அல்லது வெள்ளை நிறத்தில் ஊதா வரிகளையுடைய தாயுமிருக்கும்; விதைகள் 3-4 அங்குலம், பூண்டு 1-2 அடி உயரம், இது வங்காள தேசத்தில் ஈரமில்லாத மரத்தடி நிழலிலும் விளையும் விசேஷமாய் திருநெல்வேலி, தென் தேசம், ஆந்திர தேசத்தின் வட பாகங்களிலும், இந்தியாவில் பல விடங்களிலும் வேலிகளிற் காணலாம், இது ஐப்பசி மாதத்தில் பூக்கும், இதன் உலர்ந்த குச்சி எல்லாக் கடைகளிலும் விற்கப்படும், இதன் சமூலம் மிகக்கசப்பு.

இதன் இலைக்கஷாயம் குழைந்தை வயிற்றுவலி, வயிற்றுப் பொருமல், வாதசுரம், பித்த மயக்கம் இவைகளுக்கும் பெரியவர்களுக்கு நாள்பட்ட சீதபேதி, சுரதோஷம், நீர்க்கோவை, இவைகளுக்கும் கொடுக்கக் குணமாகும், இதற்கு பலகாரி, சடராக்கினி வர்த்தினி, சுரகரகாரி, குணங்கள் வாய்ந்தது, இதை மற்றக் கடைச் சரக்குகளோடு சேர்த்துக் கொடுக்க சுரத்தைக் கண்டிப்பதில் மிக்க சிறப்பு வாய்ந்தது; பஞ்சமூலிக் கஷாயத்திலும் சேர்ப்பதுண்டு, இதை சில வேளை வாந்திபேதி, சீதபேதிக்கும் கொடுப்பதுண்டு, இதை அரிஷ்டமாகச் செய்து பல வித குன்ம நோய்களுக்கும் உணவு செல்லும் பாதை சோர்வுற்ற காலத்திலும் கொடுப்பதுண்டு, இதன் இலைச்சாறு குழைந்தைகளின் உடற் கோளாறுகளைக் கண்டிக்கும், Indian Chiretta — Andrographis paniculata alias Justicia Paniculata. It is known as ground neem. It is an annual and is frequently cultivated.

Stem quadrangular about 1½ ft in length pointed and smooth; dark in colour, leaves opposite, lanceolate on short petioles. flowers remote alternate rose coloured or white streaked with purple, seeds 3.4 in each, the whole plant is 1—2 ft high. It is found grown in Bengal in dry places under shades of trees, commonly caltivated in Tinnevelly, southern districts and the northern districts of the Andhra province. It is common in ledge rows throughout the plains of India. Dried stems are sold in all bazaars of India. The whole plant is very bitter.

It is an authelmintic, stomachic, tonic, febrifuge and antiarthritic and antibilious. Decoction of the leaves is generally prescribed by Vaidyans in children's disease such as colic, flatulency, fevers, biliousness etc. and in adults for chronic dysentery, fevers cold etc. The plant is much valued for its stomachic and tonic properties. Mixed with other bazaar drugs it is successfully used in general debility and convalascense after fevers. It forms an ingredient in the decoction extracted from a mixture of five drugs. It is occasionally used in cholera and dysentery. The tincture is a stimulant and a gentle aperiant and so proves valuable in the treatment of several forms of dyspepsia and also in the torpidity of the alimentary canal. The expressed juice of the fresh leaves is a domestic remedy in the bowel complaints.

NOTE:— It is a Non aryan bitter plant. It has properties smiliar to these of chiretta. The bitter is due to a non basic principle. there being no alkaloid Medicinally it forms basis of French and Portuguese bitter tincture known as drogue amere. It is very analogus to quassia or gentian in action.

The Indian varieties though differ more or less from the officinal chiretta in many respects are similar in bitterness and possesses the same medicinal properties. The bitterness is due to the two principles viz Ophetic acid cheratin.

**நிலவேர்**, நிலத்தின் வேர், root found under the earth; 2. பூநாகம், earth worm; 3. நாக்கில்லாப் பூச்சி, tongueless worm; 4. ஆண், male; 5. குற்றிவிளா; a variety of wood apple.

**நிலாக்கிளத்தி**; முதியார் கூந்தல்; which see.

**நிலாப்பிறை**, சந்திரனின் மூன்றாம்பிறை, the third phase of the moon, seen on the third day of full or new moon — Crescent shaped. semilunar.

**நிலாமணி**, சந்திர காந்தக்கல், moon stone.

**நிலாமுகி**, see நிலாமுகிப்புள்.

**நிலாமுகிப்புள்**, சகோரப்பட்சி, bartavelle or greek partridge feeding on moon beams—*Perdii rufa*.

**நிலாவல்**, **பரவுதல்**, spreading; extending.

**நிலாவாரை**, நிலவாகை, இது ஆவாரை இனத்தைச் சேர்ந்தது, இது இந்தியாவில் குஜராத் முதலிய பலவிடங்களிற் காணப் பட்டாலும், தென் இந்தியாவில் திருநெல் வேலியில் விளைவதுதான் மிகச் சிறந்தது, இது பம்பாயிலிருந்து வெளிநாடுகளுக்கு ஏற்றுமதியாகும்; இதைப் போலவே சூரத்து நில ஆவாரை என்றும் ஓர் இனம் உண்டு. இதன்றியும் சீமை நிலாவாரை என்றும் உண்டு, சென்னாமுக்கி என்பது ஓர் வகை. இது அரேபியாவில் ஏராளமாய் பயிராகி ஏற்றுமதியாகும், ஈகிப்து, இதாலியிலும் பயிராகும், ஆனால் திருநெல்வேலி ஆவாரை தான் சிறந்ததாகும், இது வருஷித்திற்கொரு முறை பயிராகி ஓயாக் கூடியது; அடிமரம் நேராகவும், மிருதுவாயும்; இறகைப்போல வும் இருக்கும்; இலை குறுகல், இலைக் கொழுந்து 4—8 ஜோடி கூர்மை; மேற்புறம் வழவழப்பு; அடிப்பக்கம், சொரசொரப்பு இலைக்காம்பு இலையைவிட நீளம், இதழ்கள் முழுமஞ்சள் நிறம், காய்கள் 1½ அங்குல நீளம், அனேக விதைகள் உள்ளது, ஐப்பசி மார்கழி, தை மாதங்களிற் பூக்கும், இதன் இலை கசப்பும் வெகுட்டலுமுள்ளது, கடைச் சரக்கு சுத்தமாயிராது இவ்விலைகள் விரேசன மருந்தாய் உபயோகப்படும்; இது சில சமயம் வயிற்றுக் கடுப்பு குமட்டலையும் உண்டாக்கும், சுரத்தால் பீடிக்கப்பட்ட காலத்திலும், கர்ப்பிணியாயிருக்கும் காலத் திலும் இது உதவாது. மூல ரோகிகளுக்கு இதைக் கொடுக்கப்படாது; இதைக் குழந் தைகளுக்கும் தக்க அளவில் பயமின்றிக் கொடுக்கலாம், இலையிலிருந்து எண்ணெ யும் இறக்குவதுண்டு, இலையைக் கஷாய மிட்டுக் கொடுக்க குன்மம் வயிற்றுப்பிசம் ஆசன வெடிப்பு. மலச் சிக்கல் இவைகள் நீங்கும், சூரணித்துச் சாப்பிட அதே குணங் களுண்டு, இது கபம், பித்தம்; வண்டல் (வாதம்) இவற்றை பேதி மூலமாய்க் கழிக் கும், தீய்ந்துபோன சத்துக்களை வெளிப் படுத்தும் மூளையில் தங்கி நிற்கும் வாத நீர் பித்த நீரைப் போக்கும்; காசம், அதி மூச்சு இவைகளைக் கண்டிக்கும், வாயு, கீல்வாயு, பக்கநோய், சூலைநோய், உடம்பில் ஆழ்ந்து கிடக்கும் துர்நீர், நரம் பிசிவு, வயிற்றுப்புழு இவைகள் போம், இத் துடன் பாதம்நெய் அல்லது ரோஜாப்பூ சேர்த்து உபயோகிக்க மெத்த அனுகூலமா யிருக்கும், அன்றியும் மூலவாயுவுக்கும், சிழ்ச் சிரங்குகளுக்கும் இது சிறந்தது, இதன் இலை யைக் கஷாயமிட்டு இத்துடன் காடிசேர்த்து சொறி, சிரங்கு, படை இவைகளுக்குப் பூச ஆறும், கூந்தல் உதிரும் இடங்களில் இதைப்பூசிவர உதிராமல் தடுக்கும், இவ் விலையுடன் மருதோன்றி இலையையும் கூட்டி அரைத்து செம்பட்டை அல்லது சிவந்த மயி ருக்குப் பூச கருக்கும், இத்துடன் மற்ற கடைச்சரக்குகளையும் சேர்த்து கஷாயமாக தேகவானத்துத் தக்கபடி பிரயோகிக்கலாம், Indian senna, Tinnevelly senna — Senna indica alias Cassia lanceolata alias C. elongata. Though it is grown in many parts in India as Guzerat, Surat, Bombay state etc., the one grown in South India, Tinnevelly is considered the best of its kind. It is exported to foreign countries from Bombay Presidency. There are different varieties

as Surat senna, Foreign senna, Italian senna, Arabian senna, Egyptian senna etc., which are not in anyway superior to Tinnevelli senna.

It is annual stem erect, smooth, pinnated leaf lets 4-8 pairs lanceolate, smooth above rather downy beneath, staks longer than leaves, petals bright yellow, legumes pendulous about 1½ inch long many seeded. Flowers in October to December. Leaves are bitter and cause nausea. Those that are sold in bazaars are often found adulterated with rubbish and are not pure. The purgative properties of senna are well known and it is the most commonly employed of all cathartics. It is apt to gripe and cause nausea, it should not be prescribed in cases of fever nor during pregnancy nor in the exsistence of piles. It may be given safely to children and elderly persons. Volatile oil is also extracted from the leaves. Decoction of the leaves is successfully given in cases of dyspepsia flatulency, fissure of the anus, constipation. Powdered leaves have the same effect. Moreover, it is given with great advantage for phlegmatic and bilious complaints, removes impurities through motions, eliminates the burnt or dead useless matter from the system, bringing bad accumulation of fluid in the cerebral region Checks asthma and moderates hard breathing. It is found to be a useful remedy in arthritic complaints, side pains, paraplegia heart disease accumulation of bad fluids in the system, spasms, worms in the intestines etc. It is always good to mix the decoction in fusion with almond oil or rose bud. It has long been held in high repute inflatulency and suppurating itch. Decoction of the leaves mixed with venigar forms an efficacious application for scabbies, ring worm and other cutaneous diseases. It is also applied by women for falling hairs, the leaves mixed with naildye ground into a paste and applied to brown hairs on the head changes the colour into black. The leaves [are also mixed with other bazaar drugs in infusion or decoction and administered according to the] disease of the patients or other idiosyncrasis.

NOTE:— 1. The leaf of the Indian senna (Tinnevelli) is nearly two inches long while the Alexandrian, Egyptian senna are only one inch long. It is acute in shape also unequal at the base, green in colour and of sweet taste. Senna is often aduterated with a similar looking leaf of the Argel — Salenostemma Argel, but these leaves are thicker and stiffer than that of senna, they are equal at the base and bittterest in taste. Both Indian senna and Argel are purgative like Egyptian seen but they gripe which Alexandria senna rarely does.

Senna is a safe and efficient purgative well adapted for childhood, for old age and for delicate or weak persons. But it is not so well adapted for nursing woman as it may render the milk purgative and so cause colic in the child. The taste of senna may be disguished by sweetening the infusion by adding milk, when it resembles an ordinary tea. Infusion of senna with epsom salt constitute the once much used black draught.

NOTE:—2. In commerce three kinds of senna are distinguished 1. Bombay or Mocha or East Indian senna; 2. Tinnevelli senna; 3. Alexandrian senna. The 3rd is most used in Europe, the first is a branch of the Second, and the second is much used in India. The confection of powdered leaves commonly called Laxative electuary is also a mild Laxative. Syrup is also made from this and given to children. Infusion is an excellent family medicine. A table spoonful of brandy will add to its stomachic properties.

Tinnevelli senna is highly esteemed in Britain and is preferred to all other sorts as being both purer and cheaper. The cause of griping after being taken is due to its being adultered with other poisonous leaves. It is often adultered with Argel leaves which are thicker and stiffer. Indian senna is divided into Tinnevelli senna and East Indian, Indian senna and they are obtained from one variety viz Cassia elongata.

Senna is a brisk purgative increasing considerably the peristaltic action and also to some extent the liquid flow from the intestines. It appears to act chiefly on the small intestines and less on the colon and the rectum than aloes. It is sometimes combined with salines as epsom salt or tartalic of potash and some are matics.

It is prescribed when constipation is present in dyspepsia and in almost all febrile and inflammatory diseases. It should not be given when the alimentary canal is much affected. Syrup is also an effectual preparation.

The following are the different varieties:—

1. நிலஆவாரை, ground senna or Aleppo senna — Cassia obovata.
2. எகிப்து நில ஆவாரை, Alexandrian senna — Senna Alexandrina.
3. திருநெல்வேலி நிலாவாரை, Tinnevelly sanna — Cassia angustifolia.
4. பம்பாய் நிலாவாரை, Bombay senna — Cassia lanceolata.
5. நாட்டு நிலாவாரை, the same as No 3.
6. கீழ்நாட்டு நிலாவாரை, East Indian senna — Cassia elongata.
7. சீமை நிலாவாரை, foreign senna or Nubian senna — Cassia acutifolia.
8. சூரத்து நிலாவாரை, Surat senna —Cassia acute folia same as No 7.
9. மோகா நிலாவாரை, Mocha senna the same as No. 3.
10. காட்டு நிலாவாரை, Italian senna — the same as No I.

**நிலாவிரை,** நிலாவாரை, which see.

**நிலாவிரைலேகியம்,** நில ஆவாரையைக் கொண்டு தயாரிக்கும் இலேகியம், இது மலச்சிக்கலுக்குக் கொடுப்பது, confection of senna prescribed for constipation

**நிலாவிழுது,** see நிலப்பனை.

**நிலிகாவியங்கம்,** முகத்திற்காணும் ஓர் வகைப்பரு, a variety of mole.

**நிலிஞ்சிகை,** பசு, cow.

**நிலிநாரியம்,** பாண்டுக்குக் கொடுக்கும் ஓர் சூரணம், a medicinal powder for dropsy.

**நிலுமைக்கல்,** இராசவர்த்தக்கல், a kind of gem — Lupis luzuli.

**நிலை,** குணம், character; 2. நிலைத்தல், being settled in a place; 3. இடம், place; 4. பொழுது, time; 5. நிற்குநிலை, posture as in யோகநிலை.

**நிலைகுலைதல்,** see நிலைபெயர்ச்சி.

**நிலைகுலைந்தேகல்,** இருந்த இடத்தை விட்ட கலல், leaving away the original seat said of a disease.

**நிலைகுலைந்தோடல்,** see நிலைகுலைந்தேகல்,

**நிலைக்கண்,** சிமிட்டாக்கண், fixed eyes — no reflex action.

**நிலைக்கண்பட்டிருத்தல்,** see நிலைக்குத்திடல்.

**நிலைக்கல்,** ஆட்டுக்கல், sheep's bazoer.

**நிலைக்கால்,** முடவாட்டுக்கால், see ஆட்டுக் கால்.

**நிலைக்குத்தல்,** கண்சிமிட்டாமை, gaze, stare look; 2. ஓர் மரணக்குறி, see நிலைக்குத் திடல்.

**நிலைக்குத்திடல்,** கண் சிமிட்டாது நிலையாக விழித்தபடியே இருத்தல், இது சில நோய் களில் காணும் குறி, eyes becoming fixed as a symptom of some diseases; 2. கண் விழித்தபடியே நின்றல், upward and inward turning of the eyes simultaneously — a death symptom c.f. ஆணியாடுதல்.

**நிலைக்குற்றலிடல்,** see நிலைக்குத்திடல்.

**நிலைக்கூடம்,** பித்தளை, brass; 2. யோகநிலை யிலிருக்கும் பிரத்தியோகமான இடம், a secluded hall intended or set apart for yoga practice.

**நிலைசன்னி,** மாருதசன்னி, an irrecoverable apoplexy; 2. நிலைக்கண்ணிட்டசன்னி, apoplexy marked by a fixed look.

**நிலைத்தல்,** நிலை பெறுதல், becoming permanent or fixed to a place.

**நிலைத்துத்தி,** see நிலத்துத்தி.

**நிலைபாஷாணம்,** பரங்கிப் பாஷாணம், a mineral poison sublimate of mercury.

**நிலைபெயருதல்,** குறித்த அல்லது ஏற்பட்ட விடத்தை விட்டகலல், the act of removing or being removed from the normal position or place, displacement — Ectopia.

**நிலைபெயர்ச்சி,** நிலைகுலைதல், removal from the usual or proper place — Displacement; 2. இடம் விட்டு இடமகலல், (in physiology) mal position of an organ in the body.

**நிலைபெயர்ப்பு,** see நிலை பெயர்ச்சி.

**நிலைபெறுதல்,** பெயராது நிற்றல், get fixed as opposed.

**நிலைபெற்றதூடா,** சுழல்வண்டு, a whirling beetle often found in water.

**நிலைபெறுத்துகை,** பழைய நிலைமையடைகை, classticity. see சித்தாபகம்.

**நிலைபெற்ற காயம்,** கற்பத்தினுல் நெடுங் காலம் சீவித்திருக்கும் உடம்பு, a rejuvenated body living for long ages.

**நிலைபெற்றநோய்,** உடம்பைவிட்டு அகலாத நோய், a chronic disease.

**நிலைபெற்ற மனம்,** ஒரு வழிபட்ட மனம், settled mind—Concentrated mind.

**நிலைப்பூசினி,** see நிலப்பூசினி.

**நிலைமந்தம் வேர்,** மேகநோய்க்குபயோகிக் கும்வேர்; a root used for disease of venereal origin.

**நிலைமை,** குணம், quality, 2. இருக்கும் தன்மை, state; 3. காலநிலைமை, condition of time.

**நிலையற்றதேகம்,** நிலையில்லாத காயம். body not lasting or continuing in the same state.

**நிலையற்றநாடி,** அலைவுற்ற நாடி, undulating pulse.

**நிலையற்ற மனம்,** தளும்புமனம், wavering mind; 2. அடிக்கடி மாறும் மனம், fickle mind.

**நிலையாத்தாபம்,**

**நிலையாவாரை,** see நிலாவாரை.

**நிலையிற்பிரியான்,** தான்கொண்ட கொள்கையினின்று மாருதவன், one who does not change his view.

**நிலையிற்பிரியான்,** சதா யோக நிலையில் நிற்பவன், one who is absorbed in yoga 2. சமாதி நிலையில் நிற்பவன் one in the stage of samathi.

**நிலையுரல்,** பெருவிரல், thumb; 2. ஒருஇடத்தில் பதித்த உரல், mortar fixed in a place.

**நிலையுறல்,** நிலைத்தல், becoming fixed or permanent.

**நிலைவிட்டுப் பெயர்தல்,** நோய் குணப்படுதல், disease getting cured.

**நிவசதி,** ஓர் பூண்டு, an unknown plant.

**நிவசனம்,** சீலை, cloth; 2. சீலைத்துண்டு, piece of cloth.

**நிவர்தல்,** ஓங்குதல், growing high.

**நிவலம்,** அவுபலபாஷாணம், one of the 32 kinds of native arsenic.

**நிவாரணம்,** நீங்குகை, removal, 2. குணமாதல், cure; 3. பழைய நிலையைப் பெறுதல், restoration to the former state or position; 4. சாப நிவாரணம், making reparation for, expiration.

**நிவாரணி,** நோயைக் குணப்படுத்து மருந்து, curative agents or medicines.

**நிவாரம்,** காட்டு நெல், see நிவாரி.

**நிவாரி,** see நிவாரணி; 2. காட்டு நெல், wild paddy; 3. காட்டரிசி, wild rice; 4. மலை நெல்; mountain paddy.

**நிவிமரம்,** மாமரம், mango tree — Mangifera indica.

**நிவிருத்தப்பிரசவம்,** பிரசவத்திற்குப் பிறகு ஐந்து வருஷத்திற்கு மேலாகும் வரையில் பிள்ளையில்லாதிருத்தல், a woman in whom conception does not occur for a period more than five years after a previous child birth.

**நிவிருத்தி,** பிறப்பறல், release from transmigration; 2 ஆன்மா கதிபெறல், final emancipation of the soul; 3. குணமாதல், cure; 4. the return or dissolution process in the yoga practice; 5. ஒழிவு, extinction or cessation; 6. லயம், dissolution c. f. பிரவிருத்தி.

**நிவிர்த்தி**, see நிவிருத்தி; 2. துறவு, renunciation; 3. அசையா நிலை, cessation of action or motion.

**நிவிர்த்தன்**, ஆசாபாசங்களை அறுத்தவனாகிய துறவி, ascetic free from bondage of life.

**நிவிருத்தி**, the cessation from all acts and freedom from desire. It leads to emancipation.

**நிவேசம்**, உடம்பில் ஊசியேற்றல், இது ஓர் பிரார்த்தனை, (in Religion) hook swing in satisfaction of a vow; 2 நோயால் வேண்டி உடம்பில் மருந்தை ஊசியால் புகட்டல், the act of throwing of a liquid medicine into the body through a needle — Injection; 3. உடம்பில் ஊசிப் பிரயோகம், insertion of a needle into the body for any purpose — Inoculation.

**நிழலில்**, சாயைபடுதல், casting a shadow.

**நிழலி**, காற்று, wind; air.

**நிழலுணர்த்தல்**, நிழலுலர்த்தல், drying in the shade

**நிழலுலர்த்தல்**, சூடுகாட்டி உலர்த்துவதால் மூலிகைச்சத்து போய் விடுமெனக்கருதி, நிழலில் காயவைத்தல், the drying of drugs in the shade — Airefaction. This is done before powdering because of the fact that drugs would lose their virtue by either exposing them to the sun or by heating them in fire.

**நிழல்**, சாயை, shadow; 2. வெயில் மறைப்பு, shade; 3. குளிர்ச்சி, coolness; 4. நோய், disease.

**நிழல்நாவல்**, ஓர்வகைக் காட்டுப் புதினா, a kind of fragrant wild mint — Ocimum menthoides; 2. கருநாவல் மரம், a kind of black Jaumoon tree.

**நிழற்காத்தவிருட்சம்**, See நிழற்காந்தம்.

**நிழற்காந்தம்**, சாயாவிருட்சம், a tree which does not cast shadow for the reason it allows the sun's rays to pass through.

**நிழனாவல்**, see நிழல் நாவல்.

**நிறக்குமஞ்சள்**, கப்புமஞ்சள், பூசுமஞ்சள், turmeric used by women while bathing.

**நிறக்குருடு**, உள்ள நிறம், புலப்படாமை, colour blindness.

**நிறசாயம்**, மூன்றெழுத்திலொன்றாகிய 'கிலி' one of the three mystic letters viz ஐயும், கிலியும், சவ்வும்.

**நிறஞ்சனுதிமூலி**, சிவதுளசி, Shiva's basil — Ocimum hirsutum.

**நிறஞ்சோதி**, மரமஞ்சள், tree turmeric — Coscinium fenestratum.

**நிறத்தகண்காரி**, குண்டுமணி, wild licorice —Abrus precatorius.

**நிறப்பதார்த்தம்**, நிறத்தைக் கொடுக்கும் வஸ்து, colouring matter; 2. உடம்புக்கு மேனியைக் கொடுக்கும் வஸ்து, that which gives beauty or lustre to the body.

**நிறமாறி**, நிறம் மாறும்படியான வஸ்து, anything in which the colour is changed; 2. பச்சோந்தி, chameleon capable of changing its colour.

**நிறமாற்றி**, நிறத்தை மாற்றச் செய்யும் வஸ்து, anything capable of altering the colour of a substance.

**நிறமானபழத்தி**, மணித்தக்காளி, black berried solanum — Solanum nigrum.

**நிறமுற்றநிட்களன்**, துரிசு, blue vitriol — Copper acetate.

**நிறம்**, உடம்பு, body; 2. வர்ணம், colour; 3. குணம், quality; 4. மார்பு, breast; 5. நவச்சாரம், salammoniac — Ammonium Chloride.

**நிறுத்தல்**, நிறுக்குதல், weighing; 2. தடைபடுத்தல், stopping as in bleeding, purging, vomiting, coughing etc; 3. ஒரு வஸ்துவின் இடை, கனம் முதலிய குணங்களை நிர்ணயிப்பதற்காக தராசு கொண்டு நிறுத்தல், determining the natural property of matter *proportionate to its bulk and density of its* parts by balancing in a scale against some known or acknowledged weights placed on the opposite side. This is done by jewellers, gold smiths, merchants, physicians etc; 4. நிலைப்படுத்தல், establishing, settling; 5. கொடாமை, putting off, keeping back.

**நிறை**, நிறுத்தளவு, Indian standard weights; 2. நூறுபலம், hundred palams; 3. நிறைவு, perfection, fullness; 4. நீர்ச்சால், a large water pot; 5. வரையறை, standard degree.

**நிறைகருப்பம்,** பூரணகருப்பம், full term pregnancy.

**நிறைகருப்பிணி,** பூரண கர்ப்பப்பெண், woman quick with child; 2. மாதம் நிறைந்த பிள்ளைத்தாய்ச்சி, a woman with full term pragnancy.

**நிறைசன்னி,** மூடுசன்னி, cerebral apoplexy marked by fatal comatose.

**நிறைசூல்,** see நிறைகருப்பம்.

**நிறைதருதுறு,** சிந்தில், moon creeper — Menispermum cordifolium alias Tinosphora cardifolium.

**நிறைநாடி,** பூரணநாடி, full pulse as opposed to feeble pulse.

**நிறைந்திடல்,** நிறைதல், becoming full; 2. பெருகுதல், over flowing, suffusion.

**நிறைபிள்ளைத்தாய்ச்சி,** பத்து மாதமும் நிறைந்த பூரணகற்பிணி, a woman of full termed or advanced pregnancy.

**நிறைப்பிணி,** see நிறைகருப்பிணி; 2. முழுப் பிணி, disease in full.

**நிறைப்பு,** உடம்பினுள் சத்துக்களை யூட்டு மருந்து, a medicine that gives tone to the system — Tonic.

**நிறைப்புறை,** see, நிறைப்பு. 2. மூன்று வகை மருந்துகளிலொன்று, அதாவது உடம்பினுள் உலோகச்சத்து, உப்புச்சத்து முதலியவைகள் குறைந்த காலத்து அதை நிறப்பும்படி உண்ணும் பற்பம், செந்தூரம், இலேகியம் முதலிய மருந்து, one of the three kinds of medicines for reestrblishing healthy functions of the system i. e. a medicine which produces favourable changes in the process of its repair when vital essences are found wanting in the system.

**நிறைமாதம்,** கழிந்த பத்துமாதம், full term of ten months when referring to pregnancy.

**நிறைவீக்கம்,** பூராணவீக்கம், full swelling.

**நிரேுவடி,** பொன்னுங்காணி, sessile plant — Illecebrum sessile.

**நிற்காங்கு,** See நிருவாலி.

**நிற்குண்டி,** வெண்ணொச்சி, negundo — Vitex negundo.

**நிற்சரம்,** அமுதம், nectar.

**நிற்பீசம்.**

**நிற்மலம்,** குற்றமற்றது, இது சிவனைக் குறிக்கும், free from all dirt referring to God Shiva.

**நிற்மலன்,** குற்றமற்றவன், one who is free from all faults as Shiva.

**நினைவுதடுமாற்றம்,** புத்திமாறல், mental derangement; 2. மனமாற்றம், confusion of mind; 3. சித்தப்பிரமை, delirium; 4. சுவர்ணமாறல், change of consciousness; 5. ஓர்மரணக்குறி, a death symptom; 6. நினைவுகெடல், failure of memory.

**நின்பம்,** நிம்பம் அல்லது வேம்பு, neem tree — margosa tree — Azadirachta indica alias Melia indica.

**நின்மலரசம்,** பத்துவகை ரசச்சத்துக்களில் ஒன்று, இது சாரணைக்குதவும், இதை 201 தரம் சாரணைத் தீர்த்தால் கவுனம் பாயலாம், (in Alchemy) one of the ten kinds by which mercury is animated. If this process is continued to 201 times, it will enable one to travel in the aerial regions and round the planets.

**நின்மலாவஸ்தை,** சாக்கிர முதலாயுள்ள ஐந்து வகையான உயிர்நிலை உபாதிகளை நீக்குவதற்காக அடையும் நிலைகள், (in Philosophy) the physical and in tellectual state attained by a practising yogi in each of the five stages when reaching the reopective five stations of the soul with a view to seek deliverance from Malam. They are five fold viz:—

1. நின்மலசாக்கிரம், soul coming to a full vision.
2. நின்மலசொற்பனம், soul being affected by dream.

3. நின்மலசுழுத்தி, insensibility to sinful desires.

4. நின்மலதுரியம், reaching the regions of happiness.

5. நின்மலதுரியாதீதம், enjoying transcendental bliss which is the highest state of the soul free from all corporal entanglements.

NOTE :— This kind of practice leads a practising yogi to those great planes of mental activity out side of the ordinary field of consciousness and shows him the wonderful things to be found there.

1. The peaks and valleys of the self.
2. The mental spectrum with its wealth of mental colouring.
3. The nature and cause of feeling and how it affects our lives and influences our judgements.
4. The cause of instinct and the influence of instinctive feelings upon our actions and thought.
5. The operations of the sub conscious mental faculties.
6. The higer powers of the soul — the *super consciousness.*

**நின்றவிடம்தீஞ்சான்,** குருவிச்சை, honey suckle mistle toe — Loranthus elasticus; 2. புல்லுருவி, a parasitic plant — Strigalut.

**நின்றுட்சிணுங்கி,** see நின்று சிணுங்கி.

**நின்றுல்மேனி,** மனிதர் நிழல்பட்டால் பொன்னிறமாக மாறும் பூடு, இதில் இரசங்கட்டும், வங்கம் சுண்ணமாகும், a plant that turns to golden colour when men's shadow fall on it. It is capable of binding mercury and calcifying tin.

**நின்றிகா,** சிற்றேலம், small cardamom.

**நின்றிடம் தீஞ்சான்,** see நின்றவிடம் தீய்ஞ்சான்; 2. பல்லிப்பூடு, lizard plant — Buchnera asiatica or Striga lutea ( Lour ).

**நின்றிதம்,** தரைப்பசலி, malabar night shade — Basella prostratum.

**நின்றுசிணுங்கி,** சிறியாணங்கை, a herb that is continously emitting water c. f. அழுகண்ணி, இது பாம்பு விஷத்தை நீக்கும், பெண் வசியத்திற்குதவும், cures snake bites and is used to enchant women.

**நின்ரேசி,** நாகப்படக் கற்றாழை, thorn less aloe.

**நீ,** மலைவேம்பு, hill neem — Melia composita.

**நீகம்,** தவளை. frog; 2. மேகம், cloud.

**நீகாரம்,** பனி, dew, frost.

**நீக்கம்,** இது காப்பு, நீக்கம், நிறைப்பு என்னும் மூன்றுவகை மருந்துகளில் ஒன்று, இது வந்த நோய்களைத் தீர்க்குமருந்து, one of the three kinds of treatment by medicine i. e. curing diseases; 2. நீக்குகை, act of separating.

**நீக்கல்,** தன்னையடையாது தடுத்தல், preventing so as not to over take one; 2. கொல்லல், killing

**நீக்குப்பல்லன்,** குட்டிப்பல்லன், one having snaggy teeth; 2. சிங்கப்பல்லன், one having high teeth i. e. with one cuspid or point.

**நீங்கல்,** குணமாதல் as நோய் நீங்கல் (lit) leaving as disesse, leaving the body i e. being cured of the disease; 2. காட்டுப் பூவரசு, false bern tree — Filicium decipiens; 3. நீங்குதல், being liberated or released from; 4. பிரிதல், separating from; 5. அகற்றல், removing expelling; 6. மாறுதல் (in Astrology) being changed as planets.

**நீங்காசலமலம்,** கடற்பாசி, sea weeds — Gracilaris lichenoides alias G. confervoides.

**நீங்காதவோரசையோன்,** சங்கு, conch.

**நீங்காவிக்கல்,** non stopping or continuous hiccups

**நீசகம்,** தண்ணீர், water.

**நீசடுவா,** பால். milk.

**நீசம்,** மஞ்சள், turmeric — Curcuma longa.

**நீசரக்கு,** see நீசம்.

**நீசப்புணர்ச்சி,** குறைந்த அளவுடைய ஆண் அளவு மிகுதியாயுள்ள பெண்ணுடன் கூடினால் அப்பெண்ணுக்குக் காம விகாரம் அடங்காது, the passion of women will not abate when a man smaller than she copulates with her.

**நீச்சசலம்,** மூத்திரம், urine.

**நீச்சத்தாலி,** இரசம், mercury

**நீச்சநாற்றம்,** ஓர் இழிவான அல்லது கெட்ட வாசனை, stink offensive smell.

**நீச்சுபிரமேகம்,** கோசத்தில் குத்தலுடன் விறுவிறுப்புண்டாகி, நரம்பு சுருங்கி, அடிவயிறு வலித்துக் கள்ளைப்போல் மூத்திரம் இரங்கி, சீழ்வடியும் ஓர் வகைப் பிரமேகம், a catarrhal inflammation of the genital mucous membrane marked by contraction of nerves pain in the abdomen, discharge of milky urine with pus — Gonorrheal urithritis.

**நீடசம்,** குருவி, a kind of sparrow.

**நீடசேந்திரன்,** கருடன்; brahmini kite.

**நீடல்,** நீளுதல், elongating growing long. 2. பரவுதல், spreading, extending as disease.

**நீடாணம்,** கறிக்குழம்பு, curry soup, soup extracted from mutton or meat.

**நீடாலைக்கோடு,** சூடாலைக்கல், இது உபரச் சரக்கிலொன்று, load stone which forms one of 120 kinds of natural substances contemplated in Tamil Siddha Medicine.

**நீடித்தசுரம்,** பழஞ்சுரம், long continued or chronic fever.

**நீடித்த துன்பம்.** நெடுநாளாய் அனுபவிக்குந்துன்பம், long standing suffering.

**நீடித்தநோய்,** நெடுநாளாக உடம்பில் தங்கி நிற்கும் நோய், long standing disease or complaint, chronic ailment.

**நீடித்த பிடிப்புவாதம்,** நாட்பட்ட வாதப் பிடிப்புநோய், chronic rheumatism.

**நீடித்த பிரசவம்,** கிரமப்படியில்லாது அதாவது வழக்கத்துக்கு விரோதமாக அதிக நேரமாகத் துன்புறுத்தும் பிரசவம், labour which is prolonged beyond the ordinary limit — Protracted labour.

**நீடித்தமலபந்தம்,** நெடுநாளாக விருக்கும் மலச்சிக்கல், chronic constipation.

**நீடித்ததாகம்,** விடாய் நீங்காத தாகம், unquenchable thirst.

**நீடு,** நீண்டகாலம், long time; 2. நீளுதல், prolonging.

**நீடுநினைத்திரங்கல்,** நெடுங்காலமாகக் கடவுளை நினைந்துவாடல், being afflicted with by constantly thinking of God; 2. நீடு நினைந்துருகல், pining away by continued attention of the mind in looking forward to the appearance of God.

**நீடுநினைந்துருகல்,** see நீடுநினைந்திரங்கல்.

**நீடுருவாணி,** சித்திரத்தை, lesser galangal — Alpinia galanga (minor).

**நீடுவாளி,** நீடூழிகாலம் உயிரோடிருப்பவன், one who is living for ages or for long time.

**நீடுவாளிசெயநீர்,** சாகாவுப்பு செய நீர், a pungent saline preparation retaining the body for a long time as contemplated in Tamil Siddha Medicine.

**நீடுரம்,** பாஷாணம், poison.

**நீடூழி,** நெடுங்காலம், longtime; ages.

**நீடூழி காலம்,** நெடுங்காலம், great length of time.

**நீடூழிவாழ்தல்,** அனேக காலம் உயிரோடிருத்தல், living to a great age as Rishis.

**நீடோத்பவம்,** பறவை, bird; 2. காக்கை crow.

**நீட்டக்கத்திரி,** நீண்ட கத்திரி, long brinjal.

**நீட்டக்காவிதம்,** சுரைக்காய், bottle gourd — Cucurbita lagenaria.

**நீட்டக்கொத்தவரை,** பெருங்கொத்தவரை, long clusterbean —Cyamopsis psoralioides.

**நீட்டச்சோதி,** சோதி விருட்சம், a tree luminous in the dark — Phosphorous tree.

**நீட்டப்பாகல்,** கொம்பன் பாகல், long balsam pear — Momordica charantia.

**நீட்டல்,** கைகால் நீட்டுதல் stretching of the limbs; 2. கொடுத்தல், (உ-ம்) "தேனதிலே நீட்டிப்பாரு" given as in the above phrase, 3. காலங்கடத்தல், postponing, extending the time.

**நீட்டல்குறுக்கல்,** நீட்டுதல் முடக்குதல், stretching and folding of the limbs, contraction and relaxation as of muscles and nerves.

**நீட்டாகவம்,** பம்பளிமாசு, Batavian lemon — Citrus decumana.

**நீட்டாக்கால்கை,** குறுகிய அல்லது முடங்கிய கைகால், contraction of the limps not enabling one to stretch out.

**நீட்டித்தல்,** பொழுது போக்கல், spending long time; 2. முடித்தல், accomplishing.

**நீட்டினவிரல்குறித்தான்,** கிரந்தி நாயகம், ulcer plant — Ruellia stupens.

**நீட்டுக்கதியோன்,** வெள்ளாடு, goat.

**நீட்டுக்கால்,** முடவாட்டுக்கால், goats foot — Ipomea biloba.

**நீட்டுசெடிச்சி,** பேய்த்தும்பை, devil toombay — Leucas linifolia — alias Phlomis zeylanica.

**நீண்டகண்,** தூரப்பார்வையுள்ள கண், see நெடுங்கண்.

**நீண்டகையான்,** காண்டாமிருகம், rhinoceros.

**நீண்டதும்பை,** see நீட்டுச்செடிச்சி.

**நீண்டமயல்,** காமத்தாற் பெருமயக்கம், long cherished sensual infatuation or lust by either sex.

**நீண்டமலக்கிருமி,** குடலிலிருக்கும் நாகப்பூச்சி, round worm — Ascaris.

**நீண்டவிந்து,** சுக்கிலம், emen.

**நீண்டவிலை,** ஆடாதோடை, Malabar nut — Adathoda vasica.

**நீண்டொழுகுமேகம்,** see தந்துமேகம்.

**நீதகம்,** நீர்வல்லி, betel leaf vine — Piper betle.

**நீதசெம்மண்,** மேல் பூமிமண், the red soil of a table land.

**நீதச்சிலைசூதம்,** நிலாஞ்சனம், black antimony; sulphate of antimony — Stibium.

**நீதப்பரிமளம்,** சிதாங்கபாஷாணம், a kind of native arsenic.

**நீதம்**, தானியம், grain; 2. நவச்சாரம், sal-ammoniac; 3 நீதி, equity justice; 4. நன்னெறி, correct deportment.

**நீதரசிதம்**, வெள்ளி, silver.

**நீதியாசம்**, கடல்நுரை, cuttle fish; Sepia octopodia; 2. மீனெலும்பு, fish bone.

**நீதுரசு**, காடிக்காரம், silver nitrate.

**நீதுரிக்கமிலம்**, வெடியுப்புத் திராவகம், nitric acid.

**நீத்தம்**, தண்ணீர்விட்டான் கிழங்கு, water root asparagus — Asparagus racemosus; 2. வெள்ளம், flood.

**நீத்தல்**, துறவறமேற் கொள்ளல், renouncing the world as ascetic; 2. பிரிதல், seperating from; 3. நீங்கல், deparling from.

**நீத்தவஞ்சி**, ஓர்வகைப் பூவரந்தி, a kind of soap nut tree — Sopindas tripoliatus.

**நீத்திருணி**, காமப்பால், semen virile.

**நீந்தல்**, கடத்தல், (in Philosophy) passing over or through escaping from.

**நீபம்**, கடம்பு, cadamba—Eugenia racemosa; 2. வெண்கடம்பு, white Indian oak — Barringtonia racemosa; 3. நீபமரம், Niepa bark tree — *Samadera indica*.

**நீமம்**, ஒளி, light; 2. பிரகாசம், lustre.

**நீம்**, வேம்பு, margosa tree; neem tree — Azadiracta indica.

**நீம்பயம்**, பனிதாங்கி, southeren wood — Artimisa abrotanum.

**நீம்பல்**, வெடியுப்பு, nitre—Potassium nitrate.

**நீயம்**, see நீபம்.

**நீரங்கொண்டி**, நொச்சி, five leaved notch — Vitex negundo.

**நீரசம்**, தாமரை, lotus flower — Nelumbium speciosum; 2. மாதுளை, pome granate — Punica granatum; 3. சலவாயு, hydrogen.

**நீரடி**, நீரடிமுத்து, which see.

**நீரடிமுத்தம்**, see நீரடிமுத்து,

**நீரடிமுத்து**, நீர் வெட்டி முத்து, இதற்கு மரவெட்டி என்றும் பெயர், இது திருவாங்கூர், மலையாளம், இலங்கை இவ்விடங்களிலுள்ளது; இம் மரம் 50 அடி, இலைவழவழப்பு, காய் உருண்டை, வெகு கடினம், ஆப்பில் பெரிதிருக்கும், விதைகள் அனேகம்; பூக்கள் சிறியன, வெண்மை நிறம், கொட்டையின் உள் சதைப்பற்று குமட்டல் வாசனை, வழவழப்பு, சிறிது விருவிருப்புமுள்ளது, இதினின்று எடுக்கும் எண்ணெய் பாதம் எண்ணெய் போலிருக்கும், ஆனால் மிக்க தடிப்பாயிருக்கும், இது மிக்க கொடுமையுள்ளது; குஷ்டம் முதலிய சர்ம நோய்களுக்கு மேலில் தடவவுதவும், மேலோட்டைத் தூள் செய்து காடி அல்லது விளக்கெண்ணெயில் குழைத்துகால்சிரங்கு, சொறி சிரங்குக்குப் போடலாம், பழத்தைச் சாப்பிட மயக்கத்தை உண்டு பண்ணும், இதன் விரை மீனைக்கொல்லும், விரையைச் சூரணித்துச் சாப்பிட வாதநோய், நமைச்சல் போம்.

விதையைச் சூரணித்து மெழுகுச் சேர்த்துச் சருமநோய்களுக்குத் தடவலாம், எண்ணெயைக் குறைந்த அளவில் உள்ளுக்குங் கொடுக்கலாம், கண்ணில் அதிகமாக நீர்வடிந்தால் இவ்வெண்ணெயை உபயோகிக்கலாம், வேப்பம் பட்டை, பூவரசம் பட்டை, சிவனார் வேம்பு இவைகளை இடித்து கஷாயமாக இறக்கி அத்துடன் இவ்வெண்ணெயையும் சேர்த்துக் காய்ச்சி வடித்துச் சர்க்கரையிற் கலந்து சிறிதளவு கொடுக்க தோல் சம்பந்தமான நோய்கள் போம்.

இதன் பருப்புடன் சுக்கு, அமுக்கிரா, நன்னாரி வேர், பறங்கிச்சக்கை இவைகளைப் பாலில் அவித்துக் காயவைத்துச் சூரணித்துச் சர்க்கரையும் நெய்யும் சேர்த்து இலேகிய பாகத்தில் கொள்ள தோலைப் பற்றிய நோய்கள் போம்,

இதன் எண்ணெயை உடக்கே தயாரிக்கும் சால்முகரா எண்ணெய்க்குச் சமமாகச் சொல்லலாம், சால்முகரா கிடைக்காத விடத்தில் இதை உபயோகிக்கலாம், fish poison tree — Hydnocarpus incbrians alias H. venenata alias H. wightiana. It is also called jungle almond. Maravatty, Hydragogue nut tree, Tamana oil tree, Tree is 50 ft high and common in Travancore, Malabar and Ceylon, leaves glabrous, fruit globose, very hard as large as an apple seeds numerous, flowers small, white, Kernel of seed has a nausesus smell and tastes unctuous and a little acrid.

Oil got from the seed by expression resembles almond oil in appearance, but much thicker. Oil is in great repute as

drastic. It is applied externally for leprosy and other cutaneous diseases, kernels and thin shells sometimes ground together, mixed with castor oil or vinegar is applied externally to cure scabbies and uclers in the feet. Fruit if eaten occasions giddiness, seeds act as poison to fish; powdered seeds are used in rheumatic complaints and itching. It is also mixed with wax and used as an ointment for skin affections. Oil can be taken internally in small quantities and applied to the eyes externally in cases of ophthalmia marked by increased flow of tears. The kernel mixed with other ingredients viz dry ginger, horse root, sarsaparilla and china root and ground into a powder to which are added subsequently sugar and butter and used for skin affections. The oil almost the same in effieacy as chalmoogra oil prepared in the North and it may be used with great advantage in places where the latter is not procurable Margosa bark, Portia bark and Shiva's neem are all pounded together and boiled with water and the extract is filtered out. To this equal quantity of this oil is added and boiled and filtered. This oil will be found very useful and effective in skin affections.

NOTE :— The tree is very common on the Western coast and is generally found over hanging tanks. The fruit is greedily devoured by fishes which are therefore rendered unfit for eating. The oil from the seeds is sedative and used as a remedy in scabbies. Some writers call this as chaulmoogra oil itself an this is wrong although the effect is the same.

The oil prepared with other ingredients such as Margosa bark etc., is found to be very an efficacious remedy in venereal and syphilitic sores and ulcers.

**நீரடிமுத்தெண்ணெய்,** நீரடிமுத்துக் கொட்டையினின்று தயாரிக்கும் எண்ணெய், oil prepare from the kernel of Hydnocarpus wightiana nut is almost equal to chaulmoogra oil. See நீரடிமுத்து.

**நீரடை,** பன்றிப்புடல், hog snake gourd or small snake gourd — Trichosanthes dioica; 2. ஓர் அப்பம், a kind of confection or coke

**நீரடைத்தல்,** see நீரடைப்பு.

**நீரடைப்பன்,** ஆட்டுக்குக்காணும் ஓர் அடைப்பன் நோய், the symptomatic anthrax of sheep due to some organism or infections bacilla through wounds — Braxy; 2. மூத்திரத்தைத் தடுப்பது, anything that obstructs the passage of urine.

**நீரடைப்பு,** இதுவே மூத்திர கிருச்சிரம், மூத்திரப் பையிலிருக்கும் நீர் அக்கிரமமாய் வெளிப்படல், அல்லது வெளிப்படாமல் அடைப்பட்டுத் தங்கல், இதனால் மூத்திரம் சரிவர வராமற்படிக்குத் துன்புறுத்தும், இது பலகாரணங்களை முன்னிட்டு ஏற்படும், மேக வெள்ளை சம்பந்தமாகவும், புண்களாலும், கல்லடைப்பாலும், இத்தகைய நிலைமை உண்டாகும்; இந்நோயின் குறிகளாவன, மூத்திரம் பெய்ய அடிக்கடி விருப்பங் கொள்ளல், முக்கியமாக இராக்காலங்களில் ஆண்குறியின் முனையில் தினவு, மூத்திரப் பை உப்பிக்காணல், அடிவயிற்றில் கழலையைப் போல் காணல், ஆசனவாயண்டை குத்தல் வலி, நாக்குக் கருநிறமடைதல், நாடி தளரல், சன்னியால் பிதற்றல், முதலியன, கடைசியாக விக்கல் காணில் மரணமே யென்று நிச்சயிக்கக் கூடும், obstruction of the urethral passage, stricture of urethra causing retention of urine or discharge by other unsual ways urine dribbling out after micturition, increasing difficulty in making water. This may be due to several causes such as attacks of gonorrhoea local lessions, stone in the bladder etc. There is also frequently sudden stoppage of the stream of urine owing to the contraction of urethra in one or more places or to the stone blocking the passage or lodging in the urethra. The following are the symptoms. frequent desire to pass water especially at night, itching at the tip of the penis, distension of the bladder, appearing like a tumour in the lower part of the abdomen, smarting pain about the anus, black tongue, feeble pulse, and muttering delirium. Hiccup coming after delirium is a sign of determining the fatal termination. — Anuresis; Calculous anuria. See மூத்திரக்கிரிச்சரம்.

**நீரட்டை,** நீரில் வாழும் அட்டை, water leech.

**நீரணுவாய்ப்போதல்,** ஆவியாய் போதல், evaporating.

**நீரண்டம்**, பிடுக்கில் பீஜத்தைக் கவர்ந்துள்ள பையில் நாளாவட்டத்தில் நீர் சேர்ந்து காணும் அண்ட விக்கம், இவ்விக்கம் பிடுக்கின் அடிபாகத்திலிருந்து தொடங்கி, மேல் பாகம் வழவழப்பாயும்; தொடுவதற்கு மிருதுவாயும், வலியில்லாமலும், கனதினுல் தொந்தரவாகவும் காணப்படும், இது சில சமயம் காயப்படுவதாலும், பிறப்பிலே ஏற்பட்டதாயும் அல்லது பிறதொரு காரணமில்லாமலும் ஏற்படலாம், இதற்கும் குடலண்ட விருத்திக்கும் வெகு வித்தியாச முண்டு, இதைக் குத்தி நீர் எடுப்பதாலும் அல்லது சத்திர சிகிச்சையாலும் குணப்படுத்தலாம். Hydrocele which is due to a collection of fluid in the serous covering or bag enveloping the testicle which comes on gradually. It begins from the bottom of the Scrotum and forms a swelling smooth on its surface, soft to the feel, free from pain and tenderness but causing uneasiness from its weight It may originate from injuries or may be congenital or occur without any assignable cause. It may be easily distinguished from rupture (hernia). It may be cured either by tapping or surgical operation.

NOTE: The distinctive features are contrasted as shown below:

**Rupture**

1. comes on suddenly.
2. disappears on lying down and reappears when standing up.
3. gurgling noise may be felt or heard inside.
4. tumour tense.
5. when coughing impulse is felt.
6. tumour does not obscure the testicle.
7. dangerous to life.
8. liquid thrill cannot be felt.

**Hydrocele**

1. comes on gradually.
2. does not disapper or reappear.
3. no such noise is heard.
4. tumour smooth.
5. no such impulse or shake is felt.
6. obscures the testicle.
7. no danger to life.
8. liquid thrill is felt.

**நீரண்டி**,

**நீரதம்**, மேகம், cloud.

**நீரதி**. சமறு, juice, essence.

**நீரத்தி**, மஞ்சள் அத்தி, yellow fig — Ficus callosa; see கொடியத்தி.

**நீரம்**, நீர், water; 2. பானம், drink, liquor

**நீரம்பலி**, see நறும்பிலி.

**நீரரவு**, நீர்ப்பாம்பு, water snake — Hydrus.

**நீரருகல்**, நீர் கட்டல்; நீர்ச்சிறுப்பு, suspension of urine.

**நீரருக்கல்**, நீர்க்கட்டு, suspension or retention of urine.

**நீரரும்பல்**, நீர்ப்பொசித்தல். oozing out of water.

**நீரலரி**, நீரரளி, water gaunair — Polygonum barbata; 2. முதலைப் பூண்டு, alligator's nose — Polygonum genus. see ஆற்றலரி.

**நீரல்லி**, see நக்கேணரி.

**நீரழி**, see நீரழிவு.

**நீரழிவு**, பிரமேகம், இந்நோய் தெரியாமலே இரகசியமாக உடம்பினுள் அடங்கி நிற்கும், மூத்திரம் அளவுக்கு மீறி இறங்கும், இதில் சர்க்கரையிராது, இதில் மற்ருெரு இனம் அதில் மூத்திரத்தில் சர்க்கரை இருக்கும். இதற்கு மது மேகம் என்று பெயர், இம் மூத்திரத்தில் ஈ எறும்பு மொய்க்கும்; வெகு நாள் வரை பசி குறையாது, சில சமயங்களில் அதிகப் பசியெடுக்கும், உடம்பு வறட்சியாகக் காணும், மலச் சிக்கல் ஏற்படும், நாவறட்சி, தாகம் காணும்; உடம்பின் வல்லமை நாளுக்கு நாள் குறைந்து, நாடி தளர்ந்து, இடுப்பிலும் விலாப்பக்கத்திலும் குடைச்சல் உண்டாகும், நாளாக ஆகப் பசி குறைந்து வியர்வை கண்டு இருதயம் பல வீனப்பட்டு, சிலசமயம் பாதமும் வீங்கும், பெண்களுக்கு மர்ம ஸ்தானத்தில் அதிக நமைச்சலும் தினவும் காணும், ஆண்களுக்கோ குறி நுனியிலுள்ள தோல்வெந்து காணும், கண்ணில் துர்நீர் சேர்ந்து, பார்வையைக் குறைக்கும், சில சமயங்களில் மயக்கம், கட்டி முதலியவைகள் காணும்.

இது சாதாரணமாய் உட்புறத்திலுள்ள ஈரல், குண்டிக்காய் முதலிய உறுப்புகள் சீரழிவதால் சிலருக்கு உண்டாயினும் பெரும்பாலும் தகுந்த செல்வாக்கில் உள்ளவர்க்கே பிடிக்கும், உழைப்பில்லாமலும் மிதமீறி நெய், அரிசி, மிட்டாய், சர்க்கரை முதலியவைகளைப் புசிப்பதாலும், இன்னும் பல வித உணவுக் குற்றங்களினுலும் உற்பத்தியாகும், இது மருந்தினுல் வசப்படாத காலத்

தில் மருந்தை நிறுத்தி, பத்தியக் கிரமங்களைக் கைக்கொண்டு ஒழுகுவதே உத்தமம். சீரணவுறுப்புகள் தாங்கமுடியாத அவ்வளவு உயர்தரமான உணவுகளைச் சாப்பிடுவதாலும், மூளைக்கு சதா வேலையைக் கொடுப்பதாலும் இந்நோய் ஏற்படுவது கண்கூடாய்ப் பார்க்கலாம், ஆகவே இந்நோயாளிகள் தேகத்திற்கு உழைப்புக் கொடுத்தும், மிகவும் சிந்தனை செய்யாமலும் அமைதியாக விருப்பது உத்தமம், இதனால் தசை நார்களெல்லாம் பலப்பட்டு, உடம்பினுறுப்புகள் வலுவடைந்து மூத்திரங் குறைந்து சர்க்கரை நீங்கி நோய் சாந்தப்படும், உணவுகளையும் திடீரென்றில்லாமல் நாளடைவாக மாற்றிவரவும், இதன் குறிகள் அடியிற் கண்ட செய்யுளாலினிது விளங்கும்;

"தாகமே யதிக மாகித் தளர்ந்துநா வுலர்ந்து மிக்க
சோகமாய்க் கிறுகி றுத்துத் தொடர்நதுகை காலும சோர்ந்து
ஏகமாய்ப் பகலும் அல்லும் விடாதுநீ ரிறங்கும் அன்றி
மோகமாய் மழைப னிக்கு முதிர்ந்திறங் கிடுஞ்சலந்தான்;
( வைத்திய விளக்கம் )

"துனியுறக களையுண்டாகும் தோமில்போ சனம்வெறுக்கும்
நனிவயி றெரிவுண் டாகும் நாள்கழிந் திடுகிற்றேகம்
இனிவெளுத் தாளும் வற்று மிருசெவி யடைத்து நிற்கும்
தினநலி சலரோகத்தின் தீக்குண மிதுவென்றாரே"

diabetes. *It comes on insiduously* remaining concealed in the system. It is characterised by frequent passing of urine in large quantities without sugar. This is known as diabetes insipidus. If urine contains large amount of sugar it is known as diabetes mellitus. This diabetic urine attracts flies and ants in large numbers. The appetite for a long time remains good and sometimes horacious. The skin becomes dry and the bowels costive, the tongue becomes dry and there is constant thirst. As emaciation progresses, general health suffers, pulse becomes feeble. There is great debility followed by acute poin in the loins and on the sides. After some time the appetite declines, *perspirations occur*, heart becomes weak and the feet may also swell. In women will be found frequent intense itching in the private parts and in men balanites ( inflammation of the fore skin of the penis ). Sometimes they are liable to cataract and also attacks of coma and to carbuncle.

The cause of this disease is generally due to the liver and kidneys not acting properly and errors in various organs. The disease is very very prevalent among well-to-do people who lead indolent lives and indulge in consuming abundance of ghee or butter, rice, sweet and sugar and other errors in diet. When treatment cannot be resorted to by medicine, it can be regulated to a successful end by appropriate diet, physical rest. The causes for this disease are generally ascribed to rich meals which cannot be sustained by the digestive organs and also to mental strain and so physical exercise and absolute rest are most essential. By adopting this, there is every hope to rebuild the constitution to improve the toning of the nerves and muscles and strengthen the relative organs, thus paving the way for reducing the secretions of urine and disappearance of sugar. Any change of diet should be gradual and not abrupt.

*நீரறானி*, see *நீரலரி*.

*நீராறுகல்*, *சிறுநீர் சொட்டு சொட்டாக விழுதல்*, passing of urine in drops.

*நீரற்றவியாதி*,

*நீரளவைக்கருவி*, *நீராழத்தை நிர்ணயிக்குங் கோல்*, a gauge or instrument for measuring or ascertaining the height or depth of water in a reservoir, river or tank.

*நீரளி*, *நாவல்*, which see.

*நீராகாசிதம்*, *நான்முகப்புல்*, wild sugarcane four faced stalk grass — Saccharum genus.

*நீராகாரத் தண்ணீர்*, *சோற்றிலிட்டத் தண்ணீர், இதனால் வாத, பித்த, சிலேட்டும வறட்சிதாகம் போம், சுக்கில விருத்தியுண்டாகும்*, cold rice water. It is capable of alleviating thirst and scartching due to disarrangement of the three humours and increasing the secretion of semen.

**நீராகாரம்,** சோற்றில் தெளிந்த தண்ணீர், cold rice water; 2. கொதித்த தண்ணீர், boiled rice water; 3. அன்னகாரம், rice gruel water, conjee or any liquid diet.

**நீராகாரி,** see பாலாட்டங்கொடி, a twiner.

**நீராடல்,** குளித்தல், bathing.

**நீராட்டல்,** தண்ணீர் விட்டரைத்தல், grinding by adding water to it; 2. குளிப்பித்தல், to give bath.

**நீராத்தோற்பலம்,** செங்கழுநீர், red Indian water lily.

**நீராமக்கணம்,** குழந்தைகட்கு மயக்கமும், கடுப்பும் கண்டு சீதமாய்க் கழியும் ஓர்வித கணநோய், a kind of tabes in children characterised by giddiness, irritation of the anus, mucous discharge and other symptoms of dysentery.

**நீராமம்,** see நீராமை.

**நீராமயம்,** நீரேற்றம், dropsy, see நீராம்பல்.

**நீராமை,** ஓர் வகை மகோதரம், இதனால் வயிறு பருத்து, வீங்கி, ஆமையோடு கவிழ்ந்தது போற் காணப்படும் ஓர் நோய், அன்றியும் அக்கினி சுவாலையைப் போல் சுரம் காய்ந்து வெதுப்புண்டாகி, அன்னம் செல்லாது வயிற்றிற்குள் கட்டியுருள்வது போற் காணப்படும், இது சாதாரணமாய் சுனைத் தண்ணீர் குடிப்பதனால் மண்ணீரல் வீங்கிக் காணும்; இது வயிற்றில் கண்டால் ஆமைக்கட்டி யென்றும், இடது புறம் வலி கண்டால் கெண்டைகட்டி யென்றும் சொல் வதுண்டு, a kind of dropsy marked by swelling of the abdomen which almost resembles the shell of a tortoise. The symptoms are malarial fever, feeling of fullness and pain on the sides loss of appetite, fancing as if a tumour is rolling in the abdomen. It is said to be due to drinking water of malarial hill tracts and consequent enlargement of the spleen arising from congestion. If pain is confined to abdomen it is known as tortoise tumour but pain spreads to the left side it is known as spleenic tumour (enlargement).

**நீராமை,** கடலாமை, sea tortoise; 2. பெண்களுக்கு கருப்பையிற் காணும் கட்டி, overian tumour occuring in women.

**நீராமைக்கட்டி,** see நீராமை.

**நீராம்பல்,** நீரேற்றத்தினால் காணும் வீக்கம், இது முக்கியமாய் வயிற்றைப் பற்றியது, இதனால் நெஞ்சுக்கு மேல் உடல் வற்றி, நரம்பு தோன்றி, மார்பின் கீழ் வயிறும் கால்களும் வீங்கி, நாவும், கண்ணும், பாதமும் வெளுத்து ஆண்குறியும் அண்டமும் வீங்கி, மலந்தீய்ந்து மேல் மூச்சு கண்டு, புறங்கால் தடித்து, புளிப்பிலும் பல தின்பண்டங்களிலும் இச்சையுண்டாக்கும், a kind of dropsy attended with swelling due to the escape of the watery portion of the blood to the surrounding tissues and cavity. It affects the belly which swells due to accumulation of fluid. - known as ascites. It is characterised by the following symptoms viz — emaciation of the parts of the body above the chest; distinct appearance of the veins, swelling of the abdomen and the lower extremities including the genitals and the scrotum, anemic appearance of tongue, eyes and the feet; loud breathing swelling round the ankles etc. It is associated with a craving for sour substances and other eatables. see கொடியாம்பல்.

**நீராரை,** இதுவே ஆரைக் கீரை, நீர் ஓரங்களில் விளைவதால் இப்பெயர், அதிமூத்திரம் இரத்த பிரமேகம் போம், a vegetable green of the marseilia genus — Marsilea qudrifolia It is so called from its being found grown near the borders of water in tanks, rivers etc.

**நீராலாட்டல்,** see நீராட்டல்; 2. குளிப்பித்தல், causing to bathe.

**நீரால்,** ஓர் வகை ஆல், narrow leaved fig— Ficus nervosa.

**நீராவி,** சூட்டினால் தண்ணீரினின்று எழும்பும் புகைபோன்ற ஆவி, the vapourous or gaseous substance into which water is converted under heat; steam, reek.

**நீராவியம்,** பாற்கடுக்காய், white myrobalan of Cudappah — Terminalia pallida.

**நீராவியாதல்,** நீர் ஆவியாய் மாறுதல், evaporating.

**நீராவேசம்,** தண்ணீரைக் கண்டால் வெறி கொள்ளும், இந்த ஆவேசம் போய் நாய்க்கடியாலுண்டாகும், a morbid and unnatural dread of water from frenzy. It is a produced by the bite of a mad or rapid dog — Hydrophobia.

**நீராழி,** கடல், sea.

**நீரானம்,** மயக்கமில்லாத பானங்கள், palmyra toddy free from intoxication; 2. புதிதாக இறக்கிய தித்திப்புக் கள், sweet toddy drawn a fresh; 3. மருந்து முடிச்சி போட்டக்கள், palmyra toddy to which medicinal ingredients are added or mixed.

**நீரான,** நீர்த்தன்மையான, of the nature of water, watery. Aqueous.

**நீரிடம்,** நாவல், which see.

**நீரிடை,** செயநீர், a pungent saline liquid.

**நீரிண்டம்,** துரையிண்டு, a variety of Mimosa.

**நீரிண்டு,** see நீரிண்டம்.

**நீரிரத்தம்,** மூத்திரத்துடன் இரத்த மிறங்கல், discharge of bloody urine — Hematuria.

**நீரிலாநிலம்,** பாலை நிலம், desert — barren tract.

**நீரிலை,** நூல்தாளி, larger chinese laurel — Antidesma menasu; 2. பொன்னுங்காணி சக்களத்தி, water leaf, river blatty — Hydrolea zeylanica.

**நீரிலோடி,** ஓர்வகை நெட்டி, a kind of pith plant.

**நீரில்லாத்தாமரை,** கல்தாமரை, stone lotus dry lotus.

**நீரிவிடல்,** தண்ணீர் போலாதல், becoming watery, turning to a fluid state.

**நீரிழிவு,** நீரழிவு, which see.

**நீரிற்றுவிழல்,** மூத்திரம் துளிதுளியாய் விழல், urine falling in drops, dribbling of urine; 2. தண்ணீர் சொட்டல், water falling in drops.

**நீரிறக்கம்,** see நீரழிவு; 2. தண்ணீர் இறங்கல், water fall; 3. மூத்திரம் பெய்தல், making water.

**நீரிறங்கல்,** சாதாரணமாக மூத்திரம் பெய்தல்; passing urine.

**நீருக்கிருக்கல்,** see நீருக்கிருத்தல்.

**நீருக்கிருத்தல்,** மூத்திரம் பெய்தல், making water.

**நீருடும்பு,** நீர் முசலி, water guana — Newt.

**நீருடை,** நீர் உடை மரம், rubber thorn — Acacia latronum.

**நீருடைதல்,** நீர்பிரிதல், free flow of urine as opposed to நீர்கட்டல், suppression of urine.

**நீருணவு,** நீராகாரம், சூப், கஞ்சி முதலியன, liquid diet as soup, conjee etc.

**நீருதடன்,** ( நீர் + உதடன் ) அட்டை, leech so called from its sucking blood.

**நீருதிபாசம்,** கடற்பாசி, sea weed, sea moss — Gracilaria lichenoides.

**நீருமரி,** ஆற்றுமரி, bastard cyprus — Tamarix articulata alias Tamarisk dioisa; 2. கடற்கரை உமரி, இது கடலோரங்களில் விளையும் செடி, தரையில் தாவிச்செல்லும் அனேக தண்டுகள் வாய்ந்தது, இளந்தண்டுகள் வழவழப்பாயும், சிவப்பாயுமிருக்கும், இலைகள் மாறிமாறியிருக்கும், சதைப் பற்றுள்ளது, பூக்கள் மிகவும் சிறியன, பச்சை நிறம், இது கடலோரங்களிற் காணலாம், பூடு, உப்புக் கரிக்கும், இது கண்ணாடி சோப் செய்வதற்கும் உபயோகப்படும், இதன் சாம்பல் எருவாகவுதவும், seaside Indian salt wort — Suaeda nudiflora alias S. aritina. It has many stems spreading close upon the ground and often rooting, young parts of the branch are smooth and coloured reddish. Leaves alternate and fleshy, flowers very small greenish. It is common in salt barren land near the sea and has a very saline taste. It is used as mordant. It is opposed நிலவுமரி, which see.

**நீருரிஞ்சி,** நீரிழுக்குந்தன்மை, nature of attracting or absorbing moisture from the air — Deliquescence as salts.

2. உப்பு, salt.

3. வாதநூற்படி நீர்த்தன்மையாக விருக்கும் இரசத்தை மணியாக மாறச் செய்யு மருந்து, ( in Alchemy ) any medicine capable of converting the liquid mercury into a solid state.

4. உடம்பினின்று கெட்டநீரை வெளிப்படுத்து மருந்து, ( in Medicine ) any drug or medicine with virtue of eliminating bad or morbid fluid from the human body.

5. தண்ணீரை இழுக்கும் யந்திரம், sucking pump.

6. உடம்பிலுள்ள கெட்டநீரை தோல், சளி, சவ்வு மூலியமாய் வெளிப்படுத்து மருந்து, any medicine or agent that promotes aborption i.e. the taking up of fluids by the skin or mucous membrane — Absorbent.

7. நெருப்பு, fire.

8. உஷ்ணம், heat.

9. ஒட்டை, camel.

**நீருவஞ்சி,** வஞ்சிமரம், common willow of India, south Indian willow — Sabix tetrasperma.

**நீருள்ாரை,** நீராரை.

**நீருள்ளாரை,** See நீராரை.

**நீருள்ளி,** வெண்காயம், onion — Allium sepa.

**நீருறை,** நீர் ரூபமாக வுள்ள மருந்து, liquid medicine, lotion; 2. மருந்துநீர், mixture of solution.

**நீருறைக்கட்டி,** பனிக்கட்டி, snow.

**நீருற்றமிர்தம்,** புளிக்கறி, any preparation of curry with a tale excess of salt; 2. தண்ணீர் விளாவிய பால், milk adultarated with water.

**நீரெட்டிமுத்து,** }
**நீரெட்டிவிதை,** } see நீரடிமுத்து,

**நீரெரிச்சல்,** மூத்திரம் பெய்யும் பொழுது ஏற்படும் எரிச்சல், இது மூத்திரதாரை அழற்சியாலுண்டாகும், burning pain in the inflamed urethra during micturition — Ardor urinae.

**நீரெரிப்பு,** நீர்க்சுருக்கு, painful or difficult urination — Dysuria; 2. மூத்திரவெரிச்சல், a scalding sensation during the passage of urine.

**நீரெரிவு,** நீரெரிச்சல், which see.

**நீரெலி,** தண்ணீருக்குள் வாழும் எலி, a rat that lives about water — water rat.

**நீரெழுகாசம்,** கண்ணுள் நீர் கோத்துத் திரண்டுப் பூப்போல் தோன்றி பாவையையு மறைக்கும், இதனால் கருவிழிக்கு மேற்புறமும்; கீழ்ப் பக்கமும் சிவந்து மின்னலைப் போல் வலியும் கூச்சமும் தோன்றி மறைந்து கண்ணில் நீர் வடிந்து, பேசுவதினால் வலியுண்டாகித் துன்புறுத்துமோர் கண்ணோய், a film or cataract in the eye caused by collection of morbid fluid thus screening the lens and affecting the eye sight. It is marked by inflammation of the black of the eye on the upper and lower portions; pain due flashes before the eyes, discharge of tears, pain on talking etc.

**நீரெழுச்சி,** வெள் விழியில் நீர்த் துளியைப் போல் தளதளப்பான சதையை யுண்டாக்கும் ஓர் கண்ணோய் a film or flesh growth on the sclerotic of the eye as transparent as drop of water.

**நீரேற்றம்,** வெள்விழியில் ஏற்படும் ஓர் நீர் திரட்சி accumulation of morbid fluid in the white of the eye; 2. இந்திரிய விருத்தியால் ஏற்படும் மதம், sexual excitement due to the secretion of semen in excess; 3. சல தோஷம், cold, catarrh; 4. நீர்ப்பாண்டு, dropsical swelling due to accumulation of bad fluid from the surrounding tissues.

**நீரைப்போக்கி,** மூத்திரத்தைப் பிரிக்குமருந்து, medicine that increases the secretion and flow urine — Diuretic.

**நீரொடி,** see நீரொட்டி.

**நீரொடை,** see நீருடை.

**நீரொட்டி,** see நீராரை; 2. நீரை இழுக்கும் வஸ்து, that which imbibes or absorbs moisture or water—Imbiber.

**நீரொழுக்கு,** மூத்திரம் வெளிவருவதை அடக்க முடியாத செயலினால் மூத்திரம் சொட்டு சொட்டாக ஒழுகல், inability to restrain a natural discharge of urine, as a result of which a continuous dribbling of the urine ensues — Incontinence of urine.

2. மூத்திரப்பை நிரம்பியும், வழக்கமாகப் பெய்ய முடியாத தன்மையால் மூத்திரம் நெருக்கடியினால் சதா கசிவது, incontinence of urine in which the bladder is full and cannot be emptied in the normal way, but the urine dribbles away from mere pressure — Passive incontinence.

3. நித்திரையில் தன்னையறியாமலே மூத்திரம் வெளிப்பட்டு ஒழுகல், involuntary discharge of urine occurring at night during sleep — Nocturnal enuresis.

**நீரொளிகாசம்,** see நீரெழுகாசம்.

**நீரோகம்,** see நீரோருகம்; 2. நீர் ரோகம், urinary disease.

**நீரோருகம்,** நீரில் எழும்புவது, அதாவது தாமரை, that which springs in water as lotus.

**நீரோட்டம்,** தண்ணீர் ஓட்டம், running of water as in a river or a stream; 2. இரத்தினங்களில் அமைந்த பிரகாசத்திற்குண்டான நீர்ப்பாய்ச்சல், transparency and brilliance of gems - water mark (gem of the first water - gem of finest quality).

**நீரோட்டம் பாயுங்கல்,** வெள்ளை சுக்கான் கல், white lime stone.

**நீரோம்பல்,** நீர்க்கடம்பு, water cadamba — Nanclea parviflora alias N. purpurea; 2. பேய்க்கடுக்காய்; narrow leaved myrobalan — Terminalia travancorica; 3. மூத்திரத்தைப் பரிசோதனைக்காக வேண்டிப் பாதுகாத்தல், preserving urine for examination.

**நீரோளி,** see நீர்வாளி.

**நீர்,** தண்ணீர், water; 2. மூத்திரம், urine; 3. பன்னீர், rose water, 4. பனிநீர், dew water; 5. நீலோற்பலம், blue Indian water lily — Nymphaea stellata; 6. பூண்டின் முதற் பெயர், plants first term as நீர்க்கடம்பு நீர்முள்ளி etc; 7. மொழிக்கு இறுதியில் வந்து பல வகை நீரைக் குறிக்கும், a suffix denoting several kinds of weter as பனிநீர், ஆலங்கட்டி நீர் etc; 8. குணம், disposition; 9. தன்மை, nature; 10. காடிநீர், vinegar; புளித்த நீர்; any fermented liquid.

**நீர்,** அப்பு, இது தத்துவ நூல்படி பஞ்சபூதப்பிரிவினுள் ஒன்று, பிரகிருதியில் ஒவ்வொரு சடப் பொருளிலும் பஞ்சபூதம் பொருந்தியுள்ளது என்று முன்னோர் துணிபு, ஆகவே அண்டத்திலும், பிண்டத்திலும் இப்பஞ்ச பூதமே பொருந்தியுள்ளது, உலகத்தில் பஞ்சபூதப் பிரிவு இல்லாத பொருளே கிடையாது, ஆகவே உலகமே பஞ்சபூதத்தாலாக்கப்பட்டது. அதேமாதிரி மனிதர் முதலிய உயிர்வாழ் பிராணிகளிலெல்லாம் பஞ்சபூதம் பொருத்தமென்பது ஒன்றுண்டென்று துணிந்தே சொல்ல ஏதுவாகும். இதனால் அப்பு என்ற நீருக்குள்ள மகத்துவம் இப்பஞ்சபூத வொடுக்கத்தில் தெற்றென விளங்கும், பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்னும் பஞ்சபூதத்தில் இதை இரண்டாவதாகக் கூறப்பட்டுள்ளது, இதன் குணத்தைச் சற்று யோசிக்குமிடத்து இதற்கு சப்தம், பரிசம், ரூபம், உருசி இவைகள் இயல்பாகவே பொருந்தியுள்ளது, கூட்டுறவில் குளிர்ச்சி, நீர்த்தன்மை, கனதி, வழவழப்பு இவைகளைக் கொடுக்கும் சக்தியுள்ளது, சாத்துவ குணமும் பொருந்தியது, ஒளிபாயக் கூடியது, உலக பாஷையில் இது தண்ணீரென வழங்கும், இது பொதுப்படி ஆழிநீர், ஆற்றுநீர், ஊற்றுநீர், கொண்டல்நீர் என 4 வகையாயினும் இதில் அடியிற் கண்டபடி அனேகவகையாக கொள்ளப்படும், (In Philosophy) water one of the five elements. In the material world, according to the early philosophers, every material substance in this world is composed of five distinct principles or entities and so the five elements theory is equally applicable to both the world and the living being including man. So, there is nothing in this world that does not come under this five element theory which in themselves make up the world. So, the importance of this 2nd element water is clear from the operation of these five elements viz —Earth, Water, Fire, Air and either ( sky ) over the material substances of this world. When considering the properties, water possesses sound, tangibility, visibility and taste and it bestows the sense of coolness, fluidity, weight and smoothness on bodies. It has the qualities of happiness or satuagoonam and of inertness or tamogoonam and it is transparent producing light and weight. It forms the different fluids of the body. Colloquially, it is known as water ( cold ). Although, it is divided into four kinds in general, it is subdivided as mentioned below :

(A) 1. கடல்நீர், sea water containg several salts in solution.
2. ஆற்றுநீர், river water from rivers require no special mention.
3. ஊற்றுநீர், spring water issiung from the surface of the ground.
4. மழைநீர், rain water from the clouds.
5. சுனைநீர், water flowing from tops of mountains and hills.
6. உலோகநீர், mineral water containing minerals in Solution.
7. கொதிப்புநீர், hot springs ( in the middle of Godaveri ).

8. சுக்கான்பாறைநீர், hard water from calcoreous or gypreous (Chunam) soils.
9. ஏரிநீர், lake water } with organic and in organic impurities.
10. குளத்துநீர், tank water, }
11. கேணிநீர், shallow well water.
12. பாறைநீர், rock water flowing through granites.
13. காட்டாற்றுநீர், water from forests.
14. ஓடைநீர், stream water.
15. கிணற்றுநீர், deep well water.
16. பனிநீர், dew water.
17. அருவிநீர், water from water falls.
18. அடவிநீர், water flowing through forests.
19. குட்டைநீர், pit water or pool water.

**in physiology**

(B) 1. இரத்தநீர், serum of blood — Plasma — liquor sanquinis.
2. பித்தநீர், bile.
3. பாசகநீர், gastric fluid or juice.
4. சிறுநீர், urine.
5. அன்னரசநீர், chyle.
6. அன்னகுழம்புநீர், chyme.
7. சளிநீர், mucous fluid.
8. நிணநீர், lymph fluid.
9. இரத்தம், blood.
10. உமிழ்நீர், saliva.
11. கண்ணீர், tears from the eye.
12. குடல்நீர், intestinal juice — Liquor entericus.
13. விந்துநீர், (சுக்கிலம்) seminal fluid.
14. ஊனீர், serum of the muscles.
15. வியர்வைநீர், perspired water.
16. விசர்க்கநீர்.
17. பனிக்குடத்து நீர், liquor amni — Amniotic fluid.
18. சிரசு அல்லது கபாலநீர், water.
19. மூளைநீர், cerbral fluid.
20. செவிநீர், labyrin thine fluid — Perilymph.
21. முள்ளந்தண்டுநீர், spinal fluid.
22. விழிநீர், liquid of the cornea — Liquor corneae.
23. சினைநீர், fluid within the ovary — liquor folliculi.
24. கணையநீர், pancreatic juice.
25. சந்திக நீர், synovial fluid.
26. ருதுநீர், menustrual fluid.
27. வாதநீர்,
28. பித்தநீர், morbid fluids arising from derranged humours.
29. புண்ணீர், the serous fluid from sores and wounds.
30. கவிகைநீர், the serous fluid collected in ascites.
31. கபாலநீர், water in the brain—Hydrocephalus.
32. மேகநீர், morbid fluid from venereal and syphilitical causes.
33. விஷநீர், toxic fluid.
34. திராவகநீர், acid water.

(C) 1. வெட்டைநீர், same as மேகநீர்.
2. காடிநீர், fermented liquid.
3. வாலைநீர், distilled water.
4. நீராகாரநீர், cold rice water.
5. கஞ்சிநீர், (கோதுமை, யவா, அரிசி) liquid diet.
6. புனற்பபகநீர், water of double boiled rice.
7. அரிசிகளைந்தநீர், rice washed water.
8. இளநீர், tender cocoanut water.
9. குடிநீர், drinking water, decoction.
10. குளிநீர், bathing water.
11. கழுநீர், lotion.
11. தீநீர், distilled water.
12. தெளிநீர், filtered water.
13. செய நீர், pungent water extracted from a product exposed to night dew.
14. வெந்நீர், warm water.
15. சுண்ணாம்பு நீர், hard water.
16. பந்நீர், rose water; பனி நீர், dew water.
17. ஆலங்கட்டி நீர், hail stone water.
18. உப்பு நீர், saline solution to improse digestion.
19. வயல் நீர், rice field water.
20. நண்டுக் குழிநீர், crab hole water to cure hiccup.
21. பாசி நீர், moss water.
22. சருகு நீர், சருகூறல் நீர், water in which dry leaves are soaked causing filarial fever and elephantasis.
23. கடல் நீர், sea water curing ascites, dropsy, spleen enlargement.
24. நாவல் நீர், water under the root of jaumoon tree used for diabets.

25. கருங்காலி நீர், water under the root of black wood good for diabetes dyspepsia dropsy etc.
26. இலவு நீர், water under the root of silk cotton tree good for diabetes, dyspepsia internel heat.
27. வாழை நீர், water from the rhisome of plantain cures supperession of urine, and useful to purify nitre and salt.
28. மட்டை நீர், water in which cocoanut leaf is soaked.
29. ஆறிய வெந்நீர், hot water cooled.
30. பசு நீர், cow's urine.
31. வெள்ளாட்டு நீர், goat's urine.
32. மது நீர், any fermented liquor tincture.
33. கழுதை நீர், asses urine.

**Miscellanious.**

1. குடத்து நீர், potted water.
2. களிமண் நீர், water of clayey soil.
3. குட்டை நீர், pool water or stagnant water.
4. கழிநீர், back water from the sea.
5. வாய்க்கால் நீர், canal or channel water.
6. தாமரைக் குளநீர், lotus tank water causes excess of thirst, increase fever.
7. அல்லிக் குள நீர், Indian water lily tank water causes diarrhoea, itch etc.
8. கட்டுக்கடை நீர்; water from the reservoir.
9. குழாய் நீர், pipe water.
10. அருவி நீர், water fall.
11. ஓடை நீர், stream water.
12. கழுநீர், rice washed water.
13. தேக்குநீர், staghant water.
14. ஆலங்கட்டி நீர், hail stone water.
15. அடவி நீர், jungle water .
16. கரும்பாறை நீர், black granite water.
17. செம்மண் தரை நீர், red soil water.
18. பாகு நீர்,
19. செவ்விளநீர், tender red cocoanut water.
20. வெந்நீர், hot water, ஆறிய வெந் நீர், hot water cooled.

**( In surgery )**

அகஸ்தியர் இரண வைத்தியத்தில் சொல்லியுள்ள மருந்து நீர் கள், குக்கில்,குங்கிலிய முதலியவை.

Agastyar in his work Viranavaidyam' has mentioned several lotions to wash, clean and dress the wounds, sores; sinuses, ulcers, etc.

1. சிவப்புத் தண்ணீர்; மருந்து சரக்குகளை சாராயத்தில் அரைத்துக் கலந்த நீர், இதைத் திரிசெய்து புரையோடும், ரணங்களுக்கும் ஆறுத ரணங்களுக்கும் போட ஆறும்; (கருங்கார நீர்) 'துணியில் நனைத்துப்போட ஆறும்', red lotion used for sinuses.

2. சிவப்புக் கடுங்காரத் தண்ணீர், red corrorive or alkaloid lotion used for sinuses and obstinate and adament ulcers.

3. பச்சை நீர், மிருதார சிங்கி, மயில் துத்தம்; பால் துத்தம் இவைகளுடன் மற்ற ஏழு கடைச் சரக்குகளையும் அரைத்து திராட்சைக் காடியில் கலந்த நீர், இது மூல முளை, குதி காளான், நுணுப்பரு, பரங்கிப்புண். குட்டரணம், பிளவை, பௌத்திரம் இவைகளுக்குப்போட ஆறும், green lotion used for heel abscess, carbuncle, chancre, piles, etc.

4. பச்சைக் கடுங்கார நீர், green corrosive or alkaloid lotion used for stubborn ulcers. carbuncles etc. as No. 3.

5. மஞ்சள் நீர், கௌரி, அரிதாரம், மஞ்சள் தூள், குங்கிலியம், குக்கில், கற்பூர முதலிய சரக்குகளை சம எடை கொண்டு அரைத்துத் திராட்சைக் காடியில் கலந்த நீர் இரணத்திற்குப் பூசிவர, பிளவை, கட்டி, ஆறுத ரணம் ஆறும், yellow lotion, can be used for abscess, and ulcers that are not healing.

6. நீலக்கார நீர், காந்தம், பாதரசம், கௌரி, வெள்ளை, படிகாரம், நீலம், பச்சை வெட்டு படிகாரம் முதலியவைகளை முட்டைவெள்ளை கருவாலரைத்து திராட்சைக் காடியில் கலந்த நீர், பரு, சண்டிப்புண், குட்டம், பரு முளைகள் போம், blue corrosive or alkaline lotion for adamant ulcers, sores cysts etc.

7. குளிர்ந்த நீர், குளிச்சிதந்து ரணத்தை ஆற்றும் மருந்து நீர், cooling or soothing lotion used for ordinary sores and ulcers.

8. சிவந்தகுளிர்ந்த நீர், பாதரசம், சங்கு, தலையோடு, பால் துத்தம், கடுக்காய், துருசு இவைகளுடன் காவிக் கல் இலிங்கம் சேர்த்து தூள் செய்து கள் வார்த்து அரைத் தெடுத்த நீர், இது ரணத்திற்குப் போட எரிச்சல் நீங்கி

ஆறும், red soothing lotion for irritating ulcers, and ulcer giving burning sensation.

9. குளிர்ந்த நில நீர், பாதரசம், கெந்தி, தலையோடு, குங்கிலியம் இத்துடன் மயில் துத்தம் நீலம் சேர்த்து மேற் சொன்னபடி அரைத்த நில நீர், blue soothing lotion used for over granulated ulcers.

10. குளிர்ந்த வெள்ளை நீர், சங்கு, படிகாரம், வெங்காரம், பால் துத்தம் சாம்பிராணி, தலையோடு, குக்கில் இவைகளை மேலே சொன்னபடி அரைத்தெடுத்த நீர், white soothing lotion used for injuries and wounds.

11. கருத்த குளிர்ந்த நீர், மஞ்சள், வசம்பு சுட்டகரி, பாதரசம், கெந்தகம், படிகாரம், நீலம், மேற்கண்டபடி அரைத்து எடுத்த கருத்த நீர், black soothing lotion used for ulcers and sores.

12. குளிர்ந்த மஞ்சள் நீர், கஸ்தூரி மஞ்சஞ்சள், மிருதார சிங்கி, கடுக்காய் பூ, கடுக்காய் தோல், சூரணம், பால் துத்தம் இவைகளை மேற்சொன்னபடி அரைத்தெடுத்த மஞ்சள் நீர், yellow soothing lotion used for ulcer and sores.

13. புண்கழுநீர், உதியம்பட்டை அல்லது கருவேலம் பட்டை, கஷாயம், படிகார சலம், புளியிலை, பழங்காடியில் வேக வைத்தநீர், இதில் ஏதேனும் ஒன்றால் கழுவும் நீர், washing lotion, used for cleaning ulcers, sores etc.

14. கடுங்காரநீர், கடைச்சரக்குகளைக் கோழிமுட்டை வெண்கருவால ரைத்து மூலமுளை சதை வளர்ச்சி, ஆருத விரணம், குட்டரணம் முதலியவைகட்கு துணியில் நனைத்துப் போட ஆறும், very corrosive or alkaline lotion to dress the ulcers that have over grown granules and piles.

Every lotion is prepared as contemplated in the ViranaVaidyam by Agastiyar.

**நீர்கக்கி,** நீர்சப்பி, chinese laurel — Daphniphyllum glancescens.

**நீர்கடுத்தல்,** see நீர்க்கடுப்பு.

**நீர்கட்டுதல்,** கொப்புளம், புண், புரைகளில் நீர்கோத்தல், accumulation of morbid fluid in boils, wounds injuries etc; 2. மூத்திரம் போகாமல் தடைபடல், retention of urine.

**நீர்க்கசிதல்,** நீர்பொசிதல், oozing of water, passing of a liquid through a porous body — Percolating.

**நீர்க்கசிவான,** நீர் ஊறும்படியான, affording watery secretion — Aquiparous.

**நீர்க்கசிவு,** புண்ணினின்று கழியும்நீர், a thin serous or sanious fluid from a sore or wound — Ichor; 2. ஈரம், moisture.

**நீர்க்கஞ்சி,** நீர்க்கக் காய்ச்சிய கஞ்சி, thin liquid pottage; 2. நொய்க்கஞ்சி, a thin gruel made with water and meal or other farinaceous substance — Water gruel.

**நீர்க்கடம்பு,** பட்டைக்கடம்பு, நீரோரங்களில் முளைப்பதாலிப்பெயர், இதற்கு பெண் கடம்பு என்றும் பெயர், மரம் 30 - 40 அடி, இலைகள் எதிரெதிராகவும், அண்டவடிவாயு மிருக்கும், காம்புகளில் இரண்டு இலைகள், காய்கள் இரு பிளவாயுள்ளது, பூக்கள் சிறியன, மஞ்சள், இதன் காய் கண்ணோய்களுக்கு அஞ்சனமாக உபயோகப்படும், விதையினால் விஷக்கடி போம், பூச்சாற்றினால் இரசபற்பமாகும், இதன் மரம் அனேக சாமான்கள், பெட்டிகள் செய்ய உபயோகமாகும், elliptic leaved kadamba — Stephegyne parviflora alias Nanclea purpurea. It is so called from its being found generally grown near stagnant waters or on the shores. It is also known as female Kadamba. Tree 30 — 40 ft with small yellow flowers, stem glabrous; branches brachiate, leaves opposite, terminal, peduncles bear a pair of small leaves, capsules. 2. cocci splitting. The juice of the fruit is used as a collyrium for the eyes in eye diseases, seeds an antidote for poisonous bites, juice of the flowers used for calcining mercury.

**நீர்க்கடலை,** பேய்க்கடலை, bitter Bengal gram, devil's gram — Cicergenus.

**நீர்க்கடுப்பு,** நீரெரிச்சல், burning sensation while passing urine, painful or difficult urination — Dysuria; 2. நீர் கஷ்டமாக இறங்கல், slow and painful discharge of urine — Stranguary: 3. நீர்ச்சுருக்கு, which see.

**நீர்க்கட்டி,** பனிக்கட்டி, snow, ice; 2. மதுமேகத்தினால் ஏற்படும் பிளவைக் கட்டி, carbuncle arising from excess of sugar in diabetes — Carbuncle; 3 கொப்புளம், boil containing watery fluid inside; 4. மடையான், see நீர்க்குண்டி.

**நீர்க்கட்டு,** நீர்மறிப்பு, absolute suppression of urine; 2. மூத்திரம் இறங்காமல் கஷ்டப்படுதல், stricture of urine; 3. நீர் வெளிப் போகாது மூத்திரப்பையில் தங்கல், retention of urine in the bladder stoppage of urine; 4. ஓர் கண்ரோகம், an eye disease marked by collection of morbid fluid in the eyes.

**நீர்க்கட்டுக்கொடி,** பெருங்கட்டுக்கொடி, a bigger variety of coagulating creeper — Cocculus villosus.

**நீர்க்கணமாந்தம்,** see நீர்மாந்தம்.

**நீர்க்கணம்,** குழந்தைகட்கு சுரம் விட்டுவிட்டுக் காய்வதினால் வாய் வெடித்து, புண்ணாகி, கை கால் மினுமினுத்துக் காணும் ஓர்வகைக் கணநோய், a kind of tabes in children marked by intermillent fever, fissure of the mouth, swellings of the limbs with shining of the parts. It is a wasting disease in children.

**நீர்க்கண்டகி,** நீர்முள்ளி, water thistle — Barleria longifolia.

**நீர்க்கண்டம்,** பனிக்கட்டி, ice; snow.

**நீர்க்கத்திரி,** நீர் மிகுதியாகக் கொண்ட கத்திரி, water brinjal — Solanum melongina.

**நீர்க்கபம்,** தண்ணீரைப்போற் கழலும் கபம், watery phlegm; 2. கோழை, mucous matter or other morbid fluids from the lungs and trochea.

**நீர்க்கமல்லி,** அல்லி, nymphae lotus — Nymphae edulis.

**நீர்க்கம்பம்,** நீர்த்திவலைகள் காற்றினால் சிதறுண்டு மேலெழும்பி, கம்பத்தைப் போற் காணப்படல், rising of water from the sea or lake in spray or jets to a certain level giving the appearance of a pillar due to a violent wind — Water spout.

**நீர்க்கம்மல்,** கண்ணில் துர்நீர் சேருவதால் பார்வைக் குறைதல், affection of sight due to accumulation of bad fluids in the eyes.

**நீர்க்கலங்கல்,** மூத்திரம், முட்டை வெண்கருவைப்போன்ற வஸ்துவின் சம்பந்தத்தால் கலங்கலாய்க் காணல், turbid urine due to the presence of albumin in the urine, turbidity of urine — Albuminorrhea.

**நீர்க்கல்லடைப்பு,** மூத்திரப்பையில் கல்லுண்டாகி, நீர்த் துவாரத்தை அடைத்துக் கொண்டு அதனால் நீர் இறங்காமல் கஷ்டப்படும் நோய், retention of urine due to the obstruction of calculus or stone in the passage of urethra. This stone is the formation in the bladder.

**நீர்க்கவிசை,** ஓர் வகை மகோதரம், இது உடம்பினில் காரிரத்தம் தடைபட்டு, மண்ணீரல், ஈரல்களில் தங்குவதால் அவ்விடத்தில் அழற்சி கண்டு, இரத்த நீர் ஊனீராக மாறி, கீழ் வயிற்றை அனுசரித்து வீங்கி மினு மினுப்பாய்க் காணல் இந்நீர் மஞ்சள் நிறமாயிருக்கும், dropsy of the abdominal cavity due to the accumulation of serous fluid arising from the inflamation of spleen and the liver caused by the obstruction of the venous circulation — Ascites. It is an abdominal dropsy due to weakness of the digestive fire. Food producing indigestion and accumulation of serous fluid in the heritoneum of the abdomen obstract the water bearing ducts of the body and vitiate the upward and downward breath and the digestive fire and the result is this disease. So is nothing but but a collection of fluid in the abdominal cavity arising from the inflammation of spleen and the liver. Ceneral symptoms — Flatulence of the stomach, loss ot uppetite, swelling sluggish condition of the bowels, drowsiness, burning sensation in the body. It consists of different verities and charactioned according to the derengements of the three humones in the system and the hurts affected as spleen or the liver. When the liver or spleen is enlarged there is fever, langour, loss of appetite palenes of the body in the emeut the livar, the right side and splaen the left side of the abdomen is enlarged. In cases of dropsy due to accumulated storts, that part of the abdomen above the navel is found to swell. storts then is passed with much difficulties and in small guantities.

**நீர்க்கழலை,** கண்ணிமையின் மேற்புறத்தில் ஆலங்கட்டியைப்போல் எழும்பும் ஓர்கழலை, tumour in the upper eyelid of the size of a hail stone.

**நீர்க்கழற்றல்,** சாறுவாங்கல், extracting juice; 2. விந்து விடல், discharging semen; 3. மூத்திரம் பெய்தல், making water; 4. ஓர் வஸ்துவினின்று நீரைப் பிரித்தல், the process of freeing the substance from the water contained — Dehydration.

**நீர்க்கழிச்சல்,** நீரழிவால் மூத்திரம் அடிக்கடி போதல், frequent discharge of urine from diabetes; 2. நீர்ப்பேதி, watery diarrhea as in cholera.

**நீர்க்கழிவு,** see நீரழிவு, 2. உடம்பினின்று வியர்வை மூத்திரம், துர்நீர் முதலியவை கழிதல், excretion and secretion as perspiration urine etc.

**நீர்க்காகம்,** see நீர்க்காக்கை.

**நீர்க்காக்கை,** நீர்வாழ் காக்கை, இது தண்ணீரில் மூழ்கும் புறவை, crow of the pelican family It is a during water bird — Cormorant.

**நீர்க்காங்கு,** நீர்வாளி, false fern tree — Filicium decipicus. see நீங்கல்.

**நீர்க்காசம்,** இருமலினால் கோழை அதிகமாக வெளிப்படும் ஓர் வகை ஈளை நோய், இது சீந்தல் காலத்தில் உண்டாகும், a free discharge of mucous fluid from cough in asthma — Catarrhal asthma. It is a humoural asthma aggravated by cold during rainy and cold weather; 2. கண்ணில் நீர் தங்கிப் பார்வையைக் கெடுக்கும் ஓர் வகைக் காசம்; a form of cataract in the eye due to accumulation of morbid fluid — Fluid cataract c.f நீரெழுகாசம்.

**நீர்க்காயம்,** நத்தை. snail.

**நீர்க்காய்ச்சுப்பு,** இந்துப்பு, rock salt; 2. ஆறுங்காய்சலுப்பு.

**நீர்க்கால்,** வாய்க்கால், a channel for water — Water course.

**நீர்க்காவி,** கருங்குவளை, blue Indian water lily — Nymphae shellata.

**நீர்க்காற்கோழி,**

**நீர்க்கிராம்பு,** ஓர் வகைக் காட்டுக் கிராம்பு, இது சதா பூத்துக்கொண்டேயிருக்கும், பூ பெரியது மஞ்சள் நிறம், மழை காலத்தில் பூக்கும்; இதன் சமூலத்தை சிறிது அரைத்து மோரில் குழப்பி சாப்பிட சீதபேதி நிற்கும்; கஷாயமாக வைத்துச் சாப்பிட பேதியாவதுடன் பூச்சிகளையும் கொல்லும், wild clove, primrose willow — Jusiaea suffruticosa alias Jussiena repens Perinnial, flowers large, yellow flowering in rainy season. The plant is ground and steeped in butter milk is a good remedy in dysentery; decoction acts like a purgative and vermifuge.

**நீர்க்கிரிச்சினம்,** மூத்திரம் தடைபடுதல், stricture of urine.

**நீர்க் கிருமிக் குட்ட ரோகம்,** நீர்கிருமியினால் தோற்றுவிக்கப்பட்ட சர்மநோய், cutaneous disease caused by Neerkirumi.

**நீர்க்கிழங்கு,** சிறு கிழங்கு, small water root; 2. see தண்ணீர் விட்டான் கிழங்கு.

**நீர்க்கீரி,** நீர்வாழ் கீரிப்பிள்ளை, இதன் தோல் பேர் போனது; an aquatic carnivorus animal resembling weasle, but larger — Otter Its fur is remarkable.

**நீர்க்கீரை,** நீரில் முளைக்கும் கீரை,(lit) greens found grown in water; 2. ஆரைக்கீரை, which see.

**நீர்க்குடத்தி,** தண்ணீர் விட்டான் கிழங்கு, water root — Asparagus racemosus.

**நீர்க்குட்டம்,** சதா ஊனீர் வழிந்துகொண்டிருக்கும் ஓர் வகைக் குட்டம், a kind of leprosy constantly attended with discharge of matter from the lesions — Water leprosy.

**நீர்க்குணபாடம்,** பதார்த்தகுண சிந்தாமணியில் சொல்லியபடி ஆறு, ஏரி, அருவி, கடல் முதலியவைகளின் தண்ணீரில் பொருந்திய மருந்து குணத்தைப்பற்றிய ஓர் தனிநூல், The science which deals about the medicinal properties of the principle rivers and different waters like tank, lake, shallow well, deepwell, stream, sea water etc.

**நீர்க்குண்டி,** வெண்ணொச்சி, a white variety of notchi, white negundo — Vitex negundu It is opposed to கருநொச்சி; 2. மூத்திர குண்டி, in continence of urine — Nocturnol enuresis; 3. மடையான், one who distributes water for irrigation - keeper of sluice.

**நீர்க்குண்டிக்காய்,** மூத்திரம் உற்பத்தியாகும் குண்டிக்காய், பிருக்கம், கலிகை, an organ that secreates urine — Kidney.

**நீர்க்குத்தியெடுத்தல்,** நீர்க்கவிசை நோயில் வயிற்றிலுள்ள நீரைக்குத்தி யெடுத்தல், surgical puncture of the abdominal cavity for the removal of the accumulated fluid as in ascites, tapping — Paracentesis.

**நீர்க்குத்திரம்,** See நீர்ச்சுண்டி.

**நீர்க்குத்து,** மூத்திரம் தடைப்படுவதால் நீர்ப் பாதையில் ஏற்படும் குத்தல் வலி, an acute pain caused in the urethra from suppression or retention of urine; 2. கல்லடைப்பினால் மூத்திரதாரையில் (மிகனி அல்லது சலவாகியில்) உண்டாகும் குத்தல், வலி, pin prick pain felt in the urethra (மிகனி அல்லது சலவாகி) due to obstruction of calculus in the urethra, a urinary disease.

**நீர்க்குந்தன்மையது,** கரைக்கக் கூடியது, a solvent medium, that which is capable of dissolving substances — Dissolvent; 2. நீரை அதிகப்படுத்தி அழற்சியைப் போக்கும் தன்மையது, an agent that dilutes or renders less irritant — Diluent.

**நீர்க்குமிழம்,** See நீர்க்குமிளம்.

**நீர்க்குமிழ்,** ஓர்வகைக்குமிழ், water coomiz — Gmelina genus; 2. கடைக் கண்ணில் நீரொழுகும் ஓர்வகைக் கண்ணோய், a disease of the corners or angles of the eye (inner) attended with watery discharge.

**நீர்க்குமிளம்,** வெள்விழியில் சங்கம்பழத்தைப் போல் கொப்புளத்தையுண்டாக்கும் ஓர்வகை கண்ணோய், a bubble like boil developing in the white of the eye (sclerotic).

**நீர்க்கும்பி,** See நீர்முள்ளி.

**நீர்க்குரட்டை,** ஓர் தண்ணீர்ப்பாம்பு, a kind of water snake — Tropidonotus.

**நீர்க்குரு,** வியர்க்குரு, prickly heat — Miliaria; 2. நீர்க்கொண்ட சிறியகுரு, pimple, pastule; 3. குருப்பொது, any papule; 4. தேரையர் கரிசலில் ஔடதவர்க்கங்களில் ஒன்று, one of the medicinal classifications referred to in the Karisal work of Theraiyar — an authority in Tamil Medicine.

**நீர்க்குருவி,** நீர்வாழ் குருவி, any water bird of the finch family.

**நீர்க்குவளை,** நீலோற்பலம், blue Indian water lily — Nymphae stillata.

**நீர்க்குவை,** கடைக்கண்ணில் சிலேட்டுமமொத்தைப்போல் துண்ட மாமிசத்தை வளர்ப்பிக்கும் ஓர்கண்ணோய், a disease of the inner corner or angle of the eyes marked by a mucous growth.

**நீர்க்குழல்,** உடம்பினின்று கழிவுநீரைக் கொண்டு செல்லும் அல்லது ஓடும் தாரை, a tube for the passage of excretion or secretion — Duct; 2. தண்ணீர் செல்லும் பீங்கான் குழல், water tube; 3. நீர்க்குழாய், which see.

**நீர்க்குழாய்,** குடிக்கும்நீர் செல்லும் தாரை, water pipe; 2. மூத்திரக்குழாய், சலவாகி அல்லது மிகனி, passage of urine urethra.

**நீர்க்குழி,** மூத்திரப்பை அல்லது சலப்பை, urinary bladder.

**நீர்க்குழைக்கருவி,** மூத்திரப்பாதையைப் பெரிதாக்கவும் அல்லது அடைபட்ட மூத்திரத்தை வெளிப்படுத்தவும் உபயோகிக்கும் குழாயைப் போன்ற கருவி, a tubular surgical instrument for discharging suppressed or retained urine or distending the urethral passage — Catheter.

**நீர்க்குழைக்காது,** நீர்க்குழாயின் துவாரத்தை அடைக்கவும் திறக்கவும் செய்யும் திறவுகோல், a turning lock or key used to stop or open or regulate the flow of water from a pipe — Stopcock.

**நீர்க்குளிரி,** கல்லாரைச்செடி, unknown creeper of the Marselia genus; 2. நீர்ச்சேம்பு, water archer — Sagitharia obtusifolia alias S. cordifolia, See குளிரி; 3. தண்ணீர்க்குளிரி, flowering water plant — Damasonium indicum.

**நீர்க்குளுவன்,** see நீர்க்கொள்ளுவான்.

**நீர்க்குறி,** தேரையர் செய்த ஓர் தமிழ் வைத்தியநூல், இது மூத்திரத்தைப் பரிசோதித்து நோயை நிர்ணயிக்கும் முறையைக் கூறும், a Tamil Medical work compiled by Theraiyar. It treats of diagnostic examination of urine in detail before acertaining or determining the disease; 2. மூத்திரப்பரிட்சை, the medical examination of urine — Urinoscopy, Uroscopy; 3. தண்ணீர் ஏறுவந்தையும் இறங்குவதையும் காண்பிக்கும் அடையாளம், a mark indicating the raise and fall of water — Watermark.

**நீர்க்குறிஞ்சா,** தண்ணீரில் முளைக்கும் குறிஞ்சா, swallow root in water — Asthmatic swallow root — Asclepias asthmatica alias Tylophora asthmatica.

**நீர்க்குறிஞ்சா,** வெண்குறிஞ்சா, common Indian ipecacuanha — Tylophora asthmatica alias Asclepias asthmatica.

**நீர்க்குறுகல்**, மூத்திரம் குறைவு படுதல், a decrease in the secretion of urine; 2. நீர்ச் சுண்டல், diminution of water through boiling or evaporation; 3. தண்ணீர் குறைவுபடல், defficiency of water; 4. தண்ணீர் வற்றல், drying up of water.

**நீர்க்குன்று**, நத்தை, snail.

**நீர்க்கூடம்**, பித்தளை, brass.

**நீர்க்கொண்ட**, நீர்ப்பிடிப்புள்ள, watery; 2. நீர்நிரம்ப விளாவிய, highly diluted — Washy.

**நீர்க்கொண்ட வீக்கம்**, நீர்க்கோவையினால் ஏற்பட்ட வீக்கம், swelling due to catarrh.

**நீர்க்கொதி**, நீரெரிவு, அதாவது மூத்திர எரிச்சல், burning sensation while passing urine; 2. மூத்திரம் பெய்யும்போது சூடாயிருத்தல், feeling hot while making water.

**நீர்க்கொதிப்பு**, தண்ணீர் கொதித்தல், boiling of water; 2. சூரிய வெப்பத்தினால் தண்ணீர் சூடாதல், water rendered hot through sun's rays.

**நீர்க்கொத்தை**, ஓர் தண்ணீர்ப்பாம்பு, a kind of water snake.

**நீர்க்கொப்புளக்கரு**, கருவாய்ந்த நீர்க்கொப்புளம், pellucid cyst containing fluid — Hydatid.

**நீர்க்கொப்புளக்கருப்பம்**, கர்ப்பாசயத்தில் அனேக கொப்புளங்கள் ஏற்பட்டு இவைகளெல்லாம் கொத்துகளாக இணைக்கப்பட்டும், ஒவ்வொரு கொப்புளத்திற்கும் உடல், தலை 3 அல்லது 4 நகங்கள் போன்ற உறுப்புகளும் உண்டு, womb containg in numerable vesicles with a limpid fluid usually united in clusters by some common structure of the womb itself. Each vesicle in the womb is said to have a body, a head and 3 or 4 claws — Hydatid cysts.

**நீர்க்கொப்புளம்**, சலங்கொண்ட யெழுச்சி, boil consisting water, furuncle.

**நீர்க்கொப்புளம்**, கொப்புளித்த புண், water blister.

**நீர்க்கொள்ளல்**, சலதோஷங் கொள்ளுதல், catching cold; 2. நீர்கொள்ளுதல், consuming water.

**நீர்க்கொள்ளுதல்**, சலிப் பிடித்தல், catching cold, see நீர்க்கொள்ளல்; 2. புண்ணில் சீழ் கொள்ளல், getting matter collected in boils; 3. நீர் கொண்டு வீங்கல், swelling from accumulation of morbid fluid in the tissues of the body.

**நீர்க்கொள்ளுவான்**, ஓர்வகை அம்மை அல்லது வைசூரி, இது சாதாரணமாய்க் குழந்தைகளுக்குக் காணும் கொடிய தொத்து நோய், இதனால் சுரம் காய்ந்து, மூன்றும் நாள் சிறு சங்கம் பழம்போல் குருக்கள் மேலாகத் தோன்றி, பால் கொள்ளாமலே 3 நாள் காய்ந்துதிரும், அனேகமாய்த் தழும்பிராது, தொந்திரவில்லாமலே நீங்கும், a kind of chicken pox — Vaniceilla. It is an acute contagious disease attacking principally young children. It is marked by slight fever and eruptions of mascular vesicles which appear in crops on the third day, but they are superficial. They rarely become pastular but dry up and are only occasionally followed by scars. The duration of the disease is about a week during which time, it runs a very mild course, See கொப்பளிப்பான்.

**நீர்கோத்தல்**, சலங்கொள்ளல், becoming purulent as boil.

**நீர்க்கோசம்**, ஊத்தாம்பிள்ளை, urinary bladder.

**நீர்க்கோரைக் கிழங்கு**, இதனால் குட்டம், விஷம், மாலைக்கண், தினவு போம், a kind of Korai.

**நீர்க்கோவை**, உடம்பின் கண்ணறைகளில் துர்நீர் சேருதல், accumulation of morbid fluid from the surrounding tissues of the body; 2. கண்ணறைகளின் துர்நீர் அதைச் சார்ந்த உறுப்புகளிற் கோத்தல், infiltration of an organ with any morbid fluid derived from the surrounding tissues.

**நீர்க்கோவை**, சீளதத்தால் தலையில் நீர்க் கொள்ளல், accumulation of water in the head from cold.

**நீர்க்கோவைநோய்**, துர்நீர் சேருவதால் நேரும் வியாதிகள், அதாவது வீக்கம், மகோதரம், நீர்க்கவிசை, நீர்ப்பிடிப்பு, பீனசம் முதலியவை, diseases arising from the accumulation of morbid fluids viz- oedema, dropsy, ascites, anusarca, catarrh of the nose etc.

**நீர்க்கோழி**, தண்ணீர்க்கோழி, water hen, the gallina hen or moon hen thin limbed waterfowl.

**நீர்க்கொறட்டை,** ஓர் வகைத் தண்ணீர்ப் பாம்பு. இது தண்ணீரில் வசிக்காவிட்டா லும், நீர் தங்கி நிற்கும் நெல் வயல்களில் அடிக்கடி உலாவுவதால் இப்பெயர் கொண் டது போலும், இது கடித்தால் விஷமிராது, ஆயினும் கடிக்கும்போது சதை கிழியும்வரை விடாது பிடித்தபடியே நிற்கும், a kind of water snake — Tropidonotus quincunciatus alias Ophidii colubriformis. The term literally means water hold fast. The snake is so called from the fact that when it bites. it will not let go till the flesh is torn out. Although it is not water born, it is named so from its frequenting wet paddy fields and therefore it is commonly reckoned a water snake. It is not venomous.

**நீர்ச்சங்கு,** ஓர் வகைச் சங்கஞ் செடி, four spinad monetia — Azima tetracantha.

**நீர்ச்சப்பி,** நீர்க்கக்கி, கெட்ட நீரை இழுக்கும் ஓர் பூண்டு. a kind of chinese laurel plant — Daphniphyllum glancescens. It is so called from its probability of absorbing morbid fluid from the body.

**நீர்ச்சாடி,** தண்ணீர் வைக்கும் பாண்டம், water jar.

**நீர்ச்சாணை,** ஓர் வகை சாணைக்கல், whet stone giving out moisture when rubbed as opposed to நெருப்புச்சாணைக்கல் which see.

**நீர்ச் சாம்பிராணி,**

**நீர்ச்சாரை,** தண்ணீர்ச் சாரைப்பாம்பு, male cobra water rat snake — Ptyas mucosus.

**நீர்ச்சால்,** மழைத் தண்ணீர் பிடிக்கும் பீப்பா, a cask used as a reservoir for rain water.

**நீர்ச்சி,** சலங் கோத்தல், containing both serum and purulent matter — Sero purulent as in boils.

**நீர்ச்சிக்கு,** see நீர் அடைப்பு.

**நீர்ச்சிங்கி,** ஓர் விரண நோய், an ulcer.

**நீர்ச்சித்திரம்,** நீரடிமுத்து, which see.

**நீர்ச்சிரங்கு,** சேற்றுப்புண், itching sore in the crevices of toes — Sore foot.

**நீர்ச்சிவப்பு,**

**நீர்ச்சிறுத்திறங்கல்,** மூத்திரம் கொஞ்சம் மாக இறங்கல், dribbling of urine due to stricture.

**நீர்ச்சிறுப்பு,** சொட்டு மூத்திரம்; drippling urine.

**நீர்ச்சிறுகீரை,**

**நீர்ச்சிறுசிறுத்தல்,** சிறு நீர் படிப்படியாக குறைந்துபோதல், the quantity of urine passed gets gradually decreased.

**நீர்ச்சின்னி,** ஓர்வகைச் சின்னி, birch leaved acalypha — Acalypha betulina alias Urtica glomerata.

**நீர்சுண்டக்காய்ச்சல்,** கஷாய வகைகளைத் தண்ணீர் வற்றும்படி காய்ச்சுதல், boiling down to a reduced quantity as decoction.

**நீர்ச்சுண்டி,** சுண்டைக்கீரை, floating desmanthus, floating sensitive plant — Neptumia genus; 2. ஓர் சுண்டி, water mimosa — Mimosa virgata alias Desmanthus virgata as apposed to வறட்சுண்டி, which see.

**நீர்ச்சுருக்கு,** நீர்கடுப்பு, dysurea — ardor urinae.

**நீர்ச்சிவறல்,** நனைதல், becoming wet or moist.

**நீர்ச்சுறப்பு,** பாண்டுரோகத்தில் நீர்க்கோவை யினால் காணும் வீக்கம், இது பிடங்கு நாறி யிலையால் குணப்படும், swelling from accumulation of bad fluid — Oedema. It is cured by the decoction containing the leaves of Krishnapalai as chief ingredient.

**நீர்ச்சூசம்,** நீரடிமுத்து, which see.

**நீர்ச்சூடு,** தண்ணீரின் உஷ்ணம், temperature of water.

**நீர்ச்சூலை,** புறங்காலில் தினவு உண்டாகி, வீங்கிப் பொருத்துகள் உளைந்து குதிக் காலில் கொப்புளங்கண்டு திரண்டு உடை யும் ஓர்வகைக் குத்தல்நோய்;குதிக் கள்ளன், a boil or abscess on the heal marked by itching and swelling on the back foot; acute pain at the joint arising from accumulation of fluid; 2. நீர் அண்டம், a circumscribed collection of fluid in the scrotum — Hydrocele.

**நீர்ச்செம்பை,** தண்ணீரில் முளைக்கும் செம்பை sensitive pea — Sesbania aculeata alias Coronilla aculeata.

**நீர்ச்செரிப்பு.**

**நீர்ச்செவ்வில்லிக்கொடி**, red Indian lily plant see செவ்வல்லி.

**நீர்ச்சேம்பு**, சேம்பு, Indian kales — Colocasia genus; 2. தண்ணீரில் முளைக்கும் சேம்பு, water kachvee pit nelumbo — Saggitaria obtusifolia.

**நீர்ச்சேவல்**, நீரில் வாழும் சேவல், water cock — Gallicrex criststus.

**நீர்ச்சோகம்**, தண்ணீர் தாகத்தால் காணும் சோர்வு, fatigue or weariness due to thirst of water.

**நீர்சோர(ம்)**, நெட்டி தளம்.

**நீர்ச்சோறு**, தண்ணீரும் சோறும், cooked rice and water; 2. பழஞ்சோறு, cold rice with water.

**நீர்ச்சோனம்**, நீர்ப்பிரமி, which see.

**நீர்தரையில் சிறந்தசத்தி**, சத்தி சாரணை, spreading hog weed — Boerhavia procumbens.

**நீர்தன்னில்குடிச்சி**, நீரறளி, Indian willow — Polyganum genus

**நீர்தாய்க்கிராணி.**

**நீர்தெளிந்தசுண்ணம்**, தாளித்த சுண்ணும்பு, slaked lime.

**நீர்த்தகஞ்சி**, பால் சேர்க்காமல் தண்ணீரும் நொய்யும் சேர்த்து நீர்க்கக்காய்ச்சிய கஞ்சி, water and meal without milk — Water gruel.

**நீர்த்ததும்பல்**, கண்ணில் நீர்க்கலங்கல், fullness of tears as from mental agitation.

**நீர்த்தல்**, சாதல், dying; 2. சாம்பலாதல், being reduced to ashes; 3. தண்ணீராகச் செய்தல், turning into a liquid, making watery.

**நீர்த்தவீரியம்**, உடைந்த இந்திரியம், watery semen thin ness of semen.

**நீர்த்தவுப்பு**, முடியண்டபடருப்பு, a mystic salt prepared from the skull of the foetus.

**நீர்த்தவெட்டை.**

**நீர்த்தன்மை**, திரவம், fluid or liquid state or form.

**நீர்த்தாரா**, நீர்வாத்து, water duck.

**நீர்த்தாரை**, மூத்திரத்தாரை, சலவாகி, urinary passage urethra; 2. தண்ணீர் செல்லும் வழி, water course; 3. உடம்பிலுள்ள பல பிடங்களிலுள்ள நீர் கொண்டு செல்லும் குழல், ducts or canals conveying liquids or fluids to the various parts of the body — Aqua duct.

**நீர்த்தாரைக்கல்**, மூத்திரத்தாரையை அடைக்குங்கல், இது கொள்ளுரசம், சிவப்பு முள்ளங்கியினுல் கல்லுபொடியாகி நோய் தீரும், calculus obstructing the passage of urine. It is cured by eating carrot or taking Horse gram decoction.

**நீர்த்தாரைப்புண்**, மூத்திரப்பாதையில் தாபிதங்கண்டு அங்குள்ள சளிசவ்வு புண்ணுகி சீழொழுகும் ஓர் விரணநோய், a ulcer in the urethral passage marked by discharge of pus due to its inflammation.

**நீர்த்தரையடைப்பு**, மூத்திரதாரை அடைபடல், obstruction to the free passage of urine — Stricture of urethra.

**நீர்த்தாரையெரிச்சல்**, மூத்திரத்தாரை யெரிச்சல், inflammation of urthra — Urithritis.

**நீர்த்தாரை விரணம்**, மூத்திரத் தாரையினுள் புண், ulceration of the urethra.

**நீர்த்தாளி**, தண்ணீரில் முளைக்கும் தாளி, a running plant of the convolvulus genus, See வெண்கூதாளம்.

**நீர்த்திசம்**, மஞ்சள், Indian saffron, turmeric — Curcuma longa.

**நீர்த்திப்பிலி**, நீர்ப்பிப்பிலி, இது வருஷ முழுவதும் பூக்கும், பூ மிகச்சிறியது, வெள்ளை, நெல் வயல்களிற் காணலாம், water long pepper — Sphenoclea zeylanica, flowers all the year, flowers very small white common in rice fields.

**நீர்த்திமிரம்**, கண்ணில் விரணத்தையுண்டாக்கி கருவிழிப் பக்கங்களில் குத்தலையும், நடுவில் புகைச்சலையும் உண்டாக்கும் ஓர் கண்ணோய், a disease of the black of the eye marked by lesion of the eye, acute pain and dimness of vision.

**நீர்த்திரிப்புல்**, சன்னிப்புல், இதனுல் மூளையைப் பற்றிய ரோகங்கள் போம், an unknown variety of grass said to be used for brain apoplexy.

**நீர்த்தும்பல்**, ஓர் கண்ணோய், an eye disease.

**நீர்த்தும்பை,** ஓர் வகைத்தும்பை, இது தாம் பூரத்தைத் பற்பமாக்கும், a kind of toombay of the Leucas genus. It reduces copper into calcined powder.

**நீர்த்துவாரம்,** மூத்திரத் துவாரம், urethral opening; 2. சிறுநீர்வரும் வழி, opening of the urinary passage.

**நீர்த்துவாரவுள்ளரிப்பு,** நீர்த்தாரைத் தினவு, itching of the urethra.

**நீர்த்துலக்கி,** பிரசவகாலத்தில் நீரையெடுப் பதற்காக உபயோகிக்கும் கருவி, a delicate probe used for casuing escape of fluid from the womb during labour.

**நீர்த்துளக்கி,** நீர்க்குழலின் துளக்கி, stilette of probe, a delicate probe; 2. நீர்க்குழலின் கம்பி, a wire used to stiffen or clear a catheter.

**நீர்த்துளசி**

**நீர்த்தெளிவி,** தண்ணீரைத் தெளியச் செய் யும் ஓர்கருவி, water filter; 2. தேத்தான் கொட்டை, water clearing nut — Strychnos potatorum.

**நீர்த்தேய்வு,** தண்ணீர் ஓடுவதால் ஏற்பட்ட வழவழப்பு, smoothness or worm condition.

**நீர்த்தைலம்.**

**நீர்த்தொட்டி,** ஆடு மாடுகள் தண் ணீர்குடிப் பதற்கு இயற்றிய தொட்டி, water — trough; 2. மனிதர் குளிக்கும் தொட்டி, water tub.

**நீர்த்தோஷம்,** சலதோஷம், attack of cold; 2. மூத்திரதோஷம், urinary disorders.

**நீர் நாகம்,** நீர் ஓரங்களில் காணப்படும் நாகப்பாம்பு, cobra found on the sea coasts — Water cobra; 2. மோதக்கெண்டை large eyed carp — Megalops.

**நீர் நாங்கள்,** நீர் நாங்கு, which see.

**நீர் நாங்கு,** ஓர் வகை நாங்கு; a kind of Ceylon iron wood —Mesua ferrea (speciosa)

**நீர் நாய்,** நீரில் வாழும் நாய், a kind of water dog — Otter dog; 2. நீண்ட மயிர் வாய்ந்த நீந்து நாய், a long haired swimming dog — Water spaniel; 3. ஏரியில் காணப்படும் நாய்; a rodent animal haunting streams and lakes — Beaver; 4. நாய் மீன் என்னும் கடற் சுரு, a kind of shark in the sea — Dogfish.

**நீர்நாய் சவ்வாது,** நீர்நாய் விரை. which see.

**நீர் நாய் விரை,** நீர் நாயின் விதை நுனித் தோலினின்று கசிந்து காய்த்திருக்கும் வஸ்து அடங்கிய பை, இப்பை இரட்டை யாகவும்; மூன்றுஅங்குல நீளமாயும்இருக்கும் இது விரையிலிருக்கும் எண்ணெய்ப் பையி னின்று விலகியிருக்கும், இக்காய்ந்தவஸ்து அதிக வாசனையுள்ளதாயிருக்கும், இது இந் நாயின் குதத்திற்கும் குய்யத்திற்கும் மத்தி யிலுள்ள பையினின்று உற்பத்தியாகும் பார்வைக்குக் கருப்பாயும் விசித்திர வாசனை யாயுமிருக்கும், இதற்கு ஜிந்து என்று யுனு னில் பெயர்; இது சுறுசுறுப்பைத் தந்து இசிவைப் போக்குந்தன்மையது, ஆகவே இதை வயிற்றுவலி, சூதக சன்னி, காக்கை வலிப்புக்கும் கொடுப்பதுண்டு, சன்னி, பாத கரத்தினால் ஏற்பட்ட பலவீனத்திற்கும் கொடுக்கலாம், கபவாத சுரத்திற்குச் சிறந்த தாகும், the dried follicles of the prepuce of the beaver filled with a peculiar secretion. Castor — Castoreum. The follicles are in pairs, about 3 inches long. They are separated from the smaller oil sacs. The dry resinous secretion is highly odorous, The membraneous follicles containing this substance are situated between the anus and external genitals (of course united by a common duct) It is dark coloured matter of the consistency of pully with a peculiar odour It is called 'Gint' by Unani doctors. It is a stimulant and antispasmodic and so prescribed mostly by Unani doctors in colic hysteria and epilepsy, and also to rouse the system in cases of a dynamic type. It is an excellant remedy in typhoid pneumonia.

NOTE. The castor of commerce is of two kinds Russian and Canadian, the former is the most highly prized. The Russian castor has a stronger smell, the other is inferior. The consistency of the contents varies with the amount of water present. Castor contains volatile oil, uric, phosphoric and benzoic acids with potash, sodium, lime and carbonate of ammonia. It is soluble in rectified spiril and ether.

**நீர் நாவல்,** ஈரம் பற்றிய நிலங்களில் விளை யும் நாவல் மரம், ஆகவே இதற்கிப் பெயர், மேற்கு மலைச் சார்பையடுத்த தென்கன்ன டம் முதல் கன்னியா குமரி வரையிலும்

இவை விசேஷமாய்க் காணலாம், உயரம் 12-20 அடி, இலைகள் 6 - 9 அங்குல நீளம், பூ வெண்மை, குணத்தில் நாவலைப் போன்றதே; water jaumoon — Eugenia munronic. It is so called from its being found grown in moist places. In westernghats, it is found in great abundance from Canara to Cope comerin. It is a middle sized tree between 12—20 ft. high, leave 6—9 inches long, flowers white, resembles the regular jaumoon in properties; 2. கருநாவல் gardener's black plum — Eugenia gardneri.

**நீர்நிதி**, செந்தாமரை, red lotus flower — Nelumbium speciosum.

**நீர் நிலப்பிராணி**, நீரிலும், நிலத்திலும் வாழக் கூடிய தவளை முதலிய செந்து, a class of vertebrata living during their. life both in the water and the land — Amphibian.

**நீர்நிலை**, தண்ணீர் நிலையாயுள்ள இடம், place where from water can be obtained as lake, tank, river etc; 2. குளம், tank.

**நீர்தொட்டி**, நீர் அருகில் காணும் தக்கைப் பூண்டு, a kind of pith plant found near shores.

**நீர்நெரிசல்**, கண்விழி நடுவில் மாந்தளிர்நிறத்தையும் நீர்க்கோர்வையும் உண்டாக்குமோர் கண்ணோய், a disease of sclerotic coat of the eye marked by red swelling, accumulation of morbid fluid and uceration.

**நீர் நெருப்பு**, நீர் மேல் நெருப்பு, fire on water see நீர்மேல் நெருப்பு; 2. கல்லுருவி gravel plant — Ammrnnia vesicatoria alias A baccifera; 3. ஆகாசத்தாமரை, sky lotus — Pistia stratiotes; 4. கொட்டைப்பாசி, green moss found on the surface of water.

**நீர்நொச்சி**, சிறு நொச்சி, இது சாதாரணமாகத் தண்ணீர் ஓரங்களில் வளரக்கூடியது, இது கொங்கநாடு கடற்கரைகளிலும், கான் கான் தட்சண தேசத்திலும் மிகுதியாகக் காணப்படும், இச்செடி சுமார் 10 அடி உயரம், இலைகள் கொம்புக்கு மூன்று அல்லது ஐந்தாகவுமிருக்கும், இலைத்துளிர் அண்டவடிவு, அடியில் வெண் சாம்பல் நிறம், பூந்தாது இறகைப்போன்றது, காம்புகள் இரண்டு பிளவு, பூக்கள் ஊதா நிறம், சித்திரை வைகாசி மாதத்தில் பூக்கும், இலைகள் சிறிது கசப்பு, வாசணையாயிருக்கும், வேரினின்று பச்சை நிறமான எண்ணெய் எடுப்பதுண்டு, இது கழலை வீக்கத்தையும் துர் நீரையும் கலைக்கச் செய்யும், ஆகவே, சுதேச வைத்தியர்கள், வற்றச் செய்யவும், வடிவிக்கிற மருந்தாகவும் உடயோகிப்பார்கள், இதன் காய் அல்லது பழம் சிறியது, கசப்பு, அழுத்தம், இலைகளைச் சூரணித்து தண்ணீரில் கலந்து கொடுக்க முறை சுரம் போம், இதன் பழத்தை சூரணம், இலேகியம், கஷாயம் இவைகள் செய்து வைத்தியர்கள் நரம்பு வலி, தலைவலி, சூதகச்சிக்கல் இவைகளுக்குக் கொடுப்பார்கள், இலை வெந்நீரிலிட்டு முழுகவும் ஒத்தடங் கொடுக்கவும் உதவும், அன்றியும் பெரிபெரி சுரம் முதலிய அறியா நோய்களுக்கும், கால் எரிச்சலுக்கும் உபயோகப்படும், இதன் காய் மிளகுக்குப் பதிலாக உபயோகிக்கலாம், இலைகளை நரம்பு சுளுக்கு, வாதப்பிடிப்பு, உள்காயம் இவைகளுக்கு ஒத்தடம் கொடுக்கலாம், இலையை வதக்கி வாதப்பிடிப்பு, உடம்பில் ஓர் பாகத்தில் உண்டாகும் வலிக்கும் வைத்துக் கட்டலாம், இதன் வேரை வெந்நீரில் கலந்து சூலைப்பிடிப்புக்கு உபயோகிக்கலாம், Indian privet, water nochy — Vitex trifolia alias V. integrrima. It is often found grown near the shores or margins of water. It is common in Coromandal coast konkon and Deccan. The shrub is 10 ft high leaves ternate and quinate, leaflets ovate, hoary beneath, panicle with straight rachis, pedicles dichotomous flowers violet, flowering in April and May. Leaves slightly bitter and aromatic taste. Sweet oil of greenish colour is extracted from the root. It has medicinal properties, leaves and young shoots are powerful discutient. The fruit is small, bitter and rigid. Leaves powdered and taken with water are a cure for intermittent fever. It has a high repute in native practice and the fruit is said to be nervine, caphalic and emmenagogue and is prescribed in the form of powder, electuary and decoction. It is highly extolled by the Vaidyans as anodyne and diuretic and is found useful in fomentations and baths in the treatment of beriberry and other obscure affections, called burning of the feet. Fruit sometimes used for pepper. Leaves are applied warm in cases of sprains, rheumatism contusion, swellings and diseases of the skin, root and cataplasm of leaves are

externally applied rheumatism and local pains. The root mixed with hot water is used in gout.

**நீர்நொச்சி**, பூவான் குருந்தலே, kinka oil plant — Vernonia anthilmintica; 2. மயிலடி நொச்சி, peacocks foot tree — Vitex altisima; 3. காட்டுநொச்சி, water peacock's foot tree — Vitex leucoxylon; 4. see நெய்ச்சிட்டி; 5. ஆற்றுநொச்சி, litoral small leaved glory tree — Cledendron inerme.

**நீர்ப்புகண்டை**, **நீர்ப்பகன்றை**, } ஓர் பூடு, a kind of water plant — Stemodia aquatica.

**நீர்ப்பசு**, See காளிந்தி.

**நீர்ப்பச்சை**, ஆமை, tortoise; 2. கடலாமை, sea turtle; 3. see கடலாரை.

**நீர்ப்பஞ்சு**, கடற்காளான், a kind of moss sticking to rocks — Sponge; 2. காந்த பாஷாணம், one of the 32 kinds of native arsenic; 3. தண்ணீரிழுக்கும் பஞ்சு, absorbent cotton.

**நீர்ப்படர்த்தி**, கடைக்கண்ணலில் நீரொழுகச் செய்யும் நோய், an eye disease marked by discharge of watery fluid from the corners of the eye.

**நீர்ப்படலம்**, கருவிழியின் மேல் மேகம் கம்மியது போல் மறைப்பு கண்டு, சலங்கோத்து, வடிந்து, தலேக்குத்தல் முதலிய குணங்களைக் காட்டுமோர் நோய், a disease of the black of the eye characterised by dullness of vision, accumulation of morbid fluid, purulent discharge, head ache etc.

**நீர்ப்படுவன்**, காலின் கீழ் சதா நீர் கசிந்து கொண்டிருக்கும் ஓர்வகை நீர்ச்சிலந்தி, an ulcer below the knee marked by constant watery discharge.

**நீர்ப்பட்டை**, பிசின்பட்டை, gum bark.

**நீர்ப்பணைப்பு**, நீர் கோர்வையினால் உடம்பு பருத்து காணல், corpulency due to accumulation of morbid fluid in the system.

**நீர்ப்பதுமம்**, இமை தடித்து சிவந்து அனல் போல் எரிச்சலுண்டாகி அருவிபோல் நீர் ஒழுகி தினவையுண்டாக்கும் ஓர் கண்ணோய் a disease of the eyelids marked by burning sensation (inflammation) and constant watery discharge and itching — Blepharitis.

**நீர்ப்பந்தி**, நீர்க்கட்டு, அதாவது மூத்திரம் தடைபடல், suppression of urine; 2. கட்டுக்கொடி, which see.

**நீர்ப்பயறு**, மின்னிப்பயறு, a sepecies of jungle green gram.

**நீர்ப்பரிசகம்**, ஆமை, tortoise.

**நீர்ப்பரிசை**, see நீர்ப்பரிசகம்.

**நீர்ப்பருகல்**, தண்ணீர் குடித்தல், drinking (water).

**நீர்ப்பருத்தி**, கடற்கரைப்பருத்தி, sea coast rose mellow — Hibiscus tiliaceous.

**நீர்ப்பவுத்திரம்**, மூத்திரப்பாதையில் ஏற்படும் பவுத்திரம், an abnormal opening into some part of the urinary apparatus — Urinary fistula.

**நீர்ப்பறவை**, நீர்வாழ் பட்சி, water brid in common; 2. புறாவைப் போன்ற அழகான நீர்ப்பட்சி, a handsome bird about the size of a pigeon — Peewit lapwing — Plover family.

**நீர்ப்பறிதல்**, நீரரும்பல், water soaking through.

**நீர்ப்பனை**, புல்லாமணக்கு, creeping castor plant — Sebastiana, chamaelea alias Melanthium indica; 2. see நிலப்பனை.

**நீர்ப்பன்றி**.

**நீர்ப்பாக்கு**, ஊறல் பாக்கு, areca nut soaked in water.

**நீர்ப்பாசி**, தண்ணீர்ப்பாசி, duck weed, it has cooling property; 2. ஓர் வகை வைப்புப்பாஷாணம், a kind of prepared poison.

**நீர்ப்பாடு**, நீர்க்கழிச்சல், watery motion.

**நீர்ப்பாடி**, see நீராரை.

**நீர்ப்பாட்டுசன்னி**, ஓர் சன்னி, a veriety of delirium.

**நீர்ப்பாண்டு**, see நீர்க்கவிசை.

**நீர்ப்பாம்பு**, தண்ணீர்ப்பாம்பு, water snake; 2. கடற்பாம்பு, sea snake.

**நீர்பாம்புக்கிருமி,** சிலேட்டுமத்தால் இரைப் பையிலுண்டாகும், நூல் போன்ற கிருமி, a small thread like worm in the stomach stomach worm — Strongylus contortus

**நீர்ப்பாய்ச்சல்,** இமை நீர்ப்பாய்ச்சல், இமையைப்பற்றிய நோய், இதனால் கண்ணிமை குழிந்து, நீர் வடிந்து சதை வளர்ந்து அரிப் புண்டாகி, கருவிழி உறுத்தி, கனத்து எரிச்சலை யுண்டாக்கும், நீர்ப்பாய்ச்சல், 4 விதம்: 1. இமை நீர்ப்பாய்ச்சல், 2. சுற்றுக்குலை, 3. புழுவெட்டு, 4. இமையிறைச்சி, a disease of the eye lids marked by relaxation. discharge of water; morbid growth, itching irritation of the pupil fullness of head, and inflammation of the lids. It is of four kinds as pointed before 2. மூக்கு நீர்ப்பாய்ச்சல், inflammation of the mucous membrane of the nose with a free discharge — Nasal catarrah, glanders 3. (இரத்தினங்களின்) நீரோட்டம், transparency and brilliancy of gems.

**நீர்ப்பாறை,** நீர் தங்கும் பாறை, aquecous rocks which are deposited by water —Sedimentary rock — Nepturnic rock.

**நீர்ப்பானை,** நீர்ச்சால், a pot for holding water — Water pot.

**நீர்ப்பிடி,** நீர்ப்பிடிப்பு, which see.

**நீர்ப்பிடிப்பு,** உடம்பினுள் இரத்த வோட்டம் சில பாகத்தில் தடைபடுவதால் அவ்விடத்தில் இரத்த நீர் சேர்ந்து காணப்படும் நோய், effusion of fluid into serous cavities of the body due to some mechanical obstruction to the free flow of blood in the part — Anasarca; 2. வீக்கம், swelling— tunic faction.

**நீர்ப்பிடிப்புள்ள,** நீர் கோத்து வீக்கமுள்ள being affected by swelling due to accumulation of fluid in the tissues — Oedematus; 2. சலதோஷமுள்ள, being affected by cold; 3. மூத்திரத் தடையுள்ள, being affected by stricture of urine.

**நீர்ப்பிப்பிலி,** see நீர்த்திப்பிலி.

**நீர்ப்பிரமி,** பிரிமியப்பூடு, பிரமி வழுக்கை, இது வருஷப்பூடு. கொடி, இது தண்ணீருள்ள விடங்களில் முளைக்கும், இலைகள் நேர், வழவழப்பு, சதைப்பற்று, புள்ளிகள் வாய்ந்தது, இலைக்காம்புகள் இலையைவிடக் குட்டையானவை, ஒரே புட்பம், நீலநிறம், விதைகள் பல, வருஷந்தோறும் பூக்கும், இதன் வேர், தண்டு, இலை, மூத்திரம் வடிக்கும், மலத்தை இளக்குந் தன்மையது, சமூலம் சூரணித்துக் கொடுக்க பேதியாகும், கொடியிலைச் சாற்றுடன் மண் தைலம் சேர்த்து கீல் வாயுவுக்கு தடவலாம். இதன் சமூலத்துக்கே மருந்துக் குணமுள்ளதால் இதை நரம்பு நோய்களுக்கும், பைத்தியம், காக்கை வலிப்பு, மல சலக்கட்டு முதலானவைகளுக்குக் கொடுக்கப்படும் இதை அவித்து குழந்தை இருமலுக்கு மார்பில் கட்டுக் கட்டலாம், இதைச் சூரணித்து சம பாகமாக வசம்பு கடுக்காய், ஆடாதொடை வேர், திப்பிலி இவைகளின் தூள்களையும் கலந்து தேனில் கொடுக்க சயரோகத்தில் தொண்டை கம்மல் நீங்கும், Indian bramy; water hyssap, diabetes plant — Herpestis monniera. It is common in moist situation near streams and in the borders of tanks and ponds,Annual, a creeper. leaves opposite. smooth, fleshy, dotted with minute spots peduncles shorter than leaves, seeds numerous, flowering all the years, The root stalk and leaves are used medicinally as diuretic and aperient.

The entire plant powdered and given as a purgative, the expressed juice of the creeper and leaves mixed with petroleum is rubbed on the part affected with rheumatism. The whole plant is employed medicinally in cases of nervous disorders or affections, insanity and epilepsy The leaves and stalk are particularly useful in the stoppage of urine and obstinate costiveness. A poultice is made of the boiled plant and applied to the chest in cough of children. A powder of the dried plant mixed with equal parts of powderd sweet flag, gall nut, root of malabar nut(adhatoda) and long pepper mixed with honey is given in hoarseness of pthisis.

**நீர்ப்பிரமியம்,** see நீர்ப்பிரமி; 2. see நீர்க்கடுப்பு.

**நீர்ப்பிரளயம்,** அதிமூத்திரம், excess of secretion of urine — Diabetes insipidus.

**நீர்ப்பிரியாமை,** மூத்திரம் கட்டுப்படுதல், supression of retention of urine.

**நீர்ப்பில்லம்,** ஒரு நீர்ப்பில்லம், கண்ணிமையைப் பற்றிய நோய், இதனால் இமை கடுத்து, பீளைகட்டி, நீர் வடிந்து, கண் சிவந்து, மேலிமை தடித்து, சதை வளர்ந்து, அத்துடன் கண்ணுறுத்தல், கண்கூச்சமும்.

கண் சிவப்பதும், வெளுப்பதுமாக விருக்கும், a disease of the eye lids characterised by the following symptoms viz- irritation, mucopurulent discharge, discharge of water, inflammation, thickening of the upper eye lid, morbid growth acute pain of the eyes, photophobia, etc. Eyes inflamed off and on — Trachoma.

**நீர்ப்பிளவை,** பிளவைக்கட்டி, இது நீரிழிவினால் வரும் கட்டியாதலால் இப்பெயர், இது சாதாரணமாக இரத்தம் பலவீனப்பட்ட 40 வயதிற்கு மேற்பட்டவர்களுக்குக் காணும், இக்கட்டி பிடரி, பிட்டம், முதுகு இவ்விடங்களிற் காணும், முகத்தில் காணுவது மிக்க கொடியது, இது வீங்கிப்பழுத்து முகங்காணு மலே சிவந்து காணும், கிச்சிலிப்பழம் பருமனுள்ளது, கடினமாயும், வலியுள்ளதாயுமிருக்கும், இது உள்ளில் சீழுண்டாகி பல கண்கள் காணப்படும், உள்ளாகக் குடைந்து செல்லுந் தன்மையது, இதனால் சுரம், வியர்வை, பலவீனமுண்டாகும், சீழ், இரத்தம் வெளிப்பட உள்ளாக குழியுண்டாகும், இதை சத்திரம் செய்வதே உத்தமம், an exaggerated boil occuring in diabetic patients. It results from an impure, vitiated and debilitated condition of blood found in persons over 40 years of age. It appears on the nape of the neck, buttocks and the back and the one occurring on the face is the serious form It is sometimes as large as an orange in size, hard, painful causing a reddened skin without pointing It sloughs away leaving a deep cavity, the matter escapes from several small openings. It burrows under the neigh bouring sinews. It is followed with constitutional symptoms such as fever, perspiration and debility — Aspiration is the best kind of treatment — Carbuncle.

**நீர்ப்பிச்சான்,** நேர்ப்பிசின், false zedoary — Koemferia rotunda alias K. longa.

**நீர்ப்பீப்பாய்,** நீரைத் தேக்கி வைக்க பயன்படும் மரத்தொட்டி, water cask.

**நீர்ப்பீனசம்,** விஷ பித்தமும், வெட்டையும் அதிகரித்து சிரசிலேறி மூக்கின் வழியாய் நீர் வடிந்து, பனிவாடையாலும், மழையினாலும் அதிகரித்து, தும்மலுடன் பிடரியும் முகமும் ஊரலெடுத்து தலையும் கண்ணும் கனத்துக் காணும் ஓர்வகைப் பீனசம், catarrh of the nose due to the vitiated bile and excess of venereal heat finding its way into the head. It is associated with the following symptoms viz free running from the nose, constant sneezing, itching in the nape of the neck and face, heaviness in the head and eyes etc — Nasal catarrh. It may also be caused by exposure to dew and rain.

**நீர்ப்புங்கன்,** see நீர்ப்புங்கு.

**நீர்ப்புங்கு,** நீரில் முளைக்கும் புன்கு, Indian beech — Pongamia glabra.

**நீர்ப்புடையன்,** ஆற்றுப்புடையன், river wart snake — Hydrus granulatus; 2. புடையன், இது கடற்கரை யோரங்களில் 3 அல்லது 4 மைல் தூரத்திலும் வசிக்கும், விஷமிராது, wart snake — Chersydrus granulatus. It will be found frequenting even 3 or 4 miles from the sea coast. It is not poisonous.

**நீர்ப்புள்தோஷம்,** குழந்தைகளுக்கு நெஞ்சு வறண்டு, மிக வியர்த்து இருகண் குழிந்து, கண் வெளுத்து, பால்குடியாது நீர் கழிச்சல் காணும் ஓர்வகைப் பறவை தோஷம், இது குழந்தைகளைத் தெருகடக்கக் கொண்டு போகும் போது பறவை நோக்கத்தால் ஏற்படும், according to Indian Medicine it is a disease affecting only the children at a certain age ( within one year ) and said to be due to the evil influence caused by exposing the children in the early hours of the morning or evening to the evil influence of birds which are vitiated it may happen by their look or their shadow falling on the children It is marked by depression of chest and anterior fontanele, profuse perspiration sunken and anemic eyes, aversion to suckling, diarrhoea etc.

**நீர்ப்பூ,** நால்வகைப் பூவிலொன்று, one of the four kinds of flowers, see நால்வகைப் பூ; 2. ஆம்பல, அல்லி முதலியன, aquatic flowers such as Nymphae genus.

**நீர்ப்பூண்டு,** நீர்முள்ளி, which see; 2. தண்ணீரில் முளைக்கும் பூண்டு, any aquatic plant.

**நீர்ப்பூலா,** see பூலா, black honey shrub — Phyllanthus multiflora

**நீர்ப்பூல்,** see நீர்ப்பூலா.

**நீர்பூட்டியவன்னம்,** நீர்ச்சாதம், cooked rice and water.

**நீர்ப்பெருக்கல்,** see நீரழிவு; 2. தண்ணீர் அதிகமாகக் கலத்தல், adulterating with more water.

**நீர்ப்பெருக்கி,** மூத்திரத்தை அதிகமாகப் போக்குவிக்கு மருந்து, drugs medicines having the power of exciting the secretion of urine — Diuretic.

**நீரப்பேதம்,** தண்ணீரிலுள்ள வித்தியாசம், the differential properties in water; 2. பலவகை நீர், the different kinds of water: 3. தண்ணீரின் மாறுபாடு, change of water; 4. இடத்தின் வித்தியாசம், change of place.

**நீர்ப்பேதி,** ஓர் ஆயுள்வேத மருந்து, an Ayurvedic preparation; 2. தண்ணீராகப் பேதியாகுமருந்து, a medicine causing watery discharge — Hydragogue; 3. தண்ணீராகப் போகும் பேதி, watery motion; 4. see நீர்ப்பெருக்கி; 5. தண்ணீர் சோதனை, examination of water; 6. தண்ணீரையே மந்திரித்துக் கொடுத்துப் பேதியாகும்படி செய்தல், giving magic water as a purgative.

**நீர்ப்பை,** மூத்திரப்பை, சலப்பை, urinary bladder; 2. வெந்நீர்ப்பை, waterbag used for hot fomentation.

**நீர்ப்பைக்கொதிப்பு,** மூத்திரப்பைக்குக் காணும் சோபம், irritation of the urinary bladder.

**நீர்ப்பைதாபனம்,** மூத்திரப் பைக்குக் காணும் அழற்சி, inflammation of the bladder.

**நீர்ப்பையழலே,** see நீர்ப்பைத்தாபனம்.

**நீர்ப்பொருள்,** திரமவானவஸ்து, liquid substance.

**நீர்ப்போக்கு,** மூத்திரவியாதி, urinary disease; 2. நீரழிவு, which see

**நீர்ப்பௌத்திரம்,** see நீர்ப்பவுத்திரம்.

**நீர்மகளிர்,** கடல்மாதர், sea nymphs.

**நீர்மடந்தான்,** ஆகாயம், sky.

**நீர்மட்டம்,** நீர் சமஅளவு, water level.

**நீர்மட்டி,** see நீர்மருந்து.

**நீர்மருது,** ஓர் வகை மருதமரம், a kind of marudah tree — Terminalia arjuna ( typica).

**நீர்மருத்துவம்,** பொதுவாகத் தண்ணீரைக் கொண்டு செய்யும் வைத்தியம், treatment of diseases in general by the application of water — Water cure; 2. தண்ணீரைக் கொண்டு எல்லா நோய்களையும் குணப்படுத்தலாம் என்கிற கொள்கையை மேற்கொண்டு செய்யும் வைத்தியம், நம் நாட்டில் நீர்மந்திரித்துக் கொடுத்தல் என்று வழங்கும், a particular system of treatment which professes to cure all diseases by the use of water i. e. water cure through magic spell as prevailing in India.

**நீர்மருந்து,** நீர்த்தன்மையுள்ள மருந்து, liquid medicine.

**நீர்மறிப்பு,** மூத்திரம் வெளிப்படாது தடைபடல், suppression of urine either from obstruction of the bladder or in the urethra, slow and painful discharge of urine due to spasm of the urethra and bladder — Stranguary.

**நீர்மனிதன்,** ஓர் நீர் வாழ் பிராணி, இதை மேற்கடற்கரை யோரங்களிலும், கான்கான், மலையாளக் கரையோரங்களிலும் காணலாம், இதைக்கண்ட மாலுமிகள் கடற்கன்னி யெனவும் மயங்குவார்கள், இதற்குக் கடற் பாபா, கடற்பிள்ளை என்றும் பெயர் வழங்கும், இது சாதாரணமாக 5-7 அடி உயரம் உடம்பு நலநிறமாயும், சிலபாகங்களில் வெண்மையான குருக்களும் காணப்படும், இதினின்று எண்ணெய் எடுத்துக் காது வலிக்குபயோகிப்பதுண்டு, இது மீன் ஈரல் எண்ணெய்க்குச் சமமாகவே சொல்லலாம், இதன் எலும்புகள் தந்தத்தைப் போல் கடினமாயும், நேர்த்தியாயும் இருக்கும், இதன் இறைச்சியை மீன் இறைச்சியைப் போல் கருதி உண்பதுண்டு, dugong — Halicore dugong. It is a water animal found chiefly in the seashores of west coast and in the saltwater inlets of the Concon and Sonth Malabar. On seeing their bodies partially out of water, the mariners will mistake it for sea nymphs sirens and mermaicls. It is also called water baby or water child. It is usually 5 to 7 ft. in length, blue in colour and with white blotches in some parts of the body. Oil is extracted from the blubber and it is equal to codliver oil. It cures diseases of the ear. The bone of the animal in fineness and hardness approaches nearly to those of ivory. The flesh is also eaten like that of the fish.

**நீர்மாங்காய்,** அடைமாங்காய், salt pickle of mango.

**நீர்மாதளம்,** வில்வம், lingam tree — Crataeva religiosa.

**நீர்மாந்தம்,** இரைந்திரைந்து வயிறு கழிந்து, முக்கலுடன் நீர்இறங்கி ஓக்களித்து உடம்பு முழுவது வியர்த்து, உடல் மெலிந்து கை கால் வீங்கி, முகம் மினுமினுத்துக் காணும் ஓர்வகை மாந்தநோய், a kind of dyspeptic diarrhoea in children characterised by difficulty in passing urine, rumbling noise of the stomach, frequent purging and vomiting, profused perspiration, emaciation, swelling of the limbs, shining of the face etc.

**நீர்மானி,** தண்ணீரை நிர்ணயிக்கும் கருவி, an instrument for measuring water—Water meter; 2. தண்ணீர் ஆழம் அல்லது உயரத்தை நிர்ணயிக்கும் கருவி, a gauge or instrument for ascertaining the depth or height of water—Water gauge. 3. தண்ணீரின் அல்லது வேறுவித திரவப்பொருளின் தடிப்பைக்குறிக்கும் ஓர்கருவி, an instrument for measuring or determining the density of water or other liquids — Hydrometer.

**நீர்மிட்டான்,** தண்ணீர் மிட்டான், water root — Asparagus racemosus.

**நீர்மீட்டான்,** see நீர்மிட்டான்.

**நீர்முட்டல்,** ஓர் கண்ணோய், an eye disease.

**நீர்முலாம்,** முலாம்பழம், water melon; 2. வெளிரிப்பழம், country melon.

**நீர்முள்ளி,** ஓர் நீர்முட்(செடி), பூண்டு, இது வருஷத்திற்கொரு முறை காய்த்து ஓயும், அடித்தண்டு நேராகவும்', நாற்கோணமாகவும், இலைகள் நேர்நேராகவும், நீளமாயும், பூக்கள் நீலம் அல்லது ஊதா நிறமாகவும் இருக்கும், ஆடி முதல் தைவரையில் பூக்கும், இது மலையாளம், வங்காளம், முதலிய செழிப்பான நிலங்களிலும், நெல் வயல் அருகேயும், குளம் குட்டைகள் சமீபத்திலும், மற்றும் ஈரமுள்ள இடங்களிலும் காணலாம்

இதன் வேர் மலவிருத்திக்கும், சலபேதி மருந்தாகவும் கஷாயம் வைத்துச் சாப்பிடலாம், மகோதரத்திற்கும் உபயோகப்படும், காடியில் கலந்து பேதிக்குக்கொடுக்கலாம், இதன் வெந்நீர்க் கஷாயத்தினல் விஷப் பாண்டு நீங்கும், இதன் விரை பிரமேகம், மூலம் நீர் எரிச்சல், உடம்பின் சூடு, அதிகாரம், கபம், சோபை முதலியவைகளைப் போக்கும், தாதுவிருத்தியுண்டாம், இதன் இலை அல்லது சமூலத்தை கஷாயமாக வைத்துக் கொடுக்க சோகை, காமாலை, வயிற்றிலுள்ள கட்டி, மகோதரம் முதலிய நோய்கள் போம், இதன் சாம்பலை, சிறு நீர் அல்லது வெள்ளாட்டு மூத்திரம், பசுவின் கோமயத்திலாவது கரைத்து பாண்டு வீக்கமுள்ள விடங்களில் பூசிவர வீக்கம் போம், மேலும் இது இரத்தத்திலுள்ள மாசுகளை நரம்பின் வழியாக குண்டிக்காய்க்கு கொண்டு வந்து, அதன் பின் நீர்ப்பை நீர்தாரை மூலமாய் வெளிப்படுத்தும், அன்றியும் நீர்த்தாரையிலுள்ள மாமிச வளர்ச்சி, சவ்வுகள் முதலிய தடங்கள்களைக் கரைத்து நீரடைப்புரோகத்தைக் குணப்படுத்தும், இத்துடன் இதரச் சரக்குகளைச் சேர்த்தும் கொடுப்பதுண்டு, அவித்துக் கடைந்துகொண்டு கடுகு உள்ளி மஞ்சள் இவைகளை அரைத்துக் கூட்டி அடுப்பில் வைத்து குழம்பாகக் காய்ச்சி, உட்கொள்ள நீர்க்கட்டு, நீரேற்றம், மகோதரம், பித்த பாண்டு, நீர்ச் செரிப்பு போம், நீர் முள்ளிச் சாற்றுடன் சிற்றுமணக்கெண்ணெய் சமமாகச் சேர்த்துக் கொண்டு அதில் நவாச் சாரம் பலமிட்டுக் கலக்கி, பதமுறக் காய்ச்சி வேளைக்கு ஒருகரண்டி வீதம் உட்கொள்ள பாண்டு சோகை காமாலை, மகோதரம் வயிற்றிலுள்ள பலவிதக் கட்டிகள் கல்லடைப்பு, சதையடைப்பு, கை கால் பிடிப்பு, மூலம், வெள்ளை, குன்மம் முதலிய நோய்கள் போம், புளிதள்ளி இச்சாபத்தியமாக இருத்தல் வேண்டும், இதன் விதையை இடித்துச் சூரணமாகக் கொள்ள நீர்க் கோர்வை, இரைப்பு, இருமல் இவைகள் தீரும், இரத்தம் சுத்தமாகி விந்தூறும்.

**நீர்முள்ளிக்காடி,** நீர்முள்ளி இலையைக் காடியில் ஊறவைத்துப் பிழிந்தெடுத்த சாறு, expressed juice of the leaves of water thistle plant soakod in vinegar, distilled vinegar combined with juice of the leaves of water thistle plant.

**நீர்முள்ளிவகை,** 1. ஊதா நீர்முள்ளி; 2. வெள்ளை நீர் முள்ளி; 3. பேய்நீர்முள்ளி, water thorn — *Hygrophila spinosa* alias *Astercantha longifolia*. It is an annual plant, stem erect, bluntly quadrangular; leaves opposite, very long. flowers blue, or bright violet; flowering in rainy season. It is abundant in Malabar Bengal. and common in moist places in most of part of India. It is also to be found near paddy fields, tanks, pools etc. It is full of thorns.

The root of this plant is laxative and diuretic. As a decoction, it is useful in dropsical affections, mixed with vinegar is used for promoting secretion of urine, infusion is used in swellings of the body and boils. Its seeds are a good remedy in cases of urinary diseases piles, dysuria, internal heat, diarrhoea phlegmatic anemia etc., promotes secretion of semen. Decoction of the leaves or the entire plant is highly reputed for curing cases of anemia, jaundice, abdominal tumours, dropsical swelling

etc. The burnt ashes of this plant mixed with urine of child, or goat or cow is externally applied to the parts affected by dropsical swellings. The plant is said to possess the extra ordinary virtue of removing the bad fluids of the blood, to the bladder and from there discharged as urine through the urethra, it removes the stones in the bladder and gravel in the urinary passages.

The plant is mixed with other drugs for treatment of diseases, the entire plant is boiled and pulverised or crushed and to it are added mustard, garlic and turmeric and boiled like broth and taken internally for anasarca, jaundice and dropsy. Sometimes the juice of the leaves mixed with an equal quantity of costor oil and a palam of powdered salammona 'C' is boiled down to required standard and taken in spoonfuls is said to be a highly useful remedy in cases of the said dropsical affections, jaundice, stricture of urine, stone in the urinary system and other diseases of urogenital tract, rheumatic affections, piles, gonorrhoea dyspepsia etc. For such treatment, elimination of tamarind in diet is essential. Powdered seeds are found efficacious in cases of anasarca, asthma, couge etc. It purifies the blood and increases the secretion of semen.

*நீர்மூலப்படுத்தல்*, அடியோடு நீக்கல், as disease to cure entirely.

*நீர்மூலம்*, தண்ணீர் விட்டான் கிழங்கு, see நீர்மிட்டான்.

*நீர்முளி*, ஓர்வகைமரம், downy many leaved tree of Beauty — Aglaiya minutiflora.

*நீர்மூழ்கி*, தண்ணீரில் நடந்துலாவும் பறவை, the dipper that can walk about under water — Water ozsel.

*நீர்மேல் செவ்வந்தி*, செந்தாமரை, red lotus.

*நீர்மேல்நெருப்பு*, கல்லுருவி, fire plant — Ammannia vesicatoria. It is a kind of herb cool to the touch but causing blisters after wards — Ammannia debilis; 2. கொட்டைப்பாசி, which see; 3. வழலை, mystic salt supposed to be extracted from fuller's earth; 4. ஓர்பச்சிலை, இச்சாற்றில் 2 நாழி இரசத்தை டோலா யந்திரமாகக் கட்டி எரிக்க இரசம் கட்டுமெனக் கருதப்படும், an unknown plant said to consolidate mercury which is tied in piece of cloth and hung over a pot containing this juice which is heated.

*நீர்மேல்நெருப்பு*, இதை அரைத்து அரையாப்பு படைக்குப்பூச எரிச்சலுண்டாகி, பிறகு ஆறி உலரும், இது வயல்களில் வளரும் சிறு செடி, உமியளவு இலை, இதனால் மகாவாத ரோகம், திமிர்வாதம் போம், an an unknown plant having small leaves and *growing in paddy fields It cures magah* vatham and thimir vatham. If applied externally, the ring worm in the groin disappears after being blistered.

*நீர்மேல்பச்சிலை*, see ஆகாசதாமரை; 2. தாமரை, lotus.

*நீர்மேல்வெள்ளி*, ஓர்வகைப்புழு, a kind of waterworm.

*நீர்மை*, குணம், quality; 2. தன்மை, nature, inherent quality.

*நீர்மோர்*, மோர், butter milk, whey; 2. நீர் கலந்த மோர், buttermilk diluted with water.

*நீர்யானை*, ஓர் நீர்வாழ் மிருகம், இது நீர்ப்பூண்டுகளைத் தின்று வசிக்கும், இது பெரிய ஆறுகளில் வசிக்கும், a large animal chiefly found in large rivers (as Nile in Africa) living mainly on vegetable food — Hippopotamous.

*நீர்வஞ்சி*, தண்ணீரில் முளைக்கும் பிரம்பு, water rattan — Calamus rotang.

*நீர்வடிதல்*, நீரொழுக்கு, which see; 2. புண்ணினின்று ஊனீர் ஒழுகல், discharge of ichor from wounds and sores.

*நீர்வண்டல்*, தண்ணீரின் அடியில் படியும் வண்டல், sediment deposited under water.

*நீர்வண்டு*, தண்ணீரில் சுழலும் வண்டு, a kind of beetle found whirling on the surface of water; 2. நீராம்பல், white Indian water lily — Nympae genus.

*நீர்வண்டுக்கடி*, நீர் வண்டு கடிப்பதினால் உடம்பில் ஏற்பட்ட தழும்பு, a kind of ring worm due to the bite of water beetle.

**நீர்வண்ணம்,** ஓர்வகைச் சாயம், a kind of pigment ground with water and some mucilage instead of oil — Water colour.

**நீர்வல்லி,** வெற்றிலைக்கொடி, beetle creeper — Piper betle; 2. see தண்ணீர் விட்டான் கிழங்கு; 3. see மலைவல்லி.

**நீர்வல்லிக்காலா,** ஓர் வகைப்புல்லூரி, a kind of parasitic plant.

**நீர்வள்ளி,** see நீர் வல்லி.

**நீர்வள்ளிக்கிழங்கு,** see தண்ணீர் விட்டான் கிழங்கு.

**நீர்வற்றற்றேங்காய்,** நீர் சுண்டிய தேங்காய், ripe cocoanut with or without water 2. கொப்பறைத்தேங்காய், dried cocoanut kernel.

**நீர்வாகை,** நீர் வாழை, which see.

**நீர்வாங்கல்,** சல தோஷத்தைப் போக்கடித்தல், getting one self freed from cold (nasal catarrh); 2. ஈயம், இரசம் முதலியவகைகளினின்று நீர்த் தன்மையைப் போக்கி வெள்ளியாக்கல் (in Alchemy) getting rid of the fluid nature or watery property of metals like tin, mercury etc., thereby converting them into silver.

**நீர் வாசி,** see நீர்ப்பாசி; 2. தண்ணீரால் நோயைக் குணப்படுத்தல், water cure.

**நீர்வாசியாக்கல்,** தாதுக்கள் கலந்துள்ள நீரைக் கொடுத்து நோயைக் குணப்படுத்தல் a mode of treating diseases by frequent use of mineral waters both internally and externally - Watercure. 2. தண்ணீரை மந்திரித்துக் கொடுத்து நோயைக் குணப்படுத்தல் (in Mantric Science) treating diseases by water through magic spell.

**நீர்வாத்து,** நீரில் வாழும் வாத்து, இதற்குக் காட்டுவாத்து என்றும் பெயர், ஆண் இனம் மூக்கு மஞ்சள் கலந்த பச்சை நிறம், தலை கழுத்து பளபளப்பான பச்சை நிறம் கழுத்தைச் சுற்றிலும் வெண்மை, பார்பு, தோள் மங்கல் சிவப்பு, வயிறு சாம்பல் நிறம், வரிகள் வாய்ந்தது, கால்கள் மஞ்சள், 2 அடி நீளம், தின்பதற் குதவும், பெண் இனத்திற்கு மிக்கவித்தியாசமுண்டு, fen-duck-waterduck. It is also called wild duck. Mallard — Anasboschas. Bill yellowish green, head and neck shining pure green; whitecollar round the neck part of the breast and shoulders chest nut colour, breast and belly gray marked with lines; legs orange yellow, 2 feet in length, very good for eating. Female greatly differs from male.

**நீர்வாயு,** water gas.

**நீர்வாரம்,** குளநெல், a kind of paddy; 2. தினை, Italian millet.

**நீர்வாழி,** நீர் வாழ்வன, those living in water—Aquatic.

**நீர்வாழை,** நீர் வாகை, இதற்கு இராவண வாகை அல்லது சீமை வாகை என்றும் பெயர், இதில் வாழையைப் போல் நீருள்ளதால் இதற்கிப்பெயர், அன்றியும் வாழையைப் போல் இலையின் அடிக் காம்பு கனதி, நீளம், அகலம், ஆனால் இவ்விலைகள் தண்டைச் சுற்றிலுமல்லாமல், நேர்நேராக விருக்கும், மரம்பார்வைக்கு வறியைப் போல் தோன்றும், இலைகளின் அடித்தண்டில் தண்ணீர் இருக்கும், வழிப்போக்கர்கள் தங்களுக்கு தாகவிடாய் வரும்போது இம் மரத்திலுள்ள தண்ணீரை உபயோகப்படுத்தித் தாகத்தைத் தீர்த்துக்கொள்வார்கள். நிலத்திலிருந்து உச்சிவரையிலும் அடுக்கடுக்காய் நேர்வரிசையிலுள்ள இலைகள் அனேகம், 30 அடி உயரமிருக்கும், travellers' palm or Madagascar palm — Ravenalia Madagascariensis. As it contains water like plantain tree and the leaves resembling those of the plantain, the tree is named so. Thick succulent stem, long board leaves like those of the plantain tree but not rising round the stalk but in two lines on opposite sides, tree presents an appearance of a large open fan, it contains fresh water in the thick firm ends of the stalks of the leaves and so travellers passing by the side would make use of this water collected in the tree, when they feel thirsty. The tree is about 30 ft. from the ground to the lowest leaves.

**நீர்வாழைக்காய்,** மீன், இது மறைவாகச் சொல்லும் பெயர், an euphemistic term for fish.

**நீர்வாழையங்கம்,** மீனெலும்பு, fish bone.

**நீர்வாழ்செந்து,** தண்ணீரில் வாழும் பிராணி, aquatic creature

**நீர்வாழ் பறவை,** தண்ணீரில் வாழும் பட்சிகள், water birds.

**நீர்வாளம்,** நேர்வாளம், which see.

**நீர்வாளி,** நீர்க்காங்கு, false fern tree — Filicium decipiens.

**நீர்விளா,** நீரில் விளையும் விளாச் செடி, wood apple growing in water.

**நீர்விசர்க்குழல்,** கோசத்தின் அடிப்பாகத்திற்கு சமீபத்திலுள்ள ஓர் குழல், the canal by which the urine is conducted from the bladder and discharged — Urethra.

**நீர்விடல்**, மூத்திரம் பெய்தல், making water, urining; 2. தண்ணீர் கொட்டல், pouering water; 3. இந்திரியம் விடல், discharging semen; 4. வியர்த்தல், perspiring.

**நீர்விட்டான்**, see தண்ணீர் விட்டான்.

**நீர்வியாதி**, see நீரழிவு.

**நீர்விரியன்**, தண்ணீரில் வாழும் விரியன் பாம்பு, water viper—Ophidii viperiformis.

**நீர்விரை**, தண்ணீர் கொண்ட பிடுக்கு, a circumscribed collection of fluid in the Scrotum — Hydrocele.

**நீர்விளா**, குட்டிவிளா, small wood apple tree — Feronia elephantum; 2. மாவிலங்கை, waterwood apple — Capparis nurvala.

**நீர்விளாவல்**, தண்ணீர் விளாவல், adding or mixing cold water.

**நீர்விளைவமை**, உப்பு, common salt.

**நீர்வீக்கம்**, நீரேற்றத்தினல் உடம்பில் பல பாகங்களில் காணும் வீக்கம், swelling in many parts of the body due to accumulation of fluids in the cavities or tissues of the body — Oedema.

**நீர்வீழ்ச்சி**, நீர்அருவி, water falls.

**நீர்வெட்டிக்கொட்டை**, see நீர்வெடிமுத்து.

**நீர்வெடிமுத்து**, see நீரடிமுத்து.

**நீர்வெள்ளரி**, வெள்ளரிக்காய், water cucumber — common cucumber — Cucumis sativus.

**நீர்வேட்கை**, தண்ணீர்த் தாகம், thirst for water.

**நீர்வேட்டல்**, see நீர்வேட்கை.

**நீர்வேலிப்பாசி**, கடற்பாசி, sea moss.

**நீர்வேம்பு**, நீரில் முளைக்கும் வேம்பு, அதாவது நீர்க்கொடி (வேப்பம்பாசி), ferns, brake fern — Pteris genus; 2. பரனை அல்லது தாவுங்கொடி, common brake fern — Pteris aquilina; 3. கடற்பாசி, sea mass; 4. கடற்காளான், sea fungus, sea mushroom.

**நீர்வைத்தியம்**, தண்ணீர் வைத்தியம், water-cure — Hydropathy; 2. எல்லா நோய்களையும் தண்ணீர் மந்திரித்துக் கொடுத்துக் குணப்படுத்து மோர்வகை வைத்திய முறை, a particular system of treatment which professes to cure all diseases by the use of water through magic spell.

**நீர்வைத்தியன்**, தண்ணீரைக் கொண்டு வைத்தியம் செய்பவன், hydropathist; 2. மூத்திரத்தைப் பரிசோதித்து நோயைக் குணப்படுத்துபவன், one who divines diseases by examination of urine water doctor.

**நீல**, நீலவர்ண, azure; 2. பிராணிகளின் முதற்பெயர், mammals first term as நீலமந்தி; 3. பூண்டின் முதற்பெயர், நீலக்கொடிவேலி, plants first term as நீலகொடிவேலி; 4. மொழியின் இறுதிப்பெயர், words suffix of second term as இந்திரநீலம், sapphire.

**நீலகண்டசெயநீர்**, சாகாவுப்பு செயநீர், a pungent liquid extracted from the mystic salt obtained from the foetus by a secret process known only to Siddhars. It is known by its perculiar virtue of averting death; 2. துருசைப் பிரதானமாக கொண்டு செய்யும் செயநீர், a pungent liquid prepared with copper acetate as chief ingrident.

**நீலகண்டதிருவிஷம்**, ஓர் கொடிய விஷம், a virulent poison; 2. see நீருவிஷம்.

**நீலகண்டமந்திரம்**, ஓர் சிவமந்திரம், இதை இலட்சம் தரம் செபித்தவன் சித்தனெனக் கருதப்படும், a holy mantram relating to Siva. He who chants this mantran one lakh times is considered to be a Siddhar.

**நீலகண்டம்**, பெரிய முள்ளங்கி, country raddish of a bigger variety — Raphanus sativus; 2. கட்டுக்காடை, Indian jay — Coracias indica.

**நீலகண்டவாலை**, ஓர்வகை வாலுகாயந்திரம், a variety of sand bath.

**நீலகண்டனிலை**, வெற்றிலை, betel leaf — Piper betle.

**நீலகண்டன்**, துரிசு, blue vitriol — Copper acetate; 2. ஓர்பூரம், a kind of mineral compound; 3. முருங்கை, horse raddish.

**நீலகண்டி**, நீலகண்டமுள்ள ஓர்வகைப்பாம்பு, a kind of snake with throat and breast shining azur blue — Cyancula indica.

**நீலகத்திரி,** நீலவர்ணமுள்ள ஓர் வழுதுணை, blue brinjal — Solanum melingena.

**நீலகந்தி,** ஓர்வகைக் கெம்பு, a kind of ruby with blue lustre.

**நீலகமலம்,** நீலச்சாயலுள்ள ஓர்வகை உயர்ந்த வைரம், a superior diamond with blue lustre; 2. நீரிலாற்பலம், blue Indian water lily — Nymphae stillata.

**நீலகம்,** கருப்பு, impure or black salt; 2. blue vitriol copper acetate.

**நீலகாசம்,** கண்ணின் கருவிழியைப் பற்றிய ஓர் கண்ணோய், இதனுல் தலை நொந்து கண் மணியில் வலியுண்டாகி, பாசிபோல் நீர் படர்ந்து, நாளுக்கு நாள் கண்புகைந்து நுட்பமாக நீர் வடிந்து, பாவையானது கருவிளப்பூநிறமடைந்து அதனுல் ஒளி மயங்கி காணும், a disease relating to the black of the eye associated with the affection of the lens. It is marked by the following symptoms: head ache, pain in the pupil, accumulation of bad or morbid fluid in the cornea, progressive dullness of vision, scanty discharge of water, change of colour of the lens into azure blue; 2. கருவிழியின் நடுவிலுள்ள நிறத்தை நீல நிறமாக மாற்றி விழியைக் கல்லுபோல் வெகு கடினமாக இருக்கி உள்ளுறுப்புகளை உருமாறச் செய்யுமோர் வகைக் கண்ணோய்; இது மனவருத்தத்தினுல் தலைவலி பித்தரோகம் இவைகள் உண்டாகி நாளுக்குநாள் பார்வையை மிகுதியாகக் குறைக்கும், நாட்பட்ட வியாதியானுல் தீர்வதரிது; disease in which the black of the eye is completely turned into blue. 'It is marked by tense intraocular pressure resulting in hardness of the eye ball and atrophy of the optic disk — Glaucoma.

It is said to be due to mental worry giving rise to disease as head ache, bilious disorders etc and consequently attacks of dimness of vision which at any time may become rapid and end with total destruction of the eye.

**நீலகாந்தி,** ஓர் வகை நீலபுட்பம், a kind of azure blue flower; 2. நீலம், sapphire; 3. நீலவொளி, blue brilliancy; 4. கழியைப் பற்றிய ஓர் வகைக் கண்ணோய், a kind of eye disease affecting the pupil.

**நீலகாம்போசி,** நீர்ப்பூலா, அல்லது பூலா, black honey shrub; — Phyllanthus multiflorus.

**நீலகிரிகரணி,** நீலக்காக்கணம், blue mussell shell creeper — Clitoria ternatea (typica).

**நீலகிரிகாஞ்சிரைப் புல்லுருவி,** நீலகிரிமலையில் விளையும் எட்டி மரத்தின் புல்லுருவி, a parasite plan grown o· the branches of Nilgiri nuxvomica tree — Nigiri nuxvomica loranthus.

**நீலகிரிகாஞ்சொறி,** நீலகிரியில் முளையும் காஞ்சொறி, இதன் கொழுந்து விஷத்தன்மையது, பூக்களைத் தலைவலிக்காக நெற்றியில் கட்டலாம்; இப் பூவை மலையர்கள் தின்பார்கள், இதினின்று ஓர் தித்திப்பு தயாரிக்கலாம்; இதன் கட்டை அடுப்பு விறகெரிக்கவுதவும், Nilgiri nettle, itching plant — Girardina hetero phyllo. Young leaves poisonous; flowers medicinally applied to forehead for headache they are eaten by hill tribes, flowers make a sub acid jelly, used for fuel charcoal.

**நீலகிரிசண்பகம்,** நீலகிரியில் விளையும் ஓர் வகை சண்பகம், இதன் பூ வெண்ணிறம், சிலசமயம் மஞ்சள் சாயலுமுண்டு, மழைகாலத்தில் பூக்கும், Nilgiri champak — Michalia nilgirica alias M. pulneyansis. Flowers white sometimes with yellow tinge, flowering in rainy seasons. It is a Magnolia - like tree.

**நீலகிரி பூமரம்,** சிவந்த பூக்களையுடைய ஓர் குட்டையான மரம், dwarf rose bay - large ixora — Rhododendron aboreum.

**நீலகிரியூதாப்பூ,** நாய்ப்பாலை, Indian ipecacuanha — Asclipias asthmatica.

**நீலக்கடம்பு,** நீலவர்ணக்கடம்பு, blue cadamba — Stephegyne geneus.

**நீலக்கடம்பை,** நீலநெல்லி, lowly nelly, Madras phyllanthus — Phyllanthus Madras patensis see நீலநெல்லி.

**நீலக்கட்டி,** நீலநிறக்கட்டி, blue abscess; blue boil.

**நீலக்கத்திரி,** நீலநிறக்கத்திரி, see நீலக்கத்திரி.

**நீலக்கபித்தம்,** மாங்காய், mango — Mangifera indica.

**நீலக்கல்.** இராசவர்த்திக்கல், one of the two inferior varieties of gem with yellow specks — Lapis Lazuli; 2. துரிசு, blue vitriol — Copper acetate; 3. பெர்சியா தேசத்திய நீலவர்ணக்கல், இது தாம்பூரச் சத்து அமைந்த ஓர் மிருகத்தின் பல். blue gem from Persia. It is the tooth of an animal penetrated with blue calx of copper.

**நீலக்கள்ளி,** அறுகோணக்கள்ளி, six angled torch light — Cercus hexagonus.

**நீலக்காக்கட்டான்,** நீலக்காக்கணம் கொடி, mussell-shell creeper with blue flowers — Clitoria ternatea (typica).

**நீலக்காக்கணம்,** see நீலக்காக்கட்டான்.

**நீலக்காரநீர்,** சதை, முளை பரு முதலியவை களைக் கரைக்கவேண்டி இரணங்களுக்கு துணியில் நனைத்துப் போடும் ஓர் வகைத் தண்ணீர் மருந்து, a pungent liquid preparation for dissolving flesh, pimple, wart or any hard portion or over growth in a wound. A piece of cloth is soaked in the liquid and applied to the wound; 2. துரிசு நீர், a solution of blue vitriol also used for wounds.

**நீலக்காரம்,** துரிசு, blue vitriol — Copper acetate. 2. see நீலக்காரநீர்; 3. சங்கு, மயில் துத்தம், பால்துத்தம், வெள்ளைப் பாஷாணம், நீலம் அல்லது வெள்ளைத்துணி, சுட்ட சாம்பல், இவைகளை அரைத்து விரணங்களின் மேல் தூவ ஆறும், காரமருந்து, chunk (white) copper sulphate, zinc sulphate, white arsenic, ash of blue or white piece of cloth, all these are ground into fine powder and used as dusting powder to heal very bad ulcers.

**நீலக்காலி,** அவுரி, Indigoplant — Indigofera tinctoria; yields blue dye; 2. ஓர் வகை நண்டு, a kind of crab so called from its blue legs.

**நீலக்கிரந்தை,** விஷ்ணுகரந்தை, Vishnu's basil — Sphaeranthus indicus.

**நீலக்குக்கில்,** அரபிக்குக்கில், Arabian bolellium with a bluisntinge — Balsmodendum mukul. It is a resin from a small thorny tree. It is so called from being a product of Arabia.

**நீலக்குமிழ்,** குமிழ்க்கொடி, small Cashmere tree—Gmelina asiatica alias Gordonia obtrosa.

**நீலக்குருந்து,** முவிலைக் குருந்து, three leaved wild lime — Trichilia spinosa.

**நீலக்கொடி,** கருங்குவளை, blue Indian water lily, blue nelumbo — Monochoria vaginalis.

**நீலக்கொடி வேலி,** நீலசித்திர மூலம், blue flowered lead wort — Plumbago capensis.

NOTE: This should not be confounded with கருங்கொடிவேலி, which is a quite a different variety. It is an unidentified plant supposed to be found grown in Pothigai Hills near Tinnevelly. It is used for rejuvenation but in some books it is synomously used.

**நீலக்கொண்டி,** புல்லாமணக்கு, creeper ammanac, small castor plant — Sebastiana chamaelea.

**நீலக்கொழுந்து,** உலோகங்களை உருக்கும் போது நெருப்பில் காணப்படும் நீலவெளிச்சம், a blue glow found when melting metals.

**நீலங்காலி,** see நீலஞ்சோதி.

**நீலசம்பங்கி,** ஓர் வித நீலசம்பங்கி, blue champauk — Polianthus tuberosa.

**நீலசம்பு,** சம்புநாவல், jaumoon tree — Eugenia jambolina.

**நீலசம்பூடம்,** ஓர் வகை நாவல், a variety of Jamoon — Eugenia genus.

**நீலசாமந்தி,** நீலநிறசாமந்திப்பூ, — a blue variety of chrysanthemum.

**நீலச்சிகை,** நீலச்சிகைப்பூடு, blue crest plant — Plumpago zeylanica.

**நீலச்சித்திரமூலம்,** see நீலக்கொடிவேலி.

**நீலச்சிரா,**

**நீலச்சுழல்வண்டு,** தண்ணீரிற் காணும் நீலநிறமான சுழல்வண்டு, a blue whirling beetle found on the surface of water.

**நீலச்சூலி,** மூவிலைக்குருந்து, see நீலக்குருந்து.

**நீலஞ்சூத்திரன்,** புட்பராகம், a kind of white stone — Lupis lazuli.

**நீலஞ்சோதி,** திருகுகள்ளி வேர், the root of the twisting spurge tree — Euphorbia tortilis (root of); 2. சோதிவிருட்சம், a tree luminous in the dark; 3. கற்பவகையிலொன்று; one of the classified rejuvenating drugs; 4. புல்லூரி, a parasitic plant — Loranthus genus.

# நெ



**நெகல்,** கனிதல், ripening; 2. உடைதல் breaking, opening.

**நெகிர்ந்து போதல்,** இளைத்தல், growing weak, emaciating.

**நெகிழவரைத்தல்,** நேர்மையாகவும், இளகும் படிக்கும் அரைத்தல், grinding minutely so as to become loose and soft as medicine.

**நெகிழவாட்டல்,** see நெகிழவரைத்தல்.

**நெகிழ்,** see நெகிழ்தல்.

**நெகிழ்தல்,** மலர்தல், blossoming; 2. அழுத்தல், pressing; 3. இளகுதல், becoming soft; 4. உலருதல், being melted; 5. குழைதல், becoming viscus; 6. தளர்தல், loosening; 7. நழுவல், slipping; 8. பிரிதல், separating; 9. பொசிதல், oozing; 10. பொடியாதல்; being reduced to powder; 11. விட்டுநீங்கல், getting rid of; 12. நிலைகுலைதல், becoming displaced.

**நெகிழ்த்தல்,** இளகச் செய்தல், rendering soft; 2. உருக்குதல், melting; 3. பிரமித்தல், become stunned.

**நெகிளம்,** இரும்பு, iron; soft iron.

**நெகுதல்,** உருகுதல், being melted; 2. கரைதல், dissolving; 3. பொடியாதல், becoming powder.

**நெக்குடைதல்,** இளைத்துருகல், becoming emaciated as in phthisis; 2. நெகிழ்ந்துருகல், waning as from love; 3. மனமுடைதல், dejected in mind.

**நெக்குண்டி,** வெண்ணொச்சி, white nochy — Vitex negundo.

**நெக்குதல்,** தள்ளல், நெருக்குதல், pressing.

**நெக்குரோதம்,** ஆலமரம், banian tree — Ficus bengalensis.

**நெக்குவிடுதல்,** பிளவுபடுதல், cracking; 2. பொருத்துவாய்விடல், putting out of joint, disjointed; 3. காதலால் மனந்தளர்தல், going or getting dejected as from love.

**நெச்சடி,** see நெச்சி.

**நெச்சி,** கடுக்காய், Indian gall nut — Terminalia chebula.

**நெஞ்சக்கரம்,**

**நெஞ்சடித்தல்,** இதயம் படபடக்கை, violent pulsation of the heart; 2. இதயத்துடிப்பு palpitation as from fear, disease etc.

**நெஞ்சடைத்தல்,** மாரடைத்தல், spasmodic suffocation; 2. தொண்டையடைத்தல், obstruction of throat as pharangitis.

**நெஞ்சடைப்பான்,** நெஞ்சடைக்கும் நோய், இது நுரையீரல் அழற்சியாற்காணும், obstruction of chest as from inflammation of lungs.

**நெஞ்சடைப்பு,** மாரடைப்பு, obstruction in the chest.

**நெஞ்சடைவாதம்,** மூச்சுவிட முடியாதபடி மார்பை அடைக்குமோர் வாதம், இது இதய நோயால் நேரிட்டு மயக்கம், தொண்டைவலி முதலிய குணங்கள் காட்டும், a disease marked by paroxysmal thoraxic pain with suffocation and syncope due to disease of the heart — Angina pectoris.

**நெஞ்சமுக்கம்,** அமுக்குப் பிசாசம், அதாவது தூக்கத்தில் மார்பை ஒருவர் அமுக்குவது போலிருந்தது, அதனால் மூச்சுவிட முடியாமல் பயம், பிரமை, மயக்கம் முதலிய குணங்கள் உண்டாகும், a feeling of oppression or suffocation during sleep accompanied by stupefying influence and intense anxiety, fear, horror etc — Night - mare.

**நெஞ்சம்,** மனம், mind, 2. மார்பு, chest.

**நெஞ்சம்,** நெஞ்சு, chest; 2. மனம், mind, heart.

**நெஞ்சழிதல்,** மதிமயங்கல், perplexity of mind; 2. மனம் நிலைகுலைதல், agitation of mind as from fear, disease etc; 3. ஏங்குதல், pining, longuishing.

**நெஞ்சழுத்தம்,** நெஞ்சுறுதி, firmness of mind.

**நெஞ்சறை,** மார்பின் கூடு, பிஞ்சரம், a box like cavity of the body — Chest; 2. கழுத்திற்கும் வயிற்றிற்கும், இடையேயுள்ள பெட்டியைப் போன்ற பகுதி, இதற்குள் சுவாசக் கருவி, இரத்தோட்டக் கருவி, சுவாசப்பை, இரத்தாசயம், விதனம் முதலிய உறுப்புகள் அமைக்கப்பெற்று அபாயமின்றி இருப்பதற்காக எலும்புகளாலும், முருந்துகளாலும் ஆக்கப்பட்ட ஓர் பெரும் பெட்டியைப் போன்ற கூடு, இது மேலே ஒடுக்கமாகவும், கீழே பருத்துமிருக்கும், இதற்கு முன்பக்கம் விலா முருந்தும், நெஞ்செலும்பும், பின் பக்கம் முதுகெலும்புகளும், பக்கவிலா வெலும்புகளும் எல்லையாகும். that portion of the body between the neck and the abdomen. It is regarded as a conical box like cavity containing organs as the lungs, the heart, blood vessels, the diaphragm etc To be safe, it is well constructed and protected by the small end

turned upwards, the back of the box being formed by the spinal column, the sides by the ribs, the front by the cartilages of the ribs and the breast bone, the bottom by the diaphragm and the top by the root of the neck — Thorax.

**நெஞ்சறைக்குழி**, நெஞ்சுக்கூடு மார்பிற் குள்ளிருக்கும் குழி, throaxic cavity, chest cavity — Venter medius.

**நெஞ்சறைசவ்வு**, மார்பின் அறையில் கவர்ந்துள்ள சவ்வு, பரிப்புப்புசம், the membrane lining the walls of the thorax or chest — Pleura.

**நெஞ்சுறைச்சுவர்**, மார்பின் னுட்புறமுள்ள நான்கு பக்கம், the four sides called walls of the chest — Thoraxic wall.

**நெஞ்சறைப்புடைப்பு**, மார்பின் நடுப்பாகம் புடைத்துக் காணல், bulging of the chest like a barrel.

**நெஞ்சறைவலி**, மார்பின் சுவருக்குக் காணும் வலி, pain in the chest wall — Thoracalgia.

**நெஞ்சாங்கட்டை**, நெஞ்செலும்பு, இது மார்பின் நடுவில் முன் பக்கமாகக் காணப்படும் தட்டை எலும்பு, the narrow flat bone in the medium line of the chest in front called breast bone — Sterum.

**நெஞ்சாங்குலை**, ஈரற்குலை, the viscera contained in the chest or thoraxic cavity — Thoracic viscera; 2. இருதயம், the heart.

**நெஞ்சாங்குழி**, மார்புக்குழி, pit of the stomach; 2 தொண்டைக்குழி, the pit in the throat infront of the neck.

**நெஞ்சாங்குற்றி**, see நெஞ்சாங்கட்டை.

**நெஞ்சாங்கொழுந்து**, see நெஞ்சாங்குலை,

**நெஞ்சாறல்**, துக்கம், grief.

**நெஞ்சார**, மனமார as in நெஞ்சாரக்கூறல், talking or speaking as felt in mind, conscientously.

**நெஞ்சிடி**, பயம், நோய் முதலியவைகளால் ஏற்படும் நெஞ்சின் துடிப்பு, palpitation of the heart as from fear disease etc.

**நெஞ்சிடித்தல்**, மார்பு அடித்துக் கொள்ளல், violent beating of the heart, throbbing of the heart — Pant.

**நெஞ்சிற்கட்டல்**, மார்பில் கபம் கட்டல்' accumulation of phlegm in the chest.

**நெஞ்சிற்கட்டை**, மார்பில் கட்டை போட்டது போல் சளி அடைத்துக் கொள்ளல், feeling of obstruction in the chest due to accumulation of phlegm in the passage of respiration.

**நெஞ்சிற் கல்போட்டதுபோலிருத்தல்**, வாயுவினால் மார்பில் கல் போட்டதுபோல் கனதியாய் அடைத்துக் கொண்டு மூச்சுவிட முடியாதபடி துன்புறல், a feeling of oppression in the chest as if a stone like lump rising or seated within the thorax. It is ascribed to the action of deranged Vayu.

**நெஞ்சிற்புகைதல்**, தொண்டைப் புகைச்சல், irritation of the throat.

**நெஞ்சிநோவு**, see நெஞ்சுநோவு.

**நெஞ்சு**, மார்பு, chest; 2 தொண்டை, throat; 3. இருதயம், heart; 4. சுவாசவுறுப்பு, organs of reppiration.

**நெஞ்சுக்கபக்கட்டு**, See நெஞ்சுக்கட்டு.

**நெஞ்சுகரித்தல்**, See நெஞ்சு கரித்தல்.

**நெஞ்சுக்கட்டு**, நெஞ்சில் சளி கட்டல், accumulation of phlegm or mucous in the chest; 2. கோழை கட்டல், pectoral disease from phlegm; 3. மார்பிலிடும் கட்டு, bondage round the chest.

**நெஞ்சுக்கரகரப்பு**, மார்பில் ஏற்படும் ஓர் உணர்ச்சி, feeling of a peculiar stimulating, or inflammatory sensation in the chest; 2. தொண்டை கரகரத்தல், irritation of the throat.

**நெஞ்சுக்கரித்தல்**, அசீரணத்தால் மார்பு அல்லது தொண்டையிலுண்டாகும் ஓர் வகைக் கரிப்பு, a sensation in the chest or throat due to acidity of the stomach.

**நெஞ்சுக் கரிப்பு**, see நெஞ்சுக்கரித்தல், குன்மத்தால் உண்டபின் நெஞ்சில் காணப்படும் உணர்ச்சி, feeling of acridity in the throat or chest due to dyspeptic disorders; தொண்டைப் புளிப்பு, sour eructations in the oesophagus.

**நெஞ்சுக்குத்தல்**, அன்னரசம் கேடுறுவதனால் வாயு கோளாறடைந்து நெஞ்சில் பித்த கபத்தோடு சேர்ந்து மூச்சுவிடமுடியாது குத்தலுடன் துன்புறுத்தல், a disease which the deranged bodily vayu aggravated by the vitiated chyle and incarcerated in the region of the chest through the action of the other deranged humours as pitha and kapha there by giving rise to pin prick pain in the chest with difficulty of respiration.

நெஞ்சுக்குத்து, மார்புவலி, pain in the chest —Pectoralgia.

நெஞ்சுக் குமட்டல், தொண்டை குமட்டல், nausia in the throat making an effort to vomit, retching.

நெஞ்சுக்குரிய, மார்பிற்குரிய pertaining to the chest — Pectoral.

நெஞ்சுக்குழி, மார்பின் பள்ளம், pit of the stomach scrobiculous cordis—Anticardium.

நேஞ்சுக்குறுகுறுப்பு, மார்பில் சிலேட்டும தோஷத்தினுலேற்படும் கொறு கொறுப்பு, respiratory sound heard in the chest — Rale. 2. சுவாசக் குழாயிலேற்படும் சத்தம், crackling sound heard or produced in the trachea (wind pipe) or the bronchus — Bronchial or tracheal rale; 3. இதயக் குறுகுறுப்பு, unnatural sound heard over the region of the heart. It may be hereditary or othorwise — Murmur.

நெஞ்சுக்கோழை, மார்பில் கட்டும் கோழை, mucous secretion in the chest.

நெஞ்சுச்சளி, மார்பில் கட்டும் சளி, accumulation or collection of phlegn in the chest as from cold.

நெஞ்சுத்திடுக்கிடல், அச்சத்தால் மார்பு கலங்கல், agitation of mind through fear or disease.

நெஞ்சுத்துடிப்புக்கேடு, மார்பின் துடிப்புக் கோளாறு, irregularity or lack of rhythm in the heart's action — Arrhythmia cordis.

நெஞ்சுத்துடிமன், மார்புச் சளி, acute bronchitis attended with constant cough.

நெஞ்சுத்துடிப்பு, நெஞ்சின் படபடப்பு, beating of the heart, pulse beat of the heart — Cardiac rhythum.

Palpitation of the heart arising from sudden and irregular action of the heart and attended with sensation of distress and faintness. It is caused by indigestion, flatulence or tobacco, It often accompanies anaemia, hysteria and amenorrhoea. Palpitation arising from heart disease should be distinguished from those depending on other causes.

நெஞ்சுத்துணிவு, மனத்துணிச்சல், resolution of mind.

நெஞ்சுநாளம், பொதுவாக மார்பிலோடும் நாளம், veins in the region of the chest; 2. இருதயநாளம், cardiac veins; 3. நுரையீரல் நாளம், veins of the lungs — Pulmonary veins.

நெஞ்சுநேர்தல், நெஞ்சிளைத்தல், emaciation of chest; 2. நெஞ்சொடுங்கல், which se.e

நெஞ்சுநோய், மார்புநோய், diseases in general of the chest.

நெஞ்சுநோய், see நெஞ்சுநோவு.

நெஞ்சுநோவு, மார்புவலி, pain in the chest or thorax — Thoracodynia; 2. இதுவே இருதய ரோகம், causes: Disease of the heart is produced by food hot, bitter, or astringent, eating before the last food is fully digested, suppression of natural urgings of stools and urine, mental worry, too much of exertion, violent blow, or other injuries to the chest etc.

Symptoms: Pain in the heart or about the region and palpitation of the heart followed by irregular beats The disease varies according to the derangement of the three humours in the system besides the extraneous causes such as violent blows or accindental injuries to the chest. Sometimes tickling sensations, nausea, swelling of the eyes, fatigue, stupefaction or insensibility of the whole body and giddine ss are some of the earlier symptoms.

NOTE:— Pain in the chest should not be confounded with the heart disease external injuries as blow or heavy fall, digestive troubles of bilious origin may be responsible for pain in the chest which can be cured by fomentations. Sometimes lungs troubles are also mistaken for heart disease.

நெஞ்சுப்புண், தொண்டைப்புண், sore throat.

நெஞ்சுமருந்து, மார்பு நுரையீரல் முதலிய நோய்களுக்குக் கொடுக்குமருந்து, medicine for complaints of the heart and lungs — Pectoral.

**நெஞ்சுரப்பு,** மனவுறுதி, firmness of mind.

**நெஞ்சுரம்,** நெஞ்சு வலிமை, strength or power of mind.

**நெஞ்சுலர்தல்,** மார்புவற்றல், dryness of the chest.

**நெஞ்சுவலி,** மார்புவலி, pain in the chest; 2. see நெஞ்சுகுத்து.

**நெஞ்சுவலியுறுத்தி,** இருதயத்தைப் பலப் படுத்தும் மருந்து, cordiac tonic.

**நெஞ்சுவறட்சி,** see நெஞ்சுலர்தல்.

**நெஞ்சுவற்றல்,** வறட்சியினுல் நெஞ்சில் குழி விழல், pit of the stomach, depression of the chest through dryness.

**நெஞ்சுவிரணம்,** நெஞ்சுப்புண், inflammation of the lungs; 2. தொண்டைப்புண், இதற்கு நெரியாசிப்பா லை பிசினைச் சீலைத்துணியில் பூசிக்கொளுத்தி அப்புகையை இழுக்கப் போம், sore throat. Styrax liquidus is smeared on a piece of cloth and burnt. Its smoke, when inhaled, cures sore throat.

**நெஞ்சுள்,** உள்மனம், inner conscience.

**நெஞ்செரிச்சல்,** மார்பெரிச்சல், burning sensation in the chest as from disease; 2. இருதய எரிச்சல், heart burn; 3. வயிற்றெரிச்சல், a burning sensation in the oesophagus — Cardialgia; 4. புளித்தேப்பம் முதலிய அசிரணக் கோளாறினுல் ஏற்படும் வயிறு அல்லது நெஞ்செரிச்சல், burning sensation in the stomach with sour eructations due to acid dysepsia — Pyrosis.

NOTE— It is a feeling of heat in the chest and throat often accompanied by hot or cold acid eructations of watery matter (water brash). This mabady has nothing to do with the heart, but is a symptom of indigestion and should be treated as dyspepsia.

**நெஞ்செரிப்பு,** see நெஞ்செரிச்சல்.

**நெஞ்செரிவு,** see நெஞ்செரிச்சல்.

**நெஞ்செலும்பு,** நெஞ்சறையில் முற்பக்க நடுவில் வாள்போன்ற ஒடுங்கிய தகட்டெலும்பு, dagger like flat bone in the middle front of the chest — Sternum; 2. மார்பெலும்பு, dagger shaped breast bone.

**நெஞ்சைப்புகவாள்,** கருநாய், black dog.

**நெஞ்சொடுகிளத்தல்.**

**நெடலை,** ஓர்வகை நாரை, a kind of stork.

**நெடி,** மருந்தின் காரவாசனை, the pungent smell of medicinal drugs or medicine; 2. காரம், pungency; 3. சின்வண்டு, small beetle; 4. மிளகாய் நெடி, pungent smell of chilly.

**நெடிப்பினை,** வங்கம்ணல், leadore.

**நெடிப்பு,** நெடுநேரம், long time; 2. கால நீட்சி, lengthening of time.

**நெடியவன்,** see நெடியன்.

**நெடியவாயன்,** பெருவாய் மீன், a large kind of seafish with a wide mouth.

**நெடியன்,** நெட்டையன், a tall man.

**நெடியா,** குறட்டைச்செடி, round snake gourd — Trichosanthus palmata.

**நெடியாமி,** தென்னை, cocoanut tree — Cocos nucifera.

**நெடியோன்,** துளசி, holy basil — Ocimum sanctum.

**நெடிலா,** சம்பங்கோரைப்புல், small sedge grass — Cyperus rotundus.

**நெடிலி,** ஓர் கடற் பறவை, a sea bird.

**நெடில்,** மூங்கில், bamboo tree — Bambusa arundinacea; 2. நீளம், length.

**நெடினி,** பனை, palmyra tree — Borassus filiformis.

**நெடுகல்,** நீளுதல், growing long, lengthening; 2. உயர்ந்த, souring in height.

**நெடுகாசம்,** பேரிலாதசெடி, an unknown plant.

**நெடுகுதல்,** சாதல், dying; 2. உயருதல், heightening; 3. நீளுதல், lengthening; 4. காணுமற்போதல், disappearing.

**நெடுங்கடல்,** கரையடுத்தகடல், that portion of the sea adjoining the shore.

**நெடுங்கணவாய்,** நீண்டகணவாய் மீன், a long cuttle fish.

**நெடுங்கண்,** தூரப்பார்வையுள்ள கண், eye with long sight far sighted ness — Hyperopia.

**நெடுகம்பிலிங்கம்,**

**நெடுங்கழுத்தன்,** ஒட்டகம், camel.

**நெடுங்காலி,** கால்நீண்ட பசு, long legged cow.

**நெடுங்கிடை,** நோயால் நீண்டகாலம் படுக்கையிற் கிடக்கை, bed ridden from disease for a long time.

**நெடுங்குடர்,** மணிக்குடல், small intestines.

**நெடுங்குயில்,** சாவு, death.

**நெடுங்குரலன்,** கழுதை, ass from its bray or harsh cry.

**நெடுங்குரல்,** கூர்மையான நீண்ட குரல், a sharp prolonged cryuttered by a patient as done during operation.

**நெடுங்குரல்பாய்ச்சல்,** நீண்ட குரலோடு பெருஞ்சத்தமிடல், making a prolonged clamour or cry as by a woman bemoaning the loss of her child or husband.

**நெடுங்குளிசம்,** கற்பரிபாஷாணம், a kind of native arsenic.

**நெடுங்கையான்,** யானை, elephant from its long trunk.

**நெடுங்கோணரி,** see நெடுங்கழுத்தன்.

**நெடுஞ்சாணை,** see நெடுங்கிடை.

**நெடுஞ்சாரை,** நீண்டசாரைப்பாம்பு, long rat snake.

**நெடுஞ்சுருட்டை,** நீண்ட சுருட்டைப்பாம்பு, long carpet snake.

**நெடுஞ்சுரை,** சுரைக்கொடி, bottle gourd creeper — Calabash or calabash — Cucumber — Lagenaria vulgaris.

**நெடுஞ்சேவிகம்,** பனைமரம், palmyra tree — Borassus flabellifer.

**நெடுத்தல்,** நெட்டையாதல், growing tall.

**நெடுநாட்சுரம்,** நீண்டகாலத்து சுரம், long continued fever, chronic fever.

**நெடுநாட்டு,** கானக்கைதை யென்னும் ஓர் மரம், Travancore lance wood — Sageraea dalzellii.

**நெடுநாரை,** செங்நாரை, a kind of red stork; 2. ஓர மரம், a tree, fragrant cherry nut meg — Polyauthia fragrans.

**நெடுநார்,** ஓர் காப்பிச் செடி, a kind of dooduga — Polyalthia coffeeoides.

**நெடுநீர்,** கடல், sea.

**நெடுநீலி,** செந்தாழை, false kateerah — Sterenlia urens; 2. சிவப்புத்தாழை, fragrant screwpine — Pandanus odoratissinus.

**நெடுந்துயில்,** அயர்ந்த நீண்ட தூக்கம், long sound sleep as from fatigue; 2. சாவு, death.

**நெடுப்பிணை,** வங்கமணல், lead ore.

**நெடுமணம்,** இரசித பாஷாணம், a kind of prepared arsenic, a mineral poison of silver.

**நெடுமன்,** பாம்பு, snake.

**நெடுமி,** see நெடுஞ்சேவிகம்; 2. ஓடுங்கி வளர்ந்த மரம், a tall tree.

**நெடுமுறல்,** ஓர் வகை மீன், a kind of needle fish.

**நெடுமூக்கு,** நீண்ட மூக்கு, காக்கை மூக்கு, long nose like a crow; 2. தும்பிக்கை— elephant's trunk.

**நெடுமூச்சு,** பெருமூச்சு, deep respiration, long breath as from grief or melan choly — Sigh; 2. நீண்ட மூச்சு, panting respiration — Polyhnea.

**நெடுமூச்செறிதல்,** பெருமூச்சுவிடல், sighing 2. வலியால் நீண்ட மூச்சுவிடல், breathing with pain, heaving; panting.

**நெடுமை,** பெண்மயிர், woman's hair; 2. ஆழம், depth; 3. உயரம், height, tallness 4. நீளம், length.

நெடும்பட்டை_

**நெடும்பயணம்,** மரணம், death.

**நெடும்பழக்கம்,** வெகுகாலத்துச் சாதனை, long practice as in yoga; 2. நீண்ட அனுபவம், long experience.

**நெடும்பா,** ஆடாதொடை, Malabar nut tree —Adhatoda vasica.

**நெடும் பாதிரி,** நீண்டபாதிரி மரம், a tall fragrant trempet tree — Stereospermum chelonoides.

**நெடும்புடல்,** நீண்ட புடலங்காய், snake guard.

**நெடும்புயம்,** செங்காவிக்கிழங்கு, red aconite root.

**நெடுவசி,** ஊசித்தழும்பு, needle scar.

**நெடுவல்,** நீண்ட மனிதன், tail man.

**நெடுவாய்,** உள்ளா மீன், a sea fish — Sphyraena acuti pinnis.

**நெடுவாலன்,** குரங்கு, monkey.

**நெடுவாலிக்கோங்கு,** see நெடுவாற்கோங்கு.

**நெடுவாலூடகம்,** நீண்ட வாலுடைய ஓர் கடல் மீன், a kind of sea fish with long tail, see திரளி.

**நெடுவாறி,** நாய்ப்பாகல், dog carolah — Mimordica hispida. alias Bryonia mysorensis.

**நெடுவாற்கோங்கு,** ஓர் கோங்கு மரம், dipterocarp dammer — Hopea racophloea.

**நெடுவாற்றிரளி,** see நெடுவாலூடகம்.

**நெடுவிரல்,** ஆடாதோடை see நெடும்பா; 2. நாய்ப்பாகல், see நெடுவாறி, 3. பழுபாகல், prickly carola — Momordica dioica, 4. நீண்டவிரல், long finger.

**நெடுவிரியன்,** நீண்ட விரியன் பாம்பு, long viper.

**நெடுவேர்,** சாயவேர், dye root, chay root— Oldenlandia umbellata.

**நெட்டகம்,** மிளகு, black pepper — Piper nigrum.

**நெட்டாநாரட்டி,** நெடுநார் அல்லது நாரிலை, long fibre plant — Polyalthia cerasoides.

**நெட்டப்பிரமட்டை,** பேய்மிரட்டி, devil frightener — Anisomeles malabarica.

**நெட்டம்,** வெள்ளை மிளகு, white pepper.

**நெட்டாவில்,** மரவுரி, bark tree — Antiaris toxicaria so called *from* the usefulness of the bark for making a fibre coat in olden days as a protection against cold.

**நெட்டி,** தக்கை, pith; 2. நெட்டிப்புல்; pith grass; 3. முழுவெலும்பு, sheleton; 4. எலும்புக் கணுவின் சத்தம், crackling sound of the joint of the bones; 5. தக்கைச்செடி pith plant -- Aeschynomens aspera; 6. எலும்பு, bone; 7. see நீர்ச்சுண்டி; 8. உடற்பொருத்து, joints of the body; 9. முளி, joints of the hand or feet, See நெட்டை.

**நெட்டிக்கோரை,** சம்பங்கோரைப்புல், sedge grass.

**நெட்டிச்செடி,** தக்கைச்செடி, இதற்கு, கொக்கேரி, ஆற்றுநெட்டி, சடைச்செடி, கிடைச்சி என்று பலபெயர் வழங்கும், இச்செடி, இரண்டு வருஷத்தில் காய்த்துவிடக் கூடியது. தண்ணீரில் மிதக்கும், கிளைகள் வாய்ந்தது, இலைகள் இறகைப் போன்றது, சிற்றிலை அனேகம், சிறிது பூக்கள், இரண்டிதழ், பூங்காம்பும் இலைக்காம்பும் மொசு மொசுப்பாயிருக்கும், பூக்கள் மஞ்சள், வெள்ளை முதலிய பலநிறம், இதன் சமூலத்தைக் கஷாயமிட்டு, பாண்டுவிற்கு கொடுக்கலாம், இலையைக் கீரையாக உபயோகப்படுத்தித் தின்பதுண்டு, இதன் தக்கை அனேக விதத்தில் உபயோகப்படும், இது அடியிற் கண்டபடி பலவகைப்படும், pith plant — Aeschynomens aspera. It is known by different names as Netty shrub, river pith plant, river cork, sponge wood etc. Perennial, floating, some times branched. Leaves pinnate, leaf lets numerous, flowers few, two lipped, pedicles and peduncles rough with hairs. flowers brownish yellow, white etc. The decoction of the plant is a useful remedy in dropsy leaves are used as greens in food. The pith is useful in commerce in many ways. It is of different kinds as mentioned below.

1. கொடிநெட்டி, 2. கோரைநெட்டி, 3. பூநெட்டி, 4. வயல்நெட்டி, 5 மூங்கில்நெட்டி, 6. பெருநெட்டி, 7. நெரிநெட்டி, (சம்பம்புல்) 8. நறுக்குநெட்டி, 9. ஆற்றுநெட்டி, river cork — Aeschynomens indica.

**நெட்டிதளம்.**

**நெட்டிமுட்டி**, see அரியீயம்.

**நெட்டிமுறித்தல்**, நெட்டை ஒடித்தல், crackling the finger joints.

**நெட்டியிடுக்கி**, தக்கையைத் குழையினின்று விடுவிக்கும் ஓர் கருவி, Cork screw.

**நெட்டிலிங்கி**, *வானமுட்டி*, Indian *mast* tree —Polyalthia longifolia. alias Uvaria longifolia.It is a tall beautiful ever green tree; 2. அசோகு, which see.

**நெட்டிலிங்கு**, see நெட்டிலிங்கம்.

**நெட்டில்**, *மூங்கில்*, bamboo — Bombusa arundinacea.

**நெட்டு**, காம்பு, pedicle; 2. குலை, bunch; 3. அகலம், breath; 4. மூங்கில், bamboo; 5. காரம், நெடி, which see.

**நெட்டுகா**, ஓர் உகாமரம், sack tree — Salva*dora persica*.

**நெட்டுயிர்.**

**நெட்டுயிர்ப்பு**, பெருமூச்சு, sigh; 2. நீண்ட மூச்சு, long breath; 3. ஆழ்ந்தமூச்சு, deep breath.

**நெட்டுயிர்ப்புவீங்கல்**, see நெட்டுயிர்த்தல்,

**நெட்டுயிர்ப்பெறிதல்**, see நெட்டுயிர்த்தல்.

**நெட்டுலிங்கம்**, நெட்டிலிங்கு, which see.

**நெட்டுதி**, ஓர்விதசங்கு, a kind of conch.

**நெட்டெழுத்து**, வெள்ளெழுத்து, சாலேசரம் என்னும் கண் புகைச்சல், old sight — Preslyopia.

**நெட்டெழும்பல்**, காரமெழும்பல், rising of strong pungent smell as from medicine or drugs when grinding. (உ-ம். துவளவரை நெட்டெழும்பு மட்டும், (கொ. வா. காவியம்)

**நெட்டை**, See நெட்டி; 2. கைகால் பொருத்து, joints of the limbs; 3. விரற்கணு, joints of the fingers; 4. நீண்டஒலி, crackling noice; 5. நீண்டதன்மை, to become long.

**நெட்டைக் கங்காளம்**, நெட்டை யெலும்பு, பொருத்தெலும்பு, joints of the body.

**நெட்டைக்கோரை**, tall koray.

**நெட்டைநாரத்தை**, see நெட்டைநாரட்டி.

**நெட்டைப்பிரமட்டை.**

**நெட்டைப்பேய் மருட்டி**, இரட்டைப்பேய் மருட்டி, Malabarical mint — Anisomeles malabarica.

**நெட்டைவாங்கல்**, see நெட்டிமுறித்தல்.

**நெணவாசி**, புலி, tiger.

**நெண்டுதல்**, எதிர்க்களித்தல், eructation.

**நெதி**, தியானம், contemplation; 2. முத்து, pearl; 3. see நிதி.

**நெதுட்டி**, மருது, mardah tree — Terminalia alata.

**நெத்தகர்**, ஓர் பூடு, a plant.

**நெத்தமண்டலி**, இரத்த மண்டலி, இது இரத்த வியர்வையுண்டாக்கி வருத்தப் படுத்து மோர் தேளினமாதலால் இப்பெயர், It is so called from the prespiration of blood from its poisonous bite. It is poisonous creature of the species of scorpion.

**நெத்தம்**, இரத்தம், *blood — a corrupt or* slang term.

**நெத்தல்** / **நெத்தில்** } நெய்தோலி, which see.

**நெபத்திகை**, ஓர் பூடு, an unknown drug.

**நெமமீன்**, வாதத்தையுண்டாக்குமோர் வகை மீன், a kind of fish causing rheumatisum.

**நெமம்**, see நெமிசந்தனு.

**நெமிசந்தனு**, இரத்த வேஙகை, red kino tree — Pterocarpus marsupium (acuminata.)

**நெய்**, இரத்தம், blood; 2. நிணம், fat, 3. வெண்ணெய், உருக்கிய நெய், clarified butter; 4. வெண்ணெய், butter; 5. எண்ணெய், oil; 6. தேன், honey; 7. உதிரம், blood, 8. புழுகு, civet; 9. கிருதம், medicinal ghee; 10. ஆகாரம், food; 11. நுரை, foam; 12. நெய்தல், water lily.

நெய், புரைகுற்றிய பாலைக் கடைவதினு லுண்டாகிய பசையுள்ள வஸ்துவாகிய வெண்ணெய், இவ்வெண்ணெயை, தண்ணீர் போக உருக்கி வடிகட்டியதே நெய் யெனப்படும். சமையல் பாகத்தில் வெண்ணெய்க்குள்ள குணமே இதற்கு முண்டு, சுய நெய் ஊழலெடுக்காமல் நெடுநாளிருக்கும், இது சாதாரணமாக எருமை, பசும் பாலிலிருந்து எடுக்கப்படும், இது உண்பதற்கு நேர்த்தியாயும் உருசியாயும் இருக்கும், உடம்பிற்கு குளிர்ச்சியையும் தாதுபுஷ்டியை யுமுண்டாக்கும், உடம்பினுறுப்புகளில் உண்டாகும், பிசுபிசுப்பைப் போக்கி அவ் விடத்து நெய்ப் பசையையுண்டாக்கும்.

இது பைத்தியம். காக்கை வலி, மல சலக் கட்டினுலேற்படும் வயிறு வீக்கம் ஆகிய வைகளைக் குணப்படுத்தும், இது ஞாபக சக்தியைக் கொடுத்து உடம்பிற்குப் பலத்தை யுண்டாக்கும், அன்றியும் கண் பார்வையைத் தெளிவு படுத்துவதுடன் உடம்பிலிருக்கும் விஷத்தைப் போக்கும், clarified butter. It is obtained by churning fermented milk and cream briskly for sometime, when the fat globules become aggrecated into a mass of butter. The butter when boiled, till it turns into oil, so as to remove the casein water, the whole of the water constituent. It has all the advantages of butter for culinary purposes and this when pure may be kept without rancidity for a long time ( 6 months ). It is made from both, cow and buffalow milk. Only cow's shee is used in medicine and for diet

It is cooling in its essence and potency and is mild and sweet to the taste. It slightly removes slimy secretions of the organs and acts as a lubricating moistener. It proves efficacious in insanity epilepsy and distension of abdomen from the suppression of stool and urine. It also improves memory intellect and voice and strengthens the body. It improves eye sight and eliminates poison from the body.

Vegetable oils or ghees.

1. ஆமணக்கு நெய், கோரவாதம், குன்மம், குடலேற்றம், தேகஎரிச்சல், கண்ணெரிச்சல் போம், castor oil — alleviates acute rheumatism, dyspepsia, displacement of bowels, burning sensation of the body and eyes.

2. சிற்றாமணக்கு நெய், மருந்துஷ்ணம், மூலஉஷ்ணம் போம், small castor seed oil medicinal heat and heat in the anus are cured. This oil should be used for preparing medicines with castor oil.

3. எள்நெய், தேகபலவீனம், கண் காது நோய், கபாலச்சூடு, காசம் போம், Gingelly oil removes obdily weakness diseases of the eyes and ears, brain heat asthma etc.

4. வேப்பெண்ணெய், மகாவாதம், கிரந்தி, கரப்பான், சிரங்கு, விரணம் போம். Margosa oil cures acute rheumatism syphilitic ulcers, ear pain itch fever with delirium.

5. இலுப்பெண்ணெய், கரப்பான், கடி, விஷம், சிரங்கு, விரணம் போம் Mowah oil cures eczema, itch wounds, poisonous bites etc.

6. புங்கெண்ணெய், இரணம், சிரங்கு, சொறி, வெடிப்பு போம், Poongam oil alleviates itch scabbies, fissures, wounds etc. Heals the ulcers easily.

7. வாதுமை நெய், தேகச்சூடு, கபதோஷம் போம், Sweet almond oil removes bodily heat, phlegmatic tendencies.

8. புன்னைநெய், முன்னிசிவு, பின்னிசிவு, வலிப்பு, விரணம், கிருமி போம், Dulbergial oil is good for emprosthotonos, opisthotonos convulsion, wounds, worms etc.

9. தேங்காயெண்ணெய், தீப்புண், படர் தாமரை, சிரங்கு போம், Cocoanut oil is useful in burns and scalding, eczema, itch etc.

10. கடுகுநெய், குன்மம், இரத்தபித்தம், குட்டம், மகாவாதம், சயம், முளை, மூலம், சூலை போம், Mustard oil is useful in dyspepsia, blood pressure, leprosy, rheumatism, phthisis external piles, gout etc.

11. நீரடிமுத்து நெய், சொறி, சிரங்கு, பெருவியாதி, சருமரோகம் போம். Jungle almond or maravetti oil is useful for itch, scabbies, leprosy and other cutaneous affections.

II அடியிற்கண்ட மருந்து நெய் அல்லது தைல வகைகளுக்குண்டான குணங்களைப் பற்றி அவற்றுக்குண்டான மூலிகை குணத்தையே பார்க்கவும். In order to know the qualities or properties of the following prepared medicinal oils please refer the other Chief ingredient of which it is prepared.

1. ஆவாரை நெய், senna ghee or oil.
2. கொன்றை நெய், cassia ghee or oil.
3. நாவல் நெய், jaumoon ghee or oil.
4. பொன்னுங்காணி நெய், sessile ghee oil.
5. கடுக்காய் நெய், gallnut ghee or oil.
6. வில்வ நெய், bael ghee or oil.
7. அவுரி நெய், Indigo oil or ghee.
8. அறுகம்வேர் நெய், pannicgrass oil.
9. சமுத்திரா பழ நெய், Indian oak ghee or oil.
10. கண்டங்கத்திரி நெய், oil or ghee of prickly night shade.
11. தூதுவளை நெய், oil or ghee prickly shoonday.
12. முலைப்பால் நெய், breast milk ghee.
13. சுக்கு நெய், oil or ghee of dry ginger.
14. பிரமி நெய், ghee or oil of diabetes plant.
15. கொடுப்பை நெய், same as No 4.
16. வில்லாரை நெய், ghee or oil of Indian penny wort.
17. சதாவேரி நெய், ghee or oil of water root (asparagus).
18. புளியாரை நெய், ghee or oil of sour sorrel
19. பூசணி நெய், ghee or oil of ash pumpkin.
20. சோம்பு நெய், ghee or oil of anise.
21. கருவாப்பட்டை நெய், ghee or oil of cinuamam.
22. வெற்றிப்பூ நெய்.
23. நாரத்தை நெய், ghee or oil of bitter orange.
24. எலுமிச்சை நெய், ghee or oil of lime fruit.
25. ஆளிவிதை நெய், ghee or oil of lin seed.
26. கையாப்புடை நெய், ghee or oil of cajeput.
27. கற்பூர நெய், turpentine.
28. நாட்டு அக்ரோட் நெய், candlenut oil.
29. சீமைச்சோம்பு நெய், careway seed oil.
30. இலவங்கெண்ணெய், oil of cloves.
31. கொத்தமல்லி எண்ணெய், oil of coriander.
32. பருத்திக்கொட்டை நெய், cotton seed oil.
33. திப்பிலி நெய், ghee or oil of long pepper.
34. புன்னை நெய், poon oil.
35. ஓம நெய், oil of omum.
36. நீலகிரி எண்ணெய், eucalyptus oil.
37. மாசிப்பத்திரி நெய், ghee or oil of fleabane.
38. கரிசாலை நெய், ghee or oil of eclipta or கையான் நெய்.
39. சதுப்பை நெய், oil or ghee of dib.
40. முசுமுசுக்கை நெய், ghee or oil of bristly bryonia.
41. சேரங்கொட்டை நெய், ghee or oil of markingnut.
42. தேற்றுங்கொட்டை நெய், ghee or oil of water clearingnut.

Ghee of animal origin:

1. பசுநெய் — தாகம் — உழலைப்பிணி அதிகட்கரோகம், வாந்தி, பித்தாதிக்கம், விரணம், பிரமேகம், வயிற்றெரிவு, பித்தவிக்கல், இருமல், வயிற்றுவலி, குடல் நெளிவு, ஆஸ்தி தும்பல், மூலம் இவை போம். பத்தியத்திற்குதவும், Cow's ghee cures diseases such as thirst amadypsia or diposis, vomitting biliousness venereal ulcers, burning sensation in the stomach billous hiccup, cough, colic, atrophy of bones, piles etc used in diet.

2. காராம் பசு நெய் — கண்ணொளிவு, தேகபுஷ்டி உண்டாம் கண்புருவம் நெற்றி, சிரசு நோய்கள் போம்; Black cow's ghee gives brightness of vision and grow of flesh in the body and cures diseases of eyebrows, fore head, and the head.

3. எருமை நெய் — அறிவு குன்றும், கண்ணொளி மங்கும், தேஉஷ்ணம் போம். கரப்பான் உண்டாம், Buffaloe's ghee makes intellect and vision dull and developes a sort of Cutaneous disease — carpaung but removes bodily heat.

4. வெள்ளாட்டு — நெய் சிலேட்டுமாதிக்கம் போம், உடம்பை வளர்க்கும், கண்ணுக் கொளியுண்டாக்கும். பத்

தியத்திற் குதவும், Goats ghee removes excess of phlegmatic humour, developes body, gives brightness of vision, useful in diet.

5. செம்மறியாட்டு நெய் — கபநோய் அதிகரிக்கும், Sheep's ghee — aggravates phlegmatic diseases.

6. பள்ளையாட்டு நெய் — பித்த நோய் போம், மந்தம் உண்டாம் Under sized goat's ghee cures bilious diseases but promotes dullness of appetite.

7. குறும்பாட்டு நெய், வாயுவுண்டாம். Woolly sheep ghee causes rheumatic affections.

8. கலப்புநெய் — உடம்பின் கொதிப்பு போம். சுக்கில விருத்தியும் பலமும் உண்டாகும், Mixed ghee removes bodily heat, increases secretion of semen, and affords strength.

9. ஒட்டைநெய் — நீரிழிவு, பித்தம்போம், Camel's ghee cures diabetes and bodily heat.

10. பன்றிநெய்—மூத்திரக் கடுப்பு போம். மூலக்கிராணி, வாதக்கடுப்பு போம், Pig's fat cures dysurea haemorroides rheumatism and is very efficacious in herpes (அக்கி) if used externally.

11. உடும்புநெய் — இரத்தக்கிராணி போம், Guana's fat cures chronic dysentery.

12. காக்கை நெய் — காமாலை போம், Crow's fat is useful in jaundice.

13. ஆமை நெய் — இரத்தமூலம் போம். Turtle fat cures haemorroides.

14. ஓணான் நெய் — பின்னிசிவு தீரும். Lizard's fat for convulsions.

15. கரடி நெய் — வாதவேகம், பாதவெடிப்புபோம். Bear's fat cures rheumatic affections and fissure of the foot.

16. மீன் நெய் — மாலைக்கண், இளைப்பு நோய்போம், Fish liver oil, codliver oil cures night blindness, phthisis.

**நெய்க்கடம்பு**, see நாய்க்கடம்பு.

**நெய்க்கடுகு**, வெண்ணெய் உருக்கிக் காய்ச்சியெடுக்கும் போது அடியில் நிற்கும் வண்டல், the sediment deposited at the bottom during melting of butter into ghee; 2. அகஸ்தியர் வல்லாதி 600-ல் சொல்லியிருக்கும் முறைப்படி பசுநெய்யை மற்ற மருந்துச் சரக்குகளோடு சேர்த்துக் காய்ச்சி வடித்த மருந்து நெய், இது வயிற்றில் ஏற்படும் நோய்களுக்குக் கொடுக்கப்படும், a medicated oil prepared with cow's ghee as chief ingredient along with other drugs according to the process laid down in Agastyar vallathy 600. It is prescribed for all diseases of the stomach.

**நெய்க்கியாழம்**, பசுநெய்யுடன் மற்ற கடைச் சரக்குகளைச் சேர்த்துத் தயாரிக்கும் மருந்து நெய், medicated oil in common prepared from cow's ghee mixed with other bazaar drugs.

**நெய்க்கிழி**, எண்ணெய்த் தோய்த்த சீலைத் துண்டு, lint or other cloth soaked in medicinal oil.

**நெய்க்குப்பை**

**நெய்க்குரணி**, ஐங்கோலத் தைலம், அதாவது ஐந்து மாதத்திய தலைப்பிண்டத்தினின்று வடிக்குந்தைலம், a medicinal oil extracted from the first born fetus five months old; 2. அழிஞ்சில் பட்டையினின்று வடிக்குந் தைலம், இது வாத நோய்களுக்கு மேற்பூச்சு மருந்தாக உபயோகப்படும், a medicated oil from the bark of Alangium by a peculiar process known to Siddhars. It is said to be an useful application in acute rheumatism or other rheumatic affections.

**நெய்க்குறி**, தேரையர் செய்த ஓர் தமிழ் வைத்திய நூல், இதில் மூத்திரப் பரீட்சை விசேடித்துச் சொல்லியுள்ளது, a medical Tamil treatise by Theraiyar which treats about the examination of urine and their indications.

**நெய்க்கொட்டான்**, பூவந்தி மரம், soap nut tree — Sapindus trifoliatus (emarginata); 2. தொழுக்கொட்டான் நான்கிலைப் பூவந்தி, four leaved soapnut tree — Hemygyrosa canescens.

**நெய்க்கொட்டான்விதை**, பூவந்திக் கொட்டை, soap nut.

**நெய்க்கொட்டை**, see நெய்க்கொட்டான்; 2. சிற்றிலைமடுக்கு, butterfly soapnut — Harpulia cupanoides.

**நெய்ச்சசிகரி**, சீமைத்தக்காளி, Europe brinjal, tomato — Hycopersicum esculentum.

**நெய்ச்சட்டி**, செங்கழுநீர், red Indian water lily — Nymphaea odorata; 2. பவளக் குன்றிமணி, jweller's red bead — Abrus precatorius; 3. நெய்ச்சட்டிக் கீரை, see நெய்ச்சட்டி.

**நெய்ச்சட்டி,** சீதா செங்கழுநீர், இச்செடி வருஷத்திற் கொருமுறை வளர்ந்து ஓயும், இலை நீண்டு நான்கு மூலை, பூக்கள் பிரிவினையுண்டு, பூவிதழ் ஊதாநிறம், வெளி இதழை விட இருமடங்கு நீளம், இது வங்காளம், கொரநாடு, மலையாளம் இவ்விடங்களில் காணலாம்.

இதன் சமூலத்தைக் கஷாயமிட்டுச் சுரத்திற்குக் கொடுக்க வியர்வையை அதிகப்படுத்தும், உட்சூடுபோம், மூத்திரப்பை ரோகத்திற்கும், நீர்க்கடுப்பிற்கும் கொடுக்கலாம், கண்ணொளி, வீரிய விருத்தியுண்டாகும், பசி, அழகு இவைகளுண்டாகும், அன்றியும் மேகம், வெள்ளை, இரசகந்த பாஷாணத்தா லேற்பட்ட வாய்ப்புண், வாந்தி, அழற்சி இவைகளைப் போக்கும், இதன் விதையைக் குதிரைக்கு மசாலையாகக் கொடுக்கப்படும், இதன் பூ கண் சிவப்பை மாற்றும், இதன் இலைச்சாற்றை மற்றச் சரக்குகளோடு சேர்த்துத் தைலம் காய்ச்சி முழுக தலைப்பாரம், காமாலை, கைகால் எரிச்சல், கண்ணோய்கள், உட்சூடு இவைகள் போம், இதன் இலைச்சாறு வேப்பெண்ணெய்க் கசப்பை மாற்றி நெய்யாகச் செய்யும், ash coloured fleabane — Vernonia cinerea. It is an annual plant, leaves oblong, flowers panicled, corolla light purple, twice the length of the calyx. It is common in coramandal, Malabar and Bengal. The whole plant is medicinally used in decoction to promote perspiration in febrile affections and also for removing internal heat. It forms a useful remedy in diseases of the bladder, stranguary and for clearness of vision. It also promotes secretion of semen, creates hunger and beauty. It is a useful remedy in urinary diseases as gonorrhoea and in mercurial ptyalism, inflammation of the mouth vomiting etc. The seeds forms a constituent as an anthelmintic in horse masala. Flowers are administered for blood — short eyes. The medicated oil prepared from the juice of the leaves is used in oil bath as a cure for heaviness of head, jaundice, burning of the limbs, eye diseases and internal heat. The juice of the leaves removes the bitterness and the smell of the margosa oil and converts it into ghee.

**நெய்ச்சட்டிக்கீரை,** சீதேவியார் செங்கழுநீர், இது வேப்பெண்ணெயை நெய்யாகச் செய்யும், a kind of waterlily — Nymphae odorata or Grewia orbiculata. It converts margosa oil into ghee.

**நெய்ச்சாதம்,** நெய் கலந்த சோறு, rice food mixed cow's ghee.

**நெய்ச்சாரிகம்,** see இரத்தவேங்கை.

**நெய்ச்சி,** See எண்ணெய்ச்சிக்கு.

**நெய்ச்சிக்கு,** நெய் குடலில் தங்குவதாலுண்டாகும் அசீரணம், indigestion due to the presence of ghee in the intestines] unassimilated; 2. நெய்ச்சிக்கு நாற்றம், rancid or musty smell of ghee spoiled by age; 3. நெய்யை உடம்பில் பூசிக்கொள்வதாலுண்டான நாற்றம், ill flavour due to the ghee being smeared over the body.

**நெய்ச்சிக்குபேதி,** சிக்கு நெய்யை உட்கொள்வதனுலேற்பட்ட பேதி, purging due to taking rancid ghee in food.

**நெய்ச்சிக்குபோக்கி,** சிகைக்காய் அல்லது சீயக்காய், soap nut.

**நெய்ச்சிட்டி,** சிற்றிலைச்செடி, small leaved or ash coloured flea bane — Vernania anthelmintica alias Coniza cinerea alias Vernonia cinerea; 2. நெய்ச்சிட்டி, round sage leaved Indian linden — Grewia orbiculata; 3. சீதேவிசெங்கழுநீர், see நெய்ச்சட்டிக் கீரை.

**நெய்ச்சிட்டிக்கிழங்கு,** செங்கழுநீர்க் கிழங்கு, bulb of Nymphae odorata.

**நெய்ச்சிந்தி,** பேய்க்கடலை, bitter bengal gram — Cicer genus.

**நெய்ச்சீவிகம்,** நெய்ச்சிந்தி, which see.

**நெய்ச்சுட்டி,** see நெய்ச்சட்டிக்கீரை.

**நெய்ச்சுண்டு,** see நெய்க்கடுகு.

**நெய்தலாம்பல்,** see நெய்தல்.

**நெய்தல்**, வெள்ளாம்பல், white Indian water lily — Nymphae alba alias N. pubescens; 2. செங்கழுநீர், red Indian water lily — Nymphae odorata; 3. அல்லி, Indian water lily — Nymphae genus; 4. நெய்தல் நிலம், maritime tract; 5. குவளை, a variety of Egyptian water lily; 6. நெய்தலாம்பல், fringed water lily — Limnanthemum Cristatum.

**நெய்தல்நிலம்**, கடலோரதேசம், sea coast countries — maritime tract.

**நெய்தல்விளைவு**, உப்பு, common salt; 2. மீன், fish; 3. கடற்கரைகளிற் கிடைக்கும் பொருள்கள், அவையாவன, பவளம், முத்து முதலியன; கடல்படு திரவியம், substances obtained from the sea such as coral, pearl amber etc.

**நெய்தற்கிழங்கு**, ஆம்பற்கிழங்கு, இது சுக்கிலத்தை விருத்தி செய்யும், இக்கிழங்கை அவித்துச் சர்க்கரையிட்டுச் சாப்பிட உடம்பிற்கு குளிர்ச்சி, பித்த எரிச்சல், பிரமேகம், இரத்தபேதி இவைகள் போம், உலர்த்தி மாவாக்கி பாலிலிட்டு உட்கொள்ள குன்மம், பேதி, மூலம் போம்; பெண்கள் கர்ப்பிணியாயிருக்கும் போது மாதாந்த ருது காணில் இது தடுக்கும், அன்றியும் இதனுல் அக்கிப் புண் போம், கண்ணுக்குக் குளிர்ச்சியுண்டாக்கும், the tuberous roots of white Indian water lily ( Nymphae pubescens alias N. stellata ) taken with sugar after boiling it, not only cools the system but also cures urinary diseases and dysentery. Powdered roots mixed with milk and taken internally is a useful remedy in dyspepsia, diarrhoea and piles. It proves an efficacious remedy in stopping the menstrual discharge found in pregnant women. It is advantageously used in herpes and for cooling the eyes.

**நெய்தனிலநீர்**, உவரிநீர், salt water.

**நெய்தனிலப்பறவை**, கடற்காக்கை, sea crow.

**நெய்தனில மக்கள்**, இவர்களுக்கு யானைக்கால், குடலண்ட விருத்தியுண்டாம், people living in the maritime coastal tract are liable for filarial and hernia diseases.

**நெய்தனிலமரம்**, நெய்தநிலத்தில் விளையும், அடம்பு, கோங்கு தாழை, பனை முதலியன, plants and trees growing in the maritime ( coastal ) tracts as sand binder, golden silk cotton tree screw pine etc.

**நெய்த்தண்ணீர்**,

**நெய்த்தல்**, கொழுத்தல், growing fat.

**நெய்த்தோர்**, இரத்தம், blood; 2. ஒதியமரம், Indian ash tree Odina wodier alias Rhus odina.

**நெய்த்தோலி**, நெய்ப்பசை அதிகமாயுள்ள ஓர் பொடி மீன், இது அசீரணத்தையுண்டாக்கும், small fish containing much fat and as such it is not easily digestible when eaten. see நெத்திலி.

**நெய்நெட்டி**, சம்பம்புல், a kind of sedge grass growing in wild or waste plains — Heath; 2. சம்பங்கோரை, elephant sedge grass Typla eliphantina.

**நெய்ப்பசை**, எண்ணெய்ப்பசை, oiliness, greasiness.

**நெய்ப்பயறு**, சிறுதுவரை, small leaved ebony — Diospyros microphylla.

**நெய்ப்பரி**, பன்னாடை, the web at the bottom of the palmyra tree the fiberous covering about the base of palmyra tree.

**நெய்ப்பற்று**, நெய்ப்பசை, stickiness of fat or ghee; 2. கொழுப்பு, fat or grease.

**நெய்ப்பாகம்**, நெய்யினுல் செய்யும் பண்டங்கள், ghee preparations,

**நெய்ப்பான**, கொழுத்த, filled with fat; fatty.

**நெய்ப்பிடி**, see நெய்ப்பசை.

**நெய்ப்பிரியக்காய்ச்சல்**, எண்ணெய் கக்கும் படி காய்ச்சுதல், boiling down till the material which is boiled gives out or sheds all its oil contents.

**நெய்ப்பீர்க்கு**, நுரைப்பீர்க்கு, snake luffa — Cucumis sulcata. alias Luffa eschinata.

**நெய்ப்பு**, கொழுப்பு, fat, suet; 2. சிதல், white ant; 3. புல்லாமணக்கு, creeping castor plant — Sebastiana chamaclea; 4. சீழ், pus, matter.

**நெய்ப்புச்சுவரி**, மான் செவிக்கள்ளி, leaf spurge — Euphorbia nercifolia-alias Cacalia Kleinia alias E. nivulia

**நெய்ப்புள்ள**, கொழுப்புள்ள, unctuous; 2. எண்ணெய்ப் பசையுள்ள, oleaginous.

**நெய்ம்மரம்**, மதுவிருட்சம்; வெண்ணெய் மரம், இதில் நெய்யைப்போல் உறையும் எண்ணெய் வாய்ந்துளதாலிப் பெயர், name given to several trees, the fruit or bark of which yields a solid oily or fatty substance such as Mowah butter, Cokum butter, Cocoa butter etc. see வெண்ணெய்மரம்.

**நெய்மீன்**, வெள்ளிருல்மீன், a species of white prawns c. f. நெய்த்தோலி.

**நெய்முட்டை**, நெய்யெடுக்குங் கரண்டி, an oval spoon used for handling ghee.

**நெய்ம்மீன்**, See நெய்மீன்.

**நெய்யடிசில்**, நெய் கலந்த சோறு, see நெய்ச் சாதம்.

**நெய்யரி**, See நெய்ப்பரி.

**நெய்யன்னம்**, நெய்ச்சோறு, See நெய்ச் சாதம்.

**நெய்யாடுதல்**, நெய்பூசி முழுகுதல், bath with ghee.

**நெய்யாட்டல்**, வெண்ணெய் திரட்டல், collecting butter.

**நெய்யுண்ணி**, ஐவிரலி, (lit) ghee eater from its medicinal property, creeper known as bryony — Bryonia laciniosa.

**நெய்விழுது**, கிருதம், medicated ghee; 2. புதிதாகத் திரண்ட வெண்ணெய், fresh buttre collected by churning curd i. e. fermented or wagulated milk.

**நெய்வெட்டி**, ஓர் கடல்மீன், a sea fish.

**நெய்வைத்தல்**, உடம்பில் கொழுப்பேறுதல், becoming fatty; 2. மருந்துநெய், அதாவது கிருதம் தயாரித்தல், preparing medicated ghee.

**நெருடுதல்**, உறுத்தித்தடவல், feeling by pressing; 2. தட்டுப்படுதல், feeling the location.

**நெரலைத்தாளி**, ஓர்வகைத் தாளிக்கொடி, a kind of hedge bind weed — Ipomaea genus.

**நெரி**, சொரசொரப்பு, roughness; 2. ஓர் நோய், a disease; 3. நொறுக்குதல், crushing; 4. நெரித்தல், see நெட்டி முறித்தல், 5. நறுக்குதல், slicing.

**நெரிகட்டிசுரம்**, நெரிவீங்கி சுரம் காணுதல், filarial fever.

**நெரிகொட்டை**, நறுக்கிய பாக்கு, crushed acreca nut.

**நெரிகுரல் படுதல்**, குழந்தைகட்குக் தோஷத் தினுல் குரல் கம்முதல், affection of throat through cold, sore throat in children due to planetary influence.

**நெரிசல்**, விழி விக்கத்தால் ஏற்படும் ஓர் கண் ணோய், an eye disease with pressure due to swelling of the eye ball. It is a form of swelling due to eye lids becoming tight over the eye and the eye lids do not completely cover the globe of the eye; 2. பசலை, Indian spinach — Spinosa oleracea.

**நெரிசல்**, ஓர்வகைக் கண்ணோய், கரு விழியிலும் வெள்விழியிலும் தோன்றும். கருவிழி: 1. உஷ்ணநெரிசல், 2. சோணித நெரிசல் வெள்விழி: 1. துளிநெரிசல்; 2. சந்து நெரிசல்; 3. விரணநெரிசல், an eye disease that occurs both in the black and white of the eye. Their varieties are given above See கண்ணோய்வகை.

**நெரிஞ்சகத்தி**, நெரிஞ்சியிலை, leaf of caltrops — Ground burnut — Tribulus terrestris — leaf of.

**நெரிஞ்சி**, இது ஓர் முட்செடி, ஒன்றை யொன்று பற்றி நிற்கும், இலைகள் நேர் நேராகச் சிறகைப் போன்றது, இலைக் கொழுந்து 5 — 6 சோடியாகவும் சம அளவாகவும் இருக்கும், அடியில் மொசு மொசுப் புள்ளது, இலைக்காம்பு இலையைவிடக் குட்டையானது; பூக்கள் கிளைகளினின்று பிரிந்து சிறு காம்புகளின் மேல் நிற்கும்; உள்ளிதழ் 5 பிரிவினையாயிருக்கும், இதழ் 5 அகலமாயும், நான்கு மூலையாகவும் இருக்கும், காய்கள் சிறியவை, முள் வாய்ந்தவை, பூக்கள் பெரியன, பிரகாசமான மஞ்சள் நிறம், நறுமணம் வாய்ந்தது, வருஷ முழுவதும் பூக்கும், இது எங்குபார்த்தாலும் பரவியிருக்கும், மைதானம், தோட்டம், ஓரம், வயல், வாய்க்கால் ஓரம், குளம் குட்டைகளின் கரைகளிலும் காணலாம், வீட்டுப் புழக்கடைக் கொல்லைகளில் விசேஷம், இது கொரநாடு, தட்சணம், வங்காளம், திருவனந்தபுரம் முதலிய விடங்களில் மணற்பாங்குள்ள நிலங்களில் சாதாரணமாய்க் காணலாம்.

இதன் காய், இலை, வேர் இவைகளுக்கு நீர் போக்கும் குணமுண்டு, விதையைப் பொடி

த்துக் கஷாயமாக வைத்து, பாண்டு, வெள்ளைக்குக் கொடுக்கலாம், இக்காய் தசமூலத்தி லொன்ருகக் கருதப்படும். இதன் இளங்கொம்புகளைத் தண்ணீரில் போட்டுக் கலக்க நீருக்குத் தடிப்பேறிக் குழம்பாகக் காணும், இது வாய் கொப்புளிக்க உதவும், இலைக்கொம்பும் இவ்விதமாகவே தண்ணீரைக் குழம்பாக்கும் குணமுடையது, ஆகவே மோர் தடிப்பேறும்படி இதை உபயோகிப்பதுண்டு.

இதன் வேர் நார்த் தன்மையது, காய்கள் ஐங்கோணம், கடலைப்பருமன்; முள்வாய்ந்ததால் நடைப்போக்கு சனங்களுக்கு இடைஞ்சலாயிருக்கும். இக்காய்களுக்கு ஒருவிதமான ருசியும் வாசனையும் கிடையாது விதைகளோ சிறிது கசப்புடையவை, இதன் காய் நீர்ச்சுருக்கு, நீரடைப்பு, கல்லடைப்பு, மூத்திரவியாதி முதலிய நோய்களையும், உஷ்ணத்தையும் தணிக்கும், இதன் காயைக் கஷாயமிட்டு அத்துடன் நவாட்சாரம் சேர்த்து மூத்திர எரிச்சலுக்குக் கொடுக்கலாம். சமூலத்தைக் கஷாயமிட்டு அத்துடன் சிலாசத்தும் சேர்த்து மேற்கண்ட நோய்க்குக் கொடுப்பதுண்டு; இதன் கஷாயத்துடன் எள், வெள்ளாட்டுப்பால், தேன் சேர்த்து கெட்ட பழக்கத்தினுல் நேர்ந்த நபும்சகத்திற்குக் கொடுக்கலாம், இது கீழ்க் கண்டவாறு பலவகையாம், a thorny plant known as cow thorn — Tribulus lanuginosus alias Tribulus terrestris. Trailing, leaves opposite, abruptly pinnated, leaf lets about 5 or 6 pairs nearly equal with a villous pubescens at the bottom, peduncle shorter than the leaf; flowers axillary, calyx five partite, petals five, broud obtuse bright yellow; fruits fine coccus fruits, small spinny, five cornered about the size of the Bengal gram being armed with prickles. It is a source of musance to foot travellers, the fruit possesses no taste or smell, but the seeds are slightly bitter, flowering through out the year. It will be found grown in all places in South India hedges of garden, ridges of fields, canals, tanks, ponds pools, etc. , and in plains. In back yards of houses and unculivated lands it is found in abundance. It is very common in Coromandal, Deccan, Bengal, Travancore and other sandy places.

Fruits, leaves and root are diuretic in decoction, seeds powdered in infusion are used in dropsy and gonorrhoea. Fruits of classified as one of the ten principle drugs. Simple agitation of young branches in water produces a viscid mucilage. It is a good gorgle; the leafy stems are also used in the same way in thickening butter milk. The seeds are used in decoction in cases of painful micturation, stranguary calculous affections, urinary disorders. It is much esteemed as cooling. A decoction of the fruit is given with carbonate of potash in painful micturation. A decoction of the entire plant with bitumen and honey is also given for the said same affections. The decoction mixed with sesamen seeds, goat's milk and honey is said to cure impotency arising from malpractices. The varieties are mentioned below.

1. ஆனை நெரிஞ்சில், big or elephant caltrops — Pedalium murex.
2. செப்பு நெரிஞ்சில், red caltrops or pallair — Indigofera ennephylla alias Hedysarum prostratum.
3. சிறுநெரிஞ்சில், small nerunji — Tribulus terrestris.
4. கருநெரிஞ்சில், black pallair—Indigofera echinata alias Hedysarum rotundi folium.
5. கொடிநெரிஞ்சில், same as சிறு நெரிஞ்சில்.
6. பெரு நெரிஞ்சில், same as யானை நெருஞ்சில்.
7. நல்ல நெரிஞ்சில், same as No. 3.

NOTE :— All parts of this plant, especially the dried fruit are laid in high repute in South India as a diuretic. Another favourite mode of administeration is to boil the fruit and root with rice, so as to form a medicated congee water, which is taken in large quantities. It is useful in spermatorhoea and diseases of genito urinary system. Water rendered mucilaginous by the plant is drunk as a remedy for impotence and so it serves as a tonic and aphrodisiac. Combined with other drugs it is prescribed for suppression of urine, bloody urine etc. The decoction of the putire plant (செப்பு நெருஞ்சில்) red pallair is given by Vaidyans for fevers and coughs and the expressed juice as an alterative in old syphilitic diseases.

**நெரிஞ்சிக்கீரை,** நெரிஞ்சியிலே, leaves of small caltrops.

**நெரிஞ்சிமுள்,** நெரிஞ்சிக் கொடியின் முள், thistle, brier or thorns of caltrops.

**நெரிஞ்சில்,** see நெருஞ்சில்.

**நெரித்தல்,** நசுக்குதல், squeezing; 2. நொறுக்குதல், crushing; 3. சேர்த்தல், heaping; 4. கிமிட்டல், pinching.

**நெரிநெட்டி,** சம்பப்புல், reed or pith grass.

**நெரிபுலம்,** கண்புருவம், eye brow.

**நெரிநேவி,** See நெரிநெட்டி.

**நெரிபூசம்,** சொக்காய்க்கீரை, which see.

**நெரிமீட்டான்,** ஓர் மருந்துப்பூடு, இது நசுங்கிய சதையை ஆற்றும், a medicinal plant used for curing bruises.

**நெரியரிசிப்பாலெண்ணெய்,** see நெரியரிசிப் பாற்செடி.

**நெரியரிசிப்பால்,** see நெரியரிசி.

**நெரியல்,** மிளகு, black pepper — Piper nigrum.

**நெரியாசம்,** see நெரியாசி.

**நெரியாசிப்பால்,** நெரியாசிப்பாற் செடியின் பட்டையினின்று வடிக்கும் ஓர்வகைப் பாற் பிசின், இதற்கு சிலாரசம் என்றும் பெயர், இது உடம்பின் உஷ்ணத்தைப் போக்கி கபத்தை அறுக்கும்; அன்றியும் தலைநோய், சலதோஷம், சன்னி, தும்மல், பீனசம், பிரமேகம் முதலிய நோய்களுக்கு உபயோகப் படும்; இதைத் தைல வர்க்கங்களில் சேர்ப்பதுமுண்டு, இவ்வுறைந்த பாலை மெல்லுவதால் பல்லிறுகும், Indian storax — Altangia excelsa alias Liquid amber altingis. It is a milk resin collected from the bark of the gigantic tree. It is also known as Indian silaurus. It is a useful remedy in cases of internal heat of the body, phlegm, cold, delirium, catarrh of the nose and urinary disorders. It forms an ingredient in the preparation of medicated oils. The dried balsamic drops of the plant chewed acts as preservative of the teeth.

NOTE :— It is a general term for the gum resin of Altingia excelsa and also for those obtained from the trees viz— Altingia norouha ( java storax ) Liquidambar orientale ( Indian storax ) or Styrax officinale ( true storax ). It is opaque and semifluid known to chemists as Styrax liquidus. The dried and compressed bark is made into fragrant cakes formerly known as Cortex thymiamatis.

**நெரியாசிப்பாற்செடி,** நெரியாசிப்பால் மரம், இது மிக்க உயரம், 60—100 அடி இருக்கும், இலைகள் 3 — 4½ அங்குலம், இரு புறமும் மொசுமொசுப்பாய் அல்லது இலையின் அடிப்பாகத்தின் நரம்புகளில் இழைகள் பொருந்தியிருக்கும், பட்டை கசப்பு, உறைப்பு, வாசனையுள்ளது; குத்தினால் பால் வரும், இதன் பாலினின்று வடிக்கும் எண்ணெய் சுறுசுறுப்பைக் கொடுப்பது டன் கபத்தை அறுக்கும் குணமுள்ளதால் நாட்டு வைத்தியர்கள் மருந்துகளிற் சேர்ப்பார்கள், Indian storax tree — Liquidambar orientale. It is a gigantic tree 60—100 ft. leaves 3—4½ inches glabrous on both surfaces or with tuft of hairs in the axils of the nerves beneath; bark is bitter, hot and aromatic and when wounded affords storax. The balsam contains volatile oil which is a stimulant and expectorant and so it is much used in medicines by native doctors. See எரிகாசு.

**நெரிவருணச்சுக்கிரன்,** கருவிழியில் சிவந்த புள்ளியை வளர்ப்பிக்கும் ஓர்வகைக் கண்ணோய், a red flesh growth in the black of the eye.

**நெரிவிஷம்,** கலப்பைக்கிழங்கு, plough root — Gloriosa superba.

**நெரிவிடுதல்,** நெரிபிடித்தல், unfolding.

**நெரிவிளா,** நிலாவிரை, which see.

**நெரிவு,** எலும்பு நொருங்கல், fracture of the bone; 2. சதைநெரிதல், contusion; 3. see நெரிசல்.

**நெருக்கடம்,** see நெருக்கம்.

**நெருக்கம்,** ஒடுக்கம், closeness; 2. நோயின் கொடுமை, அல்லது மும்மரம், virulence of disease; 3. மரணத்தருவாய், period of death.

**நெருக்கல்,** see நெருக்குதல்.

**நெருக்குதல்,** அமுக்குதல், pressing; 2. நெருங்கச்செய்தல், compressing; 3. சுருக்குதல், making short, causing to shrink; 4 நசுக்குதல், squeezing.

**நெருங்கப்பிசைதல்,** அழுத்தப்பிசைதல், squeezing by pressing hard with force.

**நெருங்கியநாடி,** படபடப்பான நாடி, frequent pulse

**நெருங்கிலை.**

**நெருஞ்சிப்பச்சை,** see நெருஞ்சி.

**நெருடப்பிரி,** பொன்வண்ணச் சாலி, இது சாதிலிங்கத்தை மயினமாக்கும்; சூதத்திற்கு வைரி யெனப்படும், an unknown drug of yellow colour said to reduce vermilion into a past like wax and an enemical drug to mercury.

**நெருடுதல்,** கிமிண்டுதல், pinching; 2. விரல்களால் அழுத்திதடவிப் பார்த்தல், feeling by pressing with fingers.

**நெருணகம்,** சவ்வரிசி, sago.

**நெருநெருப்பு,** உள்வலி, internal pain; 2. வயிற்றுவலி, stomach ache; 3. பிரசவ இடுப்புவலி, labour pain.

**நெருப்பாறு,** எரிமலையிலிருந்து வழியும் குழம்பு, rockmatter that flows out in a molten state from volcanoes — Lava.

**நெருப்பி,** கலைச்செம்பு, a superior kind of pure copper.

**நெருப்பிடல்,** புடமெரித்தல், to set up a conflagration of fire for calcining medicines; 2. பிணம் சுடுதல், to set fire to the corpse.

**நெருப்பு,** தீ, fire; 2. பஞ்சபூதத்தொன்று, (தேயு) one of the five elements, fire; 3. உடற்சூடு, bodily heat; 4. கஸ்தூரி, musk; 5. வெடியுப்பு, nitre; 6. உதராக்கினி, gastric fire.

**நெருப்புக்கல்,** தீத்தட்டிக்கல், flint: 2 சக்கிமுக்கிக்கல், a piece of firestone or piece of quartz used in olden days for striking fire.

**நெருப்புக்காலி,** ஓர் சிலந்திப்பூச்சி, a kind of spider.

**நெருப்புக்கிரை,** பிணம், dead; 2. நீர், water.

**நெருப்புக்குணம்,** கண்டைக்கால் நோவையும், உடம்பு கடுப்பு, வாத சிலேட்டும ரோகம்போம், quality of fire i. e. fomentation will relieve pain of the calf muscles, and pains caused by wind and phlegm humours put together.

**நெருப்புக்குள்ளுப்பு,** வளையலுப்பு, glass gall —Febvitri.

**நெருப்புக்கொப்புளம்,** தீப்புண், burns.

**நெருப்புக்கொள்ளி,** கொள்ளிக்கட்டை, fire brand; 2. தேள்கடி, scorpion sting.

**நெருப்புக்கோடாமூலி,** one that is resistant to fire.

**நெருப்புக்கோழி,** நெருப்பை விழுங்கும் கோழி, ostrich; 2. வான்கோழிச் சேவல், turkey four (cock).

**நெருப்புச்சாணை,** ஓர்வகைச் சாணைக்கல், a kind of whet stone

**நெருப்புச்சாலம்,** see அக்கினிச்சாலம்.

**நெருப்புச்செயநீர்,** அக்கினித்திராவகம், nitric acid.

**நெருப்புத்தண்ணீர்,** தீநீர், distilled water; 2. கொதிநீர், boiling water; 3. நீராவி, steam; 4. மிதமிஞ்சிய குளிர்நீர், extremely chill water.

**நெருப்புத்தம்பம்,** see அக்கினித்தம்பம்.

**நெருப்புத்திராவகம்,** see அக்கினித்திராவகம்.

**நெருப்புப்பட்ட புண்,** தீப்புண், burns; 2. நான்கு வகையான தீச்சுட்ட புண்; அவை யாவன:— 1. நிறமாற்றுப் புண்; 2. கொப்புளப்புண்; 3. தீய்ந்த புண்; 4. அழி புண், the four kinds of or degrees of burns viz one with change of colour; 2 one accompained by blister; 3. black without much pain; 4. sloughing wound

**நெருப்புப்பறக்கும் சுரம்,** சூடும் எரிச்சலுமுள்ள சுரம், fever accompanied by excessive heat and burning sensation — Ardent thermal fever.

**நெருப்புப்புண்,** தீச்சுட்ட புண், burns; 2. வெந்நீரால் விரிவுண்ட அல்லது வழுவுண்ட புண்,. wound caused by hot water or any hot liquid.

**நெருப்புமரம்,** தில்லை மரம், which see. 2. see சோதிவிருட்சம்.

**நெருப்பு மூலி,** தீச்சுட்டதுபோல் எரிச்சலை யுண்டாக்கும் ஓர் பூடு, அதாவது கொடிவேலி, a drug causing burning sensation—lead wort — Plumbago Zeylanica; 2. மிக்க சூட்டையுண்டாக்கு மூலி, drug causing intense heat in the system; 3. கொப்புள மெழுப்பு மூலி, drug causing blisters; 4. சோதிப்புல், burning bush.

**நெருப்புமேனி,** நெருப்பைப் போன்ற சிவந்த வுடம்பு, red body as bright as fire.

**நெருப்புவண்டு,** கொப்புளமெழுப்பும் வண்டு, telini fly canth arides raising blisters.

**நெருப்புவர்ணம்,** சிவந்தநிறம், red colour.

**நெருப்புவிரணம்,** see நெருப்புப்புண்.

**நெருப்புவிழுங்கி,** see நெருப்புக்கோழி, ostrich.

**நெருமதங்கைக்குறியான்,** வெட்டிவேர், cuscus root — Andropogon aromaticus.

**நெர்க்குண்டி,** see நிர்க்குண்டி.

**நெலவர்,** நிலவாகை, which see.

**நெல்,** நெற்பயிர், இது ஓர்வகைத் தானியம், இந்தியாவில் வங்காளம், ஆசாம், பர்மா, சென்னை, பம்பாய் மாகாணம் இவ்விடங்களில் இதன் அரிசியையே உணவாகக் கொள்ளப்படும், இது கோதுமை முதலான வைகளை விட மிகச்சிறந்ததாகும், நெல்லைக் குத்திச் சுத்தப்படுத்தியதுதான் அரிசியெனப்படும், இவ்வரிசி எளிதில் சீரணிக்கக் கூடியதால் தனவந்தர்களுக்கும், நோயாளிகளுக்கு முக்கியமான ஆகாரம், போஷிக்கும் வகையில் கோதுமையைவிட அவ்வளவு சிறந்ததல்ல; உஷ்ணதேசத்திய சனங்களுக்கு இது ஓர் சிறந்த உணவுப் பொருளாகும், மிகஎளிதில் சமைக்கக் கூடியது, இதன் கஞ்சி வாலிபர், குழந்தைகள் இவர்களுக்கு முக்கிய ஆகாரமாகும், அதிசார பேதிக்கு இதை உடைத்துக் கஞ்சி காய்ச்சி உபயோகிக்கலாம், சுரம், வைசூரி, வயிற்றுக் கோளாறு, வெள்ளை முதலிய மேக நோய்கள் இவைகளுக்குக் கொடுக்கலாம், கஞ்சித் தண்ணீரை இறுத்து நோயாளிக்கு ஆசன வழியாகவும் புகட்டலாம், இதன் மாவைக் களியாகவும் கிண்டிக் கட்டலாம், அம்மைநோய், அக்கினி விசர்ப்பி, வேர்க்குரு முதலிய சருமநோய்களுக்கு இதன் மாவை மேல் தூவலாம், தீச்சுட்டபுண், வெந்நீர்ப் புண் இவைகளுக்கு இதன் மாவைத் தூவலாம், ஆளி விதைக் கட்டுக்குப் பதிலாக இம் மாவைக் களியாகக் கிண்டி நோய்களுக்குக் கட்டலாம், ஆகவே சமயத்திற்குத் தக்கபடி நெல்லைப் பலவிதமாகப் பதப்படுத்திக் கொள்ளலாம், நெல்லையே பொறியாகவும் அவலாகவும் வறுத்தும் இடித்தும் உணவிலும் நோயாளிக்குப் பத்தியத்திலும் உபயோகிக்கலாம், இவ்வரிசியினின்று காடி, சாராயம் முதலியவை இறக்கப்படும்; நெல் பொதுவாக நிலவளப்பத்திற்கும் தேசத்திற்குக் தக்கபடி விளையுமாதலால் அது அனேக விதப்படும், நமது நாட்டில் வழங்கும் முக்கியமான நெல்வகைகள் அடியிற் கூறப்படும், paddy crop — Oryza sativa. It is one of the most useful food grain forming the staple food of those living in Bengal, Assam, Burma and South India. It is considered in some respects more useful than wheat. Husked paddy is known as rice which is not only nutritious but also easy of digestion and therefore suited to weak stomach. It is chiefly used by richer classes, patients and other debilitated persons. In nutritious value it is not superior to wheat, but it is best suited food for the people of tropical climate and is very easily cooked. For young persons and invalids nothing is so good in the way of puddings as those prepared from rice. It should be ground before use to correct diarrhaeic tendency. Rice conjee mixed with lime juice forms an excellant remedy in cases of fevers, small pox, measles, gonorrhoea and other urinary disorders and inflammation of all kinds. Plain rice water is also used as an enema in bowel affections. Rice and rice flour are utilised in medcine in the form of powder and poultice. It forms a soothing application in small pox. measles, erysipelas, prickly heat, and other inflammatory affections of the skin. It is also considered as an excellent remedy in cases of burns and scalds. Rice poultice is used also as substitute for linseed meal. Paddy and rice are prepared in different ways according to its use in Medicine or commerce and the process or method are clearly described in medical works and other commercial treatises. The paddy itself prepared as Pori and Aval (flakes) and used as an ordinary food and in diet. Alcoholic liquor vinegar are also prepared from rice by way of fermentation. Paddy consists of different varieties accor-

ding to the climatic condition of the place and the nature of the soil. The following are the chief varieties grown in the Tamil country.

1. அறுவதாங் கொட்டை அல்லது குருவை, *60 days or two months* growth to harvest.
2. ஆனைக்கொம்பன், elephant's tusk from its colour.
3. கடம்பு, ஓர்வகைக் கார்நெல், a kind of black paddy.
4. கலிங்கசம்பா, paddy introduced from Andra districts, same as வாடைச் சம்பா.
5. கார், dark or wild paddy; red rice.
6. கல்லுண்டை, hard round rice.
7. கற்றுழை, paddy sown *broad cast in* Tanjore.
8. மடங்கல், a summer catch crop.
9. மணக்கத்தை, A third sort of paddy ( black and white ).
10. மானவாரி, sky rain paddy grown without irrigation.
11. மிளகு அல்லது மிளகுசம்பா, Black pepper paddy.
12. மோசணம், same what red and yellow paddy requiring not much water
13. நரியன், wild paddy.
14. நவரை, ninety days paddy.
15. நீலச்சம்பா, some what black paddy grown without irrigation.
16. நீர்வெள்ளை, Eight months paddy ( white )
17. ஒட்டடன், rough hairy grain sticking to clothes.
18. பிசானம், white tawny paddy — Title from colour of husk.
19. பிசினி, *paddy grown on high level.*
20. பூம்பாளை, flower spathe from colour of grain.
21. காடைக் கழுத்தன், Quail necked paddy.
22. சிறுமணியன், small grain ( white and red ).
23. ஈசுரக்கோரை, *brown rice paddy.*
24. சுருணைவெள்ளை, white curl paddy.
25. சம்பா copper coloured grain with various varieties.
26. தில்லை, Chidembaram rice paddy from S. Arcot.
27. திருவரங்கம், reddish crop originally from Srirangam.
28. துய்யமல்லி, clear white and soft grain.
29. வரிச்சம்பா, title from stripes or spots on paddy.
30. வாடைச்சம்பா, ship sumbah.
31. வாலான், long tailed grain.
32. வெள்ளைமிளகு, white round paddy.

NOTE :— The transplanting system is considered to be more advantageous for the poorer description of soil and better class of paddies are obtained by nursery process. There are also wild paddies in some swamps expanses. Rice flour and water is used as a chemical antidote in poisoning by preparations of mercury, copper, zinc, silver and lead. The conjee from rice is a good demulcent and refrigerent drink in febrile and inflammatory diseases. Rice is of a less asperient quality than any other grain and is therefore the sofest and best food in bowel complaints.

Vaidyans are particular as to the kinds of rice they prescribe only when the rices of different crops are supposed to have very different effects. Ordinary rice which forms the staple food of a very large population is a valuable food abounding in starch, not destitute of albuminates and salts, easily grown, easily cooked and easily digested. It is deficient in nitrogenous element and so considered the lowest of the cereals and hence it demands the addition of meat fish, leguminous seeds as dholl etc., of milk and ghee or other fat to be added. It is generally insipid and needs the aid of condiments.

Rice should be kept at least for 6 months before it is used as food, otherwise indigestion, diarrhoea are likely to follow. Parboiled rice is for better than what is called table rice used by Europeans and Brahmins. Rice flour is also in use for the preparations of cakes sweet meats, hoppers etc.

நெல், நெல்லி, *Indian gooseberry,* கீழா நெல்லி, which see.

நெல்காரிகம், கருங்குருவையரிசி, red rice with *black husk.*

**நெல்மணி**, நெல், paddy seed.

**நெல்முளைக்கிருமி**, சிலேட்டுமத்தால் இரைப்பையில் உற்பத்தியாகி உள்ளாக உலாவும் ஓர்வகைப் பூச்சி, a very small worm or organism found to be moving about in the stomach, the existence of which is due to phlegmatic causes.

**நெல்லம்புல்**, வைக்கோல், paddy straw.

**நெல்லரிசி**, நெல்குத்திய அரிசி, rice from husked paddy.

**நெல்லவல்**, அரிசியவல், pounded flat rice (flaked rice) obtained from fried paddy.

**நெல்லளவு**, நெல்லிடையளவு, paddy grain weight.

**நெல்லாணி**, Guinea peach -- Sarcocephalus cordatus.

**நெல்லி**, நெல்லிக்காய்மரம், இது சாதாரணமாய் எங்கும் காணக்கூடிய மரமாதலால் அதிகமாக விவரிக்க வேண்டிய அவசியமில்லை, இம்மரம் கோணலாயும், மனிதவுடம்பைப்போல் கனதியாயுமிருக்கும், இதன் இலைகள் மாறிமாறியிருக்கும், இரு பிளவுண்டு, சிறகைப் போன்றது, பூக்கும் மரம், இலைக் கொழுந்து அனேகம், இலைக்காம்பு நீளம், வட்டம், பூவிதழ் ஆறுபிரிவினையுடையது, பூக்கள் இரண்டுவிதம், ஆண் பூ, பெண்பூ, காய் உருண்டை, சதைப்பற்றுள்ளது, கொட்டை முக்கோணம், 3 அறை, ஒவ்வொன்றிலும் 2 விதைகளிருக்கும், பூக்கள் சிறியவை, பச்சை கலந்த மஞ்சள் நிறம், சித்திரை முதல் கார்த்திகை வரை பூக்கும், இது கொரநாடு, மலையாளம், தட்சணம், வங்காளம் முதலிய இடங்களில் விசேஷமாய்க் காணப்படும், கடற்கரை ஓரங்களிலும் காணலாம், காயைப்பார்த்தே மரத்தை நிர்ணயிக்கலாம், இதன் காய்க் குணத்தைப் பற்றி நெல்லிக்காய்க்கீழ்க் காணவும், உடம்பின் குளிர்ச்சிக்காகவும், பித்தாதிக்கம், வாந்தி இவைகளைப் போக்கவும் இதன் விதையை உள்ளுக்குக் கொடுப்பதுண்டு, இவ்விதைக் கஷாயம் வைத்துச் சுரத்திற்குக் கொடுக்கப்படும், அன்றியும் நீரழிவுக்கும் இதை உபயோகிப்பதுண்டு, இலைகளை ஊறற் கஷாயமாகத் தயார் செய்து கண்ணோய்க்கு உபயோகிக்கலாம், இதன் வேர்ப் பட்டையைச் சூரணித்துத் தேனில் குழைத்து வாய்ப்புண்ணுக்குத் தடவலாம், மரத்தின் பட்டைக்குத் துவர்ப்புக் குணமுண்டு, ஆகவே, இதைத் தோலுக்குப் பதப்படுத்த உபயோகப்படுத்தலாம், அதிசார பேதிக்கு இப்பட்டைச் சூரணத்தை உள்ளுக்குக் கொடுக்கலாம், இதன் இலைக் கொழுந்தை அரைத்து மோருடன் கலந்து வைத்தியர்கள் சீதபேதிக்குக் கொடுப்பதுண்டு, இதன் இலைகளைக் கிணறு, குட்டை முதலியவைகளிற் போட்டுவைக்க, அவைகளிலுள்ள மாசுகள் நீங்கித் தண்ணீர் சுத்தப்படும்.

இதன் வேரினால் வாந்தி, அருசி, திரிதோஷ கோபம், மலச்சிக்கல், சுரதோஷம், சன்னிதோஷம் இவைகள் போம், பச்சை வேர்ப்பட்டைச் சாற்றினோடு சிறிது தேனும் சேர்த்துக் கொடுக்கப் பிரமேகம் போம், இதன் இலைக்கஷாயத்தை வாய் கொப்புளிக்க வாய்ப்புண் ஆறும், இதன் பூவிற்கு உஷ்ணத்தை தணித்து மலத்தை இளக்கச் செய்யும் குணமுண்டு, காயைப் போலவே பட்டைக்கும் துவர்ப்புக் குணமுள்ளதால் மருந்தில் உபயோகமாகும், வேரினின்று தயாரிக்கப்படும் நெல்லிப் புளிப்பு காமாலை, குன்மம், இருமல் முதலியவைகளைப் போக்கும், இலையூறற் கஷாயத்துடன் சோம்பு சேர்த்துக் கொடுக்க கிராணிக் கழிச்சல் போம், இக்கசப்புக் கஷாயம் பல விருத்தி மருந்தாகவும் கொள்ளலாம், இக்காயினின்று இறக்கிய எண்ணெய் கூந்தல்வளர உபயோகமாகும், இலையினின்று வாலைரூபமாய் வடித்தஎண்ணெய் வடித்தஎண்ணெய் வாசனைச் சரக்கோடு சேர்க்கப்படும், நெல்லி வற்றல் மலச்சிக்கலைப் போக்கும், அன்றியும் சிரஉறுப்புக்களுக்குப் பலத்தைக் கொடுக்கும், இதன் வேரை உலர்த்தி இடித்துச் சூரணித்து அத்துடன் மேல்தோல் போக்கின எள்ளையும் சேர்த்துச் சாப்பிட மூளையின் நரம்புகளுக்குப் பலமுண்டாகி ஞாபக சக்தியை விருத்தி செய்யும், ஆகவே, மூளையின் உறுப்புகளைப் பலப்படுத்த இது ஒரு சிறந்த மருந்தாகக் கொள்ளப்படும், இம்மரத்தினின்று பிசின் எடுக்கலாம், அடியிற் கண்டபடி இது பலவகைப்படும், garden gooseberry — Phyllanthus emblica. This tree is very common and is found almost everywhere and so needs not much description and detail. Tree, crooked and thick as a man's body, leaves alternate, bifarious, pinnate and flower bearing, leaflets numerous, petioles striated and round, calyx, six parted, flowers in the male very

numerous in the female few, stigma three, drupe globular, fleshy smooth for further descriptions see நெல்லிக்காய். The tree is known by its fruit. In fusion of the dried fruits is cooling remedy and is used for biliousness and nausea. Decoction of the fruits is given internally for fever and diabetes, infusion of leaves is applied to sore eyes. Bark of root mixed with honey is applied to aphthous, bark is useful in diarrhoea. As the bark itself is an astrinegent it is used for tanning purposes, The young (tender) leaves mixed with sour milk are given by Native Doctors in dysentery. The young branches are put in to the wells, tanks etc., to impart a pleasent flavour in the water especially if it is muddy or impaired from the accumulation of vegetable matter or other causes.

A decoction of the root forms a useful remedy in cases of nausea or vomiting. aggravated condition of the three bodily humours etc. Juice of the fresh root mixed with honey is generally prescribed for venereal affections and urinary disorders. Decoction of the leaves is used as a gorgle in aphthae. The flowers are employed for refrigerent and aperient qualities. The bark partakes of the astringency of the ripe fruit and as such it is used in medicine. A fermented liquor prepared from the root is used in jaundice, dyspepsia, cough etc. The leaves are used as infusion with fenugreek seeds in chronic dysentery and also as a bitter tenic. A fixed oil obtained from the berries is used for promoting the growth of hair. The essential oil distilled from the leaves is largely employed in perfumery. The fruit made into a confection is useful in habitual constipation. It is employed with much benefit in various complaints connected with digestive organs. Powdered dried roots mixed with an equal quantity of the powder of black sesamum removed of its black coating, forms an effecient remedy in strengthening the nerve cells of the brain and affording retentive memory. It has a wonderful virtue of bestowing super strength, vigour and life to the brain cells and fibres. The tree yields gum. It consists of different kinds as follows.

1. நில நெல்லி, lowly nelly—Phyllanthus madras patensis.
2. தோப்பு நெல்லி, garden nelly — Emblica officinalis.
3. காட்டு நெல்லி, the same as நெல்லி.
4. கரு நெல்லி, black honey shrub — Phyllanthus reticulatus.
5. கொடி நெல்லி, an unknown variety.
6. சீமை நெல்லி, Barbadoes cherry — Eugenia uniflora. 2. common ovate leaved Barbadoes cherry — Malpeghia coccigera.
7. அரு நெல்லி, *country star gooseberry* — Phyllanthus distichus.
8. செந் நெல்லி, a red variety of nelly (unidentified)
9. மேலா நெல்லி, same as No. 4.
10. கீழா நெல்லி, Indian annual phyllanthus —Phyllanthus niruri.
11. நீர் நெல்லி, same as No. 4.
12. சிறு நெல்லி, the same as No. 7.
13. வெண்ணெல்லி, white nelly — Phyllanthus Pendulous.

NOTE :— *Though No. 4 is botanically given* out as Phyllanthus reticulata it is not the one referred to in Siddhars Tamil Medicine See Tamil Materia Medica p. p. 65 and Bogar Nigandu (vocabulary) P. P. 297. It is a rejuvenating drug as described there in, said to be found only in forests. Item No. 5 is also an unknown variety but is known as also a rejuvenating drug. Nothing is known about item No. 8 which is a red variety.

நெல்லி, ஐங்காயம், which see; 2. காட்டுக் கீழா நெல்லி, same as பூலா, which see; 3. நாறுநெல்லி, same as முன்னை, which see; 4. பெருநெல்லி, same as நெல்லி, which see.

நெல்லிக்கந்தகம், see நெல்லிக்காய்க் கந்தகம், which see.

நெல்லிக்கந்தகம், See நெல்லிக்காய்க்கந்தகம்.

நெல்லிக்காயடை, பச்சை நெல்லிக்காயைக் கொட்டை நீக்கி அரைத்து அடையாகத் தட்டி காயவைத்தது, a thin round cake prepared by grinding the pulp of the fresh Indian goose berry and making it like a cake and drying it under the sun.

நெல்லிக்காயரிட்டம், நெல்லிக்காய் இரசம் அல்லது சாற்றை அடியிற்கண்டபடி புளிக்க வைத்து இறுத்த இரசம், மேற்படி இரசத்துடன் ⅛ பாகம் தேனையும் கூட்டி அதில் திப்பிலித் தூளும் சர்க்கரையும் சேர்த்து, கொதிக்க வைத்து, சாடியில் ஊற்றிப் புளிக்கும்படி சிலநாள் வைத்திருப்பது, இதை காமாலை, குன்மம், அசீரணம், இருமல் முதலியவைகளுக்குக் கொடுக்கலாம், fermented liquor of embolic myrobalan is prepared as follows :— Fresh juice of the fruit mixed with ⅛ quantity of honey, powdered long pepper and sugar is boiled sufficiently for a while and then allowed to ferment in an earthern jar. It is prescribed for jaundice, dyspepsia, indigestion, cough etc.

நெல்லிக்காயூறுகாய், பச்சை நெல்லிக்காயை உப்பிலிட்டு ஊறப்போட்டாவது, அல்லது முழுக்காயோடு உப்பும், மசாலையும் சேர்த்து நல்லெண்ணெயில் ஊறப்போட்டு பதப் படுத்தியாவது தயாரிக்கப்படுவது, prickle of embolic myrobalan simply soaked in common salt and condiments added to it and preserved in gingelly oil. The fruits may be preserved with the common salt only.

நெல்லிக்கா யெண்ணெய், நெல்லிக்காய்ச் சாற்றுடன் மற்ற கடைச்சரக்குகளை விதிப்படி கலந்து காய்ச்சி வடித்த தைலம், medicated oil prepared with the juice of embolic myrobalan as the chief ingredient with other bazaar drugs added to it and then boiled down as per rules laid down.

2. பிஞ்சு நெல்லிக்காயினின்று வடித்த எண்ணெய், இதனுல் தலைமயிர் வளரும், a fixed oil obtained from the berries has the effect of strengthening and promoting the growth of hair.

3. நெல்லி மரத்தின் இலைகளினின்று தயாரித்த எண்ணெய், இதை வாசனைச் சரக்குகளுடன் சேர்க்கப்படும், the essential oil extracted from or distilled from the leaves; it is largely employed in perfumery.

நெல்லிக்காய், நெல்லிமரத்தின் காய், இக்காய்க்குக் கொடிஎலுமிச்சம் பழத்திற்கேற்ற இரசம், குணம், வீரியம் இவைகளுண்டு, இது மஞ்சள் நிறம், நாருள்ளது, சதைப் பற்றிருக்கும், புளிப்பும் துவர்ப்பும் வாய்ந்தது, இதன் இடையே முக்கோணக் கொட்டையிருக்கும், இது குளிர்ச்சியைத் தரும், பித்தத்தை நீக்கும், இதை ஊறுகாய் போட்டுச் சாப்பிட பீனசம், வாந்தி, கபம், மலபந்தம், தலைசுற்றல் போம், ஆகவே, உணவில் இதை வடையாகவும், துவையல் அல்லது பச்சடியாகவும் செய்து சாப்பிட மேற்கண்ட நோய்களும், பைத்தியம், வாய்நீர் சுரப்பு, மலபந்தம், பிரமேகம் நீங்கும், இதன் வற்றல் கஷாயம் சூடு, பித்தமயக்கம், ஒக்காளம், அரோசிகம் முதலிய நோய்களைக் குணப் படுத்தும், இதன் காய்ந்த காய்கள் கொட்டையும் விதையும் இல்லாமலே கடைகளில் கிடைக்கும்.

இது சீதளகாரி, மூத்திர வர்த்தனகாரி, இலகுமலகாரி, உதரவாதகரகாரி, (எனப் பெயரால் வழங்கும்) உலர்ந்த காயோடு இரும்பைச் சேர்த்துக் கொடுக்க, சோகை, காமாலை, குன்மம் போம், பச்சை நெல்லியை அரைத்து, தொப்புளின் கீழ்ப்பூச நீர்க்கட்டு உடையும், உலர்ந்த நெல்லிக்காய் ஊரற் கஷாயம் கண்சிவப்பு முதலிய கண்ணோய்க் குபயோகிக்கலாம், the fruit of Indian goose berry — Emblica myrobalam. In essence quality and potency, it very much resembles thes lemon creeper. It is yellow, fibrous and fleshy. It is sour with astringency, in the centre will be found the nut triangular in shape. It is cooling and can remove biliousness. It is pickled and prescribed for catarrh of the nose, vomiting, phlegm, constipation and vertigo. In food it is used in different forms such as dried cakas, paste, chutney and pickles, when it is said to cure not only the above mentioned diseases but also insanity in salivation, constipation, urinary disorders etc. Decoction of dried cakes is a useful remedy for bodily heat, giddiness through bilious affections, nausea and loss of appetite. The dried fruit free from nut and seeds are being sold in the bazaars. The fruit is refrigerent, diuretic laxative and carmi-

native. The dried fruit mixed with iron is a valuable remedy in anemia, jaundice and dyspepsia. A paste of the fresh fruit is on useful external application over the public region in irritability of the bladder. An infusion of the dried fruit is used as a collyrium in ophthatmia, inflammation of the conjunctiva and other eye Complaints.

NOTE :— The laste of the pulp of the fruit is acid astringent and some what acrid. The dried fruit is about the size of a cob nut, wrinkled of a greyish black colour if collected when immature, but yellowish brown if mature. Fruit in fresh state has purgative properties but when dry astringent, contains a large proportion of gallic acid. The fruit is substituted for British gentian and calamba, it is used as an adjunct to hair dyes.

**நெல்லிக்காய்க் கந்தகம்,** நெல்லிக் காயைப் போல் மஞ்சள் நிறமான கந்தகம், இது படிகாரத்தைப்போல் துண்டு துண்டுகளாகக் கிடைக்கும், பிரகாசமான மஞ்சள் நிறமும் சிறிது பச்சை நிறமும் கலந்துள்ளது, கடையில் கிடைக்கும், எல்லாவித கந்தகத்தைப் பார்க்கிலும் இது மிக்க சுத்தமானது, பதார்த்த குணசிந்தாமணிப்படி இதற்கு 18, குட்டம், அலசம், வல்லைக்கட்டி, கவிசை, மகோதரம், குன்மம், தந்தநோய், மகாவிஷம், மேகநோய், வாதசுரம், வாதாதிசாரம், கபக்கிராணி, கபாதிக்கம் இவைகள் போம், myrobalan ghandac. It occurs in crystatline pieces like those of alum ( rhombic crystals ). It is of a bright yellow colour with a shade of green. It is considered as the purest of all forms of sulphur available in the markets and as such it is widely used in Tamil Medicine.

According to the Tamil Materia Medica, it is found to be a useful remedy in cases of eighteen kinds of cuteneous affections, indigestion in children, ovarian tumour, ascites, dropsy, dyspepsia, protrusion of the cornea, poisoning venereal complaints, rheumatic fever, diarrhoea through disorders of wind humour, chronic diarrhoea through phlegmatic causes, aggravated phlegm etc.

**நெல்லிக்காய்சர்பத்,** பச்சை நெல்லிக் காயினின்று தயாரிக்கும் சர்க்கரைப்பாகு சேர்ந்த ஓர் பானம், இது உடம்பிற்கு குளிர்ச்சியைத் தருவதுமல்லாமல் மூத்திரத்தைப் போக்கும், the shrup prepared from fresh fruit, it is a cooling drink which is said to have diuretic effect.

**நெல்லிக்காய்ச்சாறு,** பச்சை நெல்லிக் காயினின்று பிழிந்தசாறு, அதாவது இரசம், இதற்கு மலத்தை இளக்கி மூத்திரத்தைப் போக்கும் குணமுண்டு, குளிர்ச்சியையும் தரும், juice extracted from embolic myrobalam, it is a laxative and diuretic.

**நெல்லிக்காய்த் துவையல்,** பச்சை நெல்லிக் காயை அடுப்புக் கும்பியில் செருகி, நீர் வற்றியபின் கொட்டை நீக்கி அத்துடன் கொத்தமல்லியிலை, கொப்பரைத் தேங்காய், வெங்காயம், பூண்டு, உப்பு, பச்சை மிளகாய் முதலியவைகளைத் திட்டப்படி சேர்த்து, பழச்சாறு விட்டரைத்துத் துவையலாகச் செய்து தினப்படி சுண்டைக்காய்ப் பிரமாணம் சோற்றில் கூட்டியுண்ண, பசி தீபனத்தையும் உற்சாகத்தையும் கொடுத்து உடம்பின் சூட்டையும் பித்தத்தையும் தணிக்கும், condiment paste of embolic myrobalam. It is a paste prepared in the kitchen in the following manner. The fruit is *burried in the hot ashes of the oven and* taken out after sometime when the water is completely dried out. The nut is removed and to the pulp is added corriander leaves, dried cocoanut, onion, garlic, common salt, green chillies etc., and ground into a paste with the juice of lime or lemon. This paste of the size of chundai ( Indian current tomato ) taken daily mixed with food ( cooked rice ) is considered a stimulant and as promoting hunger or appetite. It is said to allay the bodily heat and excess of bile.

**நெல்லிக்காய்த்தைலம்,** see நெல்லிக்காயெண்ணெய்.

**நெல்லிக்காய்ப்பற்று,** கொட்டை நீக்கிய பச்சை நெல்லிக்காயை அரைத்துத் தொப்புளின் கீழ்ப் பற்றுப்போட மூத்திரப்பை அழற்சியைப் போக்கும், a paste of Indian goosberry after removing the nut is a useful external application over the pubic region in irritability or inaflmmation of the bladder.

**நெல்லிக்காய்முறப்பா,** நெல்லிக்காயைக் கொட்டை நீக்கித் தறித்துத் தேனிலிட்டு ஊறவைக்கும் ஓர் யுனனி மருந்துமுறை, இதனுல் சுரம், அரோசிகம், தாகம் போம், a Unani medical preparation in which the fresh embolic myrobalan is deprived of its nut and then cut in small pieces and preserved in honey the whole fruit is also preserved in honey.

**நெல்லிச்சாறு,** see நெல்லிக்காய்ச்சாறு.

**நெல்லிடை,** நெல்லினளவு, the weight of a paddy grain.

**நெல்லித்தாளி,** செம்பை, sesban — Coronilla sesban.

**நெல்லித்துத்தி,** ஓர்வகைத் துத்தி, an unknown variety of Indian mallow perhap mistaken for நிலத்துத்தி.

**நெல்லிப்பசை,** see நெல்லிக்காய்ப்பற்று.

**நெல்லிப்பருப்பு,** நெல்லிக் கொட்டையின் பருப்பு, the kernel inside the nut of embelic myrobalan.

**நெல்லிப்பூ,** நெல்லிமரத்தின் பூ, இது உஷ்ணத்தைத் தணித்து மலத்தை இளக்கும், flowers of embelic myrobalan. They are refrigerent and aperient.

**நெல்லிமாதிகம்,** நெல்லிப்பட்டை, the bark of Indian gooseberry tree — Emblica officinalis.

**நெல்லிமுளி,** see நெல்லிமுள்ளி.

**நெல்லிமுள்ளி,** பெருநெல்லி வற்றல், இதனுல் உடற்சூடு, சோபரோகம், ருதுதோஷம், அஸ்திசிராவம், தாம்பிரம், இரத்தபித்தம், விந்துநட்டம், பித்த வாந்தி, ஆண்குறிக் கொப்புளம், பிரமேகம் இவைகள் போம், இதைக் கஷாயமிட்டு சர்க்கரை கூட்டிக் கொடுக்க பெண்குறி எரிச்சல் அடங்கும், the dried fruit of Emblica officinalis. It is capable of curing internal heat, dropsy, haemorrhage, spermatoria, vomiting, gonorrhoea etc; 2. கற்பவகையிலொன்று, one of the rejuvenating drugs.

**நெல்லிமுள்ளி லேகியம்,** பெருநெல்லி வற்றலைக் கொண்டு செய்யும் லேகியம், இது அகத்தியர் வல்லாதிப்படி காமாலை, பித்த பாண்டு, சோகை முதலிய நோய்களுக்குக் கொடுக்கப்படும், an electuary prepared with the dried fruits of embelic myrobalan as the chief ingredient as per process laid down in Agastiya Vallathi. It is said to cure dropy anaenia etc.

**நெல்லிவற்றல்,** காயவைத்த நெல்லிக்காய், இது ஓர் கடைச்சரக்கு, இதில் துவர்ப்பு திராவகம் அதிக அளவில் இருப்பதால் இரத்த வொழுக்கை நிறுத்தும், அன்றியும் அதிசாரம், சீதபேதி இவைகளுக்குக் கொடுக்கக் குணமாகும், இதைத் தண்ணீரில் ஊறப்போட்டு வைத்து அத்தண்ணீரை இறுத்துக் கண்ணுக்கு உபயோகிக்கலாம், the dried fruit of embolic myrobalan. It is a bazaar drug containing a large proportion of gallic acid and is therefore very useful in haemorrhage, diarrhoea and dysentery. It is immersed in water for a whole night and the infusion so obtained is used as collyrium in opthalmia. துயில் நீங்கியவுடன் அதிகாலையில் நெல்லி, தான்றி, கடுக்காய் ஊறியநீரிலே சூடனைக் கரைத்துக் கண்ணைக் கழுவுவது தென்னுட்டுப் பழக்கம், People in the olden days washed their eyes in the early morning with the lotion of the cold infusion of gooseberry, chebula and belerica fruits mixed with camphor.

**நெல்லிவேர்,** நெல்லிமரத்தின் வேர், root of Emblica officinalis.

**நெல்லிற்புதைத்தல்,** நெல் மறைவில் புடமிடுதல், அதாவது நெல்லுக்குள் சிலநாள் புதைத்து வைத்தல், preserving by burying under the heap of paddy for sometime but generally for forty days.

**நெல்லு,** நெற்பயிர், paddy crops; 2. நெல், which see.

**நெல்லுப்புல்,** சாமை, millet

**நெல்லுப்பொரி,** see நெற்பொரி.

**நெல்வரகு,** ஓர்வகைப்பூடு, an unknown plant.

**நெழில்,** கொடிக்கொற்றுன், green thread creepor — Cassytha filiformis.

**நெளிசம்,** தங்கரளி, exile oleander — Tecoma staus.

**நெளிச்சல்,** வளைவு, curvature.

**நெளிதல்,** உடம்பை இருபக்கமும் மாறிமாறி அசைத்து வளைத்தல், moving and bending the sides of the body alternatively; 2. ஊர்ந்து செல்லல், crawling.

**நெளித்தகுண்டி,** பிட்டம் பின்பக்கம் மிகுதியாக வளைந்துகாணல், projecting buttocks.

**நெளித்தல்,** வளைத்தல், bending; 2. அசைத்தல், moving.

**நெளியலன்**, கூனன், hunch back ( male )

**நெளியலி**, கூனி, hunch back ( female ).

**நெளியன்**, ஓர்வகைப் புழு, a kind of worm; 2. ஓர்வகைக் கடல்மீன், a variety of sea fish.

**நெளிவு**, வளைவு, curvature; 2. வளைகை, the act of bending.

**நெளிவுசுளிவு**, இரகசியம் மர்மம், the secret.

**நெளிவெடுத்தல்**, வளைவு நீக்குதல், removing the curvature and making straight.

**நெறி**, கண்மண்டைக் குழி, the socket of the eye; 2. சன்மார்க்கம், virtuous path, moral ways; 3. சுளுக்கு, sprain; 4. நெறிக்கட்டி, sympathetic gland, lymph gland; 5. புருவநெறி, shrink of the eye brows; 6. வாழைப் பட்டையின் உள்ப்பாகம், the inner side of the plantain bark; 7. குணம், quality; 8. மார்க்கம், path; 9. வளைவு, bend; 10. சுருள், fold; 11. விதி, rule; 12. நல்லொழுக்கம், good behaviour; 13. மனநிலை, state of mind.

**நெறிகட்டி**, see நெறிக்கட்டி.

**நெறிக்கட்டி**, காயம், விரணம், புண் இவைகள் காணும் காலத்தில் அதற்கு சார்பாக உடற்சந்து அரை, அக்குள், கழுத்து முதலான இடங்களில் கட்டியைப்போல் திரண்டு காணும் ஓர் சோஷண கிரந்தி வீக்கம் ( வபா குறும்பி வீக்கம் ), a bubo or swelling caused by injury, wound, sore etc., due to irritation, friction etc., and not arising from infection — Sympathetic bubo.

**நெறிக்கட்டிக் காய்ச்சல்**, யானைக்கால் அல்லது யானைப்பிடுக்கு காண்பதற்கு முன்னம் இரண்டு தொடைச்சந்தில் நெறிகட்டிக் காய்ச்சல் ( சுரம் ) ஏற்படும், filarial fever; fever accompanying the swelling of the lymph glands.

**நெறிக்கட்டு**, see நெறிக்கட்டி.

**நெறிக்கல்**, சுக்கான்கல், lime stone.

**நெறிக்காய்ச்சல்**, see நெறிக்கட்டிக் காய்ச்சல்.

**நெறிக்கோரை**, நெறிகெட்டிக் கோரை, a kind of sedge grass — Pith grass.

**நெறித்தல்**, புருவத்தை வளைத்தல், shrinking the eye brows; 2. முறியும்படி செய்தல், as குரல்வளை நெறித்தல், crushing or fracturing; 3. ஒடித்தல், breaking; 4. வளைத்தல், bending; 5 மயிர் சுருளல் curling of the hairs; 6. செவ்வேநிற்றல், standing erect.

**நெறிநீர்**, கடல், ocean; sea.

**நெறிப்பு**, சிலிர்ப்பு, sprouting; 2. முரிப்பு, break; 3. நிமிர்ந்திருக்கை, being erect.

**நெறிமயிர்**, சிலிர்த்தமயிர், hair standing on ends.

**நெறியாணங்கை**, see சிறியாணங்கை.

**நெறிவிஷம்**, கொடியவிஷம், virulent poison; 2. see நிருவிஷம்.

**நெறுதழநாவி**, அலரி, oleander.

**நெறுமுதல்**, கடித்தல், biting; 2. பல்லால் நசித்தல், injury by biting.

**நெறுநெறெனல்**, பல்லை ஓசையுறும்படி கடித்தல், gnauring the teeth; biting repeatedly, grinding teeth while sleeping.

**நெறுநெறுவென்று கடித்தல்**, See நெறுநெறெனல்.

**நெற்கடை**, ஒரு நெல்லளவு கொண்ட இடம், space occupied by a paddy.

**நெற்கனம்**, நெல் பருமன், as thick as paddy.

**நெற்காரிகம்**, கருங்குருவை, red rice having husk.

**நெற்குண்டி**, நிர்க்குண்டி, which see.

**நெற்குருவை**, see நெற்காரிகம்.

**நெற்குழியிலிடல்**, see நெல்லிற்புதைத்தல்.

**நெற்கூர்**, நெல்லின்வால், the tail end of paddy.

**நெற்சப்பி**, நெற்பயிரைக் கெடுக்கும் ஓர் புல், a kind of grass affecting the growth of paddy as weed.

**நெற்சோளம்**, இருங்குசோளம், which see.

**நெற்பழம்**, மதத்தினுல் வெடித்தநெல், a split paddy from its fertility.

**நெற்பாசினி**, சுணைவெண்டை, bendy ( ladies finger ) covered with rough hairs as opposed to smooth bendy.

**நெற்பிரமாணம்**, நெல்லளவு, இது 8 எள் கொண்ட அளவு, size of paddy which is equivalent to that of 8 sesamum seeds.

**நெற்பு**, சீழ், pus; 2. மெலிவு, weakness.

**நெற்புகொள்ளல்**, சீழ்கொள்ளல், the process or state of suppurating or producing pus as in a wound or abscess; 2. பால் கொள்ளல், pustules containing pus as in small pox.

**நெற்புடம்**, தயாரித்த மருந்துகளையும், தைல வர்க்கங்களையும் 1 வருடம் சென்ற பழைய நெல்லுக்குள் 40 நாள் புதைத்து வைத்துப் பிறகு எடுக்கும் ஓர் சுத்தி முறை, a process or method of purification of prepared medicines and medicated oils which are kept buried under heaps of one year old paddy for a period of forty days.

**நெற்பொரி**, நெல்லைச் சூடுகாட்டி வறுப்பதினால் உண்டாகும் பொரிந்து மலர்ந்த அரிசி, இதனால் அதிதாகம், மந்தாக்கினி, மதரோகம், மூர்ச்சை, அரோசிகம் போம், fried or parched paddy from which is derived expanded rice. It is said to cure excess thirst, loss of appetite, nausea, corpulency and fainting. It is a good diet for small pox patients.

**நெற்பொரிக்கஞ்சி**, நெற்பொரியினால் மலர்ந்த அரிசியைக் கொண்டு காய்ச்சும் கஞ்சி, இதைப் பலவீன நோயாளிகளுக்குக் கொடுக்க எளிதில் சீரணமாகும், பசியின் களைப்பையாற்றும், இதனால் உஷ்ணம், பைத்திய தோஷம், வயிற்றுச்சிக்கல் மார்பு நோய்போம், the boiled conjee prepared from the expanded rice of the fried paddy is very useful for debilitated patients. It is easily digestible and affords much relief to patients tired of hunger.

**நெற்பொரிமாக்காடி**, நெற்பொரியை மாவாக அரைத்துத் தண்ணீரில் கரைத்துப் புளிக்க வைத்த காடி, a fermented liquor prepared out of a solution of expanded rice flour.

**நெற்பொரியுருண்டை**, பொரியை வெல்லப் பாகிலிட்டுப் பிடித்தவுருண்டை, ball of a expanded rice of fried paddy mixed with jaggery syrup.

**நெற்போலாகி**, மூக்கறட்டை, cat's jasmine — Boerhaevia repens alias B. diandra.

**நெற்றலி**, ஓர் சிறுமீன், a small fish, see நெய்த்தோலி.

**நெற்றி**, புருவத்திற்கு மேலுள்ள முகத்தின் பகுதி, the part of the face above the eye brows — fore head; 2. தலையின் முற்பகுதி, the front part of the head, forehead; 3. ஆகாயம், sky; 4. முன்பக்கம், front portion.

**நெற்றிக்கண்**, ஞானக்கண், ( in Psychology ) eye of wisdom third eye; 2. சுழிமுனை, ( in yoga philosophy ) the part between the eye brows. It is a place gazed at by yogis for concentrating mind.

**நெற்றிக்கண்ணன்**, சிவனார் வேம்பு, Shiva's neem — Indigofera aspalathoides.

**நெற்றித்தலம்**, நெற்றியின் பகுதி, the region of fore head.

**நெற்றிநாளம்**, நெற்றியின் நடுவே யோடும் இரண்டு நாளம், a pair of veins which run down the middle line of forehead — Frontal vein.

**நெற்றிப்பற்று**, தலைவலி, மண்டைக்குத்தல் முதலிய நோய்களுக்கு நெற்றியில் போடும் மருந்துப்பற்று, an ointment, or liniment or paste applied to forehead in cases of head ache cold, neuralgia and other nervous gffections.

**நெற்றிப்பார்வை**, ஞானதிருஷ்டி, second thought.

**நெற்றிப்பால்**, நெற்றிக்குப் பற்றுபோடும் முலைப்பால், woman's breast milk as a linement to the forehead. It reduces the temperature.

**நெற்றிப்புருவம்**, கண்புருவம், eye brow.

**நெற்றிப்புல்**.

**நெற்றிமூஞ்சி**, see நெற்றிக்கண்.

**நெற்றியுதயம்**, பிரசவத்தில் ஏற்படும் நெற்றி உதயம், ( in Midwifery ) presentation of forehead in delivery.

**நெற்றியெலும்பு**, நெற்றியிலுள்ள எலும்பு, bones of the forehead — Osfrontis.

**நெற்றியோடு**, see நெற்றியெலும்பு.

**நெற்றிலி**, see நெய்த்தோலி.

**நெற்று**, உலர்ந்தபழம், dried well riped fruit or nut; 2. பழமுதிர்ச்சி, maturity or ripeness of the fruit; 3. முதிர்ந்து காய்ந்த காய், அதாவது கொப்பரை, dried well matured cocoanut fit for planting.

**நெற்றுதல்**, முதிர்ந்து உலர்தல், becoming matured and dried.

**நென்மணி**, நெல்லிடை, 3/8 of a grain weight used by gold smiths.

**நென்மா**, அரிசிமாவு, rice flour.

**நே,** நேசம், love, affection; 2. ஈரம், moisture.

**நேக,** மிகப்பொடியாக, state of fine powder; 2. நேர்மையாக as நேக வரைத்தல், fine state, as in grinding.

**நேகவரைத்தல்,** நன்றாகத் தூளாகும்படி அரைத்தல், reducing to dust or fine powder when grinding, pulverising, machined into a pulp.

**நேசத்தி,** பேய்க்கடலை, bitter bengal gram.

**நேசயம்,** நிலப்பனை, ground palm — Curculigo orchioides.

**நேசல்,** பொடிமணல், fine sand.

**நேடன்,** நாவல்மரம், jaumoon tree — Eugenia jambolina.

**நேடி,** மூங்கில், bamboo.

**நேட்டகாதுவரப்பி,** இலவம்பிசின், gum of silk cotton tree — Bombax malabarica.

**நேத்தி,** நேர்த்தி, beauty; 2. துத்தம், vitriol.

**நேத்திர அபிசியந்தம்,** ஓர் கண் நோய், இதற்கு கற்பூரசிலாசத்து, கடுக்காய், மரமஞ்சள், காவிக்கல், இந்துப்பு, சமனிடையாக சலத்திலரைத்து கண்களுக்குப் பற்று போட அபிசியந்தம் குணப்படும், an eye disease. It is cured by applying of a paste of the drugs mentioned above with water.

**நேத்திர உபத்திர வாதம்,** see கண்மயக்கு வாதம்.

**நேத்திரகண்டு,** கண்தினவு, itching of the eye.

**நேத்திரகமலி,** நேத்திரஞ்சிமிட்டி, a kind of plant, see கண்சிமிட்டிப்பூடு.

**நேத்திரகாசம்,** கண் காசம், cataract; 2. கண் பூ, opacity of the cornea, see கண் காசம்.

**நேத்திரக்கடுப்பு,** கண்கடுப்பு, irritation of the eyes

**நேத்திரக்கழுநீர்,** கண்ணோயில் கண்ணைக் கழுவ உபயோகிக்கும் ஓர் மருந்து நீர், lotion for cleaning the diseased eye — eye wash

**நேத்திரக்குத்தல்,** கண் குத்தல், penetrating or pin prick pain in the eye.

**நேத்திரக்குமுதம்,** கண்ணின் கருவிழியிற் சதை வளர்ச்சி, morbid growth of flesh over the pupil or in the black of the eye.

**நேத்திரங்காட்டி,** see நேத்திரநாயகம்.

**நேத்திரசம்,** கண்ணீர், tears.

**நேத்திரசிராவம்,** கண்ணினின்று நீரும் பீளையும் வடிந்துகொண்டிருக்கும் ஓர்வகைக் கண்ணோய், an eye disease marked by slimy secretion and mucopurulent discharge from the the eyes.

**நேத்திரசுக்கிலம்,** கண்ணினின்று விந்துவைப்போல் வெண்மையான பிசுபிசுப்புள்ள நீர் வடியும் கண்ணோய், an eye disease attended with white slimy secretion from the eyes.

**நேத்திரசூலை,** கண்ணிலுண்டாகும் குத்தல் வலி, acute pain in the eyes — Ophthal modynia.

**நேத்திரச்சுடர்,** கற்பூரம், camphor.

**நேத்திர தாரகா மண்டலம்,** கருவிழி, black of the eye.

**நேத்திரத்தம்பம்,** வாதத்தினால் கண் விழி உணர்ச்சியறல், paralysis of the eye.

**நேத்திரத்தம்பவாதம்,** கண்களைக் கையால் தடவிப்பார்க்கில் ஓட்டாங் கிளிஞ்சலைப் போல் தோற்றும்படி தம்பிக்கும் ஓர்வகைக் கண்ணோய்; இது வாதத்தால் ஏற்படும், a disease in which the eye ball is so hardened that when touched, it makes one feel as if it is a bivalve shell. It is said to be due to windly humour of the system.

**நேத்திரத்தம்பவாதம்,** உணவு நடை முதலிய ஆற்றங்களின்முல் விழிகளின் மூலத்தில் வாயு அதிகரித்து, கண் புருவம், இமையாகிய இடங்களில் உணர்ச்சியற்று, கண்களைத் தம்பிக்கச் செய்யும் ஓர்வகை வாத நோய்; இதை வடமொழியில் திர்க்குஸ்தம்ப வாதம் என்பர், an eye disease marked by loss of sensation in the eye brows, eye lids and the pupil It is a kind of paralysis of the muscles of the eyes said to be due derangement of windy humour of the system arising from the errors in diet and defects of physical functions.

**நேத்திரத்தர்ப்பணம்,** கண்ணோயைக்குப்பொதுவாகச் செய்யும் ஓர் ஆயுள்வேத சிகிச்சை; அதாவது காற்றோட்டம், தும்பு, தூசி இவைகளில்லாவிடத்தில் நோயாளியை படுக்க வைத்து உளுத்த மாவை தண்ணீரில் பிசைந்து இரண்டு கண்களைச் சுற்றிலும் பற்றுப்போட்டு, கண்களை மூடிக்கொண்டு இளஞ்சூடுள்ள நெய்யை இரப்பை அமிழும் வரை ஊற்றியபின் கண்களை மெள்ளமெள்ளத் திறந்துவிடச் செய்யுமோர் சிகிச்சை முறை, a treatment given in general to the diseases of the eye according to the process of Ayurveda. It is as follows. The patient is made to be down in a dustless room where there is no breeze. The flour of black gram mixed water is applied around the eyes and a lukewarm cow's ghee is poured on the eyes till the eye lids get completely immersed or covered with ghee. Then, the eyes are opened frequently so as to allow the ghee enter into the eyes.

**நேத்திரத்திமிர்,** கண் திமிரம், loss of vision or blindness due to the affection or loss of sensation in the optic nerve — Amanvosis.

**நேத்திரத்துலக்கம்,** கண்விளக்கம், clearness of vision

**நேத்திரத்தோஷம்,** கண்ணுக்குரிய அல்லது வேறு காரணங்களினால ஏற்படும் குற்றங்கள், natural or cangenital predisposition to diseases of the eye; 2. பார்வை தோஷம், evil effects of malignant eyes.

**நேத்திர நரம்பு,** கண்ணரம்பு, nerves of the eye — Eye string.

**நேத்திரநாசி,** பொன்னாங்காணி, an edible green bearing white flowers, sessible plant — Illecibrum sessile

**நேத்திரநாடி,** வாதாதி தோஷங்கள், நரம்புகளின் மார்க்கத்தினால் விழிச்சந்தில் புகுந்து தோஷங்களின் பிரகோபத்தின்படி இரத்தம் அல்லது சீழைவடியச் செய்யும்; இது நான்குவிதப்படும், அவையாவன; a disease of the eye marked by discharge of blood or pus It is said to be due to aggravated or exciting conditions of three humours in the interspaces between the eyelid and the eye ball.

1. இமைச் சந்தில் வீக்கம் உண்டாகி, பழுத்துடைந்து சீழ் வடிந்து சன்னிபாத லட்சணத்துடன் கூடியிருந்தால் பூயசிராவம் என்று பெயர்.

2. வெண்மையாயும் கடினமாயும் சீதம் போல் சீழ்வடிந்தால் சிலேட்டும் சிரவம் என்றும்.

3. இரத்தப் பிரகோபத்தினால் அதிகமாயும் சூடாயும் இரத்தம் வடிந்தால் இரத்தச் சிராவம் என்றும்.

4. இமைச் சந்தில் மஞ்சள் நிறமாயும் உஷ்ணமாயும் நீர் வடிந்தால் பித்த சிராவமென்றும் பெயர், The above are the four varieties of the disease marked by various symptoms.

**நேத்திரநாயகம்,** கண்கட்டிப்பூடு, a plant used in the abscess of the eye lids.

**நேத்திரநிருமாலி,** சிறு சண்பகம், cananga flower tree — Canagium odaratum.

**நேத்திரநோக்கம்,** கண்பார்வை, eye sight, vision.

**நேத்திரநோய்,** கண்ணோய், disease of the eye in general; 2. கண்வலி, pain in the eye.

**நேத்திரபரியந்தம்,** கடைக்கண், corner of the eye.

**நேத்திரபிந்து,** கண்ணுக்கு விடும் திராவக மருந்து, eye drops; 2. கண் சிவப்பு, inflammation of the eye — Ophthalmia.

**நேத்திரபுட்பி,** செங்கத்தாரி, false peacock's foot tree — Niebuhria linearis.

**நேத்திரபூஷணம்,** அன்னபேதி, sulphate of iron.

**நேத்திரபூனை,** கண்பீளைச்செடி, long leaved trumpet plant — Dolichondrone rheedi.

**நேத்திரபோஷஜம்,** கண்வைத்தியம், ophthalmic treatment — Eye infirmery.

**நேத்திரபேதி,** கண்களில் நிற்கும் துர்நீர்கள் கழலும்படி கண்ணுக்குத் தடவுமருந்து, a collyrium to the eyes for purposes of bring out the collection of morbid fluid.

**நேத்திரப்பச்சை,** கதிர்ப்பச்சை, a fragrant plant used in perfumes.

**நேத்திரப்படலம்,** வெள்விழியில் மாசுபடரும் ஓர்வகைக் கண்ணோய், coats or films over the sclerotic of the eye.

**நேத்திரப்பால்,** பனங்கள், palmyra toddy.

**நேத்திரப்பிண்டம்,** கண்விழி, eye ball.

**நேத்திரப்பிளவை,** deep abscess in the eye.

**நேத்திரப்புகை,** கண்புகைச்சல், smoky affection of the eye.

**நேத்திரமஞ்சம்,** மினிறை, an unknown plant.

**நேத்திரமருத்துவம்,** கண்வைத்தியம், ophthalmic treatment.

**நேத்திரமலம்,** கண்பீளை, gummy secretions from the eye-muco purulence.

**நேத்திரமாலி,** சிறுசண்பகம், cananga flower tree — Canangium odoratum.

**நேத்திரம்,** கண், eye; 2. கண்வேர், nerves and blood vessels of the eye; 3. மருந்துகளை ஆசனவழியாய் உள்ளே புகட்டுவதற்காக அமைத்த ஓர் கருவி, an apparatus for introducing or throwing liquid into the rectum — Enema can.

**நேத்திரராசி,** இருவாட்சி, a kind of jasmine — Jasminum sambae ( flore manorae pleno )

**நேத்திரரோகம்,** கண்ணோய், disease of the eye in general.

**நேத்திரரோகாக்கினி,** தேற்றுங் கொட்டை, water clearing nut — Strychnos potatorum.

**நேத்திரவர்த்தமம்,** கண்ணிமை, eye laid; 2. கண்ணிமைரோகம், diseases of the eye lid; 3. கண்ணின் துவாரம் அல்லது புரை, the course of a sinus or cavity occuring in the region of the eyes.

**நேத்திரவலி,** கண்வலி, eye pain; 2 கண்வலிப்பூஞ்செடி, a flowering plant used in eye disease; 3. கண் சிவத்தல், inflammation of the eye — Ophthalmia.

**நேத்திரவாயு,** வாயுக் கோளாறினுலேற்படும் கண்ணோய், a disease of the eye due to the derangement of Vayu in the system inflammation of the eyes — Ophthalmia.

**நேத்திரவாயு,** கண்ணரம்புவாயு, wind humour affecting the eye.

**நேத்திரவாரி,** கண்ணீர், tears.

**நேத்திரவாழை,** வாழையிற் கடைப்பட்ட சாதி, இது மேற்றிசைக் கடற்கரைத் தேசங்களில் ( மலையாளத்தில் ) விளையும், நோயணுகாதிருக்க வேண்டி இதைச்சுட்டுக் கறி சமைப்பார்கள், an inferior species of plantain tree grown in the western coast ( Malabar ). It is baked and used in curries as a preventive for diseases. Chips prepared out of it are very tasty, ripe fruits are also eaten.

**நேத்திரவிதி,** நயனவிதி, அதாவது கண்ணோய்களைப் பற்றியநூல், the science relating to the diseases of the eye — Ophthamology.

**நேத்திரவிரணம்,** கண்ணின்விரணம், ulceration of the eye.

**நேத்திரவிரணம்போக்கி,** காட்டுச்சதகுப்பை, இதுவே சதகுப்பை சக்களத்தி, a plant akin to common dill — Anethum graveolens. It is a bazaar drug.

**நேத்திரவுபத்திரவாதம்,** see கண்மயக்கு வாதம்.

**நேத்திரவைத்தியம்,** கண்வைத்தியம், ophthalmic treatment.

**நேத்திரவைத்தியன்,** கண்வைத்தியன், one skilled in diseases of the eye — Oculist.

**நேத்திராஞ்சனம்,** கண்மருந்து, collyrium for the eye salve; 2. இமையைப்பற்றிய ஓர் வகைக் கண்ணோய், a disease of the eye lid — Blepharo atheroma; 3. கண்ணிலிடும் ஓர் மாந்திரீக மை, a magic paint used for finding hidden treasures by applying it to the eyes.

**நேத்திராஞ்சனம்,** நாகசிந்தூரம், இரசகற்பூரம், வெண்காரம், சவ்விராஞ்சனம், படிகாரம், தாம்பூர பற்பம், அயசிந்தூரம், பச்சைக் கற்பூரம், கடுகுரோகணி, தேத்தாங கொட்டை, இந்துப்பு, பால்துத்தம், திரிகடுகு, திரிபலம், அதிமதுரம் சமயிடை கொண்டு புங்கம்பட்டைச் சாற்றிலரைத்து மாத்திரை செய்து கண்ணிற்கிடும் கலிங்கம், இதனால் கருட திருஷ்டிக்குச் சமானமான பார்வையுண்டாகும், a pill rubbed with water and applied to the eyes to improve its vision. It is prepared with various drugs as mentioned in the text above.

**நேத்திராதி,** நோக்கு நோக்கிச் செடி, an unknown plant probably used to improve the vision.

**நேத்திராமயம்,** கண் முழுவதும் பற்றிய நோய், a disease affecting the whole eye.

**நேத்திராமியம்,** நேத்திராமயம், which see.

**நேத்திராம்பு**, கண்ணீர், tears.

**நேத்திராரி**, கள்ளிமரம், any spurge tree—Euphorbia genus.

**நேத்திராவுடதம்**, கண்மருந்து, eye medicines — Collyrium eye salve.

**நேத்திரௌஷதம்**, நேத்திராவுடதம், medicines applicable to the diseases of the eye.

**நேந்தாடுபாவை**, see சேந்தாடுபாவை, an unknown plant.

**நேந்திரம்**, ஓர் வகை வாழை, see நேந்திர வாழை.

**நேபம்**, கண்ணீர், tears; 2. தண்ணீர், ordinary water.

**நேபாலிகை**, ஓர் வகை பாஷாணம், a kind of poison perhaps arsenic found in Nepaul.

**நேபாளக் கரும்பு**, நேபாள தேசத்தில் விளையும் கரும்பு, sugar cane grown in Nepaul.

**நேபாளங்கொட்டை**, நேர்வாளங்கொட்டை,

**நேபாளசம்**, ஓர் வகை களிம்பேறிய செம்பு, இது நேபாளத்தில் அகப்படுவதுபோலும், a kind of impure copper probably found in Nepaul.

NOTE:— This kind of copper is supposed to contain less of verdigris and as such it is generally used in medicinal preparations. In the other kind 'milecham' (மிலேச்சம்), it is very difficult to remove the verdigris as it will always remain black even after cleansing process.

**நேபாளம்**, நேர்வாளம், purgative plant — Croton tigilium; 2. சிமை யாமணக்கு, Nepaul castor plant — Balios permum montana alias croton polyandrum.

**நேபாள வேம்பு**, நேபாளத்தில் விளையும் வேப்பமரம், margosa tree of Nepaul.

**நேபாளி**, இருவாட்சி, see நேத்திரராசி.

**நேமநாற்சுகம்**, கருப்பு அகரம், a bazaar drug.

**நேமம்**, சாயுங்காலம், evening time; 2. பங்கு share; 3. வேர், root; 4. காலம், period; 5. பாதி, half.

**நேமி**, கடல், ocean; 2. பத்தியம், diet. 3. பூமி, earth; 4. மூங்கில், bamboo; 5. சக்கரவாகப்புள், the ruddy goose; 6. எலிச்செவிப்பூடு; rat's ear plant — Ipomaea *reniformis alias Evolvulous emarginatus*; 7. சந்தனம், sandal wood; 8. வேங்கை, East Indian Kino — Ptercarpus marsupium; 9. பழமுண்ணிப்பாலை, edible palay — Minusops kanki.

**நேமி**, தேர்மரம், தேர்கட்ட உபயோகப்படுவதால் இப்பெயர், இதினின்று சிவப்பு துவர்ப்புப் பிசின் எடுக்கப்படும், இதன் பட்டை குடல் வியாதிக்குபயோகமாகும் மரத்திலிருந்து ஓர்வித அயச்சத்து எடுக்கப்படும், chariot tree — Dalbergia oojeinesis so called from its usefulness for making chariots. Gives astringent red gum; bark is useful in bowel complaints. A crystalline *substance like magnesia is sometimes* found in the wood.

**நேமிசந்தனு**, வேங்கை; see நேமி.

**நேமிசாரம்**, சத்திசாரம், which see.

**நேமிப்புள்**, சக்கிரவாகப்புல், the *ruddy grass*.

**நேமியங்கனி**, திராட்சை, grapes — Vitis vinifera.

**நேமியம்**, நிலப்பனை, ground palm — Curculigo orchioides.

**நேயமரம்**, ஊக்கினுமரம், an unknown tree.

**நேயம்**, எண்ணெய், gingelly oil; 2. நெய், ghee; 3. நிலப்பனை, see நேமியம்; 4. பனைமரம், palmyra tree — Borassus filiformis; 5 சுக்கிலம், semen; 6. நேசம், love, affection.

**நேயா**, see நேயமரம்; 2. பெருமருந்து; Indian birth wort — Aristolochia indica.

**நேரகாலம்**, தற்பொழுது, present time; 2. கெடுதியான காலம், bad or evil time; 3. விதிகாலம், fateful days.

**நேரக்களி**, ஓர் அங்கக்கிரியை, see நௌரக் களி.

**நேரங்காட்டி**, சூரிய காந்திச்செடி, sunflower plant — Helianthus indicus.

**நேரடம்**, நாவல், Jaumoon — Eugenia jambolina.

**நேரம்**, காலம், time; 2. முன்நேரம், fore-noon; 3. பின்நேரம், after noon; 4. குறித்த காலம், appointed time.

**நேரளேதாளி**,

**நேராக**, சமமாக, equally; 2. சமநிறையாக, equal weight.

**நேராக்குதல்**, சம அளவாகச் செய்தல், equalising, 2. நேராகச் செய்தல், straightening.

**நேரியல்**, மிளகு, black pepper — Piper nigrum.

**நேரிளமிகுதி**, சூனியம், non entity. nothingness.

**நேரேடம்**, நாவல்மரம், see நேரடம்.

**நேரேடு**, நேரேடம், which see.

**நேரேயிருக்க வொட்டாமை**, கிடைகொடுக்காமை, restlessness.

**நேரொத்ததூமம்**, குருந்தக்கல், a variety of corundum — Emery.

**நேர்**, பாதி, half; 2. நேர்தல், growing thin, emaciating; 3. சம்பவித்தல், happening, occurring.

**நேர்கூட்டல்**, சமன் சேர்த்தல், adding equal quantity.

**நேர்தட்டை**, நெட்டி, solah pith.

**நேர்தவம்**, வாய்க்காற் சடைச்சி, a kind of pith plant found near Channels.

**நேர்நஞ்சு**, கல்மதம், rock alum; bitumen.

**நேர்நெட்டி**, நீளநெட்டி, long pith.

**நேர்நேர்கூட்டல்**, சமபாகமாகக் கூட்டுதல், adding or mixing in equal quantities.

**நேர்ந்தகழுத்து**, மெலிந்த கழுத்து, slender neck — Angusticollis.

**நேர்ந்துபோதல்**, இளைத்துப்போதல், becoming emaciated.

**நேர்பிடித்தல்**, சாகுதல், dying; 2. முடிவாதல், coming to an end.

**நேர்ப்பிசின்**, ஓர் செடி, பூவின் அழகையும் வாசனையையும் கருதி இதைத் தோட்டங்களில் வைத்துப் பயிராக்கப்படும், இலைகள் பெரியன, வேர் உட்டுளையுள்ளது, பூக்கள் நெருங்கவிருக்கும், வாசனை பொருந்தியவை, வெண்மையும் ஊதாவும் கலந்த நிறம், இலைகள் உதிர்ந்து விடும், வேர் விரல் பருமனுள்ளது, சித்திரையில் பூக்கும், வேர் வெளிப்புறம் சாம்பல் நிறம், உட்புறம் வெண்மை, இஞ்சி வாசனை, நாவிற்கு இஞ்சியைப்போல் உறைப்பாயிருக்கும், இதன் சமூலத்தைப் பொடி செய்து புற்று புண்களுக்குத் தடவ ஆறும், வீக்கத்தை வாங்கும், உள்ளுக்குச் சாப்பிட புண்ணின் இரத்தக் கட்டை உடைத்துச் சுத்தி செய்யும், வேர், துர்நீர் சேர்ந்த பாண்டு முதலிய வீக்கத்திற்குபயோகிக்கலாம், a false zedoary — Kempperia rotunda. It is a deciduous plant much cultivated in gardens for the beauty and fragrance of its flowers, root tuberous, flowers large, fragrant, purplish white. When in flower, the plant is destitute of leaves, root is about the thickness of a finger, flowering in April, root ash coloured outside and white inside. The whole plant is reduced into powder and used as an ointment to wounds and bruesis and for cancerous ulcers, reduce swellings, taken internally as decoction will remove coagulated or any purulent matter. The root is useful in anasareous swellings, it has a hot ginger taste.

NOTE :— It is a plant with round leaves and fragrant flowers. The almost globular roots have an aromatie camphoraceous taste, some what resembling zedoary. The fresh bruised tubers are good for reducing the swellings of wounds.

**நேர்முட்டுசெடிச்சி**, பேய்த்தும்பை, bitter leucas.

**நேர்மை**, நுண்மை, minuteness; fineness.

**நேர்மையாய் நுணுக்கல்**, சன்னத்தூளாக்கல், reducing to fine powder pulverising.

**நேர்வளாந்தான்**, சுக்கு, dried ginger.

**நேர்வாளக்கொட்டை**, நேர்வாளப் பருப்பின் கொட்டை, croton seed or nut.

**நேர்வாளசுத்தி,** பசுஞ்சாணியைக் கரைத்து அதில் கொட்டையைப் போட்டு வேக வைத்து எடுத்து மேற்றோல் நீக்கி உள்ளிருக்கும் பருப்பைப் பிளந்து முளையை நீக்கி பிறகு பருப்பை முடிச்சுக்கட்டி பால் உலையி லிட்ட நொய்யரிசி வெந்தபதத்தில் முடிச்சை யெடுத்துப் பருப்பை அலம்பி எலுமிச்சம் பழச்சாற்றில் ஒரு நாள் ஊறப்போட்டு எடுத்து, பிறகு நெய்யில் வறுக்கச் சுத்தியாம்; 2. ஒருபலம் நேர்வாளத்தை சிறிது நேரம் வெய்யிலிலுலர்த்தி ஓட்டை உடைத்து உள்ளிருக்கும் பருப்பை யெடுத்து துணியில் தளர்த்தியாக முடிந்து ஒரு மட்பாண்டத்தில் போட்டு அதில் எருமைச் சாணி, எருமை மூத்திரம் விட்டு அதற்குச் சரியாக கரிசாலைச்சாறு, ஆற்றுசலம் விட்டு அடுப்பின் மேலேற்றி நன்றாய் வேகும்வரை எரித்து இறக்கி வெந்த பருப்பைச் சலம் விட்டு அலசிக்கழுவி அதை இரண்டாய்ப் பிளந்து உள்ளிருக்கும் முளையைக் களைந்து கழுவியுலர்த்திய பின் எலுமிச்சைச் சாற்றில் ஊறப்போட்டுப் பிறகு சட்டியிலிட்டு சிறுக வறுத்துக் கொள்ளவும், இதுவே சுத்தி முறை, பிறகு மருந்தில் சேர்க்கலாம், two methods or processes of purifying the croton seeds are given here. 1. Croton seeds are boiled in the cow dung solution. Then the shell is removed and the cotyledons together with plumule that are inside the pulp are also removed. The pulp is then bundled and boiled along with broken rice in milk. When the broken rice is cooked the bundle is taken out and the pulp is washed in water and soaked in the juice of lime fruit for a day. Then it is fried in cow's Ghee. 2. The seeds are dried and the shell is removed. The pulp is lookely bundled and boiled in the solution of buffalo's urine and dung and the juice of eclipse plant and river water. After it is cooked, it is taken out, the pulp is washed in water and the plumule with cotyledons ( first leaves ) are removed and dried. Then it is soaked in the juice of lime fruit for a day and then fried and taken for use.

**நேர்வாளபூசு தைலம்,** நேர்வாளத் தெண்ணெய், இது மேற்பூச்சு மருந்தாக உபயோகப்படும், oil extracted from croton seed. It is used as liniment.

**நேர்வாளமரம்,** நேர்வாளக்கொட்டை, மரம், இது ஓர் சிறிய மரம், பரவிய சில கிளைகள் வாய்ந்தது, இலைகள் மாறிமாறியும் அண்டவடிவாயும், கோணங்கள் வாய்ந்ததும் வளவளப்பாயுமிருக்கும், இலையின் அடிப்பக்கம் 3 - 5 நரம்புகளோடியது, கொழுந்தோ மொசு மொசுப்பாயிருக்கும், பூவிதழ் 5. கூர்மையாகவிருக்கும், ஆண்பூமேலாகவும், பெண்பூகீழாகவும் உள்ளன, விதைகள் ஒரு பக்கம் மேடாகவிருக்கும், இது ஓடு கவர்ந்துள்ளது, பூக்கள் சிறியவை, பச்சை மஞ்சள் நிறம், சித்திரை வைகாசியில் பூக்கும், இதன் விதைக்கும் எண்ணெய்க்கும் பேதி குணமுண்டு, இலைகளை நசுக்கித் தண்ணீரில் ஊறப்போட்டுக் கொடுக்கப்பேதியாகும், இலையை உலர்த்தித் தூள் செய்து பாம்பு கடிக்கு உபயோகிக்கப்படும், இலைகளை மெல்லுவதால் எரிச்சலையுண்டாக்கி வாய் உதடு வெந்து வீங்கும், இது இந்தியாவில் சில பாகங்களிலும், இலங்கை மலையாதேசம் முதலான விடங்களிலும் விளையும், வங்காளம், ஆசாம் இவ்விடங்களில் விசேஷமாய்க் காணலாம், இது நேபாளத்திலிருந்து மிகுதியாக வருவதால் (நேபாளம்) இது நேர்வாளம் எனப் பெயர் கொண்டது போலும், ( நேபாளம் = நேர்வாளம், என மருவியது; croton seed plant—Croton tigilium. It is a small tree with a few spreading branches. leaves alternate 3 - 5 nerved at the base; young leaves covered with minute hairs, upper flowers male, lower ones female, seeds convex on one side, enveloped in a thin shell, flowers small, greenish yellow. Flowers in April and May. The seeds and oil have purgative properties. Leaves ribbed and soaked in water are also purgative. When dried and powdered are good application for snake bites. If the leaves are chewed, they inflame the mouth and lips and cause them to swell having a burning sensation. It is found in some parts of India, Ceylon, Malaya and in abundance in Bengal and Assam. In Nepaul it is found in plenty and is exported from there and hence it name நேர்வாளம்.

NOTE:— This tree is analogous to Sillicypria which is Greece grow spontaneously in the banks of the rivers and lakes. These when planted in Egypt bear abundance of fruit but of an affensive smell.

**நேர்வாளம்,** நேர்வாளப் பருப்பு, இதற்கு நீர்வாளம், நேபாளம், வாளம், கீழ் நோக்கி என்றும் பெயர், அன்றியும் இதில் மூன்று வகையுண்டு; (1) பொதுவாக சீன நேர்

வாளம், இது காப்பிக் கொட்டையைப் போல், (2) சஞ்சரிநேர்வாளம், இது சிறிய தாயிருக்கும்; (3) இந்து நேர்வாளம், இது ஆமணக்கைப்போலிருக்கும்; 1-ம் — 3ம் — முக்கிய மானவை, பருப்பின் மத்தியில் முளையும் தைலப்பசையு முள்ளன, இப் பருப்பைப்பிளந்து உள்ளிருக்கும் முளையை எடுக்காமல் உபயோகித்தால் வயிறு கடுப் பும் வாந்தியுமுண்டாகும், புதிய பருப்பு பச் சையும் வெள்ளையும் கலந்த நிறமாகவு மிருக்கும், அதிகப் பழைய பருப்பு நஞ்சுக்குச் சமமானது, உருசிக்கக் கசப்பும், கரகரப் புள்ளதாயு மிருக்கும், இது வெதுட்டலையும் வாந்தியையும் பேதியையு முண்டாக்குவதில் மிகக்கொடியது, ஆகவே நமது நாட்டு வைத்தியர்கள் சுத்திமுறையைச் சரிவர அனுசரிக்காமல் உபயோகித்தால் அனேக கோளாறுகளையும் அபாயத்தையும் உண்டு பண்ணுவது திண்ணம், ஆனால் சுத்தி செய்து மருந்தில் உபயோகித்தால் நல்ல குணமுண்டாகும், இதினின்று எடுக்கும் எண்ணெய் அல்லது தைலத்திற்கும் இதுவே குணமாகும், இவ்வெண்ணெய் பழுப்பு நிறமாயிருக்கும்; இது மிகக் கொடிய பேதி மருந்தாகக் கொள்ளப்படும், சாதாரணமாக இவ்விதையை வறுத்துத் தான் எண்ணெய் எடுக்கப்படும், மற்ற எண்ணெய்களோடு கலக்கக் கூடியது. இதைப் பற்றி நேர்வாள எண்ணெய் கீழ்ப் பார்க்கவும், பொதுவாக இப்பருப்பு கொடிய பேதியை உண்டாக்குந் தன்மையது, அதிக அளவில் மயக்கத்தை யுண்டாக்கும் கொடிய விஷம், அதிகமாக பேதியாகவேண்டிய சில வியாதிகளுக்கு அதாவது; சன்னி, வலிப்பு, உன்மத்தம், கொடிய சுரம் முதலானவை களுக்கு இது கொடுக்கப்படும், இதன் பருப்பை மிக்க சிறிய அளவில் காசுக்கட்டி அல்லது வேலம்பிசின், தேன் இவைகளிற் கலந்து கொடுக்கலாம் இப்பருப்பை விளக்கு நெருப்பில் காட்டி, புகையை முகர காசத் தின் இழுப்பை குணமாக்கும், இப் பருப்பை தண்ணீரில் அரைத்துத் தேனில் குழப்பி உடையாத கட்டிகளுக்கு மேலே தடவலாம், இது கர்ப்பிணிகளுக்கு உதவாது, நமது நாட்டு வைத்தியர்கள் இதை மற்ற கடை சரக்குகளோடு சேர்த்து மாத்திரைகளாக ளாகச் செய்து சுரம், மலச்சிக்கல், கவிசை, பாண்டு முதலிய நோய்களுக்கும் இரசம் கந் தகம் மற்ற கடைச் சரக்குகளோடு சேர்த்து வயிற்றுப்பிசம், வயிற்றுவலி, கவிசை முத லியவைகளுக்கும் நீர்ப் பேதிமருந்தாகக் கொடுப்பார்கள்; ஆகவே இதை தனியாகக் கொடுப்பதில்லை, மற்ற சரக்குகளுடன் கலந் துதான் மாத்திரை, மெழுகு, எண்ணெய் முத லியவைகளாகச் செய்து பேதியாகும்படி தரு வதுண்டு. croton seed from croton seed tree — Croton tigilium. It is also known as Purging croton, Nepaul croton oil tree. The seeds consist of three classes viz. (1) Chinese croton seed resembling coffee seeds (2) small croton seed. (3) Hindu croton seed resembling castor seeds, of these 1 and 3 are important. The seed contains oil and germ in the middle and so it is necessary that this germ ( plumel with cotyledon - first leaf ) should be removed before it is cleaned for the reason that its presence will cause irritation of the stomach and vomiting. Fresh seed is of greenish white colour where as the old one is of yellowish black colour. The old seeds are quite unfit for use in medicine being considered as a poison. It is bitter and acrid in taste. It causes nausea and violent vomiting and purging. So native doctors should be very careful as it cannot be administered without be purified according to the process laid down in Tamil Medicine and if this is neglected several disorders with complications, dangerous to life will ensue. So it should be very carefully handled. The oil extracted from the seeds has also the same property. This oil which is brown in colour is also a powerful drastic purgative. The usual way to get the oil to roast the seeds first and then compress them. It is soluble in fixed and volatile oils. For other details see under its proper heading ( Nervala yennai ) 'நேர்வாள எண்ணெய்'.

Generally, the croton seed is a powerful drastic, purgative; in overdoses it is an narcotic poison. It should be given only in cases where strong purgative is considered essential. Externally, it is of great value as a stimulant, rubifacient and counter irritant. The seeds are employed after purification in very minute doses in the form of pills prepared with great care or along with castor oil. Generally, it is mixed with extract catcheu or gum acasia and honey. They are half roasted over a lamp flame and the smoke inhaled through nostrils to get relief from an attack of fits and from asthma. The seeds are rubbed in

water mixed with honey and applied externally to obstinate bubos and abscesses. Under no grounds, it should be administered to pregnant women. Vaidyans are always careful and very careful in employing this as a pill mixed with other bazaar drugs and prescribed for fevers with constipation, ascites, anasarca etc. The purfied seeds are added with mercury, sulphur etc., in sufficient quantities to a make a pill mass, which is given in tympanites, colic, ascites etc., as a drastic purgative. It should never be given singly, so it always administered in the form of pills, wax like balls, medicated oils etc., mixed with other ingredients as a drastic purgative.

NOTE — Seeds have been known to kill horses by producing the most violent diarrhoea. The wood which is bitter in taste is gently emetic, and powerfully sudorific. Decoction of the cumin seeds fried in honey is a good antidote for the ill effects of the medicine containing croton seed such as too many purgings, vomiting, griping pain etc.

***நேர்வாளயெண்ணெய்,*** நேர்வாளப் பருப்பினின்று வடிக்கும் எண்ணெய், இது மூத்திரத்தை அதிகரிக்கச் செய்யும், பேதியையுண்டாக்கும்; தோலைச் சிவப்பாக்கி எரிச்சலையுண்டாக்கும், இவ்வெண்ணெயை சன்னி ஆரம்பம், குடற்சிக்கல், பாண்டு இவைகளுக்குக் கொடுக்கலாம், அன்றியும் சருமநோய், கீல்வாயு, நரம்பிழுப்பு, அள்ளுமாந்தம், நீர்க்கோர்வை, உடம்புவலி இவைகளுக்குபயோகிக்கலாம்; தைலமாகச் செய்து ஆண்குறியில் பூச ஆண்மை யுண்டாகும், ஆனால் கொப்புளத்தை எழுப்பி எரிச்சலையுண்டாக்கும், இதைத் தேங்காயெண்ணெயோடு கலந்து கீல்வாயு, கண்டம், கழுத்துவலி இவைகளுக்குப் பூசலாம், இவ்வெண்ணெயில் ஒரு துளி நாவில் வைக்க, சன்னி, தொண்டை வாதம், மூச்சுவிட முடியாமை முதலியவைகளால் பீடிக்கப்பட்டு உணர்ச்சியற்றிருந்தாலும் குணமாகும்; வாதப்பிடிப்பு, எழும்பாதகட்டி இவைகளுக்கும் மேற்பூசலாம், இதை நல்லெண்ணெய், தேங்காயெண்ணெய் முதலியவைகயோடு சேர்த்து மேற்பூச்சு மருந்தாக உபயோகிக்கலாம், இவ்வெண்ணெய் தனிப்பட சருமத்தில் தடவ கொப்புளங்களை யெழுப்பும், இதைப் பாரிச வாயு, கீல்வாயு, சயம், இரைப்பு இவைகளுக்குக் கொடுக்கலாம், தாளிறுத்து சன்னி, பைத்தியம் முதலியநோய்களில் இவ்வெண்ணெயில் இரண்டு துளி அடி நாக்கிலிட குடலைச் சுத்திப்படுத்திக் குணமாக்கும், இதைக் கடுகெண்ணெயோடு சேர்த்து குழந்தையின் கோழை, இருமல், காசம், வாதப்பிடிப்பு, மூட்டுப்பிடிப்பு இவைகளுக்த பூசு மருந்தாக உபயோகப் படுத்தலாம், croton oil extracted from croton seeds — Oleum crotonis. It is a diuretic, purgative and rebificient. It is chiefly employed incipent apoplexy visceral obstructions and occasionally in dropsy. Moreover it is found useful application in fits, convulsive fits in children affecting inter costal muscles, accumulation of serous fluids in the body, bodily pain etc. Ointment, prepared from this, is applied to penis in case of impotency although such application causes blister and burning sensation. This oil mixed with the sesamum, cocoanut or other bland oil forms a useful liniment in chronic rheumatism, paralysis, diseases of the joints, phthis and chronic bronchitis and pain in the neck and nape. A single drop of the oil applied to the tongue is considered sufficient to ensure the full results especially in apoplexy, paralysis of the throat or difficulty of breathing arising from these causes even should the patient be insensible at the time. It is also a good remedy in rheumatism and indolent tumours.

The oil is a powerful vesicant producing pustular eruptions, a few drops placed at the base of the tongue will be of great advantage in lock jaw and mania by producing catharsis. The oil diluted with mustard oil is a useful liniment in infantile bronchitis asthma, paralysis, chronic rheumatism and arthritis.

NOTE — If the taking of this oil should cause griping, vomiting or too violent purging a good draught of the juice of lime is the best antidote and it may be safely repeated if the vomiting etc., continue. This oil is slightly viscid from pale yellow to brownish yellow colour of a disagreeable odour and acrid taste. It is a powerful irritant used in obstinate constipation and in cerebral affections. The acridity of the croton oil may be greatly diminished and the activity of the castor oil increased only if they are added one to four.

***நேர்வானிகம்,*** *புரசமரம்,* Butea frondosa.

***நேலமட்டிச்சக்கை,***

***நேனி,*** *தாமரை,* lotus flower — Nelumbium speciosum.

***நேறிட்டதாகை,*** *கரிசலாங்கண்ணி,* eclipse plant — Eclipta prostata.

***நேறுதழை,*** *வச்சிரக்கல், இதுவே வைரம்,* diamond.

***நேற்றி,*** *முன்னைநாள்,* the previous day; **2.** *சற்றுமுன்காலம்,* a short time before.

***நேனம்,*** *பைத்தியம்,* lunacy.

# நை



**நை,** நைதல், breaking off by wear and tear; 2. காயமடைதல், being injured; 3 நொந் தல், being reduced in circumstances; 4. வாடல், fading.

**நைகமேஷக்கிரகம்,** குழந்தைகளைத் தாக்கும் ஓர் கிரகநோய், இதனால் வாந்தியில் நுரை தள்ளல், முதுகுவளைதல், மிரண்டபார்வை, இளைப்பு, மூர்ச்சை முதலிய குணங்களுண் டாகும், a disease in children due to the evil influence of a star. It is characterised by frothy vomits, bending the middle of the trunk, anxious look, constant eructa-tions and unconciousness.

**நைசர்க்கிகம்,** சுபாவம், nature; 2. இயற் கையாகத் தோன்றும் கை, natursl appea-rance or occurrence.

**நைசல்,** நோய், disease, ailment.

**நைசிகம்,** நாசியிற் புகுட்டு மருந்து, any medicinal powder taken by nose — Sternu-latory; 2. காக்கை, crow; 3. காக்கைக் கொல்லி, crow killer — Cocculous indica.

**நைசிகாவேம்பு,** சூரத்து நிலவேம்பு, surat chiretta.

**நைசியம்,** see நைசிகம்; 2. களைக்கொட்டி, a kind of water lily root as கொட்டிக் கிழங்கு.

**நைசிரவம்,** துவரை, red gram — Cajanus indicus.

**நைச்சி,** காகம், crow; 2. பாம்பு, snake

**நைட்டிகம்,** ஆயுள் முழுதும் பிரமசாரியா யிருத்தல், the state of remaining a bachelor till one's life time — Life bachelor ship; life bachelor hord; 2 நிட்டை அதாவது மனம் அசைவற்றிருத்தல், fixedness of mind.

**நைதல்,** நை, which see.

**நைதிகை,** முல்லைக்கொடி, smooth jasmine — Jasminum trichotomum ; 2. ஊசி மல்லிகை, needle jasmine

**நைத்தல்,** கெடுத்தல், destroying; 2. தளர்த் தல், loosening; 3. துக்கப்படுத்தல், caus-ing to be distressed in mind; 4. வருந்தல், suffering.

**நைந்தசோறு,** குழைந்த சோறு, over cooked or boiled rice; 2. பதனழிந்த சோறு, stale cooked rice; rotten cooked rice.

**நைந்திகை,** see நைதிகை

**நைந்தபழம்,** கனிந்து இளகிய பழம், over riped fruit.

**நைபாரிசம்,** செங்கரும்பு, red sugarcane.

**நைபாலி,** அடுக்குமல்லிகை; multi whorled jasmine— jasminum sambae (flore manarae); 2 சிவந்த பாஷாணம், red arsenic; 3. சீர்பந்த பாஷாணம். a prepared poison; 4. நீலம், blue.

**நைபாலிகம்,** see நைபாலி; 2. தாமிரம், copper; 3. பித்தளை, brass.

**நைபானி,** அடுக்கு மல்லிகை, see நைபாலி.

**நைப்பாளை,** ஆடுதின்னும்பாலை, ulcer plant — Aristolochia bracteata.

**நைப்பூதிகம்,** தூலி, toon tree — Cedula toona.

**நைப்பூலிகம்,** காரை, thorny webera — Can-thium parviflorum.

**நைமாமிசம்,** வெங்காயப்பூடு, onion plant — Allium cepa

**நையத்தட்டல்,** தூளாகும்படி தட்டுதல், striking to make into powder.

**நையநறுக்குதல்,** பொடியாக நறுக்குதல், to cut or crush into very small pieces.

**நையப்புடைத்தல்,** மொத்தையாக்கல், beat-ing into a pulpy mass — Mashing.

**நையமசிதல்,** நன்ருய் அரைபடல், grinding to fineness.

**நையம்,** see நைசியம்.

**நையல்,** வைசூரி, small pox; 2. கிரந்தி நோய், syphilitic sore; 3. மெலியச் செய் யும் நோய், wasting disease; 4. மெலிவு, emaciation; 5. துன்பம், suffering.

**நையவேகல்,** குழைதல், becoming soft by over boiling

**நைராசியம்,** ஆசையின்மை being free from desire.

**நைர்மல்லியம்,** சுத்தம், cleanliness; purity; 2. மாசின்மை, free from stain or flaw; free from all defects.

**நைலம்,** கடற்பாசி மருந்து, madicine prepared from sea moss; 2. கடற்பாசி, sea moss.

**நைவாதல்,** வருந்துதல், to be grieved at; being distressed.

**நைவு,** நைந்தது, that which is over riped, 2. வாடினது, that which has faded or drooped; 3. நோய், disease; 4, மெலிவு emaciation.

**நொ,** துன்பம், distress; 2. வலி, pain; 3. நோய், ailment; sickness; 4. வருத்தம். suffering.

**நொக்கட்டா,** இலக்கோட்டிப்பழம், Japan medlar — Briobotriya japonica, see நோக்கட்டாமரம்.

**நொக்காங்குலை,** நுங்குக்குலை, bunch of young palmyra fruits.

**நொக்கு,** வெடிப்பு, fissure, crack; crevice.

**நொக்குதல்,** குறையச் செய்தல் cause to decrease; 2. அடித்தல், striking, beating.

**நொங்கு,** see நுங்கு.

**நொங்குதல்,** விழுங்குதல், swallowing.

**நொசி,** வருந்துதல், suffering; 2. see நொசிதல்.

**நொசிகம்,** வெண்சீந்தில், moon creeper — Tinosphora cordifolia.

**நொசிதல்,** துவளல், being relaxed, 2. நுண்மையாதல், becoming a fine powder, 3. வளைதல், bending. 4. see நொசிவு.

**நொசிப்பு,** மனதை ஒருவழிப்படுத்தல், concentration of mind; 2. சமாதி, silent contemplation.

**நொசியிடை,** நுட்பமான இடுப்பு, slender waist.

**நொசிவு,** நுண்மை, minuteness; 2. வாட்டம்; fading; 3. வளைந்தநிலை, a state of being bent.

**நொச்சி,** வெண்ணொச்சி, இதற்கு நிற்நண்டி, சிந்துவாரம், சுவேதசுரசம், ஐந்திலை நொச்சியென்றும் பல பெயருண்டு, இது ஓர் சிறிய மரம்; கிளைக்கொம்புகள், இலைக்காம்புகள், மொசுமொசுப்பாயுள்ளன; இலைகள் நீண்ட காம்புகள் வாய்ந்தன; இலைக்கு 3 - 5 பிரிவினையுண்டு.

பூவின் புறவிதழ் ஐந்து பிரிவினை, பூக்கள் சிறியவை, நீலநிறம், வருஷ முழுவதும் பூக்கும்; இந்தியாவில் எங்கும் பரவியுள்ளது. நாட்டுவைத்தியத்தில் மிக்க பேர்வாய்ந்தது, கட்டிகளைக் கரைத்துக் கெட்ட மாசுகளை வெளிப்படுத்துவதில் இதன் இலைக்கு நிகராக எந்த மூலிகைகளையும் சொல்ல முடியாது. ஆகவே, வாதப் பிடிப்பின் அழற்சியால் நேர்ந்த வீக்கத்தைக் கரைப்பதுமல்லாமல் வெட்டை தடை படுவதால் ஏற்பட்ட அண்ட வீக்கத்தையும் போக்கும்; பறித்த இலைகளை வதக்கி வீக்கமுள்ள இடங்களில் சூடு பொறுக்க வைத்துக்கட்ட 3 - 4 தடவைக்குள் வீக்கம் போம், இவ்விலையைத் தண்ணீரிலிட்டு, கொதிக்க வைத்து அந்த ஆவியை வேதுபிடிக்க சுரம், நீர்க்கோவை, வாதப்பிடிப்பு குணமாகும், பிரசவித்த பெண்களுக்கு இதைத் தண்ணீரில் போட்டுக் காய்ச்சிக் குளியலாட்டலாம், தலைவலி, நீர்க்கோவைக்கு உலர்ந்த இலையைப் புகைச் சுருட்டாக உபயோகிக்கலாம், இதன் உலர்ந்த காய் குடற்பூச்சிகளை அழிக்கும்.

இதன் வேர் பலவிருத்தியைத் தரும்; சுரத்தைப்போக்கி, கோழையை அறுக்கும், இலைக்கஷாயம் நோயைத் தணித்தும், நீரைப் போக்கியும், மாதவிடாயை வெளிப்படுத்தும் தன்மையது, இலையால் பீனசம், சுரம், இரைப்பு, தந்தவலி, இருமல், நீரேற்றம் முதலியவைகள் போம். இலையுடன் சிறிது மிளகுகூட்டி அரைத்து சுண்டை பிரமாணம் கொள்ள குளிர்சுரம், அசீரணம், கைகால் பிடிப்பு, உடம்புவலி போம், நொச்சிப் பட்டைக்கும் இக்குணங்கள் உண்டு; இலைச்சாற்றினுல் புண்களின் கழிவுகள் நீங்கும், அன்றியும் அதிலுள்ள பூச்சிகளும் சாகும், இதன் வேர்ப்பட்டைக் கஷாயம் மூத்திரப்பை அழற்சியையும் வாதப்பிடிப்பையும் போக்கும், இதன் பூக்கள் துவர்ப்பாகலின் அதிசாரபேதி, வாந்திபேதி, சுரம், ஈரல் நோய், மார்புவலி முதலியவைகளுக்கும் கொடுப்பதுண்டு, வேர்ச்சூரணம் மூலம் சீதபேதியில் ஆசனக்கடுப்பை நீக்கும் விதையைச்சருமவியாதிக்கும் குட்டத்திற்கும் உபயோகிப்பதுண்டு, பூக்களையும் இலைக்காம்புகளையும் சூரணம் செய்து வயிற்றிலும் குடலிலும் இருந்து வெளிப்படும் இரத்தப் போக்குக் கொடுப்பதுண்டு, இதன் இலைச்சாற்றை எண்ணெயிலிட்டுக் காய்ச்சிப் புரையோடும் புண், கண்டமாலை விரணம் இவைகளுக்கு உபயோகிக்கலாம்; மூவிலை நொச்சியும் குணத்தில் இதற்குச் சமமாகவே சொல்லலாம், இதன் வேர்க்கஷாயம் கசப்பாதலால் முறை சுரத்திற்கும் சன்னிபாத சுரத்திற்கும் கொடுக்கலாம், இலையை வதக்கி ஒத்தடங் கொடுக்க வாதப்பிடிப்பும், நரம்புச் சுளுக்கும் போம், மேலும் இலையை கண்களின் பலவீனத்திற்கும், வேரை அரிசிக் கஞ்சியில்

அரைத்து புண்களை ஆற்றவும் உபயோகிக்கலாம், இலைச்சாற்றை நல்லெண்ணெயிலிட்டுக் காய்ச்சி தலைமயிர் வளரப் பூசுவதுண்டு, இதில் அடியிற்கண்டவாறு பல வகையுண்டு. அவையாவன, the white notch — Vitex negundo. It is also known as Nirgundi, Sindwar ( preventing flow ) white juice, five leaved chaste tree. It is a small tree; branchlets and petioles pubescently tomentose; leaves long petioled; 3—5 foliate; Calyx five toothed; flowers small, blue; flowering nearly all the year. It is widely distributed throughout India and has long established high tribute in native practice. It is anodyne, diuretic and emmenagogue and testifies to the value of fomentations and baths prepared with this noble herb. The leaves are discutient and their efficacy in dispelling inflammatory swellings of the joints from acute rheumatism and of the testis from supperssed gonorrhoea is very well known.

The fresh leaves are heated over a fire till they are as hot as can be borne without pain, and then applied to the affected part and kept in situ by a bandage; the application is repeated three or four times daily untill the swelling subsides. Febrile catarrhal and rheumatic affections are treated by means of a sort rude vapour bath prepared with this plant. A decoction of the aromatic leaves helps to form the warm bath for women after delivery. Dried leaves are smoked in cases of head ache and catarrh. The dried fruit is deemed a vermifuge. The root is tonic, febrifuge, and expectorant. Decoction of the leaves is aperient, diuretic and emmenagogue. Leaves are useful in cases of catarrh of the nose, fever, bronchitis tooth pain, cough, accumulation of morbid fluid etc. Leaves ground with black pepper, rolled into balls of shoonday size and taken internally alleviates ague, indigestion, rheumatic affections of the limbs and bodily pain. The bark of the tree is said to possess the same properties as above mentioned. The juice of the leaves is said to remove fetid discharges and worms from ulcers. Tincture of the root bark is reccommended in cases of irritable bladder and of rheumatism. The flowers being astringent are used in diarrhoea, cholera, fever and diseases of the liver; they are also recommended as a cardiac tonic. The powdered root is prescribed for piles and diarrhoea as a demulcent. The seeds form a cooling medicine for cutaneous diseases and leprosy. The flowers and stalks reduced to powder are also given in cases of discharge of blood from the stomach and bowels. An oil prepared with the juice of the leaves is applied to sinuses and scrofulous sores.

Vitex trifolia is not in any way inferior to this variety in properties. The root in decoction is pleasant bitter and administered in cases of intermittent and typhus fevers. Leaves are simply warmed and applied as fomentation in cases of rheumatism and sprain. The leaves are employed in weakness of the eyes; the root ground with the rice conjee are good for healing the ulcers. An ointment is made from juice of the leaves and used for promoting the growth of hair. The plant consists of different varieties viz.

1. வெண்ணொச்சி, five leaved chaste tree see நொச்சி.
2. கரு நொச்சி, black notchy, common gendarussa — Justicia gendarussa.
3. நீர் நொச்சி, water nochy — Vitex integerrima.
4. சிறு நொச்சி, sessile leaf let chaste tree.
5. காட்டு நொச்சி, tall chaste tree — Vitex altissima.
6. மயிலடி நொச்சி, peacock's foot tree — Vitex pubes.
7. மலை நொச்சி, hill notchy — Wallrothia articulata.
8. மூவிலை நொச்சி, three leaved chaste tree — Vitex trifolia.
9. ஆற்று நொச்சி, small leaved glory tree — Cleodendron inerme.
10. வயல் நொச்சி, field notchy — Vitex leucoxylon.
11. ஐந்திலை நொச்சி, see நொச்சி.

NOTE — The plant is known as 'Sinduvaram' since it is used to prevent flow of humours and laxity. Ashes of the plant are used as mordant. The கருநொச்சி referred to in item No 2 belongs to different genus and it refers only to the blue variety commonly found. But the one contemplated in Siddha science is quite distinct variety for the

details of which see under 'கருநொச்சி'. The common plant is highly extolled in the treatment of beriberi and in the allied and obscure affections as burning of the feet — Ignipeditis. Compare also plants in other genus.

1. நீர் நொச்சி, Cleodendron inerme.
2. கார் நொச்சி, Jatropha ancas.
3. கருநொச்சி, Justicia gendarussa.
4. நீர் நொச்சி, Vernonia anthilmintica.

**நொச்சி,** சதகுப்பை which see; 2. பதினென் மூலிகைகளிலொன்று. one of the eighteen drugs.

**நொச்சிக்கொன்னை,** see நாசவக்கணே.

**நொச்சிலி,** see நொச்சி.

**நொச்சிலிக்கொழுந்து,** நொச்சி இளம் இலைகள், tender leaves of nochy.

**நொச்சில்,** see கருநொச்சி.

**நொச்சுகி,** சுணைவெள்ளரி, downy cucumber — Cucumis utilissimus.

**நொச்சுலம்,** முல்லை, cared jasmine — Jasminum angustifolium.

**நொச்சுளி,** ஆவிற்புங்கு, a variety of Pungu —Dalbergia genus

**நொடி,** கைந்நொடி, time of a snap of the finger; 2. காலநுட்பம், minuteness of time, 3 நோய்த்துன்பம், suffering from a disease.

**நொடிக்குகை,** see நொடித்தல்.

**நொடிசிரங்கு,** சொறி சிரங்கு, scabbies.

**நொடித்தல்,** கையால் நொடிக்கதல், snapping with the fingers; 2. பால் சுரத்தல், forming of milk; 3. கால் சிறிது நழுவல், slipping while walking.

**நொடிப்பு,** கணப்பொழுது, a minute time.

**நொடியாதிப்பூடு,** கொத்தான், air creeper — Cassytha filiformis.

**நொடிவேதை,** நொடிப்பொழுதில் அதாவது சிறிய கால அளவில் செய்யும் வாதவித்தை, transmuling metals into gold in a minute time with in a short time.

**நொடுநொடுத்தல்,** சிறிது பரபரப்பாய் நடத்தல், walking little briskly.

**நொட்டாங்கை,** பழக்கமாக உபயோகிக்கும் இடது கை, left hand used in habit with more dexterity than the right.

**நொட்டாங்கைபழக்கம்,** இடதுகைப்பழக்கம், left handed.

**நொட்டுதல்,** புணர்தல், (slang term) copulation.

**நொட்டை,** உருசிமிகுதியால் நாக்கைத் தட்டல், sounding with the tongue in good taste.

**நொண்டல்,** see நொண்டுதல்.

**நொண்டி,** கால் முடவன், lame man; 2. பொய்க்காலால் நடப்பவன், one walking with false leg.

**நொண்டிக்கால்,** முடக்கால், lameleg. deformed leg; 2. பொய்க்கால், false leg — Wooden leg.

**நொண்டு,** see நொண்டி.

**நொண்டுதல்,** கால்முடங்கி நடத்தல், walking, with lame legs; 2. தாங்கி நடத்தல், limping, clandication.

**நொதி,** பெருஞ்சேறு, great mire.

**நொதிக்கப்பண்ணல்,** புளிக்கவைத்தல், fermentating.

**நொதித்தல்,** ஊறுதல், soaking in water; 2. நுரைத்தெழும்புதல், throwing up frothy matter to the surface of liquid spuming; 3. சீழ்கட்டுதல், supurrating; 4. நுரையுண்டாக்கி கொப்புளித்தல், gargling; 5. கொதித்துப்பொங்குதல், boiling withfroth; 6. நுரைத்துப்புளித்தல், fermenting with froth.

**நொதிப்பு,** கொதித்தல், spume.

**நொதிவாயு,** சேற்றுக்கும்பியிலிருந்து எழும் வாயு, the carbon hydrogen gas rising in swampy or boggy places — Marsh gas.

**நொதுநொதுத்தல்,** அதிகமாய்ப் புளித்து நுரையெழும்பல், rising of froth from excessive fermentation.

**நொந்தகைமை**, நோய், disease; 2. பலவீனம், weakness.

**நொந்தசோறு**, பதனழிந்த அன்னம், rotten cooked rice — Stale rice.

**நொந்தசோறுண்ணல்**, இதனால் வயிற்றுக் கோளாறு, அக்கினி மந்தம், வாதநோய் இவைகளுண்டாம், eating cooked rice that has become stale. This brings on bowel complaints, loss of appetite and rheumatic complaints.

**நொந்தபுண்**, அழிந்தபுண், rotten sore. sloughing wound.

**நொந்தலை**, see நொந்தகைமை, 2. தீ முறிப்பூடு, an unknown plant suspending the action of fire.

**நொந்தன்னம்**, see நொந்தசோறு.

**நொந்தாகிரி**, சூரிய காந்தி, sun flower — Helianthus indicus alias H. annuus; 2. பாதிரிமரம், trumpet flower tree — Bignonia chela noidus.

**நொந்தாவிகம்**, சூழ்ப்பிராய், which see.

**நொந்திரா**, கச்சந்திராய், Indian chickweed — Mollugo parviflora.

**நொந்துதல்**, அழிதல், becoming rotten.

**நொந்துபோதல்**, see நொந்துதல்.

**நொப்பு**, அழுக்கு, dirt; 2. நுரை, froth.

**நொப்புநுரை**, காய்ச்சும்பொழுது மேலெழும்பும் அழுக்கும் நுரையும், the impurities arising on the top surface when boiling a solution.

**நொய்**, குறுணை, crushed or broken rice, 2. குறுநொய், minute particles as of grains — rice etc; 3. நொய்யரிசி, broken rice; 4. பன்னீர், rose water; 5. தவிடு bran.

**நொய்க்கழலை**, மிகச் சிறிய கழலை, small cysts or tumours.

**நொய்க்கொதி**, இளங்கொதி, light boiling for drawing substances floating on the top.

**நொய்தல்**, நுண்மை, minuteness.

**நொய்நல்**, நுண்மையாதல், crushing into minute and fine particles.

**நொய்தாக்கல்**, நுண்மையாக்குதல், reducing to fine particles making subtle; subtilising.

**நொய்துகம்**, நரிவழுக்கை, diabitis plant — Gratiola monieri.

**நொய்தெனல்**, மெல்லியதாதல், becoming small and soft.

**நொய்ப்புச்சுவரி**, மான்செவிக்கள்ளி, leafy-spurge Title from the leaves resembling deer's ear — Euphorbia nerii folia alias E. nivulia.

**நொய்ம்மீன்**, சிறிய அல்லது பொடிமீன், small little fish; 2. அயிரை மீன், small river fish; herring fish.

**நொய்ம்மை**, இலேசம், lightness; 2. நுண்மை softnesss.

**நொய்யபூதம்**, சூக்கும பூதம், subtle element.

**நொய்யம்மை**, குருவம்மை, very small pink macules.

**நொய்யரிசி**, குருநெல், broken or crushed rice; sharp grain.

**நொய்யவன்**, பலவீனன், weakness, weakling;

**நொய்வு**, see நொய்மை; 2. மனவருத்தம், mental worry.

**நொரு**, காய்ப்புமாறிய பின்னரும்பும் பிஞ்சு small fruits or shoots sprouting after the season; 2. பயிரினடியில் முளைப்பது, small weeds at the bottom of crops]

**நொருகை**, தின்பண்டம், eatables.

**நொருக்கல்**, aee நொருக்குதல்.

**நொருக்காய்**, குருக்காய், see நொரு.

**நொருக்குதல்**, நருக்குதல், crushing; 2. அடித்தல், beating.

**நொருங்கல்**, See நொருங்குதல்.

**நொருங்கவிடித்தல்**, பொடியாகும்படி இடித்தல், pounding so as to become powder or small particles.

**நொருங்குதல்,** பொடியாதல், being pulverised.,

**நொருச்சி,** காட்டுத்துளசி, wild basil — Ocimum adscendens.

**நொருவல்,** நொருங்குண்ட தூள், crushed powder; 2. தின்பண்டம்.

**நொலே,** அப்பவருக்கம், different varieties of cakes or confectionaries; 2. அப்பம், rice cake.

**நொலேயன்,** see நொலே.

**நொவ்வு,** நோய், disease; 2. வலி, pain; 3. மெலிந்துபோதல், wasting away, getting emaciated; 4. see நோய்வு; 5. மெலிவு, thinness.

**நொவ்வுதல்,** மெலிதல், getting slender.

**நொழுந்துதல்,** நுழைத்தல், thursting, penetrating.

**நொளநொளத்தல்,** குழைதல், becoming soft and viscid as over riped plantain fruit.

**நொளநொளப்பு,** குழைந்த தன்மை, the state of becoming soft and viscus, having glutinous consistency.

**நொளில்,** அழிந்த சோறு, adheaive mire.

**நொளவல்,** see நொளுக்கல்.

**நொளுக்கல்,** இளம்பாக்கு, immature or tender areca nut; 2. முற்றுதநிலே, immature state; 3. பிஞ்சு, tender fruit or immature fruit.

**நொளேதாளி,** சிறுதாளி, ladgar chinese laurel — Antidisma bunius alias A. alexiferia.

**நொள்கல்,** See நொள்குதல்,

**நொள்குதல்,** சுருங்குதல், withering; 2. இளேத்தல், emaciating.

**நொள்ளல்,** குருடு, blindness; 2. பார்வையற்றுக் கண் குழிந்த நிலே, sunkenness of eyes following blindness; 3. கொசுகு, mosquito.

**நொள்ளுதல்,** விழுங்குதல், swallowing.

**நொள்ளே,** குருடு, blindness; 2. நாகரவண்டு golden or yellow coloured beetle — Cantharides, See நாகரவண்டு; 3. நொள்ளேக் கண், sunken blind eyes.

**நொள்ளேக்கண்,** ஆழ்ந்து பார்வை மாறிய கண், eye that has lost its sight.

**நொள்ளேமடையான்,** வயல்மடையான், paddy bird — Ardeola leucopetra — Commonly frequenting paddy fields and ponds. It is so called from its oblique vision. It is also known as pond heron.

**நொறுகை,** நொறுவை, lunch; 2. தின்பண்டம், eatables.

**நொறுக்கரிசி,** நொறுக்கிய அரிசி, crushed rice; 2. பாதிவெந்த சோறு, half cooked rice.

**நொறுக்குதல்,** நருக்குதல், crushing; 2. பொடியாக்கல், reducing to powder; 3. இரத்தகாயம் பண்ணுதல், causing or inflicting bleeding, injury; 4. மிகுதியாய் உண்ணல், eating to excess; 5. நையப் புடைத்தல், beating or flogging severely.

**நொறுக்குவெள்ளி,** தங்கத்தோடு சேர்த்து உருக்கி மட்டப்பொன்னுகச் செய்விக்கு மோர்வித இராசயன வெள்ளி, a chemical silver used for mixing with gold so as to get an inferior gold.

**நொறுங்கல்,** see நொறுங்குதல்.

**நொறுங்கு,** நொய், broken rice; 2. see நொறுங்குதல்.

**நொறுங்குதல்,** பொடியாதல், being reduced to powder, நருங்குதல், becoming fine powder.

**நொறுவை,** see நொறுகை.

**நொற்பம்,** நொறுகை, eatables.

**நொன்றி,** மான், deer.

**நோ**, நோய், disease; 2. துன்பம், affliction; 3. பலவீனம், weakness; 4. வேதனைப் படல், feeling pain; 5. வலி, pain; 6. வேதனை, suffering; 7. வலியால் துன்புறல், suffering from pain.

**நோகப்பண்ணல்**, வலியுண்டாகச் செய்தல், causing pain; 2. துன்பப்படுத்தல், causing distress.

**நோகுதல்**, see நோதல்.

**நோக்கட்டாமரம்**, சீன, சப்பான் இவ்விடங்களில் கிடைக்கும் ஓர் வகைத்தின் பழம்' இது திராட்சையைப் போல் குலையாக விருக்கும், a fruit in clusters found grown in in Japan and China. It is a desert and preserve.

**நோக்கப்பிரமி**, செய்வினை, (lit) handi work i. e. the result of a person's actions referring chiefly to magic arts such as sorcery, witch craft etc.

**நோக்கம்**, அழகு, beauty; 2 குறிப்பு, features; 3. தோற்றம், appearance; 4. கண் eye; 5. பார்வை, sight; 6. விருப்பம், aspiration, desire; 7. கருத்து, opinion, object.

**நோக்கல்**, பார்த்தல், seeing; viewing.

**நோக்கன்**, கழைக்கூத்தன், an adroit, athelete; 2. தந்திரவித்தை செய்வோன், juggler, magician; 3. கண்கட்டு வித்தைக் காரன், one who causes deceptive appearance or falsevision; 4. பார்வையால் மயக்குவோன், a hypnotic, mesmerist.

**நோக்காடு**, நோய், disease; 2. வலி, pain; 3. மனநோவு, mental agony.

**நோக்கு**, கண், eye; 2. பார்வை, sight; 3. அழகு, beauty; 4. எண்ணம், thought, intention; 5. விநோதக்கூத்து, novel dance; 6. அறிவு, intellect.

**நோக்குநோக்கி**, ஆள்வாடைத்தட்டி, an unknown plant.

**நோக்குவித்தை**, கண்கட்டுவித்தை, causing illusion by magic, occult powers of nature; 2. மாயவித்தை, wonder working by the influence of evil spirits; 3. ஓர் தந்திர வித்தை, jugglery, legerde main.

**நோசரிகம்**, நித்தக்கத்தரி, long brinjal — Solanam melongena.

**நோசல்**, நோவு, pain; 2. நோய், disease, sickness.

**நோசிதம்**, கொடிக்குறிஞ்சா, small Indian ipecacuanha — Gymnema sylvestris.

**நோச்சோளம்**, வெண்சோளம், white maize.

**நோஞ்சல்**, see நோய்ஞ்சல், இளைப்பு, weakness; 3. மெலிவு, emaciation, thinness.

**நோஞ்சவம்**, மல்லாக்கொட்டை, ground nut — Manilla ground nut.

**நோஞ்சான்**, மெலிந்தவன், weak person — weakling.

**நோஞ்சி**, மெலிந்தவள், a weak woman; 2. நோஞ்சான், weakling.

**நோஞ்சீ**, நோயினால் மெலிந்த தன்மை, Convalescent state, being emaciated from disease.

**நோட்டம்**, மணி, பொன் முதலியவற்றின் சோதனை, examination of gems and coins; 2. மதிப்பு, estimation.

**நோண்டல்**, புண், புரை முதலியவற்றை ஆயுதத்தால் கிளறல், examining by probe a wound, ulcer, or cavity, applying a probe to examine a wound or cavity; 2. குடைந்தெடுத்தல், scooping out as carbuncle; 3. கிண்டல், probing; 4. குடைதல், picking as teeth or ears.

**நோண்டியெடுத்தல்**, வேர்க்கிளப்பல், rooting out.

**நோதலை**, நோதல், paining; 2. நோய், disease.

**நோதல்**, நோகுதல், paining; 2. துன்புறல், suffering; 3. நோயுறல், falling ill; 4. பலவீனம், weakness.

**நோதனை**, பிராய்முட்டி, Ceylon pavonia — Povania zeylanica.

**நோதாங்குசம்**, தர்ப்பைப்புல், sacrificila grass.

**நோயித்திரினி**, நோய், disease; 2. கேடு, bad health.

**நோய்படுதல்**, காயப்படுதல், sustaining injury, being injured; 2. நோயினால் துன்பப்படல், suffering from pain or disease.

**நோம்புவாலி**, குதிரைவாலிப்பூடு, a family of plants resembling horse tail as horse tail grass — Panicum brizoides, horse tail millet — Panicum verticillatum.

**நோம்புவிரலி**, மஞ்சட் கொத்து, turmeric plant.

**நோம்பூசுயம்**, see நிலப்பூசனி.

**நோம்பூரிகம்**, சர்க்கரைப்பூசனி, yellow pumpkin — Cucurbita pepo.

**நோயகலல்**, உடம்பினின்று வியாதி நீங்குதல், getting cured or free from diseases. disappearance of the disease from the body.

**நோயணுகல்**, நோய்படல், falling ill, getting struck by disease.

**நோயணுகாவிதி**, தேரையர் செய்த ஓர் நூல், இது ஓர் சுகாதாரத்தைப் போன்றது, a treatise by Theriyar dealing with rules on prevention of diseases. It is a work similar to Hygiene.

**நோயறை**, நோயாளிகள் இருக்கும் அறை, patient's room.

**நோயற்றவுடம்பு**, சுகசரீரம், healthy body.

**நோயாளி**, நோயால் பீடிக்கப் பட்டவன், a sickly person; 2. நோயே குடிகொண்ட உடம்புள்ளவன், a man of sickly constitution — Valetudinarian; 3. பிணிபட்டவன், invalid.

**நோயாளிசமுகம்**, நோயாளி முன்னிலை, in the presence of a patient, clinical.

**நோயிட்டகூடு**, நோயால் பீடிக்கப்பட்டவுடம்பு, sickly constitution.

**நோயியல்**, pathology.

**நோயிரட்டித்தல்**, நோய் திரும்பக்காணல், relapse of a disease; 2. நோய் சிக்குண்டு அதிகரித்தல், complication of a disease; 3. நோய் கொடுமையாதல், disease getting virulent.

**நோயிருத்தி**, சமனத்துவயம், a kind of plant subsiding the virulency of a disease; 2. நோயை நிலைக்கச் செய்யும் மூலிகை, any plant or drug rendering a disease chronic or lingering

**நோயிலக்கணம்**, நோயைப் பற்றிய குணபாடம், that branch of medical science which treats of classification of diseases — Nosology; 2. நோயின் குறியைப்பற்றிச் சொல்லு நூல், that branch of science which treats of symptoms — Symptamatology; 3. நோய்க்குறி, the characteristic symptoms of a disease.

**நோயிலாதாளி**, see நொஜோதாளி.

**நோயில்நாடி**, மூன்று நாடியும் தன் மாத்திரையில் குறையாது உடம்பின் நோயின்மையைக் காட்டும் நாடி நடைகள், the regular pulse beat in respect of the three humours without any deviation or varied changes - a clear indication of healthy body.

**நோயில் விழல்**, நோய்கொள்ளல், falling ill.

**நோயின்சாரம்**, நோயைப்பற்றி ஓர் நூல், இது நோயின் தன்மை; செயலின் மாற்றம் முதலியவைகளைப் பற்றிக்கூறும், that branch of medical science which treats of the essential nature of diseases and the functional changes — Pathology.

**நோயின்பொருள்**, நோயின் சொற் பொருள் the substance, virus or principle which causes a disease — Materies morbi; 2. நோயின் குணம், the quality of a disease.

**நோயின்மை**, பூரணசுகம், freedom from disease; 2. நோயில்லா (வாழ்வு) living without any disease.

**நோயிறுதி**, நோய் முடிவு, the termination of disease — Apotelism.

**நோயுண்டாக்கும்**, பிணிவருத்தும், causing disease — Morbifics.

**நோயும்பாயுமாய்க்கிடத்தல்**, பாயும் படுக்கையுமாய்க்கிடத்தல், being bed ridden from sickness.

**நோயுள்ள**, பிணியுள்ள, being afflicated with disease — Diseased morbid; 2. சௌக்கியமில்லாத, *not in a healthy state* — Unhealthy.

**நோயெச்சம்**, நோய்க்குறை, that which is left after the cure of the disease — residue of a disease as typhoid residue, cancer residue etc; 2. குணமாகாத நோய்பாகம், incurable portion of a disease.

**நோயோட்டம்**, உடம்பில் நோய் பரவியிருக்கும்தன்மை, the extent to which any disease in prevailing or has spread in the system.

**நோயோட்டி**, பிணி அல்லது வேதனையைத் தணிக்குமூலி, that drug which allays sufferings from a disease as nepenthe etc.

**நோய்**, உடம்பில் பல விகற்பங்கள் ஏற்பட்டு அதன் சக்தி அதிகரித்து, இருக்கும்போது அதை எதிர்க்க தேக சுபாவத்திற்கு முடியாத தன்மை; (in pathology) that condition arising from inability of bodily nature to meet with or neutralise the increased morbid effects resulting from the varied changes taking place in the system.

2. உடம்பையாவது உயிர் வாழ்க்கையையாவது அல்லது இரண்டையுமே தாக்குவது, இத்தகைய நிலை, உடம்பு மனோபாவம் அல்லது தெய்வீகம் என்பதின் குணத்தைப் பற்றியே நிற்கும், (in philosophy) anything that afflicts either the body or the living personality — self or both. It may be either physical mental or spiritual in its character.

3. உடம்பிலிருக்கும் வாதபித்த சிலேட்டுமங்கள் தத்தம் மாத்திரையினின்று விகாரப்படுவதால் உடம்பிற்கு ஏற்படும் கெடுதி, அப்படியல்லாமல் சமனிலையில் நிற்பதே ஆரோக்கியம், (in Humoural pathology) malady or disorder in the loving body arising from deviation in the system; when in equlibrium they bring about freedom from disease ie healty state.

4. வாதபித்த சிலேட்டும மாகிய மூன்று சக்திகளுக்குண்டான வேறுபாட்டினால் சப்த தாதுக்களின் தொழிலை மாறுபடச் செய்வதனால் அவ்வவ்வற் குற்ற தன்மைகள் குறைந்தும் மிகுந்தும் போவதினால் உடம்பிற்கு ஏற்படும் நிலைமை, இது காரணம் பற்றியே திருவள்ளுவரும் "மிகினும் குறையினும் நோய் செய்யும் மேலோர். வலி முதலா வெண்ணிய மூன்று." என்று கூறியுள்ளார்.

**நோய்**, பித்தரோகம், biliousness; 2. துன்பம்; suffering; 3. வலி, pain; 4. துக்கம்; grief, distress; 5, குற்றம், defect; 6. பிணி, disease; 7. நோவு, pain; 8. தீராநோய், any chronic disease.

**நோய்குலைதல்**, நோய் தீர்ந்து உடலை விட்டுப் போதல், disappearance of disease from the body.

**நோய்குலைந்து சாதல்**, see நோய் குலைதல்.

**நோய்கொள்ளல்**, வியாதியால் பீடிக்கப்படல் to be attacked with disease, 2. நோயால் பீடிக்கப்படும் சுபாவம், predis position to disease.

**நோய்குணம்**, வியாதியின் கூறுபாடு, character or symptoms of disease.

**நோய்க்குரிய**, பிணிக்குரிய, relating to or pertaining to disease.

**நோய்க்கூறு**, see நோய்க்குணம்.

**நோய்ச்சல்**, நோய்கொள்ளல், getting afflicted with disease.

**நோய்ஞ்சல்**, இளைத்துப், போதல் to become emaciated.

**நோய்ஞ்சான்**, மெலிந்தவன், a weak person; 2. நோயாளி, sick person.

**நோய்ஞ்சி**, see நோஞ்சியன்.

**நோய்ஞ்சியன்**, நோயாளி, patient; 2. மெலிந்தவன், an emaciated person; one who is emaciated from disease.

**நோய்தடுக்கி**, பிணி வாராமல் தடுக்கு மருநது preventive remedies as vaccine; medicines preventing disease — Prophylactics.

**நோய்தடுக்கும்**, பிணி வாராமற் காக்கும், tending to ward off disease—Prophylactics; Prophylactical.

**நோய்தவருண்டல்**, பிணி தீரல், curing of a disease.

**நோய்தீர்க்குமருந்து**, பிணியைக் குணப்படுத்துமருந்து, curing medicine curatives; 2, நாளாவட்டத்தில் பிணியை நீக்கி ஆரோக்கியத்தை தரும் மருந்து, medicine which produces favourable changes and reestablishes healthy function of the body — Aterative

**நோய்தெரித்தல்,** பிணி நீங்கல், getting rid of disease being free from disease.

**நோய்த்த,** நோய்கொண்ட, being affected with disease marked with sickness — Sickly.

**நோய்(த்)திடம்,** பிணியின் வன்மை, strength of a disease; 2. நோயின் உண்மை, reality of disease.

**நோய்நொடி,** பிணியும் துன்பமும், disease with its sufferings.

**நோய்படல்,** நோயுறல், falling sick.

**நோய்பீதி,** உடம்பிற்கு அசௌக்கிய மேற்படுமென்ற கவலை அல்லது பயம், இது சாதாரணமாய் மண்ணீரலின் கோளாறினால் ஏற்படுவதாகக் கருதப்படும்.

**நோய்புகலும்பாண்டம்,** பிணிபுகும் உடம்பு, body liable to diseases.

**நோய்ப்பூச்சி,** நோய்ப்புழு, organisms which cause disease — germ; bacillus.

**நோய்மக்களித்தல்,** நோய் திரும்பல், relapse of disease

**நோய்மருந்தளவு,** சாப்பிடும் மருந்தளவைக் குறிக்கும் தேரையர் செய்த ஓர் தமிழ் வைத்திய நூல், a Tamil medical work by Theraiyar on *prescriptions* and administration of remedies; 2. நோய்க்கு தக்கவாறு நிர்ணயிக்கும் மருந்தளவு, preportion of medicine determined according to the nature of and requirement for a particular disease — Prescription.

**நோய்மருந்து,** நோய்க்குரிய மருந்து, a remedy specially indicated for any particular diseases.

**நோய்மும்மரம்,** நோயின் வேகம் இது திடீரெனச் சம்பவிக்கும், sudden recurrence or intensification of symptoms — Paroxysm.

**நோய்முறிதல்,** நோய்கெட்டு உடம்பினின்று அகலல், the separation of a disease from the system after its being over powered.

**நோய்வரப்பண்ணல்,** நோயை உண்டாக்குதல், to cause a disesse as is done in animals for observing the effect of medicine; 2. நோய்க்கிடங்கொடுத்தல், accomodating disease by intemperate habits.

**நோய்வன்மை,** நோயின் கொடுமை, severity of a disease.

**நோய்விழலாய்ப் போதல்,** நோய்ப் பிரயோசனமற்றுப்போதல், diseases being rendered inert or inactive.

**நோய்விழுதல்,** செடி அல்லது பயிர்களில் பூச்சி விழுந்து கெடல், plants and crops falling prey to insects or worms which cause disease.

**நோலாகிதம்,** திருநீற்றுப்பச்சை, holy ashes leaf — Ocimum basilicum.

**நோலிகம்,** நின்றிடங் தீய்ஞ்சான், அதாவது குருவிச்சை, honey suckle mistletoe — Loranthus elasticus.

**நோலை,** எள்ளுருண்டை, rape seed ball boiled in jaggery.

**நோலைத்தாளி,** see நொலைதாளி.

**நோவல்,** வலியெடுத்தல், see நோதல்.

**நோவறை,** See நோயறை.

**நோவாற்றுமருந்து,** வலியைத் தணிக்கும் மருந்து, அபினி முதலியவை.

**நோவு,** நோய், disease. 2. மஞ்சள், saffron; 3. வலி, smart pain; 4. மெலிவு, borne down with pain; 5. வருத்தம், affliction; 6. பிரசவ வேதனை, labour pain.

**நோவுகொள்ளல்,** See நோய்கொள்ளல்.

**நோவுங்கால்,** முடவாட்டுக்கால், lame leg of a sheep.

**நோவுண்டாக்கல்,** வலியை உண்டுபண்ணல், causing pain.

**நோவுண்டாதல்,** வலியெடுத்தல், pain coming on as labour pain.

**நோவுபோக்கி,** நேர்வாளம், croton seed, purging nut so called of its eliminating certain diseases from the system.

**நோவுவாங்கல்,** வலிதீர்த்தல், ceasing of pain.

**நோவெடுத்தல்**, வலியெடுத்தல், causing pain.

**நோளை**, நோய்கொண்டவுடம்பு, sickly constituation; 2. பிணியுண்டநிலை, sickly state.

**நோளைச்சரீரம்**, மினுக்கானவுடம்பு, body not used to hardship, delicate body.

**நோறுசம்**, கீரத்தி, yellow fig — Ficus calwsa

**நோனி**, பெண்குறி, female genital.

**நோன்பு**, கொன்று தின்னாமை, remaining without killing or eating flesh; 2. கௌரி பாஷாணம், yellow arsenic

**நோன்பென்றபெண்**, நோன்பு, vow.

# நௌ



**நௌகதாரி**, செங்கத்தாரி, இதன் சமூலமும் பட்டையும் மருத்திற்கதவும. orbicular — Capparia pedunculosa. The entire plart and the bark have medicinal value

**நௌகாகிதம்**, சூரை, jackal jujubi — Zizip hus napeca alias Z. oenaplia.

**நௌகாசரை**, எட்டிமரம், nuxvomica tree — Strych nine nuxvomica.

**நொகாசினி**, சாறுக்கீரை, a kind of greens — Olender — leaved cacalic.

**நௌகாபத்திரி**, சாதிபத்திரி, mace — Myristica fragrans.

**நேளகு**, சிறு சூழ்ந்துக்தச்சி, a small or medium torch tree small jungle geranium — Ixora parviflora ( zeylanica ).

**நௌபத்தோமம்**, குரோசாணி ஓமம். Khorassan ajwaun common henbane — Hyoscyamus niger.

**நௌபந்திகை**, மோகணத்தி யென்றும் ஓர் வகை வாழை, a species of plantain tree — Musaparadisiaca genus.

**நௌலி**, புல்லுருவி, a parasitic plant — Loranthus genus.

**நௌவி**, மான், deer.

**நௌவுகி**, சூரத்து நிலாவாரை, surat senna, foreign senna — Cassia acutifolia.

**நௌவுகு**, கையாந்தகரை, eclipse plant — Eclipta prostata.

